தோன்றாத் துணையாய்ச் செல்வது எது என்று நினைந்து பாருங்கள். அதை நினைக்க நினைக்க ஆண்டவன் நினைவின் இன்றியமை யாமை புலப்படும்.

'ஆண்டவன் நினைவின் இன்றியமையாமை தெரிகிறது; ஆண்டவனை நினைக்கவும் நெஞ்சம் எழுகிறது; ஆனால் உயிர்ச் சார்பும் பொருட் சார்பும் இடையூறாக நிற்கின்றன' என்று சிலர் சொல்கிறார். இஃது அறியாமை. ஆண்டவனை நினைத்தற்கு மனைவி மக்களைத் துறத்தல் வேண்டுமென்றும், வீடு வாசல்களை வெறுத்தல் வேண்டுமென்றும் நினைப்பதே ஆண்டவன் நினை விற்குக் கேடு சூழ்வதாகும். உயிர்ச் சார்பையும் பொருட்சார்பையும் ஆண்டவன் நினைவிற்கு அரணாகப் பயன்படுத்தி வாழ்வதே சிறந்த இன்ப அன்பு வாழ்வாகும். அவைகள் யாவும் வாழ்விற்கென்று ஆண்டவனால் அளிக்கப்பட்டன. அவைகளை வெறுப்பது ஆண்டவனை வெறுப்பதாக முடியும்.

உயிர்ச்சார்பு பொருட்சார்புகளை மாயை யென்றும், கட்டென்றும் பெரியோர்கள் இழித்துக் கூறியதன் நோக்கமென்னை யென்று சிலர் வினவலாம். உயிர்ச்சார்பு பொருட் சார்புகளை ஆண்டவன் நினை விற்கு அரணாக் கொள்ளாது, அவைகளையே பொருளாக் கொண்டு, ஆண்டவனை மறந்து, மதிமயங்கித் திரியும் உலோகாயதர்கட்கு நல்லறிவுச் சுடர் கொளுத்த வேண்டிப் பெரியோர்கள் அவைகளை இழித்துக் கூறினார்கள். அவர்கள் கூற்றுக்களின் உள்ளக்கிடக்கையை யுணராது, வெறுத்தல் துறத்தலில் கருத்தை இருத்துவது இழுக்காகும்.

நமது நாட்டில் இடைக்காலத்தில் ஒருவிதப் போலித் துறவு தோன்றலாயிற்று. அது மக்கள் வாழ்வையே குலைத்து வருகிறது. அது குறித்துப் பெண்ணின் பெருமை அல்லது வாழ்க்கைத் துணை', 'முருகன் அல்லது அழகு', 'மனித வாழ்க்கையும் காந்தியடிகளும்' முதலிய நூல்களின் வாயிலாக எனது கருத்தை விரித்துக் கூறியுள்ளேன்.

நம் ஆண்டவன் அம்மையப்பன்; சோமாஸ்கந்தன். அவனை வழிபட்டுப் பேறெய்திய நாயன்மார்களிற் பலர் மனைவி மக்களைத் துறந்தவரல்லர்; வீடு வாசல்களை விடுத்தவரல்லர். அவர்கள் உள்ளனவெல்லாம் 'எம்பிரானுடைமை' என்று இல்வாழ்வு நடாத்திப் பேறெய்தியவர்கள். அவர்கள் அடிச்சுவட்டைப் பற்றி நடக்க வேண்டுவது நமது கடமை. ஆகவே ஆண்டவன் நினைவிற்கென்று வீட்டையும் விடவேண்டுவதில்லை; காட்டுக்கும் ஓட வேண்டுவ

தில்லை. வீட்டிலிருந்தே மனைவி மக்களுடன் வாழ்ந்தே - ஆண்டவனை நினைக்கலாம்.

ஆண்டவன் நினைவிற்கென்று குறிப்பிட்ட புறக்கட்டுப் பாடு ஒன்றும் வேண்டுவதில்லை. கரவில்லா அன்புளங் கொண்டு, எந்நிலையில் நின்றும், எக்கோலம் பூண்டும் ஆண்டவனை நினைக்கலாம். 'எந்நிலையில் நின்றாலும் எக் கோலங் கொண்டாலும் - மன்னியசீர்ச் சங்கரன்றாள் மறவாமை பொருளென்றே' என்பது பெரியபுராணம்.

ஆண்டவனை எப்பொழுதும் எப்படி நினைப்பது? ஆண்டவனை இந்நேரத்தில் நினைத்தல் வேண்டுமென்னும் நியதியில்லை. ஆண்டவனை எந்நேரத்திலும் நினைக்கலாம். வாய்ப்பு நேரும்போதெல்லாம் ஆண்டவனை நினைந்து நினைந்து, அந்நினைவை இடையறாத ஒன்றாக்கிக் கொள்ளல் வேண்டும்.

குறிக்கோளாக எடுத்துக் கொண்ட திருப்பாட்டின் இறுதி அடியை நோக்குக. 'தினைத்த னைப்பொழு தும்மறந் துய்வனோ' என்று அப்பர் அலமருகிறார். தினைப்பொழுது ஆண்டவனை மறந்தால், அப்பொழுதில் எத்துணையோ தீய நினைவுகள் தோன்றும். அவைகள் உய்யு நெறியை இடர்ப்படுத்தும். ஆதலால் இடையீடின்றி ஆண்டவனை நினைத்தல் வேண்டுமென்று அப்பர் அறிவுறுத்து கிறார். 'எந்நேரமுஞ் சிவனை ஏத்துங்கள் போற்றுங்கள்' என்றும், 'நின்று மிருந்துங் கிடந்தும் நினைசெய்க- என்றுஞ் சிவன் தாள் இணை' என்றும் ஆன்றோர்கள் கூறிப் போந்தார்கள். 'புழுவாய்ப் பிறக்கினும் புண்ணியா உன்னடி என் மனத்தே-வழுவாதிருக்க வரந்தரல் வேண்டும்' என்னும் அடிகளின் வாக்கு, ஆண்டவனிடத்து இடையறாத நினைவின் இன்றியமையாமையை வலியுறுத்தல் காண்க.

இடையறாத நினைவு தொடக்கத்தில் உறுதல் அருமை. பின்னே பின்னே நாளடைவில் அவ்வருமை நீங்கும். இதற்கு உயிர்களின் முயற்சியுடன் ஆண்டவன் திருவருளும் ஒன்றுதல் வேண்டும். பாவத்துக்கஞ்சிச், செய்த பாவங்களை முறையிட்டு, அழுக்காறு முதலிய குற்றங்களைக் களைந்து, ஆண்டவன் திருவடிப் பற்றையே பற்றாக்கொண்டு, அத்திருவடியை நினைந்து உருகியுருகிக் கண்ணீர் சொரிந்து அழ அழ, ஆண்டவன் திருவருட்டுணை தானே வரும். இடையறாத நினைவிற்குத் திருவருட்டுணை பெரிதும் வேண்டற்பாலது. பாவச் செயல்களை வெறுத்து, ஆண்டவன்

திருவடி நினைவில் உயிர்கள் கொள்ளும் வேட்கை அளவினதாகத் திருவருட்டுணை கிடைக்கும்.

ஆண்டவன் நினைவை இடையறாத ஒன்றாக்கிக் கொள்வதற்கு எப்படி அவனை வழிபடுவதென்பதில் சிறிது கருத்துச் செலுத்து வோம். முறைகள் எண்ணிறந்து கிடக்கும். ஒவ்வொருவர்க்கு ஒவ்வொரு முறையிருக்கலாம். அவைகளில் நுழைந்து மல்லாட வேண்டுவதில்லை.

முதலாவது அலையும் நெஞ்சை ஆண்டவனை நினைவில் நிலைபெறுத்த முயல்வது ஒழுங்கு. அலையும் நெஞ்சு எங்குமுள்ள ஆண்டவனை எவ்வாறு நினைக்கவல்லதாகும்? பரம்பொருள் அகண்டமாயிருப்பது. அகண்டமாவது மனத்தின் எல்லை கடந்து நிற்பது. எல்லை கடந்த ஒன்றை மனம் எங்ஙனம் நினைக்கும்? ஆதலால் தொடக்கத்தில் ஆண்டவன் நினைவூட்டக்கூடிய ஒரு குறியில் நெஞ்சை நிலைபெறுத்தப் பயிற்சி செய்தல் வேண்டும். அக்குறி, கண்ணையுங் கருத்தையுங் கவரக்கூடிய வனப்புடையதாய், ஓவியம் நிரம்பியதாய் இருத்தல் மிகச் சிறப்பாகும். அக்குறியின் கண் நெஞ்சம் படியப்படிய அலைதல் ஒழிந்து நிலைதல் பெறும். அந்நிலைத்த நெஞ்சில் வேறு எண்ணங்கள் அருகுதலும், ஆண்டவன் எண்ணம் பெருகுதலும் இயல்பில் நிகழும். இதற்கென்றே திருக்கோயில் வழிபாடு ஏற்படுத்தப்பட்டது.

திருக்கோயில் வழிபாட்டின் நோக்கம் விழுமியது. அதன்கண் உயிர் நலனுமுண்டு; உடல் நலனுமுண்டு. இந்நுட்பம்,

*'நிலைபெறுமா றெண்ணுதியேல் நெஞ்சே நீவா*
*நித்தலுமெம் பிரானுடைய கோயில் புக்குப்*
*புலர்வதன்முன் னலகிட்டு மெழுக்கு மிட்டுப்*
*பூமாலை புனைந்தேத்திப் புகழ்ந்து பாடித்*
*தலையாரக் கும்பிட்டுக் கூத்து மாடிச்*
*சங்கரா சயபோற்றி போற்றி யென்றும்*
*அலைபுனல்சேர் செஞ்சடையெம் ஆதி யென்றும்*
*ஆரூரா என்றென்றே அலறா நில்லே.'*

என்னும் திருத்தாண்டகத்தில் செறிந்து விளங்குதல் காண்க.

நிலைத்த நெஞ்சம் பெறுதற்கென ஏற்பட்ட கோயில்களில் பல இப்பொழுது எந்நிலையுற்றிருக்கின்றன? அவைகள், அலையும் நெஞ்சை இன்னும் அலைக்கும் பேய்க்கூடங்களாகி விட்டன என்று

சுருங்கச் சொல்கிறேன். அக்கூட்டங்களில் தற்போது ஒருவிதப் பேயா ஆடுகிறது? எத்தனையோ விதப் பேய்கள் தலை விரித்தாடுகின்றன. சாதிப் பேய், கட்டுப்பேய், துட்டுப் பேய், வழக்குப்பேய், போட்டிப் பேய், சூதுப்பேய், வாதுப்பேய், பொய்ப்பேய், காமப்பேய், சோற்றுப்பேய் முதலிய பேய்களைச் சிறப்பாகக் குறிப்பிடலாம். இப்பேய்களை ஓட்டச் சில அறவோர் முயன்று வருகிறார்கள். அவரை மனமார வாழ்த்துகிறேன்.

'கோயில்' என்னும் பொருளிழந்து, வெறுங்கோபுரங்களையுங் கட்டிடங்களையுந் தாங்கி நிற்கும் நிலையங்களின் தற்கால நிலைகண்டு, சிலர் ஆண்டவன் வழிபாட்டையே மறுக்கப் புகுகிறார். அது தவறு. அந்நிலையங்கள்மீது கொண்ட சீற்றத்தை ஆண்டவன் வழிபாட்டின்மீது செலுத்துவது அறமாகாது. தொன்மை நோக்கத்தி னின்றும் வழுக்கி வீழ்ந்துள்ள நிலையங்களில் புகாமலும் ஆண்ட வனை வழிபடலாம். எந்த இடத்தையும் நல்லெண்ணத்தால் கோயிலாக்கிக் கொள்ளலாம். 'கோயில்' என்பது வெறுங் கோபுரந் தாங்கி அன்று. ஆண்டவன் நினைவூட்டி, அந்நினைவை நிலை பெறுத்தும் இயல்பு வாய்ந்த இடம் கோயிலாகும்.

மனத்தைக் கோயிலாக்கவே தொடக்கத்தில் சில இடங்களைக் கோயில்களாகக் கொள்கிறோம்.

*'நாடு நகரமும் நற்றிருக் கோயிலும்*
*தேடித் திரிந்து சிவபெருமான் என்று*
*பாடுமின் பாடிப் பணிமின் பணிந்தபின்*
*கூடிய நெஞ்சத்துக் கோயிலாக் கொள்வனே'*

இது திருமந்திரம். நமது குறிக்கோள். நெஞ்சைக் கோயிலாக்க வேண்டுமென்பதேயாகும். அந்நோக்கத்தை நிறைவேற்றிக் கொள்ள யாண்டாதல் உருவ வழிபாடு செய்யலாம்.

வழிபாட்டுக்கு எவ்வுருவைக் கொள்வது? எவரெவர் நெஞ்சம் எவ்வெவ்வுருவில் கவர்ச்சி பெறுகிறதோ அவரவர் அவ்வவ்வுருவைக் கொள்வாராக. உருவம் ஆண்டவன் நினைவுக்கு அறிகுறியேயாகும். ஆண்டவன் நினைவூட்டும் உருவம் எதுவாயினுமாக. பன்னிறப் பசுக்கள் பன்னிறப் பாலையா சொரிகின்றன?

எவ்வுருவைக் கொள்ளினும் அவ்வுரு ஆண்டவன் நினை வூட்டக்கூடியதாயிருத்தல் வேண்டும். ஆண்டவன் ஒருவனே. அவனை எவ்வுருவில் வழிபாட்டாலென்ன? இதனை, 'அனைத்தும்

வேடமாம் அம்பலக் கூத்தனை' என்று மூன்றாமடியில் அப்பர் சுவாமிகள் குறிப்பாலுணர்த்துகிறார்கள்.

*'அப்பனை நந்தியை ஆரா அமுதினை*
*ஒப்பிலி வள்ளலை ஊழி முதல்வனை*
*எப்பரி சாயினும் ஏத்துமின் ஏத்தினால்*
*அப்பரி சீசன் அருள்பெற லாமே'*

என்றார் திருமூலர். 'ஒருவனே இராவணாதி பாவகம் உற்றாற் போலத் - தருவனிவ் வுருவ மெல்லாம் தன்மையுந் திரியா னாகும்' என்பது சிவஞானசித்தி.

அழகிய ஓர் உருவில் மனம் ஒன்றிப் படியப்படிய மனத்தில் ஒருவித ஆற்றல் பிறக்கும். அவ்வாற்றல், ஆண்டவன் வேட்கை பெருகவும், மற்ற வேட்கைகள் சுருங்கவுந் துணை செய்வதாகும். நாளடைவில் மனத்தின் அலை அடங்கும்; மறவினைகளில் தோய நெஞ்சம் அஞ்சும்; நெஞ்சில் அமைதியும் ஒருமைப்பாடும் உறும்; நிலைத்த நெஞ்சம் உண்டாகும். இந்நிலையில் ஆண்டவன் திருவருளால் குருநாதன் தோன்றி மெய்ப்பொருளை அறிவுறுத்துவன். 'மூர்த்தி தலம் தீர்த்தம் முறையாற் றொடங்கினர்க்கோர் - வார்த்தைசொலச் சற்குருவும் வாய்க்கும் பராபரமே' என்று தாயுமானார் அருளிய அனுபவ மொழியை நோக்குக.

மெய்க்குரவன் காட்சிக்குப் பின்னை மனத்தில் உறும் மாறுதல் பலப்பல. அவற்றுள் ஒன்று ஒருவித ஒளியெழுச்சி. அவ்வொளி தானே வலிந்து உயிரை இயற்கை வழிபாட்டில் உந்தும். இயற்கை வழிபாட்டு முறைகளை ஈண்டு விரிக்கிற் பெருகும். இன்னுஞ் சில சொற்பொழிவுகள் இங்கே நடைபெறல் வேண்டும். உங்கள் அரிய காலத்தை யானே கொள்ளை கொள்ள விரும்புகிறேனில்லை. இயற்கை வழிபாட்டைப் பற்றி 'முருகன் அல்லது அழகு' என்னும் நூலில் சிறிது விரித்துக் கூறியுள்ளேன்.

இயற்கை வழிபாடுகள் பலதிறத்தன. அவற்றுள் சிறந்தது ஞாயிறு வழிபாடு. ஞாயிறு வழிபாடு பழைய பழைய மாசுகளைக் கடிந்து உயிரை ஒளிமயமாக்கும். அவ்வுள்ளொளி, இயற்கை உடலாகவும், இறை அதன் உயிராகவும் உள்ள நிலையைப் புலப்படுத்தும். இது தன் வழிபாடென்னும் உயிர் வழிபாட்டைக் கூட்டும்.

தன்னில் ஆண்டவனை நினைந்து நிகழ்த்தும் வழிபாடு, தன்னிலுந் தன்னனைய உயிர்களிலும் ஆண்டவன் கோயில்

கொண்டிருத்தலையுணர்த்தும். இவ்வுணர்வு, உயிர்கட்கு விடுதலை நல்கும்.

தன்பால் கோயில்கொண்டுள்ள ஆண்டவன், மற்ற உயிர்களிடத்துங் கோயில் கொண்டிருத்தலை உணரும் ஒருவன், எவ்வுயிர்க்காதல் தீங்கு செய்ய நினைப்பனோ? எவனுந் தன்னுறுப்புக்குத் தானே தீங்கு செய்ய உடன்படான். தன்னுயிரும் பிறவுயிரும் ஆண்டவனுக்கு உறுப்புகளாக இருத்தலை உணரும் ஒருவன், பிற உயிர்க்குத் தீங்கு நினையான்.

எல்லா உயிரையுந் தன்னைப்போல் பார்க்கும் ஒரு நிலை, ஆண்டவனைப் படிப்படியாக நினைப்பதால் கூடுவதாகும். இந்நிலை வாசா கைங்கரியத்தால் கூடாது. உயிர்கள் வழிபாடு என்று வாயால் பேசுவதால் பயன் விளையாது. உயிர்கள் வழிபாடு என்று வாயால் பேசிக்கொண்டு, உயிர்கள் மாட்டுப் பகை பூசல் இகல் முதலியவற்றை வளர்த்து வருவது உயிர்கள் வழிபாடாகாது.

இந்நாளில் மன்பதைக்கண், நாடு, நிறம், மொழி, வகுப்பு, சமயம் முதலிய பெயர்களால் பகைமை, பூசல், இகல் முதலியன வளர்ந்துவரல் கண்கூடு. இப்பிரிவுகளையும் பிணக்குகளையும் 'எவ்வுயிரும் பராபரன் சந்நிதி' என்னும் உணர்வு உண்டாக்குமோ? அன்பர்களே! உன்னுங்கள்.

இந்நாளில் உலகிடைப் பெரிதும் இம்மெய்யுணர்வை நல்கவல்ல கல்வியுண்டோ? அரசியலுண்டோ? வாழ்வுண்டோ? நாடு நிறம் மொழி சாதி சமயம் முதலிய பெயர்களால் ஒருவரை யொருவர் வஞ்சித்து வருத்தும் முறையன்றோ வாழ்வாகப் பரிணமிக்கிறது? இம்முறை வளர வளர மன்பதைக்கண் அன்பு அருகும். அன்பு அருகினால் மனிதன் என்னாவன்? சொல்லலும் வேண்டுமோ?

எவ்வுயிரிலும் ஆண்டவன் உண்மையை யுணர்த்துங் கல்வி, அரசு, வாழ்வு முதலியன உலகிடைப் பரவுதல் வேண்டும். இதற்குச் சமய ஞானம் வேண்டற்பாலது. சமய ஞானமென்று சமய வாதத்தை வளர்த்தலாகாது. சமய வாதங்களே சகோதர நேயத்தைக் கெடுத்து வந்தன; வருகின்றன. ஆண்டவன் உண்மையையும், அன்பு நெறியையும் அறிவுறுத்திச் சென்ற குருமார் பெயர்களால் பல சமயங்களும், அவைகட்கென மடங்களும், சங்கங்களும் பின் வந்தவர்களால் அமைக்கப்பட்டன. அவ்வமைப்புகள் கலகத்துக்கும், பிணக்குக்கும், கொலைக்கும் பயன்பட்டு வருகின்றன. அவற்றின் கொடுமைகளே உலகில் நாத்திகத்தைப் பரப்பி வருகின்றன.

அவ்வமைப்புகள் கட்டுப்பாடுகட்கும் கண்மூடி வழக்கங்கட்குந் தாயகமாகவும் நிற்கின்றன. சைவ சித்தாந்த மகா சமாஜ வெள்ளி விழாக் கூட்டத்திடை யான் பேசுவதால், சைவ மடங்கள் மீது எனது நெஞ்சம் ஓடுகிறது. 'எவ்வுயிரும் நீங்கா துறையும் இறை சிவனென்று – எவ்வுயிர்க்கும் அன்பாயிரு' என்னும் அருண்மொழிக்கு இலக்கியமாக எத்துணைச் சைவ மடங்கள் இப்பொழுதிருக்கின்றன? சைவ மடங்கள் சைவத்தை மறந்து நீண்ட நாட்களாயின என்று சொல்கிறேன். 'என்ன அநியாயம்! சைவ மடங்களில் திருநீறு பொலிகிறது; கண்டிகை மிளிர்கிறது; சிவபூஜை நிகழ்கிறது; என்ன இல்லை? சைவமில்லை என்று கூறலாமா?'' என்று சிலர் சீறுவர். 'சைவ மடங்களில் சைவமில்லை' என்று மீண்டும் வலியுறுத்திச் சொல்கிறேன். வெளிவேடம் சைவமாகாது. சைவத்தின் உயிர் அன்பு. அன்புக்குச் சாதி முதலிய வேற்றுமைகளுண்டோ? இது நிற்க.

ஆன்மநேயத்தை வளர்க்கவல்ல அமைப்புக்கள் இப்பொழுது தேவை. ஆன்மநேயத்தை வளர்க்க வல்லது எவ்வுயிரிலும் ஆண்டவனிருத்தலை உணர்த்தும் உணர்வாகும். அவ்வுணர்வைப் பெருக்கத் தக்க கல்வி பரவும் நாளே மன்பதையின் நலத்துக்குரிய நன்னாளாகும்.

எல்லா உயிர்களிலும் ஆண்டவன் கோயில் கொண்டிருத்தலை உணர்த்துவது ஆண்டவன் நினைவேயாகும். ஆண்டவனை ஓர் உருவின் வாயிலாக நினைந்து, பின்னை இயற்கையின் வாயிலாக நினைந்து, பின்னைத் தன் வாயிலாக நினைந்து, அவ்வாண்டவன் உள்ளங் கோயில் கொண்டதை உணர்தல் வேண்டும். இம்முறை பற்றியொழுகாது 'நெஞ்சில் ஆண்டவன் இல்லையே' என்று கருதுவது தவறு. ஆண்டவன் கோயில் கொண்டிருத்தலை உணர நெஞ்சைப் பண்படுத்தல் வேண்டும். அதற்கு ஆண்டவன் நினைவே உறு கருவிபோன்றது. இக்கருத்துப் பற்றியே, 'நினைப்பவர் மனங் கோயிலாக் கொண்டவன்' என்று நினைத்தலை அடிகள் வலியுறுத்திக் காட்டியுள்ளார். நினைப்பவர் நெஞ்சிற்கு ஆண்டவன் கோயில் புலனாதல் ஒருதலை.

ஆண்டவன் கோயிலுக்குரிய இடம் நெஞ்சமாகும். இதனைத் தமிழ்நாட்டிற் றோன்றி அன்பு நெறி வளர்த்த நால்வரும் ஒருமுகமாகத் தொடக்கத்திலேயே உலகிற்கு நினைவூட்டியுள்ளார். திருஞான சம்பந்தப் பெருமான் 'தோடுடைய செவியன்' என்னும் முதற் றிருப்பாட்டில் 'என்னுள்ளங் கவர் கள்வன்' என்றும் திருநாவுக்கரசு சுவாமிகள் 'கூற்றாயினவாறு விலக்ககிலீர்' என்னும் முதற்றிருச்

செய்யுளில் 'பிரியாது வணங்குவன்' என்றும், (பிரிந்து வணங்குதல் ஒன்று; பிரியாது வணங்குதல் மற்றொன்று. முன்னையது ஆண்டவனைத் தன்னில் வேறுபடுத்தி வணங்குவது. பின்னையது அவனைத் தன்னுள் பிரிவின்றி வணங்குவது. இவை முறையே துவித வழிபாடு - அத்துவித வழிபாடு - என்றுஞ் சொல்லப்படும்) வன்றொண்டப் பெருந்தகையார் 'பித்தா பிறைசூடி' என்னும் முதற் றிருப்பாவில் 'நினைக்கின்றேன் மனத்துன்னை' என்றும், வாதவூரடிகள் திருவாசகத் தொடக்கத்தில் 'நமச்சிவாய வாழ்க நாதன்றாள் வாழ்க - இமைப்பொழுதும் என் நெஞ்சில் நீங்காதான் றாள் வாழ்க' என்றும் அருளிச் செய்திருத்தலைக் காண்க. நெஞ்சத் தாமரையை ஆண்டவன் திருக்கோயிலென்று அறிவு நூல்களெல்லாம் முழங்குகின்றன.

நெஞ்சகம் உயிர்ப்புக்கு இடமாயிருப்பது. அஃது என்றும் தொழில் புரிவது. அதன் இயக்கம் நிற்குமாயின் உயிர் உடலை விட்டுப் பிரியும். நெஞ்சினை இடமாக்கொண்டே ஆண்டவன் உயிர்களை இயக்குகிறான்.

*'என்னில் யாரும் எனக்கினி யாரில்லை*
*என்னி னும்இனி யானொரு வன்னுளன்*
*என்னுள்ளே உயிர்ப்பாய்ப் புறம்போந்து புக்கு*
*என்னுள்ளே நிற்கும் இன்னம்ப ரீசனே'*

என்று அப்பர் சுவாமிகள் அருளினமை காண்க.

*'உள்ளம் பெருங்கோயில் ஊனுடம் பாலயம்*
*வள்ளற் பிரானார்க்கு வாய் கோபுர வாசல்*
*தெள்ளத் தெளிந்தார்க்குச் சீவன் சிவலிங்கம்*
*கள்ளப் புலனைந்துங் காளா மணிவிளக்கே*

என்றார் திருமூலரும், நெஞ்சின் 'சிறப்பை இன்னும் விரிக்கிற் பெருகும்.

அத்தகைய நெஞ்சை-ஆண்டவனுக்குரிய பீடத்தைத் தூய்மையாக வைத்துப் பாதுகாத்தல் வேண்டும். அதனை அழுக்காறு அவா வெகுளி கரவு முதலிய அழுக்குகளால் பாழ்படுத்துவது மடமை. இவ்வழுக்குகளுள்ளவரை ஆண்டவன் கோயில் கொண்டிருத்தல் புலனாதல் அரிது. ஆதலால் உள்ளத்தைத் தூய்மை செய்க; செய்க.

நெஞ்சைத் தூய்மைசெய்து, அதனை ஆண்டவனுக்குரிய பள்ளியாக்குவதைப் பட்டினத்தடிகள் திருக்கழுமல மும்மணிச்

கோவையிலும், திருவிடைமருதூர் மும்மணிக் கோவையிலும் அழகுபடத் திருவாய்மலர்ந்துள்ளார். அத்திருவாக்குகள் வருமாறு:-

*'கருமுதற் றொடங்கிப் பெருநா ளெல்லாங்*
*காமம் வெகுளி கழிபெரும் பொய்யெனுந்*
*தூய்மையில் குப்பை தொலைவின்றிக் கிடந்ததை*
*அரிதி னிகழ்ந்து போக்கிப் பொருதிறன்*
*மையிரு ணிறத்து மதனுடை யடுசினத்த*
*தைவகைக் கடாவும் யாப்பவிழ்த் தகற்றி*
*அன்புகொடு மெழுகி அருள்விளக் கேற்றித்*
*துன்ப விருளைத் துரந்து முன்புற*
*மெய்யெனும் விதானம் விரித்து நொய்ய*
*கீழ்மையிற் றொடர்ந்து கிடந்த என் சிந்தைப்*
*பாழறை யுனக்குப் பள்ளியறை யாக்கிச்*
*சிந்தைத் தாமரைச் செழுமலர்ப் பூந்தவி*
*செந்தைநீ யிருக்க விட்டனன்.*

*'நெஞ்சப் புனத்து வஞ்சக் கட்டையை*
*வேரற அகழ்ந்து போக்கித் தூர்வைசெய்*
*தன்பென் பாத்தி கோலி முன்புற*
*மெய்யெனு மெருவை விரித்தாங் கையமில்*
*பத்தித் தனிவித் திட்டு நித்தலும்*
*ஆர்வத் தெண்ணீர் பாய்ச்சி நேர்நின்று*
*தடுக்குநர்க் கடங்கா திடுக்கண் செய்யும்*
*பட்டி அஞ்சினுக் கஞ்சியுட் சென்று*
*சாந்த வேலி கோலி வாய்ந்தபின்*
*ஞானப் பெருமுளை நத்தாது முளைத்துக்*
*கருணை இளந்தளிர் காட்ட அருகாக்*
*காமக் குரோதக் களையறக் களைந்து*
*சேமப் படுத்துழிச் செம்மையி னோங்கி*
*மெய்ம்மயிர்ப் புளக முகிழ்த்திட் டம்மெனக்*
*கண்ணீ ரரும்பிக் கடிமலர் மலர்ந்து புண்ணிய*
*அஞ்செழுத் தருங்காய் தோன்றி நஞ்சுபொதி*
*காள கண்டமுங் கண்ணொரு மூன்றுந்*
*தோளொரு நான்குஞ் சுடர்முக மைந்தும்*
*பவளநிறம் பெற்றுத்தவள நீறுபூசி*
*அறுசுவை அதனினும் உறுசுவை யுடைத்தாய்க்*
*காணினுங் கேட்பினுங் கருதினுங் களிதருஞ்*

*சேணுயர் மருத மாணிக்கத் தீங்கனி*
*பையப் பையப் பழுத்துக் கைவர*
*எம்மனோர்க ளினிதி னருந்திச்*
*செம்மாந்திருப்பச் சிலரிதின் வாராது*
*மனமெனும் புனத்தை வெறும் பாழாக்கிக்*
*காமக் காடு மூடித் தீமைசெய்*
*ஐம்புல வேடர் ஆறலைத் தொழுக*
*இன்பப் பேய்த்தே ரெட்டா தோடக்*
*கல்லா வுணர்வெனும் புல்வாய் அலமர*
*விச்சைவித் துதிர்த்துழி யானெனப் பெயரிய*
*நச்சு மாமர நனிமிகு முளைத்துப்*
*பொய்யென் கவடுகள் போக்கிச் செய்யும்*
*பாவப் ப:றழை பரப்பிப் பூவெனக்*
*கொடுமை அரும்பிக் கடுமை மலர்ந்து*
*துன்பப் பல்காய் தூக்கிப் பின்பு*
*மரணம் பழுத்து நரகிடை வீழ்ந்து*
*தமக்கும் பிறர்க்கும் உதவா*
*திமைப்பிற் கழியு மியற்கையோ ருடைத்தே'*

நினைந் துயரும் அடியவர் உள்ளமே ஆண்டவனுக்குரிய சிறந்த கோயிலாகும். 'படமாடுங் கோயில்', 'நடமாடுங் கோயில்' என்று திருமூலர் கோயிலை இருவகைப்படுத்தி, நடமாடுங் கோயிலுக்கே சிறப்புக் கூறியுள்ளார். 'முகமெலாங் கண்ணீர் மல்க முன்பணிந் தேத்துந் தொண்டர் - அகமலாற் கோயி லில்லை ஐயன் ஐயாறனார்க்கே' என்றார் அப்பரும்.

தொண்டை நாட்டில் திருநின்றவூர் என்றொரு திருப்பதியுண்டு. அஃது இப்பொழுது தின்னனூர் என்று வழங்கி வருகிறது. அவ்வூரில் பூசலார் என்பவர் ஒருவரிருந்தார். அவர் ஆண்டவனுக்கு ஒரு புறக் கோயில் கட்ட முயன்றார். அம்முயற்சி பயன் படாமையான், அவர் ஆண்டவனை நினைந்து மனக்கோயில் கட்டலானார். அந்நாளில் காடவர் கோமானால் காஞ்சியில் ஒரு கோயில் கட்டப்பட்டது. அக்கோயிலில் ஆண்டவன் திருவுருவை நாட்ட நாள் குறிக்கப் பட்டது. முன்னாளிரவு ஆண்டவன் அரசன் கனவிற்றோன்றி, 'நாளை நாம் திருநின்றவூரிலுள்ள பூசலார் கோயிலில் புகப்போகிறோம். உனது செயலைப் பின்னே வைத்துக் கொள்' என்றாரென்று புராணங் கூறுகிறது. இதன் நுட்பமென்னை? புறக் கோயிலைவிட அகக் கோயிலே ஆண்டவனுக்கு உகந்த தென்பது வெளிப்படை. ஆதலால்,

'நடமாடுங் கோயில்'களை வழிபடுவது சிறப்பென்க. ஆண்டவனை நினைந்து அகத்தை ஆண்டவன் கோயிலாக்கிய அடியவர்களை ஆண்டவனாக வழிபடுதல் ஒரு மரபாகக் கொள்ளப்பட்டிருத்தலும் ஈண்டுக் கருதப்பாற்று.

ஆண்டவனை இடையறாது நினைந்து நினைந்து, உருகி உருகி, இன்பநீர் பெருக்கிப், பாவத்தைக் கழுவி, மனத்தை ஆண்டவன் கோயிலாக்கி, அழியா விழுச் செல்வத்தைப் பெற முயல வேண்டுவது நம் பெருங் கடமை. அச்செல்வ வாழ்வு பெற முயல்வோமாக.

*'நினைந்துநினைந் துணர்ந்துணர்ந்து நெகிழ்ந்து நெகிழ்ந்தென்பே*
*நிறைந்துநிறைந் தூற்றெழுங் கண்ணீரதனா லுடம்பு*
*நனைந்துநனைந் தருளமுதே நன்னிதியே ஞான*
*நடத்தரசே என்னுரிமை நாயகனே என்று*
*வனைந்துவனைந் தேத்துதுநாம் வம்மினுலகியலீர்*
*மரணமிலாப் பெருவாழ்வில் வாழ்ந்திடலாங் கண்டீர்*
*புனைந்துரையேன் பொய்புகலேன் சத்தியஞ்சொல் கின்றேன்*
*பொற்சபையிற் சிற்சபையிற் புகுந்தருண மிதுவே*

இராமலிங்க சுவாமிகள்

இதுகாறும் எனது புன்மொழிகளைப் பொறுமையுடன் செவிமடுத்த அன்பர்களாகிய உங்கட்கு மீண்டும் எனது நன்றியஃதலைச் செலுத்துகிறேன்.

சைவசித்தாந்த மகா சமாஜம் வாழ்க வாழ்க என்று அறுமுகச் சிவன் திருவடியை நினைந்து வாழ்த்தி வணங்குகிறேன்.

*''நெஞ்சகமே கோயில் நினைவே சுகந்தமன்பே*
*மஞ்சனநீர் பூசைகொள்ள வாராய் பராபரமே''*

-தாயுமானார்

# கா. சுப்பிரமணிய பிள்ளை

(முதல் சைவ இளைஞர் மாநாடு, திருவிடை மருதூர் - 1930)

சைவ இளைஞர் பொருட்டு முதல் முதல் கூட்டப்படும் இம்மகாநாட்டிற்கு என்னைத் தலைமை பூணும்படி கேட்டமைக்குக் காரணம் இளைஞரைப் போல பயிற்சி போதாமை என்பால் காணப்படுதல் போலும். நான் அதற்கு இசைந்தது எதனாலோ எனின் இளைஞர் பாலுள்ள உள்ளக் கிளர்ச்சி, களங்கமின்மை, விடாமுயற்சி முதலிய பல நற்பண்புகளைப் பெற்றுக் கொள்றுதற்கும் அன்னார்க்கு அறிவுரை பகர வந்துள்ள மாட்சிமை தங்கிய பேரமைச்சர் முதலிய பெரியோரது பயிற்சி மிக்க போதனையின் பயன் கொள்ளுதற்கும் வாய்ப்பாக அமைதலின் என்க.

இம்மகாநாட்டைத் திறந்த பேரமைச்சரது அறிவுரைகளின் விளக்கமாக யான் செப்பும் சிற்றுரையைக் கருதுக இளமைப் பருவமானது எல்லா நலத்திற்கும் வித்திடும் பருவமாதலின் எல்லா நலத்தையும் விளக்க வல்ல கல்வியினை இளமையிற் பயிலுதல் வேண்டுமென்று நமது முன்னோர் கூறினர். 'இளமையிற் கல்வி சிலையினெழுத்து' என்பதைக் காண்க. கற்கும் கலைகளை எல்லாம் தொழிற்கலை, கவின்கலை, மெய்க்கலை என மூன்றாகப் பிரித்தல் கூடும். உடல் வாழ்க்கை நிலை பெறுதற்கு வேண்டும் ஊதியங்களைக் கருதிப் பயிலப்படும் உழவு, கைத்தொழில், வணிகம் முதலியவற்றின் சார்பான கலைகளை எல்லாம் தொழிற் கலை எனலாம். ஐம்புலனிற்கும் மனதிற்கும் இன்பம் பயக்கவல்ல பாட்டு, இசை, கூத்து, ஓவியம், சிற்பம் முதலிய அழகினைச் சிறப்பிக்கும் கலைகளெல்லாம் கவின் கலை எனப்படும். இனி மெய்க் கலை என்பது, தோன்றும் பொருள்களின் தன்மைகளை ஆராயும் கலை எனவும், தோன்றும் பொருள்களுக்கெல்லாம் அடிப்படையாயுள்ள முடிவான உண்மைப் பொருளை ஆயும் முடிந்த மெய்க்கலை எனவும் இருதிறப்படும். முன்னவற்றை அறிவியல் நூலின் (Science) பாலனாகவும் பின்னவற்றைத் தத்துவ நூலின் (PHilosophy) பாலனவாகவும் மேல் நாட்டினர் கருதுவர். இன்னொரு முறையாகப்

பார்க்குமிடத்து உலகத்தின் ஒவ்வொரு பகுதியையும் வகுத்து வகுத்து ஆயும்முறை அறிவியல் நூல் என்றும், எல்லாப் பொருளும் தொக்க பிண்டமாகிய உலகத்திற்கு ஆதாரம் யாதென்று ஆயும் முறை தத்துவ நூல் முறையாகவும் கொள்ளப்படும்.

தத்துவநூல் ஆராய்ச்சியில் நமது முன்னோர் தலை சிறந்து விளங்கினர். அஃதே சமய உணர்ச்சிக்கு ஆதாரமாக உள்ளது. எக்கலையினும் மெய்க்கலை உயர்ந்ததாலும் அதன் கண்ணும் முடிந்த மெய்ப்பொருளை ஆய்ந்தறியும் சமயக் கலையானது மிக மேம்பாடு உடையது ஆதலானும் சமயக்கலையின் பயனையே கல்வியின் விழுமிய பெரும் பயனாக ஆசிரியர் திருவள்ளுவர் முதலிய பேரறிஞர்கள் அறுதியிட்டு உரைத்தனர்.

*கற்றதனா லாய பயனென் கொல் வாலறிவன்*
*நற்றாள் தொழ அரெனின்*
*எழுத்தறியத் தீரும் இழிதகைமை தீர்ந்தோன்*
*மொழித் திறத்தின் முட்டறுப்பான் ஆகும் - மொழித் திறத்தின்*
*முட்டறுத்த நல்லோன் முதனூற் பொருளுணர்ந்து*
*கட்டறுத்து வீடு பெறும்.*

என்றவிடத்து இலக்கண இலக்கியங்களின் குற்றமற்ற பயிற்சியினது முடிந்த மெய்ந்நூற் பொருளுணர்ந்து பற்று நீங்கி வீடு பெறுதற்குக் கருவி என்று கூறியது காண்க.

முடிந்த மெய்க்கலையின் சாரமே சைவத்தின் உட்கிடையாம் தென்னாடுடைய சிவனே போற்றி என்பதற்கேற்பச் சிவநெறியானது பண்டைத் தமிழரது சமய நெறியாய் நிலவினமையான் அதன் உயிர்க் கருத்துக்கள் தொல்காப்பியம், திருவள்ளுவர் முதலிய பண்டைத் தமிழ் நூல்களில் பொதிந்து கிடப்பதை வைத்து இறுதி ஊகிக்கப்படும். தொல்காப்பியமானது இப்பொழுதுள்ள வடமொழி வியாகரணமாகிய பாணினியம் இயற்றப்படுதற்கு முன்னே தோன்றி மறைந்த ஐந்திரத்தினோடு ஒத்தகாலத்ததெனக் கருதுமிடத்து அதன் பழமை நன்கு புலனாகும். அத்துணைப் பழமையாகிய காலத்தில் கடவுள் உயிர் உலகம் என்ற முப்பொருள் உண்மை தமிழ் நாட்டிலே எங்கும் வழங்கி வந்தது என்பது அவற்றின் சார்பாகிய சொற்களை எழுத்துக்களுக்கு உருவகப் பெயர்களாக ஆசிரியர் தொல்காப்பியனார் கொண்டமையால் இனிது விளங்கும். ஆய்தம், உயிர், மெய் என்ற மூன்று சொற்களையும் உற்று நோக்குக. ஆய்தம் என்பது நுண்ணினது என்று பொருள்படும். எல்லா எழுத்தொலிகளும் தோன்றுதற்கு

அடிப்படையாய் உள்ள மூச்சானது நுண்ணிதாய் எழுத்தொலி புலனாதற்கு ஏதுவாகிய காற்றுத் தொகுதியோடு கலந்திருத்தலின் அதனையே ஆய்தம் என்றார்.

அது மூலமாகிய எழுத்தொலியினோடு கலந்தே ஒலித்தலின் அதனை சார்பெழுத்தென்றார். எல்லாப் பொருளுக்கும் ஆதாரமாய்த் தோன்றாத அடிப்படியாய் அவற்றொடு சார்ந்து நிற்கும் மெய்ப் பொருளையுணர்தலே சார்புணர்தல் என ஆசிரியர் திருவள்ளுவனார் மெய்யுணர்தல் அதிகாரத்தில் குறித்தமை காண்க. ''சார்பினால் தோன்றாது தானறுவாய் எப்பொருட்கும், ஏனின்று எஞ்ஞான்றும் இன்பம் தகைத்தோர்'' என்ற விடத்தும் இக்கருத்து வலியுறுதல் காண்க. எல்லாப் பொருட்கும் சார்பாகிய முதல்வன் அப்பொருள் களின் இயல்பிலனாய் அவற்றின் வேறான தன்மையுடையனாய் இருத்தலின் தனி முதலெனப் படுவன். அவ்வாறு உயிரொடும் மெய்யொடும் சாராது வேற்றியல்புடைய ஆய்தமானது தனிநிலை எனப்படுதல் காண்க.

இனி எப்பொருட்கும் இன்பம் ஈயும் இறைவனன் வேறாக அவ்வின்பத்தைப் பெறும் உயிர்கள் பல என்பதும் தொல்காப்பியத்துட் போந்த கருத்தேயாகும். ''வினையின் நீங்கி விளங்கிய அறிவின் முனைவர்'' என்ற விடத்து உயிர்கள் வினை வசப்பட்டு அறிவு மயங்கப் பெறுவன என்பது குறிப்பனறியக் கிடக்கின்றது. வினைக்கு ஏதுவாக எடுக்கும் உடம்பே மெய்யெனப்படுதலின் உயிர் ஊர்ந்து வரும் எழுத்துக்களை மெய்யெழுத்தெனவும் ஊரும் எழுத்துக்களை உயிரெனவும் குறியீடு செய்து கொண்டமை மிகவும் வியக்கத்தக்கது. மெய்யென்பதே தத்துவம் என்னும் வடசொல்லின் பொருளாகும். தத்துவக் கூட்டமே உலகமாதாவின் மெய்யென்ற விடத்து உலகம் சுட்டப்பட்டதென அறிக. இதுவரை கூறியவற்றால் சைவ சித்தாந்தத்துட் போந்த முப்பொருளுண்மை தொல்காப்பிய எழுத்ததி காரத்துள் அமைந்து கிடக்கின்றது என்பது இனிது புலனாகும். இதனைப் பற்றிய விரிந்த ஆராய்ச்சி பிற்காலத்து நூல்களில் காணப்படும். இப்போது நாம் ஒரு தலையாக உள்ளத்தில் பதித்துக் கொள்வது யாதெனில் எல்லாம் வல்ல முழுமுதற் கடவுள் ஒருவன் உண்டென்பதும் அவனன்றி ஓரணுவும் அசையாதென்பதும் ஆகிய முடிந்த உண்மைகளேயாம். இக்கருத்தினையே வடமொழி உபநிடதங்களும் பாரசீகப் பண்டைப் பல்நூல்களும் கிரேக்க தத்துவ நூலும் வெவ்வேறு வகையாகப் பகர்கின்றன. தற்காலத்திலே மேல்நாட்டுத் தத்துவ உணர்ச்சி சான்றவர்கள் அறிவுடைய முழுமுதற்

பொருளே அறிவில்லாத பொருட் பிண்டமாகிய உலகத்திற்கு ஆதாரமாய் யுள்ளதென்பதை முடிவாகக் கைக் கொண்டுள்ளார்கள். இம்முடிந்த வுண்மையை அறியாத பலர் இக்காலத்திலும் முற்காலத்திலும் நாத்திக வாதம் பேசியொழிந்தனர்.

கடவுள் உண்மை உணர்ச்சிக்குத் தடையாய் நிற்பனவற்றுள் ஒன்று யாதெனில் மக்களது முற்றுப் பெறாத அவாவேயாம். நினைந்ததொன்று முடிய வேண்டுமென்று கருதுபவன் கடவுளை வணங்கியும் அது முடிவு பெறாத விடத்து நாத்திக வாதத்தை மேற்கொண்டும் நிற்கின்றான். தான் செய்வினைக்குத்தக்க பயனை ஒருவன் அடைகின்றான் என்பதையும் வினை செய்தல் ஒரு பிறவியிலும் அவ்வினையின் பயனை நுகருதல் மற்றொரு பிறவியிலும் நிகழ்தல் கூடுமென்பதே உணராததாகும். தமக்குத் தக்கவற்றை அறிந்து உதவுகின்றார் கடவுள். துன்பத்தைக் கொடுத்தாலும் தம்மைப் பக்குவப்படுத்தி உய்வித்தல் பொருட்டே என்னும் கருத்துக்களை மனதில் பதித்துக் கொள்ளல் வேண்டும் என்பதை வற்புறுத்தவே ஆசிரியர் திருவள்ளுவனார்,

*அவ்விய நெஞ்சத்தான் ஆக்கமும் செவ்வியான்*
*கேடும் நினைக்கப் படும்.*

என்று உறுதி கூறிப் போந்தனர். ஆங்கிலத்திலும் 'God knows what is best for us' என்பதும் கடைப்பிடிக்கத் தக்கதே. 'வேண்டுவார் வேண்டியதே ஈவான்' என்ற திருவாக்கிற்குப் பொருளினை ஆய்ந்து கொள்ளல் வேண்டும். வேண்டுவார் என்ற சொல்லானது வேண்டும் தகுதியுடையார் என்று பொருள்படும். ''தாமென்றும் மனந்தளராத் தகுதியினால் உலகத்துக்கு ஆமென்று சரண்புகுந்தார் தமைக் காக்கும் கருணையினான்' என்ற திருஞானசம்பந்தப் பெருமான் திருவாக்கினால் எக்காலத்தும் மனந்தளராமையும் தான் மனத்தொடு இறைவன் செயல் யாவும் நன்மையே என்று கருதிச் சரண்புகுதலு மாகிய தகுதியுடையோரே இறைவனது சிறந்த கருணைக்குரியவர் என்பது தெளியப்படும். பயன் கருதி இறைவனை வழிபட்டால் அது கிடையாத போது நாத்திகம் தலை எடுத்தலின் பயன் கருதாது கடவுளை வழிபடுகெனப் பெரியோர்கள் கூறுவாராயினர். பயன் கருதற்கு ஏது ஆசையாதலின் ஆசையற்ற இடத்திலே தான் தெய்வ உணர்ச்சி நிலைபெறும் என்ற கருத்தினைத் தாயுமானப் பெரியார் ''நிராசை இன்றேல் தெய்வம் உண்டோ'' என்றார். ஆதலால் இறைவனடிக்குப் பயன் கருதாது அன்பு செலுத்துதலே சிறந்த வழிபாடாகும். காதலற்கு அன்பினால் விளையும் இன்பம் போல்

இறையன்பினால் அடியார்க்கு இன்பம் விளையும். "இறவாத இன்ப" அன்பு என்பதும் அது. இவ்வாறே நமது சமயக்கருத்துக்கள் பிறவற்றையும் ஆய்ந்து உண்மை தெளிக. ஈண்டு அவற்றை விரிப்பில் பெருகும். சைவத்திலே எவ்வுயிர்க்கும் இரக்கம் வைத்தல் சிறந்த கொள்கையாகத் தழுவப்படுதலானும் ஒழுக்கம் பற்றியே உயர்வு என்பது தமிழ்க் கொள்கை யாதலானும் சைவ இளைஞர் யாவரும், அருள் ஒழுக்கமும், விரிந்த நோக்கமும், குற்றம் பொறுக்கும் குணமும், ஒற்றுமையும், விடா முயற்சியும் உடையவர்களாய்த் திகழ்தல் வேண்டும்.

சைவத்தின் சிறந்த உண்மைகளை உலகத்தில் தெளியப் படுத்தினால் உலகிலுள்ள அறிஞர் யாவரும் அவற்றை மேற் கொள்வர். "ஞால நின்புகழே மிக வேண்டும்" என்ற நமது பரமாசாரியார் திருவுள்ளக் கருத்தினை யாவரும் நிறைவேற்ற முயல வேண்டும்.

சைவ வொளியானது எங்கும் பரவுதற் பொருட்டு சைவ சித்தாந்தக் கலாசாலை, சைவ நூல் நிலையம், சைவ போதகாசிரியர் நியமனம், சைவர் விடுதி, சைவ நூல் வெளியீடு முதலிய பேரறங்கள் முதலியவற்றையும் சைவ ஆதீனத் தலைவர்களும் பிற சைவச் செல்வர்களும் கோயிலதிகாரிகளும் அமைந்து நன்கு நடத்திச் சைவர்க்கும் சைவ இளைஞர்க்கும் பேருதவி புரியுமாறு திருவருள் சுரக்கும் பொருட்டு எல்லாம் வல்ல இறைவனை வாழ்த்துகிறேன்.

★★★

## பேரறிஞர் கா. சுப்பிரமணியனார்

"கா. சுப்பிரமணியம் கல்விக் கடல்; ஆங்கிலத்திலும் எம்.ஏ. தமிழிலும் எம்.ஏ. சட்டத்தில் எம்.எல். அவருக்கு எம்.எல். பிள்ளை யென்று ஒரு பெயரும் வழக்கிலிருக்கிறது.

பழந்தமிழ் நூல்களின் உள்ளுறைகளை நோக்குதற்கென்று கா. சுப்பிரமணியம் பிள்ளைக்கு ஒரு தனிக்கண் அமைந்துள்ளது போலும். அவரிடத்திலிருந்து பல திறத் தமிழ்ப் புதுமைகள் பிறக்கும் அவைகளைப் பழமையென்றே அவர் சொல்வர். அஃதெனக்கு வியப்பாகவே தோன்றும்.

கா. சுப்பிரமணியம் பிள்ளை எம்.எல், பரீட்சைக்குப் படித்து வந்த வேளையில் இராயப்பேட்டை குகானந்த நிலையத்திலே 'நூலாராய்ச்சி' என்ற பொருள்பற்றி ஒரு போது பேசினார். தலைமை

தாங்கியவர் ஜஸ்டிஸ் சதாசிவ ஐயர். நூலாராய்ச்சி தலைவரை மயக்கியது. அவர் எந்நிலையில் நின்றாலும் எவ்வேடங் கொண்டாலும் - மன்னிய சீர் சங்கரன் தாளை மறவாத செல்வத்தைப் பெற்றுள்ளது ஒருவித ஆறுதலளிக்கிறது. அச்சங்கரன் தமிழ்த் தொண்டரைக் காப்பானாக''

ப. 179, 181 வாழ்க்கை வரலாறு, திரு.வி.க.

# திரு.மா.வே. நெல்லையப்ப பிள்ளை

**(27ஆம் ஆண்டு விழா - 1932 - திருவிற்கோலம்-சைவர் மாநாடு)**

*எடுக்கு மிவ்வுரை யின்றமிழ் வாயிலா*
*நடக்கு நற்றிறன் நன்குவந் தெய்திடும்*
*தடக்கை யைந்தொடு தாழ்செவி யும்முடைக்*
*கடக்க ளிற்றன் கழல்கருத் துன்னவே*

## சிவநேயச் செல்வர்களே!

உலகிற்கு முழுமுதுற் றலைவன் இறைவன். அவனே எல்லா உயிர்களுக்கும் இன்பம் அளிக்கும் உண்மைச் சபாநாதன். உலக வாழ்வில் குடும்பம், குடி, குலம், சாதி, வகுப்பு, நாடு, அரசியல் அதிகாரங்கள் முதலிய பல்வகை இடங்களில் தலைமை பூண்டு பல்வகைத் தொகுதி மக்களுக்கும் பிற உயிர்களுக்கும் இன்பம் அளிக்கும் செயலை மேற்கொண் டொழுகுகிறவர் அவ்விறைவ னுடைய தலைமையை அறிந்து உணர்ந்து அத் தலைமைக்குள் அடங்கி நின்று பணிசெய்தாலொழிய அவர்கள் பணி செம்மையாய் நடைபெறாது. இறைவனுடைய முழுமுதற் றலைமையைச் சிறிது உணர்ந்த எனது உள்ளத்தினுள்ளே 'நான்' விலகி நிற்க, இறைவன் விளங்கி நின்று உணர்த்தி இப்பேரவைச் செயல்களை மூன்று நாட்களிலும் நிகழ்த்துவிப்பானாக. நான் அவனை எனது மனமொழி மெய்களால் வணங்குகிறேன்.

### எனது கடமை

நான் செய்யும் இப்பேருரையில் முதலாவது சைவ சமயத்தைப் பற்றிச் சில வார்த்தைகள் கூறக் கடமைப்பட்டுள்ளேன். இரண்டாவ தாக நமது தாய் நாடாகிய பாரத நாடு முழுவதும் மிக்குப் பேசப்பட்டும் எழுதப்பட்டும் வருகிற தீண்டாமையைப் பற்றிப் பேசுதல் நமது நாட்டுப் பெருமக்கள் நலத்துக்கு இன்றியமையாதது. இப்பேரவையில் சைவப் பெருமக்களாகிய நாம் இச்சந்தர்ப்பத்தில் தீண்டாமையைப் பற்றி ஆய்ந்து வகையறச் சூழ்ந்து ஒரு முடிவான தீர்மானம் செய்ய வில்லையானால் நமது நாட்டுக்கு நாம் செய்ய வேண்டிய கடமையைச் செய்யாத குற்றத்திற் குள்ளாவோம்.

## சைவசமயம்

உலகில் வாழும் பல தர அறிவு நிலைகளிலுள்ள பலவகை மக்களுக்கு வழிகாட்டியாய்ப் பல சமயங்கள் உள. அவற்றுள் அறிஞர்களால் சிறந்தனவாகக் கூறப்பட்ட சமயங்கள் ஐந்து; அவை இந்து சமயம், புத்த சமயம், சோராஸ்டிர சமயம் (பார்சீகர் சமயம்), கிறிஸ்து சமயம், முகம்மதிய சமயம் என்பன. இவ்வைந்து சமயங் களில் இந்து சமயமே பிறசமயங்களை விலக்காது தனது இனத்துக்குச் சேர்ந்த சகோதர சமயங்களாகத் தழுவிக் கொள்ளும் சமயம். அதனால் பிறசமயிகளைத் தன்னிடம் வலுச் செய்தாவது பலவகையில் ஆசைகாட்டி இழுத்தாவது சேர்த்துக் கொள்கிற சமயமாற்றுமுறை பிறசமயங்களிலிருப்பதுபோல இந்து சமயத்திலில்லை. இந்த இந்து சமயத்தில் ஸ்மார்த்தம், வைணவம், மாத்துவம், சைவம் என நான்கு பெரும் பிரிவுகளுள்ளன. இந்த நான்கு பிரிவுகளும் முறையே கேவலாத்துவிதம், விசிட்டாத்துவிதம், துவிதம், சுத்தாத்துவிதம் என்ற நமது நாட்டிலுள்ள நான்கு தத்துவங்களையும் தழுவியுள்ளன. நமது சைவ சமயத்தைச் சேர்ந்த சுத்தாத்துவித தத்துவத்தில், கேவலாத்துவித தத்துவத்தைச் சேர்ந்த அபேத நிலையும், விசிட்டாத்துவிதத்தைச் சேர்ந்த பேதாபேத நிலையும், மாத்துவத்தைச் சேர்ந்த பேத நிலையும் அடங்கியுள்ளன. இந்தத் தத்துவங்களெல்லாம் இறைவனுக்கும் உயிருக்குமுள்ள தொடர்பு இன்னது எனக் குறிக்கின்றன. சுத்தாத்து விதமானது, தன்கண் பிறமூன்று தத்துவங்களும் அடங்கத் தான் அவை ஒவ்வொன்றினுடைய தனி நிலைக்கும், மூன்றும் சேர்ந்த தொகுதி நிலைக்கும் மேம்பட்டு விளங்கித் திகழ்கின்றது.

## சைவ சமயம் உலக வாழ்க்கைக்கு சிறந்த வழிகாட்டியாயுள்ளது

சைவசமயம் என்ற சொற்றொடர் உயிரைச் சிவத்துடன் (இன்பத்துடன்) சம்பந்தப்படுத்தும் நெறி என்று பொருள் படும்.சிவமானது பிறப்பிறப்பில்லாத நித்தியத்துவமும் பேரறிவும் பேரின்பமும் உடைய தனிப்பொருள். அது, சச்சிதானந்தப் பொருள் அல்லது உண்மை அறிவின்பப் பொருள் என்று கூறப்படும். உலக வாழ்க்கையில் பிறப்பிறப்புக்களாலாகிய அநித்தியத்துவத்தையும் சிற்றறிவினையும் சிற்றின்பத்தையுமுடைய உயிரானது, சார்ந்த பொருளின் தன்மையை அடையுமியற்கையதாதலின், மூன்று வகையிலுள்ள தனது குறைவு நீங்கி நிறைவை அடைதற்குச் சிவத்தினைச் சார்தல் வேண்டும். இங்ஙனம் சிவத்தினைச் சார்தல்

அல்லது பேரின்பம் அடைதலே உலக வாழ்க்கையினது குறிக்கோளாகும். உயிரானது இந்தக் குறிக்கோளை அடைதற்கு சைவ சமயமே சிறந்த நெறியாக அமைந்துள்ளது. சைவ நெறியானது இந்தக் குறிக்கோளைப் பகுத்தறிவுடைய மக்களுயிர் உலக வாழ்க்கையில் அடையச் செய்தற்கு விலகாத பயனுடன் கூடிய நியமம் ஒன்று இன்றியமையாது வேண்டப்படுவது. இந்த நியமம் 'வினைச்சட்டம்' என்று கூறப்படும். வினைச்சட்டமானது அவரவர் செய்த வினையின் பயனாகிய இன்ப துன்பங்களை, அவரவரே பேராமல் நுகரும்படி செய்து, உயிர்களுக்கு அவைகள் அனுபவ அறிவு கைவரப்பெற்றுப் பேரின்பமடையப் பக்குவமுண்டு பண்ணுகின்றது. இங்ஙனம் உயிர் பக்குவம் அடைதற்கு ஒரு பிறப்பு வாழ்நாள் சிறிதுங் காணாது. பல பிறப்புக்கள் வேண்டப் படும். உயிர்கள் உலக வாழ்க்கயில் நல்வினை தீவினைகளைச் செய்தும் முன் செய்த வினையின் பயனாக இன்பதுன்பங்களை நுகர்ந்தும் அடைகிற பருவத்தினால் வளர்ச்சி (Evolution) உடையவாகின்றன. இந்த வளர்ச்சியானது மேற்கு நாட்டு அறிஞர் கூறும் உடல் வளர்ச்சி மாத்திரம் அன்று; உயிர் வளர்ச்சியும் அதற்குத் தக்கவாறு பொருந்தும் உடல் வளர்ச்சியும் சேர்ந்த வளர்ச்சியே இது. ஆகவே, உயிர் தனு கரண புவன போகங்களோடு கூடிய உலக வாழ்க்கையில் படி முறையாக அநுபவ அறிவு முதிர்ந்து பக்குவம் அடைதற்கு உயிர் வளர்ச்சி முறைமையும், (Soul Evolution Scheme) வினைச் சட்டமும், பல பிறப்புண்மையும் இன்றியமையாது வேண்டப்படுவன. இம்மூன்றினையும் உடையன வல்லாத சமயங்கள் சமய இலக்கணத்திற் குறைபாடுடையவை. சைவ சமயம் இம்மூன்று முறைமைகளையும் உடையதாதலின் சமய இலக்கணம் நிரம்பப் பெற்றுள்ளதாய் உலக வாழ்க்கையில் மக்களுக்குச் சிறந்த வழிகாட்டியாயமைந்துள்ளது.

## சைவ சமயத்தினது வியாபகத்தன்மை

சைவ சமயம் நிரம்பிய சமய இலக்கணம் அமையப் பெற்றுள்ள தாயிருத்தல் பற்றி வியாபகத்தன்மையும் உடையதாயிருக்கின்றது. வியாபகம், நிறைவு என்பன ஒரு பொருட் சொற்கள். சைவ சமயத்திற் கூறப்பட்ட கடவுள், கடவுளுக்குரிய முழு இலக்கணமும் வியாபகத்தன்மையும் உடையவனாயிருத்தல் போல, அவனை அடைதற்கு வழி காட்டும் சைவ சமயமும் முழு இலக்கணமும் வியாபகத்தன்மையும் அமைந்துள்ளது. சைவ சமயத்தில் கடவுள் மெய், மெய்ப் பொருள், உண்மை, வாய்மை, செம்பொருள் முதலிய பெயர்களாற் கூறப்படுகின்றான். உலகில் மலமறைப்புண்டு

தத்துவங்களில் விளங்கும் ஏகதேச உண்மைகளுக்கெல்லாம் (Phenomenal Truths) அவனே ஆதாரமான தனி உண்மையா யிருக்கின்றான் (Absolute Truth). அவன் அன்றி எந்த உயிர்ப் பொருளாவது உயிரில் பொருளாவது தோன்றி விளங்கவும் இயங்கவும் செய்யாது. ஆயினும் அவன் இவ்விரு பொருள்களிலும் அடங்காமல் அவற்றிற்கு மேற்பட்டு மிருக்கின்றான். எந்தச் சமய உண்மையும் அவனுடைய வியாபக விளக்கமின்றி உலகில் விளங்காது. எந்தச் சமயக் கடவுளும் எந்தச் சமயப் பெரியாரும் அவனுடைய வியாபக விளக்கம் இன்றி உலகில் விளங்கார்கள். பலதர அறிவு நிலைகளை யுடைய பலவகை மக்களுக்குத் தக்கவாறு பல்வகைத் தத்துவங்களில் விளங்கும் பலதர அறிவு நிலைகளையுடைய சமயங்களும் வேண்டப் படுவன. ஒரே சமயம் எல்லா மக்களுக்கும் பொருந்தாது. ஆதலின் இந்த உண்மையை அறிந்த சைவ சமயத்துக்குப் பிற சமயங்களோடு சிறிதும் பிணக்கு இல்லை. எச்சமயத்தார் எப்பெயரால் எக்கடவுளை எக்கோலத்தில் எவ்வழியில் வணங்கினும், அவ்வணக்கம் உண்மையாயிருப்பின், கடவுள் அவ்வணக்கத்தை ஏற்றுக் கொண்டு வணங்குகிறவர்களுக்கு அவரவர்கள் அறிவு நிலைக்குத் தக்க வண்ணம் அவ்வக்கடவுளை அதிட்டித்துநின்று அருள் செய்கின்றான். உலகில் வாழும் பல சமய மக்கள் இணங்கி வாழ்ந்து உலக இன்பம் அடைதற்கு வலிய தடையாயிருக்கிற சமயப் பொறுமையின்மைக்குச் சைவ சமயத்தில் சிறிதும் இடமில்லை. சைவசமயத்தின் வியாபகத்தன்மை பற்றியே அஃது எவ்வுயிர்க்கும் எனைத்தானுந் தீங்கு செய்தலை விலக்குவதுடன் எல்லா உயிர்களும் இன்பநலம் அடையும் வண்ணம் இயன்றவளவு அறம் செய்ய வேண்டும் என்றும் விதிக்கின்றது. புலாலுணவு விலக்கப்பட்டதும் அக்காரணம் பற்றியே. மேலும் மனிதனுக்குக் கீழுள்ள பிராணிகளும் கீழான நிலையில் உயிர் வளர்ச்சியடையும் ஆன்மாக்களாயிருத்தலால் அவைகள் வாழ்நாள் முடிவுவரை அடையப் பெறும் உயிர் வளர்ச்சியைத் தடுத்து, இடையிலே புலாலூண் பொருட்டு அவைகளைக் கொல்லுதல் இறைவனுடைய கருத்துக்கு மாறான பாவச் செயலாகும். சைவ சமயப் புறம்பேயுள்ள ஒருவன் அதனகத்தே தீக்கை முறையிற் புகுந்து அச்சமயநலமடைதற்கு அவனிடம் வேண்டப்படுவன, தகுதியும் ஆர்வமுமேயாம். சாதி, குலம், பால் (Sex), அதிகாரம், பதவி முதலிய உலக வேற்றுமைகளி லெதுவும் தீக்கை பெற்றுச் சைவசமய வரம்புக்குட் புகுதலுக்குச் சிறிதும் தடையாகாது. மக்களில் இளைஞர், முதியர், நோயாளி முதலிய உடல் வலி மனவலி குறைந்தவர் களுக்கும் அவரவர்களுக்குத் தக்கவாறு தீக்கை கூறப்பட்டிருக்கின்றது.

## சைவசமயத்தினது இயற்கைத் தன்மை

வியாபகத் தன்மை பற்றிச் சைவசமயத்துக்கு இயற்கைத் தன்மையும் அமைந்துள்ளது. இறைவன் தனது சத்தியினால் உலகிலெங்கும் விளங்குதலே இயற்கையாகும். உலகை இயக்குதல் செய்கிறவன் என்னும் பொருளில் இயவுள் என்ற சொல் பண்டைத் தமிழ்ப் புலவர்களால் இறைவனுக்கு வழங்கப்பட்டு வந்துள்ளது. அவ்வாறே இயல் இயற்கை என்ற சொற்களும் இறைவன் உலகை இயக்கும் செயற்றன்மை என்று பொருள்படும். பகுத்தறிவுடைய மக்கள் இறைவனை யறிந்து உய்தற்பொருட்டே அவனது அருட்சத்தி உலகத்தை இயக்குந் தன்மையாகிய இயற்கையில் விளங்குகின்றது. உயிர்களுடைய நலத்துக்குக் கேடு பயக்கும் எச்செயலும் இயற்கைக்கு ஒத்தது ஆகாது. சைவசமயம் இயற்கைத்தன்மை உடையது ஆதலின், மேற்கு நாட்டு இயற்கை ஆராய்ச்சியாளர் சென்ற முந்நூறு நானூறு ஆண்டுகளில் இயற்கை ஆராய்ச்சியால் அறிந்த உண்மைகள் சைவசமய நூல்களில் நீண்ட காலத்துக்கு முன் கூறப்பட்ட உண்மைகளுடன் ஒத்திருக்கின்றன. எடுத்துக்காட்டுகளாகச் சில இங்கே நான் கூறுகின்றேன். உலகப்பொருள்கள் ஒரு நிலையிலிருந்து வேறொரு நிலைக்கு மாறுமே அன்றி ஒருகாலும் அழியா என்ற உண்மையும் (nothing is lost) சத்தியும் அவ்வாறே அழியாது என்ற உண்மையும் (no energy is lost) சைவசமய நூலிற் கூறப்பட்ட சற்காரிய வாதத்துக்கு ஒத்துள்ளன. உலகில் விளங்கும் ஒரே சத்தி அது தோன்றும் இடவகையால் வெப்பம், ஒளி, ஒலி, மின்சாரம் முதலிய பல சத்தித் தோற்றங்களாய் விளங்குகின்றது என்று ஏறக்குறைய ஐம்பது ஆண்டுகளுக்கு முன் அவர்களால் கூறப்பட்ட உண்மை நீண்ட காலத்துக்கு முன்னே சிவஞானசித்தியார் முதலிய நூல்களிற் கூறப்பட்டிருக்கின்றது. தூல அணு (Atom) பிரிக்கப்படும் தன்மையுடையது என்று ஏறக்குறைய நாற்பது ஆண்டுகளாக அவர்கள் கண்டுபிடித்துக் கூறும் உண்மையானது நீண்ட காலத்துக்கு முன்னே சைவ சமய நூல்களிற் கூறப்பட்டுள்ளது. அவ்வாறே சூக்குமத்தில் ஒளியாய் விளங்கும் சத்தி தூலத்தில் ஒளியாய் விளங்குகின்றது என்ற உண்மையும் முன்னமே சைவசமய நூல்களிற்கூறப்பட்டிருக்கின்றது. சைவப் பெரியார்கள் தங்களில் விளங்கும் அருள் அறிவால் மேலான நிலையில் நின்று கீழ் நோக்கி எளிதில் அறிந்த உண்மைகளை மேற்குநாட்டு ஆராய்ச்சியாளர் தங்கள் நுணுகிய ஆராய்ச்சி அறிவால் தொலைநோக்காடி (telescope) பெருநோக்காடி (microscope) முதலிய நுண் கருவிகளைத்

துணைக்கொண்டு மிக்க கடுமுயற்சியால் கண்டுபிடித்து அறிகிறார்கள். அவர்கள் முயற்சியும் திறனும் வியக்கத்தக்கனவே. அவர்கள் சைவசமயத்திற் கூறப்பட்ட மாயாதத்துவக் கூறுபாடுகள் முதலிய பல உண்மைகளை இன்னம் அறியமாட்டார்கள். அருள் அறிவாலன்றி எத்துணை நுணுகிய ஆராய்ச்சி அறிவாலும் அவைகள் அறியத்தக்கன வல்ல.

## சைவசமயத்தின் செயல்முறைத் தன்மை

சைவ சமயமானது மேலே கூறியபடி மக்களுக்கு வழிகாட்டியா யிருத்தலினாலே அதன் உண்மைகள் கொள்கைகளாக (Theories) மாத்திரம் அறியப்படுதலினாலே அவர்களுக்கு உலக வாழ்க்கையில் யாதொரு நற்பயனுமுண்டாகாது. அவர்கள் அந்த உண்மை களைத் தங்கள் ஒழுக்கத்தில் நடைபெறச் செய்தால் மாத்திரம் வாழ்க்கைக்குரிய நற்பயனை அடைவார்கள். மக்கள் உலக வாழ்க்கையில் உலக போகத்தை ஈட்டுதலிலும் நுகருதலிலும் தங்கள் வேட்கை யறிவுச் செயல்களை இயற்கை வழியில் அதாவது அறவழியில் நிகழ்த்துதலினாலே அவ்வேட்கை அறிவுச் செயல்கள் மேலும் மேலும் திருந்தப் பெற்று மேலே கூறிய உயிர்வளர்ச்சி அடைந்து முத்தி நெறி வாழ்க்கையிற் புகுதற்குப் பக்குவம் பெறுகின்றார்கள். அவர்கள் இவ்வாறு முத்திநெறி வாழ்க்கையிற் சென்றபின் உண்மைச்சரியை கிரியை யோகம் ஞானமாகிய படி முறைகளில் தங்கள் திருந்திய வேட்கை அறிவுச் செயல்களைப் பயன் கருதாது நிகழ்த்தித் தங்களிடம் அருட்சத்தி மேலும் மேலும் பதியப்பெற்று முற்றிலும் அறியாமையினின்று நீங்கித் தீவிரதர மெய்யுணர்வு பெற்றுச் சிவனோடு அத்துவிதமாய்க் கலந்து பேரின்பம் அடைகிறார்கள். மக்களுக்கு இங்ஙனம் உலகநெறி வாழ்க்கையில் ஆராய்ச்சி அறிவு பெருகுதற்கும், முத்திநெறி வாழ்க்கையில் அருள் அறிவாகிய மெய்யுணர்வு பெருகி முறுகுதற்கும் அவர்களுடைய செயல்முறை வாழ்க்கையே ஆதாரமாயிருத்தல் பற்றி, சைவ சமயமானது செயல்முறை வாழ்க்கையை வற்புறுத்திக் கூறுகின்றது. மக்கள் உலகநெறி வாழ்க்கையில் அவர்கள் ஆராய்ச்சி அறிவால் இறைவனுடைய பொது இயலை அறிந்தும் முத்திநெறி வாழ்க்கையில் தங்கள் அருள் அறிவால் இறைவனுடைய சிறப்பியலை உணர்ந்தும் வாழ்க்கையின் குறிக்கோளாகிய பேரின்பப்பேறு அடைகிறார்கள். இறைவனுக்குக் கூறப்படும் பொது இயல் சிறப்பியல்களாகிய பாகுபாடு சைவ சமயத்துக்கே சிறப்பாக உரியது. மேற்கு நாட்டுத் தத்துவ நூலார் இப்பாகுபாட்டினை அறியாது சிற்றறிவுடைய மக்கள்

இறைவனை அறியமுடியாது என்று முடிவு செய்து விட்டார்கள். (The finite cannot know the infinite) அறியப்படாத இறைவனால் உயிர்களுக்கு என்ன பயன்? அவர்கள் ''அருளினா லாகமத்தே அறியலாம், அளவினாலுந் தெருளலாம் சிவனை ஞானச் செய்தியால் மருளெலாம் நீங்கக்கண்டு வாழலாம், பிறவிமாயா விரிக்கலாம்'' என்ற உண்மையை அறியார்கள்.

இதுகாறும் நான் சைவ சமயத்தினது இலக்கணத்தைப் பற்றியும், சில குறிப்புகளைப் பற்றியும் எனது அறிவுக்கு எட்டிய வளவிற் பேசினேன். சைவ சமயமானது அதன் வியாபகத்தன்மை பற்றிப் பெருநெறி என்றும், அதன் இயற்கைத் தன்மை பற்றி அருள்நெறி, ஒளிநெறி, செந்நெறி என்றும், அதன் செயல் முறைத் தன்மை பற்றி நடைநெறி என்றும், இறைதங்கும் எவ்வுயிர்க்கும் அன்பாயிரு என்று கூறுதல்பற்றி அன்புநெறி என்றும் கூறப்படும். அவைகளெல்லாம் தீண்டாமை சம்பந்தமாய் எழுகின்ற கேள்விகளை ஆய்ந்து சூழ்ந்து நீங்கள் முடிவு செய்தற்கு வேண்டப்படுவன.

## தீண்டாமை

தீண்டாமை அல்லது தீண்டுதல் என்ற விடயம் பற்றிச் சில சிக்கலான கருத்துக்கள் உள்ளன. முதலாவது, அச்சிக்கல்களை நீக்குதல், அதனைப்பற்றிப் பேசி முடிவு செய்தலை எளிதாக்கும். தீண்டுதல் என்றால் என்ன என்பதுபற்றி நாம் திட்டமாய் அறிந்து கொள்ளல் வேண்டும். தீண்டுதல் என்பது பற்றிய கருத்துக்களை நாம் முதலாவது அறிந்து கொண்டால் அதற்கு மறுதலையாகிய தீண்டாமையைப் பற்றியும் அறிந்து கொள்ளலாம். தீண்டுதல் என்பது ஒருவன் தனது கைமுதலிய புற உறுப்புக்களால் பிறனைத் தொடுதலாகும். ஒருவனுடைய உடம்பு பிறனொருவனுடைய உடம்பைத் தொடுதலும் தீண்டுதலாகும். இவ்வாறு இருவர் ஒருவரை யொருவர் தொடுதலால் தீட்டு உண்டாகிறது என்பது கூறப்படுகிறது. ஒருவன் பிறனொருவனுடைய அருகில் நணுகுதலாலும் தீட்டு உண்டாகிறது என்பது கூறப்படுகிறது. ஒருவன் வீட்டில் ஒரு சாவு நிகழ்ந்தாலும் ஒரு பிறப்பு நிகழ்ந்தாலும் அவனுக்கும் அவனைச் சேர்ந்தவர்களுக்கும் பிறந்து அல்லது இறந்து பத்து அல்லது பதினாறு நாட்கள் வரை தீட்டு உண்டு என்று ஜனன மரண சௌச விதி கூறுகின்றது. அவனைச் சேர்ந்தவர்கள் வேறிடத்திலிருந்தால் அவர்கள் அச்சாவை அல்லது பிறப்பைக் கேட்டவுடன் அவர்களைத் தீட்டுச் சேர்கிறது. இங்கே தீட்ட உண்டாதற்குத் தொடுதல் வேண்டப் படுவதன்று. இந்தத் தீட்டு அவ்விதிப்படி அவனைச் சேர்ந்த ஓர்

உண்மையான ஞானிக்கு உண்டாவதில்லை. இந்தத் தீட்டைப் பற்றித் திருமூலர் தாம் அருளிய திருமந்திரம் என்ற தமிழ் ஆகம நூலில் சுத்தாசுத்தம் என்ற தலைப்பின்கீழ் அடியிற் கண்டபடி கூறுகின்றார்.

2551 *ஆசூச மாசூச மென்பர் அறிவிலார்*
*ஆசூச மாமிட மாரு மறிகிலர்*
*ஆசூச மாமிட மாரு மறிந்தபின்*
*ஆசூச மானிட மாசூச மாமே.*

2552 *ஆசூச மில்லை யருநிய மத்தருக்கு*
*ஆசூச மில்லை யரனையர்ச் சிப்பவர்க்கு*
*ஆசூச மில்லை யங்கிவளர்ப் போர்க்கு*
*ஆசூச மில்லை யருமறை ஞானிக்கே.*

இப்பாட்டுக்களின் கருத்து : "மக்கள் தீட்டு என்ன காரணத்தால் உண்டாகிறது என்று அறியாமல் தொட்டதற்கு எல்லாந் தீட்டு, தீட்டு என்று கூறுகின்றார்கள். அது சரிஅன்று. காரணத்தை அறிந்து தீட்டு உண்டு அல்லது இல்லை என்று முடிவு செய்ய வேண்டும்.

மேலே கூறியவாற்றால் தீட்டு என்பது தொடுதல் அல்லது அருகில் நணுகுதலால் மாத்திரம் உண்டாவதில்லை என்பதும், மனதிலுண்டாகிற மாறுதல் காரணமாக உடலிலுண்டாகிற அசைவு (Vibration) பற்றி உண்டாகிறது என்பதும் பெறப்படுகின்றன. ஒருவன் உடலுக்குரியதான சாதாரண அசைவுகள் (Normal Vibrations) யாது காரணம் பற்றியாவது மாறுதல் அடைந்தால் அந்த உடலுக்குத்தீட்டு உண்டாகிறது. அந்தத் தீட்டுடைய உடலைச் சாதாரணமான அறிவுடைய வேறொருவன் தொட்டால் அவனது உடலுக்கும் அதே அசைவுகள் உண்டாதலுமன்றித் தீட்டுடையவனுடைய உடல் அணுக்கள் சில அவனைச் சேர்தலாலும் அவனுக்கும் தீட்டு உண்டாகிறது. தீட்டு என்பது உடலுக்கேயன்றி உயிருக்கு எக்காலத்திலுமில்லை. ஆனால் உடலோடு அது வதுவாய்ச் சார்ந்திருக்கும் தன்மையுள்ள மனிதனுடைய உயிரையும் அத்தீட்டுத் தாக்கித் தூய்மையின்மையினை (அசுத்தம்) உண்டாக்குகிறது என்பது கருத்து. தொடப்படுகிறவன், வாந்தி, பேதி, பிளேக், க்ஷயம் முதலிய தொத்து நோய்களாற் பீடிக்கப்பட்டவனாயிருந்தால், அவனைத் தொடுகிறவன், அல்லது அவன் அருகில் அணுகுகிறவனுடைய உடலில் அந்நோயாளியினது உடல் அணுக்கள் அல்லது உடலிலுள்ள நுண்கிருமிகள் (Germs) புகுந்து அவனிடத்திலும் அதே நோயை உண்டுபண்ணுகிறது என்பதை நாம் கண்கூடாகக் காண்கிறோம்.

இவ்வகையான தீட்டும் உயிர்நலம் குறித்த உடல் நலத்துக்காக விலக்கப்படுவதொன்று. மேலே கூறிய தீட்டுவகைகளெல்லாம் புறத்தீட்டு என்பதில் அடங்கும். புறத்தீட்டு என்பது நேராயாவது மனமாறுதல் வழியாவது உடலுக்கு உண்டாகும் தீட்டு. இந்தப் புறத்தீட்டு விலக்குப் புறத் தூய்மையைப் பாதுகாக்கிறது. இப்புறத்தீட்டு அடைந்த ஒருவன் நீரின் மூழ்குதலால் அத்தீட்டினின்றும் தூய்மையடைகின்றான்.

இனி, இன்னொரு வகையான தீட்டு மக்களுக்குள் உண்டு. அது சூக்குமமான தீட்டு. அஃது ஒருவனுடைய மனதைப் பிறனொருவனுடைய மனம் சார்தலினாலுண்டாகும் தீட்டு. இத்தீட்டுக்குச் சேய்மை அண்மை என்ற வேறுபாடுகள் கிடையா. ஒருவனுடைய மனமானது தீய எண்ணங்களால் நிறைந்திருந்தால், பிறனொருவன் மனம் எவ்வழியிலாவது அதனைத் தொடுமானால் அவன் மனமும் தீய எண்ணங்களை உடையதாகும். எண்ணங்கள் சூக்குமப் பொருள்களாதலின் அவைகளை விலக்குதற்கு ஒரு வழிதான் உண்டு. அவ்வழியாதெனில், அத்தீட்டை விலக்க எண்ணுகிறவனுடைய மனதில் தீய எண்ணங்களில்லாமல் நல்லெண்ணங்கள் நிறைந்திருத்தலே ஆகும். ஒருவன் செம்முகங்காட்டிக் கடுமொழி கூறிக் கோபக்குறி காட்டுவனாயின் அக்கோபக் குறியைக் காண்கிற வேறொருவனுடைய மனமும் கோப மூட்டப்படுகிறது என்ற உண்மையை நாம் தெளிவாய்க் காணலாம். இத்தீட்டு அகத்தீட்டு என்பதில் அடங்கும். அகத்தீட்டு மனதிற்கு மனம் நேராய் நிகழ்கிற தீட்டினாலுண்டாவது. இத்தீட்டு விலக்கால் அகத்தூய்மை உண்டாகும். ஒருவன் அகத்தீட்டை விலக்குதல் அவன் மன வலியைப் பொறுத்தது. அவன் தனது மன வலியால் புறத்தீட்டுத் தன்னை அடையாதபடி விலக்கவுங்கூடும். புறத்தீட்டைப் பார்க்கிலும் அகத்தீட்டு மக்களுக்கு மிக்க பொல்லாங்கை விளைக்கும். அகத்தீட்டு விலக்கப்படுவதற்காகவே புறத்தீட்டு விலக்கப்படுகின்றது. அகத்தீட்டு விலக்குதலின்றிப் புறத்தீட்டு மாத்திரம் விலக்கப்படுதல் உயிருக்கு நற்பயனை விளைக்காது. அவ்வாறே அகத்தூய்மையின் பொருட்டே புறத்தூய்மை கருதப்படுகின்றது. அகத்தூய்மையைத் தழுவாத புறத்தூய்மையால் மிகச் சிறியபயன் உண்டாதலால் பயனில்லை என்று நாம் சொல்லலாம்.

மேலே கூறியவாற்றால் மக்களுக்குள் அகத்தீட்டுப் புறத்தீட்டு உண்டு என்பதும் அவைகளை விலக்கி ஒழுதுல் மக்களுடைய தனி நலத்துக்கும், பொதுநலத்துக்கும் வேண்டப்படுவது என்பதும்

தெளிவு. இந்த அகத்தீட்டும் புறத்தீட்டும் உலகில் எந்நாட்டிலும் எப்பொழுதும் எல்லா மக்களுக்கும் உண்டு. மக்களுக்குள் வேற்றுமையில்லை, தீட்டு என்பதும் இல்லை என்று இக்காலத்தில் ஒருசாரார் கூறுங் கூற்றுக் கண்கூடாய் நிகழும் அநுபவத்துக்கு மாறானது. மக்களுக்குள் மாத்திரமின்றி மக்கள் வழங்குகிற கோயில் வீடு முதலிய இடங்களுக்கும் தீட்டும், அதனாலுண்டாகும் தூய்மை இன்மையும், தீட்டு விலக்கலும், அதனாலுண்டாகும் தூய்மையும் உண்டு. மக்கள் தாங்களாகவும் புறத்திலிருந்து வருகிற தீட்டுக்கு இடங்கொடாமலும் தங்களுடைய உடலைத் தூய்மையாய் வைத்துக் கொள்ளுதல் போலத் தாங்கள் புழங்குகிற இடத்தையும் தூய்மையாய் வைத்துக் கொள்ளலாம். அவர்கள் உடலை அழுக்காய் வைத்துக் கொள்ளுதல்போல இடத்தையும் அழுக்கு அடையச் செய்யலாம். இடங்களுக்கும் இவ்வாறு கூறிய புறத்தீட்டு அன்றி அகத்தீட்டும் உண்டு. ஓர் இடத்திலுள்ள மக்கள் அங்கே அன்பு முதலிய அருட் குணங்களைப் பழகுதலினால் அகத்தூய்மையும், பகைமை முதலிய தீய குணங்களைப் பழகுதலால் அகத்தீட்டும் உண்டாகும். தீட்டுக்கும் அதனாலே உண்டாகும் தூய்மை இன்மைக்கும் அடிப்படையான காரணம் மலச்சார்பு ஆகும்.

## சாதிபற்றிய தீண்டாமை

மேலே பொதுவாகத் தீட்டினைப் பற்றிக் கூறிய உண்மையை நமது தாய்நாட்டில் வழங்கப்படுகிற சாதி வேற்றுமை பற்றிய தீட்டுக்குப் பிரயோகம் செய்து அதன் உண்மையை நாம் தெரிதல் வேண்டும். சாதி என்பது என்ன? அதற்கு அடிப்படையான தத்துவம் என்ன? சாதி உண்மைக்கு ஸ்மிருதிகளிலன்றி வேதாகமங்களிலும் ஆதாரமுள்ளதா? அது பிராமணர்களுக்கு அல்லாமல் தமிழர்களுக்கும் உண்டா? தமிழர்களுக்குள் சாதிக்குப் பதிலாக எத்தன்மையான பாகுபாடிருந்தது? சாதி எத்தனை பிரிவுகளையுடையது? அப்பிரிவு மக்களெல்லாரும் இப்பொழுது நமது நாட்டிலிருக்கிறார்களா? முதலிய கேள்விகளை எழுப்பி நாம் இப்பொழுது அவைகளைப் பற்றி ஆராயப் புகுந்தால் அவ்வாராய்ச்சி நீண்டு பரந்து மட்டின்றி விரியும். சாதி குலம் பற்றி நமது நாட்டில் இக்காலத்தில் நிலவும் தீண்டாமையானது நாட்டுக்கு நலம் உண்டாக்கத் தக்கதா? தீங்கு உண்டாக்கத் தக்கதா? தீங்கு உண்டாக்கத் தக்கதானால் எவ்வாறு நாம் அத்தீங்கை விலக்கி நலம் உண்டாகும்படி செய்யலாம் என்ற கேள்விகளைப் பற்றி மாத்திரம் நாம் ஆராய்ந்து முடிவு செய்ய வேண்டிய பொறுப்புடைய வர்களாயிருக்கிறோம். அப்பொறுப்புக்கு வேண்டிய கடனை ஆற்ற

மேலே கூறிய நீண்ட ஆராய்ச்சி வேண்டப்படுவதன்று. இக் காலத்திய சாதிகுல வேற்றுமைகளுக்கும், அவைகளாலுண்டாகும் தீங்குகளுக்கும் யார் காரணம் என்று ஆய்ந்து அவர்களைப்பற்றிக் குறை கூறுதலாலும் யாதொரு பயனுமில்லை; இக்காலத்தி லுள்ளவர்கள் மாத்திரம் அவைகளுக்குக் காரணர்களல்லர். அவர் களும் பொதுவாக நெடுங்கால வழக்கத்துக்குட்பட்டு அதினின்றும் நீங்கும் அறிவுத் திறனின்றி அதற்கு அடிமைகளாய் ஒழுகி வருகிறார்கள். அவர்களுக்கு வழக்கமே சமயக் கொள்கையாயுள்ளது. "Custom in the East is Religion" is the saying of John Stuart Mill in his book "On Liberty." அவர்களையும் அவர்கள் விரும்பினால் நமது நாட்டுச் சகோதரர்களாக நமது கூட்டத்திற் சேர்க்கக் கடமைப் பட்டிருக்கிறோம்.

நமது நாட்டுக்கு நலம் உண்டாகும் குறிக்கோளுடன் சாதி பற்றிய தீண்டாமைக் கேள்விகளை ஆராய்ந்து முடிவு செய்தற்கு நீங்கள் மனதில் வைக்கவேண்டிய சில முறைகளை உங்களுக்கு நினைப்பூட்டுகின்றேன். அவைகள் பின்வருமாறு :

1. இயற்கையில் எந்தப் பொது மக்கள் நலத்துக்கும் முரணுதலாகத் தனி நலமானது தோற்றத்திலுளதே அன்றி உண்மையில்லை. இந்திய நாட்டுப் பெருமக்கள் பொது நலமில்லாமல் அதில் வாழும் எந்தப் பகுதி மக்களுக்கும் எந்த மனிதனுக்கும் நலமுண்டாகாது. ஆதலின் இந்திய நாட்டுப் பெருமக்களுடைய மொத்த நலத்தையே கருதி நாம் முடிவு செய்தல் வேண்டும். இந்தியாவின் பொது நலமும் எல்லா நாட்டு மக்களுடைய ஒற்றுமைக் கருத்துப் பரவி வருகின்ற இக்காலத்தில் பிறநாட்டு மக்களுடைய பொது நலத்துக்கு முரணுதலாயிருத்தல் கூடாது. அவ்வாறு எல்லாப் பெருமக்களுடைய பொது நலத்தைக் கருதுதலே மேலே கூறியபடி சைவசமயம் கூறுகின்ற இயற்கை நெறியும் அருள் நெறியுமாகும்.

2. தீண்டாமைக் கேள்விகளைப் பற்றி நாம் ஆராய்ச்சி செய்யப் புகுமுன் நமது மனதில் முன் பற்றியுள்ள பற்றுள்ளம் (Prejudice) சார்வு (Prepossession) முதலிய குற்றங்களை நீங்கிக் காய்தல் உவத்தலின்றி இருபகுதியாரால் கூறப்பட்ட எந்தக் காரணங்களையும் தடையின்றி ஏற்றுக் கொள்ளும் வண்ணம் அதனைத் திறவையாய் (Open) வைத்துக் கொள்ளல் வேண்டும். அவ்வாறு செய்யாவிட்டால் நாம் செய்கிற முடிவு நீதியாயிருக்க மாட்டாது.

3. தற்காலத்தில் நமது நாட்டில் நிகழும் தீண்டாமையைப் பற்றிய பாச அலைகளால் (waves of passion) மோதப்பட்டு அதன் வழியில் நாம் யாதொரு முடிவும் செய்தல் கூடாது. பாசத்தோடு கூடிய முரட்டு அறிவாற் செய்யப்பட்ட எந்த முடிவும் நிலைத்து நில்லாது. பாசத்திலிருந்து (Passion) நீங்கிய திருத்தமான ஆராய்ச்சி அறிவைத் துணைக் கொண்டே நாம் தீர்மானம் செய்தல் வேண்டும்.

மேலே கூறியவாற்றால் மக்களுக்குள் அகத்தீட்டும் புறத்தீட்டும் இயற்கையிலுண்டு என்பதும், அகத்தீட்டு விலக்கால் அகத் தூய்மையும் புறத்தீட்டு விலக்கால் புறத்தூய்மையும் பாதுகாக்கப் படுகின்றன என்பதும், அகத்தூய்மை முக்கியமானதால் அதற்காகவே புறந்தூய்மை பாதுகாக்கப்படுகின்றது என்பதும் நன்கு விளங்கும். இந்த அகத்தூய்மை புறத்தூய்மைகள் இப்பொழுது சாதிமுறைமை பற்றி நடைபெற்று வருகிற புறத்தீட்டு விலக்கால் பாதுகாக்கப்படுமா என்பது பற்றி நாம் ஆய்ந்து துணிதல் வேண்டும்.

## தீண்டாதார்களுடன் ஏனைய இந்துமக்கள் உடனுறைவு முதலிய கலப்புகள் செய்யலாமா என்பது

உடனுறை, உடன் உணவு, உடன் மணம் ஆகிய மூன்று கலப்புகளும் முறையே ஒன்றைவிட ஒன்று நெருக்கமாயுள்ளன. உடனுறைவு சாதாரணமாய் எங்கும் இப்பொழுதும் செய்யப்பட்டு வருகின்றது. அழுக்கு ஆடை அழுக்கு உடல் இன்றித் தற்கால நாகரிகமுடைய தீண்டாதோர் ஏனைய மக்களுடன் இருப்புப்பாதை வண்டிகளிலும் மோட்டார் வண்டிகளிலும் பொதுமக்கள் கூட்டங்களிலும் சாதாரணமாய்க் கலந்து உடனுறைந்து வருகிறார்கள். பள்ளிக்கூடங்களிலும் கல்லூரிகளிலும் தீண்டாதார் பிள்ளைகள் ஏனைய மக்கள் பிள்ளைகளுடன் உடனுறைந்து கல்வி கற்று வருகிறார்கள். தற்கால நாகரிக ஒழுக்கத்தில் தீண்டாதாருடன் ஏனைய இந்துமக்கள் உடனுறைவு செய்யாமலிருக்க முடியாது. உடனுறைவு சம்பந்தமாய் ஏனைய இந்துமக்கள் தீண்டாதாருடன் கலத்தல் பற்றிச் சைவப் பெருமக்கள் தீர்மானம் செய்தற்கு யாதொரு தடையுமில்லை; தீர்மானம் செய்தற்கு அவசியமுமில்லை. ஆனால் மக்களுக்குள் மனத்துடன் சார்ந்த கலப்பும் நட்பும் குணஒற்றுமை பற்றித்தான் உண்டாகும். தீயகுணமுடையவர் நற்குணமுடையவருடன் ஒரு சாதிக்குச் சேர்ந்தவராயினும் ஒன்று சேரமாட்டார். இந்த மனக்கலப்புடன் சேர்ந்த உடனுறைதல் கலக்கிறவர்களுடைய பிரியத்தைப் பொறுத்தது. மேலும் நற்குணமும் நற்பழக்கமு

முடையவர்கள் தீய குணமும் தீய பழக்கமும் உடையவர்களுடன் மனக்கலப்புடன் சேராமலிருத்தல் நாட்டுக்கு நலமேயாகும். அதனால் நற்குணங்கள் நற்பழக்கங்கள் பெருகவும் தீய குணங்களும் தீய பழக்கங்களும் குறையவும் காரணம் உண்டாகிறது. உடன் உண்ணலிலும் உடன் மணத்தலிலும் கலப்புகள் அவைகளைச் செய்கிறவர்களுடைய பிரியத்தைப் பொறுத்துள்ளன. அரசியலாருக் காவது பிறருக்காவது அக்கலப்புகளைச் செய்யும்படி சொல்ல உரிமையில்லை. அரசியலார் உடன் மணத்தலினாலுண்டாகும் சந்ததிகளுடைய சொத்து உரிமை பற்றிச் சட்டம் செய்யலாம்.

## தீண்டாதார் சைவக்கோயில் புகுந்து வழிபாடு செய்யலாமா என்பது

இனி ஆதித்திராவிட மக்களும் பிற தீண்டாதார்களும் சைவக்கோயிலுக்குள் வழிபாட்டின் பொருட்டுச் செல்லலாமா என்னும் கேள்வியைப் பற்றிச் சில வார்த்தைகள் கூறி எனது பேச்சை முடித்துக் கொள்ளுகிறேன். சைவக்கோயில்கள் சிவாமக விதிப்படி தமிழ் முன்னோர்களால் கட்டப்பட்டு நீண்ட காலமாக வழிபாடு செய்யப்பட்டு வருகின்றன. திருக்கோயில்களிலுள்ள உருவங் களுக்குப் பூசை முதலிய அகம்படித்தொண்டு செய்தற்குத் தகுதியுள்ளவர்கள் சமய விசேட நிருவாண தீக்கைகள் பெற்று ஆசாரியாபிடேகம் செய்யப்பெற்ற ஆதிசைவக் குருக்கள், இவர்கள் இக்காலத்தில் பெரும்பான்மையும் ஆசாரியர்களுக்குரிய ஆகம அறிவும் அநுபூதி ஞானமும் ஒழுக்கமுமில்லாதவர்களாயிருக்கிறார்கள். இவர்கள் தொகை குறைவா யிருத்தலினால் உருவத்தைத் தீண்டிப் பூசை செய்கிற தொண்டு மாத்திரம் பொதுவாகச் சைவக் கோயில்களிற் செய்து வருகிறார்கள். பூசை செய்தல் ஒழிந்த ஏனைய அகம்படித் தொண்டுகளெல்லாம் தீக்கை பெறாதவர்களும் கல்வி அறிவு இல்லாதவர்களுமான ஸ்மார்த்த பிராமணர்கள் செய்து வருகிறார்கள். சில சைவக் கோயில்களில் பூசைத் தொண்டும் தீக்கைபெறாத ஸ்மார்த்த பிராமணர்களே செய்து வருகிறார்கள். திருச்செந்தூர் சுப்பிரமணியக் கடவுள் கோயிலில் மலையாளத்து மாத்துவப் பிராமணர்கள் பூசைசெய்து வருகிறார்கள். சிவதீக்கை பெற்றாலும் ஸ்மார்த்த பிராமணர்கள் சைவக் கோயில்களில் அகம்படித் தொண்டு செய்தற்கு உரியல் அல்லர் என்று காமிகம் முதலிய சிவாகமங்கள் விதிக்கின்றன. சைவசமய நூல்களிற் கூறப்பட்ட பதிபசுபாச முப்பொருள் உண்மை, படைப்பாதி ஐந்தொழில் உண்மை முதலிய உண்மைகளைச் சைவசமயிகளுக்கு

விளக்குதற்காகவே சைவக் கோயில்கள் அமைக்கப்பட்டுள்ளன. வழிபாட்டுக்கு நிற்கிற முறைமையில் இப்பொழுது தீக்கை பெறாத ஸ்மார்த்த பிராமணர்கள் கருப்பக்கிரக மண்டபத்துக்கு அடுத்த மண்டபத்தில் நின்றுகொண்டு ஏனையோர் அம் மண்டபத்திற்குள் வர உரியரல்ல ரென்று கூறுகிறார்கள். ஆசாரியாபிடேகம் பெற்ற மடத்துத் தம்பிரான்கள் சைவக்குருக்கள் முதலியோரும் ஸ்மார்த் பிராமணர்கள் நிற்கிற மண்டபத்துக்கு அடுத்த மண்டபத்தில் நின்று வழிபடுகிறார்கள். பிரசாதம் வாங்குகிற முறையில் தீக்கை பெற்ற சைவர்களுக்கு முன்பே தீக்கை பெறாத ஸ்மார்த் பிராமணர்கள் வாங்கி வருகிறார்கள். அவ்வாறு வாங்குதலிலும் தேவாரம் ஓதுகிற வழிபாடு முடிதற்கு முன்னே அவர்கள் சில கோயில்களில் பிரசாதம் வாங்கி வருகிற அபசாரமும் செய்து வருகிறார்கள். இந்த அபசாரம் இப்பொழுது சைவக் கோயில்களில் மாறி வருகிறது. யார் சைவக் கோயிலுக்குள்ளே போய் வழிபாடு செய்கிறார்கள் என்பதைப்பற்றி இப்பொழுது ஒரேவிதமான வழக்கம் எங்கும் நடைபெறவில்லை. மதுரைக்கு வடக்கேயுள்ள சைவக் கோயில்களில் பஞ்சமர் தவிர ஏனைய குலமக்கள் எல்லாரும் வழிபாடு செய்து வருகிறார்கள. மதுரையிலும் அதற்குத் தெற்கேயுமுள்ள கோயில்களில் பஞ்சமருடன் நாடார் குலமக்களும் கோயிலுக்குள் நுழைதற்கு உரியரல்லாதாராகக் கருதப்படுகிறார்கள். திருச்செந்தூர் சுப்பிரமணியசுவாமி கோயிலில் எண்ணெய் வாணிபச் செட்டி மக்களும் நுழையப் பெறார். அவர்கள் திருநெல்வேலி ஜில்லாவிலுள்ள பிற சைவக் கோயில்களில் தடையின்றிப் புகுந்து வழிபாடு செய்கிறார்கள். இந்த வேறுபாடுகளுக்குப் பிடிவாத வழக்கம் தவிர நூற் பிரமாணமாவது அறிவுக்குப் பொருந்திய காரணமாவது இல்லை. இந்த நிலைமையில் சைவக் கோயிலுக்குள் வழிபாடு செய்தற்குத் தீண்டாத மக்கள் புகலாமா என்னும் கேள்வியை நீங்கள் தீர்மானித்தல் வேண்டும்.

பிடிவாத வழக்கம் நீங்கலாக ஆதித்திராவிடர்கள் முதலிய தீண்டாதார்கள் சைவக் கோயிலுக்கு வழிபாடு செய்தற்குப் புகவொட்டாமல் எந்தக் காரணத்தால் தடுக்கப்பட்டார்கள் என்று நீங்கள் ஆய்ந்து சூழ்தல் வேண்டும். ஏறக்குறைய 1200 ஆண்டு களுக்கு முன்னே தாழ்ந்த பாணர் குலத்தைச் சேர்ந்த திருநீலகண்ட யாழ்ப்பாணர் திருஞானசம்பந்த சுவாமிகளுடன் கோயிலுக்குட் சென்று அவர்கள் பாடின தேவாரங்களை யாழில் இசையுடன் பாடி வந்திருக்கிறார்கள். திருநீலகண்டயாழ்ப்பாணரும் அவர் மனைவி யாரும் திருச்சாத்த மங்கையில் திருநீலக்கநாயனார் ஆகிய பிராமணர் வீட்டில் வேள்விக்குண்டத்துக்குப் பக்கத்தில் தங்கியிருக்க

இடம்பெற்றிருக்கிறார்கள். பண்டைக்காலத்தில் பஞ்சமர்கள் சைவக் கோயிலுக்குள்ளே போய் வணங்கக்கூடாது என்ற விதியிருந்ததாகப் பண்டைத் தமிழ் இலக்கியங்களிற் காணப்படவில்லை. பெரிய புராணம் திருநாளைப்போவார் நாயனார் வரலாற்றில் மாத்திரம் நந்தனார் ஆகிய பஞ்சமப் பெரியார் திரு ஆதனூர்ச் சிவன் கோயிலுக்கும் தில்லைச் சபாநாதர் கோயிலுக்கும் போகக் கூடாது என்ற தடையிருந்ததாக நமக்குத் தெரிகிறது. பிற்காலத்தில் பஞ்சமர்கள் செத்த மாடுகளையும் உயிரோடுள்ள மாடுகளையும் உண்ணுதல், கட்குடித்தல், பேய்த் தெய்வம் தொழுதல் முதலிய அசுத்தமான வழக்கங்களை உடையவர்களாயிருந்ததனால் அவர்கள் ஊருக்குப் புறம்பே தனியாக ஓரிடத்தில் ஒதுக்கி வைக்கப்பட்டார்கள என்பது நாம் அறியக் கிடக்கின்றது. இப்பொழுது காடன் முதலிய பேய்த் தெய்வங்களைத் தொழுதலையும் மாட்டுஊன் தின்னலையும் கள்ளுண்ணுதலையும் விட்டு, சைவக் கோயிலுக்குப் போய் வழிபாடு செய்தல் வேண்டும் என்ற ஆர்வமுடைய தீண்டாதார்களுக்குக் கோயிலுள் இப்போது வழிபடுதற்கு ஏன் இடங்கொடுத்தல் கூடாது? அசுத்தம் உடையவர்கள் எப்பொழுதும் அசுத்தமாகவே இருத்தல் வேண்டுமா? சுத்தத்தை அடைய விரும்புகிற பஞ்சமர்களுக்கு அவர்கள் சுத்தமுள்ளவர்களாய்க் கோயிலில் வழிபாடு செய்ய ஏன் நாம் இடங் கொடுக்கக்கூடாது? அவர்களுக்கு மற்ற இந்து மக்களோடு இருக்கிற பொது உரிமையைத் தடுக்க நமக்கு என்ன உரிமையிருக்கிறது? சிலர் கடவுளுக்குத் தீட்டு உண்டா, பஞ்சமர்கள் ஏன் கடவுள் திருஉருவங்கள் கிட்டப் போகக்கூடாது என்கிறார்கள். கோயிலிலிருக்கிற உருவங்கள் அசுத்தப்பட்டு அவைகளிலுள்ள சத்தி (magnetism) குறைதல் கூடும். அந்தச் சக்தி குறையாமலிருக்கச் செய்தற்காகவே அடிக்கடி மந்திரம் செய்யப்பெற்ற கும்ப நீரும் பால் இளநீர் முதலிய நீர்ப்பொருள்களும் திருஉருவங்களுக்கு அபிடேகம் செய்யப்படுகின்றன. இப்பொழுது கோயிலுக்குப் போய் வழிபாடு செய்கிறவர்களெல்லாம் சுத்தமாயிருக்கிறார்களா? பஞ்சமர்கள் மாத்திரம் ஏன் சுத்தமாயிருத்தல் வேண்டும் என்று சிலர் கூறுகிறார்கள். எக்குலத்திலுள்ளவர்களானாலும் கோயிலுக்குள் போய் வழிபாடு செய்ய ஆர்வமுள்ளவர்கள்தான் அங்கே போவார்கள். அவர்கள் பொதுவாக இப்பொழுது உள்ள பஞ்சமர்களைப் பார்க்கிலும் சுத்தமாயிருப்பார்கள். அவர்களிலும் சிலர் பஞ்சமர்களைப் போல தவறு உடையவர்களாயிருந்தாலும் கோயிலுக்கு இனி போக உரிமை கேட்கிற பஞ்சமர்களும் அத்தவறுகளினின்று நீங்கிப் போதல் வேண்டும் என்று கூறுதல் அவர்களை அத்தவறுகளினின்று

நீக்குதற்குத் தூண்டுகோலாயிருக்கும். மேலும் இனிச் செய்யப்படும் கோயிற் சீர்திருத்தங்களில் கோயில் தூய்மையாய் வைக்கப்பட வேண்டும் என்பது ஒன்று. அகந்தூய்மை புறந்தூய்மை உள்ள கோயில்கள் இறைவனது அருள் நன்று விளங்கி அன்பாக வழிபாடு செய்கிறவர்கள் அவ்வருளினைப் பெறுவர். கோயில்களில் தூய்மை எவ்வளவு குறையுமோ அவ்வளவு அருள் விளக்கமும் குறையும். ஆதலின் கோயிலுக்குள் புகுந் தகுதி யுடைமைக்கு அங்கே போகிறவர்களுடைய அகந்தூய்மையும் புறந்தூய்மையும் காரணமின்றி இப்பொழுது நிலவுகிற உள்ளீடில்லாத சாதியும் குலமும் இனிமேற் காரணமாயிருத்தல் கூடாது. சாதியையும் குலத்தையும் காரணமாகக் கொள்ளுதலினாலே சில பகுதி மக்கள் கோயிலுக்குப் போகும் உரிமையைத் தடுத்து அவர்களை மேல்நிலைக்கு வரவொட்டாமல் செய்கிறார்களே தவிர அதனால் நற்பயன் ஒன்றும் உண்டாதலில்லை. அநுட்டானத்தில் கோயிலுக்குப் போகிறவர்களுடைய அகந் தூய்மையை நாம் நிதானிக்க முடியாது. கூடியவரை புறந் தூய்மையையே கவனித்தல் முடியும். மேற்கூறியவைகள் எனது கருத்துகள். எந்தவிதமான நிபந்தனைக்குட்பட்டு, தீண்டாதோர் சைவக்கோயிலுக்குட் போய் வழிபாடு செய்யலாம் என்பதைத் தாங்கள் சூழ்ந்து முடிவு செய்தல் வேண்டும்.

# திரு. ந.மு. வேங்கடசாமி நாட்டார்

(28ஆம் ஆண்டு விழா - தஞ்சை-சைவர் மாநாடு)

## சமயம்

அன்பர்களே! மன்பதைகள் உய்ந்திடுதல் வேண்டிக் கடவுளருள் பெற்ற பேரறிவுடைய பெருமக்கள் கண்ட நெறியே சமயம் எனப்படுவது. ஆதலின் அது கடவுள் வகுத்தது எனலும் அமைவுடைத்தே. உலகிலே சமயம் என்பது இன்று நேற்று உண்டானதன்று; பல்லாயிரம் ஆண்டுகளாகவே உளது. யாதானுமோர் ஒழுங்கிற் குட்பட் டொழுகும் மக்கள் வாழ்க்கை, என்று தொட்டுளதோ அன்று தொட்டே சமயம் என்பதும் உளதாம். சமயத் தொடர்பு சிறிதும் இல்லாத நாட்டினரையோ கூட்டத்தினரையோ நாம் ஒரு பொழுதும் கண்டதுமில்லை; கேட்டதுமில்லை. இடத்தாலும் காலத்தானும் பல்வேறு குழுவினராகப் பிரிந்த மக்களின் அறிவு செயல்களின் வேறுபாட்டிற்கேற்பவும், நெறி வகுத்தோர்களின் அறிவு அகக்காட்சிகளுக் கேற்பவும் சமயம் பலவாயின. எல்லாச் சமயங் களும் மக்கள் உயர்நிலை யடைய வேண்டுமென்னும் பெரு நோக்கமுடையனவே. அவை யாவற்றிற்கும் பொதுவான அறங்களும் ஒழுக்க நெறிகளும் உள்ளன. உலோகாயதம் தொடங்கிப் படிப்படியாக உயர்ந்துள்ள சமயங்கள் பலவும் பண்டைக்காலந் தொட்டே யுள்ளன. எந்தச் சமயத்தினரேனும் அந்தச் சமய நெறியில் ஒழுகுவரேல் மேன்மையுறுவது ஒருதலை. எனினும், சமயங்கள் யாவும் ஒருநிகரனவே என்றாதல் ஒரு பெற்றியுடைய பயன் விளைப்பன என்றாதல் கூறுதல் பொருந்தாது. ஒரு மொழியின்கண் நெடுங்கணக்கு முதல் அறிவுநூல் இறுதியாக உள்ள அனைத்து நூலும் அம்மொழியாளர் பயிலுதற்குரியனவும், அவர்கட்கு இன்றியமையாதனவுமாம். எனினும், அறிவு நூல்களின் துறைபோகிய ஒருவன் மீட்டும் நெடுங் கணக்கும் சிற்றிலக்கியமும் பயிலுதல் அவமாதல் போல, முடிந்த உண்மைகளைக் கூறும் சமய நெறியுற்றோன் ஒருவன் மட்டும் கீழ்ப்படியிலுள்ள சமயங்களை நோக்கிச் சேறல் அவமே யாகும்.

## சைவம்

திருநெறிச் செல்வர்காள்! உலகிலே பல்வேறு சமயங்களிருப்பினும் நாம் முதன்மையாகச் சைவத்தை ஆராயும் கடமைப்பாடுடையோம். சைவ சமயம் எப்பொழுது உண்டாயதெனக் காலவரை யறைக்குட் படுத்துரைக்க வியலாத அத்துணைப் பழமையுடையதாக உள்ளது. தமிழிலும் வடமொழியிலுமுள்ள தொன்னூல்களெல்லாம் சைவத்தின் தொன்மைக்கும் முதன்மைக்கும் சான்று பகர்கின்றன. பண்டைத் தமிழ்ச் சங்கத்துச் சான்றோர் பலரும் பல கடவுளரைக் கூற நேர்ந்த இடங்களிலெல்லாம் சிவபெருமானையே முதற்கண் வைத்துக் கூறுவாராயினர். அதுவே யன்றி இன்றியமையாக் கடவுள் தன்மையாகிய பிறப்பிறப்பின்மையைச் சிவபெருமானுக்கே உரியமையாக்கியும் கூறியுள்ளனர். சிலப்பதிகார ஆசிரியர் 'பிறவா யாக்கைப் பெரியோன்' என்தனால் பிறப்பின்மையும், சிவ சத்தியாகிய கொற்றவையைக் கூறுமிடத்தே, 'விண்ணோர் அமுதுண்டுஞ் சாவர் ஒருவரும் உண்ணாத நஞ்சுண்டிருந்தருள் செய்குவாய்' எனச் சார்த்தி யுரைத்தமையால் இறப்பின்மையும் கறைமிடற் றிறைவர்க்கே உரியவாகக் குறித்தவாறு காண்க. இங்ஙனம் சிவபெருமானது முழுமுதன்மையைக் குறிப்பிடுஞ் சான்றுகள் மற்றும் எண்ணிறந்தன வுள்ளன. முதுகுடுமிப் பெருவழுதி என்பவன் பஃறுளியாறு கடல் கோட்படா திருந்த பழங்காலத்தில் விளங்கிய ஓர் தமிழ் வேந்தன். அவனைப் பாடிய புலவர் ஒருவர் 'முக்கட் செல்வர் கோயிலை வலஞ் செய்தற்கண் நின் குடை தாழ்க' எனப் பணித்தமையால் பல்லாயிர வாண்டுகளின் முன்பே சிவபிரானுக்குத் திருக்கோயிலிருந்த செய்தி வெளியாகின்றது. அகத்தியர், பதஞ்சலி, புலிக்காலர், உபமன்னியு, மார்க்கண்டர் முதலிய முனிவர்கள் சிவபெருமானை வழிபட்டுப் பேறு பெற்ற சீரடியார்களாவர். பண்டைக் காலத்து முனிவர்கள் பலருமே சிவ வழிபாடுடைய ரென்பதனை வியாச பாரதத்து அநுசாசன பருவம் முதலியவற்றால் அறியலாகும். மான்தோல், புலித்தோல், சடைமுடி முதலிய சிவ சின்னங்களுடையராகவே அவர்கள் கூறப் படுதலுங்காண்க. சுருங்கக் கூறுமிடத்து இமயமுதற் குமரிகாறும் பரதகண்ட முழுதும் பண்டை நாளில் விளங்கிய வேந்தர்களும் முனிவர்களும் ஏனை மாந்தர்களும் முழுமுதற் பொருளாகக் கொண்டு வழிபட்ட கடவுள் சிவபெருமானே; அவர்கள் ஒழுகிய நெறி சைவமே எனல் சாலும். அயல்நாடுகளிலும் சிவலிங்க வழிபாடு போல்வதொரு வழிபாடே இருந்ததென்பதற்கும் ஆதரவுகள் உள்ளன. உண்மை இவ்வாறாகவும் சிலர் நடுநிலை திறம்பிச் சிவனையும் சைவத்தையும் இகழ்ந்து நிரயத்துக்காளா கின்றனரே எனப் பரிந்தன்றோ

*"சமயலாமை குறைகட லாமையக்*
*கூவலோ டொக்கு மோகட லென்ப போல்*
*பாவ காரிகள் பார்ப்பரி தென்பரால்*
*தேவதேவன் சிவன்பெருந் தன்மையே"*

என்று திருநாவுக்கரசர் அருளியதூஉ மென்க.

## சமய நூல்கள்

இனி, இங்ஙனம் பழம் பெருமை வாய்ந்த சைவ சமயத்தின் இயல்புகளை யெல்லாம் நமக்குத் தெளிய அறிவுறுத்தும் தமிழ் நூல்கள் திருமந்திரமும், திருவுந்தியார், திருக்களிற்றுப் படியார், சிவஞான போதம் முதலிய மெய்கண்ட நூல்கள் பதினான்குமாகும். பன்னிரு திருமுறையுள் திருமந்திர மொழிந்த முதற் பத்தும் இறைவனை வழுத்தும் துதிகளாகவும், பெரிய புராணம் திருத் தொண்டர்களின் வரலாறு கூறுவதாகவும் இருப்பினும், அவற்றுள்ளும் சைவ சமயத்தின் உண்மைகளே ஆண்டாண்டுப் பொதிந்து கிடக்கின்றன. எனவே, சைவர்கட்குப் பிரமாணமாக உள்ள நூல்கள் பன்னிரு திருமுறைகளும், பதினான்கு சித்தாந்த நூல்களுமாம். இவையன்றித் திருக்குறள் என்னும் தமிழ் மறையும் சைவர்கட்குப் பிரமாண நூலேயாகுமென்க. வடமொழியிலுள்ள ஆரணவாகமங்கள் சைவமுதற் பிரமாணங்களேயாயினும் சிறப்பினாலும், சைவ சமயத்தை நிலைநாட்டிய பெருமையாலும், யாவரும் ஓதி உய்தி பெறுதற்குரிய எண்மையாலும், தமிழ் நூல்களே முதன்மையாகப் போற்றற்குரியனவாம். சைவம் உலகில் இன்று நின்று நிலவுவதற்குத் திருஞானசம்பந்தர் முதலிய பெருமக்கள் தோன்றித் திருப்பதிகங்கள் பாடிப் புறச் சமயங்களை வென்று சிவபிரான் முழுமுதன்மையை நிலைநாட்டினமையே காரணம் என்பதனை அன்று என்பார் யாவர்? இனி, இத்தகைய சைவ சமயத்தின் உண்மைகள் யாவை யென்னின், அவற்றை இங்கு யான் விரித்துரைக்கக் கருதிற்றிலேன்,

## சைவ சமய உண்மை

*"பதிபசு பாச மெனப்பகர் மூன்றிற்*
*பதியினைப் போற்பசு பாச மனாதி*
*பதியினைச் சென்றணு காபசு பாசம்*
*பதியணு கிற்பசு பாசநில் லாவே,"*

என்னும் திருமந்திரச் செய்யுள் சைவத்தின் கோட்பாடு இன்னதென்பதைச் சுருக்கமாக அறிவுறுத்துகின்றது. இங்கே

விரிவுரையாற்ற வந்திருக்கும் பெரியோர்கள் சைவத்தின் உண்மைகள் பலவற்றை விளங்க எடுத்துரைப்பார்களாதலின், அவற்றைக் கேட்டுணர்ந்து பயனுறுவோமாக. சைவச் சார்புள்ள பொதுவகையான சில கருத்துக்களை மட்டும் இங்கே நான் தெரிவித்துக் கொள்ள விரும்புகின்றேன்.

சைவம் என்பது துவைதம் என்றும், சைவசித்தாந்திகள் துவைதிகள் என்றும், தாங்களே பழுத்த அத்துவைதிகள் என்றும் சிலர் கூறுவதுண்டு. சைவசித்தாந்த நூல்களில் யாண்டும் அது துவைதம் என்று கூறப்படவில்லை. 'அத்துவைதம்' என்னும் சொற்கு ஏனையோர் கொண்ட பொருள்களின் வேறாயதொரு மெய்பொருள் கண்டமையினாலேயே சிவஞான போத ஆசிரியர்க்கு மெய்கண்டார் என்னும் திருப்பெயர் உளதாயிற் றென்பதனை

*''பொய்கண்டார் காணாப் புனிதமெனும் அத்துவித*
*மெய்கண்ட நாதனருள் மேவுநாள் எந்நாளோ''*

என்னும் தாயுமான வடிகள் திருவாக்கு விளக்குதலும் காண்க. சைவ சித்தாந்தத்தை அத்துவிதம் என்றலே அமையுமெனினும் விசிட்டாத்து விதம் முதலியவற்றின் வேறுபாடு தோன்றச் சுத்தத்துவிதம் என ஆன்றோர் வழங்குவராயின ரென்க.

உலகிலுள்ள சமய வாதியரில் சிற்சிலர் கடவுள் அருவப் பொருளே யன்றி உருவப் பொருளன்றென்பர். அருவமும் உருவத்தின் நுண்மையே யென்பதனையும், விசும்பு போலும் சடப்பொருளும் அருவ மாதலின் அருவம் என்பதனாற் கடவுளுக்கு ஓர் ஏற்றமின் றென்பதனையும் அவர்கள் ஓர்ந்திடல் வேண்டும். அருவம், உருவம், அருவுருவம் என்னும் மூன்றுங் கடந்ததே கடவுளின் உண்மை நிலையென்றும், உயிர்கள் மேல் வைத்த கருணையால் அம் மூவகை வடிவையும் இறைவன் எடுத்தருள்வனென்றும் சைவ சித்தாந்தம் கூறும். இறைவன் நினைத்ததொரு வடிவினை எடுத்துக் கொள்ள மாட்டாத குறைபாடுடையனல்ல னென்பதனையும், அதனால் அவன் இன்னவாறு வந்திடான் என்று அவனது பேராற்றலுக்கு இழுக்குண்டாகக் கூறுதல் தகவன் றென்பதனையும் உணர்தல் வேண்டும்.

## உருவ வழிபாடு

இனி, சில சமயத்தினர் உருவ வழிபாடு கூடாதென்றும், அது தாழ்ந்த நிலையென்றும் கூறுவர். பிரமசமரசம் போன்ற

கூட்டத்தினரும் அங்ஙனம் கூறுவர். மக்கட்கு உருவ வழிபாட்டினால் வரும் இழுக்கு இன்று என்பதனையும், அஃது இன்றியமையாச் சிறப்பின தென்பதனையும் விளக்கலுறின் இம்முகவுரை விரிந்து விடுமகாலின் வாளாவிடுகின்றேன். ஆனால், உருவவழிபாடு கொள்ளற்பாலதா, தள்ளற்பாலதா என நாம் புதுவதாக ஆராய்ந்து முடிவுகட்ட வேண்டியதில்லை யென்பதனை நம்மவர்கள் கருத்தில் வைக்க வேண்டும். இதனை மிக மிக வற்புறுத்தியவர்கள் நம் சமய குரவர்கள். மெய்யுணர்வின் முற்றுப் பேறுடையராய், இறைவனால் வலிதின் விரும்பி ஆட்கொள்ளப் பெற்றோராய், அவனது எல்லையில்லாத பேரருளைப் பெற்று யாவர்களும் செய்ய வொண்ணாத செயல்களைச் செய்தோராய் விளங்கி நமது சமயத்தை நிலைநாட்டிய அருட்குரவர்கள் தங்கள் பதிகங்களால் உருவ வழிபாட்டை வற்புறுத்தியதனோடு அமையாது தாங்களும் பதிகள் தோறுஞ் சென்று வழிபாடு செய்து போந்தன ரென்றால், அவர்கள் காட்டிய வழியே நாம் உய்யும் நெறியாகக் கடைப்பிடித்து ஒழுகலே நமது கடமையாம். அது தாழ்ந்த நிலையென்று நினைப்பது அறியாமையேயாம்.

## சைவ விளக்கம்

இனி, சைவம் என்றால் அஃது ஒரு சிறு கூட்டத்தாரின் குறுகிய கொள்கை யெனக் கருதும் பேரறிவாளரும் உளர். ஏனைச் சமயத்தினரிற் போல சைவ ரென்போரிலும் குறுகிய கொள்கையுடையார் இருத்தல் கூடும். எனினும் சைவ சமயம் குறுகிய கோட்பாட்டதென்பது சிறிதும் பொருந்தாது. பிற சிறப்புக்கள் பற்றிச் சைவ சமயம் பாராட்டப் படாதொழியினும், வேறெச்சமயத்திலுங் காணப்படாத அத்துணை விரிந்த நோக்கமும் பரந்த கொள்கையும் உடைத்தாதல் பற்றியேனும், அது யாவரானும் பாராட்டப் பெறுதல் வேண்டும். எந்த உயிரையும் எப்பொழுதும் நிரயத்துக் கிடந் துழலுமாறு சைவ சமயம் விட்டு விடுவதில்லை. வெவ்வேறு தகுதியுடைய மக்கள் அனைவர்க்கும் ஏற்றபடி முறைகளை வகுத்து எல்லோரையும் உயர் நெறியிற் செலுத்திப் பேரின்பமளிப்பது அதன் இயல்பாம். வேறு எச்சமயத்தையும் உலகிற்கு வேண்டாவென அது வெறுத்து ஒதுக்குவது மன்று.

*"சந்தான கற்பகம்போல் அருளைக் காட்டத்*
*தக்கநெறி இந்நெறியே காண்சன் மார்க்கம்"*

என்று தாயுமான வடிகளும்,

*"விரிவிலா அறிவி னார்கள் வேறொரு சமயஞ் செய்தே*
*எரிவினாற் சொன்னா ரேனும் எம்பிராற் கேற்ற தாகும்"*

என்று திருநாவுக்கரசுகளும் அருளிச் செய்தன இங்கே சிந்திக்கற்பாலன. மற்றும் சைவத்தின் பரந்த கொள்கையை வரலாற்று வாயிலாகப் பெரிய புராணம் தெளிவுபடுத்துதல் கண்கூடு. குல வேற்றுமை, நிலை வேற்றுமை, பால் வேற்றுமை என்பன ஆண்டவனை வழிபட்டுப் பேறு பெறுவதற்குத் தடையாவன அல்ல. எல்லோரும் வீடு பெறுதற்குரியர் என்பதே சைவத்தின் கொள்கை.

இனி, சைவ சமயமானது பழந்தமிழ் மக்களுடைய கடவுள் கொள்கையின் வேறுபட்டதன் றாகலின் நாமும் அம்முறையே சமயத்தைப் பேணி ஒழுகுதல் கடனாகும். தமிழருடைய கொள்கைகளைச் செவ்விதின் விளக்குவன தொல்காப்பியம், திருக்குறள் என்ற இரண்டு பெரு நூலுமாம். தெய்வப் புலமைத் திருவள்ளுவனார் மக்கள் வாழ்க்கை நிலையை இல்லறம் துறவறம் என இரண்டாக வகுத்துக் கொண்டு, இம்மை, மறுமை, வீடு என்னும் மும்மைப்பேறும் எய்துதற்குரிய வழிகளை மிகத் தெளிவாக விளக்கியுள்ளார். கற்றுத் துறைபோய காதலனும் காதலியும் அன்பும், இன்சொல்லும், அடக்கமும், ஒழுக்கமும் மிக்காராய்த் தீவினைக்கஞ்சி, அறத்தாற்றி னீட்டிய பொருளால் விருந்தோம்பல், ஒப்புரவாற்றல், வறியார்க்கீதல் முதலிய அறங்களைச் செய்து வாழ்தல் இல்லற வாழ்க்கையாமென்றும், அதன் இம்மைப் பயன் இன்பமும் புகழுமாக, மறுமைப்பயன் துறக்கம் பெறுதலென்றும், இல்லறம் கடைபோய வழி எல்லாவுயிர்களிடத்தும், அருளுடையராய், வாய்மை, கொல்லாமை முதலிய விரத ஒழுக்கங்கங்களைக் கடைப்பிடித்து, மனத் தூய்மையடைந்து, நிலையாமை கண்டு, இருவகைப் பற்றும் அற்று, மெய்ந் நூற்பொருள்கள் கேட்டல் முதலியவற்றால் மெய்யுணர் வெய்தி, முக் குற்றங்களின் நீங்கியிருத்தல், துறவற வாழ்க்கையா மென்றும், அதன் பயன் பிறவித் துன்பத்தினின்று நீங்கிப் பேராவியற்கையாகிய பேரின்பப் பெருவாழ்வு பெறுத லென்றும் யாவரும் இனிதின் உணருமாறு கூறியிருக்கும் திறப்பாடு எத்துணையும் போற்றற்குரிய தொன்றாம். உயிர்கள் யாதேனும் ஒன்றனைப் பற்றியே நிற்கும் இயல்பின வாதலின் அவை அகப்பற்றும் புறப்பற்றுமாகிய பசு பாசப்பற்று நீங்குதற்கு ஆசிரியர் கூறியுள்ள உபாயம் பதியாகிய கடவுளைப் பற்றுதலே யாம் என்பது,

*"பற்றுக பற்றற்றான் பற்றினை அப்பற்றைப்*
*பற்றுக பற்று விடற்கு"*

என்னும் பொருளுரையால் விளக்கமாம். கடவுளைப் பற்றுதலெனினும் அவனோகிய வீட்டு நெறியைப்பற்றி யொழுகுதலெனினும் இடையறாது அவனைச் சிந்தித்தலே யாம். எனவே மனையின்கண் கூடி வாழ்வாராக, வனத்தின்கண் தனித்துவாழ்வாராக, இறைவனைப்பற்றி நின்று ஏனைப்பற்றுக்களின் நீங்கினோரே பிறவியறுத்து வீடு பெறுதற் குரியாரென்பது ஆசிரியர் கருத்தாதல் பெறப்படும்.

தொல்காப்பியனாரும் ஒவ்வொருவரும் தத்தம் ஒழுகலாற்றின் மேம்படுதலே வாகையா மென்று வாகைத் திணைக்கு இலக்கணங் கூறிவரு மிடத்தே,

*''கட்டமை யொழுக்கத்துக் கண்ணுமை யானும்*
*இடையில் வண்புகழ்க் கொடைமை யானும்*
*பிழைத்தோர்த் தாங்கும் காவலானும்''*

என்னும் பகுதியால் **இல்லற ஒழுக்கத்தையும்**

*''அருளொடு புணர்ந்த அகற்சியானும்*
*பொருளொடு புணர்ந்த பக்கத்தானும்*
*காமம் நீத்த பாலி னானும்''*

என்னும் பகுதியால் துறவு, மெய்யுணர்வு, அவா வறுத்தல்களையும் குறிப்பிடுவாராயினர். இப்பகுதிகட்கு இளம்பூரணரும், நச்சினார்க்கினியரும் திருக்குறளையே மேற்கோளாகக் கொண்டு, இல்லற வியல்பு, துறவற வியல்புகளை விரித்துக்காட்டி உரை வகுத்திருத்தலும் காண்க. மற்றும், நச்சினார்க்கினியர் 'காமம் நீத்தபாலினானும்' என்பதற்கு உரைகூறிய விடத்தே பால் என்றதனால் உலகியலுள் காமத்தினைக் கைவிட்ட பகுதியினையுங் கொள்க'' எனவுரைத்து,

*இளையர் முதியர் என இருபால்பற்றி*
*விளையும் அறிவெண் வேண்டா-இளையனாத்*
*தன்றாதை காமம் நுகர்தற்குத் தான் காமம்*
*ஒன்றாது நீத்தான் உளன்.*

என மேற்கோள் காட்டி யிருத்தலும் சிந்திக்கற் பாலது.

இல்வாழ்க்கையாயினும், புறவாழ்க்கையாயினும் இறைவனைப் பற்றி நின்று, ஏனைப் பற்றுக்களின் நீங்கினாரே வீடு பெறுதற்குரியரெனும் இவ்வுண்மைக்குப் பெரிய புராணத்துக் கூறப்பட்ட திருத்தொண்டர்களின் வரலாறுகள் சிறந்த எடுத்துக் காட்டுக்களாம்.

திருமுறைகளும், சித்தாந்த நூல்களும் இவ்வுண்மையை விளக்குவனவே. 'பற்றாங்கவை யற்றீர்' என்னும் திருவாசகத் திருப்பாட்டின்கண் இக்கருத்து இனிது விளங்குதல் காண்க. பற்றற்குரியதனைப் பற்றித் துன்பத்திற் கேதுவாய பற்றுக்களின் நீங்கி நற்கதியடைய விரும்புவீரெல்லாம் விரைந்து ஓடி வம்மின்! திருப்பெருந்துறை இறைவன் சீரைக் கற்றல் செய்ம்மின்! அவன் கழல்களைப் பேணி வழிபடுமின்! வழிபடும் அடியரோடுங் கூடுமின்! என்று வாதவூரடிகள் நம்மனோர்க் கருளிச் செய்யுந் திறன் இருந்தவா றென்னே!

இங்ஙனம், தமிழ் நூற் கருத்தும், சைவ சித்தாந்த உண்மையும் வேறாகாமையை எண்ணும்பொழுது பண்டைத் தமிழ் மக்களின் வேறு சில உயரிய பண்புகளும், கொள்கைகளும் நம் நினைவிற்கு வரக்கூடியனவாகவுள்ளன. எந்தக் கடவுளரையோ சமயத்தையோ இகழ்தலென்பது பழைய தமிழரிடத்து ஒருசிறிதும் காணப்படாத தொன்று. அத்தகைய சிறந்த பண்பினை நாமும் கொண்டு ஏனையோரும் கொள்ளுமாறு செய்யின் சமயப் பூசல் என்பது இல்லாது ஒழியும். திருமால் வழிபாடு சைவர்கட்குப் புறம்பாய தொன்றன்று. மற்றும், எச்சமயத்தினர் தங்கள் சமயமே உயர்ந்ததெனக் கூறினும் அன்னார்க்கு அவ்வுரிமை உண்டென்பதனை மதித்து நம் நிலையினின்று வழுவாதிருத்தலே நமது கடனாம். எந்தச் சமயத்தையோ, சமயக் கடவுளரையோ எள்ளி நகையாடல் என்பது புன்மையாம் என்பதனைக் கருத்திற் பதிப்போமாக.

## பிறப்பினால் உயர்வுதாழ்வு இல்லை

இனி, தமிழருடைய மற்றொரு சிறந்த கொள்கை, பிறப்பினால் உயர்வு தாழ்வு இன்று என்பது,

*'பிறப்பொக்கும் எல்லா வுயிர்க்கும் சிறப்பொவ்வா*
*செய்தொழில் வேற்றுமை யான்'*
*'நல்ல குலமென்றுந் தீயகுல மென்றுஞ்*
*சொல்லன வல்லாற் பொருளில்லை - தொல்சிறப்பின்*
*ஒண்பொருள் ஒன்றோ, தவம், கல்வி, ஆள்வினை*
*என்றிவற்றா னாகுங் குலம்'*

என்பன தமிழருடைய அடிப்படையான கொள்கையைத் தெரிவிப்பன. பன்னிரு திருமுறைகளையும், எழுத் தெழுத்தாகச் சோதித்துப் பார்ப்பின் சைவ சமயத்தின் அடிப்பட்ட கொள்கையும்

இதுவேயென்பது போதரும், சமய நெறியிலே சாதி குலம் என்னும் எண்ணம் உதித்தலே உய்தியில் குற்றமாம் என்பது சான்றோர் கருத்து.

## திருக்கோயில் நுழைவு

இனி, இதனைப்பற்றி இங்கே பேசும்போது பெருங் கிளர்ச்சியுடன் நடைபெற்று வருகின்ற இக்கால நிகழ்ச்சி யொன்று யாவருடைய நினைவிற்கும் வாராமற் போகாது. அதுகுறித்து ஒன்றுங் கூறாதுவிடின் அது படிறு, அல்லது கோழைமையின்பாற்படும். எக்குடியிற் பிறந்தார்க்கும் அவரது சமயக் கோயிலிற் சென்று ஆண்டவனை வழிபட உரிமை வேண்டுமென்பாரும், சிலர்க்கு அது கூடாதென்பாரும் சமயப் பற்றுடையவர்களே, சமயம் மாசின்றி நிலைபெற வேண்டுமென்னும் எண்ணம் உடையவர்களே. ஆதலின் ஒருவர் கருத்தை மற்றொருவர் பரிவுடன் ஆராய்ந்து பார்த்தல் முறையாகும். நான் இங்கே கூறக் கருதுவன நூன்முறையுடன் மாறுபடாத சில வரலாற்றுண்மைகளே. அவற்றை ஆய்ந்து துணிதல் இப்பேரவையோர் கடனும் ஏனை அறிஞர் கடனுமாம்.

திருக்கோயில்கள் இப்பொழுது காணப்படுதல் போன்றே பண்டை நாளில் இருந்தன வல்ல, முன்னாளில் மரங்களினடியிலும், மன்றங்களிலும் நட்ட கந்துருவங்களில் கடவுளை வழிபட்டு வந்தனர். பின்பு, நாளடைவில் மண்டபங்களும், திருச் சுற்றுக்களும் பிறவும் சிறிது சிறிதாகப் பெருகி வர அவற்றை அமைக்கும் ஆகம விதிகளும் ஏற்படலாயின. இப்பொழுதும் ஓர் மரத்தடியில் வைக்கப்பெற்ற பிள்ளையாருக்குச் சிறு பந்தரும், மண்டபமும், கோயிலும் முறை முறையே உண்டாதலைக் காண்கின்றோம். இவ்வாறே தான் பண்டை நாளிலும் கோயில்கள் யாவும் தோன்றின. யானை முதல் எறும்பு ஈறாகவுள்ள அனைத்துயிர்களும் கடவுளை வழிபட்ட செய்தியைப் புராணங்கள் புகல்கின்றனவே. இப்பொழு துள்ளன போன்ற கோயில்களிலா அவை வழிபட்டன? கோயில்கள் பண்டைநாளில் எப்படியிருந்தன வேனும் இப்பொழுதுள்ள வழக்கத்திற்கு மாறாக யாதுஞ் செய்தல் பொருந்தா தெனின், வழக்கம் என்பதும் யாண்டும் ஒரு பெற்றியாகக் காணப்படவில்லையே. தமிழகத்திலேயே ஒரு நாட்டுக் கோயிலிற் புகுதற் குரியரல்லார் மற்றொரு நாட்டுக் கோயிலிற் புகுதற் குரியராதலும் தமிழ் நாட்டின் எப்பகுதியிலும் கோயிலிற் புகலாகாதவர் வேறு நாட்டுக் கோயிலிற் புகுதற்குரியராதலும் காணப்படுதலின் நூல்களோ வழக்கமோ இன்னின்னார் கோயிலிற் புகத்தகாதவர் என அறுதியிடுவதாகத்

தோன்றவில்லை. சில வகுப்பினர் யாண்டும் கோயிலிற் புகுவதில்லை யெனினும், ஒருசார் நூல்களும் அதற்காதரவாக விருப்பினும் நம் பெருமக்களுடைய உண்மைக் கருத்தினை ஊன்றி யுணர்தலும், நமது சமயத்தின் ஆக்கத்தை நாடுதலும் நமக்குரிய கடனாம். சாதி குலம் என்பன உலகியல் நடை பேற்று முறையில் ஏற்பட்ட சில கட்டுப்பாடுகள் அல்லது சட்டதிட்டங்கள். சமயங்களோ உயிர்களின் கடைத் தேற்றத்திற்குரிய நெறிகள். உடல் பற்றுக் கோடாகத் தோன்றிய சாதி உயிரின் ஈடேற்றத்தைக் குறிக் கோளாகவுடைய சமயத்திற் புகுந்து சில மக்களை அதற்குரிய ரல்லாராக்குதல் முறையாகுமா? நம் சைவ சமய அருட் குரவர்கள் கோயில்தோறுஞ் சென்று இறைவனை வணங்கி உய்யுமாறு பதிகங்க டோறும் வற்புறுத்தருளியது சிலரை மட்டுங் கருதியோ சிவ நேயர்காள்! இவற்றை ஓர்ந்து பாருங்கள். வடமொழிக் கடலும், தென்மொழிக் கடலும் நிலை கண்டவரும், வேத ஆகமங்களின் விளை பொருளெல்லா முணர்ந்து சிவஞான போதத்திற்குத்திராவிட மாபாடிபம் என்னும் ஒப்பற்ற பேருரை வகுத்த வருமாகிய மாதவச் சிவஞான முனிவர்,

*"சிவனெனும் மொழியைக் கொடிய சண்டாளன் செப்பிடின்*
*அவனுடன் உறைக,*
*அவனொடு கலந்து பேசுக, அவனோ(டு)*
*அருகிருந் துண்ணுக வென்னும்*
*உவமையில் சுருதிப்பொருடனை நம்பா*
*ஊமரோ டுடன்பயில் கொடியோன்*
*இவனெனக் கழித்தால் ஐயனே*
*கதிவே றெனக்கிலை கலைசையாண்டகையே"*

என்றருளிய அருமைச் செய்யுளின் பொருளைச் சிந்தனை செய்யுங்கள். அருமறையின் துணிபு இதுவென்றும் அதனை நம்பாதவர் இத்தகையரென்றும், அவ்வன்கண்ணரொடு உடன் பயிலுதலே இறைவனுக்கும் வெறுப்பினை விளைக்கும் பெருந் தீங்காமென்றும் அருளிச் செய்ததனை அறிந்து வைத்தும், அதனைப் புறக்கணித் தொதுக்கி மாறுபடப் பேசுவோரும் சைவ ராவரோ? அன்னார் அவரைப் போற்றுதலும் உண்மையாமோ? மற்றும் சமயத்தின் நிலைபேற்றை விரும்புவோர் புறச் சமயம் புகுவோர் புகுக, சைவ சித்தாந்தத் தேனமுதருந்துவோர் சில ரிருந்தாற்போதும் என அமைதல் சாலாது. பலர் இருப்பினன்றி இக்கால நிலையில் அத்தேனமுதைச் சிலரும் அருந்த முடியாதநிலை ஏற்படும் என்பது

உறுதி. காலமென்னும் கடு நீர்ப் பெருக்கானது சமய நெறியுள்ளும் முன்னும் எத்தனையோ பல மாற்றங்கள் செய்துள்ளது; இனியும் செய்ய வல்லது என்பதனை உணர்ந்து அதற்கேற்பத் தலைசாய்த்துக் கொடுப்பதே அழிவினைத் தடுக்கும் சதுரப்பாடாகும்.

## சமாஜப் பணி

இனி, சைவ சித்தாந்த மகா சமாஜத்தின் பணிகள் சிலவற்றைக் குறிப்பிட விரும்புகின்றேன். சமாஜம் இதுவரை சமயத்திற்குப் பல தொண்டுகள் புரிந்துள்ளது என்பதில் ஐயமில்லை. அதிலும் சில ஆண்டுகளாகச் சைவத் திருமுறைகள் யாவற்றையும் யாவரும் எளிய விலைக்குப் படிக்குமாறு அழகுற அச்சிட்டு வருஞ் செயல் மிகவும் பாராட்டிற்குரியது. இந் நன்முயற்சியில் ஈடுபட்டுழைக்கும் சமாஜ உறுப்பினர்கட்குச் சைவ உலகம் முழுதும் கடப்பாடுடையதாகும். இங்ஙனமே மெய்கண்ட நூல்களையும், பிற சைவ நூல்களையும் அச்சிட்டு உதவும் பணியைச் சமாஜம் மேற்கொள்ளுமென்னுந் துணிபுடையேன்.

சமய வளர்ச்சியின் பொருட்டுச் சமாஜம் மேற்கொள்ள வேண்டிய பணிகள் மற்றும் எத்தனையோ பல உள்ளன. சைவ சமயத்தவருள் தங்கள் சமய உண்மைகளை அறிந்தவர்கள் எத்தனை பேர் உளர்? தங்கள் சமய நூல்கள் இன்னவென்றும், சமய குரவர் இன்னாரென்றும் அறிந்தவர்களாவது 100-க்கு ஐந்து பேர் இருப்பரோ? இந்த நிலைமையில் இன்னும் எவ்வளவு காலத்திற்குச் சைவ மக்களை விட்டு வைப்பது? சைவரென்போர் யாவரும், தம் சமய உண்மை களை ஓரளவேனும் தெரிந்து கொள்ள வேண்டிச் சமாஜம் உடனே மேற்கொள்ள வேண்டிய பணியாவது தகுதியுடைய சமயச் சொற்பொழிவாளர் ஒருவரேனும் ஊர்தோறுஞ் சென்று விரிவுரையாற்றும்படி ஏற்பாடு செய்தலாகும். மற்றும் தமிழ்நாட்டின் இன்றியமையாத இடங்களிலேனும் ஆண்டுதோறும் சிலராவது சைவ சித்தாந்த நூல்களை முறையாகக் கேட்டுப் படிக்கும்படி தூண்டுதல் வேண்டும். சித்தாந்த வெளியீட்டிலும் சைவ சமய உண்மைகளை அனைவரும் எளிதில் உணரும்படியாகத் தனித்தனியே விளக்கி எழுதிவரல் வேண்டும். மிக எண்மையுடைய இரண்டொரு பணியையே இங்கே குறிப்பிட்டேன். ஆனால் என் விருப்பம் உலக முழுதும் சைவ சமய மாண்பினை அறியும்படி செய்து ‘சேரவாரும் ஜெகத்தீரே’ என அழைக்க வேண்டுமென்பதாகும். சமாஜம் தன் பணியைச் செய்யுமாறு சைவர்கள் யாவரும் அதில் உறுப்பினராகச்

சேர்ந்தும் பிறவாறும் உதவி புரியும் கடமைப்பாடுடையராவர். முடிவாகச் சைவ மக்கள் எல்லாருடைய நினைவுக்கும் நான் கொண்டுவர விரும்புகின்றவை சைவர்க ளெல்லோரும் தாழ்வெனும் தன்மையுடையராதல் வேண்டும்.

*'நின்று மிருந்துங் கிடந்து நடந்து நினை*
*என்றுஞ் சிவன்றா ளிணை'*

என்றபடி எப்பொழுதும் சிவபெருமான் திருவடிகளைச் சிந்தித்தல் வேண்டும்; தீமையெல்லாவற்றையும் போக்கி நன்மையனைத்தையும் தரவல்ல திருவைந் தெழுத்தை இடையறாது, உருப்பெற உன்னி ஓதுதல் வேண்டும்; சைவத்திற்கும் நமக்கும் வாழ்வளித்த சமய குரவர்களை மாறா அன்புடன் போற்றி ஒழுகுதல் வேண்டும்; இவற்றால் தராம் எய்தும் இன்பத்தை வையக முழுதும் எய்துகவெனச் சிந்தித்தல் வேண்டும் என்பனவே.

நமச்சிவாய வாழ்க! நாதன்றாள் வாழக்!

# உயர்திரு சுவாமி விபுலாநந்தரவர்கள்

(முப்பதாம் ஆண்டு விழா - 1935 - திருவண்ணாமலை
சைவர் மாநாடு)

*உண்ணாமுலை உமையாளொடும் உடனாகிய வொருவன்*
*பெண்ணாகிய பெருமான்மலை திருமாமணி திகழ*
*மண்ணார்ந்தன அருவித்திரள் மழலைம்முழ வதிரும்*
*அண்ணாமலை தொழுவார்வினை வழுவாவண்ணம் அறுமே.*

யாவருக்குந் தந்தை தாயாகிய எம்பெருமானையும் எம் பெருமாட்டியையும் உள்ளத் திருத்தி, தம்மை யடைந்தோரது இன்னல்களை நீக்கியருளும் மூத்தபிள்ளையாரது திருவடிகளைத் தொழுது, தண்டமிழ்க்குரவராகிய இளையபிள்ளையாரது பாதப் போதினைத் தலைக்கணியாக்கி, இப்பேரவையிலெழுந்தருளி யிருக்கும் பெரியோருக்கு எனது வணக்கத்தைத் தெரிவித்துக் கொள்ளுகிறேன்.

அன்புடையீர்! இங்கு வந்திருந்து தொண்டாற்றுமாறு நீவிர் பணித்த கட்டளையினை வாழ்க்கையில் எய்திய பெரும் பயன்களுள் ஒன்றாக மதிக்கின்றேன். ''ஆசையொடும் அரனடியா ரடியாரை யடைந்திட்டு, அவர்கருமம் உன்கருமமாகச் செய்து, கூசிமொழிந்து அருண்ஞானக் குறியினின்று, கும்பிட்டுத் தட்டமிட்டுக் கூத்தாடித் திரியே,'' எனவுரைத்த அருள் வாக்கினைக் கடைப்பிடித்தொழுக முயலுவேற்கு இப்பணி உவகையினை யளிக்கின்றது. ஈசனது பழவடியாராகிய உங்களுடைய முன்னிலையிலே, மொழிபவற்றைக் கூசி மொழிய வேண்டியவனாகின்றேன். அங்ஙனமாயினும், கூசாதுமொழிதற்குரிய பொருளும் ஒன்று உளது. அப்பொருள் தான் அகவிருளிரிய மெய்ஞ்ஞானவொளி பரப்பும் உண்மைத் திரு நெறியாகிய சைவத்திற்குச் சிறப்பியல்பாக வமைந்த பொருள். எண்ணிலா உயிர்க்கூட்டங்களை ஆண்டு நடத்தும் தனிப்பெருந் தலைவனாகிய இறைவனொருவனுளன், என்னுங் கொள்கையினை யடைய ஏனைய மதத்தினர்க்கும் ஒரோவழி ஒப்பமுடிந்த அப்பொருள் ''அருள் ஞானம்'' எனப்படுவது. அது அனைத்துப் பொருளினும்

தலையாயது என்பது சைவ நூன் முடிபு. ''அருளிற் பெரிய தகிலத்து வேண்டும், பொருளிற் றலையிலதுபோல்'' என்னும் ஆன்றோர் வாக்கினை நோக்குவார்க்கு இவ்வுண்மை இனிது புலப்படுவதாகும். இருண் மலமாகிய அறியாமை நீங்கி, வீடு பேறடைதற்கு இறைவனது கருணையே வாயிலாகி நிற்கின்றது. அஃதில்லாத வழி, அறியாமை நீக்கமும் வீடு பேறெய்துதலும் இலவாமாதலின், ஆக்கமனைத்திலும் மிக்க தொன்றாகிய பேரின்ப வீட்டினை யடைவிப்பது இறைவனது பெருங்கருணைத் திறமேயென்பது முடிந்த முடிபாகின்றது. அப்பேரருட்டிறத்தின் பெற்றியினை யுணருகின்ற உணர்வே எல்லா ஞானத்திலும் சிறந்த ஞானமாகும். இஃது எய்திய வழி, அனைத்து நலனும் எய்துவவாதலின், இதனை முரசறைந்து உலகனைத்தினுக்கு முரைப்பது சைவர் மேற் பொறுத்த கடனாகும். இத்திருத் தொண்டினைச் செய்வதற்கு யாம் ஒரு சிறிதேனும் பின்னிற்க வேண்டியதில்லை. சைவராகிய யாம் ஒருங்கு கூடு மிடத்திலெல்லாம் நமது தலைவனது பேரருட்டிறத்தின் பெற்றியினைக் கூசாது மொழிவோமாக. யாம் அவ்வருணெறி நின்று நீடு வாழ்வோமாக. அது நம்மை உய்விப்பதாக.

நமது ஆண்டவனை அவனது மெய்யடியார் பலர் ''அருட் கடல்'' எனப் புகழா நின்றனர். கடல் எலையற்ற நீர்மையது. அவ்வண்ணமே அருளும் எல்லையற்ற நீர்மையது. அருளினாலே இவ்வுலகிடை யுதித்தோம். அருளினாலே உயிர்வாழுகின்றோம்.அருளே நம்மை நற்கதியிற் புகுத்துவது. தாயாகி நம்மை வளர்த்தெடுத்துத், தந்தையென வந்து பெறுதற்கரிய சால்பினை நல்கிக், குருவடிவாகி இருளினையகற்றித், துணைவனெனவும் துணைவியெனவும், இன்னகைப் புதல்வரெனவும், புதல்வியரெனவும், அன்புடை மாமனெனவும் மாமியெனவும், துய்ப்பனவாகவும் தோற்றி நம்மை நல்வழிப்படுத்துவது அப்பேரருளேயாம்.

இவ்வுண்மையினை யறியா மாந்தர் உடல் வலியும் மன வலியுங்குன்றித், தாயினையிழந்த சேயினைப் போல அல்லலுறுவர். இதனை யுணர்ந்தோர் வேண்டிய பொருளனைத்தினையும் பெற்று இவ்வுலகில் வாழும்பொழுதே இன்ப நிலையினை எய்துவர். ''ஒன்றுமே வேண்டா துலகனைத்தும் ஆளுவர் காண், என்றுமே யிப்பொருளோ டேகாந்தத்துள்ளவரே'' எனக் கவிவாணராகிய பாரதியார் கூறுகின்றார். இத்துணைச் சிறப்பு வாய்ந்த அருளினை யடைதற்குரிய வழியினைச் சைவ சாத்திரங்க ளனைத்துங் கூறுகின்றன. ஆதலினாலன்றோ அவையெல்லாம் ''அருணூல்

எனவும், "அருட்பா" வெனவும், "அருட்பனுவல்" எனவும் விதந்து பாராட்டப் பட்டன. திருவருட் செல்வராகிய பெரியார் பலர் ஆங்காங்குக் குறிப்பிட்ட சிற்சில முடிபுகளைத் தொகுத்து நோக்குவோமாக.

பண்டிதத் திறமை கருதி உலகிற் பல கலைஞானங்களையும் ஆராய்ந்து உளங் கொள்ளுவோர் ஆண்டவனது பேரருளுக்குத் தம்மைக் கொள்கலமாக்கிக் கொள்ளாதொழியினு மொழிவர். உலகரால் மதிக்கப்படுகின்ற கல்வியறிவு நிரம்பப் பெறாதவர் ஒரோவழி ஆண்டவனது அருளினாலே உண்மை ஞானமெய்தி எல்லா நலன்களுக்கு மிருப்பிடமாவர். "ஆண்டவனது பேரருளினைப் பெறுதற்குக் கல்வியினுந் தியானஞ் சிறந்தது, நியாயவாதத்தினும் நெடுமூச்சுச் சிறந்தது, கவிமாரியினும் கண்ணீர்மாரி சிறந்தது, நூலாராய்ச்சியினும் வழிபாடு சிறந்தது, மண்ணோக்கிய சிந்தையினும் வானோக்கிய சிந்தை சிறந்தது' என உண்மையறிஞர் உரையா நிற்பர்.

"சுருதி சிந்தனா பாவனாதரிசனை கருதி யுய்த்து மயக்கங் கடிக" என்றமையால் அருட்டிறத்தின் பெற்றியினை உரைக்கும் நூற் பொருளினைக் கேட்டல் இன்றியமையாதது. ஆயினும் அது முதற் படியேயாம். சிந்தனையும் பாவனையும் தரிசனையும் அதன்பின் எய்தற் பாலன. யாம் எதனைச் சிந்திக்கின்றோமோ அதுவாகின்றோம் என்பது உண்மை நூலுக்கும் உலகர் நூலுக்கும் ஒப்பமுடிந்த முடிபாகும். உள்ளத்திலே உதிக்கின்ற எண்ணங்கள் பலவற்றுள்ளும் ஒன்று நமக்குச் சிறப்புடையதாகத் தோற்றியவழி, நாம் அதனை மீட்டு மீட்டும் மனத்தின் முன்னிலையிற் கொண்டுவந்து நிறுத்தி, அதனது பூரணவியல்பினை அளவிட முயலுகின்றோம்; அம்முயற்சி தியானமாகின்றது. தியானத்தினாலே அவ்வெண்ணம் தெளிவடையத் தியானிக்கும் உள்ளமானது உவகைமேவிய வியப்பினாலே, தன் செயலிழந்து தியானிக்கும் பொருளினோடு ஒன்று பட்டு நிற்கும். இந்நிலையே பாவனை யெனப்படுவது, மனத்தின் செயல்களுள்ளே சாதாரண எண்ணமானது தெளிந்த இலக்கின்றிச் சஞ்சரித்து, ஒன்றினை விடுத்து மற்றொன்றினைப் பற்றி அலைவுறா நிற்கும். சிந்தனையானது குறித்த இலக்கினை யுடையதாதலின், ஒன்றினையே பற்றி அதனை ஆழ்ந்து ஆராயும் ஆற்றலாக வெளிப்படும். இனிப் பாவனை நிலையிலே சிந்திக்கப்பட்ட பொருளின் சிறப்பியல்பு உள்ளத்தினை நிரப்புமாதலின், அதனால் உவகையும் வியப்பு மெய்திய உள்ளமானது எப்பொருளினும் மெய்ப்பொருளாகத் தோன்றும் செம்பொருளினைப் பற்றிய காரணத்தினாலே தன்

செயலிழந்து பரவசப் பட்டு நிற்கும். ''சாந்தம், சிவம், சுந்தரம், அத்வைதம்'' எனப் போற்றப்பட்ட செம்பொருள் தன்னியல்பிலே நிறைந்த அறிவும், நிறைந்த அழகும், நிறைந்த உவகையும் மேவியதாதலின், அதனைப் பற்றிய உள்ளம் மலர்ச்சியும் உயர்வும் பெற்று நிற்பது பொருத்தமேயாம்.

''கற்பனை கடந்த சோதி கருணையே யுருவமாகி'' என்றமை யினால், உரையும் உணர்வும் கடந்து நின்ற உண்மைப் பொருள் உருவோடு தோற்றுமிடத்து எய்தும் உரு அருளுருவேயா மென்பது பெறப்படுகின்றது. ''அன்புஞ் சிவமும் இரண்டென்ப ரறிவிலார்'' என்றற்றொடக்கத்து உறுதி மொழியும் இதனையே புலப்படுத்து கின்றது. ஆண்டவனது அருள் வடிவத்தைச் சிந்தனை செய்யப் புகுவோர் ஆங்கவற்குந் தமக்குமிடையே யாதாயினுமோர் அன்புத் தொடர்பினை ஏற்படுத்திக் கொள்ளுதல் வேண்டுமெனப் பத்தியோக நூல்கள் உரையா நிற்கும். பரந்த இஞ்ஞாலத்தினையும் உயிர் வர்க்கங்களையும், வானகத்து மிளிரும் திங்களையும், ஞாயிற்றினை யும், விண்மீன்களையும் உயிர் வாழ்க்கையில் நிகழும் இன்பத் துன்பங்களையும் உளங்கொண்டாராய்ந்த ஆண்மகனொருவன் இவை தம்மை ஆக்கியும் அழித்துங் காத்தும் வருகின்ற தலைவனுளன் எனக் கேள்வியுற்ற ஞான்று, அத்தலைவன்பால் அச்சத்தோடு கூடிய அன்பினைச் செலுத்துவான். இந்நிலையிலே ஆண்டானடிமைத் தொடர்பு ஏற்படுகின்றது. தலைவனிடத்துள்ள அன்பு பெருகு தலினாலே அச்சம் ஒருபுடையகல, முன்னர்ச் சேய்மைக்கண் ஆண்டவனாகத் தோன்றிய அருள்வடிவம் பின்னர் அணிமைக்கண் அன்பு நிறைந்த தாயாகவோ, தந்தையாகவோ காணப்படும். முன்னர்த் தன்னை அடிமையாகக் கண்டோன் பின்னர்த் தான் ஆண்டவ னுடைய புதல்வருளொருவனென வறிவான். இந்நிலையே புத்திரமார்க்கமென நூல்களாற் கூறப்படுவது. அச்சம் முற்றிலுமகல அன்பு தனித்து நிற்கும் நிலையே தோழநெறி யெனப்படும் சகமார்க்கமாகும். மூன்று நிலையும் அருளுருவத்தைப் பற்றி நிற்பனவேயாம்.

ஆண்டவனது அருட்கருணை யில்லாதவழி நமக்கு உய்யு நெறியில்லை. கருணையினை நாம் அவாவி நிற்கின்றோம்; ஆதலினாலே நம்மாலியன்றவரை பிறவுயிர்கள்மீது கருணை பாராட்ட வேண்டியவராகின்றோம். அத்தகைய கருணையினைத் திரு வள்ளுவப் பயன் செல்வத்து ளொன்றாக வைத்து ''அருட் செல்வம்'' எனக் குறியிட்டு வழங்கும். நாம் காதலிக்கின்ற

தலைவனுக்கு இயல்பாக வமைந்த அருள் விளக்கம் நம்மிடத்து எத்துணையாகக் காணப்படுகின்றதோ, அத்துணைக்கு நாம் நமது தலைவனை அணுகி நிற்பவராவோமாதவினாலே, அருட்செல்வத் தினைப் பெருக்குவது சைவராகிய நமக்கு இன்றியமையாத சாதனமாயிற்று.

அருளொழுக்கம் பெருகியவழி, வெறுப்பு, வெகுளி என்னுமிவை தாமே யகல்வனவாம். அருணிறைந்த உள்ளத்தினுள்ளே அச்சம், கவலை, பொறாமை, அசூயை, துன்பம், மிடி, லோபம் என்பன ஒரு சிறிதும் புகமாட்டா. அருளினால் அகன்ற சிந்தையினை யுடையோரே பெரியோ ரெனப்படுவார். இவரைக் காண்போரனைவரும் இவரது நட்பினை விழைந்து நிற்பார். உலகனைத்தும் இவர்க்குச் சுற்றமாகும். புகழ், பொருள், நட்பு ஆகிய மூன்றும் இவர்தம்மை வந்தடை வாதலின், இவரது வாழ்க்கை பல திறத்தினும் நிறைவு பெற்றுத் தோன்றும்.

அருண்ஞானக் குறியினிற்போர் தம்முடைய சிறுமையையும் தலைவனுடைய பெருமையையும் ஒருங்கு சேர வைத்துச் சிந்திக்க வேண்டும். தம்முடைய சிறுமையை மாத்திரம் தனித்து நினைத்தல் கவலை, துன்பம், மிடியென்னுமிவற்றிற்கு உள்ளத்தைப் புகலிடமாக்குமாதலின், அது செய்யத்தகாதென் றறிதல் வேண்டும். தலைவனுடைய பெருமையை நினைவு கூடுதலினாலே, அவனை யாம் சார்ந்துநின்ற சார்புபற்றி நமது உள்ளத்திலே ஒரு பெருமிதந் தோன்றும். அப் பெருமிதவுணர்வு நமக்கு எல்லாச் செல்வத்தையும் தரவல்லது. ''எங்குமியா மொருவர்க்கும் எளியோ மல்லோம், யாவர்க்கும் மேலானோம் என்றிறுமாப் பெய்தித், திங்கண் முடி யாரடியா ரடியோ மென்று, திரிந்திடுவர் சிவஞானச் செய்தியுடை யோரே,'' என்றபடி "எங்குமியா மொருவர்க்கு மெளியோ மல்லோம்'' என்னும் பெருமிதவுணர்வு தலைவனது சார்பினால் நமக்கு ஏற்படுவது; இது இம்மை மறுமைச் சுகம் இரண்டினையுந் தருவது. தனித்த மக்களுக்கு மாத்திரமல்ல, மக்கட் கூட்டத்தினர்க்கும் இவ்வுணர்வு உயர்வினைத் தருவதென்பதற்கு உலக சரித்திரமே சாட்சியாகும். ஆளுடையபிள்ளையாரும் ஆளுடையவரசும் உலகிலே திருவவதாரஞ் செய்த காலத்திற்கு முந்நூறாண்டுகளுக்கு முன்பு தொட்டு அக்காலம்வரையும் அந்நிய மன்னரது ஆட்சியுட்பட்டு வலியிழந்துகிடந்த தமிழ்நாடு அருட் செல்வராகிய அவ்விருவரது வருகையினாலே வலிபெற் றெழுந்த தன்றோ? அக்காலம் முதல் அறுநூறாண்டுகளுக்குத் தமிழ் மக்கள் பெரும் புகழ்பெற்று

விளங்கினாரன்றோ? ஈழத்தினும், காழகத்தினும், கங்கைக்கரையினும் தமிழ் மன்னர் பெற்ற வெற்றி எங்கிருந் தெழுந்தது? தமிழ் மன்னரது வலிமைக்கு ஊற்று யாது? இத்தகைய வினாக்களை யாம் ஊன்றி யாராய்வோமெனின், ''நாமார்க்குங் குடியல்லோம்'' என நாவரசருரைத்த மகா மந்திரமே தமிழ் மன்னரது வலிமைக்குக் காரணமாயிற்று என அறிவோம். நாவரசர் தமிழ் நாட்டிலிருந்த அக்காலத்திலே மேற்குக் கடலுக்கு வடகோடியிற் கிடந்த அராபி நாட்டிலே, ஆண்டவனுடைய திருத் தூதரொருவர் அவதரித்தார். அவர் போதித்த மார்க்கத்திலே ''இறைவ னொருவனே இறைவன்'' என்னும் சிறந்த போதனை அமைந்துள்ளது. இப்போதனையினால் வலிமை பெற்ற அந்நாட்டு மக்கள் ஐரோப்பாக் கண்டத்தின் பெரும் பாகத்தையும் ஆசியாக் கண்டத்தின் ஒரு பாகத்தினையும் தம்மாணையுள் வைத்து ஆட்சி புரிந்தனரன்றோ? அருண் ஞானத்தினாலெய்தும் வலிமை யித்தகையதென வுணர்ந்தாம்; அதனை யடைதற்குரிய சாதனை யிதுவென ஆராயப் புகுவாம்.

''சந்ததமும் எனது செயல் நினது செயல், யானெனும் தன்மை நினையன்றி யில்லாத் தன்மையால் வேறலேன், வேதாந்த சித்தாந்த சமரச சுபாவமிதுவே'' என அருண் ஞானச் செல்வராகிய தாயுமான சுவாமிகள் கூறிய உறுதி மொழி அவ்வருண் ஞானத்தினைப் பெறுதற்குரிய சாதனையினை நமக்கு உணர்த்துகின்றது. ''தனக்கெனவோர் செயலற்றுத் தானதுவாய் நிற்கின், நாதனவ னுடலுயிரா யுண்டுறங்கி நடந்து, நானாபோகங்களையுந் தானாகச் செய்து, பேதமற நின்றிவனைத் தானாக்கி விடுவன்'' என்னும் உண்மைநெறி விளக்கமும் மேற்குறித்த சாதனையினையே விளக்குகின்றது. ''அவனிவனாய் நின்றமுறை யேகனாகி, யரன்பணியி னின்றிடவு மகலுங்குற்றம்,'' என்னும் அருண்மொழியும் இவ்வுண்மையினை அறிவுறுத்துகின்றது. ''தவமொன்று மில்லை யொரு சாதனையுமில்லையடா, சிவமொன்றே யுள்ளதெனச் சிந்தைசெய்தாற் போதுமடா,'' எனவும் ''சந்ததமும் எங்கு மெல்லாந் தானாகி நின்றசிவம், வந்தெனுளே பாயுதென்றுவாய் சொன்னாற் போதுமடா,'' எனவும், ''நித்தசிவ வெள்ளமென்னுள் வீழ்ந்துநிரம் புதென்றுன், சித்தமிசைக் கொள்ளுஞ் சிரத்தையொன்றே போதுமடா'' எனவும் அநுபவ ஞானியுங் கவிவாணருமாகிய பாரதியார் கூறுகின்றார்.

பண்டைப் பெருமையையிழந்து கிடந்த இப்பாரத நாடு இந்நாளிலும் விளக்கமுறும்படி உண்மை நெறியினை உலகிற்

குணர்த்தத் திருவவதாரஞ்செய்த அருட்பெருங் குரவராகிய ஸ்ரீ ராமகிருஷ்ண பரமஹம்ச தேவர் உண்மைப்பக்தனது வாய்மொழியாக வெளியிட்டுரைத்த வாக்கியம் ஈண்டு நினைவு கூருதற்குரியது. அதுவருமாறு : ''தலைவ! அடியேன் ஓர் இயந்திரம்; நீர் அம்மனையில் வசிப்பவர்; அடியேன் ஒருதேர்; நீர் அத்தேரினைச் செலுத்தும் சாரதி; தேவரீர் அடியேனை எவ்வாறு பேசுவிக்கின்றீரோ அவ்வாறு பேசுகிறேன்; எவ்வண்ணம் நடத்துகின்றீரோ, அவ்வண்ணம் நடக்கின்றேன்; எதனைச் செய்விக்கின்றீரோ அதனை யான் செய்கின்றேன்.'' இத்தகைய உணர்வு மேலிட்டுக் குறையிரந்து நிற்போமெனின், அருளாகிய நம்மன்னை வெளிப்பட்டு நமது கரத்தினைப் பற்றி வழிநடத்தி நமக்கு வேண்டுவ புரிவாளென்பதற்கு ஐயப்பாடில்லை. ''சிந்தனை நின்றனக்காக்கி நாயினேன்றன், கண்ணினை நின் திருப்பாதப் போதுக் காக்கி, வந்தனையும் அம்மலர்க்கேயாக்கி வாக்குன், மணிவார்த்தைக் காக்கி ஐம் புலன்களார, வந்தெனையாட் கொண்டுள்ளே புகுந்த விச்சை, மாலமுதப் பெருங்கடலே மலையே யுன்னைத் தந்தனை செந்தாமரைக்கா டனைய மேனித், தனிச்சுடரே யிரண்டு மிலித் தமியனேற்கே'' என அறிவினாற் சிவனேயாகிய மணிவாசகப் பெருந்தகையார் கூறிய திருவாசகமும் அருண் ஞானத்தினைப் பெறுதற்குரிய சாதனையைக் குறித்து நிற்கின்றது.

அருள்வழி நின்று, இறைபணி புரிவோர்க்கு இவ்வுலகமே இன்பவுலகாகும். யாவனொருவன் அன்பு மேலீட்டினாலே தன்னை முற்றிலும் இறைபணிக்கு உரிமையாக்குகின்றானோ அவனுடைய இதயம் இறைவனுக்கு உகந்த கோயிலாகின்றது. காதலெய்திய உலக மாந்தர் அக்காதல் வயத்தினால் அன்னையையும் அத்தனையும் உடன் பிறந்தாரையும் மறந்திருப்பதை யாங் கண்டிருக்கின்றோ மல்லவா? அவ்வண்ணமே தனிப்பெருந் தலைவனாகிய இறைவனுடைய பேரருளுக்கு இலக்காயினோரும் உலகத்து மயலனைத்தினையும் மறந்து இடைவிடாது அவனருளிலே யீடுபட்டிருப்பர்; அரசனுழைச் சென்ற விருந்தினர் போலச் சொல்லுதற்கரிய உவகை மேவியிருப்பர். ஒரோவழி மணமகனது முன்னிலையில் இருக்கும் மணமகளைப் போல இவர் இன்பவெறி நிரம்பப் பெற்றவராகக் காணப்படுவார்; உலகத் துன்பங்களைக் கண்டு உளம் வருந்தி மக்கட் கூட்ட மனைத்தினையும் உய்யக் கொள்ள வேண்டுமென இறைவனை வேண்டி நிற்பதும் இவர்க்கு இயல்பாகும். இவரது வேண்டுகோள் இறைவனது திருச்செவியினைச் சென்று சேரும்.

அன்புடையீர்! ''அருள் ஞானம்'' என்னும் அரும் பெரும் பொருளினைக் குறித்து ஒரு சில முடிபுகளை இப்பேரவையி லெடுத்துக் கூறினேன். நான் வழுவிய விடத்தினை வழு நீக்கியும் குறைவுற்ற விடத்தினை நிறைவாக்கியும் இவ்வுரையினை ஏற்றுக் கொள்வீர்க ளென்னுந் துணிவு எனக்கு உளது. ''பிறந்து மொழி பயின்ற பின்னெல்லாம். காதல் சிறந்தது'' உள்ளமானது எந்தத் தலைவனை நாடிற்றோ, அந்தத் தலைவனது அணிமையிலிருக்கும் அருமை நோக்கியே தில்லைத் திருப்பதியிலே சில காலம் வசித்தேன். பின்பு ஈழத்திற்குப் போக நேர்ந்த தெனினும் ''உடலங்கே, உயிரிங்கே'' என நின்றமையாற் போலும் இடையிடையே தாய் நாட்டினைத் தரிசிக்கும் பாக்கியத்தினை ஆண்டவன் கூட்டி வைக்கிறான். அவனது பேரருள் நம்மனைவருக்கும் என்றும் உளதாகுக.

# திரு. ந. சிவகுருநாத பிள்ளை

**(31ஆம் ஆண்டு விழா - காஞ்சிபுரம் - சைவர் மாநாடு)**

காஞ்சிபுரமாகிய இத்திருத்தலம் மிகப் பழமையுடையது; அயோத்தி, மாயா, மதுரா, காசி, காஞ்சி, துவாரகை, அவந்திகை என்னும் ஏழு திருத்தலங்களுள் ஒன்றாகத் திகழ்வது; உமாதேவியார் ''கரந்தரும் பயனிதுவென வுணர்ந்து கம்ப மேவிய உம்பர் நாயகனைப்'' பூசிக்கப் பெற்றது; அறுபான்மும்மை நாயன்மார்களுள் ஒருவராகிய திருக் குறிப்புத்தொண்ட நாயனார் திருத்தொண்டு செய்து வீடு பெற்றது; பாங்கினொடு பலதளிகளும் விளங்கப் பெறுவது; திருஞான சம்பந்தமூர்த்தி நாயனார் முதலிய சமய குரவர் நால்வர்களாலும் போற்றப்பெற்றது; முடியுடைத் தமிழ்வேந்தர் தலைநகராகக் கொண்டு அரசு செலுத்தியது; ஸ்ரீ கச்சியப்ப சிவாசாரியாரால் குமரகோட்டத்து முருகப்பெருமான் திருவருள்பெற்று ஸ்ரீ கந்தபுராணம் பாடப்பெற்றது. ஸ்ரீ மாதவச் சிவஞானயோகிகள் இத்திருத்தலத்திலிருந்தே சிவஞானமாபாடியம் இயற்றியருளியதாகச் சொல்லப்பெறுகின்றது. இன்னும் அளப்பிலாப் பெருமைவாய்ந்த இத்திருத்தலத்தின்கண் சைவசித்தாந்த மகா சமாஜம் தனது முப்பத்தோராம் ஆண்டு நிறைவுவிழாவை நிகழ்த்தப் பெறுதல் கழிபேருவகை பயப்பதாகும்.

## சைவசமயத்தின் பெயர்கட்குரிய காரணம்

நமது சமயம் சைவம், வைதிக சைவம், சித்தாந்தம் என்னும் பெயர்களால் வழங்கப்பெறுகின்றது. ''சைவம்'' என்னும் சொல் சிவத்தொடு சம்பந்தமுடைமையானும், ''வைதிக சைவம்'' என்னும் சொல் வேதம் ஆகமம் என்னும் இரு முதனூல்களையும் பிரமாணமாகக் கொண்டொழுகுதலானும், ''சித்தாந்தம்'' என்னும் சொல் முடிந்த முடிபாகிய உண்மைகளை விளக்குதலானும் போந்த காரணப் பெயர்களாகும்.

## சைவசமயத்தின் பழைமை

சைவசமயம் இன்ன காலத்துத் தோன்றியது என்று அறியவாராத பழைமையுடையது. பழந் தமிழ் நூல்களாகிய சங்க இலக்கியங்களில் சைவக் கொள்கைகளும், சிவபிரானது உயர்வும் ஆண்டாண்டுக் காணப்பெறுகின்றன. மணிமேகலையில் சமயக்கணக்கர் தந்திறங் கேட்ட காதையில்,

*"இருசுட ரோடிய மானனைம் பூதமென்*
*றெட்டு வகையு முயிருமாக் கையுமாய்க்*
*கட்டிநிற் போனுங் கலையுருவி னோனும்*
*படைத்து விளையாடும் பண்பி னோனும்*
*துடைத்துத் துயர்தீர் தோற்றத் தோனும்*
*தன்னில் வேறுதா னொன்றில் லோனும்*
*அன்னோ னிறைவ னாகுமென் றுரைத்தனன்"*

எனச் சைவக் கடவுள் இயல்பு விளக்கப் பெற்றிருத்தல் காண்க. இன்னோரன்ன பல சைவ உண்மைகளைச் சங்க இலக்கியங்களிற் பரக்கக் காணலாம்.

இனிச் சைவ சித்தாந்தத்திற் கொள்ளப்படும் தத்துவ உண்மைகளிற் பலவற்றைத் தமிழ் மொழி எழுத்துக்களின் அமைப்பிலும் இனிது காணலாம். அகரமாகிய தனி உயிர் கடவுளாகவும், ஏனைய கடவுள் அடிசார்ந்த நானெறி மூவகை உயிர்களாகவும், மெய் அறிவில் பொருளாகவும், சார்புயிர் இரண்டும் நல்லார் பொல்லார் என்னும் இருவகை உயிர்களாகவும், ஆய்தம் மெய்யின் நுட்பமாகிய நுண்ணுடலாகவும் கொள்வது பொருத்த முடையதாகின்றது. ஆசிரியர் நச்சினார்க்கினியர் தொல்காப்பிய நூன்மரபு "ஔகார விறுவாய்ப் பன்னீரெழுத்தும் உயிரென மொழிப" என்னும் சூத்திரவரையுள் "அகர உயிரைப் பற்றிக் கூறுங்கால், மெய்பதினெட்டினையும் இயக்கித் தான் அருவாய் வடிவின்றி நிற்றலின் உயிராயிற்று. இவை மெய்க்கு உயிராய் நின்று மெய்களை இயக்குமேல் உயிரென வேறொர் எழுத்தின்றாம் பிறவெனின், மெய்யினிற்கும் உயிரும் தனியே நிற்கும் உயிரும் வேறென உணர்க" என்பன முதலாகச் சைவசித்தாந்தத்திற் கூறப்படும் உயிர், மெய் (உடம்பு) என்பன வாதிய பொருள்களில் வைத்து உரைத்தல் காண்க. இதனால் அநாதி இயற்கையாகிய தமிழ் மொழியும் சித்தாந்தமும் ஒன்றோடொன்று தொடர்புற்று விளங்குதலால் தமிழ் முந்தியதோ சித்தாந்தம் முந்தியதோ என்று ஐயுறுதற் கிடனாகின்றது.

## பொருளாராய்ச்சியும் இலக்கணமும்

சித்தாந்தம் பொருளுண்மைகளை உரைப்பிரமாணம் ஒன்றேகொண்டு நிச்சயிக்கவில்லை. காட்சியோடு கருதல் அளவையுங் கொண்டே நிச்சயித்திருக்கிறது. உலகில் காணப்படும் பொருள்களிற் சில அசைவித்தால் அசையும் சடப்பொருள் (அறிவில் பொருள்)களகாவும், சில அறிவித்தால் அறியும் சித்துப்பொருள் (அறிவுப்பொருள்)களாகவும் இருத்தலானும், இவ்விரு பொருள் களையும் ஒன்றாக இணைத்துக் காரியப்படுத்துவான் ஒருவினை முதல் பேரறிவும் பேராற்றலு முடையோனாய் இருத்தல் வேண்டு மாதலானும், ஆகவே அறிவுடைப் பொருள் ஒன்று, அறிவித்தால் அறியும் அறிவுடைப் பொருளொன்று, அறிவித்தாலும் அறியமாட்டாத அறிவில் பொருளொன்று ஆக மூன்று பொருள்களின் உண்மை தெள்ளிதிற் புலனாகின்றது. இவற்றையே பதி பசு பாசம் எனச் சித்தாந்த சாத்திரங்கள் கூறுகின்றன. இன்னும் சடப் பொருள்களை நுணுகி ஆராயும்வழி காணப்படும் உடம்பு, கருவி, உலகம், போகம் எனக் கூறப்படும் தனுகரண புவன போகங்கள் உயிரின் அறிவு விளக்கத்திற்கு ஏதுவாகக் காணப்படுதலானும், உயிரின் அறிவு விளக்கத்திற்கு ஏதுவாகக் காணப்படுதலானும், உயிரின் அறிவோடு ஒற்றித்து நின்று அறியாமையைச் செய்யும் பொருள் தனுகரண போகங்கள் என்று கூறுதல் பொருந்தாமையானும், அறியாமையை விளைக்கும் பொருள் வேறொன்று வேண்டப்படுவதாகின்றது. இனி உயிர் வருக்கங்கள் இன்பம் துன்பம் என்னும் இரண்டனையும் கலந்து அநுபவித்தலால் அவைகட்குக் காரணமும் வேண்டப்படும். தனுகரண புவனபோகங்கள் காரியமாயிருத்தலின் அவற்றிற்குக் காரணம் மாயை என்று கொள்ளப்படும். தனுகரண புவன போகங்கள் சுத்தமும் அசுத்தமுமாக இருவகைப்படக் காணப்படுதலின் அவற்றிற்குக் காரணமாகிய மாயையும் சுத்த மாயை அசுத்த மாயை என இருவகையாகக் கொள்ளப்படும். இவ்வாராய்ச்சியால் புலனாவது பதி என ஒரு பொருளும், பசுவென ஒரு பொருளும், பாசத்தின் வகையாக ஆணவம், கன்மம், சுத்த மாயை, அசுத்த மாயை என நான்கு பொருள்களும் ஆக மொத்தம் ஆறு பொருள்களேயாம். இதனை "ஏகன் அநேகன் இருள் கருமம் மாயை யிரண்டு - ஆக விவை யாறாதியில்" என்று திருவருட் பயன் என்னும் சித்தாந்த நூல் விளக்குகின்றது. ஏகன் என்னும் பதிப்பொருள் ஒன்றே. அநேகன் என்னும் பசுக்கள் எண்ணிறந்தன. இங்ஙனம் ஆராய்ச்சி முறையில் பொருள் உண்மைகளைச் சித்தாந்தம் உணர்த்தும் முறைமையினை ஓருதாரணத்தால் கண்டு கொள்ளலாம். சிவஞானசித்தியார்,

உயிரையும், உடல் முதலியவற்றையும் கூட்டுவிக்கும் பொருள் அவை இரண்டற்கும் வேறாக வேண்டப்படும் என்பதனை,

*''புத்திமற் காரி யத்தால் பூதாதி புருடன் றானும்*
*அத்தனு கரணம் பெற்றால் அறிதலால் அவற்றை மாயை*
*உய்த்திடு மதனால் மாயைக் குணர்வொன்று மல்லை யென்றே*
*வைத்திடு மதனா லெல்லாம் வருவிப்பான் ஒருவன் வேண்டும்''*

- சித்தியார்

என்று பரிசேட அளவை கொண்டு எவ்வளவு அழகாகக் கூறி யிருக்கின்ற தென்பதை நோக்குங்கள்.

இனிச் சித்தாந்தம் இங்ஙனம் பொருளுண்மைகளை ஆராய்ச்சி செய்த பின்னர், பொருள்களின் இலக்கணங்களையும் தெள்ளிதின் உணர்த்தும். இறைவன் தன்னுண்மையில்

*''சிவனரு வுருவு மல்லன் சித்தினோ டசித்து மல்லன்*
*பவமுதற் றொழில்க ளொன்றும் பண்ணிடு வானு மல்லன்*
*தவமுத லியோக போகந் தரிப்பவ னல்லன் றானே*
*இவைபெற யியைந்து மொன்று மியைந்திடா வியல்பினானே''*

-சித்தியார்

என்று சொல்லப்படினும், ஆன்மாக்களை உய்வித்தற் பொருட்டுப் படைத்தல், காத்தல், அழித்தல், மறைத்தல், அருளல் என்னும் ஐந்தொழில்களையும் அவன் செய்து போதருகின்றான். ஆகவே, இறைவனுக்கு யாதொரு தொழிலும் செய்யாது அறிவே சொரூபமா யிருக்கும் நிலை சொரூப இலக்கணமும், ஆன்மாக்கள் பொருட்டு ஐந்தொழில் செய்யும் நிலை தடத்த இலக்கணமும் ஆகின்றன. இங்ஙனம் பசு, பாசங்களுக்கும் இலக்கணம் வரையறை செய்யப் பெற்றிருக்கிறது. இவ்விரு வகை இலக்கண முணராக்கால் ''இருநிலனாய்த் தீயாகி நீருமாகி இயமான னாயெறியுங் காற்று மாகி'' என ஓரிடத்திலும் ''விரிகதிர் ஞாயிறல்லர் மதியல்லர் வேதவிதியல்லர் விண்ணு நிலனுந் திரிதரு வாயுவல்லர் செறிதீயுமல்லர் திகழ்நீரு மல்லர் தெளியின்'' என மற்றோரிடத்தினும் ஒன்றுக்கொன்று மாறுதலான வாக்கியங்கள் காணப்பட்டபொழுது ஒன்றனைக் கொண்டு மற்றொன்றனை இகழ வேண்டிவரும். இவ்வித இலக்கண ஆராய்ச்சி மற்றெச் சமயத்தினும் காணப்படவில்லை. சில சமயங்கள் விகாரத்திற்காகச் சில இலக்கணங்களைக் கூறிப் பின்னர் பாரமாத்தி கத்தில் அவைகள் இல்லையென்று கூற நிற்கும்.

சித்தாந்த உண்மைகளை விளக்கும் நூல் வடமொழியில் சிவாகமங்களும், தென்றமிழ் மொழியில்,

*"உந்தி களிறு உயர்போதஞ் சித்தியார்*
*பிந்திருபா வுண்மைப் பிரகாசம் - வந்தவருட்*
*பண்புவினா போற்றிகொடி பாசமில்லா நெஞ்சுவிடு*
*உண்மைநெறி சங்கற்ப முற்று"*

என்றபடி திருவுந்தியார் முதலிய பதிநான்கு நூல்களாகும். இவற்றுள் சிவஞானபோதம், சிவஞானசித்தியார் என்னும் இருநூல்களும் தலைசிறந்தவையாகும். இவற்றின் சார்பாகப் பிற்காலத்து ஆன்றோர் களாற் பல நூல்கள் இயற்றப் பெற்றிருக்கின்றன. வடமொழியில் வியாசரால் இயற்றப்பெற்ற வேதாந்த சூத்திரத்திற்கு ஏகான்மவாத பரமாக ஸ்ரீ சங்கரா சாரியராலும், விசிட்டாத்வைதபரமாக ஸ்ரீ இராமானுஜாசாரியராலும், சிவாத்வைதபரமாக ஸ்ரீ நீலுகண்ட சிவாசாரியராலும் பாடியங்கள் இயற்றப் பெற்றிருப்பதுபோல வடமொழிச் சிவஞான போதத்திற்கு ஸ்ரீசிவாக்கிரயோகிகளாலும், தென்மொழிச் சிவஞானபோதத்திற்கு ஸ்ரீ மாதவச் சிவஞான யோகிகளாலும் பாடியங்கள் இயற்றப்பெற்றிருக்கின்றன. வட மொழியில் இயற்றப்பெற்றுள்ள பாடியங்கள் வடமொழிப் பிரமாணங்களையே பிரமாணமாகக் கொண்டியற்றப் பெற்றுள்ளன. ஸ்ரீ மாதவ சிவஞான யோகிகளால் இயற்றப்பெற்ற திராவிட மாபாடிய மொன்றே வடமொழிவேதாகம உபநிடதங்களையும் தென்றமிழ் மொழியிலுள்ள பன்னிரு திருமுறைகள், திருக்குறள் முதலிய நூல்களையும் தழுவித் திட்பமும் நுட்பமும் செறிய இயற்றப் பெற்றிருக்கிறது. திராவிடமாபாடியத்தால் விளக்கப்படாத பொருள் யாதுமில்லை. தேவார முதலிய பன்னிரு திருமுறைகளும் சைவசமயத்திற் பிரமாணமாகக் கொள்ளப்படுவன.

## சைவத் தனிப்பெருங் கடவுள்

சைவத்திற் கொள்ளப்படுங் கடவுள் சிவபெருமானே. சிவம் என்னும் சொல், வடமொழியில் மங்களம், ஒளி, எல்லாவற்றிலும் இருத்தல் என்பன வாதிய பொருளையும், தமிழ் மொழியில் செம்மை, சிவப்பு என்னும் பொருளையுந்தரும், சிவபெருமான் தீயும் சூடும் போலச் சிவமும் சத்தியுமாக விளங்குவர். சிவபெருமானுடைய சத்தி இச்சா சத்தி, கிரியா சத்தி, ஞானசத்தியென மூவிதமாய்த் திகழும். சிவபெருமான் தனது சத்தியைக் கொண்டே படைத்தல் காத்தல் அழித்தல் மறைத்தல் அருளல் என்னும் ஐந்தொழிலையும்

செய்தருளுவர். சிவபெருமானே பரமபதி என்பது வேதம் உபநிடதம் புராணம் இதிகாச முதலிய எல்லாக் கலைகளாலும் உணர்த்தப் பெறுகின்றது. இவ்வுண்மையைச் சதுர்வேத தாற்பரிய சங்கிரகம், இராமாயண தாற்பரிய சங்கிரகம், பாரத தாற்பரியசங்கிரகம் என்னும் நூல்களால் அறியலாம். சிவபிரானைப் பிரமன், விண்டு, உருத்திரன் என்னும் மூவருள் ஒருவரான உருத்திரனென்று சிலர் மயங்குவர். ''மூவரு முப்பத்து மூவருமற்றொழிந்த தேவருங் காணாச் சிவபெருமான்'', ''மூவரு மறிகிலர் யாவர்மற் றறிவார்'' என்பன முதலாகக் கூறப்படும் பிரமாண வாக்கியங்கள் அம் மயக்கத்தைத் தீர்க்கும் மருந்தாகும். அப்பைய தீக்ஷிதர் அருளிச் செய்த சிவதத்துவவிவேகம் என்னும் நூலில் சிவபெருமானது பரத்துவ நிலை வேதோபநிடத முதலிய பிரமாணங்கள் கொண்டு நன்கு விளக்கப்பெற்றிருக்கின்றது. சிவபெருமான் உலகிற்கு அதீதனாகவும், காரணனாகவும், உயிராகவும், உலகமாகவும் நிற்கும் இயல்பினை,

*''உலகினை யிறந்து நின்ற தரனுரு வென்ப தோரார்*
*உலகவ னுருவிற் றோன்றி யொடுங்கிடு மொன்று மோரார்*
*உலகினுக் குயிரு மாகி உலகமாய் நின்ற தோரார்*
*உலகினு ளொருவ னென்ப உருவினை யுணரா ரெல்லாம்''*

எனச் சிவஞான சித்தியார் எவ்வளவு அழகாக எடுத்துரைக்கின்றது பாருங்கள். சிவபெருமான் பெருமை அளவிடற் கரியது.

*''கற்புறு சிந்தை மாதர் கணவரை யன்றி வேறொர்*
*இற்புறத் தவரை நாடார் யாங்களு மின்ப வாழ்வும்*
*தற்பொறி யாக நல்குந் தலைவரின் னலதோர் தெய்வம்*
*பொற்புறக் கருதோங் கண்டாய் பூரணா னந்த வாழ்வே''*

எனத் தாயுமான சுவாமிகள் கூறியருளிய திருவாக்கைச் சைவ மக்கள் கடைப்பிடித்தொழுக வேண்டியது இன்றியமையாததாகும்.

## சைவ அடையாளங்களும் மந்திரமும்

சைவ சமயிகள்அணிய வேண்டிய அடையாளங்களிற் சிறந்தவை இரண்டு. அவை திருநீறும், உருத்திராக்கமுமாம். இவ்வடையாளங்கள் உரிய தத்துவ உண்மைகளை விளக்குவன. திருநீறு சிவபெருமான் சங்கார காரணனாய் விளங்கும் உண்மையினையும், உருத்திராக்கம் அவனது பேரருளையும் விளக்குவனவாகும். இன்னும் பலவுள. சைவத்தில் உயர்ந்ததாகக் கூறப்படும் மந்திரம் பஞ்சாக்ஷரம் அல்லது திருவைந்தெழுத்தென்று சொல்லப்படும். திருவைந்தெழுத்து

முறையே சிவம், சத்தி, ஆன்மா, திரோதம், மலம் என்னும் ஐவகைப் பொருளைக் குறிப்பதாகும். இதன் பெருமையைத் தேவார முதலிய திருமுறைகளிலும் சித்தாந்த சாத்திரங்களிலும் பரக்கக் காணலாம்.

## சிவதீக்கை

தீக்ஷை என்னும் வடசொல் மலத்தைக்கெடுத்து, சிவத்துவத்தை விளக்குதல் என்னும் பொருளைத் தரும். சைவத்திற் கூறப்பட்ட தீக்கைமுறை, வேறு எச்சமயத்தினும் கூறப்படவில்லை. கிரியா சத்தியால் ஞானத்தை உதிக்கச் செய்வதற்குத் தக்க உபாயங்கள் தீக்கையில் விதிக்கப் பெற்றிருக்கின்றன. தீக்கை சமயம், விசேடம், நிருவாணம் என மூவகைப்படும். சைவசமயிகள் அனைவரும் சமய தீக்கையையாவது பெற்றுக் கொள்ள வேண்டும். பாலர்களும் விருத்தரும், பிணியாளரும், மாதரும், பல போகத்தவரும் பெற்றுக் கொள்ளுதற்குரிய எளிய தீக்கை முறைகளும் சைவ சமயத்தில் விதிக்கப் பெற்றிருக்கின்றன. ஏனைச் சமயிகள் எல்லாம் தத்தம் சமயத்தில் விதிக்கப் பெற்றுள்ள சமயப் பிரவேசக் கிரியைகளைக் கைக் கொண்டு வரவும், நம் சமயிகள் மட்டும் வேறு எச்சமயத்திலும் காணப்பெறாத அருமையுடைய தீக்கையைக் கைக்கொள்ளாதிருப்பது வருந்தத் தக்கதாகும்.

## சித்தாந்த முத்தி

சித்தாந்தத்திற் கொள்ளப்படும் முத்தி இருவகைப்படும். அவை பத முத்தி பர முத்தி யென்பனவாம். தாதமார்க்கமாகிய சரியையினை அநுட்டிப்போர் சிவாலோகத்தையும், சற் புத்திரமார்க்கமாகிய கிரியையினை அநுட்டிப்போர் சிவசாமீ பத்தினையும், சகமார்க்கமாகிய யோகத்தை அநுட்டிப்போர் சிவ சாரூபத்தையும் அடைவர். இம்மூன்றும் பதமுத்தியென்று சொல்லப்படும். இனிச் சிவஞானத்தை அநுட்டிப்போர் இறைவனுடைய எண் குணங்களும் தம்மாட்டுப் பதியப் பெற்றுச் சிவசொரூபமாய் விளங்கும் சிவசாயுச்சியப் பேற்றையடைவர். இந்திரலோகம், பிரமலோகம், விண்டுலகம் என்று சொல்லப்படும் உலகங்களை யடைதல் முத்திநிலை யென்று சொல்லத்தக்கதன்று; அவை சொர்க்கங்கள் என்று சொல்லப்படும். ''தொங்கலா னடியார்க்குச் சுவர்க்கங்கள் பொருளலவே'' என்னும் தேவாரத் திருவாக்கும், ''மாலயன் பெறு பதத்தையும் பொருளென மதியேன்'' என்னும் கந்த புராணத் திருவாக்கும் ஈண்டு சிந்திக்கத் தக்கன.

## வேதாந்தத் தெளிவாம் சைவ சித்தாந்தம்

திருமூல நாயனார் திருமந்திரத்தில்

*''வேதமோ டாகமம் மெய்யா மிறைவனூல்*
*ஓதும் பொதுவும் சிறப்பு மென்றுள்ளன*
*நாத னுரையிவை நாடிலிரண் டந்தம்*
*பேதம தென்னிற் பெரியோர்க் கபேதமே''*

எனக் கூறியுள்ளார். இவ்வுண்மை கடைப்பிடிக்காத வைதிக சமயத்தார்கள் வேதத்தைமட்டும் கைக்கொண்டு சிவாகமங்களைக் கைக்கொள்ளாத காரணத்தால் வேதோபநிடதங்களிற் கூறப்படும் உண்மைகளைத் தெள்ளிதின் உணர்ந்துகொள்ளக் கூடாதவர் களாயிருக்கின்றார்கள். அவர்களா லறியப் படாத உண்மைகள் சித்தாந்தத்தில் விளங்க உரைக்கப் பெற்றிருக்கின்றன. ''ஏகம் பிரமம்'' என்னும் ஒரு வாக்கியம் உபநிடதத்திற் காணப்பெறுகின்றது. இவ்வாக்கியத்திற்கு வைதிகர்கள் ''பிரமப் பொருள் ஒன்றைத் தவிர வேறு பொருள்கள் கிடையா'' வென்று ஏகான்மவாதஞ் சாதிப்பா ராயினர். ஏகம் பிரமம் என்னும் வாக்கியத்தின் பொருள் அஃதன்று என்பதை நமது மெய்கண்டசிவம் சிவஞான போதத்தில் ''ஒன்றென்ற தொன்றே காண் ஒன்றே பதி'' அதாவது பிரமங்கள் பல இல்லை, பிரமம் ஒன்றே யுள்ளது என விளக்கியருளினார். இனி ''ஏகமேவாத்வி தீயம் பிரமம்'', ''சிவமத்வைதம் சாந்தம்'' என்பனவாதிய வாக்கியங் களிலுள்ள அத்வைதம் என்னும் சொல்லிலுள்ள அகரத்திற்கு இன்மைப் பொருள்கொண்டு ஏகம் பிரமம் என்ற பொருளிலேயே இதனையும் வழங்குவாராயினர். சிவ ஞானபோதத்தில்,

*''பண்ணையு மோசையும் போலப் பழமதுவும்*
*எண்ணுஞ் சுவையும்போ லெங்குமாம் - அண்ணல்தாள்*
*அத்துவித மாதல் அருமறைக ளொன்றென்னாது*
*அத்துவித மென்றையு மாங்கு''*

என, அதாவது பண்ணும் அதன் ஓசையும், பழமும் அதன் சுவையும் எங்ஙனம் பிரிக்கப்படாத குணகுணிப் பொருள்களாயிருக்கின்றனவோ அவற்றைப்போல இறைவன் உலகுயிர்களை இயக்குதற் பொருட்டு அவற்றொடு பிரிக்கப்படாத நிலையிற் கலந்து நிற்றலே அத்வைத சம்பந்தமென்று விளக்கியிருக்கும் வாய்மை பாராட்டற்குரிய தன்றோ? இது பற்றியே தாயுமான சுவாமிகள் ''பொய்கண்டார் காணாப் புனிதமெனுமத்துவித-மெய்கண்ட நாதனருள் மேவுநாளெந்நாளோ'' என மெய்கண்ட சிவத்தைப் போற்றுவாராயினர். மாதவச் சிவஞான

யோகிகள் சிவஞான போதச் சிற்றுரையிலும், சிவஞான மாபாடியத்திலும் அத்துவித உண்மை பற்றி விரிவாக ஆராய்ச்சி செய்து உண்மைப் பொருளை வெளியிட்டிருக்கின்றார்கள். அவற்றைச் சைவ மக்களுணர்ந்து இன்புறுவாராக. இனிப் ''பிரமாகமம்'', ''சிவோகம்'' எனச் சீவர்கள் தம்மைப் பிரமமாகச், சிவமாகப் பாவிக்க உபநிடதங்களில் விதிக்கப்பெற்றிருக்கின்றது. வைதிகர்கள், சீவர்களெல்லாம் பிரமசொரூபமே யாதலின் தான் பிரமம் என்பதை உணர்ந்து கொள்ளுவதற்காகவே இங்ஙனம் பாவிக்கும்படி விதிக்கப் பெற்றிருக்கின்றதென்று கூறுகின்றார்கள். பிரமம் தன்னையே தான் என்று பாவிப்பதனால் வரும் பயன் யாதுமில்லை. அல்லதூஉம் பாவனையென்னுஞ் சொற்குப் பொருளாமாறுமில்லை. இனி இன்பாவனையின் விசேடத்தை,

*''கண்டவிவை யல்லேனா னென்றகன்று காணாக்*
*கழிபாழு நானல்லே னெனக்கருதிக் கசிந்த*
*தொண்டினொடு முளத்தவன்றா னின்றகலப் பாலே*
*சோகமெனப் பாவிக்கத் தோன்றுவன்வே றின்றி*
*விண்டகலு மலங்களெல்லாங் கருடதியா னத்தால்*
*விடமொழியு மதுபோல விமலதையு மடையும்*
*பண்டைமறை களுமதுநா னானே னென்று*
*பாவிக்கச் சொல்லுவதிப் பாவகத்தைக் காணே''*

எனச் சிவஞானசித்தியார் திருவிருத்தம் சிவோகம் பாவனையி னுண்மையையும், பயனையும் எவ்வளவு தெளிவாக விளக்கி யிருக்கின்றது காண்மின் அன்பர்களே.

## சைவ சமையாசாரியர்கள்

அருமையும் பெருமையும் வாய்ந்த நமது சைவ சமயத்தை வளர்த்தருளிய ஆசாரியர்கள் இருவகையினராவர். அவர் சமயாசாரியர், சந்தானாசாரியர் என்பவராவர். சமயாசாரியர் திருஞானசம்பந்தமூர்த்தி சுவாமிகள், திருநாவுக்கரசு சுவாமிகள், சுந்தரமூர்த்தி சுவாமிகள், மாணிக்கவாசக சுவாமிகள் என்னும் நால்வராவர். இந்நால்வரும் இறைவன் திருவருள் நேரே கைகூடப் பெற்றவர். திருஞான சம்பந்தமூர்த்தி சுவாமிகள் தமிழ்நாடு முற்றிலும் பரவியிருந்த புறச்சமய இருளைக் களைந்து சைவ சமயத்தை நிறுவியருளினார். திருநாவுக்கரசு சுவாமிகள் மாற்றார்கள் தமக்குச் செய்த கொடுமை களை யெல்லாம் வென்று சைவசமயத்தை நிலைநாட்டியருளினார். சுந்தரமூர்த்தி சுவாமிகள் சைவ சமயத்தை நன்கு பாதுகாத்து

அறுபான்மும்மை நாயன்மார் வரலாறுகளைத் திருத்தொண்டத் தொகையால் விளக்கியருளினார். மாணிக்கவாசக சுவாமிகள் புத்தரை வாதில் வென்று சைவ சமயத்தை நிலைநிறுத்தி யருளினார். அன்றியும், திருஞானசம்பந்தமூர்த்தி சுவாமிகள் முதலிய மூவரும் தமிழ் நாடெங்குஞ் சென்று திருத்தலங்களை வழிபட்டு வேதாகம உண்மைகளைத் தேவாரத் திருமுறைகளால் வெளியிட்டருளினார்கள். மாணிக்கவாசக சுவாமிகள் பத்திச்சுவை ததும்பும் திருவாசகத்தையும் திருக்கோவையாரையும் பாடி யருளினார்கள். சைவசித்தாந்த உண்மைகள் திருவாசகத்தில் பொன்னே போல் மிளிர்ந்து கொண்டிருக்கின்றன. இனிச் சந்தானாசாரியர்கள் மெய்கண்ட சிவாசாரியார், அருணந்தி சிவாசாரியார், மறை ஞான சம்பந்த சிவாசாரியார், உமாபதி சிவாசாரியார் என்னும் நால்வராவர். கல்லாலின்புடையமர்ந்த தென்முகக் கடவுள் திருநந்திதேவருக் கருளிச்செய்த ஞான உபதேசத்தைத் திருநந்திதேவர் சனற்குமார முனிவருக்கும், அவர் சத்தியஞான தரிசினியாருக்கும், அவர் பரஞ்சோதி முனிவருக்கும்உபதேசித்தருளினர். பரஞ்சோதி முனிவர் அவ்வுபதேசத்தைத் திருவெண்ணெய் நல்லூரில் எழுந்தருளியிருந்த மெய்கண்ட தேவருக்கருள, அவர் அருணந்திசிவாசாரியாருக்கும் அவர் மறைஞானசம்பந்தருக்கும் அவர் உமாபதி சிவா சாரியாருக்கும் உபதேசித்தருளினார். இங்ஙனம் ஒருவருக்குப் பின் ஒருவர் குருவும் மாணவருமாக வந்த முறைமையால் சந்தானசாரியார் என்று சொல்லப்படுவர். மெண்கண்ட தேவர் சிவஞானபோதம் என்னும் ஒப்புயர்வற்ற நூலையும், அருணந்திசிவாசாரியார் சிவாகமங்களுக் கெல்லாம் உரையாணியாகத் திகழும் சிவஞானசித்தியார், இருபாவிருபஃது என்னும் இரு நூல்களையும், உமாபதி சிவாசாரியார் சிவப்பிரகாச முதலிய எட்டு நூல்களையும் செய்தருளினர். இந்நூல்களெல்லாம் சைவசித்தாந்த உண்மைகளைத் தெள்ளிதின் விளக்கும் நிலையங்களாகவுள்ளன.

## வேண்டுதல்

அன்பர்களே, நமது சைவசமயத்தின் பெருமைகளையும், முறைமைகளையும் ஒருவாறு உங்கள் திருமுன் தெரிவித்தேன். நமது சமயம் குருட்டு நம்பிக்கையுடைய கொள்கைகளையாவது, வெறும் புராணக் கதைகளையாவது போதிப்பது அல்ல. அதன் ஒவ்வொரு கொள்கையும் அளவைப் பிரமாணங்கட்கு ஒத்ததே. மேலை நாட்டாரால் புதிது புதிதாக நுணுகி ஆராய்ந்து உரைக்கப் பெறும் தத்துவ உண்மைகளை யெல்லாம் சைவசித்தாந்த சாத்திரங்களிற்

கண்டறியலாம். சைவ சமயம் விரிந்த கொள்கைகளையுடைய தென்பது, நாத்திக சமயத்தையும் ஒதுக்கித் தள்ளாது அதனையும் தன்னை யடைவதற்கு முதற்படியாகக் கொள்ளுவதால் நன்கு விளங்கும். விண்ணவர் இந்திரன் பிரமன் முதலிய தேவர்களும், அகத்தியர் முதலிய முனிபுங்கவர்களும், பிற்காலத்துப் பட்டினத்தார் முதலிய ஆன்றோர்களும் சைவ சமயத்தையே கைக்கொண்டொழுகி யுள்ளார்கள். நமது தமிழ் வேந்தர்கள் சைவ சமயத்தை வளர்ப்பதற்குக் கோடி கோடியாகப் பொருட்செலவு செய்து சிவாலயங்களையும், சைவ மடாலயங்களையும் நிறுவியிருக்கின்றார்கள். சைவ சமயத்தில் சாதி குலம் பிறப்பென்னும் தடஞ்சுழியில்லையென்பது அறுபான் மும்மை நாயன்மார் சரித்திரங்களால் நன்கு விளங்கும்.

நமது சைவ சமயத்தில், ஆண்மக்கட்கு எவ்வளவு உரிமை களுண்டோ அவ்வளவு உரிமைகளும் பெண்மக்கட்குமுண்டு. நாம் தொழும் தெய்வங்களாக மங்கையர்க்கரசியார், திலகவதியார், காரைக்காலம்மையார் முதலிய பெண்பாலர் நமது சமயத்திற் போற்றப்படுகின்றனரன்றோ? ஆதலின் நமது சைவ மங்கையர்கள் சைவத்தை வளர்ப்பதற்கு வேண்டும் துணைபுரிதல் வேண்டும். இனி, இளைஞர்களுக்கும் நமது சமயத்தில் பங்குண்டு. திருஞானசம்பந்தர், சுந்தரமூர்த்திகள், மெய்கண்ட தேவர் முதலியோர் இளைஞர் களன்றோ? அவர்கள் நமது சைவ சமயத்திற்குச் செய்த தொண்டு களைச், சைவ இளைஞர்களே! நோக்குங்கள். நீங்கள் தற்காலத்தில் முனைந்து செய்யும் பல தொண்டுகளுள்ளும் உயிர்க் குறுதி பயக்கும் சமயத் தொண்டினைத் தலைமையாகக் கொண்டு உங்கள் சைவ சமயத்தைப் போற்றுங்கள்.

இனி, இக்காலத்தில் நமது சமய மக்களின் நிலை மிகப் பரிதபிக்கத் தக்கதாயிருக்கிறது. ஒருவர் நுமது சமயம் யாதென்றால் இந்துசமயம் என்று சொல்வார்களே யல்லாமல் சைவசமயம் என்று சொல்ல அறியார்கள். நமது சமயக்கடவுளர் பெயரோ, ஆசாரியர்கள் பெயரோ, சாத்திரங்களின் பெயரோ சொல்ல அறியார்கள். என்னே பரிதாபம்!

சைவ அன்பர்களே,

உங்கள்பால் அடியேன் சிறு விண்ணப்பம் ஒன்று செய்து கொள்ளுகின்றேன். உங்கட்குப் பிறப்புரிமையுடைய சைவ சமயத்தைப் போற்றுங்கள். உத்தியோகத் துறையினின்றும் திரும்பிய பின் கிளப்புகளிலோ, பந்தடி மேடையிலோ, சினிமாவிலோ கழிக்கும் நேரத்தில் ஒரு சிறுகூறு சைவ நூல்களைப் படிப்பதற்கு என்று ஒதுக்கி

வைத்துக் கொண்டு இயன்றதொரு நூலைப் படியுங்கள். நமது ஆண்டவனாகிய சிவபெருமானை ஒரு கணமாவது சிந்தியுங்கள். திருநீறு உருத்திராக்க முதலிய சிவசின்னங்களைக் கூசாது அணியுங்கள். அங்ஙனம் அணிவோரையும் சமயாசாரங்களில் ஒழுகுவோரையும் இகழாதீர்கள். உங்கள் சமயத்தைப் பிறர் இகழ்வாராயின் அதனைச் செவியில் கேளாதீர்கள். இயன்றவரை ஒழுங்கான முறையில் சைவ சமயத்தை வளர்க்க இயலுமோ அவ்வவ் வழிகளிலெல்லாம் வளருங்கள். உங்கள் சமயங்களைப் பிறசமயிகள் கொள்ளை கொள்வதைத் தடுக்க முந்துங்கள். இங்ஙனமெல்லாம் செய்வீர்களாயின் ஆண்டவன் உங்கட்கு எல்லா நலன்களையும் தந்தருளுவான்.

## முடிவுரை

பெரியோர்களே,

உங்கள் திருமுன்பு தலைமைக்குரிய கடப்பாட்டை நிறைவேற்றுவான் என் சிற்றறிவுக்கு எட்டிய அளவில் பதினொரு பொருள்களைப் பற்றிப் பேசியிருக்கின்றேன். நான் முன்னரே விண்ணப்பித்துக் கொண்டபடி அவற்றிலுள்ள குற்றங்களை நீக்கிக் குணமுளவேல் அவற்றை மட்டும் ஏற்றுக்கொள்ள வேண்டுகிறேன். நமது சமயம் அதன் சிறப்புக்கேற்பச் சமய அரசாய்த் திகழும்படி செய்ய வேண்டியது சமாஜத்தையும் உங்களைப்போன்ற மெய்யன்பர்களையும் பொறுத்த கடமையாயிருக்கின்றது. நமது சமய நூல்களும் பெரும்பாலும் தென்றமிழ் மொழியிலேயே அமைந்திருக்கின்றன. வடமொழி நூல்களாகிய சிவாகம முதலியவைகளும் கிரந்த லிபியில் இருப்பதால் வடநாட்டார் அவற்றின் உண்மைகளைத் தெரிந்து கொள்ள முடியவில்லை. நம் தமிழ்நாட்டின் அண்மையிலுள்ள தெலுங்கு, மலையாளம், கன்னட முதலிய நாடுகளிலுள்ளவர்கட்குங்கூட நமது சமய உண்மையோ, சரித்திரங்களோ தெரிவதில்லை. காலஞ்சென்ற பெரியார்களாகிய ஜே.எம். நல்லசாமிப் பிள்ளையவர்களும், முதலியார் சபாரத்தினம் அவர்களும் சிவஞானபோதம், சித்தியார், திருவருட்பயன் முதலிய நூல்களையும் சித்தாந்த உண்மைகளை விளக்கும் நூல்களையும் முறையே ஆங்கிலத்தில் வெளியிட்டுள்ளார்கள். இப்பொழுது ஆங்கில மொழி உலகமெல்லாம் பரவியிருப்பதால் ஆங்கிலத்தில் நமது சமய உண்மைகளை வெளியிடுவோமானால் உலகமெல்லாம் அது பரவுதற்கு ஏதுவாயிருக்கும். நமது சமாஜம் சைவ சாத்திரங்களையும்,

திருமுறைகளையும் அச்சிட்டு அடக்க விலைக்குத் தமிழ் நாடெங்கும் பரவச் செய்த நன்றிக்குச் சைவ உலகமும் தமிழ் உலகமும் என்றும் மறவா நன்றி செலுத்தக் கடமைப்பட்டிருக்கின்றன. இனி வரும் ஆண்டில் ஆங்கிலத்தில் நமது சமய உண்மைகளை வெளியிட வேண்டிய திருத்தொண்டை நமது சமாஜம் கைக்கொள்ள வேண்டுகிறேன்.

சைவசித்தாந்தமும் ஆங்கிலமும் நன்குணர்ந்த திருவாளர்கள் ம. பாலசுப்பிரமணிய முதலியாரவர்கள், ச. சச்சிதானந்தம் பிள்ளை யவர்கள் போன்ற பெரியார்கள் பலர் சமாஜ முக்கிய உறுப்பினர்களாக விருப்பதால் அவர்களெல்லாரும் அவ் வேலையை எளிதில் செய்யக்கூடும். எல்லாச் சைவமக்களும் சமாஜத்திற்கு வேண்டும் துணைபுரிவார்களாக.

பெரியோர்களே,

இதுகாறும் என் புன்மொழிகளைச் செவிமடுத்த உங்களனை வருக்கும், தலைமைப் பதவியை எனக்கு அளித்த சமாஜத்தார்கட்கும் என் முழுநன்றியையும் செலுத்துவதுடன், என்னை யாட் கொண்ட திருஞானசம்பந்தப் பெருமான் திருவடிகளையும், எல்லாவற்றிற்கும் நிமித்த காரணமாயிருந்து முடித்து வைக்கும் எல்லாம் வல்ல கச்சியேகம்பப் பெருமான் கழலிணைகளையும் முப்போதும் இறைஞ்சுகின்றேன்.

*"என்று மின்பம் பெருகு மியல்பினால்*
*ஒன்று காதலித் துள்ளமு மோங்கிட*
*மன்று ளாரடி யாரவர் வான்புகழ்*
*நின்ற தெங்கும் நிலவி யுலகெலாம்"*

திருச்சிற்றம்பலம்

சுருக்க வரைவு : திரு G. கலியாணம் B.A. Dip. Econ

# ஸ்ரீலஸ்ரீ ஞானியார் சுவாமிகள்

(32ஆம் ஆண்டு - 1937 - திருப்பாதிரிப்புலியூர் - சைவர் மாநாடு)

*வான்முகில் வழாது பெய்க மலிவளம் சுரக்க மன்னன்*
*கோன்முறை யரசு செய்க குறைவிலா துயிர்கள் வாழ்க*
*நான்மறை யறங்க ளோங்க நற்றவம் வேள்வி மல்க*
*மேன்மைகொள் சைவ நீதி விளங்குக உலக மெல்லாம்.*

மெய்யன்பர்களே!

சைவ சித்தாந்த மகாசமாஜத்தின் 32ஆம் ஆண்டு நிறைவு விழா இன்பத்தை அனுபவிக்க நாம் எல்லோரும் இங்குக் கூடியிருக்கிறோம். 1913ஆம் ஆண்டு டிசம்பர் மாதத்தில் நடந்த ஆண்டு விழாவில் அடியேனை இந்த இடத்தில் நிறுத்தினீர்கள். இப்பொழுதும் இந்நிலையில் இருக்கச் செய்தீர்கள். இதற்குக் காரணம் உங்கள் அன்பே. அன்பு காரணம் என்று மாத்திரம் சொல்லிவிடலாமா? அன்பு மட்டுமல்ல; இறைவன் திருவருளும் துணை செய்தது. ஆண்டவன் அருளும், அன்பர்கள் அன்பும் சேர்ந்த விடத்தே நற்செயல் நடைபெறும். இவ்விரண்டும் கூடிய விடத்து அடியேன் அடங்கித்தானே யாக வேண்டும்! நாம் இங்கே சைவசித்தாந்தம் பேசுகிறோம்; கேட்கிறோம். நாம் என்றால் உடலா? கேட்கும் சக்தி அறிவிற்கிருந்தாலும் அது ஒரு கருவி கொண்டே கேட்க வேண்டும். சரீரமில்லையானால் நாம் கேட்கத் தகுந்தவர்கள் அல்ல. அறிவற்ற உடல் ஒன்றும் செய்யாது. அல்லது சரீரமில்லாத காலத்தில் உயிர் ஒன்றும் செய்ய இயலாது. அரசன் மந்திரியுடையவனானால் குடிகளுக்கு நன்மை செய்ய முடியும். மந்திரி முதலியோர் இல்லையேல் அரசன் என்செய வல்லான்! ''அமைச்சர சேய்ப்ப நின்றஞ் சவத்தைத்தே'' என்று கூறும் சிவஞான போதம். ஆராய்ச்சியினால் நன்று என்று புலப்படும் விஷயங்களைப் பற்றிப்

பேசவும், கேட்கவும் ஆவல் கொள்ள வேண்டும். கண்ணினால் பார்ப்பதைவிடக் கேட்பது மேலானது. கேட்டதை ஆராய்ந்தறிவது அதனினும் உயர்ந்தது. நமக்குள் இருக்கும் மனம் புத்தி இவைகள் சடவஸ்துக்கள். புத்தி கண்ணாடி போன்றது. அதற்குச் சுயமான செய்கை கிடையாது. புத்தி அறிவுடன் சேர்ந்த பொழுதே அறிவின் செயல் பிரதிபிம்பிக்கிறது. அறிவு சேர்ந்தால்தான் புத்தி தன் வேலையைச் செய்ய ஆரம்பிக்கிறது. அறிவில்லாமல் உறுப்புகள் தங்கள் வேலையைச் செய்து பார்த்தால் ஒன்றுமே குணப்படாது.

அன்பர்களே! பொருள்கள் மூன்று வகையன. அவை மானிடர் களாகிய யாம், நாம் பார்க்கக்கூடிய பொருள்கள், ஆராய்ச்சியால் அடையக்கூடிய பொருள்கள் என்பன. கண்ணால் பார்க்கக்கூடிய பொருள்கள் அறியுந் தன்மையுடையன. உயிரிடத்திலிருக்கும் உயர்ந்த பொருளை ஆராய்வதே அருமையாகும். உலகத்தில் காணப்படுபவைகளை ஐம்புலன்களால் இழுத்து அறிவு முதலியவை களைக் கொண்டு ஆராய வேண்டும். "மாற்றம் மனம் கழிய நின்ற மறையோன்" என்ற திருவாசக அடியைக் கவனிக்க வேண்டும். அடியேன் உங்களைப் பார்க்கவில்லை. உங்கள் உடலைப் பார்க் கிறேன். அழிவதையே அடியேன் நோக்குகின்றேன். உயிரையே பார்க்க முடியாதென்றால், உயிர்க்குயிரான கடவுளைக் காணுதல் எளிதோ! எக்காலத்தும் யாரும் பார்க்க முடியாதென்றால் அது சூனியமாகும். எக்காலத்தும் யாவரும் பார்க்கக்கூடிய நிலையான பொருள் கடவுள் என்பதை ஞானசம்பந்தர் காட்டினார். அவர் பார்ப்பார்; மற்றவர்க்கும் காட்டுவார். தன்னையறிந்தால் அல்லது உலகத்தை யறிந்தால் மாத்திரம் ஞானமாகாது. மறைந்து கிடக்கும் பரவஸ்துவைக் காணுவதே ஞானம். கடவுளை நாம் காணலாம்; தொடலாம்; ஆராயலாம். ஆராய்வதற்குச் சாதனங்கள் என்ன? ஒருவன் தலையில் நெருப்புப் பிடித்துக் கொண்டால், எந்தத் தண்ணீர் என்றும் பாராமல் உடனே ஊற்றிக் கொள்வதுபோல், ஆராய்ச்சி செய்யுங்கால், தான் கொண்ட எண்ணம் ஈடேறும் வரை அதைத் தேடியடைய வேண்டும். ஆண்டவனை அலைந்து திரிந்து, தேடித்தேடி, ஏங்கி ஏங்கி அமுதாற் பெறலாம். திருவுந்தியாரில்,

*"உள்ள முருகி னுடனாவ ரல்லது*
*தெள்ள வரியரென் றுந்தீபற*
*சிற்பரச் செல்வரென் றுந்தீபற"*

என்று கூறியிருப்பது காண்க. ஆனந்த வெள்ளம் உள்ளேயிருக்கிறது. 'வெள்ளத்தின் நடுவே யிருந்தும் நீர் பருகாது தாகத்தால் நாவானது உலர்ந்து போனாற்போல உன் அருட் பெருக்கைப் பெற்றும் துயரத் தினின்றும் நீங்குதற்கு ஆற்றலில்லாத என்னைக் கைவிட்டிடாதே' என்ற பொருள்பட மணிவாசகர் நீத்தல் விண்ணப்பத்தில் ஒரு செய்யுளை அருளியிருக்கிறார். ஆதலின் அன்பர்களே! அறிவுமயமான ஆனந்த வடிவமான ஒன்றை அறிய வேண்டும். அதுவே சிவம். அன்பு ததும்பியிருப்பதற்கு இரங்குவன் அன்பு வடிவான ஆண்டவன். "சிவனென யானுந் தேறினன் காண்க" என்பர் மணிவாசனார். "சிவனென்னு நாமம் தனக்கேயுடைய செம்மேனி யெம்மான்" என்பர் அப்பரடிகளும். உயிர்க்கு எல்லாம் அறியுந்தன்மை வரும். ஆனால் எல்லாம் செய்யும் வல்லமை வரவே வராது. சிவத்தின் சம்பந்தமே சைவம். அனாதியாக எல்லாம் அறிந்த, எல்லாம் செயவல்ல, என்றும் உள்ள வஸ்து சிவபெருமான். என்றைக்கும் சைவ சித்தாந்தம் உண்டு. சிலரால் வெளிப்படுத்திய பொழுது நான் ஆரம்பித்தது என்று கொள்ள வேண்டாம். சிவஞான போதத்தில் 'சிவமென்னும் அந்ததர' என்று கூறப்பட்டிருக்கிறது. அந்தம் என்பது பேதாந்தம். அதாவது அறிவு நூல் முடிபு என்பது பொருள். தரம் என்றால் மேலானது; அதாவது அதைவிட மேலில்லை. 'அந்ததர' என்றால் வேதாந்தத்தின் முடிவாக உள்ள சித்தாந்தியே. உபநிஷத் என்றால் பரம்பொருளின் சமீபத்தில் கொண்டுபோய் வைப்பது என்பது பொருள். அறிவு நூல் முடிவாக உள்ளதுவே சித்தாந்தம். சித்தியாரில் "சிவாகமங்கள் சித்தாந்தமாகும்". ஆகமம் என்றால் ஆப்தர்களிடமிருந்து வரும் நல்ல மொழி. ஆகமம் என்று மாத்திரம் சொல்லாமல் சிவ ஆகமம் என்று கூறியது அனாதியான ஒருவனுடைய வாயிலிருந்து வருவது என்பதைக் குறிக்கவே, வேதாந்தத் தெளிவே சித்தாந்தம் என்பது. வேதாந்தம், சித்தாந்தம் இரண்டும் ஒன்றுதான்; வேறல்ல. சிவப்பிரகாசத்தில் "வேதாந்தத் தெளிவாம் சைவ சித்தாந்தத் திறன்" என்று கூறப்பட்டிருக்கிறது. சிவநேசச் செல்வர்களே! சிவம் என்பதைப்பற்றி முதல், வழி, சார்பு நூல்களான சிவஞானபோதம், சித்தியார், சிவப்பிரகாசம் என்ற நூல்களைக் கொண்டு சொன்னேன். இனிச் சித்தாந்தம் என்பதுபற்றி ஒரு சிறிது கூறுவேன்.

சித்தாந்தம் என்பது சித்த + அந்தம் என்ற இரண்டும் சேர்ந்த சொற்றொடர். 'சித்த' என்பதன் முடிவில் 'அ' இருக்கிறது. இவ்விரண்டும் உயிர்கள். உயிர் உயிருடன் சேர்வதில்லை. மயிலும் சேவலுமாக இரண்டு உயிர் சேர்ந்து சண்முகப் பெருமானிடத்திலேயே இருக்கிறது. வேறு எங்கும் இல்லை. 'சித்' என்றால் 'கிடைத்த' என்று

பொருள். பல நூல்களில் ஆராய்ந்து முடிவாகக் கிடைத்த முடிபே சித்தாந்தம். 'அறிதோறறியாமை கண்டாற்றல்' என்று திருவள்ளுவர் படிக்கப் படிக்க அறியாமை வருகிறதென்கிறார். ஆசாரியன் ஆண்டவன் அருளைக்கொண்டு நமக்குக் கொடுக்கும் முடிபு. எல்லா முடிபுகளும் அதில் இருக்க வேண்டும். வேறு முடிபுகளை விரோதிக்கக்கூடாது. எந்த மத ஆசாரத்திற்கும் விரோதம் கூடாது. சித்தாந்தம் என்ற பதத்திற்கு சக்தி, இலக்ஷணம், தொனி என்ற மூன்று உண்டு. ஆற்றல், ஆகுபெயர், பிறகுறிப்பு என்று தமிழால் சொல்லப்படுகிறது. எல்லா முடிபுகளுக்கும் சித்தாந்தம் என்று சொன்னாலும் சைவ சித்தாந்தத்திற்கே சிறப்பாகக் கொள்ளப்படுகிறது. சித்தாந்தத்தில் ஆத்மதத்துவம் 24, வித்தியா தத்துவம் 7, சிவதத்துவம் 5 ஆக 36 தத்துவங்கள் இருக்கின்றன. தனித்தனியே 36 தத்துவங் களைச் சொன்ன வேறு சமயங்கள் இருப்பதாக அடியேனுக்குத் தெரியவில்லை. எல்லாச் சமயங்களும் சைவ சமயத்தில் அடங்கி இருக்கின்றன. ''இராஜாங்கத் தமர்ந்தது வைதிக சைவம்'' என்று கூறியிருப்பது காண்க. எல்லாத் தத்துவங்களையும் தன்னகத்தே அடக்கிக் கொண்டிருப்பது சைவ சித்தாந்தம். அது சிறிய குறுகிய வழியில் செல்வதல்ல. 'சித்தாந்த வீதி வரும் தேவே பராபரமே' என்றார் தாயுமானாரும். ''விரிவிலா அறிவினார்கள் வேறொரு சமயஞ் செய்து எரிவினாற் சொன்னாரேனும் எம்பிராற்கேற்ற தாகும்'' என்ற அப்பர் சுவாமிகள் திருவாக்கு நோக்கற்பாலது. சிவஞான சுவாமிகளும், ''எவ்வெவர் கோட்படு பொருளும் அஞ்செழுத்தி லடக்கி'' என்று கூறியிருக்கின்றனர். நாஸ்திகம் முதலான எல்லா மதங்களுமே இச் சைவ சமயத்தி லடங்கியிருக்கின்றன. ஜைன அர்ச்சனையில் 'சிவாய நம' என்று சொல்லப்படுகிறது. 'சிவகதி' என்பது அவர்கள் மோட்சம்.

(சுவாமிகள் அத்வைதத்தின் உண்மைப் பொருளை விரிவாக எடுத்துரைத்து விளக்கினார்கள்)

மெய்யன்பர்களே! இதுகாறும் வெளியிற் காணப்படும் பொருள்கள் தாழ்ந்தனவென்றும், அழியுந் தன்மைத்தென்றும், இதற்கெல்லாம் அப்பாற்பட்ட மேற்பொருள் ஒன்று உண்டென்றும், அதை நாம் ஆராய வேண்டும் என்றும், ஆராய்ந்து பெற வேண்டும் என்றும், அழுதே பெற முடியும் என்றும், அன்பு முடிவாக அழ உள்ளே உள்ள வெள்ளப் பெருக்கு வெளிப்படும் பரவஸ்து தோன்றும் என்றும், அதுவே இடையில் வராத அனாதியான சிவம் என்றும் சாஸ்திர, ஆசாரிய, ஈஸ்வர அருளால் கிடைப்பது சைவ சித்தாந்தம் என்றும்,

அதில் எல்லாச் சமயங்களுமே அடங்கியிருக்கின்றன என்றும் கண்டோம்.

மெய்யன்பர்களே! சைவ சித்தாந்தம் என்பதுபற்றி அடியேன் பேசினேன்; நீங்கள் கேட்டீர்கள். அடியேனைப் பேசுவித்தவன், உங்களைக் கேட்பித்தவன் நம்முடைய ஆண்டவனல்லவா? அவனுக்கு நாம் நன்றி செலுத்துதல் வேண்டாமா? என்ன நன்றி செய்யப் போகிறோம்? அவனைத் தியானிப்போம்; துதிப்போமாக.

*''உருவாய் அருவாய் உளதாய் இலதாய்*
*மருவாய் மலராய் மணியாய் ஒளியாய்க்*
*கருவாய் உயிராய்க் கதியாய் விதியாய்க்*
*குருவாய் வருவாய் அருள்வாய் குகனே''*

# திரு. C.K. சுப்பிரமணிய முதலியார்

(34ஆம் ஆண்டு விழா - 1939 - குன்றக்குடி - சைவர் மாநாடு)

*''மனத்தகத்தான் தலைமேலான் வாக்கி னுள்ளான்*
*வாயாரத் தன்னடியே பாடுந் தொண்டர்*
*இனத்தகத்தா னிமையவர்தஞ் சிரத்தின் மேலான்*
*ஏழண்டத் தப்பாலா னிப்பாற் செம்பொற்*
*புனத்தகத்தா னறுங்கொன்றைப் போதி னுள்ளான்*
*பொருப்பிடையா னெருப்பிடையான் காற்றி னுள்ளான்*
*கனத்தகத்தான் கயிலாயத் துச்சி யுள்ளான்*
*காளத்தியா னவனென் கண்ணு ளானே''*

*''பூழியர்கோன் வெப்பொழித்த புகலியர்கோன் கழல்போற்றி;*
*ஆழிமிசைக் கன்மிதப்பி லணைந்தபிரா னடிபோற்றி;*
*வாழிதிரு நாவலூர் வன்றொண்டர் பதம்போற்றி;*
*ஊழிமலி திருவாத வூரர்திருத் தாள்போற்றி''*

*''தில்லைவா ழந்தணரே முதலாகச் சீர்படைத்த*
*தொல்லையதாந் திருந்தொண்டத் தொகையடியார் பதம்போற்றி*
*ஒல்லையவர் புராணகதை யுலகறிய விரித்துரைத்த*
*செவ்வமலி குன்றத்தூர் சேக்கிழா ரடிபோற்றி''*

திருச்சிற்றம்பலம்

அன்புடையீர்களே! அம்மைமீர்களே! ஐயன்மீர்களே! உங்களுக்கு என் வணக்கம் உரித்தாகுக.

என்னை இந்த மாபெருந் திருவிழாக் கூட்டத்திற்றலைமை பூணும்படி செய்த உங்கள் பெருந் தன்மைக்கு நன்றி செலுத்து கின்றேன். சென்ற ஆடி மாதத்தில் திருவஞ்சைக்களத்தில் வைத்து உங்கள் அமைச்சர் திரு. எம். பாலசுப்பிரமணிய முதலியார் அவர்கள் இது பற்றி என்னிடம் அறிவித்தபோது உண்மையில் நான் மிகத் தயங்கினேன். பல்லாற்றானும் எனது தகுதியின்மையை எடுத்துச் சொல்லி வேறு தக்கார் ஒருவரைத் தேர்ந்து கொள்ளும்படியும் அவர்களிடம் வேண்டினேன். ஆயினும் அவர்கள் தாங் கருதி

யதனையே சாதித்துக் கொங்குநாட்டின் ஒரு மூலையிலிருந்த என்னை உங்கள் முன்னர்க் கொண்டு வந்து முற்றத்தில் இழுத்துவிட்டனர்; அவர் பெரியர். உங்கள் முன்னால் இப்போது நான் நிற்கின்றதனுக்கு நான் காரணனன்று. அவர்களுடைய பெருமையும் உங்களுடைய அன்புமே காரணம். ஆதலின் எனது தகுதியின்மைபற்றி என்னை நீங்கள் இகழாது ஏற்றுக்கொள்வீர்கள் என்பது திண்ணம். உங்களது தூய எண்ணத்தினாலே என்னை ஒருவாற்றால் தகுதிபெற்றவனாக ஆக்கியும் வைப்பீர்கள். பழைய நினைவுகளிற் காணும்போது உங்கள் நாட்டிற்கு நான் புதியவனன்று. தேவகோட்டைச் சிவாகம சங்க விழாவில் ஒருமுறையும், மேலைச் சிவபுரிச் சன்மார்க்க சங்க விழாவில் ஒருமுறையும், தலைவனாக இருக்கச் செய்து என்னை இதுபோலவே ஏற்று உங்கள் அன்பினை அளித்தீர்கள். ஆயினும் சைவ சித்தாந்த மகா சமாஜத்தார்கள் என்னை நினைவிற் கொண்டதற்குச் சென்ற ஆண்டு விழாவில் எங்கள் நாட்டிற் செய்த திருத் தொண்டில் அடியேனும் கலந்து கொண்டு செய்த சிறு தொண்டும் ஒரு காரணமாயிருக்கலாமென்று நினைக்கின்றேன்.

*"அன்பர்பணி செய்யவென்னை யாளாக்கி விட்டுவிட்டால்*
*இன்பநிலை தானேவந் தெய்தும் பராபரமே"*

என்ற பெரியோரது உண்மைத் திருவாக்கின்படியே சென்ற ஆண்டிற் செய்த அடியார் பணி இந்த ஆண்டில் இந்தப் பேரவையினைக் கண்டு களித்துப் பயனடையும் பேற்றினைத் தேடித் தந்தது என்று கொள்கின்றேன். இந்த மூன்று நாளினும் பல பேரறிஞர்கள் எடுத்துச் சொல்லும் நல்லுரைகள் பலவற்றையும் ஒன்றுவிடாமல் உடனமர்ந்து கேட்டுப் பயனடையுமாறு என்னைப் பணித்ததனுக்கு நான் செய்யத் தக்க கைமாறு என்னவுள்ளது?

"பாண்டிநாடே பழம்பதியாகவும்" எனவும், "தண்ணார் தமிழளிக் குந் தண் பாண்டிநாடு" எனவும், "காதலவர்க், கன்பாண்டுமீளா வருள்புரிவா னாடென்றுந், தென் பாண்டி நாடே தெளி" எனவும் மணிவாசகப் பெருமானால் பாடப்பெற்ற இத்திருநாடு என்னையும் சைவத் திருத்தொண்டில் ஈடுபடுத்தி வைத்தல் முறைதானே? ஆதலின் இத்திரு நாட்டினையும் இதில் வாழும் பேறு பெற்ற உங்களையும் காண என் மனம் பெரிதும் மகிழ்கின்றது.

நீங்கள் வாசித்த வரவேற்புப் பத்திரத்தில் என்னைப் பற்றியும் சைவத்திறத்திலும் தமிழிலும் எனது சிறு முயற்சிகளைப் பற்றியும் பாராட்டிப் பேசியுள்ளீர்கள். எனது சிறு முயற்சிகள் பெரிய பயன் தரும்படிக்கு நீங்கள் அன்பு கனிந்து கூறிய ஆசி மொழிகளாகவே

அவற்றைநான் கொள்வேன். ஆயின் என்னிடமிருந்து இந்த மூன்று நாட்களில் நீங்கள் ஏதேனும் செவிச் செல்வமாகிய பெரும் பொருள் எதிர்பார்த்திருப்பீர்களாகில் ஏமாற்றமடைவீர்கள். அவ்வாறு ஏமாற்ற மடையாமலிருக்கும்படி உங்களை எச்சரிக்க எண்ணுகிறேன். தலைவர் முன்னுரை என்று நிகழ்ச்சி முறையிற் கண்டிருப்பது பொய்போகா வண்ணம் சில வார்த்தைகளை மட்டும் பேசி, இனி வரும் பேரறிஞர் களின் பெரும் பேச்சுக்கும் உங்களுக்கு மிடையில் இடையூறாக நில்லாமல் என திடத்தில் உட்கார்ந்து கொள்வேன்.

## சமய நிலையும் சமய நிலையும்

சமயநிலை : சமயம் என்ற சொல்லுக்கு நன்றாகச் செய்யப்பட்டது என்று பொருள் கூறுவர். ''சைவமுத லாமளவில் சமயமும் வகுத்துமேற் சமயங் கடந்த மோன சமரசம் வகுத்த நீ'' என்றருளினர் தாயுமான சுவாமிகள். இதனாலே சமயங்கள் பற்பல திறப்படும் என்பதும் அவற்றுள்ளே சைவம் முதன்மை பெற்றது என்பதும் அறியப்படும். ''பூதக்கூட்டமாகிய உடம்பின் உண்டாகும் உணர்வே ஆன்மா; பூதக்கூட்டத்தின் மிகுதி குறைவே கன்மம்; பூதமே தெய்வம். இந்த உடம்பால் அனுபவிக்கப்படும் உண்ணுதல், உடுத்தல், உறங்குதல் முதலிய இன்பங்களே முத்தி. இதுவன்றி உடம்பிற்கு வேறாய் உயிர் என்பதொரு பொருள் இல்லை. மறுபிறவியில்லை. இவ்வுடம்பாற் செய்யப்படும் கன்மங்கள் செய்தவனையே பின்னாற் சென்று சேரும் என்பது பொய். கன்மங்களை ஊட்டுவிக்கும் தெய்வ மென்பதில்லை. சுவர்க்க நகரங்களில்லை. இவ்வுலக இன்பந்தவிர இதனின் வேறாய் முத்தி யென்பதும் இல்லை'' என்று கொள்வது ஒரு கொள்கையும் உண்டு. இந்தக் கொள்கையில் அடிவைத்து இதனினின்றும் சிறிது மேலே சென்று, காணப்பட்ட உடம்பிற்குள்ளே காணப்படாது அதற்கு வேறாய் உயிர் என்றதொரு பொருள் உண்டு போலும் என்ற விசாரணை தொடங்கும். அங்குச் சமயநிலை தொடங்குகிறது. ''நித்தலுமே, பூசி முடித்துண்டுடுத்துப் பூங்குழலார் தங்கலவி, யாசைதனிற் பட்டின்ப வார்கலிக்குள்-நேசமுற, நின்று திளைக்கு மிதுமுத்தியல்லதுவே, றொன்று திளைக்கு மதுமுத்தி- யன்றென், றிலகா விருளலகை போலிகலே பேசு, முலகா யதன்பா லுறாதே'' என்று ஆரம்பத்தில் எச்சரித்து விடுகிறது நெஞ்சுவிடு தூது. இதினின்றும் மேற்செல்லச் செல்லப் பல சமயவாதிகள் தோன்றி மக்கள் மனதைப் பல கோணை வழிகளிலும் இழுப்பர். அவை பற்றியே ''சாவிபோ மற்றச் சமயங்கள் புக்குநின், றாவி யறாதேயென் றுந்தீபற; அவ்வுரை கேளாதே யுந்தீபற'' என்று வழிகாட்டிச் சென்றது

திருவுந்தியார். மேற்சொல்லியபடி தொடங்கிய சமயநிலையானது அவ்வச்சமயங்கள் தோறும் படிப்படியாய் மேலேறிச் சென்று முடிவிலே சைவசமயத்தின் உயர்ந்த கொள்கைகளிற் போய் நிற்கிறது. அதன்மேற் சமயங் கடந்த மோன சமரசத்தில் முடிவடைகின்றது. "உடம்பிற்கு வேறாய் உயிரில்லை; கன்மமில்லை; கடவுளில்லை" என்றெல்லாம் மேற்சொல்லியபடி தொடங்கிய சமய விசாரணை முடிவில் "கடவுள் ஒருவர் உண்டு" உயிர்கள் உண்டு; அவை எண்ணிறந்தன; அவை பாசத்தாற் கட்டுப்பட்டன; ஆதலால் கருணையுடைய கடவுள் அவ்வுயிர்களுக்கு உடம்பைக் கொடுத்துப் பிறப்பிக்கிறார்; உலகில் வாழவைக்கிறார்; இறக்க வைக்கிறார்; அறிவைக் கொடுக்கிறார்; உண்மையறிவதற்குப் பலநூல்களையும் நெறிகளையும் கொடுக்கிறார். இவற்றின் துணையால் உயிர்கள் தமது கருமங்களை அநுபவித்துக் கழிக்கும்படி செய்கிறார்; குருவினிடமாக நின்று உண்மைகளை உணரச் செய்கிறார். உண்மை நூல்களையும் திருநீறு, கண்டிகை, திருவைந்தெழுத்து முதலிய சிவ சாதனங் களையுங் கொடுத்துப் பாசவலிமையை நீக்குகிறார்; தம்போலாகச் செய்து திருவடி சேர்ப்பிக்கிறார்; பாசவாசனை வந்து தாக்காதபடிச் சிவாலயங்களையும் திருவேடத்தையும் வழிபட வைக்கிறார்; சீவன் முத்தர்களாகிய பெரியோர்களுடன் இணங்க வைக்கிறார்" என்ற இந்த உண்மை நூன் முடிபுகளோடு முற்றுப் பெறுகிறது. இவ்விசா ரணையும் முடிபுமே சைவசித்தாந்தம் எனப்படும். இவற்றைப் பொது வகையால் வேதங்களும் சிறப்பு வகையால் சிவாகமங்களும் பேசும். தமிழ்மொழியில் இவற்றை வரையறுத்து விளக்குவன சைவத் தெய்வத் திருமுறைகள் என்னும் பன்னிரண்டும், சைவ சித்தாந்த ஞான சாத்திரங்கள் எனப்படும் பதினான்குமாம். இவ்வுண்மைகள் விளங்குமிடங்கள் குருவுருவும், திருநீறும், திருக்கோயிலும், குருமடங் களும், திருவேடங்களுமாம். இவற்றைப் பற்றிச் சிந்தித்தும் பேசியும் செயலில் கொணர்ந்தும் மக்களை மேம்படுத்துவது நமது சமாசத்தின் நோக்கம். இப்பெருநோக்கத்துடன் ஆண்டு முழுதும் பல பேச்சுக்கள் பேசியும் பிரசுரங்கள் செய்தும் கூட்டங்கள் கூட்டியும் முயல்கின்றது. ஆண்டுகள் தோறும் பெருவிழாவும் கொண்டாடுகிறது. அவ்வழியே நாமும் இங்குக் கூடியிருக்கின்றோம்.

## சமய விசாரணையின் அவசியம்

ஆனால் ஒரு கேள்வி "இப்படிப்பட்டதொரு விசாரணையும் முயற்சியும் நமக்கு வேண்டப்படுவதுதானோ? இந்த ஆராய்ச்சி யில்லாமலே உலகம் நடைபெறுகிறது. உத்தியோக முயற்சிகள்

நடக்கின்றன. பணம் வருகிறது. சுகமாக உண்டுடுத்து உறங்கியும் வருகின்றோம். எதுவும் தடைபடக் காணவில்லை'' என்று கேட்பார். ஆனால் சிறிது சிந்தித்துப் பார்த்தால் இந்தக் கேள்விகள் அறிவினால் ஆதரிக்கப்படவில்லை என்பது நன்கு விளங்கும்.

மனிதர்களாகிய நமக்கும் உலகம் நடைபெறுகிறது. மனித வகையுட்படாத விலங்கு முதலியனவற்றுக்கும் அவ்வாறே உலகம் நடைபெறுகிறது. வாழ்நாள் ஒன்று போலவே எல்லாவுயிர்க்கும் கழிகின்றது. பிறப்பும் இறப்பும் அப்படியேதான். ஆனால் நாம் விலங்கின் வகையினுள் வைத்தெண்ணப்படச் சம்மதிப்போமா? மனிதர்க்குச் சிறப்பாயுள்ளது நன்மை தீமை நாடியறியும் அறிவு. அதுவே ஏனைச் சீவராசிகளினின்றும் மனிதனை வேறு பிரிக்கின்றது. ஆதலின் விசாரித்தறிதல் மனிதனுக்குரியது. சாதலும் பிறத்தலும் இருவினைக் கீடாகிய இன்ப துன்பங்களும் ஒரு விதியைப்பற்றி வரக் காண்கின்றோம்.

## கன்மப் பயன் பற்றிய சில உதாரணங்கள்

1) ஒருவன் தன் பகைவனுடைய குதிரையை ஓரிடத்திற் குத்தினான். அது சிறுதூரம் சென்று வீழ்ந்திறந்தது. மறுமாதம் அதே இடத்தில் அவன் குத்தப்பட்டான். குத்துக் காயத்துடன் சிறுதூரம் சென்று குதிரை வீழ்ந்த இடத்திலேயே அவனும் வீழ்ந்து இறந்தான்.

2) ஒருவன் ஒருவனைக் கழுத்தரிந்து கொன்றான். நீதிமன்றத்தில் துர்வழக்கிட்டுத் தப்பிக் கொண்டான். ஆனால் அக்கன்மம் அவனை விடவில்லை. அவன் கழுத்தில் ஒரு புண் வந்தது. அடுத்த ஆண்டு அதே மாதம் அதேநாளில் அதற்காக மருத்துவனால் கழுத்தரியப்பட்டு இறந்தான்.

3) ஒருவன் ஒருத்தியை வழிப்பறி செய்தான். அவளது மூக்கு நகையை மூக்கறுபடும் படி 'வெடுக்'கென்று இழுத்துப் பறித்துக் கொண்டோடி விட்டான். அதைத் தொடர்ந்து அவனுக்கு மூக்கில் புண் வந்தது. மூக்குக் கிழிந்து இரத்தம் வடிந்து கொண்டேயிருந்தது. வேறு காரணத்தால் அவன் சிறை சென்றான். மூக்குப் புண் ஆறாமலே இறந்தான். இப்படி எண்ணிறந்தவை செய்வோர் செய்திப்பயன் விளைகின்றதைக் காட்டி நிற்கின்றன. இந்நியதிகள் மனிதர் முயற்சியுள் அடங்கி நிற்பதில்லை. எனவே இவ்வுலகமும் அதில் நமது வாழ்க்கையும் நம்முள் அடங்கிவிடாத வேறு ஒன்றன் செயலால் நிகழ்வனவாக உணர்கின்றோம். அதனை விசாரித்துத் துன்பம் நீங்கவும் இன்பம் பெறவும் முயல்வது அறிவுடையோர் செய்கையாகுமல்லவா?

இதுவே சமய விசாரணையின் அடிப்படையும் அவசியமுமாகும். அது எவ்வாறு தொடங்கி எவ்வாறு முடிவடையும் என்ற நிலைகள்தாம் நான் மேலே சுருக்கிக் கூறியன. இறைவனும் ஞானிகளும் முடித்துக்காட்டிய சமய உண்மைகளை உணர்ந்து அவற்றின் வழியே ஒழுகித் துன்ப நீங்கி யின்படைதல் அறிவின் பயன். இல்லது வாராது; உள்ளது போகாது என்பது எல்லாச் சாத்திரங்களுக்கும் ஒப்பமுடிந்த உண்மை. ஆதலின் இவ்வுடம்பிற்குள்ளே ஒருநாள் வந்து புகுந்து, சிலநாளிருந்து ஒருநாள் வெளிப்போகும் உயிர், முன்னே என்ன நிலையிலிருந்தது? ஏன் இவ்வுடம்பிற்குள் வந்தது? அல்லது வரும்படி செய்யப்பட்டது? இனி என்ன நிலையடையும்? என்று உணர்தல் வேண்டாமா? அதனை உணர்ந்தால் அவ்வாறு வந்து வந்து அலைவுபடாதபடி உள்ளநிலை உண்டாயின் அதன் வழிகளைத் தெரிந்து அதனை அடைய முயல்வோமல்லவா?

## இன்பமும் துன்பமும்

இவ்வுலகத்திலேயும் நாம் இன்பமென் றெண்ணுகின்றவை யெல்லாம் இன்பமேயாகின்றனவா? துன்பமென்பனவெல்லாம் துன்பமேயாகின்றனவா? இன்பமென்றெண்ணிப் பிடிக்கின்றவை துன்பத்துக் கேதுவாகக் காண்கின்றோமே! நாம் இன்பம் என்றெண்ணுகின்ற அவற்றைத் தானும் பெறுகின்றோமா? இல்லையே! இன்பம் இனி வரவுள்ளதா யிருப்பதல்லாமல் இவ்வுலகில் "நான் இன்பம் பெற்றிருக்கின்றேன்! இன்பத்துள் வாழ் கின்றேன்!" என்று யாவர்தான் மகிழ்ந்து இருக்கக் காண்கின்றோம்? மன்னவர்முதல் வறியவன் வரை தாம் தாம் எண்ணிய இன்பம் எப்போது வரும் என்று எதிர்பார்த்தவர்களாகவே ஏங்கி நிற்கின்றனர்.

ஆஸ்பத்திரிகள் என்று வழங்கும் நமது மருத்துவ சாலைகளில் ஆயிரக்கணக்கான ஆணும் பெண்ணும் முதியரும் பாலரும் ஏனைப் பலரும், இன்பமென் றெண்ணி யிழந்துபோன துன்பங்களுக்கும், இனிவரும் என்றெதிர் பார்த்துக் கொண்டே ஏமாறி நிற்கும் இன்பங்களுக்கும் சாட்சி சொல்கின்றார்களல்லவா? நீதிமன்றங்களில் ஏறி நிலை தளர்ந்து நிற்கும் இலட்சக்கணக்கான பேர்கள் எல்லாம், இனிமேல் கிடைக்கும் இன்பமென்றதனை எதிர்பார்ப்பவர்களே யன்றோ? பணவேட்டை, உத்தியோக வேட்டை, பதவி வேட்டை முதலிய வேட்டைக்காட்டில் உழன்று திரிந்து கோடிக்கணக்கில் பணமும் மனமும் பிறவும் பறிகொடுத்தும் தாம் கருதிய வேட்டை கிடைக்காமல் மேலும் வேறு வேட்கைக்குத் திரியும் கோடிக்

கணக்கானவர்களும் இன்பத்தை எதிர்பார்த்து அலைபவர் களேயன்றோ? இப்போது நடைபெறும் கோரக் கொலைக்களமாகிய ஐரோப்பிய ஆணவப்போரில் மூண்ட எல்லாத் திறத்தோரும் இனிமேல் இன்பம் வரும் என்று நம்பியுள்ளவர்தாமே? இவ்வாறு உலகெங்கும் இன்பமாய்க் காட்டிப் பேய்த்தேர்போல ஏமாற்றித் துன்பமாய் விளையும் விளைவுகளை அறிந்து அறிவுபடைத்த நம் முன்னோர்கள் மேலே கண்டவாறு சமய விசாரணையில் நம்மைச் செலுத்தினர். உலக நிலையில் மேலே கண்டபடி இன்பமாய்த் தோன்றித் துன்பமாய் விளையும் செயல் சமய நிலை நிற்பதில் உண்டாவதில்லை. உதாரணமாக நமது இந்தத் திருக்கூட்டத்தைக் கவனியுங்கள். இதனுள் மேலே குறித்த கூட்டங்களிற்போலத் துன்பவிளைவுகள் எவையேனும் காணமுடியுமா? இதுபற்றியே,

> *இன்பம் பெருக்கி யிருளகற்றி எஞ்ஞான்றுந்*
> *துன்பந் தொடர்வறுத்துச் சோதியா -யன்பமைத்துச்*
> *சீரார் பெருந்துறையா னென்னுடைய சிந்தையே*
> *யூராகக் கொண்டா னுவந்து''*

என்று அருளுபதேசம் செய்தனர் மாணிக்கவாசகப் பெருமானார்.

## சமயநிலை

இனி, மனிதர்க்கு இன்றியமையாதது சமய நிலைதான். சமயகோடிகளில், முடிந்த உண்மைகளை, ''இதுவாகு மதுவல்ல தெனும் பிணக்கதின்றி, நீதியினா லிவையெல்லா மோரிடத்தே காண். நிற்பதியா தொருசமய மதுசமயம்'' என்ற இராசங்கத்தமர்ந்த நமது வைதிகசைவம் நெறியில் உணர்த்தி உயர்ந்து நிற்பதும் உண்மையே. ஆனால் இதன் இச்சமயநிலை - தற்காலநிலை எவ்வாறுள்ளது? என்பதுபற்றிச் சில வார்த்தைகள் பேசுதல் அவசியம். இங்குச் சமயம் என்பதைக் காலம் என்ற பொருளில் வைத்துப் பேச நினைக்கிறேன். இக்கால நிலையானது மக்கள் சமய ஒழுக்கத்தில் சிறிதும் ஈடு படாதநிலை என்று காணப்படுகிறது. முற்பகுதியிற் கூறிய சமய நிலையின் முதற்படியினின்றும் உலகம் மேலேற எண்ணுகிறதில்லை. அந்த உலகாயதம் என்கிற முதற்படிக்குள்ளே உலகருடைய மனமும் மொழியும் மெய்யும் என்ற மூன்றன் முயற்சிகளும் அடங்கிவிடக் காண்கின்றோம். அதுவே முடிந்தபடியாய் நிற்கிறது. தெய்வ நினைவும் வினையின் விளைவும் உயிரின் கட்டுக்களும் உலக வாழ்க்கையின் பலதுறைகளிலும் மக்களின் நினைவுக்கு வருகின்ற தில்லை. உலக உத்தியோகங்களுக்காக மேலே போர்த்துக் கொள்ளும்

சட்டைபோலச் சமய வாழ்க்கை ஏதோ ஓர் சமயத்துக்குப் போர்த்துக் கொள்ளவும், மற்றைக் காலங்களில் கழற்றி வைக்கவும் உள்ள ஒரு சட்டையாகவே நின்று விடுகிறது. சமயம் உயிரோடு பற்றிக்கொண்டு நிற்பதாக மக்களிற் பெரும்பாலோர் எண்ணுகிறதில்லை.

*"......தக்க தசமதி தாயொடு தான்படுந்*
*துக்க சாகரத் தொல்லையிற் பிழைத்தும்*
*ஆண்டுக டோறும் அடைந்தவக் காலை*
*யீண்டியு மிருத்தியு மெனைப்பல பிழைத்தும்*
*.... ...... .... மாதர் தம்*
*கூர்த்த நயனக் கொள்ளையிற் பிழைத்தும்,*
*பித்த வுலகர் பெருந்துறைப் பரப்பினுண்*
*மத்தக்களிறெனு மவாவிடைப் பிழைத்தும்,*
*கல்வி யென்னும் பல்கடற் பிழைத்துஞ்*
*செல்வ மென்னு மல்லலிற் பிழைத்தும்,*
*நல்குர வென்னுந் தொல்விடம் பிழைத்தும்,*
*புல்வரம் பாய பலதுறை பிழைத்தும்"*

என்று உலகியல் வாழ்க்கையில் மனிதர் தப்பிப் பிழைக்க வேண்டியவற்றை அழகாக முறைப்படுத்தி மாணிக்கவாசக சுவாமிகள் எடுத்துக் கூறியருளினர். இவ்வளவும் தப்பிப் பிழைத்த பின்பல்லவோ "தெய்வ மென்பதோர் சித்த முண்டாகி, முனிவி லாததோர் பொருளது கருத" வரும்! அக்கருத்து வந்தஉடனே மேல் நிலைவருகிறதா? இல்லை! இல்லை அதன் மேல்தான்,

*"ஆறு கோடி மாயா சத்திகள்,*
*வேறு வேறுதம் மாயைக டொடங்கின;*
*ஆத்த மானா ரயலவர் கூடி,*
*நாத்திகம் பேசி நாத்தழும் பேறினர்;*
*சுற்ற மென்னுந் தொல்பசுக் குழாங்கள்,*
*பற்றி யழைத்துப் பதறினர் பெருகவும்;*
*விரத மேபர மாக வேதியருஞ்*
*சரத மாகவே சாத்திரங் காட்டினர்;*
*சமய வாதிக டத்த மதங்களே,*
*யமையவதாக அரற்றி மலைந்தனர்;*
*மிண்டிய மாயாவாத மென்னுஞ்,*
*சண்ட மாருதஞ் சுழித்தடித் தாஅர்த்,*
*துலோகா யதனெனு மொண்டிறற் பாம்பின்,*

*கலாபே தத்த கடுவிட மெய்தி,*
*யதிற்பெரு மாயை யெனைப்பல சூழ்" கின்றன.*

இவையெல்லாம் ஏதோ திருவாசக மென்றதோ ரேட்டில் எழுதி வைக்கப்பட்டனவே என்றெண்ணி விடுவார்கள் பலர். இதனிற்றப்பிப் பிழையுங்கள்! ! என்று இங்குக்கூறிய ஒவ்வொன்றினையும் சிந்தித்துப் பாருங்கள். இவற்றைத்தானே உலகத்திற் காண்கின்றோம். இவற்றைப் பற்றி நாம் நமது நித்திய வாழ்க்கையிற் சிந்தித்து நடக்கின்றோமோ? அல்லது இவ்வுலகில் எந்த அரசாங்கமாவது இந்த நோக்கத்தைக் கொண்டு அரசாள்கின்றதா? இல்லையே! செம்மையாய் உண்பதும், செம்மையாய் உடுப்பதும், செம்மையாய்ப் புலனின்பங்களை அனுபவிப்பதும், செம்மையாய் இறந்தொழிவதும், அல்லாமல் இவ்வுலகில் எந்த அரசாங்கத்துக்காவது வேறு இலட்சியமிருக்கக் காணவில்லையே. இவ்வாறு, உடம்போடு ஒழியும் இலட்சிய மல்லாமல் மேற்கூறிய உயிரின் நன்மைபற்றிய சமயக் கொள்கை களை நாம் மறந்தொழிந்தது போலவே நமது அரசாங்கங்களும் நினையா தொழிந்தன.

## சமயப் பாதுகாப்பு

'நமது அரசாங்கம் சமய நிலையைக் காக்கவில்லையா?' என்று சிலர் கேட்கலாம். அதற்கு 'அழிக்கவில்லையா?' என்று வேறு சிலர் வினவி விடை கூறுவர். அரசாங்கம் சமய நிலையைக் காக்கும் தன்மை ஒரு வேடிக்கையே! அதனை நினைத்தாலே அறிவுடையோர் வயிற்றில் நெருப்பு உண்டாகாமலிராது. இந்து மதம் என்ற பேரால் ஒரு புதுமதமும் சமயமும் உண்டாக்கப்பட்டு விட்டது. சிவ என்ற சத்தத்தை கேட்க வெறுக்கும் ஒரு வைணவன் சிவன் கோயில் தரும பரிபாலனம் செய்யலாம் என்றுரைத்தது நீதிமன்றம்! ஏன்? புறச்சமயியாகிய கிறித்தவ சகோதரன் கூட நம் கோவிலுக்குத் தருமகருத்தாவாக இருக்கலாம் என்று சட்ட தீர்மானம் உள்ளபோது யார்தான் இருக்கக் கூடாது? சமய வாழ்க்கையும் சமய நம்பிக்கையும் சமயப்பற்றும் கோயில்கள் மடாலயங்கள் இவற்றின் தருமபரி பாலனத்துக்கு வேண்டப்படாத (இருக்கக்கூடாத என்று கூடச் சொல்லலாம்) குணங்களாய்விட்டன. சமயக் காவல், அதன் திரவியங்களாகிய மண், வெள்ளி, பொன் என்றிவற்றோடு நின்று விடுகின்றது. உலக வாழ்க்கையின் உள்ளுறை உடம்போடு நின்றுவிடுமானால் சமய வாழ்க்கையின் உள்ளுறை மட்டும் ஏன் வெள்ளியோடு வெளியில் நிற்கமாட்டாது?

இவ்வாறு நாமும் மறந்து, அரசாங்கமும் நினையாமற் போயின நிலைமையில் சமய வாழ்க்கைக்குத் தங்குமிடம் எங்கே? கோயில்களும் குருமடங்களும் சமயவாழ்க்கை குடியிருக்கும் இடங்கள் என்கிறார்கள். அவற்றினும் சமயம் நிலைபெறக் காணப்படவில்லை என்பது பலர் கருத்து. ''கோயிலுக்குக் கிட்ட நெருங்க நெருங்கக் கடவுளினின்றும் தூர விலகுகிறான்'' என்றொரு ஆங்கிலப் பழமொழி உண்டு. அது நமது கோயில்கள், குருமடங்கள் என்றிவற்றுக்கும் பொருந்துமோ என்று பாருங்கள். நம்மில் சிலருடைய வீடுகளில், இல்லற உலக வாழ்க்கையிற், கைக்கொள்ளப்படும் சமய ஞானம், சரியை, பூசை, செபம், தவம், தியானம், தோத்திரம் என்ற சமய ஒழுக்கங்களின் அளவிற்கூடப் பல திருக்கோயில்களிலும் குருமடங்களிலும் காணுதல் அரிதாய் விட்டது என்று வருந்துகின்றார் பலர். ''எல்லாம் வெளிமயக் கேயிறை வாகச்சி யேகம்பனே'' என்று கைவிரித்து முடித்து விடும்நிலையே கண்டோ மென்று ஏங்கியிரங்குகின்றோரும் பலர்.

ஆலயப்பிரவேசம், பரசமயப் பிரவேசமீட்சி என்ற இரண்டு பொருள்கள் இந்நாளில் நம்மவரிடையில் வேகமாய் நிகழ்கின்றன. அவை நமது ஆகமம் முதலிய நூல்களாலும் பெரியோர் ஒழுகிய முறையாலும் நிச்சயிக்கத்தக்கன. அவ்வாறன்றி அவ்வப்போது மாறும் மக்களின் திரிவு கொள்கைகளினால் அவை தீர்க்கலாவனவல்ல என்பது அறிவோர் துணிபு.

## நமது கடமைகளுட் சில

பல்லாயிரங் கோடி பணங்களைப் பொருட்படுத்தாமல் சிவபுண்ணிய மொன்றனையே பொருளென்று கொண்டு சிவத் திருப்பணிகள் செய்து மகிழ்கின்ற சிறந்த நகரங்கள் கொண்டது உங்களுடைய இந்த நாடாகும். காண முடியாது பழுதாய்ப் போயினவும், போகும் நிலையிலிருந்தனவும் ஆகிய எத்தனை கோயில்கள் பேரன்பர்களாகிய உங்கள் முயற்சியினாலே பெருந்திருமாளிகைகளாகக் காணும் நிலையைப் பெற்றன. வேதாகம தேவார பாடசாலைகள் பசுமடங்கள் முதலிய தருமச்சாலைகள் பலவும் உங்களுரிமை. கோயில்களைப் புதுக்கிப் பெருந்திருமாளிகைகளாகக் கண்ட நீங்களே அக்கோயில்களுக்குச் சென்று தரிசித்துச் சுகம் பெறும் சமய வாழ்க்கை வாழத்தக்க மக்களைக் கோடிகணக்கில் பெருகக் காணும் பெருந்திருப்பணியையும் உரிமையாக்கிக் கொள்ள வேண்டியது இயல்பாம். நமது சைவசித்தாந்த மகா சமாசத்தார்கள்

சைவத் தெய்வத்திருமுறைகளையும் மற்றும் அருள் பொருந்திய நூல்களையும் பல்லாயிர மக்கள் கையில் எளிதினமையும்படி பேருதுவி புரிந்துள்ளாரக்ள். அதன் மேலும் நமது மக்களின் நித்திய வாழ்க்கை சமய நிலையிலே ஊறி நிகழும்படி செய்தல் பெரும் பணியாகுமன்றோ? திருத்தொண்டர் புராணத்திற் றுதிக்கப்பட்ட நாயன்மார்களுள் அந்தணர் - முடியுடை மன்னர் - குறுநில மன்னர் - அமைச்சர் - சேனைத்தலைவர் - வேளாளர் - நெசவு, திலதயிலத் தொழில், பசுக்காத்தல், மீன்பிடித்தல் முதலிய தொழில்கள் செய்வோர் என்றிவ்வாறு உலகியல் நிலையில் எல்லாத் தொழில்களும் செய்து இல்லறத்தில் வாழ்ந்தோர் ஏனைப் பலர். ஆனால் அவர்கள் யாவரும் அவ்வத்தொழிலி ன்றுறைநின்றே சமய வாழ்க்கை வாழ்ந்து உலகுக்கு வழிகாட்டிய பெருமக்களாவர். அவர்களின் அடிச்சுவடுகளைப் பின்பற்றி ''எத்தொழிலைச் செய்தாலு மேதவத்தைப் பட்டாலும், முத்தர் மனமிருக்கும் மோனத்தே'' என்றபடி சமயநாட்டம் உள்ளூறிய வாழ்க்கையே வாழ்ந்து ஒழுகும்படி நாம் பழகிக்கொள்ள வேண்டும்.

## சமய வாழ்க்கை

சைவசமய வாழ்க்கையின் முதற்படியாகிய சரியை என்பதே நமக்குப் புதிதாய் விட்டது. முதற்படியில் புகாத மக்கள் அதன் மேலும் ஏறுவதெப்படி? ''ஆமாறுன் றிருவடிக்கே யன்புருகே னகங் குழையேன், பூமாலை புனைந்தேத்தேன் புகழ்ந்துரையேன் புத்தேளிர், கோமானின் றிருக்கோயில் தூகேன் மெழுகேன் கூத்தாடேன்'' என்று மாணிக்கவாசகப் பெருமான் நமது நிலையை முன்னறிந்து அருளியுள்ளார்கள். இது பற்றியே

*''நிலைபெறுமா றெண்ணுதியே னெஞ்சே நீவா*
*நித்தலு மெம்பிரா னுடைய கோயில் புக்குப்*
*புலர்வதன்முன் னலகிட்டு மெழுக்கு மிட்டுப்*
*பூமாலை புனைந்தேத்திப் புகழ்ந்து பாடித்*
*தலையாரக் கும்பிட்டுக் கூத்து மாடிச்*
*சங்கரா சயபோற்றி போற்றி யென்றும்,*
*அலைபுனல்சேர் செஞ்சடையெம் மாதீ யென்று*
*மாரூரா வென்றென்றே யலறா நில்லே''*

என்று ஆணையிட்டு உபதேசித்தருளினார் நமது பரமகுரு நாதராகிய அப்பர்சுவாமிகள். நம்மில் எத்தனை பேர் நித்தலும் கோயில்புக்கு வழிபடும் நியமமுடையோம்? வழிபட்டாலும் அவர்களுள் எத்தனை

பேர் புலர்வதன் முன் அங்குத் திருவலகும் திருமெழுக்குமிடத் தயாராயிருக்கின்றோம்? விதியறிந்து தாமே மலர் எடுத்துத் தொடுத்து மாலை கட்டியணியப் பழகியவர்கள் எத்துணைப் பேர்? அப்பர் சுவாமிகள் திருவீதியில் உழவாரப் பணி செய்தருளினர். திருச்செந்தூரில் தேர்விழாக் கொடியேற்றத்தின் முன்னாள் அப்பர் சுவாமிகள் விழா உண்டு. அன்று அப்பர் சுவாமிகளைத் திருவீதியில் எழுந்தருளுவித்து அவர் செய்த பணியின் அடையாளமாகச் சிவனடியார்கள் சிலர் திருவீதியில் திருவலகிட்டு நீர் தெளித்து வருவார்கள். "எவருந் தொழுதெழு மடியார் திருவல கிடுவார் குளிர்புனல் விடுவார்கள்" (திருநா. புரா. 163) என்றதை இவர்களது திருப்பணி நினைவூட்டும். ஆனால் அதைக் கண்டு (Union) வீதிகூட்டிச் சாமிவருகிறதென்று பரிகாசம் செய்பவரும் உண்டு. சேரமான்பெருமாள் நாயனார் திருவஞ்சைக்களத் திருக்கோயிலில், அலகிடுதல், மெழுக்கிடுதல், பூமாலை கட்டிச் சாத்துதல், திருவிளக் கேற்றுதல் முதலிய சரியைத் தொழில் செய்தனர். அரசபட்டம் வந்தபோது அது இத்திருத்தொண்டுக்கு இடையூறாம் என்றஞ்சினர். நாம் அப்படி அஞ்சி நிற்கவேண்டுமென்று நான் சொல்லவில்லை. இந்தியா மந்திரிசபை முதற்கொண்டு சிறிய கிராமச்சபை வரை எதிலாகிலும் ஒரு இடம் கிடைக்குமா என்று தானே நமது எல்லா முயற்சிகளும் செல்கின்றன! அவற்றோடு திருத்தொண்டின் நினைவும் கூடவே இருக்கலாமே என்று மட்டும் தான் நான் சொல்லத் துணிகின்றேன்.

## சிவசாதனம்

சரியையாகிய முதற்படி யேறுவதன்முன்னே எண்ணத்தில் வரவேண்டுவது ஒன்றுண்டு. அது சிவசாதனங்களாகிய நீறு, கண்டிகை, திருவைந்தெழுந்து என்பன கொள்ளுதல், திருநீறும் கண்டிகையும் பொருளாகக் கொண்டு பூண்டு ஒழுகுகின்றோமா? ஸ்ரீ பஞ்சாக்கர செபம் நமக்கு முக்கியமான தென்பதைத்தானும் பெரும்பாலார் உணர்ந்து கைக்கொண்டோமில்லை. புறச் சமயிகளாகிய கிறித்துவ மகமதியர்களுடைய தொழுகையிடங்களில் நாள்தோறும், வாரந்தோறும் வேறு விசேட நாட்கள்தோறும் அவ்வவர்களது சமய சாத்திரங்கள் படித்துப் போதிக்கப் படுகின்றன. அதுபோல நமது ஆலயங்களிலும் குருமடங்களிலும் நியதியாய் அவ்வக்காலங்களில் ஏன் நமது சமய உண்மைகளையும் சரிதங் களையும் போதிக்கக் கூடாது? அப்படியாராவது போதிப்பார்களாயினும் ஒழுங்காயும் நியதியாயும் சென்று அமர்ந்து கேட்டுவரக்கூட நாம்

தயாராயில்லையே! சிதம்பரத்தில் பல ஆண்டுகள் வாசிக்கும் சிறுவர்களுள் நடராசருக்கு எத்தனை திருக்கைகள்? எந்தக் கால் தூக்கியிருக்கிறார்? என்றால் இதுகூடத் தெரியாதவர்கள் அனேகர். நாமே பணங்கொடுத்து நாமே நடத்தும் பள்ளிக்கூடங்களில் பயிலும் நமது சிறுவர்கள் அங்கு உலகப் படிப்புடனே சமய நிலையின் ஆரம்ப அறிவைப் பெற்றுப் பயின்று வரும்படி நாம் ஏன் திட்டம் செய்யக்கூடாது? கற்றுக்கொள்ளும் ஆவல் நம்மிடம் உண்டாகி வளர்வதாயின் தாமே ஆசிரியன்மார்களும் குருமார்களும் போதகர்களும் சாதகர்களும் உண்டாகி முளைப்பார்கள். இவ்வாறு நம்மைத் திருத்திக் கொண்டு ஒழுக முயற்சி செய்யாமல் கோயில்களையும் குருமடங்களையும் குறைகூறுவதிற் பயனில்லை.

நமது கடமைகளைப்பற்றி முடிப்புரையாகத் தொகுத்துச் சில வார்த்தைகள் சுருக்கிக் கூற விரும்புகின்றேன்.

உண்மையான சமயக் கல்வியும் சமய அறிவும் சமய ஒழுக்கமும் நம்மிடைப் பரவவேண்டும். சீவகாருண்யத்தையும் அன்பினையும் அடிப்படையாகக் கொண்ட சமய ஒழுக்கம் நமது தினசரி உலக வாழ்க்கையில் ஊறி வர வேண்டும். புலாலுண்ணுதல் சமய நல்வாழ்க்கைக்கு முற்றிலும் மாறுபட்டது. சமயநிலை வேறு, உலக வாழ்க்கை வேறு என்றில்லாமல் இரண்டும் உயிரும் உடலும்போல விரவி வருதல் வேண்டும். சைவத் திருமுறைகள் 12ஆம் சைவ சாத்திரங்கள் 14ஆம் ஒவ்வொரு சைவர் வீடுகளிலும் வாசித்து வைத்துப் பூசிக்கப்படுதல் வேண்டும்.

## திருக்கோயில் வழிபாடு

விநாயகர் கோயில், ஈசுவரன் கோயில், குமரன் கோயில், சத்தி கோயில், ஐயனார் கோயில் முதலியவற்றில் ஏதாவதொன்று இல்லாத ஊர்கள் நம் நாட்டில் இல்லை. "கோயிலில்லா வூரிற் குடியிருக்க வேண்டாம்" என்பது முதுமொழி. இது நம்மவர்களுக்குள் வேரூன்றி யிருப்பதோர் எண்ணம். ஆனால் இருக்கும் கோயில்களையும் இடித்தெறிந்துவிட வேண்டும் என்றொரு புரட்சி எண்ணம் மேனாட்டிலிருந்து பரவி நம் நாட்டிலும் சிறிது தலைகாட்டத் தொடங்கி வருகிறது. அதற்குப் பலரும் செவி சாய்க்கும் நிலை வரவில்லை; நமது புண்ணிய நாட்டில் அந்நிலை எந்நாளும் வாராது என்பது திண்ணம். ஆனால் கோயில் எப்படிப் போனால் நமக்கு என்ன என்று எண்ணியிருப்பதும், அவை நாளடைவில் இடிந்து போகப் பார்த்துக் கொண்டிருப்பதும் ஆகிய பழக்கம் எப்டியோ நமது நாட்டில்

வந்து புகுந்து கொண்டது. நாம் இடித்தெறிந்தாலும் தாமாய் இடிந்து போகப் பார்த்துச் சும்மா இருந்தாலும் பலன் ஒன்றுதானே? கோயில்களைத் தூய இடங்களாகவும் நமது உடலுக்கும் உயிருக்கும் ஒருங்கே நன்மை செய்யும் இடங்களாகவும் முன்னாளிலிருந்தபடி ஆக்கிக் கொள்ளுதல் வேண்டும். நம் கிறித்துவ நண்பர்கள் தமது தொழுகையிடங்களை வைத்திருக்கும் நிலையைப் பாருங்கள். கோயில், குளம், ஆறு, தீர்த்தம் முதலியவற்றையும் அவற்றைச் சூழ்ந்துள்ள இடங்களையும் தூய்மையாக வைக்கப் பழக வேண்டும். நம்நாட்டின் சிறு தெய்வங்களின் கோயில்கள் பலவும் ஆடு கோழி பன்றி முதலிய சீவராசிகளைக் கொலை செய்யும் கொலைக் களங்களாக மாறிவிட்டன. இது பெருந்தவறு. இதனைச் சீர்திருத்தவும் புலாலுண்ணதலை ஒழிக்கவும் உங்கள் காரைச் சிவனடியார் திருக்கூட்ட முதலிய அன்பர் பெருமுயற்சி செய்து வருகின்றனர். காலைமாலைக் காலங்களில் வெறுங் காற்று வாங்கவும், வெறும் பேச்சுப் பேசவும் கேட்கவும் வீணே போதுபோக்கவும் பலவழியாலும் செலவினைப் பெருக்கிப் பொழுதினைச் சுருக்கப் புதுநாகரிகம் பழகும் மக்கள் பலர். அவர்கள் நமது கோயில் குளம் ஆறுகளுக்குச் சென்றாலும் நல்ல காற்று விலையில்லாமல் வாங்கலாமே. அவை இறைவனருளால் இனிது நிறைவேறி நற்பயன் பெறுக.

நாள்தோறும் சிறிது நேரமாவது திருக்கோயில் வழிபாடு செய்துவரும் பழக்கம் வரின் அது பெருநன்மை பயக்கும். கோயில்களிலும் குருமடங்களிலும் ஏனைப் பொது இடங்களிலும் நாள்தோறும், வாரந்தோறும், மாசப்பிறப்பு, முழுமதி, மறைமதி- வருடப்பிறப்பு-பெரியோர் திருநாட்கள் முதலிய பெருநாட்கள் தோறும் சைவப் பிரசங்கங்கள் செய்யப் பெறுதல் வேண்டும். அவற்றைச் சைவ மக்கள் கூடி அமைந்து கேட்டு நலனடைதல் வேண்டும். சைவ சாத்திர உண்மைகள், சமயாசாரியர் சந்தானாசாரியர் சரிதங்கள், தெய்வத்திருமுறைகள் பன்னிரண்டினையும் பாடியருளிய ஆசிரியன்மார்கள் இருபத்தெழுவர்களின் வரலாறுகள், மெய்கண்ட சாத்திரங்கள் அருளிய அறுவர்களின் பரம்பரை வரலாறுகள், திருக்கோயில்களில் வைத்து வழிபடப்பெறும் மூர்த்தங்களின் பெருமையும் தத்துவ விளக்கமும், சிவ வழிபாட்டின் பெருமையும் பயனும், திருக்கோயிலின் தத்துவம், திருநீறு கண்டிகை பஞ்சாக்கரம் என்ற சிவசாதனங்களின் பெருமை, மூர்த்தி தலம் தீர்த்தம் இவற்றின் விசேடங்கள் முதலிய பொருள்களைப்பற்றிச் சிறு புத்தகங்கள் துண்டுப்பத்திரிகைகள் அவ்வப்போது வெளிவருதல் வேண்டும்.

அவை பாலர் குமரர் விருத்தர் பெண்கள் ஆகிய சைவ மக்கள் எல்லோராலும் படிக்கப்படுதலும் வேண்டும். தம்மைச் சைவர் என்று சொல்லிக்கொள்ள மனமுடையார் ஒவ்வொருவரும் இன்றியமையாது திருநீறு உருத்திராக்கம் அணிதலும் பஞ்சாக்கரம் செபித்தலும் நாள்தோறும் பன்னிரு திருமுறைகளில் ஒரு திருப்பாட்டாயினும் ஓதுதலும் வேண்டும். ஒவ்வோர் நாளிலும் ஒரு சில விநாடிகளேனும் தூயனவாகிய சைவ எண்ணமும் சைவப் பேச்சும் சைவச் செயலும் ஒவ்வொன்றேனும் நிகழ்தற்கு நமது தினசரி வாழ்க்கையின் இடமிருத்தல் வேண்டும்; தினமும் துயில்வதற்குமுன் அந்நாளில் இவ்வாறு நிகழ்ந்தனவா என்றும், அன்று முழுதும் உடல் பற்றிய முயற்சிகளொழிய உயிர்பற்றிய முயற்சிகள் நிகழ்ந்த நேரம் எவ்வளவு என்றும் சிந்தித்தலும் நன்மை தருவதாம்.

## தமிழ்

இங்குத் தமிழ்மொழிபற்றி ஒரு சில வார்த்தைகளேனும் பேசாவிடில் என்னுரையாகிய முன்னுரை குறைவுடையதாகும். ஏனைய மொழிகளெல்லா வற்றினும் சிறந்தது தமிழ்மொழியாகும். அது தெய்வத்தன்மை வாய்ந்தது; தெய்வம் விளங்குதற் கிடமாகியது; தெய்வத்தால் வளர்க்கப்பட்டது; தெய்வத்தைக் காட்டித்தரவல்லது. இதுபற்றியே'' ஞாலமளந்த மேன்மைத் தெய்வத்தமிழ்'' என்று சேக்கிழார் சுவாமிகள் பாராட்டியருளினர். அதனை ஏனைமொழிகளோ டொப்ப வைத்து எண்ணுதலும் தவறு என்பதும் பல பெரியோரது கொள்கை. நமது தாய் மொழியாகிய இத்தகைய தமிழைத் தமிழர்களாகிய நாமும் காப்பாற்றாது விட்டுவருகின்றோம்; நமது அரசாங்கமும் காவல் செய்யாதுவிட்டது. கைவிட்டுச் சும்மா இருப்பது மட்டுமா? பலவகையிலும் தமிழை அலங்கோலம் செய்து ஒடுங்கச் செய்தற்கு எல்லா வழியாலும் முயற்சிகளும் தீவிரமாகச் செய்யப்படுகின்றன. தாய்மொழி தன்னாட்டிலே இவ்வாறு தலைகவிழ்ந்து தவித்து நிற்குநிலையும், ஒண்டவந்த பிடாரிகள் ஒங்கத்தான் துரத்தப்படும் நிலையும், வேறெந்த நாட்டினும் வேறெந்த மொழியினும் காணமுடியாது. இமயமலை யுச்சியிற் புலிக்கொடி பொறித்துக் குமரிவரை தன்னுடைய நாடாக வாழ்ந்த தமிழுக்கு இப்போது ஒருநாடும் தன்னுடையதென்று இல்லாத நிலை வந்ததனைத் தமிழர் என்று சொல்லிக்கொள்ளும் நாமும் பார்த்துக் கொண்டுதானிருக்கின்றோம்! தமிழைப்போற் சிறந்த மொழி எந்நாளினும் எந்நாட்டினும் இல்லை. அதனைப் போல் இந்நாளில் தன்னாட்டினுள்ளுந் தாழ்ந்து நிற்கும் மொழியும் இல்லை என்று

சொல்ல என்மனம் வருந்துகின்றது. சைவத்தைப் போற்றி நிற்பது நமக்கு எத்துணைப் பெரிய கடமையோ அத்துணையும் அதற்கு மேலும் தமிழையும், அதனினும் மேலாய்ச் சைவத்தமிழையும் எல்லா வகையாலும் போற்றிக் காப்பது நமது பெருங்கடமையாகும்.

சைவம் பெருத்த - சிவத்திருப்பணியால் மிகுந்த தமிழ்பழுத்த - இத்திருநாட்டில் இக்கருத்துக்களை நான் எடுத்துச் சொல்லுதல் மிகையாகும் என்பதை உணர்வேன். ஆயினும் நாடெங்கும் தொத்துநோய்போலப் பரவியிருக்கும் சடநாகரிக அலங்கோலங்களில் ஈடுபட்ட நமது மக்கள் உயிரின் நல்வாழ்கையாக விதிக்கப்பட்டு நமது முந்தையோர் கையாண்டுவந்த உயர்ந்த சைவவாழ்க்கை மறக்கப் பட்டு வருகிறதைக் காணும் வருத்தமிகுதியினால் இத்துணையும் பேச நேர்ந்ததனைப் பொறுக்குமாறு வேண்டுகின்றேன்.

உங்களது அன்புகூர்ந்த வரவேற்பினில் கோவைத் தமிழ்ச் சங்கத்தின்மூலம் எளியேங்கள் செய்துவரும் திருத்தொண்டர் புராண உரைவெளியீடு என்கிற திருப்பணியைப் பற்றி அன்புடன் பேசியுள்ளீர்கள். அத்திருப்பணி மிகமிகப் பெரிய தொன்றாகும் என்பதும், அதனைச் செய்யமுற்பட்டுள்ள எளியேங்களது அறிவும் ஆற்றலும் மிகமிகச் சிறியன என்பதும் எவரும் மறுக்க முடியாதவை. அருளாலும் பொருளாலும் எளிமையுடைய எங்கள் சங்கம் செய்யும் அப்பெரு முயற்சிக்கு வேண்டும் அருளும் பொருளும் அளிக்கும்படி நீங்கள் முற்பட்டு உங்கள் நாயகராயும் எங்கள் நாயகராயும், "நானுடைமாடெனவே நன்மை தரும் பர"னாராயும், "தேவர் கணாயக" ராயும், இக்கலியுகத்தில் விளங்கும் தெய்வ நாயகராயும், உள்ள குன்றக்குடி வாழ்வுகந்த குமரப் பெருமானாரது திருவடிகளை நினைமின்கள்.

இந்த மாபெருந் திருக்கூட்டத்தில் தலைமைபூணத் தகுதியில்லாத என்னையும் தலைமை பூணும்படி ஆணையிட்டு அமர்த்தியது பற்றி மீண்டும் உங்களுக்கு நன்றி செலுத்துகின்றேன். இந்த மூன்றுநாள் விழா நிகழ்ச்சிகளிலும் விழாத்தலைவன் என்ற நிலையில் நான் செய்யத்தக்க கடமைகளிலே எனது குறைமிகைகளைப் பொறுத்துக் கொண்டு, குற்ற நீக்கிக் குறை பெய்து நிறைவாக்கிக் கொண்டுதவும்படிக்கு உங்கள் பெருந்தன்மையை வேண்டுகின்றேன்.

இப்பெருவிழா சிறக்க நடைபெறுக! சைவசித்தாந்த மகா சமாஜம் இதுபோன்று மேலும் பற்பல ஆண்டு நிறைவு விழாக்கள் கொண்டாடும்படி வளர்ந்தோங்கிச் சைவ மக்களுக்கு நன்மை செய்து

வாழ்க! இங்குப் பொருந்திய எல்லா மக்களும் நன்மையும் பெற்று வாழ்க!

தாரணி தழைக்க ! சைவமும் தமிழும் ஓங்குக! தண்ணருள் சிறக்க!

*என்றுமின்பம் பெருகுமியல்பினா*
*லொன்று காதலித் துள்ளமு மோங்கிட*
*மன்று ளாரடி யாரவர் வான்புகழ்*
*நின்ற தெங்கு நிலவி யுலகெலாம்*

திருச்சிற்றம்பலம்

# ராவ்சாகிப் எஸ். வையாபுரிபிள்ளை

(41வது ஆண்டு விழா - 1946 - திருச்செங்கோடு - சைவர் மாநாடு)

**சைவச் செல்வர்களே! செல்வியர்களே, அன்பர்களே,**

நமது சைவசித்தாந்த மகா சமாஜம் பெருந்தமிழாசிரியர்களாலும் சைவவுலகில் தலைசிறந்து விளங்கியவர்களாலும் நிறுவப்பட்டது. சென்ற நாற்பது ஆண்டுகளாகத் தமிழுக்கும் சைவ சமயத்திற்கும் அளவிடுதற்கரிய பெருந்தொண்டு இயற்றி வந்திருக்கிறது. இப்பொழுது, தன் அரிய தகுதிக்கேற்ப, தமிழ்நாட்டில் பெரும்புகழ் பெற்று விளங்குகிறது. இத்தகைய சமாஜத்தின் ஆண்டு விழாவில் தலைமை வகிக்கும் பேறு எளிதிற் கிடைப்பதன்று. எனக்கு இப்பேறு இன்று வாய்த்திருக்கிறது. ஆகவே இந்நாள் என் வாழ்நாளில் நான் என்றும் போற்றத்தகும் ஒரு நன்னாள். இப்பேற்றினை எனக்கு அன்பு மேலீட்டால் அளித்த காரியதரிசிகள் ராவ்பகதூர் கே. அரங்கசாமி முதலியாரவர்களுக்கும், கே. இராமநாதன் செட்டியாராவர்களுக்கும், செயற்குழுவினர்க்கும், சமாஜப் பொதுக் குழுவினர்க்கும் எனது உளமார்ந்த நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

எனக்கு முன்பு தலைமை வகித்துச் சமாஜ ஆண்டு விழாக்களைச் சிறப்புற நடத்திய பெரியோர்களின் பொருந்தகுதி என் மனத்தில் ஆழ்ந்து பதிந்து கிடக்கிறது. அப்பெரியோர்களிற் சிலர் இங்கு இருக்கின்றார்கள். எனது நண்பர் திரு. ம. பாலசுப்பிரமணிய முதலியாரவர்களை முற்படக் கூறுவேன். அவகள் வெகுகாலமாக, 22 ஆண்டுகளாக, சமாஜத்தின் காரியதரிசியாயிருந்து அரும்பணி புரிந்துள்ளவர்கள்; சமாஜம் குறுகிய நோக்கம் கொள்ளாமற் பரந்த நோக்கத்தாற் பணிபுரிந்து பெருமை யெய்தும்படி செய்தவர்கள்; நூல்கள் வெளியிட்டுத் தமிழ்மக்களுக்கு உபகாரம் புரிந்தவர்கள்; இவ்வகை வெளியீட்டில், சமய வேற்றுமை பாராட்டாது, சைவம், வைஷ்ணவம், ஜைனம் முதலியவற்றிற்குரிய இலக்கியங்களைப் பதிப்பிடுதலும் சமாஜத்தின் கடமையே என்பதைப் பிரசுர வாயிலாகத் தெளிவித்தவர்கள்; சித்தாந்த சாஸ்திரங்களையும் சைவ இலக்கியங் களையும் நன்கு பரிசோதித்துப் பதிப்பிட்டவர்கள்; சங்க இலக்கியங்

களனைத்தையும் ஒரே தொகுதியில் பல்வகை ஆராய்ச்சிக் குறிப்புகளுடன் வெளியிட்டவர்கள்; மாதந்தோறும் சித்தாந்தம், சைவ முதலியன பற்றிப் பிரசங்கம் நிகழ்வதற்கு வேண்டும் ஏற்பாடு செய்தவர்கள், ஆண்டுதோறும் சித்தாந்தம் பற்றிய பரீக்ஷைகளை நடத்தி, மாணவர்களிடையே சாஸ்திர வுணர்ச்சியைப் பரப்பி வருபவர்கள்; வேனிற் கால வகுப்புக்கள் நடத்தி, பல அன்பர்களுடைய உதவி கொண்டு சித்தாந்த சாஸ்திர விளக்கஞ் செய்துவருபவர்கள்; இந்த ஆண்டிலே, ஸ்ரீலஸ்ரீ தருமபுர ஆதீனத்துப் பண்டார ஸந்நிதி களுடைய ஆதரவிலே, சம்பந்தர் தேவாரத்தில் முதல் திருமுறைக்குத் தக்க வித்துவானைக் கொண்டு உரையெழுதி முற்றுவித்தவர்கள்; நூல் வெளியீட்டுப் பணியில் முதலியாரவர்களுடன் ஒத்துழைத்து வருபவர்கள் எனது அருமை நண்பர் திரு. டி.கே. நாராயணசாமி நாயுடு அவர்கள்.

எனது நண்பர் ராவ்பகதூர் சி.எம். இராமச்சந்திரஞ் செட்டியாரவர்கள் இங்கே வந்துள்ளார்கள். இவர்கள் தலைமை வகித்தும் சொற்பொழி வாற்றியும் பணிபுரிந்து வந்திருப்பதுடன், சென்னை அறநிலையப் பாதுகாப்புக் கழக உறுப்பினராக இருந்த காலத்து, நமது நாட்டுத் திருக்கோயில்களின் வரலாறுகளைச் சரித்திர நெறியில் எழுதுவித்து வைதிகசமயங்களுக்குப் பெருந்தொண்டு புரிந்தவர்கள். இவர்களைப் போன்ற பல பெரியோர்கள் இங்கே விஜயம் செய்திருக்கிறார்கள்.

இங்கே வர இயலாமற் போயினும், தாம் இருக்குமிடங்களிலிருந்தே நமக்கு ஆசி அளித்து வருகின்ற தலைவர்கள் சிலரை நாம் நினைத்துப் போற்றுதல் வேண்டும். முதலாவது எனது தமிழாசிரியர் மறைமலை யடிகளைக் கூறல் தகும். இவர்கள் சமாஜத்தை நிறுவியர்களுள் ஒருவர்; தமது தமிழ்வளம் படைத்த நூல்களாலும், இனிய சொற்பொழிவுகளாலும் நமது தமிழன்னைக்கு அரும் பெரும் பணிகள் ஆற்றியுள்ளவர்கள்; சைவ சித்தாந்த உணர்ச்சியில் தலைசிறந்தவர்கள். சிவக்கவிமணி திருவாளர் சி.கே. சுப்பிரமணிய முதலியாரவர்களையும் இங்கே குறிப்பிடல்தகும். இவர்களது பெரிய புராண உரையும் உருக்கமான பக்திப் பிரசங்கங்களும், சைவ அடியார்களது உள்ளத்தைக் குழைவித்துவருவன. பண்டிதமணி மு. கதிரேசஞ் செட்டியாரவர்களைக் குறித்து நான் உங்களுக்குச் சொல்ல வேண்டுமென்ற அவசியம் இல்லை. இவர்கள் பெரியபுராண நயம் பற்றியும் திருவாசக நயம் பற்றியும் செய்துவந்த சொற்பொழிவுகள், சுக்ரநீதி மொழிபெயர்ப்பு முதலியன இவர்களுடைய வடமொழி தென் மொழியுணர்ச்சியையும் சொல்நயம் பொருள் நயங்களை

உணருகின்ற கூர்ந்த அறிவையும் கேட்போரை வசீகரிக்கும் ஆற்றலையும் புலப்படுத்துகின்றன. திரு. வி. கல்யாணசுந்தர முதலியாரவர்கள் இந்த சமாஜத்திற்கு ஊன்றுகோலாயிருந்து உதவி வருபவர்கள். இவர்களுடைய பரந்த அறிவும் கல்வியும் இவர்களுடைய உணர்ச்சி வேக மிக்க தமிழ் நூல்களும், மக்கள் உள்ளத்தை ஊக்க வெறியினால் நிரப்பிக் குதித்துக் கூத்தாடச் செய்யவல்ல அரிய சொற்பொழிவாற்றலும் நம்மவர்களால் என்றும் போற்றுதற்குரியன. திண்ணிய தூண்போல் நின்று சைவ சித்தாந்தத்தைத் தாங்கி வருபவர்கள் திரு. ந. சிவகுருநாத பிள்ளையவர்கள். இங்ஙனம் பலர்.

பூதவுடம்பை நீத்துப் புகழுடம்பில் நின்று நமக்கு ஆசியருளும் பெரியார் சிலரைக் குறித்தும் நாம் நினைவு கூர்தல் தகும். ஸ்ரீலஸ்ரீ ஞானியார் சுவாமிகளது திருநாமமே முதற் கண் நம் மனத்தில் தோன்றுவது. வடமொழி தென்மொழிகளிற் பயின்ற பரந்த கல்வியும், ஆழ்ந்த சைவ சாஸ்திர உணர்ச்சியும் மாணவர்களுக்கும் ஏனையோருக்கும் போதித்து அன்னோரை நல்வழிப்படுத்த வேண்டுமென்ற பேரருளும், தம்மை அணுகினார் மீது இவர்கள் கொண்டிருந்த பேரன்பும் இவர்களது நிரம்பிய சொல்வன்மையும் தமிழுலகத்திலே இவர்களுக்குப் பெரும் புகழை விளைத்து நிறுவின. சமாஜ ஆண்டு விழாக்களில் இவர்கள் ஏழு முறைகள் தலைமை தாங்கிப் பெருஞ்சிறப்புற நடத்தினார்கள்.

எனது நண்பர் திரு. மா. பாலசுப்பிரமணிய முதலியாரவர்கள் செய்துள்ள அரும் பணிகளை முன்பு குறிப்பிட்டேன். அப்பணிகள் யாவும் தக்க சமயத்தில், கால நிலைக்கு ஏற்பச் செய்யப்பட்டன. காலஞ் செல்லச் செல்ல சமுதாய நிலையும் மக்கள் நிலையும், அரசியல் நிலையும் மாறிக் கொண்டேயிருக்கும். மக்களது கருத்துக்களும் நோக்கங்களும் அங்ஙனமே மாறிக் கொண்டிருக்கும். இவைகள் எக்காலத்தும் ஒரே தன்மையதாயிருக்க மாட்டா. வாழ்வின் இயல்பே இவ்வகை மாறுதல்கள்தான். எதுவும் ஒரே படித்தாய் நில்லாமைதான் இவ்வுலகத்து நிலை பெற்று நிற்பது. இதுபற்றியே, தோலாமொழித்தேவரும் ''நில்லாமை சால நிலை பெற்றதன்றே'' என்று கூறினர். காலம் என்னும் பெருநதி பெருக்கெடுத்துப் பரந்து நுரைத்துக் கொந்தளித்துக் குமிழியிட்டுக் கரைகளைத் தகர்த்து, எல்லாவற்றையும் வாரிச்சுருட்டிக் கொண்டு வேகமாய் ஓடிக் கொண்டேயிருக்கிறது. இதன் பேராற்றலை நோக்கி, இக்காலத்தையே கடவுளாகக் கொண்டாரும் நம்மவருள் உளர்.

*காலமே கடவு ளாகக் கண்டனம் தொழிலுக் கென்னின்,*
*காலமோ அறிவின் றாகும்; ஆயினும் காரியங்கள்*
*காலமே தரவே காண்டும்; காரணன் விதியி னுக்குக்*
*காலமும் கடவு ளேவ லால்துணைக் கார ணம்காண்.*

என்ற சித்தியார்ச் செய்யுள் இதற்குச் சான்று. உலகத் தோற்ற நாசங்களுக்குக் காலம் துணைக் காரணமாகும் என்பது இதன் கருத்து. ஸ்திதிக்குக் காலத்தின் தொழிலில் இடமில்லாமையறியலாம். ஆகவே பள்ளத்தை மேடாக்கியும், மேட்டினைப் பள்ளமாக்கியும், அடி நிலத்தைப் பெயர்த்தெறிந்தும், கால நதி சென்று கொண்டிருக்கிறது. சராசரங்களெல்லாம் அதன் வயப்பட்டு ஒழுகுகின்றன. அதன் வழிப்பட்டொழுகி, இயற்கை யாற்றல்களுக்கும் மாறிக் கொண்டே யிருக்கும் சூழ்நிலைகளுக்கும் தக்கவாறு, மாறியமைந்து வருவனவே உயிருள்ளனவாய் நிற்கும். ஏனையவோ எனின், அவை உயிரிழ அழிந்து வுறுதல் திண்ணம்.

நமது சைவ, சமயம் பல பல நூற்றாண்டுகளாகக் கால நெறியோடு ஒத்தியங்கிச் சென்றது. கி.பி. முதல் நூற்றாண்டிலிருந்து இதன் வாழ்க்கை தமிழ் நாட்டில் அறியக் கிடக்கின்றது. தொடக்கத்தில் கிரியைகளின்றி வணக்க மாத்திரமாய் இது அமைந்திருந்தமை சங்க நூற் சான்றுகளால் அறியலாம். கி.பி. 5ஆம் நூற்றாண்டிலிருந்து நமது சமயத்திற்கு ஒரு புது வாழ்க்கை ஏற்பட்டது. பக்தி நெறியானது தமிழ் நாட்டில் பெருக்கெடுத்துப் பரவியது. சைனம் முதலிய பிற சமயங்களோடு வாதிட்டு வெற்றி கொண்டது. பின் இராஜாங்க சமயமாக இது அமைந்தது. அரசர்கள் கோயில்கள் எடுப்பித்துப் போற்றி வந்தனர். அப்பர், சம்பந்தர், சுந்தரர் முதலிய அருணெறிச் செல்வர்களுடைய திருப்பாடல் நமது சமயத்திற்குப் புத்துயிரளித்தது. இவர்கள் சைவசமயாசாரியர்கள் என்றே கொண்டாடப்பட்டனர். மணிவாசகப் பெருந்தகையாரது திருவாசகம் சைவ சமயத்தின் பெருமைக்கு வரம்பாக நின்றது. இங்ஙனமாகப் பக்திநெறியோ டொத்து நமது சமயம் வளர்ந்து வரலாயிற்று. மக்கள் வாழ்க்கையின் உயிராயமைந்து, அதற்கு இனிய பண்பு அளித்து, அதனை ஆற்றலுடையதாய்ச் செய்துவந்தது. திடீரெனச் சண்டமாருதம் கிளம்பிற்று. தத்துவ விசாரணைகள் நாடெங்கும் நடைபெற்றன. மக்கள் உள்ளம் ஒருநிலைப்படாது தத்தளித்தது.

*விரத மே பர மாக வேதியருஞ்*
*சரத மாகவே சாத்திரங் காட்டினர்*
*சமய வாதிகளும் தத்தம் மதங்களே*

*அமைவ தாக அரற்றி மலைந்தனர்*
*மிண்டிய மாயா வாத மென்னும்*
*சண்ட மாருதஞ் சுழித்தடித் தாஅர்த்(து)*

என்று திருவாசகத்தில் வரும் அடிகள் மாணிக்கவாசக சுவாமிகள் வாழ்ந்த காலத்தே நிகழ்ந்த தத்துவ விசாரணைச் சண்ட மாருதத்தையே குறிக்கின்றன என்று கொள்ளலாம். ஸ்ரீ சங்கராச்சாரியாரும் இக்காலத்தே வாழ்ந்து தமது வேதாந்த சூத்திர பாஷ்யத்தால் அத்வைத நிர்ணயம் செய்து வந்தனர். பல இடங்களுக்கும் சென்று மற்றைச் சமயவாதிகளோடு தர்க்கம் புரிந்தனர். மக்களது அடிப்படையுணர்ச்சி யொன்றினின்று எழுந்த சமயமும் (Religion) தத்துவ சாஸ்திரத்தின் உதவியின்றித் தனித்து நிற்பது இயலாமற் போயிற்று. பக்தி நெறி முதன்முதல் செழித்திருந்த காலத்து வைதிக சமயம் அதன் வழிப்பட்டு விளங்கியது போலவே, இப்பொழுது பக்தியுடன் தத்துவ விசாரணைகளையும் தன்மேல் இட்டுக் கொண்டு புதிய சூழ்நிலைக்குத் தக்கவாறு தன்னை அமைத்துக் கொள்ள முயன்றது. இவ்வாறாக நமது சைவ சமயமும் தனது பூர்விகக் கொள்கைகளுக்கு ஏற்ப, ஒரு சில தத்துவக் கொள்கைகளை அனுசரித்து ஒழுகியது. சைவ சித்தாந்தம் இவ்வாறு தோன்றியதேயாகும். ஆகவே வேத புராணங்களின் வழியாகத் தோன்றி, மக்கள் உள்ளத்தில் பரந்து, பக்தி மார்க்கத்தில் ஒழுகி, தத்துவ சாஸ்திரத்தின் சார்பினாலே நமது சமயம் வாழ்ந்து வருவதாயிற்று. தத்துவ சாஸ்திரக் கொள்கைகள் சங்கரரின் அத்வைதக் கொள்கைக்கு முற்றிலும் மாறுபட்டனவாய் ஆகமங்களின் வழிப்பட்டனவாய் அமைந்தன. இந்த உண்மையையே,

*வேதம்பசு அதன்பால் மெய்யாகமம் நால்வர்*
*ஓதும் தமிழ்அதனின் உள்ளுறுநெய் - போதமிகு*
*நெய்யின் உறுசுவையாம் நீள்வெண்ணெய் மெய்கண்டான்*
*செய்ததமிழ் நூலின் திறம்*

என்ற வெண்பா ஒருவாறு உணர்த்துகிறது.

சைவ சித்தாந்த சாஸ்திரங்கள் பன்னிரண்டாம் நூற்றாண்டில் தோன்றிப் பின் பெருகலாயின. இவ்றறின் உரைகள் தத்துவக் கருத்துக்களை நன்கு விளக்கி வந்தன. சைவ மடங்கள் சைவ சமய பரிபாலனத்துக்கென்று ஏற்பட்டு, சைவ சமயத்திற்கு ஊன்றுகோல் போல் உதவி, சமய சாஸ்திரக் கல்வியைப் போற்றி வளர்த்து வரலாயின. அன்றியும் இம்மடங்கள் சைவ மக்களுக்குக்

குருபீடங்களாக விளங்கி, அவர்களுக்குச் சமய உணர்ச்சியையும் சாஸ்திர உணர்ச்சியையும் பயில்வித்து வந்தன. பொது மக்கள் புராணவாயிலாகச் சாஸ்திரக் கருத்துக்களை அறிந்து கொள்ளுதல் எளிது என்று கருதிச் சாஸ்திரம் அறிந்த கவிஞர்கள் புராணங்கள் இயற்றத் தொடங்கினார்கள். புராணங்களுள் முதன்மைபெற்று விளங்குவன பெரிய புராணம், கோயிற் புராணம் முதலியன. பக்தியும் சாஸ்திரக் கருத்தும் தமிழ் நாட்டிற் பரவுவதற்குப் புராணங்களே பெருங் கருவிகளாக அமைந்து விட்டன.

இப்புராணங்களும் சென்ற நூற்றாண்டின் இறுதியோடு முடிந்துவிட்டன என்றே கூறவேண்டும். இவற்றிலுள்ள கதைகளை வாசித்துப் பயன் பெறுவதில் தமிழ் மக்களுக்கு ஊக்கமின்றிப் போயிற்று. இவற்றில் நம்பிக்கைதானும் இல்லையென்றாகிவிட்டது. மடங்களின் சைவ சமய பரிபாலன முயற்சியிலும் தளர்வு தோன்றத் தொடங்கிற்று. முதலில் அவற்றுக்கு இருந்த மகிமை சிறிது சிறிதாகக் குறைவு படத் தலைப்பட்டது. சைவ சீலமும் ஒழுக்கமும் குன்றி விட்டன. இக் காரணங்களால் சைவ சமயம் காலத்தின் வேகத்தோடு ஒத்தியங்கிச் செல்லாதபடி, ஒருபுறமாய் ஒதுக்கப்பட்டது. நமது சைவசித்தாந்த சமாஜம் இந்நிலையை ஒருவாறு உணர்ந்து புது வழிகளில் முயன்று சைவ சமயத்தை இயக்குதற்கு முற்பட்டது. நான் இங்கே கூறியது சிறிது மிகைப்படச் சொல்லுதல் என்று சிலர்க்குத் தோன்றலாம். ஆனால் உண்மை அப்படியன்று. சைவ சமயத்தின் சரித்திரத்தைக் கூர்ந்துணர்ந்தவர்கள் என் கருத்தோடு முற்றும் உடன்படுவார்கள். இன்று சைவ இளைஞர் மகாநாடு நடைபெறு கின்றது. இவ்வாறே சைவ மங்கையர் மகாநாடும் நடைபெறுகின்றது. இவ்வகை மகாநாடுகள் புதுமுறைகளல்லவா? இளைஞர்கள் மாணவர் களாகயிருந்து கற்க வேண்டியவராயிருக்க, இவர்கள் மகாநாடு கூடி, கருத்துக்களை வெளியிட்டுச் சமய இயக்கத்தை நெறிப்படுத்துவது பண்டைய காலத்தில் இல்லை. இப்பொழுதுதான் ஏற்பட்டுள்ளது. சைவ மங்கையர்களும் மகா நாடுகளில் தங்கள் கருத்துக்களைத் தெரிவித்து, சைவ சமய முன்னேற்றத்தில் பங்கு கொள்ளுதல் இப்பொழுது சில ஆண்டுகளாகத்தான் நடைபெற்று வருகிறது.

இந்த ஆண்டு நிறைவு விழாவின் நிகழ்ச்சி முறையின் இறுதியில், ‘அருகாமையிலுள்ள சேரிகளில் சமாஜத்தினர் 24.12.46ல் தொண்டு செய்வர்’ எனக் காணப்படுகிறது. இதுவும் சமய முன்னேற்றத்திற்குரிய ஒரு புது வழியாக நமது சமாஜத்தாரால் கொள்ளப்பட்டதாகும்.

மேற்சுட்டியபடி சைவ சமயத்தின் க்ஷீண நிலையை ஒருவாறு உணர்ந்து அதற்கு உரம் கொடுக்கும் பரிகாரச் செயல்களைச் சமாஜம் செய்து வந்தபோதிலும், தற்காலத்து நமது சமயத்தை எதிரிட்டு நிற்கும் சக்திகளனைத்தையும் தெரிந்து கொண்டோமென்று எண்ணுவதற்கில்லை. இவையனைத்தையும் தெரிந்து கொண்டாலன்றி நாம் மேற்கொள்ளும் பரிகார முயற்சிகளும் வேண்டிய அளவு பயன்படமாட்டா. சைவ சமயமும் நாளுக்குநாள் மெலிந்து கொண்டே செல்லும். ஆதலால் இப்பொழுது இருக்கும் சமயநிலையை நாம் நன்றாக உணர்ந்து கொள்ளுதல் வேண்டும். முதலாவதாக நமது இளைஞர்களை எடுத்துக் கொள்வோம். அவர்களுடைய மனப்போக்கு முற்றும் மாறிவிட்டது. சமயம் என்ற சொல்கூட அவர்களுக்கு அருவருப்பைத் தருவதாக உள்ளது. தெய்வ பக்தியும் விசுவாசமும் நாளுக்குநாள் குறைந்து வருகிறது என்றுதான் கூறவேண்டும். அவர்கள் மீது பழிசுமத்துவதும் தகாதென்று தோன்றுகிறது. ஒருகாலத்தில் நம்மவர்கள் புராணக் கதைகள் பலவற்றை நம்பி வந்தனர். அவற்றின்மீது கட்டப்பெற்ற சமயங்களைப் பின்பற்றி ஒழுகி வந்தனர். ஆனால் இப்பொழுதுள்ள நம் சந்ததியார்களுக்குப் புராணங்களை நம்புவதில் மனம் ஒருப்படவில்லை. கிரீஸ் தேசத்தில் 'மித்ஸ்' (Myths) என்று சொல்லப்படுவன நமது புராணக் கதைகளை ஒத்தன. அவைகளை உண்மையென்று பூர்விக கிரேக்கர்கள் நம்பி வந்தனர். ஆனால் பிற்காலத்தில் அவற்றைச் செய்யுட்களில் அமைப்பதற்கேற்ற கற்பனைக் கதைகளென மட்டும் கொண்டார்கள்; அவ் அஸ்திவாரத்தின்மீது தோன்றிய மதத்தில் நம்பிக்கை இழந்துவிட்டார்கள். அதுபோன்ற ஒரு நிலைமைதான் இப்பொழுது நம் நாட்டில் இருந்து வருகிறது. நம் இளைஞர்கள் பெரிய புராணத்தைக் கற்கின்றார்கள்; கற்ற அறிஞர்கள் கேட்கின்றார்கள். ஆனால் அதன் இலக்கியச் சுவைதான் நம் இளைஞர்களுக்குப் பெரும் பயனாகத் தோன்றுகின்றதேயன்றி, அதன் பக்திச் சுவையில் ஈடுபடுவார் பெரும்பாலும் இல்லை.

இரண்டாவதாக, தற்காலத்தில் நாம் பயின்றுவரும் கல்வியும் அதன் நோக்கமும் சமய உணர்ச்சிக்கு அநுகூலமாக அமையவில்லை. கல்வி முறையிலே சமயத்திற்குரிய கல்வி விஷயங்கள் இருத்தற் கிடமில்லை. இருந்தால் பொதுக் கல்வியின் நலத்தைக் கெடுத்து விடும் என்று கூடச் சொல்லலாம். பல சமயங்களைச் சார்ந்தவர்களும் பொதுப்பட உள்ள கல்வியையே அரசியலார் கவனித்தல்கூடும். பள்ளிக் கூடங்களில் ஹிந்துக்கள், முகமதியர்கள், கிறிஸ்தவர்கள்

முதலிய பல சமயங்களைச் சார்ந்தவர்களும் ஒன்றாகப் படித்து வருகிறார்கள். இவர்களுக்குச் சமயக் கல்வியைக் கலாசாலைகளில் போதித்து வருவதென்றால்சிறிதும் இயலாத காரியமாகும். பலவகையான சச்சரவுகளும் ஏற்படக்கூடும். இதற்கு அரசாங்கத்தினர் இடம் கொடாமல் இருப்பதே நலமாகும். அன்றியும் பொதுக் கல்விச் சாலைகளில் கல்வி போதிக்கும் நோக்கமே சமய உணர்ச்சியன்று.

*கற்றதனா லாய பயனென்கொல் வாலறிவன்*
*நற்றாள் தொழாஅர் எனின்*

என்று வள்ளுவர் கூறிய கருத்துக்குப் பிரசங்க மேடைகளிலன்றி வேறு இடங்களில் ஆதரவு உண்டோ என்பது பெரியதும் ஐயப்பாட்டுக்கு இடமாகவே யிருக்கிறது. பொதுக் கல்வியின் நோக்கமெல்லாம் உலக வாழ்க்கைக்கு ஒருவனைத் தகுதியுடையவன் ஆக்குவதேயாகும். இந்நோக்கம் எவ்வளவு சிறிய அளவில் கைகூடுவதாயினும், அதனையே மக்கள் விரும்பிப் பொதுக் கல்வியின் ஈடுபடுகின்றார்கள். ஆதலால் பொதுக் கல்வி சமய உணர்ச்சிக்குச் சிறிதும் பயன்படுவதாய்க் காணவில்லை.

மூன்றாவது, இப் பொதுக் கல்வியின் பயனாகவும் தற்காலத்தில் மேல் நாட்டிலுள்ள கல்வியறிவின் பயனாகவும் ஏற்பட்டுள்ள விஞ்ஞான உணர்ச்சி சமயத்திற்குப் பிரதிகூலமாயுள்ளது. எதனையும் ஆராய்ந்து துணிய வேண்டும் என்ற மனப்பான்மை விஞ்ஞான உணர்ச்சியினால் நமக்கு ஏற்பட்டிருக்கிறது. சமய விஷயத்தையும்கூட இம் மனப்பான்மை பாதிக்கிறது. முன்னோர் கருத்துக்களையும் நமது பூர்வீக சாஸ்திரங்களையும் கருத்துக்களையும் ஆராய்ச்சி முறையில் பார்த்து அவற்றின் வன்மைமென்மைகளைச் சீர்தூக்குதல் வேண்டும் என்று ஒருவன் கருதினால், அவனுக்குச் சமயப் பற்று உண்டாவதற்கு இடம் இராதல்லவா? ஒரு சிலர் ‘விஞ்ஞான சாஸ்திரங்களை விரிவாகக் கற்றால் சமயப்பற்று உண்டாகும்; அவ்வாறன்றி அரைகுறையாய்ப் படிப்பதனால்தான் சமுதாயக் கட்டுப்பாட்டுக்கு இன்றியமையாததாயுள்ள சமயப் பற்று ஏற்படாமல் போய்விடுகிறது’என்று சொல்லலாம். நாம் இங்கே நோக்குவது பொதுப்பட விஞ்ஞானக் கல்வியினால் உண்டாகிற விளைவுமட்டுந்தான். விஞ்ஞானத்தை நிரம்ப விரிவாகக் கற்றால் என்ன பயனை அது தரும் என்ற கேள்வியை நாம் எடுத்துக் கொள்ளவில்லை. இவ்வாறு சொல்பவர்களும் கூட விஞ்ஞானக் கல்வியின் பொது விளைவு நாம் கூறியதே என்பதை ஒருவாறு ஒப்புக் கொள்ளுகிறார்கள். இப்பொழுது நமது நாட்டில் விஞ்ஞானக் கல்வி வேண்டுமென்று பரந்த கிளர்ச்சி

உண்டாகியிருக்கிறது. இது நமது நாட்டின் அபிவிருத்திக்கு அவசியம் என்றே தோன்றுகிறது. இக்காரணத்தாலும் நமது சமய உணர்ச்சி குன்றிவருகிறதென்றே சொல்லுதல் வேண்டும்.

நான்காவதாக, தற்காலத்து வாழ்க்கைப் போராட்டத்தைக் கூறுதல் வேண்டும். முற்காலங்களில் இருந்ததுபோல, எளிய திருப்திகரமான வாழ்க்கை இல்லாமற் போய்விட்டது. எவ்வகையான முயற்சியிலும் போட்டி ஏற்பட்டு விட்டது. அந்தப் போட்டிகளில் சமயத்தைப் பற்றிய நினைவே உண்டாகமற் போய்விடுகிறது. நாளுக்குநாள் இப்போட்டி வலுவேறிக் கொண்டு வருகிறது. இதுவும் சமய உணர்ச்சிக்குப் பெரியதோர் இடையூறாக அமைந்துள்ளது.

ஐந்தாவதாகக் கூறவேண்டுவது சமுதாய நோக்கமாம். அரசியல் நோக்கமும் இதன்கண் அடங்கும். சமயம், ஜாதி முதலியவற்றால் பிரிவுபட்டுக் கிடக்கின்ற நமது தேசத்து மக்களை ஒன்றுபடுத்துவதே அரசியலார் நோக்கமும் சமுதாய நோக்கமுமாக இருந்து வருகிறது. நமது நாடு பிற நாடுகளைப் போல் சுதந்திர உரிமையோடு தலையெடுத்து நிற்க வேண்டுமானால், இவ்வொற்றுமை மிகவும் இன்றியமையாதது. பாரதியாரும் 'ஒன்றுபட்டாலுண்டு வாழ்வு' என்று நமது சமுதாய லட்சியத்தை உணர்த்தியிருக்கிறார். இதனால், பரந்த மதப்பாகுபாடுகளன்றி, சிறு மதப்பிரிவுகள் நம்மவர்களால் பொருட் படுத்தப்படவில்லை. உதாரணமாக, ஹிந்து, கிறிஸ்தவன் என்ற பாகுபாட்டை நாம் வைத்திருக்கிறோம். ஆனால் சைவம் வைஷ் ணவம் என்ற பாகுபாட்டை நாம் மிகுதியாய்ப் பாராட்டுவதில்லை. பரம்பரைச் சைவ வேளாளர்களுள் வைஷ்ணவ வேளாளர்கள் கொண்டு கொடுத்து மணவினை செய்வது நாம் அறிந்ததே. இவ்வாறே பிராம்மணர்களுள்ளும் பிற பிரிவினர்களுள்ளும் கலப்பு மணவினைகள் நடக்கக் காண்கிறோம். இவ்வகையான மணவினைகள் கால அளவில் மிகுதியாகுமே தவிர, சிறிதும் குறைவுபடமாட்டா. இதனாலும் நமது சைவசமய உணர்ச்சியும் பற்றும் ஒருவாறு குறைந்து கொண்டு வருகின்றன என்றுதான் சொல்லவேண்டும். முற்காலங்களில் அரசர்கள் தாம் பின்பற்றிவரும் சமயங்களுக்குப் பெரிதும் ஆதரவளித்துப் போற்றிவந்தார்கள். நம்முடைய திருக்கோயில்கள் இதற்கு ஒரு சான்றாகும். அரசர்கள் பெயரால் திருக்கோயில்களுக்குப் பெயர்கள் இடுதலும் பண்டைக் காலத்து வழக்கமாகும். தஞ்சை ராஜராஜேசுவரம், பரமேசுர விண்ணகரம் என்ற பெயர்களால் இதன் உண்மை உணரலாம். ஆனால் தற்காலத்தில் அவ்வகையான அரசாங்க ஆதரவு

சமயங்களுக்கு ஏற்படட வழியில்லை. அரசியலார் சமயங்களோடு தங்களைச் சார்புபடுத்திக் கொள்வது தற்கால நிலைக்குப் பொருந்துவதன்று. ஆகவே அரசியலார் நோக்கமும் சமய உணர்ச்சிக்குப் பயன்படுவதாக இல்லை.

ஆறாவதாக, மற்றைச் சமயங்களின் செல்வாக்கும் நமது சமய உணர்ச்சிக்கு இடையூறாக உள்ளது. உதாரணமாக, கிறிஸ்தவ சமயம், மகமதிய சமயம் இவ்விரண்டினையும் எடுத்துக் காட்டலாம். இச்சமயங்கள் பிற சமயங்களிலுள்ளவர்களைத் தமது மதங்களைத் தழுவுமாறு தூண்டுகின்றன. இதனால் சமய உணர்ச்சி குன்றுவதோடு சமுதாயக் கட்டுப்பாடும் அழிந்து விடுகிறது. அன்றியும் இவை போன்ற சமயங்களின் கொள்கைகளை நம் சமயத்தவர்கள் அடிக்கடி கேட்டு வருவதனால், சமயத்தின்மீது ஓர் உதாசீனபுத்தி ஏற்பட்டுவிடுகிறது. இப்பொழுது பௌத்த சமயக் கொள்கைகளுக்குப் பேராதரவு நம்முடைய சைவ சமயிகளிடையிலே காணப்படுகிறது. ஒரு காலத்தில் சைவ சமயமும் பௌத்தமும் பெரும் போரிட்டு ஒன்றையொன்று தாக்கி வந்தன. அக்காலத்தில் பௌத்தம் தலைவணங்கிப் போயிற்று. சம்பந்தர் தமது தேவாரத்தில் பதிகந்தோறும் பௌத்தர்களைக் கடிந்தும் பழித்தும் கூறியிருப்பதை நாம் அறிவோம். இந்நிலைமை இப்பொழுது முற்றும் மாறிவிட்டது. ஒரு பார்வையில் இது நலமென்றே தோன்றுகிறது. பரந்த நோக்கம் ஏற்படுவது எப்பொழுதும் பாராட்டத் தக்கதுதான். ஆனால், இது காரணமாக, நமது சமயத்தைப் பற்றிய உணர்ச்சி குறைந்து வருகிறதென்பதும் உண்மையே.

ஏழாவதாக, நமது சமுதாயத்தைப் பேணிப் பாதுகாப்பதற்கு என்று ஏற்பட்ட மடங்கள் வேண்டும் அளவு அதனைக் கண்காணியாது இருப்பதும் சமயப் பற்றுக் குறைவதற்கு ஒரு காரணமாகும். இதை விரித்துக் கூறுவது பயனற்ற வேலை. ஆனால் நான் கூறியதன் உண்மை யாவருக்கும் எளிதில் புலனாகக் கூடியதே. ஒரு விஷயம் இங்கே தனிப்பட எடுத்துச் சொல்லுந் தகுதி வாய்ந்தது. இப்பொழுது சில ஆண்டுகளாக நமது மடங்களின் தலைவர்கள் சமயத்தைப் பேணுவதில் ஊக்கங்கொண்டு பெரிதும் உழைத்து வருகிறார்கள். சமய சாஸ்திரங்கள் பலவும் இவர்களால் இப்பொழுது வெளியிடப்பட்டு வருகின்றன. சமயம் பற்றிப் பிறர் செய்துவரும் முயற்சிகளுக்கு இவர்கள் ஆதரவளித்தும் வருகிறார்கள். என்றாலும் இம் முயற்சியின் அளவு போதியதென்று கருத முடியவில்லை. இம்முயற்சியும் தக்க நெறியில் செல்லுகின்றது எனவும் சொல்ல

முடியவில்லை. தற்காலத்துள்ள கல்வியின் பரப்பும் பிற சமயிகள் செய்து வருகின்ற முயற்சிகளின் தன்மையும் நாம் நன்கு உணர்ந்து கொள்ளுதல் வேண்டும். பிறரைத் திருப்தி செய்வதற்கும், அரசியலார் சட்டத்தின் பொருட்டும் செய்கின்ற சிறு முயற்சிகள் பயன்தர மாட்டா. கல்வியறிவு நிரம்பிய பெரியோர்களின் ஒத்துழைப்பு இல்லாமைதான் நமது மடத்துத் தலைவர்கள் தக்கவாறு வேண்டுமளவு நமது சமயத்தைப் பேணாமைக்குக் காரணமென்று கூடச் சொல்லத் தோன்றுகிறது. ஆகவே மடங்களின் நிலைமை சமயப் பற்றின் வளர்ச்சிக்கு .வேண்டுமளவு உதவுவதாக இல்லை.

முடிவில், நமது சமயக் கொள்கைகள் தினந்தோறும் வளர்ந்து வருகிற அறிவு வளர்ச்சிக்கு ஒத்திணங்கிச் செல்லவில்லை. பண்டைக்காலத்தில் நம் மூதாதையர் கொண்டிருந்த நம்பிக்கைகளை நமது சமயம் இன்னும் அடிப்படையாகக் கொண்டிருக்கிறது. தற்காலத்திலே உள்ள நூலறிவு மேன்மேலும் வளர்ந்து கொண்டே வருகிறது. பிரகிருதியைப் பற்றிய அறிவு நாள்தோறும் பெருகி வருகிறது. இவ்வகையான அறிவுப் பெருக்கங்களைப் புறக்கணித்துச் செல்லுகின்றன நமது சமயங்கள். இதனால் சமய சாஸ்திரக் கொள்கைகளுக்கே வலிமையில்லாமல் போகின்றது. நமது பொது மக்களும் சமய சாஸ்திரங்களை நெகிழ்ந்து சோரவிடும்நிலைமை உண்டாகியிருக்கிறது.

மேற்குறித்த இடையூறுகளோடு நமது சமயப் பற்றுப் போராட வேண்டுவதாக உள்ளது. பலவகையிலும் நாம் முயன்று முன்னேறினாலன்றி நமது சமயம் வெற்றியுறுவதற்கு வழியில்லை. நமது சமாஜம் அரிய வேலைகள் செய்து வந்துள்ளது. ஆனால், இன்னும் பலபடியாக பலதுறைகளிலும், விரிந்த நோக்கத்துடனும், பரந்த அறிவுடனும் சமாஜம் பணி புரிந்துவர முற்படுதல் வேண்டும்.

இனிச் செய்யவேண்டும் பணிகளை இரண்டு கூறாக வகுக்கலாம். இப்பொழுதுள்ளபடி நமது சித்தாந்த சாஸ்திரங்களை நன்கு உணர்ந்து கொள்ளுவதற்கு வேண்டும் பணிகள் ஒரு வகை. மற்றொரு வகை நமது முடிவான கொள்கைகள் மேலை நாட்டுத் தத்துவ விசாரணைகளோடு ஒத்து நிற்கக்கூடிய அளவில் விஞ்ஞான சாஸ்திரங்களை அடிப்படையாகக் கொண்டு அமைக்கும்பணி மற்றொரு வகை.

இருவகைப் பணிகளுள் முதல் வகையைக் குறித்துச் சில சொல்ல விரும்புகிறேன். நமது சமய சாஸ்திர நூல்கள் இன்னும் வரையறுத்த

பாடங்களுடனும் துணைக்கருவிகளுடனும் வெளிவரவில்லை. அவை யின்ன வென்பது கூட இன்னும் உறுதிப்படவில்லை. பதினான்கு சாஸ்திரங்கள் சைவ சித்தாந்தத்துக்கு உரியன என்று அச்சுப் புத்தகங்கள் கூறிவருகின்றன. அவை:

*உந்தி களிறு உயர்போதம் சித்தியார்*
*பிந்திருபா உண்மை பிரகாசம் - வந்த அருட்*
*பண்புவினா போற்றிகொடி பாசமிலா நெஞ்சுவிடு*
*உண்மைநெறி சங்கற்ப முற்று*

என்ற வெண்பாவிற் காணப்படுவன. ஆனால் இதில் உள்ள உண்மை நெறி விளக்கம் உமாபதிசிவம் இயற்றியதன்று என்பதும், பதினான்கு சாஸ்திரங்களுள் அது அடங்கியதன்று என்பதும், தென்னாட்டிலுள்ள சாத்திரச் சுவடிகளால் விளங்கும். இங்குள்ள சுவடிகளில், இந்நூலுக்குப் பதிலாக, துகளறு போதம் காணப்படுகின்றது. முதன்முதல் இவ்விஷயத்தைத் தெரிவித்தவர்கள் எனது நண்பர் காலஞ்சென்ற திரு எஸ். அநவரதவிநாயகம் பிள்ளையவர்கள். நமது ஸமாஜத்தார் 1934ல் வெளியிட்ட சித்தாந்த சாஸ்திரப் பதிப்பில் இத்துகளறு போதம் சேர்க்கப்பட்டிருந்தது. 1940ல் வெளி வந்த இரண்டாம் பதிப்பில் இந்நூல் நீக்கப்பட்டுள்ளது. காரணம் 'பழைய மரபு' என்று காணப்படுகிறது. இந்நூலைப் பின்பற்றிச் செய்த உண்மைநெறி விளக்கம் இதற்குரிய இடத்தை ஆக்கிரமித்துக் கொண்டது. உண்மைநெறி விளக்கம் இங்ஙனம் வந்த வழி நூலே யென்பது 'துகளறுபோதம் முப்பது அவதரமும் உண்மைநெறி விளக்கம் ஆறு பாட்டினும் தசகாரியமாய் அடங்கி வருவதற்கு வகை' என்று இந்நூலுரையில் வருதலால் அறியலாம். ஆதலால் துகளறுபோதமே பதினான்கு சாஸ்திரங்களுள் ஒன்றாகும். உண்மையில் இதுவே பழைய மரபுமாகும்.

இவ்வாறே திருந்திய பாடங்களை அமைத்துச் சாஸ்திர நூல்களைப் பதிப்பிடுதலும் அவசியமான ஒரு பணியாகும். ஏட்டுப் பிரதிகளின் உதவிகொண்டும், உரைகளின் உதவி கொண்டும், பிறநூல்களின் உதவி கொண்டும், பாடங்கள் திருந்த அமைதல் வேண்டும். இதன் அவசியத்தை ஒரு சிலர் உணர மாட்டார்கள். அவர்களைச் சாஸ்திரம் வல்லவர்களென்றும் கூற முடியாது. தமிழ் வல்லவர்களென்றும் கூற முடியாது. அவர்கள் கூற்றைப் பொருட்படுத்தாது இப்பதிப்பிடுந் தொழிலைத் தக்கவர்கள் மேற்கொள்ளுதல் வேண்டும். ஓர் உதாரணங் காட்டி மேற்செல்கிறேன். திருவாசகத்தில்,

*இந்திரனும் மாலயனும் ஏனோரும் வானோரும்*
*அந்தரமே நிற்கச் சிவன் அவனி வந்தருளி*
*எந்தரமும் ஆட்கொண்டு தோட்கொண்ட நீற்றனாய்ச்*
*சிந்தனையை வந்துருக்குஞ் சீரார் பெருந்துறையான்*
*பந்தம் பறியப் பரிமேற்கொண் டான்தந்த*
*அந்தமிலா ஆனந்தம் பாடுதுங்காண் அம்மானாய்*

என்று வரும் அருமை மணிமொழியை நீங்கள் அறிவீர்கள். இதனைத் திருக்களிற்றுப்படியார் எடுத்தாளுகின்றது. ஸமாஜப் பதிப்பில் முற்பதிப்புக்களுக்கிணங்க, முதலடி,

*பாய்பரி யொன்(று) அந்தப் பரமானந் தப்பரனை*

என்று காணப்படுகிறது. ஆனால் 'பரமேசுவரன் கொடுக்கப்பட்ட மேலாகிய ஆனந்தமாகிய பிரயோசனத்தை' என்று உரையுள்ளது. இவ்வுரை 'பாய்பரியோன் றந்த பரமானந்தப் பயனை' என்பதுதான் உரிய பாடமென்பதைத் தெளிவிக்கிறது. 'பரிமேற்கொண்டான் தந்த அந்தமிலா ஆனந்தம்' என்ற மணிமொழிப் பகுதியை இவ்வடி உட்கொண்டது. களிற்றுப்படியின் ஏட்டுப் பிரதியைத் தவறாக வாசித்ததன் விளைவே ஸமாஜப் பதிப்பு முதலியவற்றில் காணப்படுவது. இதுபோன்ற பிழைகள் நமது சமய சாஸ்திரங்களிலும் சைவ நூல்கள் பிறவற்றிலும் காணப்படுதல் பெரிதும் வருந்தத் தக்கது.

இனி, அடுத்து நாம் செய்யவேண்டிய பணி, நமது சமய நூல்கள் முதலியவற்றிற்குத் திருந்திய ஆராய்ச்சியுரைகள் எழுதுதலாம். எளிய நடையில் இயன்ற உரையென்றால், நம்மவர்களுக்கு ஒத்துக் கொள்வதில்லை. இலக்கண சூத்திரங்களைக் காட்டி 'அற்றன்று; நன்று கடாயினாய்' முதலிய படாடோபத் தொடர்களைப் பெய்து, மூலத்தின் கருத்தைக் கற்பவர்கள் உணர்ந்துகொள்ளாமற் செய்துவிடுவதே நல்ல உரையின் இயல்பாம் என்று நம்மவருள் ஒரு சிலர் கருதுகின்றனர். சித்தாந்த சாஸ்திரங்களில் மிகச் சிறந்தன சிவஞானபோதம், சித்தியார் (சுபக்கம்), சிவப்பிரகாசம் என்பனவாம். இம்மூன்றும் ஒரே நெறியில் அமைக்கப்பட்டவை. இவை முறையே முதல்நூல், வழிநூல், சார்புநூல் எனப்படுபவை. சிவஞானபோதம் இயற்றியருளிய மெய்கண்ட தேவரது சிஷ்யர், சித்தியார் இயற்றிய அருணந்தி சிவாசாரியார். இவ் அருணந்தியின் சிஷ்யராகிய மறைஞான சம்பந்தரின் சிஷ்யர் சிவப்பிரகாசம் இயற்றிய உமாபதி சிவாசாரியார். இவர்காறும், குரு சிஷ்ய பரம்பரை தவறாமல், உபதேசம்

கிரமமாக நிகழ்ந்து வந்திருக்கிறது. ஆகவே சாஸ்திரக் கருத்துக்களை நாம் உணர்ந்துகொள்வதில் இம்மூன்றும் ஒருங்கொத்துப் பயன்படுவன. ஒன்றன் கருத்துத் தெளிவாக இல்லாதவிடத்து பிறிதொன்றன் உதவியால் நாம் தெளிந்து கொள்ளலாம். இந்த முறையில் நாம் கற்பதுவே சரியெனத் தோன்றுகிறது. யாவரும் ஒத்துக்கொள்ளத் தக்க இம்முறையை விடுத்து, சொற்கிடக்கை முறைக்கும் பொருந்தாதபடி, சொற்களை அலைத்துத் திரித்து வேண்டும் பொருள் பெற வைத்த உரைகள் செவ்வியன ஆகமாட்டா. நான் குறித்துள்ள முறையில், ஒப்புநோக்குப் பகுதிகளை மேற்கோள் காட்டிக் கருத்துக்களை விளக்கியெழுதிய உரைகள் நமது சமய சாஸ்திரங்களுக்கு இன்றியமையாது வேண்டப்படும்.

சித்தாந்த சாத்திரங்கள் சிலவற்றிற்குரிய பேருரைகளைப் பற்றிச்சில வார்த்தைகள் இங்கே இயைபுடையன. சிவஞான போதத்திற்கு ஸ்ரீ சிவஞான சுவாமிகள் இயற்றிய திராவிட மாபாடியம் பெரும்புகழ் பெற்று விளங்குகிறது. பல சமய சாஸ்திரங்களையும், பல ஆகமங்களையும் நுட்பமாக ஆராய்ந்த தன் பெரும் பயனாக இது அமைந்துள்ளது. மூலத்தின் உண்மைப் பொருளை இது உணர்த்துகின்றதா என்பது ஐயுறவின்பாற்படினும், சித்தாந்தக் கொள்கைகளை விளக்குவதில் ஒப்புயர்வற்றதாகும். சிவஞான சுவாமிகள் தாமே எழுதிய உரைப் பிரதி திருவாடுதுறையாதீனத்தில் உள்ளது. இதனை நோக்கிச் செப்பஞ் செய்த ஒரு பதிப்பு வெளிவருதல் இன்றியமையாததாம்.

இங்ஙனமே சித்தியாருக்குத் தருமையாதீனத்து வெள்ளியம்பலத் தம்பிரான் இயற்றிய ஞானாபரண விளக்கம் என்னும் பேருரையும் பெருந்தகுதி வாய்ந்தது. இன்றுகாறும் இவ்வுரை அச்சில் வெளிவராதது சைவவுலகத்திற்கு ஒரு பெருங் குறையாகும். இக்குறை விரைவில் நீங்கும்படி இறைவன் அருள்புரிக!

இங்ஙனமே உரையில்லாத தேவாரம். திருவாசகம் முதலிய அருள் நூல்களுக்கும் உரைவகுப்பது அவசியமாகும். இவ்வுரைகள், நாலாயிரத் திவ்ய பிரபந்தத்திற்குப் பெரிய வாச்சான் பிள்ளை முதலியோர் இயற்றியன போன்று, அவ்வந் நூற் காலத்துத் தமிழ் மரபை விளக்கிக் கருத்தின் அழகைப் புலப்படுத்தி, பக்தியையூட்ட வல்லனவாய் அமைதல் வேண்டும். சுந்தரமூர்த்திகள் தேவாரத்திற்கு ஓர் உரை பல ஆண்டுகளுக்கு முன் வெளிவந்துள்ளது. இத்தேவாரம் ஒரு குறிப்புரையுடன் திரு. சோமசுந்தரஞ் செட்டியாரவர்களால் ஸமாஜப் பதிப்பாக வெளியிடப்பட்டுள்ளது. சம்பந்தர் தேவாரத்தில்

முதல்திருமுறைக்கு ஓர் உரை, தருமையாதீனத்தின் ஆதரவில் எழுதப்பட்டுள்ளமை பற்றி முன்பே கூறினேன். அவ்வுரையின் பதிப்பு உரிமையை நமது ஸமாஜத்திற்கே அவ் ஆதீனத்தார் அளித்துவிட்ட செய்தி இங்கே மகிழ்ச்சியுடன் பாராட்டிக் கூறத் தக்கது. திருமூலர் திருமந்திரத்திற்கு உரை வகுப்பது எளிதன்று. திரு. விஸ்வநாதப் பிள்ளை குறிப்புரையொன்று வெளியிட்டனர். இவ்வுரை அத் துணையாகப் பயன்தருவதன்று. மதுரைத் தமிழ்ச் சங்கத்திலிருந்து நூறு தெரிவுச் செய்யுட்களுக்கு எழுதிய உரையொன்று பதிப்பிக்கப்பட்டுள்ளது. இது பயன்படலாம். ஆகமங்களிலும் தந்திர நூல்களிலும் நல்ல தகுதியுடையவர்களே திருமந்திரத்திற்கு உரையெழுதுதற்கு உரியவர்கள். இத்தகையோர்கள் உரையிடுதற்கு முன்வரல் வேண்டும்.

சைவ நூல்களுக்கு உரையிடுவதேயன்றி, சைவம் பற்றிய வரலாற்று நூல்கள் எழுதுவதும் ஓர் அரிய பணியாகும். சைவமசய வரலாறு பற்றித் தமிழில் இதுவரை யாதொரு நூலும் தோன்றியதில்லை. டாக்டர் பண்டர்க்கார் சைவம், வைஷ்ணவம் முதலியவற்றின் வரலாறு பற்றியெழுதிய ஆங்கில நூலொன்று உண்டு. அது மிக அருமையான நூல். ஆனால் தென்னாட்டுச் சைவம்பற்றி நுட்பமாக அதில் ஆராயப்படவில்லை. சைவ சித்தாந்த வரலாறு பற்றியும் சிறந்த நூலாக யாதொன்றையும் கூற முடியவில்லை. திரு. எஸ். அநவரத விநாயகம் பிள்ளை சைவ சித்தாந்த வரலாறு என்ற ஒரு சிறு நூல் எழுதி வெளியிட்டனர். இந்நூலில், சைவ சித்தாந்த சாஸ்திரங்களின் விவரக் குறிப்புக்கள் தாம் முக்கியமாக உள்ளன. சில கருத்து வேற்றுமையால் சைவ சித்தாந்த உண்மை வரலாறு என்ற பெயருள்ள நூலொன்று காலஞ்சென்ற நண்பர் திரு. கா. சுப்பிரமணிய பிள்ளையவர்கள் எழுதினார்கள். தமிழ்ச் சிவஞானபோதம் வடமொழிச் சிவஞானபோதத்தின் மொழி பெயர்ப்பா அன்றா என்ற கேள்வியே முக்கியமாக இவர்களால் விசாரணை செய்யப்பட்டுள்ளது. சிவஞான சுவாமிகள் முதலிய நமது முன்னோர்களது கருத்துக்கு மாறாக மொழி பெயர்ப்பு அன்று என இவர்கள் முடிவு செய்தார்கள். இவ்விரு நூல்களையும் சைவ சித்தாந்த நூல் வரலாறு எனக் குறிக்கலாம். ஆனால் நான் கருதும் வரலாறு வேறொரு வகையைச் சார்ந்தது. சைவ சித்தாந்தக் கருத்து வரலாறு (History of Siddhantic Thought) என்று இதனைக் குறிப்பிடுதல் தகும். சித்தாந்த சமயம் தோன்றிய சூழ்நிலை யாது? எவ்வெம் மதக் கருத்துக்கள் இதில் ஒப்புக் கொள்ளப்பட்டன? எந்த எந்த நூல்கள்

ஆதாரமாகக் கொள்ளப்பட்டன? முந்து நூல்களில் காணும் சித்தாந்தக் கருத்துக்கள் யாவை? புதுக் கருத்துக்கள் எப்போது தோன்றின? இக்கருத்துக்களனைத்தும் ஒரு சமயத்திற்குரிய தொகுப்பாக (System) எதன் பொருட்டு, எப்பொழுது தோன்றின? இக்கருத்துக்கள் நாளடைவில் எவ்கை மாறுபாடுகளை அடைந்தன? சித்தாந்தத்திற்கும் விசிஷ்டாத்வைத சமயத்திற்கும் உரிய சம்பந்தம் யாது? ஸ்ரீ சங்கரரது அத்வைதத்திற்கும் இதற்கும் தொடர்பு யாதேனும் உண்டா? வைதிக சித்தாந்தங்களுள் இதன் பதவி யாது? என்பன போன்ற விஷயங்களை முழுவதும் ஆராய்ந்து சரித்திர முறையில் எழுதப்படும் வரலாற்று நூல்தான் நான் மனத்துட் கொண்டது. இவ்வரலாற்று நூல் இந்திய சமய சாஸ்திரங்கள் அனைத்திலும் தக்க பயிற்சிபெற்று, மேனாட்டுத் தத்துவ சாஸ்திரங்களிலும் நல்ல அறிவுடையவர்களால் எழுதப்படுதல் வேண்டும். அப்பொழுதுதான் சிறந்த நூலாக விளங்குதல் கூடும். இத்தகைய நூல்களுக்குச் சைவசமய ஆராய்ச்சியும் சைவ சித்தாந்த ஆராய்ச்சியும் அவசியமாம். அது ஒரு தனித் துறையாகும். இத்துறையில் முயல்வோர்க்கு ஸர். எஸ். இராதாகிருஷ்ணன், தாஸ் குப்தா முதலியோரது நூல்கள் பெரிதும் பயன்படுவன.

இனி நமது சித்தாந்தக் கொள்கைகள் மேன்மேலுஞ் சிறந்து மேம்படுதற்குரிய முறைகளைத் தெரிந்து நாம் முயல வேண்டுவதுதான் இரண்டாவது வகைப் பணியாக நான் முன்பு குறிப்பிட்டது. தத்துவ விசாரணையில் மேலைநாட்டு முறைகளுக்கும் நமது நாட்டு முறைகளுக்குமுள்ள சில வேறுபாடுகள் இங்கே கவனித்தற்குரியன. முதலாவது மேலைநாடுகளில் தத்துவ விசாரணையும் சமயமும் வேறு வேறானவை; இரண்டிற்கும் யாதொரு தொடர்பும் இல்லை. ஆகவே, சமயம் பற்றிய கதைகள், தெய்வம் பற்றிய கதைகள், அடியார்கள் சரித்திரங்கள் முதலியன மேனாட்டுத் தத்தவ விசாரணையைப் பாதிக்கமாட்டா. நமது நாட்டில் தத்துவ விசாரணையும் சமயமும் நெருங்கிய தொடர்பு உடையன; ஒன்றன்மீது ஒன்று கட்டப்பெற்றுள்ளதென்று கூறலாம். தத்துவம் பற்றிய வாத பேதங்களுக்கும் தெய்வம் பற்றிய கொள்கைகளுக்கும் மதம் சமயம் என்ற சொற்கள் தாமே வழங்குவது இதனைப் புலப்படுத்தும். ஆகவே முற்கூறிய கதைகள் சரித்திரங்கள் முதலியன நம் நாட்டுத் தத்துவ விசாரணையைப் பாதிக்கின்றன. தத்துவ விசாரணையின் முடிவு சமயவுணர்ச்சி மிக்கு முத்திக்குரிய நெறிகளை அடைதல் என்பதுதான் நம் நாட்டினர் கொள்கை. இரண்டாவது வேறுபாடு தத்துவக் கொள்கைகளைப் பற்றியது. மேலைநாடுகளில்

முற்பட விசாரணைசெய்த தத்துவ ஞானிகளின் கொள்கைகளைப் பின்வந்த தத்துவ ஞானிகள் ஒப்புக் கொள்வதில்லை. உதாரணமாக ப்ளேட்டோ கூறியதை அரிஸ்டாட்டில் ஒப்புக் கொண்டதில்லை; ஸ்பிநோஜாவின் கொள்கைகளைக் காண்ட் ஒப்புக் கொண்டதில்லை. நமது நாட்டில் அங்ஙனமன்று. சமயத்திற்கு முரண்பாடில்லையேல், பூர்விகர்களுடைய தத்துவக் கொள்கைகளைப் பின்வந்தோர் தழுவிக் கொண்டனர். உதாரணமாக, சாங்கிய முடிவுகளை நமது சித்தாந்தமும் ஒப்புக் கொண்டு, அவற்றின்மீது தன் முடிபுகளை ஏற்றிவிட்டதைக் கூறலாம். இதனால் பௌதிகத்திற்கு அப்பாற்பட்ட (Metaphysical) விஷயங்களைப் புதிதாக விசாரணை செய்யும் வழக்கமே யில்லாமற் போய்விட்டது. எத்தனையோ அடிப்படைக் கொள்கைகள் தீர்க்க விசாரணையின்றியே ஒப்புக் கொள்ளப்பட்டுள்ளன. மூன்றாவது வேறுபாடு தத்துவ விசாரணையின் ஆதாரம் பற்றியது. மேலைநாடுகளில் விஞ்ஞானத் துறைகள் பலவற்றிலுமுள்ள முடிவுகளை மேற்கொண்டு அவற்றின்மீது இவ்விசாரணையை நிகழ்த்தி வருகின்றனர். இதனால் தத்துவ சாஸ்திரத்தை விஞ்ஞான அரசி (The Queen of Sciences) என்று கூறுவர். நமது நாட்டில் விஞ்ஞான முடிபுகளுக்கும், தத்துவ முடிபுகளுக்கும் யாதொரு தொடர்பும் இல்லை. இதனால் விளைந்த விளைவு யாதெனின், நம்நாட்டுத் தத்துவ விசாரணைக்கு முன்னேற்றம் இல்லை. வெகு காலத்திற்கு முன்னரே அது முற்றுப்புள்ளி பெற்றுவிட்டது. சித்தாந்தம் அதாவது முடிந்த முடிபு என நமது சமயம் கொள்ளப்படலாயிற்று. மேலைநாடுகளில் தத்துவ விசாரணை இன்றும் வளர்ந்து கொண்டே வரும் அறிவுத்துறைகளுள் ஒன்றாக உள்ளது.

நமது சித்தாந்தக் கொள்கைகள் மேம்பட வேண்டுமாயின், மேலைநாட்டுத் தத்துவ விசாரணை நெறியை ஓரளவு பின்பற்ற வேண்டுவது அவசியமென்றே தோன்றுகிறது. நம் கொள்கைகளுள் அடிப்படையானதாய், பெருஞ் சிறப்புடையவாயுள்ளனவற்றை நாம் கைவிடுதல் கூடாது. உதாரணமாக, பதி, பசு, பாசம் என்ற முப்பொருளுண்மையை நாம் கைக்கொண்டே தீர வேண்டும். ஆனால் இவற்றின் உண்மையையும், இயல்பையும், ஞானத்தையுணரு முறையையும் பற்றி மேனாட்டார் கையாண்டு வரும் விசாரணை நெறியை மேற்கொள்ளுதல் பயன்படுவதாகும். சிவஞான போத நூலைப் பிரமாண இயல், இலக்கண இயல், சாதன இயல், பயன் இயல் என நான்கு இயல்களாகப் பகுப்பர். இவற்றுள் முதல் மூன்று இயல்களில் கூறுவன மேலைநாட்டு நெறிகளினால் ஆராயத் தக்கனவே. அவ்வாறு ஆராயும்போது அந்நாட்டினர் பெரிதும்

பின்பற்றிவரும் உளநூற் கருத்துக்களையும் தருக்கநூற் கருத்துக் களையும் அடிப்படையாகக் கொண்டு ஆராய்தல் வேண்டும். நாம் உளக்கூறுபாடுகளைச் சுருக்கமாக அமைத்து விட்டோம். மனம் புத்தி சித்தம் அகங்காரம் என்ற நான்கு பிரிவுகளை மாத்திரம் கொண்டிருக்கின்றோம். மேல்நாட்டினர் இவற்றை விரிவாக ஆராய்ந்திருக்கிறார்கள். இவ்வாராய்ச்சி நிகழ்ந்து கொண்டே வருகிறது. பலபடியாகப் பரிசோதனை முறையில் (Experimental) நிகழ்கிறது. குழந்தைகளின் மன இயல்பு, நேர்மையில் (Abnormal) மன இயல்பு, சமூக (Social) மனஇயல்பு முதலியவற்றைத் தனித்தனியாக ஆராய்ச்சி செய்து வருகிறார்கள். மனிதனது மன இயல்பை உணருதற்கு இம்முறையைக் காட்டிலும் சிறந்த முறை இல்லை. இங்ஙனமே தருக்க நெறியிலும் மேல்நாட்டினரைப் பின்பற்றுதல் அவசியமாகும். ஓர் உதாரணத்தால் இதனைத் தெளிவிக்கின்றேன். ஆன்மாவின் உண்மையை,

*உளதுஇலது என்றலின், எனதுஉடல் என்றலின்*
*ஐம்புலன் ஒடுக்கம் அறிதலின், கண்படில்*
*உண்டிவினை இன்மையின், உணர்த்த உணர்தலின்,*
*மாயா இயந்திர தனுவினுள் ஆன்மா*

என்ற சூத்திரத்தால் சிவஞானபோதம் துணிகின்றது. இதில் காணும் தருக்க நெறி மேலைநாட்டு அறிஞர்களுக்கு உடன்பாடாக மாட்டாது. ஆன்மா என்பது ஒன்று உண்டு என்றதனை மனத்திற்கொண்டே இச்சூத்திரம் தோன்றியுள்ளது. தத்துவ விசாரணையினால் ஏற்பட்ட முடிவு அன்று இது. எதன் உண்மையை நாம் நிரூபித்தல் வேண்டுமோ, அதன் உண்மையையே முற்பட முடிவுசெய்து கைக்கொண்டு, அதற்கு ஏதோ சில காரணங்களை இச்சூத்திரம் காட்டுவதாகவே மேல்நாட்டு அறிஞர்கள் கருதுவார்கள். இதுபோன்ற தருக்க நெறிகளை நாம் நீக்கிவிட்டுப் பலர்க்கும் ஒப்பமுடிந்த மேலைநாட்டுத் தருக்க நெறியைப் பின்பற்றி ஆன்ம உண்மையை நிறுவுதல் கூடும். அதுவே நாம் கைக்கொள்ள வேண்டும் நெறியாகும். இங்ஙனமே பல அம்சங்களிலும் மேல்நாட்டு நெறிகளைப் பின்பற்றுதல் நன்மை பயப்பதாகும்.

நான் இந்நெறியை வற்புறுத்திக் கூறுவதற்கு ஒரு முக்கியமான காரணம் உண்டு. ஆசாரியனிடமிருந்து உபதேசம் பெற்று ஆன்ம ஞானத்தை அடைந்து வந்த காலம் முடிந்துவிட்டது. நமது இளைஞர்கள் தாங்களே விஷயங்களைச் சிந்தித்து அறிந்துகொள்ள வேண்டும் என்ற அவாக் கொண்டவர்களாய் இருக்கிறார்கள்.

வேதத்தில் சொல்லியிருக்கிறது; உபநிடதத்தில் சொல்லியிருக்கிறது; அதனால் உண்மைதான்' என்று கூறி நம் இளைஞர்கள் மனத்தில் நம்பிக்கையை உண்டு பண்ணமுடியாது. ஆதலால் காட்சிப் பிரமாணம், அனுமானப்பிரமாணம் உரைப்பிரமாணம் என்ற மூன்றனுள், மூன்றாவதனை நீக்கி, முதலிரண்டு பிரமாணங்களின் மூலமாகவே பொருள் நிச்சயம் செய்தல் வேண்டும். அவ்வாறு செய்யாமற் போனால், நமது இளைஞருட் பெரும்பாலார் சித்தாந்தக் கொள்கைகளில் அவநம்பிக்கையுற்று, நாஸ்திகர்களாய்ப் போய்விடுவார்கள். அந்நிலைமையைத் தடுக்க வேண்டுவது நம்மனோரது கடமையாகும். மேற்சுட்டிய வழியொன்றினால் மட்டுமே இது இயல்வதாகும். மேல்நாடுகளில் ஆதிகாலந்தொட்டு நிகழ்ந்து வந்திருக்கிற தத்துவ விசாரணையின் சரித்திரம் இங்கே நமக்குப் பெரிதும் பயன்படும். Will Durant என்ற அமெரிக்க ஆசிரியர் எழுதிய The story of Philosophy என்ற அழகிய நூலைத் தமிழில் மொழிபெயர்த்துப் பதிப்பித்து, அதனை நம் இளைஞர்கள் கையில் சேர்ப்போமானால், அது மிகவும் பயன்படுவதாகும். ஆங்கிலத்தில் தத்துவ சாஸ்திர சரித்திரங் குறித்து எத்தனையோ நூல்கள் உள்ளன. தமிழில் ஒரு நூல்கூட இல்லாமை வருந்தத் தக்கது. இவ்வகை நூல்கள் இல்லாமையால்தான் சித்தாந்த உணர்ச்சி பரவுவதற்கு இடமில்லாமலிருக்கிறது. ஸமாஜத்தின் காரியதரிசியாகிய திரு. கே. இராமநாதன் செட்டியாரவர்கள் இவ்வழியிற் சிறிது உழைத்து வருவது பாராட்டிக் கூறத்தக்கது.

மேல்நாட்டுத் தத்துவ சாஸ்திரங்களுக்குரியவாய்க் கூறப்படும் துறைகள் ஐந்து. அவை தருக்கம், சௌந்தர்ய நூல், ஒழுக்க நூல், ஸமுதாய நூல் அல்லது அரசியல் நூல், அபௌதிக நூல் என்பன. இவற்றுள் தருக்கம் கருது முறையிலும் ஆராய்ச்சியிலும் தலைசிறந்த உத்தமமான நெறியைப் பற்றிக் கூறும் நூலாம். புறநோக்கு, அகநோக்கு, பொதுவினின்று ஊகம், சிறப்பினின்று ஊகம், கற்பிதக்கோள், பரிசோதனை, பகுப்பு நெறிமை, தொகுப்பு நெறிமை என்பன போன்ற விஷயங்களைத் தருக்கம் நெறிப்படுத்த முயல்கின்றது. சௌந்தர்ய நூல் உத்தம வுருவம் அல்லது அழகு பற்றி யுணர்த்துவதாம்; இதுவே நுண்கலைகளின் தத்துவங்களைத் தெரிவிப்பது. ஒழுக்கநூல் உத்தம வொழுக்கம் பற்றியது. நன்மை தீமை முதலியவற்றை விளக்குவது. ஸமுதாய நூல் உத்தமமான ஸமூக அமைப்புப் பற்றியது; அரசியல் நூலும் இதன் கண் அடங்கும். இவை நான்கும் உத்தம லட்சியங்களை உலகத்தில் அமைந் திருக்கின்ற நிலைகளோடு பொருத்தியுணர முயல்வனவாம்.

அபௌதிக நூல் (Metal Physics) இங்ஙனமன்று. இந்நூல் பௌதிகத்திற்கு அப்பாற்பட்ட முடிவான பொருள்களை அறிய முயல்வது. அசித்து சித்து, இவற்றின் இயல்பு முதலியனவும், இவையிரண்டிற்குமுரிய தொடர்பும், பிறவும் இவ்வகை நூலுக்குரிய விஷயங்கள். ஆங்கிலத்திலுள்ள அசித்துண்மை நூல் (Ontology), உளநூல் (Psychology), காட்சியறிவுநூல் (Epistemology)முதலியன இதனுள் அடங்கும். நமது சித்தாந்தக் கருத்துக்களையும் இயன்றவரை இங்ஙனம் பகுத்து, மேனாட்டுத் தத்துவ விசாரணை நெறியைப் பின்பற்றி விளக்குதல் வேண்டும்.

இறுதியாக நாம் செய்ய வேண்டும் ஒரு பணியைக் குறித்துச் சில கூறி, எனது தலைமையுரையை முடிக்கிறேன். தத்துவ விசாரணையின் முடிந்த நோக்கம் முத்தியேயென்று நமது நூல்கள் பறைசாற்றும். இரண்டறக் கலத்தல் முதலிய முத்தியின் இயல்பைக் குறித்துச் சிற்றறிவினராகிய நாம் போர்புரிய வேண்டிய அவசியமில்லை; பயனற்ற வேலையுமாகும். இதுபற்றிச் சொல்ல வேண்டுவனவற்றை யெல்லாம், நமது முன்னோர்கள் சொல்லி முடித்து விட்டார்கள். இவ்விசாரணையால் இகவாழ்வில் நாமெய்தும் பயன்பற்றியே சில சொல்ல விரும்புகிறேன். சிறந்த நல்லொழுக்கமே, உத்தம வொழுக்கமே, நான் இங்குக் கருதிய இகப்பயன். தத்துவ சாஸ்திரத்தின் ஒரு கூறாக ஒழுக்க நூலினை மேனாட்டறிஞர்கள் கொண்டுள்ளார்கள். இதனை மேலே குறித்துள்ளேன். வள்ளுவர்,

*ஒழுக்கம் விழுப்பந் தரலால் ஒழுக்கம்*
*உயிரினும் ஓம்பப் படும்.*

என்றனர். சைவ நூல்களுள் திருமூலர் திருமந்திர மாலையில் தான் ஒழுக்கம் ஒருவாறு வற்புறுத்தப்படுகிறது.

*அறம் அறியார் அண்ணல் பாதம்நினையுந்*
*திறம் அறியார்; சிவலோக நகர்க்குப்*
*புறம் அறியார் பலர் பொய்ம்மொழி கேட்டு*
*மறம் அறிவார் பகை மன்னி நின்றாரே*

என்ற திருமந்திரத்தால் இதனை யுணரலாம். ஒழுக்கம் என்பதனால் சைவ ஆசாரங்களைக் குறிக்கவில்லை. இவ்வகை ஆசாரங்கள் சைவசமய நெறி முதலிய நூல்களிற் காணப்படும். ஆசாரங்கள் காலத்திற்கும் இடத்திற்கும் தக்கபடி மாறுவனவாகும். உதாரணமாக,

*முந்து திதியாறு மும்மூன்றும் ஐம்மூன்றும்*
*தந்தசுத்தி செய்யாமை சால்பு*

எனச் சைவ சமயநெறி கூறுகிறது. ஷஷ்டி, நவமி, அமாவாசை, பௌர்ணமிகளில் இல்லறத்திருப்பவன். தந்தசுத்தி செய்யக் கூடாது என்று சொல்லியிருக்கிறது. இவ்ஆசாரத்தை நம்மவர்கள் தற்காலத்தில் அனுஷ்டிப்பார்களா? இவையெல்லாம் மாறிவிடும்; இவற்றைக் காட்டினும் மிக அடிப்படையாயுள்ள கொல்லாமை முதலிய அனைவர்க்கும் ஒப்ப முடிந்த ஒழுக்கங்களையே நான் குறிப்பது. சைவ நன்மக்கள் பன்னூறாண்டுகளாகச் சிறந்த ஒழுக்கங்களைக் கடைப்பிடித்து ஒழுகியமையினாலே, ‘சைவம்’ என்ற சொல்லிற்கே புலாலுண்ணாமை என்ற பொருள் ஏற்பட்டுவிட்டது. நாமும் நம் சந்ததியாரும் இந்நிலையினின்றுந் தவறுதல்கூடாது.

இவ்வளவில் நின்றாலும் போதாது. கொல்லாமை முதலியன எதிர்மறை (Negative) ஒழுக்கங்களாம். உடன்பாட்டு (Positive) ஒழுக்கமும் இன்றியமையாது வேண்டப்படுவதாம். இவ்விரண்டாவது வகை ஒழுக்கத்திற்கு உதாரணங்களாக இனியவைகூறல், அடக்கமுடைமை, நடுவுநிலைமை, பொறையுடைமை, ஒப்புரவறிதல், வாய்மை முதலியவற்றைக் கூறலாம். இவற்றிற்கெல்லாம் அடிநிலமாயிருப்பது அன்புடைமையாகும். அன்பின் பல உருவ வேறுபாடுகளே மேற்கூறியனவெல்லாம். அன்பு இல்லையாயின் வேறு எவ்வகை ஒழுக்கத்தாலும் பயன் இல்லை. ‘அன்பின் வழியது உயிர்நிலை’ என்றனர் வள்ளுவர். நமது இல்வாழ்வே அன்புப் பயிற்சியை முற்றப் பெறுதற்குரிய ஒரு பள்ளிச்சாலை யென்றனர் நமது நாட்டுத் தத்துவப் பேரறிஞர்களுள் ஒருவராகிய ஆசிரியர் சுந்தரம் பிள்ளை :

*தனக்கென வாழுந் தனி மிருகத்தின்*
*மனக்கோண் நிமிர்த்து மற்றையர் இன்பமும்*
*துன்பமுந் தனதா அன்பு பாராட்ட*
*மெள்ள மெள்ளத் தன் உள்ளம் விரித்துப்*
*பொறையுஞ் சாந்தியும் படிப்படி புகட்டிச்*
*சிறிது சிறிது தன் சித்தந் தெளித்துத்*
*தானெனும் நினைப்பும் தனக்கெனும் இச்சையும்*
*ஒய்வுறச் செய்து, மற்றொன்றாய் நின்ற*
*எங்கும் நிறைந்த பேரின்ப வெள்ளம்*
*முங்கி அதனுள் மூழ்கிட யாரையும்*
*பக்குவஞ் செய்யும் நற் பள்ளிச்சாலை, இவ்*
*இல்லறம்*

என்பது அவருடைய அருமை வாக்கு. சைவ சமயத்தின் தனிமுடி மணியாய் விளங்குவது இவ் அன்பு. அன்பு மயந்தான் சிவம் என்றனர் திருமூலர்.

*அன்பு சிவம் இரண் டென்பர் அறிவிலார்*
*அன்பே சிவமாவ தாரும் அறிகிலார்*
*அன்பே சிவ மாவ தாரும் அறிந்தபின்*
*அன்பே சிவமா யமர்ந்திருந் தாரே*

என்பது திருமந்திரம். அன்பு மந்திரம்தான் நம் அனைவரையும் பிணித்து ஒன்றுபடச் செய்யவல்லது. இதன்முன் சாதி, சமயம், கோத்திரம், குலம் முதலிய நோய்கள் அனைத்தும் நீங்கிவிடும். அப்பர் சுவாமிகள்

*சாத்திரம் பல பேசுஞ் சழக்கர்கள்*
*கோத்திரமும் குலமுங்கொண் டென்செய்வீர்*

என்று அருளிச் செய்தனர். இவைகளெல்லாம் நாளடைவில் ஒழிய வேண்டுவன. தீண்டாமையை ஒழித்தல் வேண்டும். அது சைவக் கொள்கைக்கு முரண்பட்டது. திருநாளைப் போவார் சரிதம் இதற்குச் சான்று. அன்பு என்னும் சமய கொள்கையினைப் பாரத நாடு முழுமையும் பின்பற்ற வேண்டும் நாள் வந்துவிட்டது. சைவ சமயிகளாகிய நாம் அன்பொழுக்கத்தைப் பேணி, பாரதமாதாவின் உத்தமர்களாக விளங்குவோமாக.

அன்பொழுக்கத்தில், தலைசிறந்தவர்கள் இத்திருச்செங்கோட்டுப் பதியிலேயுள்ள சைவப் பெருமக்கள். விருந்தினராய் வந்திருக்கும் நம் அனைவர்க்கும் அவர்கள் செய்துவரும் உபசாரங்கள் இதனை நன்கு விளக்குகின்றன. அவர்களுக்கு நமது நன்றி யுரியது.

இதுவரை என் சிறு சொற்களை மிக்க அன்புடன் கேட்டு என்னைக் கௌரவப்படுத்திய உங்களனைவர்க்கும் எனது நன்றி.

இன்று நமது தேசம் விடுதலையின் திருவாயில் முற்றத்தே வந்துவிட்டது. அங்கே குளிர்வாடை மிகுதியாய் வீசுகின்றது. நளிர்சுரமும் தேசத்து அடியார்களை வருத்திக் கொண்டிருக்கிறது. நாம் இன்று கூடியிருக்கும் இப்பதியிலே கோயில் கொண்டெழுந்தருளி யுள்ள இறைவன் அடியார்களது நளிர்சுரத்தைச் சுமார் ஆயிரத்து முந்நூறு ஆண்டுகட்கு முன்னர் நீக்கியருளினர். அதுபோலவே விடுதலையுலகின் முற்றத்தே வாட்டி வருத்தும் நளிர்சுரத்தையும்

நீக்கியருளி நமக்கு உய்தியைத் தந்தருள எல்லாம் வல்ல இறைவனை வேண்டிக் கொள்வோமாக!

சைவம் தழைக்க! சித்தாந்தம் ஓங்குக! அன்பு நெறி வெல்க !

*சைவம் தழைக்க, தமிழ் தழைக்க, தண்ணருளின்*
*மெய்வந்த சீலம் மிகத்தழைக்க - சைவ*
*உலகிற் குறுபுகழீந் தோங்கு சமாஜம்*
*இலகிடுக என்றும் இனிது.*

# திரு. கெ. பொ. மீனாட்சிசுந்தரனார்

(44வது ஆண்டு விழா - 1950 - கொழும்பு - சைவர் மாநாடு)

அன்பர்களே,

வணக்கம் பலப்பல. இன்று என் வாழ்வில் ஒரு விளக்கம் மிக்க நாள். அன்று அறிவுச் சுடர் ஏற்றிய நாட்டில் இருந்து வருகின்றேன். இன்று அறிவு விளக்கத்தில் சிறந்து வாழும் உங்களிடம் நிற்கின்றேன். பழைய அறிவுச் சுடர்கொண்டு புதிய அறிவு விளக்கத்தில், அறிவை அறிவது பொருள் என அருளிய பெருமானின் அருளை இங்கு அறிந்து உலகமும் நாமும் உய்யும் வழியைக் காண இங்குக் கூடி உடலும் உள்ளமும் உயிரும் குழைந்து குலாவுகின்றோம். இத்தகைய தொண்டிற்கு ஒருவகையாலும் உதவாத என்னை அன்பு ஒன்றே கருதி வரவேற்று உயர்த்திய உங்கள் பெருந்தன்மைக்கு எந்த வகையால் நான் நன்றி செலுத்தக்கூடும்?

உங்களைக் காண்பதில் எங்களுக்கு ஒரு மகிழ்ச்சி. பழந் தமிழ்ப் பெருமை எல்லாம் வெறுங்கனவாய்ப் பொய்க்கதையாய்க் கழிந்தொழிந்த நாட்டிலிருந்து வருகிறேன். புத்துலகில் ஆண்களோடு பெண்களும் சரிநிகர் சமானமாக முன்னணியில் நிற்கும் இலங்கைத் தமிழ் மக்களைக் காண்கிறேன். கதை எல்லாம் வரலாறாகிறது; கனவெல்லாம் நனவாகிறது. ''திரைகடலோடித் திரவியம்தேடு'' என்று இளங்குழவிகள் இன்றும் தமிழ்நாட்டில் கற்கின்றன. அதன் உண்மைப் பொருள் இங்குத்தான் விளங்குகிறது. தமிழன் இலங்கை வந்தான்; பர்மா சென்றான்; கீழைத் தீவுகளுக்குப் போனான்; சீனாவிற்குள்ளும் எட்டிப் பார்த்தான். பழைய சீன நூல்கள் இவனறிவைப் புகழ்கின்றன. இவனுடைய நாகரிகம் இங்கெல்லாம் ஓங்கி வளர்கின்றது. மேலைக்கடலிலும் கப்பலோட்டினான். பாபிலோனியா நாகரீகம் இவன் அறியாததல்ல. விவிலியத்திலும் இவன் பேசிய தோகை கவி முதலிய சொற்கள் இடம் பெற்று இவன் பழம் பெருமையைப் பரக்கப் பேசுகின்றன. எகிப்து நாட்டுப் பிரமிட் கோபுரங்களில் இவன் கொண்டு சென்ற தமிழ் நாட்டுத் தேக்கு மரங்கள் இன்றும் அவற்றின் முதுகெலும்பாய் நின்று நிலவுகின்றன. ரோமாபுரிக்கும் சென்றான்.

அந்நாட்டு மங்கையர் இவன் கொண்டுவந்த முத்துக்கும் பட்டுக்கும் அடிமையாய்த் தங்கள் பழைய எளிமையை மறந்தனரே என அந்நாட்டுப் பெரியோர் மனம் வருந்தினராம். இவ்வாறு உலகெங்கும் திரைகடலோடித் திரிந்தவன் தமிழன்.

பலவகை மதப் போராட்டங்கள் இந்திய நாட்டில் புயல் காற்றென வீசி நின்ற போதும் அவற்றிடையே அமைதியாக வாழ்ந்தவன் தமிழன். அசோகனும் பாராட்டிய பெருமை தமிழனுக்கு உண்டு. அவனுடைய பாட்டனான சந்திரகுப்தன் துறவியாய்த் தென்னாடுபோந்து அன்று தமிழ் நாட்டின் ஒரு பகுதியாய் இருந்த எருமை நாட்டில் வாழ்ந்தானாம். வடக்கே போராட்டம் மிக்கபோது அமைதிதர முந்தியது தமிழ்நாடே. பௌத்தர்களும் தமிழ்நாட்டிற்கு வந்தனர். தருக்க நூலை வளர்த்த பெருமை தமிழுக்கு உண்டென்பதனை மணிமேகலையில் காண்கிறோம். தவத்திறம் பூண்டு தருமங் கேட்ட காதையில் வரும் தருக்கத்தின் மொழி பெயர்ப்பாகச் சீன மொழியல் ஒரு நூலை உலகம் இன்று கண்டுள்ளது. தமிழ் நாட்டுத் தரும்பாலர் இயற்றிய அந்நூல் தமிழ் மரபினைப் பின்பற்றியதே எனலாம். அவருடைய ஆசிரியராம் திங்நாகரும் காஞ்சிபுரத்தில் பிறந்து உலகெங்கும் புகழ் பெற்ற நாளந்தாப் பல்கலைக்கழகத்தில் வீற்றிருந்தார். ஆசீவகர் முதலியோரும் தமிழ் நாட்டிற் புகுந்தனர். அவர்களைப் பற்றிய குறிப்புகளைத் தமிழ் மொழியில் அன்றி வேறெங்கும் தெளிவாகக் காணுதல் அரிது. உபநிடதக்கலை பிறந்த இடம் எதுவாயினும் அதற்கும் புத்துயிர் கொடுத்து வாழவைத்த நாடு தமிழ் நாடே ஆம். சங்கரர் பிறந்தது அந்நாளைய தமிழ்ச் சேரர் நாட்டில் தான். ஞானசம்பந்தப் பெருமானுடைய பாட்டில் தாம் ஈடுபட்டதனை அப்பெரியாரே தம்முடைய சௌந்தரியலகரியில் தம்மை மறந்து பாடுகிறார். இராமானுஜரும் சென்னைக்கு அருகில் உள்ள திருப் பெரும்பூதூரில் பிறந்தவரே ஆம். ஆழ்வார்கள் தமிழில் பாடிய அருளிச் செயல் அமுதங்களைப் பின்பற்றியே தம் வடமொழிப் பேருரையை இயற்றினார் என வைணவர்கள் இன்றும் நம்புகிறார்கள். தமிழ்நாட்டுத் தலைசிறந்த வீரனாம் இராசேந்திர சோழன் -கடாரமும் கங்கையும் கொண்ட சோழன் - வடநாட்டிலிருந்த, சைவ ஆகமப் பண்டிதர்களையும் கொண்டு வந்தான். காஷ்மீரச் சைவத்தோடு கன்னியா குமரிச் சைவமும் ஒன்றாய் இலங்கைச் சைவமாய்ப் பொங்கி வழிந்தது. மகமதியர்கள் தமிழ்க் கப்பலோட்டிகளோடு ஒன்று சேர்ந்து கடலைக் காத்து வந்தனர்; தமிழரோடு தமிழராய்ப் போர்த்துக்கேசியரை எதிர்த்துக் கடற்போர் புரிந்தனர். கிறிஸ்தவர்களும் தமிழரொடு

தமிழராகியே தமிழுடை பூண்டு துறவிக் கோலத்தில் தமிழ்க் காபியங்கள் பாடித் தமிழை வளர்த்தனர்!சிலுவையில் கிறிஸ்து நின்ற காட்சியைப் பழந்தமிழரது மடலேறுதலாகப் பாடுகின்றனர். தஞ்சைப் பெரிய உடையார் மதிலுக்குள்ளாகவே கிறிஸ்தவக் கோவில் கட்டச் சரபோஜி உரிமை அளித்த காட்சியை இன்றும் நாம் கண்டு களிக்கலாம்.

இவ்வாறு எந் நாட்டினரோடும் எக்கொள்கையினரோடும் ஒத்து வாழப் பழகியவன் தமிழன். ''யாதும் ஊரே யாவரும் கேளிர்'' என்று கணியன் பூங்குன்றனார் பாடியதில் புதுமை என்ன? வேறு எவ்வாறு தமிழன் பாடி இருக்க முடியும்? ''ஒன்றே குலமும் ஒருவனே தேவனும்'' என்று மகமது நபி பாடுவதற்கு முன்னரே தமிழ்ச் சித்தனாம் திருமூலர் பாடவில்லையா? இந்த உண்மையைக் காண்பதன்றோ அறிவு விளக்கம்? கல்வியின் பயன்? இதனாலன்றோ திருவள்ளுவர்,

*யாதானும் நாடாமல் ஊராமல் என்னொருவன்*
*சாந்துணையும் கல்லாத வாறு.*

என்று வயிறெரிந்து கேட்கின்றார். இத்தகைய கல்வி இன்றேனும் நாகரிக மிக்க நாட்டில் நிலவுகிறதா? குடியரசு கூத்தாடும் அமெரிக்காவில் வெள்ளையரும் கறுப்பையரும் முட்டிக் கொள்வது என்று முடியுமோ? தென் ஆப்பிரிக்காவில் நிகழும் நிறவெறி யாட்டினைக் கண்டு உலகமே திடுக்கிட்டுப் போகவில்லையா? இன்றைய நிலையை நினைக்கும் போதன்றோ பழந்தமிழ் நாகரிக மனப்பான்மை உலகெங்கும் பரவ வேண்டும் எனத் தோன்றுகிறது. கடவுள் பெயரால் போராட்டம் எழுவதனை என் என்பது? இதனை அடியோடு அழிக்க அன்றோ தமிழன் ஏதேதோ கடவுளுக்கு இலக்கணம் கூற முற்படாது தானறிந்த அன்பினையே கடவுள் என வாழ்த்தி வணங்கி வழிபடத் தொடங்கினான்.

*அன்பும் சிவமும் இரண்டென்பர் அறிவிலார்*
*அன்பே சிவமாவ தாரும் அறிகிலார்*
*அன்பே சிவமாவ தாரும் அறிந்தபின்*
*அன்பே சிவமாய் அமர்ந்திருப் பாரே*

என்பதன்றோ உலக அமைதிக்கு அடிப்படை யாவது? இவ்வாறு அன்பினை வற்புறுத்தும் போதன்றோ உலகம் ஒரு குடும்பமாகும். சென்ற காலத்தும், நிகழ் காலத்தும், எதிர் காலத்தும், அந்த அன்பு நெறி நின்றார் எந்த நாட்டில் எந்த உலகில் தோன்றினாலும்

அவர்க்கெல்லாம் நான் அடிமை என்று வாயார மனமார வணங்கி நிற்கும் சுந்தரர் நிலைமையை என் என்பது! 'அப்பாலும் அடிசார்ந்தார் அடியார்க்கும் அடியேன்' என்று ஆயிர ஆண்டுகளுக்கு முன்னரே பாட முடிந்த பொதுமை மனப்பான்மையை அன்றோ இன்று உலகம் வேண்டுகிறது. மகமதியரோடு போராடிய விஜயநகரத்தரசர்கள் காலத்தில் வாழ்ந்த அருணகிரிநாதர் ''உலகெங்கும் மேவிய தேவாலயங்க டோறும் கோவில் கொண்ட பெருமாளே'' எனப்பாடியதும் தமிழப் பொதுமையின் வீறாப்பே அன்றோ? மேனாடும் கீழ்நாடும் எதிர்த்து நின்ற சென்ற நூற்றாண்டின் முடிவில் தமிழ் இராமலிங்கர் அன்றோ ''அருட்பெருஞ்சோதி தனிப்பெருங் கருணை'' எனச் சமரச சன்மார்க்கத்தினை வளர்த்தார். இன்று திரு.வி.க. வளர்க்கும் பொதுமை அறமும் இதுவே அன்றோ?

போராட்டத்திடையே பொதுமை கண்டு அமைதியை நிலை நாட்டுவதே தமிழன் இயல்பாகி விட்டது. அந்தப் பொதுமை நெறிக்கே சித்தாந்தம் எனப்பெயர். சித்தாந்திகள் எனத் தமிழ் நாட்டில் வழங்கிவரும் வழக்கினை உற்று நோக்க வேண்டும். சைவ சித்தாந்தம், வைணவ சித்தாந்தம், வேதாந்த சித்தாந்தம், பௌத்த சித்தாந்தம் என்ற வடமொழி வழக்குப்பற்றி இதற்கும் பொருள் கொள்ளுதல் கூடாது. சித்தர் நெறி, சித்தர் வைத்தியம் முதலிய போலச் சித்தாந்தமும் தமிழ் மரபேயாம். ''வேதாந்த சித்தாந்த சமரச நன்னிலை பெற்ற வித்தகச் சித்தர்கணமே'' எனத் தாயுமானவர் வேதாந்தத்தினையும் சித்தாந்தத்தினையும் வேறுபடுத்திப் பின் சமரசப்படுத்துவதனைக் காண்க. வடமொழி நெறியும் தமிழ்மொழி நெறியும் ஒன்றுபடும் சமரசக் காட்சியே சித்தர் காட்சியாம். முடிந்த முடிபு என்ற பொருளில் அன்றிச் சித்தர்கள் கண்ட முடிபு என்ற பொருளில் தமிழில் சித்தாந்தம் என்ற சொல் வழங்குவது கண்கூடு. இந்த உண்மைப் பொருளைத் திரு.வி.க. அவர்கள் திரு அதிகையிற் கூடிய சமாஜத்தின் தலைமை யுரையில் விளக்கி வைத்துள்ளார். ஆதலின், சித்தாந்த நெறியைப் பொதுநெறி எனக் கொள்ளாது பலவேறு சமயங்களோடு ஒருங்குவைத்து எண்ணுதுவது தவறாம்.

அறநெறியைப் பொதுமை வழியே விளக்கிய பெருமை தமிழ்த் திருவள்ளுவருக்கு உண்டு. சாதி மத பேதம் கூத்தாடிய காலத்தில் இவ்வாறு வேற்றுமையால் இடர்ப்படாது ஒற்றுமையைக் கடைப்பிடித்து உலகினைத் தேற்றியதே அவரை உலகு உள்ளளவும் வாழச் செய்கிறது. அவ்வாறே மெய்கண்டார் கண்ட சிவஞான போதமும் பொதுமை நெறியைக் கடைப்பிடித்து உண்மையை

உரைத்துப் போகின்றது. சாதி மத விகற்பப்பேச்சில் மெய்கண்டார் ஈடுபடவில்லை; தீக்ஷை முதலிய சடங்குகளைப் பற்றியும் வெளிப்படையாகப் பேசவில்லை. அதற்கு உரையாக எழுந்த நூல்களே இவற்றினை எல்லாம் விரித்துரைக்கின்றன. பின்னூலோர் தத்தங் காலத்திற்கு ஏற்பத் தத்தங் காலத்தினர்க்கு விளங்கும் முறையில் எழுதினர். ஆதலின், அவர்களைக் குறை கூற வேண்டுவதில்லை. அத்தகைய நிலையிலும் இவற்றைப் பற்றிப் பேசாது திருவள்ளுவர் போல அடிப்படையான உண்மையைப் பேசியது மெய்கண்டார் பெருமை யன்றோ? இந்த மரபினைச் சிறிது உற்று நோக்கல் வேண்டும்.

ஐந்திணை ஒழுக்கத்தின் அன்பினை இறையனார் அகப்பொருட்கு உரை கண்ட நக்கீரனார் நன்கு விளக்கியுள்ளார். "அதுவே, தானே, அவளே, தமியர் காணக் - காமப் புணர்ச்சி இருவயினொத்தல்" என்ற சூத்திர உரையில் அன்பு நெறியின் பெருமை எல்லாம் காணலாம். "அவனே தானே ஆகிய அந்நெறி" என்று சிவஞான போதம் கூறுவதனோடு அந்தச் சூத்திரத்தினை ஒத்திட்டுப் பார்த்தல் வேண்டும். அங்கும் அத்துவித நெறியே வற்புறுத்தப் பெற்றுள்ளது. "நான்" என்ற முனைப்பற்று, புனல்வழியோடும் மிதவை போல பால் வழி என்னும் இறைவன் வழியோடுவதே அன்பு என்பர் நக்கீரர். எல்லாவற்றையும் இயக்கும் ஆற்றலை எதிர்த்து நிற்காமல் முனைப்பற்றுத் திருவருள் வழி நிற்றலையே மெய்கண்டார் இறைபணி நிற்றல் என்பர். Thy Kingdom Come என்ற வேண்டுகோளும் இதுவே ஆம். இந்த அன்பினையே காதலன் காதலி வரலாறுகளாக புனைந்துரைத்துச் சங்க நூற்கள் பரக்கப் பேசின. இந்த அன்பு நெறியின் வளர்ச்சி "தான்" "பிறர்" "தன் குடும்பம்" "பிறர் குடும்பம்" "தன் நாடு" "பிறர் நாடு" எனப் பேசும் இல்லற வளர்ச்சி யாகவும் இந்த வேற்றுமைக்கு இடம் இன்றி "யான் எனது" என்ற செருக்கறுத்த துறவற வளர்ச்சியுமாகத் திருவள்ளுவர் பேசிப் போயினார். இந்த அன்பின் தூய நிலையைத் திருமூலர் சிவம் என்றே வற்புறுத்தினார். காரைக்காலம்மையார் இந்த அன்பிற்கடிமையாகி எங்குமாம் ஆண்டவன் திருவிளையாட்டினைக் கண்டு பாடி அறிவுலக உண்மைகளைத் தத்துவ சாத்திரிகள் இன்றும் வியக்கின்ற வகையில் வெளியிட்டருளினார். சமணப் பெரியோர் அருளறத் தினையே பேரறமாகப் போற்றினர். அவர்கள் கொள்கையிற் பழகிய திருநாவுக்கரையர் சிவ நெறி நுழைந்ததன் பயனாக அருள் நெறிக்கே சிவ நெறி என்ற பெயர் வரலாயிற்று. இன்று தமிழ் நாட்டில் "சைவம்" என்றால் அருள் நெறியாம் புலால் உண்ணாமையே நினைவிற்கு

வருவது இங்குக் குறிப்பிடத் தக்கது. கிறிஸ்தவர்களிலும் மகமதியர்களிலும் வைணவர்களிலும் பலர் இவ்வாறு சைவர் எனப் புகழப்படுவது வியப்பன்றோ? தயா மூலதத்துவன் என அப்பர் தம் கடவுளைப் புகழ்வது பின் வந்தோருக்குப் பெருந் துணையாயிற்று. பௌத்தர்கள் அறவாழி யந்தணனைப் போற்றி அறநிலை பிறழ்ந்தோர்க்கும் மனம் பரிந்துருகிச் சமுதாயத் தொண்டில் ஈடுபட்டு வந்ததனை ''இன்பச் செவ்வி மன்பதையெய்த அருளறம் பூண்ட ஒரு பெரும் பூட்கை'' என மணிமேகலை போற்றுவது அறிவோம். தனி நோன்பும், கூடிவழிபடும் கோயில் நோன்பும் இவர்கள் வழியே தமிழ் நாட்டில் வளர்ந்தன. கூட்டுறவு வழிபாடு கோயிலாக ஓங்கியது. கலை வாழ்வில் ஈடுபட்ட தமிழர்கள் கோயில்களை அழகு நிலையங்களாக்கினர். சொக்கன், அழகன், முருகன் அழகிய மணவாளன், திரைலோக்கிய சுந்தரம் முதலான பெயர்கள் தமிழர்களது அழகு வழி பாட்டை உள்ளங்கை நெல்லிக்கனி என விளக்கி வைக்கின்றன. அறமும், அன்பும், அருளும், மன்னிக்கும் பொறுமையும், இரக்கமும், அழகும், அறிவும் இவ்வாறு சைவப் பேராறாகப் பாய்ந்தோடின.

இந்தப் பேராற்றில் கலந்தோடும் ஓடைகளை எல்லாம் காண்பது நல்லது. சித்தாந்தம் பொது நெறியாதலின் பொது நூலாம் திருக்குறளைப் பின்பற்றுவது; எனவே அறத்தினையே அடிப்படையாகக் கொள்வது. மெய்யுணர்தலும் அறமாக அன்றோ திருவள்ளுவர் பொது நெறி வகுத்தார். சமயக் கொள்கை அறத்திற்கு அப்பாற்பட்டது என்ற கருத்திற்கே இடம் இல்லாதபடி சமய நிலையையே பேரறமாகப் பேசிய வள்ளுவர் மாண்பினை என் என்பது! சுந்தரர் திருவள்ளுவர் சொற்றொடர்களைப் பொன்னே போலப் போற்றி ஆண்டு சைவத்தினை வளர்க்கின்றார். திருக்களிற்றுப் படியாரும் திருக்குறள் வழியே சார்புணர்ந்து சார்பு கெட ஒழுகலையும் பற்றற்றான் பற்றினைப்பற்றிப் பற்ற றுப்பதனையும் சித்தாந்தக் கருத்துக்களாகப் பாடிச் செல்கின்றன. அருகரும் பௌத்தரும் வளர்த்த தமிழில் வளர்ந்த சைவம் அற நிலை ஆகவே ஓங்கி வளர்வது வியப்பன்று.

சித்தாந்தம் மூடநம்பிக்கையும் அன்று; பழமைக்கு அடிமையன்று. 'பழக்கந்தவிரப் பழகுவதன்றி உழப்புவது என்பெணே உந்தீபற' எனப்பாடும் சித்தாந்தம் பழமைக்கு அடிமையாவது எங்கே? அறிவாராய்ச்சியின் சிறந்த நிலையே சித்தாந்தமாம். குருட்டிற்கு குருடு வழி காட்டும் குருட்டாட்டம் அன்று சித்தாந்தம்.

*தொன்மையவாம் எனும்எவையும் நன்றாகா; இன்று*
*தோன்றிய நூல் எனும் எவையும் தீதாகா; துணிந்த*
*நன்மையினார் நலங்கொள் மணிபொதியும் அதன் களங்கம்*
*நவையாகா தென உண்மை யாய்ந்திடுவர் நடுவாந்*
*தன்மையினார் பழமை அழகாராய்ந்து தரிப்பர்*
*தவறுநலம் பொருளின்கட் சார்வாராய்ந் தறிதல்*
*இன்மையினார் பலர்புகழில் ஏத்துவர் ஏதிலர்உற்(று)*
*இகழ்ந்தனரேல் இகழ்ந்திடுவர் தமக்கென ஒன்றிலரே.*

எனச் சிவப்பிரகாசம் கூறுவது இன்று அறிவாராய்ச்சியில் முன்னணியில் நிற்போர் கூறுவதே அன்றோ!

ஆனால், இந்த அறிவாராய்ச்சி ''நெய்க்குத் தொன்னை ஆதாரமா தொன்னைக்கு நெய்யாதாரமா'' என்ற ஏட்டுச் சுரைக்காய் ஆராய்ச்சி அன்று 'சித்தாந்தம்' பன்னிருதிருமுறைகளை அடிப்படையாகக் கொண்டது. ஆதலின், அனுபூதிப் பெருமக்களின் அனுபவத்தினை அடிப்படையாகக் கொண்டது; வெற்றறிவின் ஆரவாரமன்று. ''ஏதுக்களாலும் எடுத்த மொழியாலும் மிக்குச் சோதிக்க வேண்டா சுடர் விட்டுளன் எங்கள் சோதி'' என ஞான சம்பந்தப் பெருமான் கூறுவது காண்க. வெற்றறிவுக் குடும்பத்தில் இடர்ப்படுதலைச் சங்கரரும் விளக்கியுள்ளாரன்றோ?

சுந்தரர் பாடிய திருத்தொண்டத் தொகை, நம்பியாண்டார் பாடிய திருத்தொண்டர் திருவந்தாதியாக வளர்ந்து, சேக்கிழாரது திருத்தொண்டர் புராணமாக மலர்ந்துள்ளதனை நாம் மறக்க முடியாது. இந்த அறுபான் மும்மை நாயன்மார்களிடையே ஏற்றத் தாழ்வு கற்பிப்பார் சித்தாந்த நுட்பத்தினை அறியாதாரேயாம். இவர்களை எல்லாம் மெய்ஞ் ஞானிகள் எனத் திருவுந்தியாரும் திருக்களிற்றுப் படியாரும் எடுத்துக் காட்டுவதனை நாம் மறத்தலாகாது. திருக்கூட்டச் சிறப்பில் இவர்களைச் சேக்கிழார் சீவன் முத்தர்களாகப் புகழ்வதும் காண்க. எந்த நிலையில் நின்றாலும் எந்தச் சாதியிற் பிறந்தாலும் சிவனை மறவா வாழ்வு வாழ்வார் எத்தகைய வாழ்வு வாழ்ந்தாலும் சீவன் முத்தரே என்பது சுந்தரரது உறுதிப்பாடு; சேக்கிழாரது முடிந்த முடிவு. பெரிய புராணம் பாடும் அடியார்கள் அனைவரும் தமிழ் நாட்டடினரேயாம். ஆதலின், தமிழ்நாட்டுக் கடவுள் மரபினைச் சேக்கிழார் புராணம் விளக்குகின்றதெனல் வேண்டும். புறக் கோலத்தினையும், சாதி மத வேறுபாடுகளினையும் பொருளற்றன என ஒழித்து அகநிலை வாழ்வினையே சைவத்தின் உயிர்நிலை எனக் காட்டுவதே பெரிய புராண உண்மையாம்.

ஆனால், இந்த அகநிலைக் கடவுள் வாழ்வு கசிந்த தொண்டாக வெளி வருவதனை அந்த அடியார்கள் வரலாறெல்லாம் விளக்குவது காண்க. உழவாரப் படை கொண்டு தமிழ் நாடு முழுதும் தொண்டர்கள் போய்வரும் தெருக்களைப் படைத்துத் தந்த திருநாவுக்கரையரை இன்றும் உழவாரப் படையோடன்றோ வழிபட்டு வருகின்றோம்! அவருடைய அடியாரான அப்பூதி அடிகள் அவரிடம் பெற்ற பேருண்மை என்ன? தண்ணீர்ப் பந்தரும் குளமும் காவும் உணவிடலுமே அன்றோ? இதுவே சிவஞானபோதம் கூறும் இறைபணி நிற்றலாம். சித்தியார் கூறும் முனைப்பற்ற கசிந்த தொண்டாம்,

அப்பர் கைலை காணச் சென்றார். ஆனால் இறைவன் உண்மைக் கைலைக் காட்சியைத் திருவையாற்றில் காட்டுவதாகக் கூறினார். அப்பர் கண்ட காட்சி என்ன? ''காதன் மடப்பிடி யோடுங் களிறு வருவன கண்டேன் - கண்டேன் அவர்திருப் பாதம் கண்டறி யாதன கண்டேன்'' என்று உலகப் பொருள்களிடையே எல்லாம் அம்மையப்பனைக் காணலே கைலைக் காட்சியாம். பஞ்சபூதங்கள், சூரியன், சந்திரன், ஆன்மா என்ற எட்டிடத்தும் சிவபெருமானது விளக்கத்தினைக் காண்பதே சைவம் என மணிமேகலை கூறுகின்றது. இயற்கை அழகில் ஈடுபடுவதற்கும், புறவுலகைச் சுகாதார முறைப்படி தூய்மையாக வைத்து வாழ்வதற்கும், காந்தியார் காட்டிய தரித்திர நாராயண வழிபாட்டிற்கும் இதனினும் சிறந்த நெறி எது? இந்த உண்மையே அப்பர் கண்ட சிறந்த உண்மை எனப் பாராட்டும் தாயுமானவர் எடுத்துக் காட்டும் தேவாரம் தான் யாது?

*இருநிலனாய்த் தீயாகி நீரு மாகி*
*இயமானனாய் எறியும் காற்று மாகி*
*அருநிலைய திங்களாய் ஞாயி றாகி*
*ஆகாசமாய் அட்ட மூர்த்தி யாகிப்*
*பெருநலமும் குற்றமும் பெண்ணும் ஆணும்*
*பிறருருவுந் தம்முருவுந் தாமே யாகி*
*நெருநலையாய் இன்றாகி நாளை யாகி*
*நிமிர்புன் சடையடிகள் நின்ற வாறே.*

என்பதன்றோ!

*எட்டுக் கொண்டார் தமைத் தொட்டுக் கொண்டே நின்றார்*
*வீட்டாருலகம் என்றுந் தீபற*
*வீடே வீடாகும் என்றுந் தீபற*

என்பது திருவுந்தியார். ஆதலின், இது சைவசித்தாந்தக் கருத்துமாம். இந்த ஒற்றுமைக் காட்சியைக் கீதை சமதர்சனம் என்று புகழும். சாதி பற்றி இழிவு கூறச் சைவத்தில் இடமில்லை. நந்தனும், பெற்றான் சாம்பானும் வீடுபெற்ற பெருமையைப் பேசுவதன்றோ சைவம்? காந்தியார் தீண்டாமை ஒழியப் பாடுபட்டதெல்லாம் உண்மைச் சைவத்தினை வற்புறுத்தியதே ஆம்.

பெண்ணுக்கு இழிவு பேசும் புன்கண்மையும் இங்கு இல்லை. காரைக்கால் அம்மையாரினும் சிறந்த தத்துவ சாத்திரியை உலகம் கண்டிருக்க முடியாது. மங்கையர்க்கரசியார் இல்லையானால் சம்பந்தர் புகழ் வெளியாகி இருக்குமா? திலகவதியார் இல்லையானால் திருநாவுக்கரசினைச் சைவம் பெற்றிருக்க முடியுமா? பெண்ணுக்குப் பெண் பிறவியில் வீடு பேறில்லை என்று கூறிய கொள்கையை மறுக்க அன்றோ இந்த இருபெருமக்களும் தோன்றினர்? அம்மையப்பனை வழிபடும் சைவர் பிற்காலத்தில் பெண் இழிவு கூறியது காலத்தின் கூத்தே ஆம்.

கோயிலை மறந்து சித்தாந்தம் வாழமுடியாது. வியவகார உலகினைக் கலைவாழ்வாகக் கடவுட் காட்சியாகக் காணும் நுட்பம் இங்கு விளங்குகிறது. கலைக்கும் சமயத்திற்கும் இத்தகைய நெருங்கிய தொடர்பு உண்டாகிவிட்டது. ஒரு வகையால் அஷ்டமூர்த்த வழிபாட்டின் முதிர்ச்சியன்றோ கோயில் வழிபாடும் அடியார் வழிபாடும் ? சீவன் முத்தர்களும் இதில் ஈடுபட்டிருப்பது இதனாலன்றோ?

*செம்மலர் நோன்தாள் சேரல் ஒட்டா*
*அம்மலம் கழீஇ அன்பரொடு மரீஇ*
*மாலற நேயமும் மலிந்தவர் வேடமும்*
*ஆலயந் தானும் அரனெனத் தொழுமே.*

என்பதன்றோ சிவஞான போதத்தின் முடிவு. ஆனால், கலைப்பொருளே கடவுள் என்ற கண்மூடி நிலை இங்கு இல்லை. கலை எல்லாம் த்வனி என்னும் குறிப்பால் விளங்கும் நிலையே ஆம். கலைப் பொருள்கள் அருளடையாளங்கள். கலை விளக்கும் பொருள் கலைக்கும் அப்பாற்பட்டது; மாற்ற மனங் கடந்த மறைப் பொருள். லிங்கம் என்பதற்குப் பொருள் அடையாளம் என்பதே அன்றோ? விக்கிரகாராதனை எனப் பழிப்பார்க்கு இங்கு இடம் இல்லை எனக் கூறவும் வேண்டுமா?

நால்வர் பெருமக்கள் தங்கள் அனுபூதியை, உலகம் உய்யக் கோயில்களில் பாட்டாகப் பாடினர். ''குன்றுடையானைக் கூற என் உள்ளம் குளிருமே'' என்றும், ''உளம் குளிர்ந்த போதெல்லாம் உவந்துவந்து பாடுவேன்'' என்றும் பாடிய பாக்கள் நம்முள்ளத்திலும் அப்பேரின்பத்தினை விளைவித்தல் இயல்பே ஆம். ஓவியமும் காவியமும், கற்சிலையும் பொற்சிலையும், ஆடலும் பாடலும், அழகும் அறிவும், அன்பும் இன்பமுமாய்க் கோயில்கள் வானளாவி ஓங்கின. அரசர்களும் இந்த முறையில் தம் அரசினையும் உயிரினையும் தூய்மைப் படுத்தினர். கலை வாழ்வின் நுட்பம் மண்ணைப் பொன்னாக்கும் சித்தே ஆம்; சீவனைச் சிவனாக்கும் சித்தேயாம்; கல்லை கடவுளாக்கும் சித்தேயாம்.

தில்லை திருநடனத்திற்கு உருகாதார் யார்? உலகம் பொய் யென்ற கொள்கையைத் தமிழ் நாட்டில் பிறந்த சங்கரர் மறுத்துரையாடி அனைத்தும் ஆனந்தமாம் பிரமமே என நிலை நாட்டுவது எளிமையாயிற்று. சண்மதத்தாபனர் என அவர் பெயர் பெற்றது தமிழ் மரபுக்கு ஒட்டியதேயாம். வியவகார உண்மை என்றும் பாரமார்த்திக உண்மை யென்றும் அவர் கூறிய பாகுபாட்டினை மறந்து ''பிரமம் அன்றி ஒன்றும் இல்லை. அறமேது வீடேது'' என மன்றாடும் நிலைமையும் ஏற்பட்டது. கலையுலகில் திளைத்த இராமானுசர் கலை வடிவங்கள் கடவுளது தனி அவதாரங்கள் எனக் கொண்டு மகிழ்ந்தார்; அர்ச்சாவதாரம் எனப் புகழ்ந்தார். அருளிச் செயலமுதங்களைப் பாடி ஆடினார். பக்திப் பெரு வெள்ளம் புரண்டோடியது. இங்குத் திளைக்கும் இன்பப் பெருங்கூத்தினைக் கண்டு கொண்டிருப்பது போலவே அங்கும் கண்டு கொண்டிருக்கவே பலர் விரும்பினர். சங்கரர் கூறிய வியவகார உலகம் இவ்வாறு லீலா விபூதியின் ஆனந்த தாண்டவமாய்க் கலையின் உயர்நிலையாகச் சிறந்தோங்கினாலும், பாரமார்த்திக நிலையின் உண்மை வற்புறுத்தப் பெறாது மறைய இருந்தது. இந்த நிலையில் மெய்கண்டார் தோன்றினார். வியவகார நிலையின் கலையழகினையும் வற்புறுத்திப் பாரமார்த்திக நிலையின் உயர்வினையும் மறவாதபடி நிலை நாட்டினார். பொது சிறப்பு எனச் சித்தாந்த நூல்கள் கூறும் வேறுபாடு இதனை ஒட்டியதே ஆம்.

வியவகார நிலையைப் பொய்யெனக் கொண்டு, கண்டதே காட்சி கொண்டதே கோலமாகப் போயலையாதபடி அதனை வற்புறுத்த வேண்டியதாயிற்று. பொது நிலையில் நின்று அறம் செய்யப் பாவம் தேயும். இருவினை ஒப்பு உண்டாம். நன்றாகத் துடைக்கப் பெற்ற கண்ணாடியில் சூரியஒளி பாய்ந்து ஒளிர்வது போல மனம் இருவினை

ஒப்பினால் தூயதாகி அவாவற்று நின்றபோது அருள் அங்கே பாய்கின்றது. இதுவே சத்திநிபாதமாம். ஆன்மா சிறப்பு நிலையில் படிப்படியாக உயர்ந்து சீவத்துவ இழிவுநீங்கி முனைப்படங்கி இறைபணி நின்று சிவமாகி உயர்கிறது. ''சிவமாக்கி எனையாண்ட அத்தனெனக் கருளியவாறார் பெறுவார் அச்சோவே'' என்று பாடுகிறது.

*இன்றெனக்கருளி இருள் கடிந்தென்னுள்ளத் தெழுகின்ற*
*ஞாயிறே போன்று*
*நின்றநின் தன்மை நினைப்பற நினைந்தே நீயலால் பிறிது*
*மற்றின்மை*
*சென்று சென்றணுவாய்த் தேய்ந்து தேய்ந்தொன்றாம்*
*திருப்பெருந்துறை யுறை சிவனே*
*ஒன்றுநீ அல்லை அன்றி ஒன்றில்லை யாருனை*
*அறிய கிற்பாரே.*

எனச் சிறப்பு நிலையாம் பாரமார்த்திகம் அகண்ட பரிபூரணமாக விளங்குகிறது. எல்லாமாய அந்த வியத்தகு வியப்பில் எல்லா முரண்பாடுகளும் அழிவதில் வியப்பு என்ன என்கிறார் இந்நாளைய அரவிந்தர். முன் நின்ற முப்பொருள்களும் முத்தி நிலையிலும் விளங்கினாலன்றி வியவகாரப்பொது நிலையின் பெருமையும் உலகவழக்கும் சிதையும் எனக் கருதுகின்றார் போலும். ஆனால் பராமார்த்திக நிலையின் பெருமையும் குலைதல் கூடாது. சச்சிதானந்த நிலையே முத்திநிலை என்பர். அங்குச் சத்தான அடிப்படையாக அமைந்து இன்பத்தினை ஊட்டுவதே பதி; சித்தாகி அதனை உணர்ந்து துய்ப்பதே பசு; ஆனந்தமாய் விளைவதே பாசம் எனக் கொண்டால் முத்தியிலும் முப்பொருள் உண்டு எனக் கூறத்தட்டில்லை அன்றோ! அகண்ட சச்சிதானந்த நிலையும் இங்குக் குலைவதில்லை. இவ்வாறு சமரசப்படுத்துவதனை மெய்கண்டாரது மாணவராம் மனவாசகம் கடந்தார் தமது குரு தமக்கு விளக்கிய உண்மைகளாக உண்மை விளக்கத்தில் கூறுகின்றார்.

*முத்திதனில் மூன்று முதலும் மொழியக்கேள்*
*சுத்தஅநுபோகத்தைத் துய்த்தல் அணு-மெத்தவே*
*இன்பங்கொடுத்தல் இறை இத்தை விளைவித்தல்மலம்*
*அன்புடனே கண்டுகொளப் பா.*

என்ற பாட்டின் நுட்பத்தினை உய்த்துணர வேண்டும்.

சித்தாந்தம் என அடை ஒன்றும் இன்றித் தனித்து நின்றே பண்டை நாள் முதல் வழங்கிய வழக்கினை மறுபடியும் வற்புறுத்த வேண்டும். சிவஞான சித்தியார் பாடியருளிய அருள் நந்தியார் இதனைக் குறிக்கின்றார். பிற எல்லாம் பூருவபட்சமாக ஈதொன்றே சித்தாந்தமாக முடிதலின் இதுவே சித்தாந்தம் எனச் சிறப்பிக்கப்படும் என்கிறார். ஆனால், ஒவ்வொரு சித்தாந்தமும் பிறர் கொள்கைகளைப் பூருவ பட்சமாகக் கொண்டன்றோ மறுக்கின்றது? பின் என்ன சிறப்பு? ஆகமம் தந்திரம் முதலியன சித்தர் வளர்த்தவைகளாம். சித்தர் என்பது அருகர் பௌத்தர் முதலியோர் அறிந்த சொல்லேயாம். குறைவிலா நிறைவினைப் பெற்ற நிலையே சித்தர் நிலையாம். சித்தன் என்பது தமிழ் நாட்டில் கடவுளுக்கும் பெயராயிற்று. எல்லாம் வல்ல சித்தன் எனப் புராணங்கள் பலபடப் பேசவில்லையா? சித்தன் வாழ்வு என முருகன் கோயிலை நச்சினார்க்கினியர் கூறவில்லையா? சைவசித்தாந்தத்திற்குத் திருமூலர் திருமந்திரமும் அடிப்படையாய் இருப்பது சித்தர் நிலைக்கும் சித்தாந்தத்திற்கும் உள்ள தொடர்பினை நன்கு விளக்குகிறது. உடம்பினை வளர்ப்பதே உடம்பினுள் உத்தமனை வளர்ப்பதற்கு வழி எனக் கொள்வது சித்தர் நெறி. மண்ணுலகினையே பொன்னுலகாக்கி, உடலினையே சிவமாக்க முயலுவதும் அவர்கள் நோக்கமாம். இந்த ஆராய்ச்சியின் பயனாக வைத்தியமும் யோகமும் விஞ்ஞானமும் தமிழ்நாட்டில் வளர்ந்ததனை என் என்று சொல்லுவோம். மேனாட்டில் விஞ்ஞானத்திற்கும் மெய்ஞ்ஞானத்திற்கும் நேரிடும் போராட்டம் சித்தாந்தத்தில் இல்லை எனலாம். மெய்ஞ்ஞானத்தினையும் விஞ்ஞானத்தினையும் ஒன்றாக்குவதன்றோ சித்தாந்தம், திருவுந்தியார், திருக்களிற்றுப்படியார் முதலிய நூல்கள் சித்தர் பரிபாஷைபோல வருவதே ''சித்தாந்தம் சித்தர்கள் முடிபு'' என்பதற்குச் சான்றாம்.

சித்தர்கள் சமரசத்தை வற்புறுத்துவோர் எனத் தாயுமானவர் கூறியதனை முன்னரே கண்டோம். அந்தச் சமரசத்தினைச் சன்மார்க்கம் எனப் பண்டையோர் வழங்கி வந்தனர். பழங்காலத்தில் தமிழில் வழங்கிய தத்துவ சாத்திரங்களிலிருந்து செய்யுட்களைத் திரட்டிச் சிவப்பிரகாசர் பெருந்திரட்டு என்ற சிறந்த தொகை நூலைத் திரட்டி வைத்துள்ளார். அங்கு இவ்வாறு பல கொள்கையினிடத்தும் ஒற்றுமை காண்டலையே சன்மார்க்கம் எனக் கூறுதல் காண்க. இந்தச் சன்மார்க்கத்திற்குச் சிவஞானம் என்றும் பெயருண்டு என அந்நூல் விளக்குகிறது. ஆதலின், சிவஞானபோதம் என்பது இந்தச் சமரச சன்மார்க்கத்தினை வெளியிடுவது எனலாம் அன்றோ?

பிறமதங்களை மறுத்துரையாடும் சிவஞான சித்தியாரே நூல் என்றால் அனைத்தினையும் சமரசப்படுத்துவதே எனக் கூறுதல் காண்க.

*ஓதுசமயங்கள் பொருள் உணரும் நூல்கள்*
*ஒன்றோ டொன்றொவ்வாமல் உளபலவும் இவற்றுள்*
*யாதுசமயம் பொருள்நூல்யாது இங்குஎன்னில்*
*இதுவாகும் அதுவல்லதெனும் பிணக்கதின்றி*
*நீதியினால் இவைஎல்லாம் ஓரிடத்தே காண*
*நின்றதி யாதொருசமயம் அதுசமயம் பொருள்நூல்*

எனக் கூறுவது காண்க. வினாவிளக்கம் எனச் சிவப்பிரகாசர் பெருந்திரட்டில் எடுத்துக்காட்டு நூல்,

*"அறைந்த எச்சமயக் கலையினும் எடுத்துக் காட்டலாய்*
*அருமறை முடிவிற்*
*சிறந்தநற் பொருளாய்ச் சிவனரியயனாற்*
*செப்பிய வருத்தமுமாகித்*
*துறந்துமற் றவிரோதத்தையே துணிந்தோர்*
*சொல்லிடும் பொருளுமாம் ஒன்றை*
*நிறைந்த கைத்தலத்தின் மணிஎனக் காட்டு*
*நீதிசன் மார்க்கத்தி னியல்வே"*

இதனையே சன்மார்க்கம் எனப்போற்றிப் புகழ்தல் காண்க.

பலவகைக் கொள்கையிடையேயும் ஒற்றுமை காண்பதே சித்தாந்தம் என்பதனை உமாபதி சிவமும் சுட்டுகின்றார்.

*புறச்சமயத் தவர்க்கிருளாய் அகச்சமயத் தோர்க்கொளியாய்ப்*
*புகலளவைக்களவாகிப் பொற் பணிபோல் அபேதப்*
*பிறப்பிலதாய் இருளொளிபோற் பேதமும்சொற்பொருள்போல்*
*பேதாபேதமும் இன்றிப் பெருநூல் சொன்ன*
*அறத்திறனால் விளைவதாய் உடலுயிர்க்கண் அருக்கன்*
*அறிவொளி போல் பிறிவரும் அத்துவிதமாகும்*
*சிறப்பினதாய் வேதாந்தத் தெளிவாம் சைவ*
*சித்தாந்தத் திறன் இங்குத் தெரிக்கலுற்றாம்*

என்பது பிறமத கண்டனம் போல் இருந்தாலும் பேத வாதம் அபேதவாதம் பேதாபேதம் என்ற இவற்றோடும் சித்தாந்தத்தினை ஒற்றுமை காண முயல்கின்றது.

*''துவித மத்துவிதஞ் சொல்லியவுபயந்*
*தோற்றிய வத்தி நாத்தியெனும்*
*விவித எப்பொருட்கும் வெறுக்க வேண்டாமல்*
*விளம்பிய அவற்றினுக் கவையாய்த்*
*தவல றத்திகழுஞ்சற் சினற்சுகத்தைத்*
*தனக்கனுபோகமாய்க் காட்டும்*
*பவிசு டைத்தாய வழிஎது அதுவே*
*பழுதில் நற்பரமமாக நெறியே.''*

*பேதனென்பதும் அபேதம்என்பதுவும்*
*பிறிதுள மதங்களும் அவற்றில்*
*நீதிஎன்பதுவும் நிகழ்த்துதத்துவங்கள் அவத்தைகள்*
*நிரைத்த கோண முழுதும்*
*ஏதமொன்றறவே எவற்றையும் இடங் கண்டிது*
*இதுஎன வுரைத்திடலாய்*
*ஓதுமொன்றாலும் உணர்ந்திடப்படாத அது*
*முத்திக்கு உண்மையாம் நெறியே.*

என அந்த நெறியினையே சன்மார்க்கமாம் பரமநெறி அல்லது உண்மைநெறி எனப் பெருந்திரட்டு கூறுதல் காண்க.

திருவள்ளுவர்

*யாம்மெய்யாக் கண்டவற்று ளில்லைஎனைத் தொன்றும்*
*வாய்மையி னல்ல பிற.*

*பெறுமவற்றுள் யாமறிவ தில்லை அறிவறிந்த*
*மக்கட் பேறல்ல பிற.*

*ஒழுக்கத்து நீத்தார் பெருமை விழுப்பத்து*
*வேண்டும் பனுவற் றுணிபு.*

என எல்லாக் கொள்கைகளிலும் அடிப்படையான உண்மைகளைக் கூற முற்படுவது போலச் சமரசம் காண்பதே ''சித்தாந்தமாம் என்பதும் எல்லாம் அறிவுகளின் தாற்பரியம் என்னறிவு செல்லுமிடத்தளவும் சென்றிருந்தேன் - வல்ல படி வாதனையைமாற்றும் வகையிதுவே, மற்றவற்றுள் ஏதமறக் கண்டவிதம்''

*அன்பேயென் அன்பே என்றன் பாலழுதரற்றி*
*அன்பே அன்பாக அறிவழியும் அன்பன்றித்*
*தீர்த்தந் தியானஞ் சிவார்ச்சனைகள் செய்யுமவை*
*சாற்றும் பழமன்றே தான்.*

எனத் திருக்களிற்றுப்படியார் கூறுவதால் விளங்குகின்ற தன்றோ.

சித்தாந்தத்தினைப் பொதுமைநெறி எனப் பன்னிப் பன்னிப் பேசுவானேன்? உலகம் போராட்டத்தில் புழுங்குகிறது. ஒருவரை ஒருவர் அஞ்சு நெஞ்சு நடுங்கிக் குமுறுகிறது. ஒன்று திரண்ட நாட்டினர் நிலையமும் (United Nations Organisation) போர்நின்ற பல ஆண்டுகள் ஆகியும் அமைதியை நிலைநாட்ட முடியவில்லை. இந்தக் கேடெல்லாம் தீரவேண்டுமானால் சமரச மனப்பான்மை வளர வேண்டும். கொள்கையும் எதிர்க்கொள்கையும் முடிவில் சமரசக் கொள்கையாய் முற்றி இவ்வாறே. கொள்கைகள் வளர்ந்து வருவதனைச் சென்ற நூற்றாண்டில மேனாட்டு ஞானியாரான ஹெகல் விளக்கிக் கூறிய சமரசத் தருக்க முறையை (Dialectics) இன்றைய பொது உடைமைக் கொள்கையினர் வற்புறுத்துகின்றனர். முதலில் சிறுவனுக்கு பொய் சொல்லவே வராது. "நீங்கள் வீட்டில் இருக்கும் போது உம்மைத் தேடி வருவாரிடம் இல்லை என்று எவ்வாறு கூறுவது?" என்று கேட்கிறான். இங்கு இவன் உண்மை கூறுவது பொய்கூற முடியாமையாலேயாம். பின்னர்ப் பொய் கூறும் திறமை வளர்கிறது. பொய்யா நிலை என்ற ஒன்றிலிருந்து அதன் எதிர்த் தட்டாகிய பொய்க்கும் நிலைக்கு வருகிறான். இங்குப் பொய் சொல்லும் தோறும் தன்னெஞ்சே தன்னைச் சுடுதலால் பொய் சொல்லும் ஆற்றலிருந்தும் அதனை விட்டொழித்துப் 'பொய்யாமை பொய்' என்ற இரண்டினையும் கடந்து மெய்ம்மை நிலையை அடைகின்றான். பொய் சொல்லும் ஆற்றல் எழுந்தால் அன்றி அதனை விட்டொழிக்கும் நிலை எழுவதற்கு இடம் இல்லை. பொய்ம்மையின் வழியேதான் மெய்ம்மையை எட்ட வேண்டி இருக்கின்றது. பொய் சொல்லாத முன்னைய நிலையும் பொய் சொல்லும் திறமை விளங்கும் பின்னைய நிலையும் ஒன்றாய் இயைய, மெய்ம்மைநிலை அவற்றின் சமரசமாக எழுகிறது. இவ்வாறு எதிர்த்தட்டான இரண்டும் வளர்ந்து, மேலானதொரு சமரச நிலையாய் உயர்வது காண்கிறோம். இதுவே அவர் கூறும் சமரசத்தருக்கம்.

நம் நாட்டுச் சமய வளர்ச்சி எல்லாம் இத்தகைய சமரச வளர்ச்சி என்றே கூறிவிடலாம். அதுவே சித்தாந்த நெறி எனக் கூறுவதால் இந்நாட்டில் எழுந்த ஒன்றும் பொய்படாது மெய்யாகி வளர்ந்து வந்த வரலாறு விளங்கும். சங்ககால ஐந்திணை அன்பு விலங்கு நிலைக் காமத்தினும் வேறாகப் பரிபாடல் காணும் கடவுட் காமமாகி, நக்கீரர் வழியே திருமூலர் கண்ட சிவ அன்பாய்த் திருக்கோவையாரில் வரும் காதலாய்க் கடவுள் வடிவாய் அமைகின்றது. இன்று அன்றாடைய

வாழ்வில் காதலியிடம் கடவுளைக் காணும் கட்டாயம் எழுகிறது. திருக்குறள் கண்ட அறம் - அருகர் கண்ட கொல்லாமை - தன்னுயிர் போல மன்னுயிரை எண்ணுதல் - பௌத்தர்கள் கண்ட தனக்கென வாழாப் பிறர்க்குரியாளனாம் அறவாழி நிலை - இவை இறைபணி நிற்றலாய அஷ்ட மூர்த்தமாய்க் கைலைக் காட்சியாய்த் தரித்திர நாராயண பூசையாய்ப் புரட்சியாக முடிவது காண்க. பாடல்களும் பண்களும் கோயில்களும் அழகு வழிபாடாய்க் கலைவாழ்வாய்ச் சமுதாயக் கூட்டுறவாய் உலக ஒற்றுமையாய் வளர்தலும் வேண்டும். திருமுறைப் பாடல்கள் அனுபூதிப் பிழம்பாய் நம்மை மேல் மேலும் உயர்த்தி வருகின்றன. சங்கரர் கூறும் பாரமார்த்திக உண்மையும், இராமானுஜர் வற்புறுத்திய வியவகார உண்மையின் சிறப்பும் ஒன்றுக்கொன்று முரண்படாது மெய்கண்டார் கண்ட உண்மையாக விளங்குவது காண்க. மகமதியர், கிறிஸ்தவர், விஞ்ஞானிகள், சீர்திருத்தக் கொள்கையினர், மேனாட்டினர், கீழ்நாட்டினர் முதலியோர் கூறும் கொள்கைகள் எல்லாம் சித்தர் கொள்கைகளாகச் சித்தாந்தத்தில் நுழைவதும் காண்கிறோம். இன்று அரவிந்தர் கூறும் பூரண யோகமும் இவ்வாறு அனைத்தினையும் ஒன்றாகக் கொண்டு விளங்குகிறது.

தமிழறிவுப் பேராறு தங்குதடை யின்றி இவ்வாறு ஓடிக் கொண்டே இருக்கிறது. இதில் ஒரு நிலையை மட்டும் பிரித்துச் சித்தாந்தம் என்று கூறி நின்று விடுதலாகாது. 14 சாத்திரங்களில் சிவஞான போதம் தலைசிறந்தது என்பதில் ஐயம் இல்லை. அடிப்படை உண்மைகளை இவ்வளவு சுருக்கமாகக் கூறும் நூல் வேறு ஒன்று இல்லை. இவற்றொடு சித்தாந்தம் முடிந்துவிட்டது எனக் கூறுவது வரலாற்றுண்மைக்கு மாறுபடக் கூறலாம். தாயுமானவர் இந்தச் சமரச சித்தாந்தத்தினைத் தமிழர் உலகம் உள்ள அளவும் மறவாதபடி நம் இரத்தத்தில் எல்லாம் ஓட விட்டவர். போகர், நந்தி, வாமதேவர், வள்ளுவர் என்பவர்கள் பெயரால் எழுந்த பல சித்தர் நூல்கள் அரேபிய நாட்டுக் கொள்கைகளையும் விஞ்ஞானத்தையும் இந்த நாட்டுக் கொள்கைகளையும் சமரசப்படுத்தியவை. சிவப்பிரகாச சுவாமிகள் முதலியோர் கன்னட நாட்டு வீர சைவக் கொள்கையினையும் தமிழ்நாட்டுக் கொள்கைகளையும் ஒற்றுமைக்கண் கொண்டு விரித்தவர்கள். கண்ணுடைய வள்ளலார், சாந்தலிங்கர், இவர்கள் நூல்களுக்கு உரை கண்ட சிதம்பர சுவாமிகள் முதலானோர் எல்லாக் கொள்கைகளுக்கும் இடையே தோன்றும் அவிரோத அழகினைப் பாட்டிலும் உரையிலும் கூட்டி வளர்த்தவர்கள். சித்தாந்தத்தோடுள்ள இந்தத் தொடர்பினை அறிந்தே உங்கள் நாட்டுத் தமிழ்ப் பெருமகனார் ஆறுமுக நாவலர் அவற்றினை அச்சிட்டு உலகிற்கு வழங்கினார்.

தத்துவராயரும் இத்தகைய ஒற்றுமையை வளர்த்தவரே. கிறிஸ்தவத்தோடு நம் நாட்டுக் கொள்கைகளை ஒற்றுமைப்படுத்திப் பாடும் சர்வ சமய கீர்த்தனைகளும் இந்த வழியே செல்வனவாம். முடிவாகச் சமரச சன்மார்க்கம் என்றே பொதுமை நெறியைப் பரப்பிய இராமலிங்கர் உலகிற்கே ஒரு வழிகாட்டி எனலாம். இவற்றினை எல்லாம் சித்தாந்தம் அல்ல என ஒழித்துவிடுவது அழகாகுமா?

மேல் நாட்டிலும் பலபல கொள்கைகள் தோன்றி வந்துள்ளன. அவற்றிடையேயும் சமரசம் காணவேண்டும். ஒரு சிலர் இவற்றினை எல்லாம் சித்தாந்தம் என மன்றாடுவதும் உண்டு. உண்மை யடிப்படையினை மறந்து இவ்வாறு வாயளவில் பொதுமை பேசுவதால் பயனில்லை. உறுதியான அறிவின்றி மேல்வாரியாக ''இதுவும் சரி அதுவும் சரி எனத் தலையசைத்துப் போவது சித்தாந்தம் ஆகாது. உள்ளத்துறுதி, அறிவின் தெளிவு, நெஞ்சின் ஈரம் இவற்றோடு எழும் சமரச மனப்பான்மையே உண்மையைக் காண உதவுவதாம். அடிப்படையான தத்துவ ஆராய்ச்சி உலகில் அருகி வருகிறது. மேல் போக்கான காட்சியிலேயே உலகம் மயங்கியிருக்கிறது. அந்த மயக்கந் தெளிய மருந்தொன்று உண்டு. எதற்கும் அஞ்சாமல் எந்தப் பேற்றினையும் பொருட் படுத்தாமல், உண்மையை எந்த நிலையிலும் அறிந்துணர முன்வரும் வீரம் வேண்டும்; அறியாமையால் அல்லல் படும் உலகினைக் கண்டு அந்த அறியாமை இருளில் இருந்து விடுதலை பெறத் துடிதுடிக்க வேண்டும்; அதற்கேற்றபடி மனம் பண் பட்டிருத்தல் வேண்டும். சாதன சதுட்டயம் என முன்னோர் கூறியது இத்தகைய அறிவு வீரமே ஆம். அத்தகைய அறிவு வீரம் ஒன்றே இன்று உலகிடையே சமரச அமைதியைப் பரப்பி ஒற்றுமையை நிலை நாட்டக் கூடும். அத்தகைய பொதுமை நிலை தமிழன் இரத்தத்தில் ஊறியுள்ளது. ஆகையால், சித்தாந்த நெறியைப் பரப்பும் வகையால் நாமும் உய்ந்து உலகிற்கு வழி காட்டுதல் நம் இரத்தத்தோடு பிறந்த கடமையாகும்.

# குன்றக்குடி ஆதீன கர்த்தர்

(47வது ஆண்டு விழா - 1953 - ஈரோடு - சைவர் மாநாடு)

*கண்ணார் நுதலோய் கழலிணைகள் கண்டேன் கண்கள் களிகூர*
*எண்ணா திரவும் பகலும்நான் அவையே எண்ணும் அதுவல்லால்*
*மண்மேல் யாக்கை விடுமாறும் வந்துன் கழற்கே புகுமாறும்*
*அண்ணா எண்ணக் கடவேனோ அடிமை சால அழகுடைத்தே.*

சித்தாந்த சைவப் பெருமக்களே! தாய்மார்களே! மறைத்திரு ஞானியாரடிகளின் அருள் உள்ளத்தில் அரும்பி அன்பர்கள் உள்ளத்தில் மலர்ந்து தொண்டர் தம் தொண்டின் திறத்தால் பல்லாண்டுகளாகத் தென் தமிழ் நாட்டில் தெய்வ மணத்தை வழங்கி வருகின்ற சைவ சித்தாந்த சமாஜத்தின் ஆண்டு விழாவில் கலந்துகொள்ள வண்ணப் பணித்து வாவென்று வான்கருணை செய்த ஈரோடை அப்பரின் இணையடிகளைச் சிந்தித்து வாழ்த்துகின்றோம். இத்தகு இன்பப் பேற்றை நமக்கு அளித்த அருள்நெறித் திருக்கூட்டத் தொண்டர்களுக்கு நமது நெஞ்சம் கலந்த வாழ்த்து.

தமிழகம் தெய்வ மணம் கமழும் திருநாடு. இறைமணம் கமழும் இன்பத் திருநாடு. சாத்திரத்திலும் உயர் ஞானத்திலும் சிறந்து விளங்கும் பெருமை செந்தமிழ் நாட்டிற்கே உரியது. கல் தோன்றி மண் தோன்றாக் காலத்தே தோன்றிய மூத்தகுடி தமிழ்க்குடி. அன்று தொட்டே அவர்களது வாழ்க்கையில் சமய வாழ்வு இடம் பெற்றிருந்தது. அறிவுக் கண்கொண்டு இப் பரந்துபட்ட உலகியலைக் காண்கின்ற பேறு பெற்றபொழுது - அகலமும் ஆழமும் அளவிடப் பெறாத நீலத்திரைக் கடல் - காலம் தவறினும் தான் தவறாது எழுந்து நல்லொளி பரப்பி ஞாலத்தை வாழ்விக்கும் ஞாயிறு - வானுயர் தோற்றமன்ன மலை, இவை போன்ற இயற்கையின் மதிப்பிட முடியாத அமைப்புகளைக் கண்டு வியந்தனர். உலகியலில் ஓர் ஒழுங்கு - ஒரு முறைபிறழாத நிகழ்ச்சி முதலியன அமைந்து கிடப்பதனைக் கண்டனர். இத்தகு அமைதிகளைக் கண்டு இவை தம்மை அமைத்துக் கொடுப்பதற்குரியது மனித எல்லைக்கும் அப்பாற்பட்டது என்று உணர்ந்தனர். அந்த ஒன்று பேரறிவும்,

பேராற்றலும் உடையது என்ற முடிவுக்கு வந்தனர். அப்பொருள் அப்பாலுக்கப்பாலாய் இருந்தும் ஊனாகவும், உயிராகவும், உயிர்ப்பாகவும் இருப்பதை உணர்ந்தனர். இத்தகு நிலையில் காட்சியளிக்கின்ற அந்தப் பொருளை எங்ஙனம் சிற்றறிவுடைய உயிர்கள் வாழ்த்த முடியும்? இதனை நமது மணிவாசகப் பெருமானார்,

*"வானாகி மண்ணாகி வளியாகி ஒளியாகி*
*ஊனாகி உயிராகி உண்மையுமாய் இன்மையுமாய்க்*
*கோனாகி யானெனதென் றவரவரைக் கூத்தாட்டு*
*வானாகி நின்றாயை என்சொல்லி வாழ்த்துவனே"*

என்று அருளிய திருப்பாடலால் அறியலாம்.

தமிழர் சமயத்தில் ஆண்டான் அடிமைத் திறம் மிகச் சிறந்தது. இன்று அடிமையென்ற சொல் மக்களினத்தால் வெறுக்கப்படுகிறது. ஆனால் அடிமை என்ற சொல் அவ்வளவு தீயதல்ல. அடிமைத்தனத்தில் உள்ள நன்மை தீமைகள் அடிமையாக ஆட்படும் இடத்தைப் பொறுத்தது. சின்னாட் பல்பிணி வாழ்க்கைக்காகச் சிற்றறிவும் சிறு தொழிலும் உடைய இறக்கும் தன்மையை இயல்பிலேயே பெற்ற மக்களிடம் அடிமைப்படுவதில் இகழ்ச்சி உண்டு. தீமையும் கூட உண்டு. ஆனால் வரம்பில் ஆற்றலும் இணையில் இன்பமும் உடைய பிறவா யாக்கைப் பெரியோனிடத்தில் அடிமைப்படுவது சாலவும் நன்மையுடைத்து. அடிமைப்படாததால் தீமை கூட விளையலாம். இத்தகு அடிமைத் திறத்தை நினைந்து நினைந்து வரவேற்றார்கள் தமிழ்ச் சான்றோர்கள். அருள்மொழி மணிவாசகப் பெருமானார் அருளிய திருவாசகத்திலே அடிமை வேண்டிவேண்டிக் கேட்கப்படுகிறது. தேசீய கவிதை முழக்கி விடுதலை முரசுகொட்டிய தேசீயக் கவிஞர் பாரதியாரும்,

*'பூமியில் எவர்க்குமினி அடிமை செய்யோம்-பரி*
*பூரணனுக் கேயடிமை செய்து வாழ்வோம்'*

என்று கூறுகின்றார்.

சமய வாழ்வில் கூறப்படும் அடிமை குற்றேவலுக்காக அல்ல. எண்ணத்தால் அடிமை.

நல்லறிவு கொளுத்தித் தெளிவான உள்ளம் தந்து நல்லுணர்வை நல்கி காக்கும் காவல்நிலையங்கள் மடாலயங்கள் நல்லுணர்ச்சியைப் பக்தியாக மாற்றி வழிபாட்டிற் கலந்து இன்புறச் செய்வது. இவை ஆலயங்களின் தொண்டு. இவ்விரு வகை நிலையங்களையும் கண்டு

அன்பு பேணி அருளுள்ளம் கொண்டு அறம் பல வளர்த்துக் களிப்புடன் வாழ்ந்த பெருமை பண்டைத் தமிழினத்திற்கு உண்டு. ஒரு சில ஆண்டுகளாகத் தமிழினத்தின் வாழ்வை இருட்சூழல் கவ்வியுள்ளது. கிப்ஸன் சொன்னபடி இவ்வுலகுபற்றிய அறிவு மிக மேம்பட்டுள்ளது. மற்றொரு மீளா உலகைப் பற்றிய அறிவு குறைந்து வருகிறது. சிறப்பாக வாழ்க்கை யோடியைந்த சமயப் பண்பு அருகி வந்துவிட்டது. வாழ்க்கை வேறு; சமயம் வேறு; சடங்கு வேறு என்ற புல்லிய உணர்ச்சிக்கு ஆட்பட்டு விட்டனர். இதனால் இதயம் மடிந்தது. எலும்புடம்பு இருக்கிறது. நெஞ்சம் தோய்ந்த சமய வாழ்வு குறைந்து வரலாயிற்று.

தமிழினத்தின் தனிமைப் பண்பு சமரசநோக்கு. தமிழ் கண்ட உன்னத உயர்மொழி 'ஒன்றே குலமும் ஒருவனே தேவனும்' என்பதாம். இடையில் இந்த நிலை மாறியது. சமய வாழ்வில் சாதி முதலிய புல்லிய உணர்ச்சிகள் தோன்றி வளர்ந்தன. அகவுணர்வைப் போற்றிக் காத்துக் கொள்வதற்காகக் கையாளப் பெற்ற சமயச் சடங்குகள் சடங்குகளாகவே காட்சியளித்தன. நெஞ்சந் தோய்ந்த சமய வாழ்வு இல்லாமற் போய்விட்டது. புறம் வளர்ந்தது, அகம் தேய்ந்தது. அதனால் தமிழகம் மிகத் தாழ்ந்து விட்டது. தாழ்ந்தமைக்கு ஒரு சில எடுத்துக்காட்டுகள். தமிழ்நாட்டிற் பிறந்தாரனைவரும் தமிழர்கள். பாதிக்கு மேற்பட்ட மக்கள் சைவத்திருநெறி நின்று ஒழுகுகின்ற பேறு பெற்றவர்கள். ஏனைய மக்களில் பெரும் பகுதியினர் வைணவக் கொள்கையினர். ஒருசிலர் பிற சமய மக்களும் உண்டு. இங்ஙனம் வாழ்ந்த நூற்றுக்கணக்கான சைவக் கொள்கையினர் பிற மதம் புகுந்து கொண்டே யிருந்தனர். ஆயிரக்கணக்கான ஆலயங்களிலிருந்தும், நூற்றுக்கணக்கான மடாலயங்களிருந்தும் இவை தமக்கு மூன்றரை கோடி ரூபாய் வருமானம் இருந்தும் பிற மதம் புகுகின்ற சகோதரர்களை தடுக்கவில்லை. தடுக்க நினைக்கவும் இல்லை. இதனால் இவற்றிற்கு விளைந்த கேடு எண்ணும் தரத்ததா? பிற மதத்தினர் தம் மதப் பிரசாரத்திற்காக சைவத் திருநெறியின் கொள்கைகளைச் சிறப்பாக, உருவ வழிபாட்டுக் கொள்கையினை எள்ளி நகைத்துப் பேசி வந்தனர். ஏனென்று கேட்பார் இல்லை. இதனை யொட்டி நம்மவரினும் பலர் சமய வாழ்வினையும், வழிபாட்டினையும் இழித்து எள்ளிப் பேசத் தலைபட்டனர். இவ்வியக்கம் சாதி ஒழிப்பியக்கமாகத் தோன்றிச் சமய ஒழிப்பியக்கமாக மாறிவிட்டது. மூலை முடுக்குகளில் எல்லாம் நாத்திகம் பரப்பப் பெற்றது. சிறந்த இலட்சிய நெறியினின்று வாழ்ந்த பெருமக்களின் வரலாற்றினை இன்பத் தமிழில் பக்திச் சுவை நனி

சொட்டச் சொட்டப் பாடித் தந்த சேக்கிழார் பெருமான் எள்ளப் பெற்றார். அவர் தம் திருநூல் எரிக்கு இரையாக்கப்பட வேண்டு மென்று பேசப்பெற்றது. அதுபோலவே ஊனினை உருக்கி உயிரையும் உருக்கி உலப்பிலா ஆனந்தத்தைக் கொடுக்கும் அருமைத் திருவாசகத்திற்கும் எரியிட வேண்டுமென்று ஆர்ப்பரித்தார்கள். தமிழ்நாட்டின் ஒருசில ஆலயங்களில் சில ஆண்டுகளுக்கு முன்பு கருத்து வேற்றுமையின் காரணமாகத் தகாத செயல்களையும் செய்யத் தலைப்பட்டனர். செய்தும் விட்டனர். எனினும் கவலைப்படுவார் யாருமில்லாத கதியற்ற நிலை சைவத்துக்கு இருந்து கொண்டிருந்தது. இந்த நிலை இன்றும் மாறவில்லை என்றுதான் சொல்ல வேண்டியிருக்கிறது. இன்றும் பிற சமயத்தினரின் சமயப் பரப்பு வேலை துரிதமாக நடந்து கொண்டிருக்கிறது. நாத்திகர்களும் பெருகி உருவங்களை உடைப்பதும் திருமுறைகளைத் தீயில் இடுவதும் எங்கள் இலட்சியம் என்று ஆர்ப்பரித்துக் கொண்டிருக்கின்றனர். நாடாளும் அரசோ மதச் சார்பற்ற அரசு என்ற பேரில் இருக்கிறது. ஆதலால் இவை தம்மை எதிர்த்து நிற்பதில் அது நேரடியாகத் தலையிட முடியாது. இந்த நிலை சமயப் பற்றுள்ள ஒவ்வொரு வருக்கும், சமயச் சான்றோர்களுக்கும், சமயத் தலைவர்களுக்கும் ஒரு சோதனை. இது கடைசி நேரம். இனியும் உறங்கினால் கடமையினின்று தவறியவர்கள் ஆகிவிடுவோம். இடம் பொருள் ஏவல் இருந்தும் இழக்க முடியாத கொள்கையினை இழந்து விட்டோம் என்ற பழிச்சொல்லுக்கு உரியவர்கள் ஆகிவிடுவோம். அன்புடைய பெருமக்களே ! இதனைச் சிந்தனையில் பதித்துக் கொண்டு செயலில் இறங்குவோமாக! நமக்குத் தெரிந்த ஒரு சில ஆக்கவேலை முறைகளையும் குறிப்பிட ஆசைப்படுகின்றோம்.

1. நல்லன பெருகி அல்லன மறைய வேண்டுமானால் அதற்குரிய சாதனம் நல்லனவற்றைப் பற்றிப் பன்னிப் பன்னிப் பேசுதலும் பரவுதலும் ஆம். முதலில் சமயச் சார்புடைய அனைவர் மாட்டும் நெஞ்சந் தோய்ந்த சமய வாழ்க்கையை மலரச் செய்ய வேண்டும். வாழ்க்கையோடு ஒன்றுபட்ட சமயந்தான் நல்ல பயனைத் தரும். எனவே ஒவ்வொருவர் வாழ்விலும் பூரண பக்தி உணர்ச்சியை வளர்க்க வேண்டும். வீடுகளில், வீதிகளில், மன்றங்களில், ஆலயங்களில் எங்கும் தெய்வத் திருமுறைத் தமிழ் முழக்கத்தை எழுப்ப வேண்டும். நாள் தவறினும் நாழிகை தவறினும் தான் தவறாத முறையில் திருமுறைகளை ஓதுகின்ற பழக்கத்தினை மேற்கொள்ள வேண்டும். ஊர்தோறும் கூட்டு வழிபாட்டு இயக்கங்கள், பொதுப் பிரார்த்தனைகள் முதலியவற்றைத் தோற்றி வளர்க்க வேண்டும். இவை நம்மவர்பால் நடக்க வேண்டியவை.

2. சமய வாழ்வு வாழ்கின்ற பெருமக்களிடத்தும், சமய நிலையங்களிடத்தும் சாதி மனப்பான்மையை வளர விடக்கூடாது. உண்மைச் சமயத்திற்குச் சாதி உடன்பட்டதல்ல. புறம்பானது என்று தெளிவாக அறிவிக்க வேண்டும். அப்படி அறிவித்து விடுவது ஒன்றாலேயே பெரும் பகுதியான மக்கள் சமய வாழ்வுக்கு வந்துவிடுவர்.

3. சில ஆண்டுகளாகத் தமிழ்நாட்டில் ஒரு மறுமலர்ச்சி. அதுதான் தமிழைப் பற்றியது. எங்கும் தமிழார்வம் தலையெடுத்து வளர்கிறது. தமிழன்பு பெருகி வருகிறது. தமிழன்பில் திளைக்கின்ற பல அன்பர்கள் திருக்கோயில்களில் தமிழுக்கு இடமில்லை என்ற ஒரு காரணத்தால் திருக்கோயில் வழிபாட்டுணர்ச்சிக்கு மாறுபடுகின்றனர். திருக்கோயில்களில் தமிழுக்கு இடம் தருதல் தவறானதாகாது. வேண்டுமானால் பழக்கமெனும் பாசி படிந்த உள்ளங்கள் தவறானதாக நினைக்கலாம். மேற்பரப்பில் காட்சியளிக்கும் பாசியை நீக்கிப் பார்த்தால் அந்தப் பாசி இடையில் படர்ந்தது. வேர் ஊன்றாத பாசி. இயற்கையிலேயே தண்ணீர் தெளிவுதான். அதுபோலவே பண்டு தொட்டே ஆயலங்களில் தமிழ் முழக்கம் கேட்கப் பெற்றதுதான். ஏன் நலிவுற்ற காலத்து நல்லுணர்வு கொளுத்தி சைவம் பரப்பி நானிலத்தைக் காத்த நால்வர் பெருமக்கள் இன்பத் தமிழில்தானே பாடினார்கள். எனவே சமய நிலையங்கள் தமிழைப் புறக்கணித்துத் தவறானதோர் செயலை விளைவித்துவிட வேண்டாமென்று குறிப்பிட ஆசைப்படுகின்றோம். விரைவில் தமிழ்நாட்டுத் திருக்கோயில்கள் அனைத்திலும் தமிழில் அர்ச்சனை செய்கின்ற பழக்கத்தைக் கையாள முன்வரவேண்டும். இதனால் ஆயிரக் கணக்கான இளைஞர்களின் மனம்மாறும். அவர்கள் தமிழன்போடு சமயப்பற்றிலும் சிறந்து விளங்குவார்கள்.

4. இனி சமயத்தை வளர்ப்பதற்குரியவழி, வீடுதோறும் செல்வதுதான். சமயச் சான்றோர்களும், சமயத் தொண்டர்களும் வீடுகள் தோறும் நுழைந்து பரிவாகப் பேசி, வீட்டில் நாள் தவறாது வழிபாடு அல்லது பிரார்த்தனையைக் குடும்பத்து உறுப்பினர்கள் அனைவரும் ஒன்றாக இருந்து செய்யும்படித் தூண்டவேண்டும். இங்ஙனம் செய்வதால் வீடுகளில் சமயம் விளக்கம் பெறும். வீடுகள் திருந்தினால் நிச்சயமாக நாடு திருந்தும் என்ற நம்பிக்கை நமக்குண்டு. இத்தொண்டினை யாரும் மேற்கொள்ளலாம். பொருட் செலவற்ற மிகச் சுலபமான தொண்டு. ஆனால் பெரும்பயன் விளைக்கின்ற பெரும் தொண்டு. வீடு தோறும் சமய விளக்கம் காண முயல்வோமாக!

எத்தனையோ ஆண்டுகளாகத் தமிழினத்தின் ஒரு பகுதியினர் தாழ்த்தப்பட்ட மக்களாக ஒதுக்குப்புறத்தில் வாழ்கின்றனர். அவர்கள் வாழ்க்கையில் நன்மணம் இல்லை. வளமும் இல்லை. இப் பகுதியினரில் பலர்தான் பிற மதம் புகுந்தவர்கள். இன்னும் ஒரு சிலரே எஞ்சியிருக்கின்றனர். அவர்களையும்கூடப் புத்தர்களாக ஆக்கப் பாடுபடுகின்றார் ஒருவர். அதே காலத்தில் இந்தியப் பேரரசு அவர்களுக்கு எல்லா வகுப்பினரோடும் உடனிருந்து வாழ்வதற்குரிய உரிமையைச் சட்ட ரீதியாக வழங்கியுள்ளது. அவர்கள் அடியெடுத்து வைக்கக் கூடாதென்றிருந்த ஆலயங்களில் அச்சமின்றி நுழைய உரிமை வழங்கப்பட்டுள்ளது. எனவே நாம் நமது பழக்கத்தை மாற்றிக் கொண்டு சேரிகள் தோறும் நுழைந்து பரிவோடு அவர்களை அணுகி அவர்களது துன்பம் துடைத்து அவர்களது உணர்ச்சியிலும் வாழ்விலும் சமயத்தைக் கலக்க வேண்டும். இந்தப் பணியால் இரண்டு நன்மை விளைகிறது. ஒன்று சமயத் தொண்டு. மற்றொன்று சமூகத் தொண்டு. இத்தகு பணியால் தமிழினமே உயர வழியுண்டு. ஒவ்வொரு சேரியிலும் என்று பிரார்த்தனை ஒலி எழுகிறதோ அன்றே சமயத்தின் நன்னாள்.

இந்த நூற்றாண்டை மேடை நூற்றாண்டென்று சொல்லி விடலாம். எதற்கெடுத்தாலும் மேடைச் சொற்பொழிவு. அலங்காரமான நடையில் ஒரு சில மணி நேரங்கள் பேசினால் மக்களை ஈர்த்துக் கவர்ந்து விடலாம் என்ற நம்பிக்கை வளர்ந்துள்ள காலம் இது. அப்படியே நடந்து வருவதையும் நாம் அறிவோம். எனவே நாமும் சிறந்த சமயச் சொற்பொழிவாளர்களைத் தயாராக்க வேண்டும். அவர்களின் சொல்லாற்றலைப் பெருக்க வேண்டும். மூலை முடுக்குகளிளெல்லாம் நின்று சமய வாழ்வின் நல்லியல்புகளை மக்களுக்கு எடுத்துச் சொல்ல வேண்டும். மாறுபட்டவர்களின் மாறான பேச்சுக்களை உண்மையை எடுத்துக் காட்டுவதின் மூலம் மக்களுக்குத் தெளிவுபடுத்த வேண்டும். சமயத் தொண்டர்கள் மேடையோடன்றி வாழ்க்கையிலும் பண்பட்டவராயிருத்தல் வேண்டும். இத்தகு தொண்டர்கள் ஒரு சிலரை நாட்டிலே உலவ விடுவோமானால் பெரிதும் நன்மை உண்டு.

சமயத் தத்துவங்களை விளக்குகின்ற முறையில் இனிய எளிய தமிழில் சிறு நூல்கள் வெளியிட வேண்டும். அவைகள் மிகவும் குறைந்த விலைக்கு வழங்கப்பட வேண்டும். நூல்கள் விருப்பு வெறுப்பு உணர்ச்சிகளினின்றும் எழுதல் கூடாது. குறிப்பாக உருவ வழிபாட்டு முறைகள், தத்துவங்கள், சமயச் சார்பில் உள்ள புறச் சாதனங்கள், சமய நூல்கள், புராணங்கள் முதலியவற்றைப் பற்றிய

உண்மைக் கருத்துக்களை மக்களுக்குத் தெளிவாக எடுத்துக் காட்ட வேண்டிய கடமை நமக்குண்டு. இக்கடமையினின்றும் தவறி விடுவோமானால் ஒன்றை மற்றொன்றாகப் பேசுகின்ற கூட்டம் பெருகி உண்மை அருகி விடலாம். சமய அறிஞர்கள், சமயப்பற்றுள்ள படித்த இளைஞர்கள் இம் முயற்சியில் ஈடுபட வேண்டும். இந்தத் திருத் தொண்டினால் இன்று மக்களிடையே பரவியுள்ள மாறுபட்ட கருத்துக்களை மாற்றிவிடலாமென்று நம்புகின்றோம்.

அன்புடைப் பெருமக்களே! பணிகள் பலவற்றைப் பாங்குறத் தீட்டிக் காட்டலாம். எனினும் அனைத்தும் செயல்முறைக்கு வரவேண்டும். எனவே விரிவஞ்சி விடுக்க ஆசைப்படுகின்றோம். சமயத் தலைவர்கள் அனைவரும் இந்த இறுதியான கட்டத்தில் ஒன்றுபட வேண்டும். ஒவ்வொருவர் தனிவாழ்விலும் சமயத் தொண்டு நல்ல இடம்பெற வேண்டும். இங்ஙனம் ஒன்றுபட்டு நல்ல ஈடுபாட்டுணர்ச்சியோடு பணி செய்வோமானால் எண்ணிய பயனைப் பெறுவதற்கு யாதும் ஐயமில்லை. ஒன்றுபடவும், தொண்டுகளில் ஈடு படவும் ஆண்டவன் திருவருள் துணை செய்யுமென்று நம்புகின்றோம்.

இந்த முயற்சியின் சின்னம் தான் தமிழ்நாடு அருள் நெறித் திருக்கூட்டம். திருக்கூட்டத்தின் அருள் முழக்கம் தமிழ்நாட்டின் பல பகுதிகளிலும் கேட்கப்பெறுகிறது. நூற்றுக்கணக்கான அன்பர்கள் தம்மையும், தம் வாழ்வையும் மறந்து இத் திருத்தொண்டில் ஈடுபட்டிருக்கின்றனர். அவர்களுக்கு நமது இதயம் கலந்த வாழ்த்து. கடந்த மூன்றாண்டுகளாகச் சைவ சித்தாந்த சமாஜத்தினரோடு கலந்து உறவாடுகின்ற இன்பப்பேறு தொடர்ந்து கிடைத்துவருகிறது. இந்த உறவுமுறை இடையீடுபடாது வளரும் என்ற நம்பிக்கை நமக்குண்டு. இன்றைய சூழ்நிலையில் தமிழ்நாடு அருள்நெறித் திருக்கூட்டத்தினர் மேற்கொண்டுள்ள பெரும் பணிகளுக்கு சமாஜத்தினர் பக்கபலமாக இருந்து வருகின்றனர். தொண்டர் குலம் அனைத்தும் ஒன்று என்ற உண்மையை அருள்நெறித் திருக்கூட்டத்தினரும், சமாஜத்தினரும் மெய்ப்பித்து வருகின்றனர். இத்தகு பேரன்பு படைத்த சமாஜத் தினர்க்கு நமது உளம் கலந்த வாழ்த்து. மீண்டும் ஒருமுறை சமய வாழ்வுடையார் அனைவரும் ஒன்று பட அருள்பாலித்துத் திருத் தொண்டின் நெறிபேணி வளர்க்கத் துணைசெய்யும் வண்ணம் ஈரோடையப்பரின் இணையடிகளைச் சிந்திக்கின்றோம்! அன்பர்களது அன்பு பொருந்திய ஆர்வம் நிறைந்த ஒத்துழைப்பினை வேண்டி நிற்கின்றோம்!

வாழ்க தமிழ் ! வளர்க அருள்நெறி !

# புலவர் ந.ரா. முருகவேள்

(51வது ஆண்டு விழா - 1956 - திருப்பெண்ணாகடம் - சைவர் இளைஞர் மாநாடு)

*நிருத்தன் ஆறங்கன் நீற்றன்*
*நான்மறையன் நீலமார் மிடற்றன் நெற்றிக்கண்*
*ஒருத்தன் மற்றெல்லா உயிர்கட்கும்*
*உயிராய் உளன்இலன் கேடிலி உமைகோன்*
*திருத்தமாய் நாளும் ஆடும்நீர்ப்*
*பொய்கை சிறியவர் அறிவினின் மிக்க*
*விருத்தரை அடிவீழ்ந் திடம்புகும்*
*வீழி மிழலையான் எனவினை கெடுமே'' - சம்பந்தர்*

*சைவத் தமிழன் எனும் தன்மதிப்பு நல்லுணர்ச்சி*
*மெய்வைத்த அன்பின்எனை மிக்கூட்டி - உய்வித்த*
*சான்றோர் மறைமலைபோல் தக்கோர்தம் தாள்தலைமேல்*
*என்றுதொழு கேன்யான் இனிது*

## தோற்றுவாய்

சிவநெறிச் செந்தமிழ் இளைஞராய தோழர்களே!

சைவ சித்தாந்தச் சான்றோர் பெருந் தலைவராகிய ஆசிரியர் மெய்கண்டார் பெருமான் தோன்றியருளிய திருப் பெண்ணாகடம் என்னும் இச்சிவதலத்தில், சைவ சித்தாந்த மகா சமாஜத்தின் 51ஆம் ஆண்டு நிறைவு விழாவின் சார்பில், நாம் அனைவரும் இங்குக் கூடி மகிழ்கின்றோம். ''நன்றியால் வாழ்வது உள்ளம்'' என்பது திருஞான சம்பந்தர் திருமொழியாதலின், இச் சைவ இளைஞர் மாநாட்டின் தலைமைப் பொறுப்பினை எளியேற்கு அன்புடன் வழங்கிய சமாஜச் செயற்குழுவினர் அனைவருக்கும், என் பணிவார்ந்த நன்றி யுணர்வைப் புலப்படுத்திக் கொள்ளுகின்றேன்.

## சமாஜச் சிறப்பு

நமது சைவ சித்தாந்த மகா சமாஜம், கடந்த ஐம்பது ஆண்டுகளாக தமிழும் சைவமும் தழைக்க, அரும்பெரும் பணிகள் ஆற்றி

வந்துள்ளது. தென்றமிழ் நாட்டுச் சமய வரலாற்றில் இந்நூற்றாண்டில் நமது சமாஜம் செய்துள்ள தொண்டுகள் தனிப்பெருஞ் சிறப்பிடம் பெறுதற்குரியனவாகும். இந்நூற்றாண்டின் முற்பகுதியில் தமிழ்நாட்டில் தலைசிறந்து விளங்கிய பேரறிஞர்கள் அனைவரும், சமாஜத்துடன் நெருங்கிய தொடர்புடையவர்களே. தமிழகத்தின் இணையற்ற ஒரு மாபெருஞ் சமயப் பொது நிறுவனம், நமது சமாஜமே யாகும். இதன் சீரும் சிறப்பும், தமிழும் சிவமும் வழங்கி வரும் அயல்நாடுகளிலும் பரவியுள்ளனவெனின், வேறு பிறிது கூறுவது யாதுளது? ''ஞானம் உண்டாக்குதல் நலமாகும் நாட்டிற்கே'' எனத் திருமூலர் அருளிச் செய்தபடி, நாட்டின்கண் நல்லறிவாராய்சசி நெறிமுறைகளைப் பரப்பி வளர்க்கும் ஞானப் பெருந்தொண்டினை நமது சமாஜம் நிரம்பச் செய்து வந்துள்ளது. திருமுறை நூல்களையும், மெய்கண்ட நூல்களையும், சங்க இலக்கியங்களையும், சீவக சிந்தாமணி, நாலாயிரத் திவ்வியப் பிரபந்தம், திருப்புகழ் ஆகிய நூல்களையும் திருத்தமுற ஆராய்ந்து வெளியிட்டிருப்பதொன்றே சமாஜத்தின் பெருஞ் சிறப்பிற்குச் சான்றாதல் அமையும். திருவாசகத்திற்கு உரைவரைதல் தானும் உய்தியில்லாத ஒரு பெருங் குற்றமாகக் கருதப்பெற்று வந்த வியத்தகும் இழிநிலையை மாற்றி, அன்பும் ஆர்வமும் உடையோர் அனைவரும் சைவ சித்தாந்த நூல்களை அறியவும் ஆராயவும், உரிமையும் வசதிகளும் உண்டாக்கிக் கொடுத்த சமாஜத்தின் அருமை பெருமைகள், அறிஞர் அனைவரும் மனமார மகிழ்ந்து பாராட்டத் தகுவனவாம்.

## இளைஞர் பொறுப்பு

ஒரு நாட்டின் செல்வ வளங்களுளெல்லாம் தலைசிறந்த பெருஞ் செல்வ வளமாகத் திகழ்வது, அந்நாட்டின்கண் உள்ள அறிவறிந்த பண்புடைய இளைஞர் திரளேயாகும். இன்றைய இளைஞர்களே நாளைய தலைவர்களாதலின், ஒரு நாட்டின் சிறப்பும் செழிப்பும் இளைஞர்கள் திறத்திலேயே உள்ளன. எனவே, நமது தமிழகத்தின் ''சென்ற காலத்தின் பழுதிலாத் திறமும் இனி எதிர்காலத்தின் சிறப்பும்'' நம்மனைய இளைஞர்களின் பொறுப்புணர்ச்சி மிக்க அறிவார்ந்த செயல்களை ஒட்டியே அமையும். தமிழ்நாட்டின் பலதிறப் பெருமைகளுள், சமயமும் சமய நூல்களும் சமயச் சான்றோர்களும் திருக்கோயில்கள் திருமடங்கள் போன்ற சமய நிலையங்களும் சிறப்பிடம் பெறுவனவாகும். இவையிற்றை யெல்லாம் குறிக்கொண்டு போற்றி வளர்த்துப் பயன்கொள்ளுதல் நம்மோரனைய இளைஞர்களின் தலையாய கடமையாகும். இக்கடமைகளை

நன்கினிது நிறைவேற்றுவதற்குச் சமய நெறிகள் பற்றிய உண்மைகளை இளைஞர்களாகிய நாம் திறம்பட ஆராய்ந்து தெளிந்து கொள்ளுதல் வேண்டும்.

### புராண கதைகள் :

இன்று இளைஞர்களாகிய நம்மிடையே சமய அறிவும் ஒழுக்கமும், ஆர்வமும் குறைந்து, பெரிதும் குழப்பமுற்றுக் காணப்படுகின்றன. சென்ற இடத்தாற் செலவிடா தீதொரீஇ நன்றின்பால் உய்க்கும் அறிவு நெறிகளே சமயங்களாகும். வையத்துள் வாழ்வாங்கு வாழ்ந்து வானுறையும் தெய்வத்துள் வைக்கப்படும் நிலையை, நம்மனோர்க்கு எய்துவிக்க வல்ல வழிமுறைகளே சமயங்கள் எனப்படுகின்றன. சில புராண கதைகளைக் காட்டிச் சமயங்களைச் சிலர் ஏளனம் செய்கின்றனர். நுண்ணிய சமயக்கருத்துக்களைப் பொதுமக்களுக்குப் பருவடிவில் எளிய முறையில் உணர்த்துதற் பொருட்டும் கவிதையழகுகள் குறித்துமே புராண கதைகள் ஏற்படலாயின. ''அப்பணி செஞ்சடை ஆதி புராதனன், முப்புரஞ் செற்றனன் என்பர்கள் மூடர்கள், முப்புரமாவது மும்மல காரியம்'' என வரும். திருமூலர் திருமொழி இவ்வுண்மையைத் தெளிவுறுத்தும். திருவாசகத்தின் திருச்சாழல் என்னும் பகுதியும் புராண கதைகளின் நுண்பொருளை விளக்க எழுந்தது எனலாம். ''தொழுவார்க்கே அருளுவது சிவ பெருமான்'', ''மண்ணுலகில் வாழ்வார்கள் பிழைத்தாலும் வந்தடையிற், கண்ணுதலான் பெருங் கருணை கைக்கொள்ளும்'' என்னும் சமய உண்மைகளையே, திருஞான சம்பந்தர் பதிகங்கள் தோறும் சில கதைகளாற் குறிப்பிடுவதாகச் சேக்கிழார் பெருமான் அறிவுறுத்தி இருத்தல் கருதற்பாலது. புராண கதைகளை நம்பாமலும் ஒருவர் சமய உணர்வினராக இருத்தல் இயலும். ''எந்நிலையில் நின்றாலும் எக்கோலங் கொண்டாலும், மன்னிய சீர்ச்சங்கரன் தாள் மறவாமை பொருள்!''

### அறிவியல் :

சமயக் கோட்பாடுகட்கும் அறிவியலுண்மைகளுக்கும் ஏதோ பெரிதும் முரண்பாடு இருப்பதுபோலச் சிலர் பேசி வருகின்றனர். தாமஸ் ஹக்ஸ்லி குறிப்பிட்டுள்ள படி, ''அறிவியல் என்பது பயிற்சி பெற்று ஒழுங்குப்படுத்தப்பட்டபொது அறிவுக்கலையே.'' ஆதலின் பிரான்ஸிஸ் பேக்கன் கூறுதற்கேற்ப, அரைகுறை அறிவியலே சமயத்தை இகழும். எங்கு அறிவியற்கலை தடுமாறுகின்றதோ, அங்கிருந்துதான் சமயம் தொடங்குகின்றது. ''அறிவியல் இல்லாத

சமயம் குருட்டியல்புடையது; சமயம் இல்லாத அறிவியல் முடத்தன்மை வாய்ந்தது'' எனத் தலைசிறந்த அறிவியற் பேரறிஞரான ஐன்ஸ்டைன் பொருள் பொதுளக் கூறியிருப்பது, இளைஞர்களாகிய நாம் கருத்தில் இருத்துதற்குரியது. சமயமும் அறிவியலும் ஒன்றையொன்று தழுவி நிறைவுறுவன. இரண்டும் மக்களின் வாழ்க்கைக்குப் பெரிதும் இன்றியமையாதனவேயாம். ''நாம் மிகப் பல அறிவியல் அறிஞர்களையும், ஆனால் ஒரு சில சமயச் சான்றோர் களையுமே பெற்றிருக்கின்றோம். அணுவின் மறைபொருள்களை அறிந்துகொண்டு விட்ட நாம், 'மலைச் சொற்பொழி'வினைப் புறக்கணித்து விட்டோம். இன்றைய உலகில் அணுவரக்கன் ஓங்கி வளர்ந்து விட்டான்; அறவுணர்வோ குழந்தைமை நிலையிலேயே குறுகிக் கிடக்கின்றது. அமைதியைவிடப் போரைப் பற்றியும், வாழ்வதைவிடக் கொல்லுவதைப் பற்றியுமே நாம் மிகுதியாகத் தெரிந்திருக்கின்றோம்'' என அறிஞர்கள் பலரும் வருத்தம் தோன்றப் பேசி வருதல், மனித வாழ்விற்குச் சமய உணர்வின் இன்றியமை யாமையைப் புலப்படுத்தும். அன்றியும், அண்மையில் வளர்ச்சி பெற்றுள்ள மேலைநாட்டு அறிவியல் முடிபுகள் பலவும், நமது சைவ சித்தாந்தத்திற்குரிய அடிப்படையுண்மைக் கொள்கைகள் எல்லாவற்றின் உண்மையையும் உயர்வையும் மெய்ப்பித்து நிறுவுவதற்கு மிகவும் துணைநின்று அரண் செய்கின்றன எனப் பேரறிஞர்கள் ஆராய்ந்து கூறுவதும், நாம் அனைவரும் பெருமிதங் கொள்ளுதற்குரிய செய்தியாகும். *

## சீர்திருத்தம்

சீர்திருத்தக்காரர்கள் எனத் தம்மைச் சொல்லிக்கொள்ளும் நண்பர்கள் சிலர் சமயத்தைப் புறக்கணித்து விடுகின்றனர். ''தொன்மையவாம் எனும் எவையும் நன்றாகா! இன்று தோன்றியன எனும் எவையும் தீதாகா'' எனக் கட்டுரைத்த சைவச் சான்றோர் ஒரு சீர்திருத்தக்காரரே அல்லரோ? சமயாசிரியர்கள் தம்மீது பல குற்றங்களை ஏறட்டுக்கொண்டு பாடியிருத்தல், அவ்வாற்றால் உலக மக்களைச் சீர்திருத்துதற்கேயாம். தாவீது முதலியவர்களின் துதிப்பகுதிகளில் வரும் 'நான்' 'என்னை' என்பன போன்ற சுட்டுக்கள், அத்தனி மனிதர்களைக் குறியாமல் இஸ்ரேல் நாட்டு மக்கள்

* The recent developments of Western Philosophy and Physical Science, go very inch to prove the truth and value of all the fundamental doctrines that are peculiar only to *Saiva Siddhantha and not to any other religion* or Philosophy, ancient or modern

-பேராசிரியர் மறைமலை அடிகள்

அனைவரையுமே சேர்த்துச் சுட்டுவதாக, பேராசிரியர் ஹட்சன் எழுதுவதும் ஈண்டைக்கு உன்னத்தகும். உலகில் அவ்வப்போது தோன்றிய சமயத் தலைவர்கள் ஒவ்வொருவரும் ஒரு சீர்திருத்தக் காரரே யாவர். சீர்திருத்த இயக்க இளைஞர்களுக்குச் சிவநெறியானது சிறிதும் முரண்படுவதன்று.

1929இல் திருப்பாதிரிப்புலியூரில் நிகழ்ந்த மாபெருஞ் சைவர் மாநாட்டுத் தீர்மானங்களைக் கண்டால், சீர்திருத்த நோக்கம் என்பது எவருடைய தனியுரிமையும் அன்மை இனிது விளங்கும். சமயத் துறையில் மூடப் பழக்கவழக்கங்களும் குருட்டு நம்பிக்கைகளும் இருப்பனவாகத் தோன்றினால், அவற்றை நன்கினிது ஆராய்ந்து பார்த்து, அறிவாலும் அன்பாலும் களைய முயன்று, உண்மைச் சமயநெறியின் உயரிய கருத்துக்களை அறவொழுக்க அடிப்படையிற் பரப்பி, மக்களுக்கு நலம் விளைவிப்பதே சீரிய சீர்திருத்தச் செந்நெறியாகும். திருமுறைப் பாடல்கள் பலப்பல இக்கருத்தைச் செவ்விதின் வலியுறுத்தும்.

## அரசியல்

இனி, அரசியற்றுறையில் ஈடுபட்டு உயர விரும்பும் நண்பர்கள் சிலர், சமய உணர்வால் தமது அரசியல் முன்னேற்றம் தடைப்படுமோ என அஞ்சுகின்றார்கள். சமய உணர்வில் தலைசிறந்திருந்த இராசராசன் இராசேந்திரன் முதலிய சோழ வேந்தர்கள், தமது அரசாட்சியின் பொறுப்புக்களைத் திறம்பட நடாத்தியுள்ளமையின், உண்மைச் சமயவுணர்வு அரசியல் ஆள்வினைத் திறத்திற்கு ஊறு பயப்பதன்று எனத் தெளியலாம். நம் கண் முன்னரே காந்தியடிகளும், தமிழ்ப் பெரியார் திரு.வி.க. அவர்களும், சமய உணர்வுடையவர்களாக இருந்தே அரசியலிற் பெருந் தலைவர்களாக விளங்கி, அரும் பெருஞ் செயல்கள் ஆற்றியுள்ளனர். "கங்கை கொண்ட சோளேச்சரத்தானை அங்கையோ டேந்திப் பலிதிரி கருவூர் அறைந்த சொன் மாலையால் ஆழிச் செங்கையோடுலகில் அரசு வீற்றிருந்து திளைப்பதும் சிவனருட் கடலே" என வரும் திருவிசைப்பா, சமய உணர்வால் இராசேந்திர (கங்கை கொண்ட) சோழனின் அரசு வீற்றிருக்கை சிறப்பெய்தியதனையே வலியுறுத்துவதாகும்.

## உலகியல் :

"வாழ்வாவது மாயம் இது மண்ணாவது திண்ணம்" எனச் சமயங்கள் அறிவுறுத்தலின், உலக நலங்களைத் துய்க்க விரும்புவோர்க்கு அவை கேடு சூழ்வனவாகும் எனக் கருதுபவர்களும்

சிலர் உளர். ''அற்புதத் தெய்வம் இதனின் மற்றுண்டே'' எனப் போதரும் திருவிசைப்பா, இம்மையின்ப நுகர்ச்சிக்குச் சமயங்கள் தடையல்ல என்றுணர்த்துவதாகும். தொல்காப்பியர் கூறிய காஞ்சித் திணையினையே, ''வாழ்வாவது மாயம் இது மண்ணாவது திண்ணம்'' எனச் சமயாசிரியர்கள் கூறினர். உலக நிலையாமையினை உணர்ந்த ஒருவனே, உலகியலின்பங்களை நெறியறிந்து நுகர வல்லவனாவான். கோவலனும் கண்ணகியும் ''தொலையாத இன்பமெலாம் துன்னினார் மண்மேல் நிலையாமை கண்டவர்போல் நின்று'' எனச் சிலப்பதிகாரம் கூறுதல் காணலாம். ''வாழ்வாவது மாயம்'' எனக் குறிப்பிட்ட சுந்தரமூர்த்திகளின் வரலாறே, உலகியலின்பங்களை நெறியறிந்து துய்க்கும் முறையினை உணர்த்துவதாகும்.

## சமரசம்

மக்களிடையே வேற்றுமைகட்கும் பூசல்கட்கும் காரணம் மதங்களே என்பர் சிலர். வேற்றுமைகட்கும் பூசல்கட்கும் மதங்கள் காரணம் அல்ல, அவற்றை நன்குணர்ந்து கொண்டு கடைப்பிடியாத மக்களேயாவர் என்பதுணரற்பாற்று. சமய உண்மைகளை நன்குணர்ந்து தெளிந்த சான்றோர்களும், அவைகளைப் பற்றி ஒன்றுமே அறியாத எளிய நல்ல பொது மக்களும் ஒருபொழுதும் மதப் பூசல்களை விளைப்பதில்லை. இடைநிலை மக்களே அரசியல் பொருளியல் இனவியற் காரணங்களை ஒட்டி மதத்தின் பேரால் பூசல்களை விளைவித்து வந்துள்ளனர். ஆதல் பற்றியே ''போதம் மிகுத்தோர் தொகுத்த பேதைமைக்கே பொருந்தினோர் இவர்க்கன்றிக் கதிப்பாற் செல்ல ஏது நெறி எனுமவர்கட்கு''த் தாம் சிவஞான சித்தியாரைத் தேர்ந்துரைப்பதாக ஆசிரியர் அருணந்தி சிவனார் அறிவிக்கின்றார். ''உணரார் உணரார் உடங்கியைந்து தம்மிற் புணராமை கேளாம் புறன்'' என மெய்கண்டார் கூறுவதும் கருதற் பாலது. மேலும், மதங்கள் மட்டுமேயன்றி நாடு மொழி இனம் முதலியனவும் வேற்றுமைகட்குக் காரணம் என்பதனையும், தவிர்க்க முடியாத இவ்வேற்றுமைகளிடையே இயன்ற அளவு ஒற்றுமை கண்டு வாழ முயலுவதே நம் கடமை என்பதனையும் நம்மனோர் மனங்கொள்ளுதல் வேண்டும். ஒரு சிலர் ''எம்மதமும் சம்மதம்'' எனக் கூறிக் கொண்டு ஒன்றன்பாலும் ஈடுபாடின்றிக் காலங் கழிக்கின்றனர். வேறு சிலர் ''சமரசம்'' என்னும் பெயரால் ''கருங்கொள்ளும் செங்கொள்ளும் தூணிப் பதக்கென்று ஒருங்கொப்பக் கொண்டானாம் ஊரன்'' என்பதுபோல எல்லாவற்றையும் கூட்டிக் கலந்து குழப்பிப் பெரியதோர் ஏதம் விளைவிக்கின்றார். எல்லாச் சமயங்களையும்

விருப்பு வெறுப்பின்றி அதனதன் நோக்க நிலையினின்று பொதுவாக ஆராய்ந்தறிந்து தேர்ந்து உண்மை கண்டுவப்பதும், அவற்றுள் ஏதேனும் ஒன்றைத் தமக்கெனச் சிறப்பு முறையிற் கொண்டு மனமார ஈடுபட்டுப் பின்பற்றி ஒழுகி வருவதுமே, உண்மைச் சமரச நெறியாகும். இப்பொதுமை நெறிச் சமய நல்லுணர்விற்கு இணையற்ற எடுத்துக்காட்டாக இளங்கோவடிகளை நாம் பின்பற்றி ஒழுகி, மதப் பூசல்களைப் போக்கி உலகநலன் குறித்து உழைத்தல் வேண்டும்.

## சமயத்தின் முதன்மை

நாட்டுப் பற்றும் மொழிப் பற்றும் எத்துணை இன்றியமை யாதனவோ, அத்துணையளவுக்குச் சமயப் பற்றும் இன்றியமை யாததேயாகும். மொழியானது மக்களின் எண்ணமும் அதன் வெளிப்பாட்டு முறைகளுமாக, உண்மைச் சமயமோ மக்கள் வாழ்க்கைத் துறைகள் அனைத்திலும் ஊடுருவி நிற்கும் தகைமை வாய்ந்து திகழ்வது. ஒரு நாட்டின் நாகரிகமும் பண்பாடும் பிறவுமெல்லாம், சிறப்பாக அதன் சமய நெறியாலும் உருப் பெற்றுச் சுடர்விடுகின்றன. சமயம் என்பது சிலர் நினைப்பதுபோல, எளிதிற் புறக்கணித்துவிடத் தகுவதொன்றன்று. ''சமயம் என்னும் புனிதம் மிக்க இனிய தெய்விகச் சொல்லில், மிக மேலான மதிப்பை யுடையதும், இவ்வுலகிலுள்ள பொருள்களை யெல்லாம் கொடுத் தேனும் பெறத் தகுந்ததுமாய்ச், சொல்லுதற்கரிய எத்துணையோ பல அரும்பெறற் பொருட்களஞ்சியம் அமைந்துள்ளது.''* நாம் விரும்பினாலும் விரும்பாவிட்டாலும், சமய உணர்வு நம்மிடம் இயல்பாக அமைந்து கிடக்கின்றது. குறித்த ஒரு பருவத்தில் ''பாலுணர்ச்சி'' ஏற்படுவது போலவே, கடவுளுணர்ச்சியும் சமய வொழுக்கமும் என்றேனும் ஒருநாள் ஒவ்வொருவர்க்கும் ஏற்படும் நிலை வந்தே தீரும்.

*''கன்னிகை ஒருத்தி சிற்றின்பம் வேம்பென்னினும்*
*கைக்கொள்வள் பக்குவத்தில்;*
*கணவனருள் பெறின்முனே சொன்னவா றென்னெனக்*
*கருதி நகையாவள்!''*

---

* Religion ! what a treasure untold
Resides in that heavenly word
More precious than silver and gold
Or all that this world can afford

- *William Cowper*

எனவரும் தாயுமானவர் பாடலும் இவ்வுண்மையை நன்கு விளக்குதல் காணலாம். ''நானேதும் அறியாமே என்னுள் வந்து நல்லனவும் தீயனவும் காட்டா நின்றாய்!'', ''புந்தி வட்டத்திடைப் புக்கு நின்றானையும் பொய் என்பனோ?'', ''உள்குவார் உள்கிற்றெல்லாம் உடனிருந்தறிதி என்று, வெள்கினேன் வெள்கி நானும் விலாவிறச் சிரித்திட்டேனே'', ''ஏழையேன் நான் பண்டு இகழ்ந்தவாறே'' ''போற்றாதே ஆற்றநாள் போக்கினேனே'' எனத் திருநாவுக்கரசர் ஆங்காங்குக் குறிப்பிட்டிருத்தல் நம் சிந்தனைக்குரியது.

## கடவுளுணர்ச்சி

நம் தமிழ்ப் பெருமக்கள் தொன்று தொட்டே கடவுளுணர்ச்சியில் தலைசிறந்து விளங்கி வந்திருக்கின்றனர். தொல்காப்பியனார் எழுத்துக்களை உயிர், மெய் எனப் பாகுபாடு செய்திருப்பதொன்றே, பழந்தமிழர்களின் சமய மெய்யுணர்வைப் புலப்படுத்தும். திரு. பா. வே. மாணிக்க நாய்க்கர் அவர்கள் இயற்றிய ''தமிழ் நெடுங் கணக்கின் மெய்ப்பொருட் கூறுகள்'' (Mystic Aspects of the Tamil Alphabets) என்னும் நூலும் இக்கருத்தை வலியுறுத்தும். ''வினை எனப் படுவது வேற்றுமை கொள்ளாது நினையுங்காலைக் காலமொடு தோன்றும்'' என்னும் நூற்பாவிற்கு அந்நூல் விளக்கியுள்ள பொருளைக் ''கரந்தைக் கவியரசு'' அவர்கள் பலகாலும் பாராட்டி யுரைப்பது வழக்கம். தமிழ் நூல்களுள் நமக்குக் கிடைத்திருப்பனவற்றுள் முதன் முதலாகத் தெய்வக் கொள்கையையும் வழிபாட்டினையும் வற்புறுத்திய புலவர் திருவள்ளுவரே. ஆதல் பற்றியே அவர் ''தெய்வப் புலவர்'' எனச் சிறப்பிக்கப்பட்டார். எவரும் மறுக்கொணாது உடன்படும் வகையில், நடுநிலை பிறழாமல், கடவுளியல்பினைத் திட்ப நுட்பமுறத் தெளிவித்துக் கூறியிருக்கும் திறமொன்றே, அதனைச் செய்தருளியவர் திருவள்ளுவரே என்பது தெருட்டாநிற்கும். இங்ஙனமே, சங்ககால இலக்கியங்கள் பலவற்றிலும் கடவுட் கோட்பாடுகள் நிரம்ப வந்திருத்தல் யாவரும் அறிந்தது. ''ஊழ்வினை உருத்துவந் தூட்டும்'' எனவும், ''தெய்வம் தெளிமின் தெளிந்தோர்ப் பேணுமின்'' எனவும் இளங்கோ வடிகள் முழங்குகின்றார்.

மாணிக்கவாசகர், போற்றித் திருவகவலின்கண், தாயினது வயிற்றிற் பத்துத் திங்கள்காறும் கருவானது முறை முறையே இறைவனருட்டுணை கொண்டு வளர்ந்து வரும் பெற்றியினை விரித்துரைத்து, நம்மிடையே கடவுளுணர்வை எழுப்புகின்றார். ''விறகிற் றீயினன் பாலிற் படும் நெய்போல் மறைய நின்றுளன் மாமணிச் சோதியான்'' எனத் திருநாவுக்கரசர் தெளிவிக்கின்றார்.

திருஞான சம்பந்தர் "ஏதுக்களாலும் எடுத்த மொழியாலும் மிக்குச் சோதிக்க வேண்டா! சுடர்விட்டுளன் எங்கள் சோதி!" என்கின்றார். ஆயினும், ஆசிரியர் மெய்கண்டார் நம் பொருட்டு மிகவும் இரக்கங் கொண்டு, ஏதுக்களாலும் எடுத்த மொழியாலும் மிகச் சோதித்துக் காட்டியும், பலவகையாற் கடவுளுண்மையை நமக்கு உணர்த்த முற்படுகின்றார்: எல்லாப் பொருள்களையும் காணும் கண் தன்னைக் காணாது; தனக்கு அப்பொருள்களைக் காட்டி நிற்கும் உயிரையும் அது காண இயலாது. அதுபோலவே, உலகியற் பொருள்களை அறிந்து வருகின்ற உயிர் தன்னை அறியாது; தனக்கு அவற்றை அறிவித்தருளும் இறைவனையும் அறியாது. ஆயினும், கண்ணுக்கு மறைந்து நின்று பொருள்களைக் காட்டி வருகின்ற உயிர் ஒன்றுண்டெென்பது துணியப்படுதல்போல, உயிர்களுக்கு மறைந்து நின்று உலகியற் பொருள்களை உணர்வித்துவரும் இறைவன் ஒருவன் உளன் என்பதும் துணியப்படும். உயிர்களின் உள்ளத்தே மறைந்து நின்று பொருள்களை உணர்த்தி வரும் அவ்விறைவனை, அவ்வுள்ளத்திலேயே ஆராய்ந்து தெளிக! என்னும் கருத்து அமைய,

*"காட்டிய கண்ணே தனைக்காணா! கண்ணுக்குக்*
*காட்டாய உள்ளத்தைக் கண்காணா! - காட்டிய*
*உள்ளம் தனைக்காணா! உள்ளத்தின் கண்ணாய*
*கள்வன்தான் உள்ளத்திற் காண்!"*

என அவர் விளக்கியிருப்பது, அறிஞர்க்கு ஆராப்பெரு விருந்தாகும். அவர் தம்மைப் பின்பற்றி, "ஒருவனோ டொருத்தி ஒன்றென் றுரைத்திடும் உலகமெல்லாம் வருவதும், வந்து நின்று போவதும் ஆதலாலே தருபவன் ஒருவன் வேண்டும்!" என அருள்நந்தி சிவமும் இறையுண்மை நிறுவுகின்றார். "இயல்புகாண் தோற்றி மாய்கை" என்பாரை மறுத்து, "இயல்பினுக்குச் செயலதின்று; செய்தியேல் இயல்பதின்றாம்; செயல் செய்வான் ஒருவன் வேண்டும் செயற்படும் சேதனத்தால்!" எனவும் அவர் வற்புறுத்துகின்றார். தாயுமானவர் "தாயர் கர்ப்பத்தூடு அனமும் தண்ணீரும் தந்தருளும் நேய! உனை யாரே நினையார்? பராபரமே!", "தோற்பாவை நாலாட் சுமையாகும், சீவன் ஒன்றிங்கு ஆர்ப்பால் எடுத்த தெவராலே? பராபரமே!" எனவும், இராமலிங்கர் "நில்லாத காற்றை நிலையாக் கடத்தடைத்துச் செல்லாது வைக்கின்ற சித்தனெவன்?" எனவும் வியந்து வினவித் தெய்வம் தெளிவிக்கின்றனர்! "ஈசனுக்கு அன்பில்லார், அடியவர்க்கன் பில்லார்; எவ்வுயிர்க்கும் அன்பில்லார்; தமக்கும் அன்பில்லார்!"

*''கடற்காட்சி! வான்காட்சி! கார்வரைசூழ் காட்சி!*
*உடற்காட்சி! அவ்வுடல் ஒண்சூற் - படற்காட்சி!*
*உய்த்துய்த் துணர்ந்தக்கண், ஓர்இறைவன் உண்டு! என்னும்*
*மெய்த்தன்மை நெஞ்சின் மிகும்!''*

## சிவ வழிபாடு

கடவுட் பெரும்பொருளைத் தமிழர்கள் ''சிவம்'' என்னும் பெயராற் சிறப்புறக் குறிப்பிட்டுத் தொன்றுதொட்டு வழிபட்டு வருகின்றனர். எந்நாட்டிற்கும் உரிய இறைவனைத் ''தென்னாடுடைய சிவன்'' எனத் திருவாசகம் சிறந்தெடுத்தோதுகின்றது! ''சிவன்'' என்னும் சொல் 'முற்றுணர்வினன்' 'பேரின்ப காரணன்' 'தூய தன்மையன்' எனப் பொருள்படுதலை, ஆசிரியர் சிவஞான முனிவரர் ''மன்னுசிவன் சந்நிதியில்'' என்னும் சிவஞான போத வெண்பாவில் விளக்குகின்றார். தொல்காப்பியம் கூறும் ''கந்தழி'' என்பது சிவலிங்கமே என்றும் திருவள்ளுவர் குறித்த 'செம்பொருள்' என்பது சிவமேயாம் என்றும் பேரறிஞர்கள் கருதுகின்றனர். உலகிலுள்ள எல்லாச் சமயங்களையும்விட மிக மிகத் தொன்மை வாய்ந்ததும், உயிர்ப்புடையதுமாய் விளங்குவது (The most ancient living faith in the world) சைவ சமயமே என்று சர் ஜான் மார்ஷல் ஆராய்ந்துணர்த்து கின்றார். எகிப்து, சிரியா, பாரசீகம், சிறிய ஆசியா, கிரீசு, இத்தாலி, ஆப்ரிக்கா, அமெரிக்கா முதலிய உலகின் பல பகுதிகளிலும் சிவலிங்க வழிபாடு பண்டே பரவி இருந்ததாக வெஸ்ட் ரோப்பே, கிராண்ட், ஆலென், டெய்லர் முதலிய அறிஞர்கள் உண்மை கண்டு ஒளியதுரைத்துள்ளனர். *

சைவ சமயம் தமிழர் சமயம்; பழந்தமிழ்க் கொள்கையே சைவ சமயம். அஃது எந்தச் சமயத்திற்கும் கொள்கைக்கும் முரண்படுவதன்று. ''ஓது சமயங்கள் பொருள் உணரும் நூல்கள்'' என்னும் சிவஞான சித்தியார் செய்யுள் கூறுவதுபோல, பிற எல்லாச் சமயங்களையும் கொள்கைகளையும் தன்பாற் படிமுறையே தழுவிக் கொண்டு மகிழும் பரந்த பெரு நோக்குடையது சைவ சமயம். ''அப்பாலும் அடிச் சார்ந்தார்'' பற்றிய சேக்கிழார் பெருமானது

* "The practice of 'Linga Worship' was so general as to have spread itself over a large part of the habitable globe, for it flourished for many ages in Egypt and Syria, Persia, Asia Minor, Greece and Italy, it stillis in vigour in India and many parts of Africa and was even found in America on its discovery by the Spaniards, being regarded as the most sacred object of worship and consecrated by religion. The culture was associated with the very idea and sentiment which was regarded as ennobling to man."

- *Westroppe*

விளக்கம், சைவ சமயத்தின் விரிந்த மனப்பான்மையைத் தெற்றெனக் காட்டும். மானியர் வில்லியம்ஸ் என்பார் 'இந்து மதம்' என்பது குறித்துக் கூறியிருப்பன, இவ்வாற்றால் சைவ சமயத்திற்கும் சிறப்பாகப் பொருந்தும். பல்வேறு மனநிலைகளைக் கொண்ட மக்களுக்கும் பயன்படும் வகையிற் பலப்பல சிறப்பியல்புகளைத் தன்னகத்தே கொண்டு திகழ்கின்றது சைவ சமயம் எனலாம்.*

## திருமுறைகள்

திருநாவுக்கரசர் ''சொல்லும் பொருளெலாம் ஆனார் தாமே, தோத்திரமும் சாத்திரமும் ஆனார் தாமே'' எனப் பாடுதற்கேற்பப் புகழ்நூல்கள் பன்னிரு திருமுறைகளையும், பொருள் நூல்களாய பதினான்கு மெய்கண்ட சாத்திரங்களையும், சைவ சமயம் தனக்குரிய சிறந்த இலக்கியச் செல்வங்களாகப் பெற்றுப் பிறங்குவது தமிழர் தம் தவப் பேறேயாகும். திருவாசகம், திருச்சிற்றம்பலக் கோவையார், திருமந்திரம், பெரிய புராணம் போன்ற முழு மணிகள் எனத் தகுந்த சிறந்த பெருநூல்களை நாம் வேறு எம்மொழியினும் காண்டல் அரிது. இலக்கியச் சிறப்பு, இசைநலம், கலைவளம், கற்பனைத்திறம், வரலாற்றுண்மை, இயற்கைப் புனைவு முதலிய பற்பல துறைகளிலும் ஒருங்கே சிறப்போங்கித் திகழும் திருமுறைகளை, உயிர்க்கு உரம் விளைக்கும் ''பல்வகைச் சத்துணா மாத்திரைகள்'' (Multi Vitamin Tablets) எனவே சுருங்கக் கூறுதல் இயலும். இரவீந்திரநாத தாகூர் தென்னாட்டுச் சுற்றுப் பயணம் செய்தபோது ''மாசில் வீணையும் மாலைமதியமும்'' முதலிய திருமுறைப் பாடல்களின் பொருளைத் தாம் விளக்கிக் கூற மெய்மறந்து கேட்டுக் கொண்டிருந்து, தமிழ்க் கவிதைகளின் இணையற்றுயர்ந்த இறையருள் எழில்நலங்களைப் பாராட்டிப் புகழ்ந்ததாகத் திரு.வி.க. அவர்கள் சென்னையில் ஒரு சொற்பொழிவிற் குறிப்பிட்டார். நாவலர் ந.மு. வேங்கடசாமி நாட்டார் அவர்கள், மாணவர் ஒருவர் ''அம்மையே அப்பா'' என்னும் திருவாசகப் பாடலைக் கடவுள் வாழ்த்தாகப் பாட நேர்ந்து, இசை வயப்பட்டு ''என் அம்மையே அப்பா'' எனவும் ''இம்மையே யானுன்னைச் சிக்கெனப் பிடித்தேன்'' எனவும் பாடியபோது, ''யான் எனதென்னும் செருக்கறுப்பான் வானோர்க் குயர்ந்த உலகம் புகும்''

* It is all-tolerant, all-compliant, all-comprehensive, all-absorbing It has its spiritual and its material aspect, its esoteric and exoteric, its subjective and objective, its rational and mystical. It has one side for the practical, another for the severely moral, another for the devotional and imaginative, another for the sensuos and sensual, and another for philosophical and speculative ."

-*Monier Williams*

என்னும் உண்மையை யுணர்ந்து, அவற்றை ஒழித்துக் கொள்ளுதற்காக அரும்பாடு பட்டுயர்ந்த ஒரு சிறந்த சான்றோரின் திருப்பாடலில், நீர் மிக எளிதாக ''யான்-என்'' என்னும் சொற்களைச் சேர்த்துப் பாடிவிட்டீரே! என அவரைத் திருத்துதற்குக் கூறிய அருளுரைகள், அவற்றை அருகிருந்து கேட்ட என் உள்ளத்திற் பசுமரத்தாணிபோலப் பதிந்துள்ளன. அங்ஙனமே, அருட்டிரு மறைமலை அடிகளார் ''யானே பொய் என் நெஞ்சும் பொய்'' முதலிய திருவாசகப் பாடல்களை அவைகளிற் சொற்பொழிவிற் கூற நேருங்கால், விம்மி விம்மிக் கண்ணீர் மல்க நின்ற காட்சியை யான் பலகாற் கண்டு வியந்துருகி யுள்ளேன். ''ஞானத்தால் தொழுவார்கள் தொழக்கண்டு ஞானத்தால் உனைநானும் தொழுவனே'' என்ற நிலையிலன்றோ நாமும் இருக்கின்றோம்? இன்னோரன்ன செய்திகளெல்லாம் நமக்குத் திருமுறைகளின் பலதிறப் பெருமைகளை உணர்த்தவல்லனவாம்.

## சைவ சித்தாந்தம்

இவ்வாறே சைவ சித்தாந்த நூல்களும் தனிப்பெரு மாண்புகள் உடையனவாய் இலங்குகின்றன. சைவ சித்தாந்தம் தமிழர்க்கே யுரிய தனிப்பெருங் கடவுட் கொள்கை. டாக்டர் ஜி.யூ. போப், ரெவரண்ட் கௌடி முதலிய பற்பலர் அவற்றின் அருமை பெருமைகளை விதந்து புகழ்ந்துள்ளனர். சைவ சித்தாந்தமானது இஞ்ஞான்றை அறிவியற் கலையாற் பெரிதும் அரண் செய்யப் பெறுவது! தன்னாற் கூறப்படும் பொருளும், அதன்கண் நிகழும் ஐயப்பாடும், அதற்குப் பிறர் கூறும் கருத்தும், அதனை மறுத்துரைக்கும் சித்தாந்தத் துணிபும், இயைபும் என்னும் இவற்றினை நிலைக்களமாகக் கொண்டு, தருக்கநெறி முறைகள் பிறழாது, எத்தகைய ஐயங்களையும் போக்கித் தெளிவு செய்யவல்லது! முன்னைப் பழம் பொருட்கும் முன்னைப் பழம் பொருளாய்ப், பின்னைப் புதுமைக்கும் பேர்த்தும் அப்பெற்றித்தாய்ப் பிறங்குவது! உலகியல் நடைமுறை வாழ்க்கையிற் பிறழாது பெரிதும் இயைந்து சென்று சிறந்தொளிர்வது! அறிவாராய்ச்சிக் கலைக் களஞ்சியமாய்ப் பெருவிருந்தாய் விளங்குவது! பண்டைத் தண்டமிழ்ச் சான்றோர் பலரும் வாழ்ந்து காட்டிப் போற்றிப் போந்த செந்நெறியாய் நின்றிலங்குவது! ''தெய்விகத் தத்துவக் கொள்கையானது, அறிவிலிகள் நினைப்பதுபோல, அத்துணைக் கடினமானதும் சுவையற்றதும் அன்று! அப்போலோவின், குழலிசைபோல, அஃது இனிமை மிக்க இசைநலம் உடையதாகத் திகழ்கின்றது! தேனிற்றோய்த்த இனிய சுவைப் பொருள்களைப்போல, எஞ்ஞான்றும் மிக இனிமை பயக்கும் பெருவிருந்தாக அது விளங்குகின்றது. அதன்கண் சுவைக்குறைவோ தெவிட்டுதலோ சிறிதும் இல்லை'' என

ஜான்மில்ட்ன் பாடுவது போலவே, சைவ சித்தாந்தமும் தெளிவும் இனிமையும் செறிந்தொளிர்கின்றது என்பது உண்மை; வெறும் புகழ்ச்சியில்லை!

## முடிவுரை:

சைவத் தமிழ் நலஞ்சான்ற அருமை நண்பர்களே!

இதுகாறும் கூறியவற்றை எல்லாம் உள்ளத்தே கொண்டு, நமது முன்னுள்ள அரியபெரிய பொறுப்புக்களை யெல்லாம் நாம் நன்குணர்ந்து கொள்வோமாக! பிற சமய மக்கள்போல, நம் சமயத்தினை நாம் பிற நாடுகளிலும் பரப்புவதற்குத் துணியாவிட்டாலும், நம் சமய உண்மைகளை நம் நாட்டளவிலாதல் என்றும் ஒளி குன்றாது நிலைபெறச் செய்ய உறுதி கொள்வோமாக! "கடன் என்ப நல்லவை எல்லாம்" என்பதுணர்ந்து, நாட்டிற்கும் மொழிக்கும் சமயத்திற்கும் மக்கள் நலனுக்குமெல்லாம் தொண்டு செய்வதற்குரிய வகைகளில் நம்மைப் பல துறைகளிலும் தகுதியும் திறமையும் உடையவர்களாக ஆக்கிக் கொள்ள, நாம் மிகவும் முனைந்து முயலுவோமாக! சைவ இளைஞர்களுள் தலையாயவர்களாக நம்மாற் கொள்ளத்தக்கவர்கள், திருஞானசம்பந்தரும் மெய்கண்டாருமே ஆவார்கள். அந்தச் "சிறிய பெருந்தகையார்" களால், மன்பதைக்கு விளைந்துள்ள நலங்களுக்கு அளவேயில்லை. அப்பெருமக்களின் அடிச்சுவடுகளைப் பின்பற்றி ஒழுகி, வையத்து வாழவாங்கு வாழ்ந்து நாம் சிறப்புறுவோமாக! செந்தமிழ் வெல்க! சிவநெறி செழிக்க! வையகமும் துயர்தீர்க!*

*சைவ சமயம் பழஞ்சமயம்! தமிழர் சமயம்! பெருஞ்சமயம்!*
*மெய்யிற் சிறந்த விழுச்சமயம்! விரிந்த நோக்கின் வியன் சமயம்!*
*பொய்யில் கேள்விச் சான்றோர்கள் போற்றிவளர்த்த புகழ்ச் சமயம்!*
*வையம் முழுதும் இதுபரவி, மக்கள் நலமே மிகவாழ்க! (1)*

*செந்தமிழைக் கற்போம்! சிவத்தைத் தொழுதுய்வோம்!*
*அந்தமிலாப் பல்கலைகள் ஆய்ந்துணர்வோம்-நந்தமுயர்*
*நாட்டிற்கும், மக்கள் நலனுக்கும் நன்குழைப்போம்!*
*மாட்சிமையின் வாழ்வோம் மகிழ்ந்து! (2)*

* "How charming is divine philosophy!
Not harsh and crabbed, as dull fools suppose;
But musical as is Apollo's lute
And a perpetual feast of nectar'd sweets
Where no crude surfeit reigns,

-John Milton

# திரு. ம. பாலசுப்பிரமணியன்

(52ஆம் ஆண்டு விழா - 1957 - மயிலாப்பூர் - சைவர் மாநாடு)

*ஆனைமுகன் ஆறுமுகன் அம்பிகை பொன்னம்பலவன்*
*ஞானகுரு வாணியை உள்நாடு.*

1. சைவ ஒழுக்கத்தில் தலைசிறந்து விளங்கும் மெய்யன்பர்களே! எனது அருமைச் சகோதரி சகோதரர்களே! அடியேனது தாழ்மையான வணக்கத்தை உங்களுக்குச் செலுத்துகின்றேன். 1944ஆம் ஆண்டில் பள்ளத்தூரிலும், 1948-ல் யாழ்ப்பாணத்திலும் நடைபெற்ற சமாஜ ஆண்டு விழாக்களில் தலைமை வகித்த என்னை, மீண்டும் ஒருமுறை தலைமை வகிக்கப் பணித்த உங்களுடைய பெருங்கருணையைக் கட்டளையாகவே சிரமேற்கொள்கின்றேன். தலைமைக்குரிய தகுதி என்பால் இல்லை யென்பது நீங்களும் நானும் நன்கறிந்ததொன்றே யாயினும், உங்களுடைய அன்பு வலையில் சிக்கிக் கொண்ட எனக்கு என்ன சுதந்திரம் உளது? குற்றம் செய்யினும் குணம் எனக் கருதும் கொள்கையுடைய நீங்கள் என் பேச்சிலுள்ள குற்றங்களைப் பொறுத்தருள வேண்டுகிறேன்.

2. நமது சமாஜம் 52 ஆண்டுகள் நிரம்பியும், இந்த ஆண்டில் தான் நிறைவு விழா திருமயிலாப்பூரில் நடக்கிறது. இதில் ஒரு தனிச்சிறப்புண்டு. 52ஆம் ஆண்டுகளின் அனுபவம் நிறைந்த பிறகே, இந்தத் திருத்தலத்தில் ஆண்டுவிழா நடத்தற்குரிய தகுதி நமது சமாஜத்திற்கேற்பட்டுள்ளதென, இத்தல வாசிகள் கருதுகின்றனர் போலும். 1916ஆம் ஆண்டில் மயிலாப்பூரின் வடஎல்லையில் வசித்த இராஜா கிராமணியார் தோட்டத்தில், யாழ்ப்பாண நகர்வாசியான முதலியார் சபா ரத்தினம் அவர்கள் தலைமையில் சமாஜ ஆண்டுவிழா நடந்தது. ஆனால் இப்போதுதான் மயிலாப்பூரின் மத்தியில், திருக்கபாலீச்சரம், வெள்ளீச்சரம் ஆகிய இரு சிவாலயங்களின் அருகில் சமாஜ ஆண்டுவிழா நடக்கிறது. மற்றொரு பொருத்தம் என் நினைவிற்கு இயற்கையாக வருகின்றது. எண்ணிலாத நெடுங்காலம் பற்பல தலைமுறைகளாக, எங்கள் குடும்பம் மயிலாப்பூரில் இருந்து வருகிறது. திருமயிலாப்பூரில் ஏழு சிவால்யங்கள், சில வைணவ

ஆலயங்கள், பற்பல விநாயகர் கோயில்கள் விளங்குகின்றன. திருமங்கையாழ்வார் திருவல்லிக்கேணியைக் குறிக்கும்போது, "தேனமர்சோலை மாடமா மயிலைத் திருவல்லிக்கேணி" என்கிறார். தேவார முதலிகள் மூவர் திருவாக்கிலும் மயிலாப்பூர் புகழப் பெறுகின்றது.

3. பூம்பாவைத் திருப்பதிகத்தில் திருஞானசம்பந்தர், "மட்டிட்ட புன்னையங்கானல் மடமயிலைக் கட்டு இட்டம் கொண்டான் கபாலீச்சரம், மாமயிலை வண்மறுகில் துளக்கில் கபாலீச்சரம், ஊர்திரை வேலை உலாவும் உயர்மயிலை, கார்தரு சோலைக் கபாலீச்சரம், மடலார்ந்த தெங்கின்மயிலை, மலிவிழா வீதி மடாநல்லார் மாமயிலை, கண்ணார் மயிலைக் கபாலீச்சரம், கற்றார்கள் ஏத்தும் கபாலீச்சரம், கருஞ்சோலை சூழ்ந்த கபாலீச்சரம், கானமர்சோலைக் கபாலீச்சரம்" என்று புகழ்கின்றார். சோலைகளுட் பெரும்பாலன இப்போது மாளிகைகளாக மாறிவிட்டன. அப்பர் சுவாமிகள் திருத்தாண்டகங்களில் "மங்குல் மதி தவழும் மாடவீதி மயிலாப்பு, மயிலாப்பில் மன்னினார் மன்னி யேத்தும் பெருநீர் வளர் சடையான், எதிர் கண்டோம் மயிலாப்புள்ளே, கல்லாடை புனைந்தருளும் கபாலியைக் கற்பகத்தைக் கண்ணாரக் கண்டேன் நானே" என்ற குறிப்புகள் உள்ளன. அப்பர் பெருமான் திருமயிலாப்பூரைத் தரிசித்துப் பதிகம் பாடினார் என்பதைச் சேக்கிழார் "தரைவளர் சீர்த் திருமயிலை சங்கரனார் தாள் வணங்கி உரைவளர் மாலைகள் அணிவித்து உழவாரப் படையாளி" என்று குறிக்கிறார். சுந்தரமூர்த்தி சுவாமிகள் திருவாக்கில் "துறைக்கொண்ட செம்பவளம் இருளகற்றும் சோதித்தொன் மயிலை" எனும் குறிப்பு நயமாக வருகிறது. கடல் துறையில் பவளங்கள் ஒதுக்கப்படுவதால் இருள் அகல்கின்றது என்பது இயற்கை வர்ணனை. செம்பவளத் திருவுருக் கொண்ட கபாலீஸ்வரர் அருள் வழங்கும் துறையாகத் திருக்கோயில் கொண்டமுந்தருளி, ஆன்மாக்கள் ஆணவ இருளை அகற்றும் தொன்மயிலை என்ற பொருளும் தொனிக்கிறது.

4. மயிலாப்பூருக்கு வேறொரு சிறப்பும் உண்டு. உலகப் பொதுமறையாகிய "திருக்குறள்" ஆசிரியர் திருவள்ளுவர் வாழ்ந்த திருத்தலம் திருமயிலையே. இவர் திருக்கோயில் கபாலீச்சரத்திற்கு வடக்கே அரை மைல் தொலைவிலுள்ளது. தமிழ் நூல்களுள் எழுபது வேற்று மொழிகளுள் மொழிபெயர்க்கப்பெற்றது திருக்குறள் ஒன்றே. இதற்குப் பதின்மர் உரை வகுத்தனர். இவ்வாண்டில் வெளிவந்த "முதற்குறள் உவமை" என்ற அரிய நூலில் பல நுட்பங்களைக்

காணலாம். மானஸீக பூஜை செய்து முக்தி பெற்ற வாயிலார் நாயனார் திரு அவதாரத் தலமும் திருமயிலையே. பேயாழ்வார் அவதரித்ததும் திருமயிலையே. இத்தகைய பெருமைகளையுடைய திருமயிலையில் கபாலீச்சரத்தருகில் நமது சமாஜ விழா நிகழ்வதும் சமாஜத்தின் பெரிய பேறென்றே கருதத்தகும். மயிலாப்பூரில் நடக்கும் சமாஜ விழாவிற்கு மயிலாப்பூரில் பிறந்து வளர்ந்த நான் தலைமை வகிப்பது, எனக்கு அளவற்ற மகிழ்ச்சியைத் தருகின்றது. அடக்க விலைச் சுத்த பதிப்பாக நமது சமாஜம் முதன் முதல் சுந்தரர் தேவாரத்தைத் திருமயிலைக் கபாலீச்சரத்தில் தான் வெளியிட்டது. சமாஜக் காரியாலயம் பல ஆண்டுகள் திருமயிலையிலேயே இருந்தது. சில விசேஷ மாநாடுகளும், பல திருவிழாச் சொற்பொழிவுகளும் இங்கேயே நடந்தேறின.

5. திருமயிலையில் பல புலவர் பெருமக்கள் அவ்வப்போது வாழ்ந்து தொண்டாற்றி வந்துள்ளனர். திருவள்ளுவரைப் பற்றிமேலே கண்டோம். தாச்சி அருணாசல முதலியார் என்ற புலவர் பல நூல்களை இயற்றினார். கபாலீசர் மீதும் கற்பகவல்லி மீதும் பல பாடல்களை உருக்கத்தோடு பாடினார். அவை சாது அச்சுக்கூடத்தில் பல வருடங்கட்கு முன் அச்சிடப் பெற்றன. யாழ்ப்பாணத்து மேலைப் புலோலி கதிரைவேற் பிள்ளையவர்கள் மயிலாப்பூரில் தொடர்ச்சியாகப் பல சொற்பொழிவுகள் செய்தார். பிரசங்க சண்டமாருதம் சோமசுந்தர நாயகர் அவர்களும் ஆலாலசுந்தரம் பிள்ளையவர்களும் சுவாமி நாத பண்டிதரவர்களும் பற்பல சொற்பொழிவுகள் செய்தனர். ஆறுமுக நாவலர் சீடரான மகா வித்வான் தணிகாசல முதலியார் தமது முதிர்ந்த பருவத்திலும், சிவஞான சாத்திரங்களை மாணவர்கள் பக்குவத்திற்கேற்றபடி பாடமாகச் சொல்லி வந்தனர். வித்வான் சண்முகம் பிள்ளையவர்கள் "திருமுல்லைவாயிற் புராணம்" முதலிய நூல்களை யாத்தனர். இவருடைய மாணாக்கர் கா. ரா. நமச்சிவாய முதலியாரவர்கள் மயிலாப்பூரில் "கடலகம்" எனும் மாளிகையில் வசித்துப் பல தமிழ் நூல்களை வெளியிட்டனர். குன்றக்குடிக் கிளை மடத்திலிருந்த பெரியார் அமிர்தலிங்கத் தம்பிரான் சுவாமிகள் தமிழில் திருமயிலைத் தலபுராணம் பாடினார். இப்போது அப்புராணத்தின் அச்சுப் பிரதி ஒன்றுகூட விலைக்குக் கிடைக்காது. திருக்கபாலீச்சர தரும கருத்தர்களும் அறநிலையப் பாதுகாப்புக் கமிஷனரும் இதை உடனே கவனித்துப் புதிய பதிப்பை வெளியிட முன் வருவார்களாக. சென்னை மாநகரில் "விநாயக புராணம்" அரங்கேறிய கோயில் செல்வ நிலையிலுள்ளது. அப்புராணப் பிரதி ஒன்றுகூட விலைக்குக்

கிடைக்காது. இந்நூலின் புதிய பதிப்பு ஒன்றும் விரைவில் வெளிவரவேண்டும்.

6. மேற்கூறியபடி வாழையடி வாழையெனப் பேரறிஞர் பலர் திருமயிலாப்பூரில் சைவத்தை வளர்த்து வந்துள்ளனர். தலைமையுரையில் திருமயிலையின் சிறப்பையே மேன்மேலும் விரித்துரைக்க வேட்கை மிக்கவனாயினும், முக்கியமான பல பொருள்களைப் பற்றிக் கூறவேண்டியது அவசியமாகையால் இவ்வளவில் விடுகின்றேன். சைவக் குடும்பத்திற் பிறந்த ஒவ்வொருவரும், பன்னிரண்டு திருமுறைகளையும் பதினான்கு சாத்திரங்களையும் இடைவிடாது பயிலுதல் வேண்டும். இளமையிலேயே எனக்கு இப்பயிற்சியைத் தந்த எனது தந்தையாருக்கும் தாய்வழிச் சிறிய பாட்டனார் நித்தியாநந்த முதலியாருக்கும் நான் பெரிதும் கடமைப்பட்டுள்ளேன். மேற்கூறிய பாட்டனார் சொற்பொழிவுப் பயிற்சியையும் எனக்குத் தந்தார். நூற்பயிற்சி மட்டும் போதும் என்றெண்ணுதல் கூடாது. நாள்தோறும் சைவ ஒழுக்கம் நிறைந்த சமய வாழ்க்கை நடத்துதல் வேண்டும். நித்திரை விட்டெழுந்தவுடன் அரை நிமிஷமாவது கடவுளைப் போற்ற வேண்டும். பிறகு காலைக் கடன்களை முடித்து நீராடிப் பூசை செய்தல் வேண்டும். பிறகு இயன்ற அளவு திருமுறைகளையும், திருப்புகழ், கந்தரனுபூதி, கந்தர் கலிவெண்பா முதலிய அருள் நூல்களையும் பாராயணம் செய்ய வேண்டும். முடிந்தால் நாடோறும், இயலாவிடில் முக்கிய நாட்களில் திருக்கோயில் வழிபாடு செய்தல் வேண்டும். எனது தந்தையார் நாடோறும் திருக்கபாலீச்சரத்தில் அர்த்தஜாம பூசை தீபாராதனை தரிசிக்கும் பழக்கமுடையவர். சைவ வாழ்க்கைக்கு இன்றியமையாதது புலால் மறுத்தல். எக்காரணத்தாலும் மரக்கறி யுணவைத் தவிர புலால் கலந்த உணவை உட்கொள்ளுதல் கூடாது. இக்காலத்தில் சில வைத்தியர்கள் முட்டை புலால் உணவல்ல வென்றெண்ணி, நோயாளிகட்கு அதைச் சேர்த்துக் கொள்ளச் சொல்கின்றனர். இது பெருந் தவறு. புலால் மறுத்தலால் எத்தனை குணக்கேடுகள் நீங்கும், எத்தனை நன்மைகள் விளையும் என்பதைச் சில நாட்களுக்கு முன் சென்னை மாநகரில் நடந்த (Vegetarian Congress) நிகழ்ச்சிகளிலும் சொற்பொழிவுகளிலும் காணலாம். ஐரோப்பியர் அமெரிக்கர் முதலியோரும் இதிற் கலந்து கொண்டனர். சைவ ஒழுக்கமுள்ள ஒருவர் வாழ்க்கை நாட்டுக்கே எடுத்துக் காட்டாக விளங்கும். சைவத்தில் பிறக்க மிக்க தவம் செய்திருக்க வேண்டும். சிவஞான சித்தியாரில் ''நரர்பயில்'' ''வாழ்வெனும்'' எனத் தொடங்கும் செய்யுட்களில் இதைக் காணலாம்.

7. சைவ சித்தாந்தத்தின் அடிப்படை எல்லோரும் நன்கறிந்தது. அறிவு எனும் அளவுகோலால் மூன்று பொருள்களின் பாகுபாட்டை உணரலாம். அறிவிக்காமலே அறிபவன் பதி, அறிவித்தால் அறிவது இன்றேல் அறியாதது பசு, அறிவித்தாலும் அறியாதது பாசம். பதி பசு பாசம் ஆகிய மூன்றும் அநாதிநித்யப் பொருள்கள். பதியின் அருளால் பாசத்திலிருந்து விடுபட்ட பசு, பதியின் திருவடி சேர்ந்து அங்கு இன்பம் அனுபவிக்கும் உணர்ச்சியோடு இரண்டறக் கலந்து அழியாமல் என்றும் இருக்கிறது. பாசம் அந்தப் பசுவை அடியோடு விட்டகன்ற போதிலும், ஏனைய கோடிக்கணக்கான கட்டுண்ட ஆன்மாக்களோடு கலந்திருப்பதால் அந்த பாசத்திற்கும் அழிவில்லை. பதி பாச பசு இலக்கணம், திருவடி முத்திபெறும் சாதன வகைகள் முதலிய பல பொருள்களைச் சிவஞான சித்தியார் விரிவாகக் கூறுகின்றது. சித்தியார் சுபக்கம் பரபக்கம் என்று இரு கூறுடையது. சுபக்கத்திற்கு ஆறு பேரறிஞர்கள் உரை செய்துள்ளனர். இவ்வறுவர் உரை சுமார் நூறாண்டுகட்குமுன் சென்னையில் அச்சிட்டு வெளியாயிற்று. சண்முகசுந்தர முதலியார் என்ற பெரியார் வெளியிட்டனர். மறு பதிப்பு வெளியிட சைவத்திரு மடங்கள் விரைதல் வேண்டும். திருமுறைகளையும் பதினான்கு சாத்திரங்களின் மூலத்தையும் உரையையும், சிவஞான பாடியத்தையும், திருப்புகழ் திருப்போரூர் சந்நிதிமுறை முதலிய அருள் நூல்களையும் நமது நாட்டில் சமாஜம் அடக்கவிலைச் சுத்தப் பதிப்புகளாக வெளியிட்டு வழிகாட்டியுள்ளது என்பதை நாம் ஞாபகத்தில் வைத்தல் நலம்.

8. சித்தாந்த சாத்திரங்களை மிக நன்றாகப் பயிலுதல் வேண்டும். சாத்திர நுட்பங்கள் ஆயிரக்கணக்கானவை. இவைகளைச் சரியான முறையில் பாடமாகச் சொல்லக்கூடிய ஆசிரியர்களின் தொகை தற்போது விரல் விட்டெண்ணலாம் எனும்படி குறைந்துள்ளது. நமது சமாஜம் அவ்வப்போது நடத்தி வந்த கோடைக்கால வகுப்புக்கள் ஒன்றில், ''கண் இந்திரியம் நின்று பற்றும் கருவியல்ல, சென்று பற்றும் கருவி'' என்று சிவஞான சுவாமிகள் கூறுவதைத் தழுவாது பாடம் நடத்திய ஒருவர் கலவரத்தை உண்டாக்கினார். மற்றொரு கோடை வகுப்பில் ஒரு சைவப் பெரியார், பதினான்கு சாத்திரங்களுள் ஒன்றாகிய உண்மை விளக்கத்தில், ''முத்திதனில் மூன்று முதலும்'' எனும் பாடலில் ''இத்தை விளைவித்தல் மலம்'' என்பதற்கு ''பெத்தான் மாக்களிடத்தில் மறைப்புத் தொழில் செய்யும் மலம், முத்தியில் விளக்கம் செய்யும்'' என்று விபரீத உரை கூறினார். இது தவறு, பெருந்தவறு. சித்தியார் சுபக்கம் 11.6ஆம் பாடல் ''நெல்லினுக்குத் தவிடுமிகள்'' எனத் தொடங்கும். இதற்கு உரை

வகுத்த மாதவச் சிவஞான யோகிகள் ''அநாதியே உயிர்களோடு சகசமாய் நின்ற மும்மலங்களும் முக்தி நிலைக்கண் விண்டொழியும் என்றே கொள்க. ஆண்டு விண்டொழியினும் ஏனைப் பெத்தரிடத்துக் காணப்படுதலால் அவை நித்தப் பொருளாதற்கும் இழுக்கில்லை'' என்பதோடு, ''இத்தை விளைவித்தல் மலம்'' என்பதை அநுபலத்தி ஏதுவாற் கொள்க என்றும் விளக்குகிறார். அநுபலத்தி ஏதுவென்பது ஒன்று இல்லாமையிலிருந்து அதன் காரணமாகிய மற்றொன்று இல்லையென்று ஊகிக்கும் தர்க்கமுறை. உதாரணமாகக் குளிர் இன்மையிலிருந்து பனியின்மை, குளம் வற்றி நீரின்மையிலிருந்து மழையின்மை, புகையின்மையிலிருந்து நெருப்பின்மை முதலியவற்றை ஊகித்தல் (லப்தி, உபலப்தி, அநுபலப்தி 3 படிகள்). நிழலின் அருமை வெயிலில் நின்றவனுக்கே தெரிதல்போல, மலத்தின் வன்மையால் கட்டுண்டு துன்புற்றவனுக்கே முத்தியின்பத்தின் அருமை தெரியும் என்ற பொருளில் ''இத்தை விளைவித்தல் மலம்'' எனும் சொற்றொடர் நிற்கிறது. ''மாமலையாள் மணவாளன் மலர்க்கழல் வந்தடையும் இவ்வாழ்வு பெறத்தரு சூலையினுக் கெதிர் செய் குறை என்கொல் எனத் தொழுவார்'' என்று சூலை நோயினுக்கு நாவுக்கரசர் வணக்கம் செலுத்தியதை நோக்குக.

9. இதைப் போலவே அத்துவிதம் எனும் சொல்லில் ''அ'' என்பதற்குள்ளே இன்மை அன்மை மறுதலை ஆகிய மூன்று வகையான அர்த்தங்களுள், ஏகான்ம வாதிகளும் வைணவர்களும் கூறும் இன்மைப் பொருளையும் துவைதிகள் கூறும் மறுதலைப் பொருளையும் பூர்வபக்ஷம் செய்து அன்மைப் பொருளே சைவ சித்தாந்திகள் கூறும் உண்மைப் பொருள் என மெய்கண்டார் உபதேசிப்பதை உணர்தல் வேண்டும். ''பொய் கண்டார் காணாப் புனிதமெனும் அத்துவித மெய் கண்ட நாதனருள் மேவுநாள் எந்நாளோ'' என்று தாயுமான சுவாமிகளும் இதைப் புகழ்கின்றார். ஆணவம் ஆன்மாவின் இயற்கைக் குற்றம் அல்ல, அநாதி சேர்க்கைப் பொருள் என்பதன் உட்கருத்தை அறிதல் வேண்டும். இயற்கை மாறாது. களாப் பழத்தின் கறுப்பும் கொக்கின் வெண்மையும் செம்பருத்தி மலரின் சிவப்பும் மாறாதவை போல. அநாதிகாலமாக உயிரோடு ஆணவம் சேர்ந்திருப்பினும் கடவுளருளால் அது அடியோடு ஒழிந்துவிடும். ஆகையால் அதை அநாதி சேர்க்கை என்பர். சித்தாந்திகள் இங்கு ஆணவத்தைச் சேர்த்தது யார் என்பதற்குத் தெரியாது என்று விடை கூறாமல் சாதுரியமாகச் சொல்வதைக் காண்க. ''கடவுள் கருணையுடையவர், ஆன்மாக்களுக்குத் தீய மலத்தைச் சேர்க்கமாட்டார். உயிர் தீங்குள்ள மலத்தைச் சேர்க்காது,

மலம் ஜடப்பொருளாகையால் ஒன்றைச் சேரும் ஆற்றலற்றது. ஆனால் ஆன்மாவோடு மலம் சேர்ந்திருப்பதைப் பார்க்கிறோம். ஆகையால் அது அநாதி சேர்க்கைப் பொருள்'' என்று கூறுவர். ஆணவத்திற்கு மூலமலம் என்று பெயர். அதைப் போக்குதற்குக் கடவுள் கன்ம மலம் மாயாமலம் ஆகிய இரண்டைச் சேர்க்கிறார். வண்ணான் அழுக்குத்துணியிலுள்ள அழுக்கை ஒழித்தற்கு உவர்மண் சாணம் முதலிய அழுக்குகளைச் சேர்த்து சலவை செய்து அழுக்கைப் போக்குகிறான் என்ற உவமையின் அழகைக் காண்க. கன்மங்கள் தாமே ஆன்மாவை அடையும், அதற்கொரு கடவுள் வேண்டாம் என்பர் சில சமயவாதிகள். சித்தாந்திகள் இதை ஒப்புக் கொள்வதில்லை. கன்மங்களை மூன்று வகையாகப் பிரித்து சஞ்சிதம் பிராரப்தம் ஆகாமியம் (பழவினை நிகழ்வினை மேல் வினை) என்பவற்றுள், கருணை மிகுதியால் கடவுள் ஒரு சிறிய அளவையே இப்பிறவியில் நுகதர்தற்குத் தருகிறார். தன் முனைப்பற்ற வாழ்க்கையால் பிராரப்தம் ஒழியும். தீவினை வருங்கால் தீமை செய்தவனுக்கு ஒன்றுக்குப் பத்தாகப் பதில் தீமை செய்வதை ஒழிக்க வேண்டும். ''ஞானாமிர்தம்'' எனும் அரிய சாத்திர நூலாசிரியர் ஒரு அழகான உவமை கூறுகிறார். ஒருவன் ஒரு நாய் மேல் கல்லை யெறிகிறான். நாய் கல்லை விட்டு விட்டு எறிந்தவன்மேல் பாய்கிறது. நாயுக்குள்ள இந்த அறிவுகூட மக்களுக்கில்லை. நமது பழவினையால் அல்லவா இந்த தீமை வந்தது. தீமை கல்லைப்போல, பழவினை எறிந்தவனைப்போல என்றெண்ணினால் மேல்வினை நிகழாது. எல்லாம் கடவுள் வகுத்த திட்டம் என்று மன அமைதி பெறல் வேண்டும். ''இன்னா செய்தாரை ஒறுத்தல் அவர்நாண நன்னயம் செய்துவிடல்' என மேலும் ஒரு படிசெல்கிறது திருக்குறள். மகேந்திரவர்ம பல்லவன் செய்த கொடுமைகளை யெல்லாம் அப்பர் அடியோடு மறந்துவிட்டார். அவன் தம் திருவடியில் விழுந்து மன்னிப்புக் கோரியபோது அவன் தீமையொன்றும் செய்யவில்லை யென்றே அவனை மன்னிக்கிறார். கடவுள் அருள் நோக்கால் எல்லா வினைகளையும் வெல்லலாம்.

10. திருக்கோயில் வழிபாடு ஒரு சைவன் கடமைகளுள் ஒன்றெென மேலே கூறினேன். அது மிக மிக அவசியம் என்பதை மெய்கண்டார் இறுதிச் சூத்திரத்தில் உபதேசிக்கிறார். ''மாலறநேயம் மலிந்தவர் வேடமும் ஆலயந்தானும் அரன் எனத் தொழுமே'' என்பதை நோக்குக. திருக்கோயில் வழிபாட்டினால் சைவர்கள் அடையும் பலன் மிக மிகப் பெரிது. திருக்கோயிலின் அமைப்பு மனித உடம்பைப் போன்றது. ''காயமே கோயிலாகக் கடிமனம் அடிமையாக...

மனமணி இலிங்கமாக'' அப்பர் தேவாரம் (4897) முதலிய பற்பல குறிப்புக்கள் உண்டு. ''மறவாமை யான்மைத்த மனக்கோயி லுள்ளிருத்தி... அர்ச்சனை செய்வார்'' எனும் வாயிலார் நாயனார் அகப்பூசைச் சிறப்பு திருமயிலையில் நிகழ்ந்தது. சரியை, கிரியை யோகம் ஞானம் எனும் நான்கு படிகளில் முறையே நிற்கிற எல்லா ஆன்மாக்களுக்கும் கோயில் வழிபாடு எவ்வாறு நன்மை தருகிறதெனும் தத்துவத்தை, சித்தியார் 12ஆம் சூத்திரத்திலுள்ள ''திருக்கோயில் உள்ளிருக்கும் திருமேனி தன்னைச் சிவன் எனவே கண்டவர்க்குச் சிவன் உறைவன் ஆங்கே'' எனும் பாடல் விளக்கு கின்றது. சிவஞானம் மிக்கவர்களும் ஆலய வழிபாடு செய்தல் வேண்டும். கீழ்ப்படிகளிலுள்ளவர்கட்கே ஆலய வழிபாடு தேவை யென்று நினைப்பது பெரும் பாவம். சிலர் அகம்பாவத்தோடு ''எங்களுக்குக் கோயில் வழிபாடு வேண்டாம், அதற்கு மேலான நிலையிலுள்ளோம்'' என்று பிதற்றுவர். சமய குரவர் நால்வரை விடச் சிறந்த ஞானிகள் சைவத்தில் இலர். அவர்கள் தமிழ்நாடு முழுமையும் பற்பல தலங்கட்குச் சென்று தரிசித்து ஆநந்த பரவச நிலையில் பதிகங்களை அருளிச் செய்தார்கள். சமாஜ ஆண்டு விழாக்களின் அங்கமாகத் திருக்கோயில் வழிபாட்டை நாம் கொண்டுள்ளோம்.

11. கோயிலில் உள்ள திருவுருவங்கள் எல்லாம் தத்துவம் நிறைந்தவை. விநாயகர் முருகர் உருவ நுட்பங்களை இவ்வாண்டில் வெளிவந்த ஞானியார் நினைவு மலர்க் கட்டுரைகளிற் காணலாம். கூத்தப்பிரான் உருவில் ஐந்தெழுத்தும் ஐந்தொழில்களும் அமைந்துள்ளன. சிவலிங்கத்தின் தத்துவச் சிறப்பை ''சக்தியும் சிவமுமாய தன்மை இவ்வுலகம் எல்லாம்.. பீட லிங்கத்தின் இயல்பும் ஓரார்'' (சித்தியார் 1-69) எனும் பாடலிற் காண்க. இதை யறியாத மூடர்கள் சிவலிங்கம் ஆண் பெண் புணர்ச்சியின் வடிவம் (Phallic symbol) என்று பிதற்றுவர். இவ்வாறே சோமாஸ்கந்தர் திருவுருவில் இடப்பாகத்துள்ள அம்மை கூத்தியார் என்றும், தனியே வருகிற அம்மை ஒதுக்கப்பட்ட மனைவியென்றும் உளறுவர். இவ்வாறே முருகப்பிரான் சக்திகளுள் ஒன்று கூத்தி மற்றொன்று மனைவி என்பர். காரைக்காலம்மை 63 பிள்ளைகளைப் பெற்றும் திருப்தி பெறாது மேலும் ஒரு பிள்ளைக்காகத் தவங் கிடக்கிறார் என்பர். பழைய காலத்தில் உத்ஸவங்களின் அங்கமாகப் பட்டிமண்டபங்களின் மீதேறி அறிஞர்கள் சமயச்சொற்பொழிவுகளை நிகழ்த்தினர். மணிமேகலை விழா அறை காதை 60, 61ஆம் அடிகளில் ''ஒட்டிய சமயத் துறு பொருள் வாதிகள் பட்டிமண்டபத்துப் பாங்கறிந் தேறுமின்'' எனவரும் குறிப்பைக் காண்க. வாதவூரடிகள் திருவாக்கிலும் பட்டிமண்டபம் பற்றிய குறிப்பு வருகின்றது.

12. திருக்கோயில் வழிபாட்டில் பலர் பலபல தவறுகள் செய்கின்றனர். கோயிலை ஊர் வம்புகள் பேசுவதற்கு ஒரு சந்திப்பிடமாகக் கொள்வோர் சிலர். கபாலீச்சரத்தில் வாயிலார் நாயனார் கோயிலுக் கெதிரில் நாலுகால் மண்டபம் ஒன்றுளது. இதில் நாடோறும் "வம்பர் மகா சபை" கூடும். கோயில் வழிபாட்டிற்குச் சிறிதும் சம்பந்த மில்லாத வீண் பேச்சு மணிக்கணக்கில் நடக்கும். வெற்றிலை பாக்குமென்று எச்சில் உமிழ்தல், சிறுநீர் கழித்தல், குழந்தைகளை மலங் கழிக்க விடுதல் முதலிய பாவங்களைக் கண்கூடாகக் காணலாம். பக்தி மேலீட்டினால் வரும் பாவங்களும் உண்டு. அதிகமான கற்பூரத்தை ஏற்றி வைத்தமையால் சூடு தாங்காமல் நந்தி உருவத்தில் வெடிப்பு ஏற்பட்டதை ஒரு கோயிலிற் காணலாம். சண்டேசுவரர் செவிடர் என்று எண்ணி, அவரவர்கள் துணிகளில் ஒரு திரிநூலை யெடுத்து அவர் மீதெறிந்து காது கேட்கச் செய்வதெனும் மூடப்பழக்கத்தையும் காணலாம். சிவயோகத் தமர்ந்து தொண்டர்க்கு நாயகமாகிய அவரிடம் சிவாலய தரிசன பலனை அர்ப்பணம் செய்தற்காகவே ஒருவர் காதிலும் கேளாதபடி ஒரு கைவிரலைத் தட்டி யெழுப்பும் முறை இவ்வாறு பாவச் செயலாக மாறிவிட்டது. சிவலிங்க மூர்த்திக்கும் நந்திக்கும் குறுக்கே போதல் தவறு என்பதை ஆயிரத்தில் ஒருவர்கூட அறிவதில்லை. ஆன்ம தரிசனத்தின் பிறகே சிவதரிசனம் எனும் சித்தாந்த நுட்பத்திற்கேற்ப முதலில் நந்தியைத் தரிசித்த பிறகே உட்சென்று சிவதரிசனம் செய்தல் வேண்டும். தீபாராதனை சமயத்தில் பிறரை மறைத்து சந்நிதியின் குறுக்கிலும் படிகள் மேலும் நின்று பாவம் செய்வோர் பலர். சிற்சில அதிகாரிகள் சுவாமி தரிசனத்திற்கு வரும் போது நூற்றுக்கணக்கான பக்தர்களைத் தடைப்படுத்தியும் வெளியே தள்ளியும் பாவம் செய்கிற கோயிலதிகாரிகள் பலர். அற்ப காரணங்களை முன்னிட்டு தர்மகர்த்தர்களுக்குள் பிளவு ஏற்படுதலும் அரசாங்கம் நியமிக்கும் இறைபணியாளர்கள் கட்சியில் ஒரு பக்கம் சார்தலும் சீர்கேடு நிகழ்தலும் உண்டு. இவைகளெல்லாம் வெறுக்கத்தக்கவை, விரைவில் ஒழித்தற்குரியவை. சில கோயில்களில் நெருக்கடி நேரத்தில் அர்ச்சனை பேரளவில் நடப்பதைப் பார்த்தால் அர்ச்சனை செய்யாது, வெறும் தரிசனம் மட்டுமே செய்தல் நலம் எனத் தோன்றும்.

13. கோயில் வழிபாட்டில் இறைவன் சந்நிதியில் ஜாதி குலம் முதலிய வேறுபாடுகள் கிடையாது. ஆகமப் பிரமாணங்கள் சிலவற்றைக் காட்டி, இந்த வருணத்தினர் இந்த இந்த இடத்தில் நின்றுதான் தரிசிக்க வேண்டும் என்ற நிபந்தனை சிவாலயங்களில்

உண்டு. விஷ்ணு கோயில்களில் மூலஸ்தான மூர்த்தியின் கர்ப்பக்ரஹம் வரையில் எல்லா ஜாதியினரும் சென்று தரிசிக்கும் உரிமை யுண்டு. பழைய காலத்தில் இவ்வசதி சிவாலயங்களிலும் இருந்தது. வடநாட்டுத் தலங்களிலும், கோகர்ணம் ஸ்ரீசைலம் ஆகிய பாடல் பெற்ற தலங்கள் இரண்டிலும் நாமே மூலஸ்தான மூர்த்தியைத் தொட்டு, அபிஷேகம் அலங்காரம் அர்ச்சனை முதலியன செய்யும் உரிமை இன்றைக்கும் உண்டு. இந்த முறை தமிழ் நாட்டுச் சிவாலயங்களில் மீண்டும் வருதல் நலம். இறையருளும் அரசாங்கமும் துணை செய்க.

14. திருவிழாக்களின் சிறப்பைக் குறைத்து வரவு செலவு திட்டத்தில் மிச்சம் காணவேண்டும் என்று சில அதிகாரிகள் நினைப்பதுண்டு. இது பெரிய தவறு. திருவிழாக்கள் சிறப்பாக நடப்பதால்தான் பல்லாயிரக்கணக்கான மக்கள் பெரிய விருப்பத்தோடு திரண்டு வருகிறார்கள். மேல்நாட்டினர் திருவிழாக்களால் சமயம் தாழ்ந்த மக்கள் நிலையளவிற்கு இறங்கி வந்து நற்பயன் தருகிறது என்று ஆராய்ந்துள்ளனர். திருஞானசம்பந்தர் திருமயிலையில் நடந்த திருவிழாக்களையே வரிசையாகப் பூம்பாவைத் திருப்பதிகத்தில் ஓதுகின்றார். சமய குரவர் நால்வருக்கும் திருவிழாக்களில் அதிக ஈடுபாடிருந்தது. திருவாரூரில் நடந்த ஆதிரை விழாவின் சிறப்பை அப்பர் ஸ்வாமிகள் ''முத்து விதானம்'' எனத் தொடங்கும் பதிகத்தில் விவரிக்கிறார். இதைக் கேட்ட சம்பந்தர் உடனே திருவாரூர் செல்கிறார். பற்பல பதிகங்களில் திருவிழாக்கள் பற்றிய குறிப்புகள் தேவாரத்தில் நிரம்பவுள்ளன. வெள்ளி வாகனங்களின்மேல் இறைவன் வருவது கண்கொள்ளாத காட்சியாகும். மயிலையில் வெள்ளி அதிகாரநந்தி இடபம் விமானம் ஆகிய மூன்று நாட்களில் ஆயிரக்கணக்கானவர்கள் தரிசிக்க வருகின்றனர். காஞ்சிபுரத்தில் வெள்ளி ரதம் மாவடி சேவை பிரசித்தம். வேறு பற்பல தலங்களில் வெள்ளி ரதம் தங்க ரதம் முதலிய விழாக்களும் சிறப்புடையன. திருவிழாக்களின் தத்துவங்களைப் பற்றி ஞானியார் நினைவு மலர்க் கட்டுரைகள் சிலவற்றில் காணலாம். விடையூரும் விமலன், தேரூர்ந்த திரிபுராந்தகன் முதலிய கட்டுரைகள் பார்க்க. ''திருவிழாவின் அர்த்தம்'' என்று நான் பல ஆண்டுகட்கு முன் எழுதிய கட்டுரையில் திருக்கொடியேற்றம் முதல் கொடியிறக்கம் வரையில் ஐந்தொழில் தத்துவக் குறிப்புகள் வருவதைக் காணலாம். கடவுளுக்குமா கல்யாணம் என்று அறிவிலிகள் குறை கூறுவர். இதிலுள்ள உண்மைகளைத் திருச்சாழல் எனும் திருவாசகப் பாடல்களிலும், ''போகியா யிருந்துயிர்க்குப் போகத்தைப் புரிதல்

ஓரார்'' எனவரும் சிவஞான சித்தியார் செய்யுளிலும் காண்க. விரித்துரைத்தால் மிகமிகப் பெருகும்.

15. நால்வர் பெருமக்கள் நிகழ்த்திய அற்புதங்களைச் சிலர் நம்புவதில்லை. தன்முனைப்பால் அவர்கள் ஓர் அற்புதமும் செய்யவில்லை. கடவுளை விண்ணப்பிக்கக் கடவுள் அருளே அந்த அற்புதங்களுக்குக் காரணமாயிருந்தது என்று அறிதல் வேண்டும். எலும்பைப் பெண் ஆக்கிய அற்புதம் நிகழ்ந்த தலம் திருமயிலாப்பூர். எலும்பு சேமிக்கப் பெற்ற கலத்தை இறைவன் சந்நிதிக்கு நேராகப் புறவாயிலுக்கு அருகில் வைக்கச் செய்து, பாசுரம் தோறும் இவ்விழாக்களைக் காணாமல் போய்விட்டாயே என்று பூம்பாவையை விளிப்பதாகப் பதிகம் செல்கின்றது. இப்பதிகத்தின் உட்கருத்தைச் சேக்கிழார் பெருமான் மிக அழகாக,

*''மண்ணினிற் பிறந்தார் பெறும் பயன்மதி சூடும்*
*அண்ணலார் அடியார்தமை அமுது செய்வித்தல்*
*கண்ணினால் அவர் நல்விழாப் பொலிவு கண்டார்தல்*
*உண்மையாம் எனின் உலகர்முன் வருகென உரைப்பார்''*

பாசுரத்தில் உள்ள வாக்கமுதம் இறையருளால் (இருந்த எலும்புகளோடு) மறைந்த ஆறு தாதுக்களையும் ஒன்று சேர்த்துப் பூம்பாவையாக்கிற்று, அங்கம்பூம்பாவை ஆயிற்று. எல்லாவற்றிலும் பெரிய அற்புதம் சிவநேசச் செட்டியார் வேண்டுகோளுக் கிணங்காது, அங்கம் பூம்பாவையைத் திருமணம் செய்ய மறுத்தமை. பிரமதேவன் சிறுமையும் சம்பந்தர் பெருமையும் வெளிப்படச் சேக்கிழார் கூறுகிறார். அங்கம் பூம்பாவையின் பேரழகைக் கண்ட சம்பந்தர் ''கண்ணுதல் கருணைவெள்ளம் ஆயிரமுகத்தாற் கண்டார்'' தனது பாசுரத்தால் எலும்பு பெண்ணாயிற்று என்று ஒரு க்ஷணம் கூட நினைக்கவில்லை. சுந்தரமூர்த்திகளும் ''கரைக்கால் முதலை பிள்ளைதரச் சொல்லு காலனையே'' என்று இறையருளையே நாடுகிறார். ஏனைய அற்புதங்கள் இவ்வாறே நிகழ்ந்தன. கடவுள் அருளாற்றலில் நம்பிக்கை இல்லாதவர்களே அற்புதங்களை இகழ்வர். எல்லாச் சமயங்களிலும் பற்பல அற்புதங்கள் நிகழ்ந்த வரலாற்றைப் புறப்புறச் சமயங்களின் விரிவான சரித்திரங்களிற் காணலாம். அற்புதங்கள் சைவத்திலும் வைணவத்திலும் நிரம்ப வுண்டு.

16. தலைமையுரை என்று தொடங்கி எங்கெங்கோ சென்றேன். முதலில் நான் சொல்லியபடி இவ்வுரையில் பற்பல வழுக்களும் மாறுபட்ட கருத்துக்களும் இருக்கும் - இவைகளையும் நான் நெடுநேரம் பேசியதையும் பொறுத்தருள வேண்டுகிறேன்.

*ஆறிரு தடந்தோள் வாழ்க! அறுமுகம் வாழ்க! வெற்பைக்*
*கூறுசெய் தனிவேல் வாழ்க! குக்குடம் வாழ்க! செவ்வேள்*
*ஏறிய மஞ்ஞை வாழ்க! யானைதன் அணங்கு வாழ்க!*
*மாறிலா வள்ளி வாழ்க! வாழ்க! சீர்அடியா ரெல்லாம்*

*தென்னா டுடைய சிவனே போற்றி!*
*என்னாட் டவர்க்கும் இறைவா போற்றி !*

# வித்துவான் ஸ்ரீமத் சோமசுந்தரத் தம்பிரான் சுவாமிகள்

(54ஆம் ஆண்டு விழா)

*ஞாலம் நின்புக ழேமிக வேண்டும்தென்*
*ஆல வாயில் உறையும் எம்ஆதியே.* - *சம்பந்தர்*

*என்னைஇப் பவத்திற் சேரா வகையெடுத்(து) என்சித் தத்தே*
*தன்னைவைத்(து) அருளி னாலே தாளிணை தலைமேற் சூட்டி*
*மின்னமர் தருமை மேவி மெய்கண்டான் மரபில் வந்த*
*மன்னவ சுப்ர மண்ய ஞானதே சிகனே போற்றி.*

**சிவநெறிச் செல்வர்களே, பெரியோர்களே, தாய்மார்களே!**

## சமாஜத் தொண்டும், தலைமையும்

சைவமும் தமிழும் தழைத்தினித்தோங்க ஐம்பத்துநான்கு ஆண்டுகளாக அரிய பணிகளை ஆற்றி வருவது நமது சைவ சித்தாந்த மகா சமாஜம். இஃது ஆற்றிவரும் தொண்டினைத் தமிழ்நாடும், தமிழ் வழங்கும் புறநாடும் நன்கு அறியும், சென்ற ஐம்பத்துமூன்று ஆண்டுகளில் இச்சமாஜ ஆண்டு விழாப் பேரவைக்குச் சிறந்த பேரறிஞர் பலர் தலைமை வகித்துப் பேருரை நிகழ்த்தியுள்ளனர். நிகழாண்டில் நடைபெறும் ஐம்பத்து நான்காவது ஆண்டு நிறைவு விழாவிற்குத்தலைமையுரை நிகழ்த்துமாறு அறிவிலும் ஆண்டிலும், அநுபவத் திறத்திலும் சிவஞானத் தெளிவிலும் இளையனாகிய என்னைச் சமாஜத்தார் அழைத்து அரங்கேற்றி வைத்துள்ளனர். இந்நிலை எனக்கே வியப்பைத் தருகிறது. "இறைநிலம் எழுதுமுன் இளைய பாலகன், முறைவரைவேன் என முயல்வது ஒக்கும்" என்ற கந்தபுராண அவையடக்கச் செய்யுட் பகுதி இப்பொழுது நினைவிற்கு வருகின்றது. மேலும், இதில் ஒரு புதிய மறுமலர்ச்சியைக் காணலாம். இதுவரை சைவ சித்தாந்தத்தின் நிலைக்களனாக விளங்கும் ஆதீனங்களின் அடியார்கள் சமாஜ ஆண்டு விழாப் பேரவைக்குத்

தலைமை வகித்ததாகத் தெரியவில்லை. இச்சிறப்பு முதன் முதலாக எளியேனுக்கே வாய்த்துள்ளது என்று எண்ணுகிறேன். அதிலும் சென்ற ஆண்டு நமது ஆதீனப் புலவர்திரு. க. வச்சிரவேல் முதலியார் அவர்களைத் தலைமை வகிக்கச் செய்து, நிகழ் ஆண்டில் ஆதீனத்தின் அடியனாகிய எளியேனைத் தலைமை வகிக்கச் செய்திருப்பது, சமாஜம், ஆதீனங்களுடன் தொடர்பு கொண்டு பணியாற்ற முற்பட்டிருப்பதைப் புலப்படுத்துகின்றது. இது குறித்துப் பெருமகிழ்வு எய்துகின்றேன்.

## சைவ சித்தாந்தம்

உலகில் உள்ள எல்லோரும் நலமாக வாழ வேண்டுமானால் ஒழுங்கும் கட்டுப்பாடும் மிகவும் இன்றியமையாது வேண்டப்படும். ஒழுங்கு அகத்தொழுங்கு, புறத்தொழுங்கு என இரு வகைப்படும். அவற்றுள் அகத்தொழுங்கைப் பெறுதல் சமயத்தினால்தான் இயலும். புறத்தொழுங்கு காக்கப்பெறுதல் ஆட்சி முறையால் இயலும். அகத்தொழுங்கு காக்கும் முறை நிறை காக்கும் காப்பாகும். புறத்தொழுங்கு காக்கும் முறை சிறை காக்கும் காப்பாகும். அகத்தொழுக்கைக் கடவுள் உணர்வால் காத்து வரும் சமயம், புறத்தொழுங்கை மனிதன் ஆற்றலால் காத்து வரும் அரசியல் ஆட்சி முறைக்குப் பலவகையிலும் துணை செய்கிறது. உதாரணமாகக் களவு செய்வோனது கையையும் காலையும் சிறைகாக்கும் காப்பினால் திருத்துவது அரசியல் ஆட்சி முறை, ஆனால் களவு செய்யப் புகுவோனது நெஞ்சைத் திருத்தி, அதன் வழியாகக் கை கால்களையும் நிறை காக்கும் காப்பினால்திருத்துவது சமய முறை. எனவே, எல்லா உயிர்களையும் வையத்துள் வாழ்வாங்கு வாழ வைப்பது சமய வாழ்வு என்பது தெளிவாகின்றது. இச்சமயம் ஒன்றாய் அரும்பிப் பலவாய்க் கிளைத்துள்ளது. இவ்வரிய சமயங்கள் பலவற்றையும் ஈன்றெடுத்த பெருமை நமது ஆசியக் கண்டத்திற்கே உரித்தானது. ஒவ்வொரு சமயமும் சிலவும் பலவுமான உண்மைகளை அறிவிப்பனவே. எனினும் இச்சமயங்கள் கூறிய உண்மைகளோடு இவை கூறாத பல உண்மைகளையும் கூறி, முழு முதலாக விளங்குவது சைவ சித்தாந்தம். இது சிவ பரம்பொருளின் முழு முதற்றண்மையைக் குறித்த சித்தாந்தங்களை நன்கு விளக்குவது.

## வேதத்திற் சைவம்

இனி இச்சிவ நெறியின் பழமையையும் பெருமையையும் காணலாம் : மிகப் பழமையாக விளங்குவன இருக்கு. யஜுர், சாமம்,

அதர்வணம்என்ற நால் வேதங்களும், அவற்றின் முடிமணியாக விளங்கும் உபநிடதங்களும் ஆகும். இவற்றுள் இருக்கு வேதம் சிவமுழுமுதலை 'ஏகன்' என்ற சொல்லாலும், 'சத்' என்ற சொல்லாலும் குறிப்பிடுகின்றது. சுவேதாசுவதரம் என்ற உபநிடதம் ''ஏகம்'' என்று குறிக்கப்பட்ட சொல்லின் பொருளாக விளங்குபவர் உருத்திரரே என்று உறுதியாகக் கூறுகிறது. ஏகன் அல்லது ஒருவன் என்ற சொல் சிவபெருமானைத்தான் குறிக்கும் என்பதைத் தமிழ்மறை அருளிச் செய்துள்ள திருநாவுக்கரசர் ''ஒருவனாய் உலகேத்த நின்ற நாளே'' என்று குறிப்பிடுவதாலும், மாணிக்கவாசகர் ''ஒருவன் என்னும் ஒருவன் காண்க'' என்று குறிப்பிடுவதாலும், வைணவப் பெரியாராகிய நம்மாழ்வாரும் கண்ணபிரானைப் போற்றிப் பாவும் திருப்பாடலில் ''ஒருவன் என்றேத்தி நின்ற நளிர் மதிச் சடையான் என்கோ'' என்று குறிப்பிடுவதாலும் நன்கு தெளியலாம். மந்திர பாகமாக உள்ள அதர்வண வேதத்தை நீக்கி வேதம் மூன்றெனவே கொள்வர் பெரியோர். அவற்றுள் நடுவில் உள்ளது யஜுர் வேதம். அதன் நடுவில் இருதய ஸ்தானத்தில் ''நமசிவாயச சிவதராயச'' என்ற தொடரில் ஐந்தெழுத்து அமைந்துள்ளது. இதனாலும் வேதம் சிவபரம் பொருளைப் போற்றும் முறையை நன்கு உணரலாம்.

## புதை பொருளிற் சைவம்

அடுத்துப் பழமை தெளிவதற்கு ஆதாரமாக இருப்பது புதைபொருள் ஆராய்ச்சியாகும். பல்லாயிரக்கணக்கான ஆண்டு களுக்கு முன்னர்ப் புதையுண்ட நகரங்களும் அவற்றில் கிடைத்துள்ள பொருள்களும், சிவலிங்கம், நடராசர் போன்ற உருவங்களும் நமது சிவநெறியின் தொன்மையை வன்மையாக எடுத்துரைக்கின்றன. இற்றைக்கு 6000 ஆண்டுகட்கு முன்னரே சிறந்த நாகரிகம் படைத்த நாடாக விளங்கிய சிந்துவெளிப் பிரதேசத்தை இதற்கு உதாரணமாகக் காணலாம். இதில் புதையுண்டிருக்கும் மொகஞ்சதாரோ, ஹரப்பா முதலிய நகரங்களில் பெரியனவும், சிறியனவுமான சிவலிங்கங்கள் ஆயிரக்கணக்கில் கிடைத்துள்ளன என்றும், ஹரப்பாவில் மட்டும் 600க்கு மேற்பட்ட சிவலிங்கங்கள் கிடைத்துள்ளன என்றும் தெரியவருகின்றது. ''இவ்வாராய்ச்சியால் அறியப்படும் உண்மை ஒன்றுண்டு; அதாவது, சைவ சமயம் சிந்துவெளி நாகரிகத்துக்கும் (கி.மு. 4000க்கும்) முற்பட்ட பழமையுடையது என்பதேயாகும். அஃது இன்னும் எவ்வளவு பழைமையுடையது என்பதை வரையறுக்கக் கூடவில்லை. அச்சமயம் உலகத்திலேயே மிக்க பழைமை வாய்ந்தது'' என்று, டாக்டர் திரு. மா. இராசமாணிக்கனார் அவர்கள் தாம்

எழுதியுள்ள, மொகஞ்சதாரோ அல்லது சிந்துவெளி நாகரிகம், என்ற நூலில் குறிப்பிட்டுள்ளார்கள். ஹீராஸ் பாதிரியார் (Father Heras) அவர்களும் இக் கருத்தை வெளியிட்டுள்ளார். ஐரோப்பியர் தென் அமெரிக்காவிற்குச் செல்வதற்கு முன்னரே அங்குத் தென்னாட்டிலுள்ளவற்றைப் போல் கோயில்கள் கட்டப்பட்டு இருந்தன என்பதற்கும், அங்குச் சிவலிங்க வழிபாடு இருந்தமைக்கும் புதைபொருள் ஆராய்ச்சியாளர் சான்று பகர்கின்றனர். மேற்கே அமெரிக்கா, மெக்சிக்கோ, மேற்கு இந்தியத் தீவுகள் முதலிய தீவுகளிலும் மேற்கு ஆப்ரிக்கா, எகிப்து, அரேபியா முதலிய நாடுகளிலும், கிழக்கே ஜாவா, சுமத்திரா, இந்தோனேஷியா, ஆஸ்திரேலியா முதலிய நாடுகளிலும் தமிழ் நாட்டுக் கோயில் அமைப்புகளும், சிவலிங்கங்களும் இருப்பதாக ஆராய்ச்சி அறிஞர்கள் கூறுகின்றனர். இவற்றால் தமிழர்களின் சமயம் சிவநெறி என்பதும், அச்சிவநெறி உலகம் முழுவதும் பழங்காலத்தில் பரவி இருந்தது என்பதும் தெளிவாக அறியலாம்.

## சங்க இலக்கியங்களிற் சைவம்

இனி, சங்ககாலத்து இலக்கியங்களாலும், பிறமத இலக்கியங் களாலும் சிவநெறியின் பழைமையும் பெருமையும் உணரலாம். சங்க இலக்கியங்கள் பத்துப்பாட்டு, எட்டுத் தொகை, பதினெண் கீழ்க்கணக்கு என மூன்று தொகுப்பாக வகை செய்யப்பட்டுள்ளன. அவற்றுள் பெரும்பான்மையான நூல்கள் பலபுலவர்களால் - பல்வேறு காலத்தினர்களால் பாடப் பெற்றவை. அவை மக்களுக்குப் பயன்படும் பண்பு நோக்கிப் பிற்காலத்தவர்களால் தொகுக்கப் பெற்றவை. இவையன்றிக் கடல்கோளுக்கு இரையான நூல்களோ எண்ணிறந்தன. எனவேதான் கடவுளைப் பற்றிப் பேசப்படும் முழுநூலைச் சங்க கால இலக்கியங்களில் காண்டல் அரிதாயிற்று. அப்படி இருந்தும் பத்துப் பாட்டினுள் முதற் பாட்டாகிய திருமுருகாற்றுப் படையும், எட்டுத் தொகையுள் ஒன்றாகிய பரிபாடலும் தெய்வத்தைப் பற்றிய நூல்களாகத் திகழ்கின்றன. மற்றைய சங்க இலக்கியங்களில் உலகியலைப் பேசவந்த இடங்களில் இலைமறை காய்போல், உவமை முதலிய வடிவங்களால் கடவுள் நிலை பேசப்பெற்றுள்ளது. அவற்றுள் சிலவற்றைக் காணலாம்.

சாவா மருந்தாகிய நெல்லிக்கனி பெற்ற அவ்வையார் அக்கனியளித்த அதியமானை வாழ்த்தும் பொழுது, "நீலமணி மிடற்று ஒருவன் போல, மன்னுக பெரும நீயே" என்று இறைவன் நஞ்சுண்ட நிகழ்ச்சியை நினைவூட்டி, 'நஞ்சினாலும் இறவாதிருப்பவன்

சிவபிரான்' என்பதையும் உணர்த்துகிறார். சிவபிரான் முப்புரம் எரித்த நிகழ்ச்சி ''கடந்தடு முன்பொடு முக்கணான் மூவேயிலும் உடன்றக்கால் முகம்போல'' என்ற கலித்தொகை அடிகளால் பேசப்படுகின்றது. 'முனிவர்களால் வழிபடப்பெறும் முக்கட் செல்வன் திருக்கோயிலை வலம்வரும் காலத்து உனது குடை தாழ்வதாக' என்று கூறும் பகுதியைப் ''பணியியர் அத்தை நின்குடையே முனிவர். முக்கட் செல்வர் நகர்வலம் செயற்கே'' என்ற அடிகளாலும்; நீண்ட சடையுடையனாய் பழைமைக்கெல்லாம் பழைமையாய் உள்ளனான் என்பதை ''நன்றாய்ந்த நீள்நிமிர் சடைமுதல்வன்'' என்ற அடிகளாலும் புறநானூறு குறிப்பிடுகின்றது. சிவபிரான் பஞ்ச பூதங்களைப் படைத்தவனாய், மழுவேந்தியவனாய் உள்ளான் என்பதை ''நீரும் நிலனும், தீயும் வளியும் மாக விசும்போடைந்துட னியற்றிய, மழுவாள் நெடியோன்'' என்ற அடிகளால் மதுரைக் காஞ்சி அறிவிக்கின்றது. இராவணன் கயிலையைப் பெயர்க்க முயன்றமையையும், அது முற்றுப் பெறாமையினையும்

*''இமையவில் வாங்கிய ஈர்ஞ்சடை அந்தணன்*
*உமையர்ந் துயர்மலை யிருந்தன னாக*
*ஐயிரு தலையின் அரக்கர் கோமான்*
*தொடிப்பொலி தடக்கையிற் கீழ்புகுத் தம்மலை*
*எடுக்கல் செல்லா துழப்பவன் போல''*

என்ற கலித்தொகை அடிகளால் நன்கறியலாம். திருவாதிரைக்கு உரியவன் சிவபிரான் என்பதையும் கலித்தொகை ''அரும்பெறல் ஆதிரையான்'' என்று குறிக்கின்றது. 'மிகப் பழமையான நான்மறைகளை அருளிய முக்கட் செல்வனது ஆலமரத்தின் முற்றம் அழகுபெறப் பொருந்தியுள்ள பொழில்' என்பதை அகநானூறு ''நான்மறை முதுநூல் முக்கட் செல்வன், ஆலமுற்றம் கவின் பெறத் தைஇ'' என்ற அடிகளால் அறிவிக்கின்றது. முருகப் பெருமானின் தந்தை சிவபிரான் என்பதை ''ஆல்கெழு கடவுட் புதல்வன்'' என்றும் முப்புரம் எரித்ததையும், உமையொரு பாகன் ஆதலையும், முக்கண்ணானதலையும் ''வலம்வயின் உயரிய பலர் புகழ் திணிதோள், உமையமர்ந்து விளங்கும் இமையா முக்கண், மூவெயில் முருக்கிய முரண்மிகு செல்வன்,'' என்றும் திருமுருகாற்றுப்படை வரிகள் அறிவிக்கின்றன.

*''விண்ணார் அமுதுண்டும் சாவ, ஒருவரும்*
*உண்ணாத நஞ்சுண்டு இருந்தருள் செய்குவாய்''*

என்று வேட்டுவவரியிலும், ''பிறவாயாக்கைப் பெரியோன்'' என்று இந்திர விழாவூர் எடுத்த காதையிலும், ''செஞ்சடைவானவன் அருளினில் விளங்க, வஞ்சித் தோன்றிய வானவகேளாய்'' ''தெண்ணீர் கரந்த செஞ்சடைக் கடவுள் வண்ணச் சேவடி மணிமுடி வைத்தலின்'' என்று கால்கோட் காதையிலும் சிலப்பதிகாரம் பேசுவது கொண்டு, சிவபிரானின் பழமையும் பெருமையும், அவனது சக்தியின் சிறப்பும் செங்குட்டுவன் சிவபக்தியும் தெளிய உணரலாம்.

## இயற்கை அமைப்பில் சைவம்

இறைவனால் படைக்கப்பெற்ற இயற்கை அமைப்பும் சிவ வழிபாட்டினையே வற்புறுத்துகின்றது. வான மண்டலம் சிவலிங்க சொரூபமாகக் கவிந்திருக்கின்றது. இலிங்கத்தின் மீது நாகாபரணம் சார்த்தியுள்ளது போல் நாகலிங்கப் பூ அமைந்துள்ளது. அமரநாதத்தில் பனிக்கட்டி இயற்கையாகவே சிவலிங்கமாகத் தோன்றுகிறது. சிவத்தலங்களுக்குள் முதன்மை பெற்றிலங்கும் திருக் கயிலைமலை இலிங்க சொரூபமாக விளங்குவதோடு, தென்னாட்டுக் கோயில் அமைப்பு முறை முதலியனவும் அம்மலையில் காணப்படுகின்றன. சிவபெருமானுக்கு உகந்ததும், அடையாள மலராக உள்ளதுமான கொன்றை மலர் பிரணவ சொரூபத்துடனும், ஐந்து இதழ்களுடனும் விளங்குகின்றது. இது பிரணவத்தோடு உச்சரிக்கின்ற ஐந்தெழுத்தை நினைவூட்டுகிறது. இறைவனுக்குச் சூட்டப்படும் பெரும்பான்மை யான மலர்கள் ஐந்து இதழ்கள் உடையனவாகவே விளங்குகின்றன. நமது கையிலும் பெரும் பகுதி ஐந்து விரல்களே உள்ளன என்பதையும் நோக்குக. இதனைத் திருஞானசம்பந்தர் ''அங்கையில் ஐவிரல் அஞ்செழுத்துமே'' என்று அருளியுள்ளார். ஐந்து விரல்களுள் கட்டைவிரல் கடவுளைக் குறிப்பது. தனித்திருப்பதனாலும், இதன்துணை இன்றி ஏனைய விரல்களால் சிறந்த செயல் செய்ய இயலாமையாலும்; இது கடவுளின் அடையாளம் என்பதை உணரலாம். சுட்டுவிரல் உயிரைக் குறிப்பது. இஃது ஆளைக் காட்டுவதற்கும் பிறபொருளைக் காட்டுவதற்கும் பயன்படுத்தப் படுவதனால் உயிரின் பிரதிநிதியாக உள்ளது என்பதை உணரலாம். நடுவிரல் ஆணவத்தின் அடையாளமாக இலங்குவது. இயல்பாகவே உயிரைக் கடவுளுடன் சேர வொட்டாமல் தன் வயப்படுத்தி இருக்கும் நிலையைக் கையின் அமைப்பிலேயே காணலாம். மோதிர விரல் என்று குறிக்கப்படும் விரல் கர்ம மலத்தின் பிரதிநிதியாக உள்ளது. சடங்குகளைச் செய்யும் பொழுது இவ்விரலில் பவித்திரம் அணிந்து செய்வதே இதனை அறிவிக்கும். சுண்டுவிரல் மாயையின்

அடையாளமாக விளங்குவது. திருமணம் ஆகுங் காலத்தில் மணப்பெண் சுண்டு விரலைப் பற்றுவதால் இதனை உணரலாம். இதுபோன்ற இன்னும் பல இயற்கை அமைப்பினாலும் சிவநெறி வழிபாட்டின் உண்மை துலங்குவது காண்க.

## வழக்காற்றில் சைவம்

வேலை செய்யாமல், செய்வோரையும் குறுக்கே நின்று தடை செய்வோரைச் 'சக்தி இருந்தால் செய், இல்லையானால் சிவனே என்றிரு' என்று கூறும் வழக்கம் இன்றும் இருக்கிறது. பணிவும் பண்பும் இன்றித் திரிபவனை ஆணவம் பிடித்துத் திரிகிறான் என்றும், பிணி முதலியவற்றால் துன்புறும் ஒருவனைப் பற்றிப் பேசும்பொழுது அவன் கர்மத்தை அவன் அநுபவிக்கிறான் என்றும், ஒரு பொருளில் ஈடுபட்டு மயங்குபவனைக் குறிப்பிடும்பொழுது அவன் அம்மாயையில் மூழ்கி விட்டான் என்றும் கூறுவதை இன்றும் செவிகைப்பக் கேட்கலாம். பிற உயிர்களிடத்து இரக்கமும் அன்பும் கொண்டவனே சைவனாவான். புலால் உணவு மேற்கொள்ளாது மரக்கறியுணவு மேற்கொள்பவனைச் சைவன் என்றும், அவ்வுணவைச் சைவ உணவு என்றும் வழங்கி வருதல் இங்கு நினைவு கூரத் தக்கது. இவற்றால் கடவுள் - உயிர் - தளை என்ற முப்பொருள்களின் தன்மை வழக்காற்றில் பேசப்பெறுவதை உணரலாம்.

## டாக்டர் ஜி. யு. போப்பின் கருத்து

"சைவ சித்தாந்தம் என்னும் தத்துவக் கொள்கையானது மிக விரிந்ததும், பெருஞ் செல்வாக்குடையதும், ஐயத்திற்கு இடமின்றி உண்மையிலேயே பெருமதிப்பிற்கு உரியதும், இந்திய நாட்டிலுள்ள சமயக் கொள்கைகளுக் கெல்லாம் தலை சிறந்ததுமாகும். தென்னிந்திய மக்களின் மிகச் சிறந்த பேரறிவின் பெருவிளைவே சைவ சித்தாந்தமாகும். இறை-உயிர்- மக்கள் தன்மை - உலகியற்கை - அறியாமை - துன்பம் - காணப்படாத மறுமைநிலைகள் என்பவற்றைக் குறித்த, சிக்கலான பொருள்களைத் தெரிந்து கொள்ளும் இத்தகைய சிறந்த முயற்சி பற்றி, இதுகாறும் ஆங்கிலத்தில் முற்றிலும் எடுத்து விளக்கப்படவேயில்லை." (மொழி பெயர்த்தவர் - முருகவேள்)

## ரெவரண்ட் கௌடியின் கருத்து

மேலும் இதன் சிறப்பைக் கௌடி (Rev. Mr. Goudie) என்பவர் கூறுவனவற்றையும் காண்க: "பிற எல்லா ஆராய்ச்சி வகைகளையும்

கொள்கை அல்லது வழிபாட்டு முறைகளையும்விட மேலானதாகச் சைவசித்தாந்தம் சில சிறப்பியற் பண்புகளைத் தன்னகத்தே கொண்டு ஒளிர்கின்றது. மிகவும் பழமை வாய்ந்ததாய், அப்பழமையினாலாகிய பெருமைகளைப் பெற்று விளங்குகின்றது. சமய உலகில் தென்னிந்தியாவில் உள்ள மிகப் பெரும்பான்மையான சிறந்த கருத்துக்கெல்லாம், சைவ சமயமே நேரிதின் உரிமைத் தொடர்புடையதாகும். தமிழ் மக்களின் சமயமாகிய இதனை நோக்க, அடுத்துள்ள ஏனைய பிற எல்லாம் ஒப்பியல் முறையில் அயலவர்க்கு உரியனவும், அண்மையில் தோன்றியனவுமேயாகும். சமய ஆராய்ச்சித் துறையிலும், கொள்கை -வாழ்க்கை என்பனவற்றின் வெளிப்பாட்டு முறையிலும். மிகமிகச் சிறந்ததொன்றாகத் தென்னிந்தியா பெற்றிருப்பது சைவ சித்தாந்தமேயாகும்.'' இவ்வாறு கூறும் இவ்விரு அயல்நாட்டு அறிஞர்களின் கருத்துரை கொண்டே சைவசித்தாந்தத்தின் மேன்மையை ஓரளவு தெளியலாம். (மொழி பெயர்த்தவர் - முருகவேள்)

## சைவ சித்தாந்தத்தின் அடிப்படைக் கொள்கை

பதி (கடவுள்), பசு (உயிர்), பாசம் (தளை) என்னும் மூன்று பொருள்களும் ஒன்றால் ஒன்று தோற்றுவிக்கப்படாமல் என்றும் உள்ள உண்மைப் பொருள்கள் என்பது சைவ சித்தாந்த்தின் அடிப்படைக் கருத்தாகும். மூன்று பொருள்களும் என்றும் உள்ளனவேனும், தகுதியால் வெவ்வேறு இயல்புடையனவேயாம். அவற்றுள் கடவுள் ஒளிவண்ணராய், அறிவுருவாய், பிற உதவியின்றித் தாமே அறிபவராய் பேரின்பவுருவராய், அறிவித்தால் அறியும் உயிர்களிடத்துக் கருணைகொண்டு படைத்தல் முதலிய ஐந்தொழில்களைச் செய்து உயிர்களைத் தளையினின்றும் விடுவிப்பவராய், ஒருவராய், ஆயினும் தாமும் தம் சக்தியும் என இருதிறப்பட்டு, மலரும் மணமும்போல இயைந்து நிற்பவராய் விளங்குபவர்.

உயிர்கள், பலவாகவுள்ளன. அவை தாமே அறியும் தகுதியில்லாதனவாய், சிற்றறிவு உடையனவாய், இயல்பாகவே பாசத்தால் கட்டுண்டனவாய், சூரிய ஒளிகொண்டு பொருள்களைக் காணும் கண்களைப்போல் இறைஒளி உணர்த்த உணரும் இயல்புடையனவாய் சார்ந்ததன் வண்ணமாகிய படிகம் போன்று இறைவனைச் சார்ந்து அறிவையும் பேரின்பத்தையும் பெறத்தக்கனவாய், பாசத்தைச் சார்ந்து அறியாமையையும் பெருந்துன்பத்தையும் அடையும் இயல்பினவாய் இருப்பன.

பாசம் (தளை), ஆணவம்- மாயை - கன்மம் என மூவகைப்படும். இவற்றை மும்மலம் எனவும் கூறுவர். இவற்றுள் ஆணவம், தான் ஒன்றேயாய் அனேக சக்திகளையுடையதாயிருப்பது. உயிர்களின் அறிவினை விளங்கவொட்டாமல் அதற்குத் தடையாயிருப்பது; தன்னையும் காட்டாமல் பிற பொருளையும் காணவொட்டாமல் மறைத்து நிற்பது; மோகம். மதம், அராகம், கவலை, தாபம், வட்டம், விசித்திரம் என்னும் ஏழு செயல்களையும் உயிர்களிடத்தே விளைவிப்பது.

மாயை என்பது உலகம் தன்னிடல் ஒடுங்குதற்கும், தோன்றுதற்கும் காரமணாயிருப்பது. இம்மாயை இறைவனருளால் உலகத் தோற்றத்திற்கு முதற்காரணமாய் நின்று, ஆணவத்தால் கட்டுண்டு இயக்கமற்றிருக்கும் உயிர்களை இயங்கத் துணைசெய்து அவற்றை உயர்த்துவது. மாயையின் காரியமே தனு (உடம்பு), கரணம், புவனம், போகம். தத்துவங்களின் துணைகொண்டே, உயிர்கள் சிற்றறிவு விளக்கம் பெறுகின்றன. இதனால் மாயையினை 'விளக்கு' என்றருளிச் செய்தார் நம் மெய்கண்ட தேவர்.

கன்மம் என்பது, உயிர்கள் ஆணவமலத் தொடர்பால் செய்யும் வினைகளின் தொகுப்பாகும். இது நல்வினை தீவினை வடிவாய் இன்பத் துன்பங்கட்கும், பிறப்பு இறப்புகட்கும் காரணமாயிருப்பது. அது மூவகைப்படும். அவையாவன உயிர்கள் முற்பிறவியில் நல்வினை தீவினை வாயிலாகத் தேடி வைத்தது சஞ்சித வினையாம். அதனை இப்பிறவியில் அநுபவிப்பது பிராரப்த வினையாம். அநுபவிக்கும்போதே. உண்டாக்கிக் கொள்வது ஆகாமிய வினையாம் என்க.

*''பதிபசு பாசம் எனப்பகர் மூன்றில்*
*பதியினைப் போல்பசு பாசம் அநாதி*
*பதியினைச் சென்றணு காப்பசு பாசம்*
*பதியணு கிற்பசு பாசம்நில் லாவே.''*

என்ற திருமூலர் திருமந்திரத்தாலும்

*''என்னை அறிவென்றான்; என்னறிவில் ஆனந்தம்*
*தன்னைச் சிவமென்றான்; சந்தமும் - என்னை உன்னைப்*
*பாரா மறைத்ததுவே பாசமென்றான் இம்மூன்றும்*
*ஆராய்ந் தவர்முத்த ராம்''*

என்ற நமது ஆதீன முதல்வர் குருஞானசம்பந்தர் திருவாக்காலும் இதுகாறும் கூறிய முப்பொருள் உண்மையைச் சுருக்கமாக உணரலாம்.

## சமயத்தால் வரும் நன்மைகள்

ஒவ்வொரு சமயமும் குறிப்பிட்ட காலங்களில் விரதம் இருக்க வேண்டும் என்பதை வற்புறுத்துகிறது. 'நல்லவை செய்வேன் அல்லவை தவிர்ப்பேன்' என்று சங்கற்பம் செய்து கொண்டு அவற்றைக் காப்பதே விரதமாகும். கூடியவரை உணவைக் குறைத்துக் கடவுட் சிந்தனையுடன் அருள்நூல்களைப் பாராயணம் செய்வதும், நற்செயல்களில் ஈடுபடுவதும் விரதத்தின் முக்கிய அம்சமாகும். விரதத்தை உபவாசமென்றும் குறிப்பிடுவர். உப-சமீபத்தில் வாசம் - வசித்தல். அதாவது, இறைவனுக்கு சமீபத்தில் வசித்தல் என்பதே இதன் பொருள். உணவைக் குறைத்துத் தூய வாழ்க்கையை மேற்கொண்டால் இறைவன் சமீபத்தில் வசிக்கலாம் என்பது அநுபவ அறிவிற்குத் தெளிவாகப் புரியக்கூடும். எனவே, நமது சைவத்திலும் சிவ விரதங்களாகச் சோமவார விரதம், சிவராத்திரி விரதம், திருவாதிரை விரதம், பிரதோஷ விரதம் முதலியனவும்; முருகனைப் பற்றியனவாகச் சஷ்டிவிரதம், கிருத்திகை விரதம் முதலியனவும், இவற்றைப் போலவே தேவி விரதங்கள், விநாயகர் விரதங்கள் முதலியனவும் அமைந்துள்ளன. இவ்விரதங்களால் ம்ககள் அடையும் பலன் அளப்பிலவாகும். முதலில் ஒருவனுக்கு ஆரோக்கிய வாழ்வு கிடைக்கிறது. நோய்த் துன்பம் இன்றி வாழ முடிகிறது. நீண்ட ஆயுள் பெற முடிகிறது. அறிவில் தெளிவும் நுட்பமும் உண்டாகின்றன. உணவைக் குறைப்பதால் ஆயுள் அதிகரிக்கும் என்பதைத் திருவள்ளுவர் "அற்றால் அளவறிந் துண்க அஃதுடம்பு, பெற்றான் நெடிதுய்க்குமாறு" என்ற திருக்குறளால் அறிவிக்கின்றார். ஆத்மா கடவுள் உணர்வுடன் நல்ல செயல்களில் ஈடுபடுவதால் அறிவுணர்வு தலைப்பட்டு, வம்பு வழக்குச் செலவுகள் குறையும். உணவுப் பொருட் செலவு, மருத்துவத் துறையில் மருந்துப் பொருட்செலவு, பாதுகாப்புச் செலவு, சுகாதாரச் செலவு முதலியனவும் குறையும். எனவே பொருளாதாரப் பற்றாக்குறையும் நம்மைவிட்டு அகலும். ஆட்சியாளர்களும் நல்லுணர்வுபெற்று அறவாழ்வு நடத்தும் மக்களைச் சிரமமின்றி எளிமையாக ஆட்சி புரியலாம். ஒவ்வொருவரும் துன்பம் இன்றி இன்பமாக வாழலாம். இதனால் தனிமனிதனுக்கும், சமூகத்திற்கும், அரசாங்கத்திற்கும் நன்மை ஏற்படுகிறது. எனவே, சமய வாழ்வை ஒவ்வொருவரும் மேற்கொண்டு செயற்படுத்தினால், உலக மக்கள் இம்மை மறுமை நலன்களைத் தவறாது பெறுவதோடு, பேரின்பத்தையும் பெறுவர் என்பது ஒருதலை.

## சைவ சமய வளர்ச்சி

காலஞ் சென்ற ஐன்ஸ்டீன் போன்ற விஞ்ஞானிகளும், ஜி.யு. போப்பைப் போன்ற கிறிஸ்தவப் பாதிரியார்களும், ஜான்மார்ஷல் போன்ற மேலைநாட்டுச் சரித்திரப் பேராசிரியர்களும், பிறநாட்டுத்தத்துவ சாத்திரப் பேராசிரியர்களும், சைவசித்தாந்தத்தின் உயரிய தத்துவக் கொள்கைகளை மிகப் பெரிதும் பாராட்டியுள்ளார்கள். கொள்கை அளவோடு நில்லாமல் அநுபவத்திலும் நலம் பயப்பதாக உள்ளதை அறிந்து அறிஞர் பலரும் ஒப்புகின்றனர். இத்தகைய சமயம் வளர்ந்தும், தளர்ந்தும் வந்திருப்பதை வரலாறுணர்ந்தோர் நன்கறிவர். சைவம் பரவுவதால் அதற்கு ஒன்றும் பலனில்லை. ஆனால் அதனை மேற்கொள்ளும் மக்கள் அதிகமான பலனை அடைவார்கள். இவ்வரிய தத்துவ வளம் நிறைந்த சைவம், இக்காலத்தில் உலகில் அதிகமாகப் பரவாததற்குக் காரணங்கள் பலவாகும். மிகவும் நுணுக்கமான பொருள்களை முன்னுக்குப் பின் முரணுதல் இன்றிச் சொல்லும்பொழுது சொல்நடை பொருள்நடை கடினமாயிருத்தல் இயல்பே. இது ஒரு காரணம் என்பர். சிவநெறியால் நலமடைந்து வரும் சைவர்கள், அந்நெறியைத் திருவருள் துணையால் விளக்கங் கண்ட சமயாசாரியர்களாகிய திருஞானசம்பந்தர், திருநாவுக்கரசர், சுந்தரர், மாணிக்கவாசகர் ஆகியோரையும், சந்தனாசாரியர்களாகிய மெய்கண்ட தேவர், அருணந்திசிவம், மறைஞானசம்பந்தர், உமாபதிசிவம் ஆகியோரையும் உள்ளவாறு உணர்ந்து போற்றிப் பரவி வழிபடாது வாழ்வது சைவம் பரவாததற்கு முக்கிய காரணமாகும். இனியாகிலும் நாம் ஒவ்வொரு ஊரிலும் இவ்வாசிரியர்களின் பெயரால் கழகங்களும் மன்றங்களும் அமைத்தல் வேண்டும். ஒவ்வொரு சைவரும் அந்தந்த ஊரில் அவற்றில், அங்கத்தின ராதலோடு, அவரவர் தகுதிக்கேற்பப் பொருளையும் உழைப்பையும் காணிக்கையாக வழங்குதல் வேண்டும். அக்கழகங்களின் மூலம் வருங்கால மக்களாகிய இளைஞர்கட்குச் சமயப் பெரியார்களின் வரலாறுகளையும், சைவ சாத்திரத் தோத்திரக் கருத்துக்களையும் புகட்டல் வேண்டும். ஒவ்வொருவரும் நாள்தோறும் சைவக் கருத்துக்களைத் தெரிந்து கொள்ளுவதற்காக ஒரு மணி நேரமாவது ஒதுக்கி வைத்தல் வேண்டும். சைவராய் உள்ளவர்கள் சமய விசேட தீக்கைபெற்று இயன்றளவு அநுட்டானம், பூசை முதலியன செய்தல் வேண்டும். ஒவ்வொருவரும் தத்தம் பிள்ளைகட்கும் ஏழு வயது ஆனவுடன் முறைப்படி சமய தீக்கைச் செய்வித்து இளமையிலேயே சிவநெறியில் ஈடுபடச் செய்தல் வேண்டும். குடும்பத்திலும் சமூகத்திலும் நடைபெறும் மங்கல காரியங்களில் சமயக் காணிக்கை

செலுத்துதல் என்ற முறையை மேற்கொள்ளுதல் வேண்டும். அநுட்டானம் பூசை முதலியன செய்ய இயலாதவர்கள் திருமுறைப் பாராயணத்தைத் தவறாது மேற்கொள்ள வேண்டும். குறைந்த அளவு வாரம் ஒரு முறையேனும் தவறாது திருக்கோயிலிற்குச் சென்று வழிபட வேண்டும். வாரவழிபாடு, கூட்டு வழிபாடு முதலியன நடைபெறச் செய்தல் வேண்டும். குருபக்திதான் நம்மையும், நாம் மேற்கொண்டு ஒழுகும் சமயத்தையும் வளர்ப்பது. எனவே எந்தச் செயலை மறந்தாலும், சமயகுரவர் சந்தான குரவர் படங்களைப் பூசை அறையில் எழுந்தருளச் செய்து பூசித்து வருவதை மறக்கலாகாது.

## சமய ஆசிரியர்கள் காட்டிய வழி

நம் சமயாசிரியர்கள், அவர்களுக்கு முன்னிருந்த நாயன்மார்களைக் குருவாகப் போற்றி வழிபட்டுள்ளார்கள். திருஞான சம்பந்தர் திருக்காளத்தி மலைக்குச் சென்றபோது கண்ணப்ப நாயனாரின் திருவுருவத்தைக் கண்டார்; கண்டவுடனே கும்பிட்ட பயனைக் காண்பார் போல், மெய்வேடர் பெருமானைக் கண்டு வீழ்ந்து வணங்கி வழிபட்டார்; திருவாலங்காட்டை அடைந்தபோது காரைக் காலம்மையார் வதியும் பதி என்பதை அறிந்து, அவரிடத்திலுள்ள பக்தியால் அத்தலத்தை மிதிக்க அஞ்சினார். சுந்தரமூர்த்தி சுவாமிகள் அப்பர் சுவாமிகட்குச் சூலை நீங்கிய தலமாகிய திருவதிகையை மிதிக்க அஞ்சிப் புறத்தே சித்தவட மடத்தில் தங்கினார்; அதனால் சிவஞான தீக்கையாகிய திருவடி தீக்கையும் பெற்றார்; அதேபோல் சீகாழிப் பதியை நெருங்கியஉடன் திருஞானசம்பந்தர் தோன்றியருளி யதும், அவருக்கு அம்மையார் ஞானப்பால் அருளியதுமான பெருமையை எண்ணி அத்தலத்தை மிதிக்க அஞ்சி வலமாக வந்தார். காழிநாதரும் காதில் வெண்குழையனாகக் காட்சி நல்கினார். இதுபோன்ற பல நிகழ்ச்சிகளால் நாம் நம் சமய குரவர்களையும், சந்தான குரவர்களையும் அவர்கள் வழிவந்த ஆதீனங்களின் குருமகாசந்நிதானங்களையும் போற்றிப் பரவித் தொடர்பு கொள்ளுதல் வேண்டும். இதுகாறும் கூறிய கருத்துக்களைச் சமாஜம் மேற்கொண்டு, மன்றங்கள் கழகங்கள் முதலிய சமய அமைப்புகளை ஏற்படுத்தி, அவற்றைத் தமது உறுப்பாகக் கொண்டு செயற்படுத்த முன்வருமென்று நம்புகிறேன்.

## முடிவுரை

இதுவரை கூறியவற்றால் 54 ஆண்டுகளாகச் சைவப்பணி புரிந்து வருவது சைவ சித்தாந்த மகா சமாஜம் என்பதும், வாலாஜாபாத்

குருகுலமாகிய இந்துமத பாடசாலையில் ஆண்டு விழாக் கொண்டாடுவது பொருத்தமானது என்பதும், சமயத்திறம் விளங்குவதும், புதைபொருள் ஆராய்ச்சியால் சைவத்தின் தொன்மை துலங்குவதும், சங்க இலக்கியங்களில் சிவநெறிப் பழைமை சிறப்பதும், இயற்கை அமைப்பில் சிவபெருமான் எழிலோடு காட்சி அளிப்பதும், உலகியல் வழக்கிலும் சைவம் உயர்ந்து வழங்குவதும், பிறநாட்டவரும் பிறமதத்தவருமான பாதிரிமார்கள் பைந்தமிழ்ச் சைவத்தைப் பாராட்டியுள்ளதும்,சைவசித்தாந்தத்தின் அடிப்படைக் கொள்கை முப்பொருள் உண்மை என்பதும், சமய விரதங்களால் வரும் நன்மைகளும், சமயசாரியர்களையும், சந்தானாசாரியர்களையும் போற்றி வழிபடுவதால்தான் சைவம் வளரும் என்பதும் தெரிந்தோம். இப்பணிக்கு என்னையும் ஆளாக்கிய திருவருளுக்கும் குருவருளுக்கும் பணிவார்ந்த வணக்கம் செலுத்தி, குருகுலத்தார்க்கும் சமாஜத்தார்க்கும் உளமார்ந்த நன்றியறிதலைத் தெரிவித்து, இத் தலைமையுரையை நிறைவு செய்துகொள்ளுகிறேன். சைவ மெய்யன்பர்களும், சமய உணர்ச்சியுடன் சைவப் பணி புரிந்து நாளும் வளமாக வாழச் செந்தமிழ்ச் சொக்கலிங்கப் பெருமான் திருவருளைப் பிரார்த்திக்கின்றேன்.

வாழிய சைவம்! வளர்க் மெய் அன்பர்கள்!

*''வான்முகில் வழாது பெய்க மலிவளம் சுரக்க மன்னன்*
*கோல்முறை அரசு செய்க குறைவிலாது உயிர்கள் வாழ்க*
*நான்மறை அறங்கள் ஓங்க நற்றவம் வேள்விமல்க*
*மேன்மைகொள் சைவ நீதி விளங்குக உலக மெல்லாம்''*

- கச்சியப்பர்

# சைவப்பெரியார்
# ச. சச்சிதானந்தம் பிள்ளை

(55ஆம் ஆண்டு விழா - 1960
திருக்கேதீச்சரம் - இலங்கை - சைவர் மாநாடு)

*''நல்லர் ஆற்றவும் ஞானநன் குடையர்தம் அடைந்தவர்க் கருளீய*
*வல்லர் பார்மிசை வான்பிறப் பிறப்பிலர் மலிகடன் மாதோட்டத்(து)*
*எல்லை யில்புகழ் எந்தை கேதீச்சரம் இராப்பகல் நினைந்தேத்தி*
*அல்ல லாசறுத் தரனடியிணை தொழும் அன்பராம் அடியாரே''*

- திருஞானசம்பந்தர்

*''மூவரென இருவரென முக்கண்ணுடை மூர்த்தி*
*மாவின்கனி தூங்கும்பொழில் மாதோட்டநன் னகரில்*
*பாவம்வினை அறுப்பார்பயில் பாலாவியின் கரைமேல்*
*தேவன்னெனை ஆள்வான்திருக் கேதீச்சரத் தானே''*

-சுந்தரர்

*''பூழியர்கோன் வெப்பொழித்த புகலியர்கோன் கழல்போற்றி*
*ஆழிமிசைக் கன்மிதப்பில் அணைந்த பிரான் அடிபோற்றி*
*வாழிதிரு நாவலூர் வன்றொண்டர் பதம் போற்றி*
*ஊழிமலி திருவாத வூரர்திருத் தாள்போற்றி''*

-உமாபதிசிவம்

*''சிறிய ஆடியிற் பெரியமால் வரைப்பொருள் செறிந்தாங்(கு)*
*அறிவு நூல்களின் முடிபெலாம் அகத்தடக் கியதோர்*
*நெறியின் நீடிய நிகழ்சிவ ஞானபோ தத்லைதக்*
*குறிய தீந்தமி ழாலுரை குரவனைப் பணிவாம்''*

- கச்சியப்ப முனிவர்

**சிவநேயச் செல்வர்களே!**

உங்கள் அனைவர்க்கும் அடியேனது அன்பார்ந்த வணக்கம் உரித்தாகுக. இருபதாண்டுகட்கு முன்பு ஒரு முறை யான் யாழ்ப்பாணத்திற்கு வந்து இலங்கைச் சைவப் பெருமக்களைக் கண்டு களிக்கும் பேறு எனக்கு அளிக்கப்பட்டது. இப்போது அவ்வாய்ப் பினை மீண்டும் அளித்திருக்கின்றீர்கள். அதற்காக என் உளமார்ந்த நன்றியைத் தெரிவித்துக் கொள்ளுகின்றேன். தொலைவுப் பயணங்களை மேற்கொள்ளலாகாதென்று எனது மூப்புணர்வு தடுத்தது. தடுத்தும், ஏதோ ஓர் உள்ளுணர்ச்சி, நீங்களிடும் பணியை ஏற்றுக் கொள்ளல் வேண்டும் என்று உந்தியது. ''பாலாவியின் கரைமேல்'' உறைதேவன், ''தாயிற் சிறந்த தயாவான தத்துவன்'' ஆதலாலும், ''ஆரேனும் தன்னடைந்தார் தம்மையெல்லாம் ஆட் கொள்ளவல்ல ஈச'' னாதலாலும், புலமை, சாத்திர ஆராய்ச்சி அநுபூதி இவற்றில் மேல்நிலை இன்னும் எய்தப்பெறாத இச்சிறியேற்கும், அவனருள் துணைபுரியும் என்று நம்பியே வந்துள்ளேன். ''எழுத்துப்போலியும் எழுத்தென ஆளுவர் புலவோர்'' என்ற முறைப்படி, என்பால் அன்புவைத்துள்ள நீங்கள் என் பேச்சில் காணும் பிழைகளைப் பொறுத்து நலத்தை மட்டும் ஏற்றருளுவீர்கள் என்று கொள்கின்றேன்.

இக்காலத்தில், நாமெல்லோரும் கருத்தூன்றிக் கவனிக்க வேண்டிய சில பெருங்கடமைகளை இம்மாநாட்டில் விண்ணப்பிப்பதே எனது தலையாய நோக்கமாகும். அது பற்றிப் பேசுமுன், தோற்றுவாயாக இரண்டொரு மெய்ம்மைகளையும் நினைப்பூட்ட விரும்புகின்றேன். முதற் கண் யான் நினைவுகூர விரும்புவது, இலங்கையின் பழமையும் பெருமையும். மக்களினம் முதன் முதல் தோன்றியது லெமூரியா (குமரிக்) கண்டத்தில் தான் என்பது ஆராய்ச்சியிற் பெரிதும் வல்ல சில மேனாட்டறிஞர் காட்டும் உண்மை. பல கடல்கோள்கள் நிகழ்ந்த காரணத்தால் தென்குமரி மக்கள் வடக்கு வடமேற்கு முதலிய திசைகட்குச்சென்று தங்கித் தமது தாய்மொழியின் அடிப்படையில் பல மொழிகளை ஏற்படுத்திக் கொண்டனர் என்றும், அங்ஙனம் வடதுருவம் வரையுஞ் சென்றவர்கள் அங்குள்ள வெப்ப தட்ப நிலை பெரிதும் கேடாக மாறிய பின்பு, அங்கிருந்து தெற்கும் மேற்கும் நோக்கிப் பல தேயங்களுக்குச் சென்று சேர்ந்தனர் என்றும், அதற்குள் கடற்கீழிருந்த இமயப் பகுதி வெளிப்பட்டதென்றும், அப்பகுதியில் வசதியான இடங்களில் வந்து குடியேறினர் என்றும் ஆராய்ச்சி வல்லார் கூறுப. பண்டைக் குமரிக் கண்டத்தில் கடல்கோளால்

அழிவுறாமல் எஞ்சிநிற்கும் பகுதிகளே தென்னாடும், இலங்கையும், சுமேத்திரா முதலிய பிற சில பகுதிகளுமாகும்.

இலங்கை, மிகமிகத் தொன்மையானதாயிருப்பது மட்டுமன்றி, இயற்கை யழகிலும், வளப்பத்திலும் கூடச் சாலச் சிறந்து விளங்குவதுமாகும் என்று படித்தறிந்துள்ளேன். அது அசோகர் காலத்துக்கு முன்னமே மாட்சிமை பெற்றிருந்தது. இராமாயண சரிதையில் இலங்கை முக்கியமானதோர் இடம் பெற்றிருப்பதும் யாவரும் அறிந்த உண்மை. பின்பு அசோகச் சக்கரவர்த்தியின் காலத்தில் புத்தமதம் இங்கே பரவலாயிற்று. பின்பு இலங்கைக் கயவாகு வேந்தன் சிலப்பதிகார காலத்தில் தனது நாட்டில் கண்ணகிக்குக் கோயில் சமைத்த செய்தியும், பின்பு சோழப் பேரரசு சில நூற்றாண்டு காலம் நிலவியதும் சரித்திர வாயிலாக அறியும் உண்மைகள்.

தமிழகத்திற்கும் இலங்கைக்கும் பன்னெடுங்காலமாக நெருங்கிய தொடர்பு இருந்து வந்துளது. இம் சமாஜத்தளவில் பேசுங்கால், இத்தொடர்பு சமாஜம் தோன்றிய ஆண்டு (7.7.1905) முதலாகவே இருந்து வருகிறது. 1906ல் சிதம்பரத்தில் நடந்த மகாசமாஜ முதலாண்டு விழாவிற்குத் தலைமைபூண்ட பெரியார், இலங்கையின் மாபெருந்தலைவர் சர். பொன்னம்பலம் இராமநாதன் அவர்களே. பின்பு சென்னையில் 1922ல் நடந்த சமாஜ ஆண்டு விழாவிற்கும், 1925ல் நடந்ததோர் சிறப்புக் கூட்டத்திற்கும்கூட அவர்களே தலைமை தாங்கிச் சிறப்பித்தார்கள். 1954ல் விருது நகரில் நடந்த மகாசமாஜ மாநாட்டிற்குச் சர். கந்தையா வைத்தியநாதன் அவர்களும், 1955ல் மகாசமாஜப் பொன் விழா சிதம்பரத்தில் நடந்தபோது உயர் திருவாளர் சு. நடேச பிள்ளையவர்களும் தலைமை ஏற்று விழாக்களை இனிது நடத்தி வைத்தார்கள். சமாஜ ஆண்டு விழாக்களில் தலைமை தாங்கிய ஏனைய இலங்கைப் பேரறிஞர்கள் 1. சர். ஏ. கனகசபை (1909ல்), 2. முதலியார் - சபாரத்தினம் (1916-ல்), 3. ஸ்ரீ சுவாமிநாத பண்டிதர் (1918, 1920ல்), 4. ஸ்ரீ வே. நாகலிங்கம் பிள்ளை (1953ல்) என்பவர்கள்.

இம் மகாசமாஜப் பெருவிழாக்களில் தலைமை தாங்கிய இலங்கைப் பெருமக்களை மட்டும் மேலே குறித்தேன். இம் மகாசமாஜம் தோன்று முன்னமே சைவத்தைப் பேராபத்தினின்றும் காத்தருளிய ஸ்ரீலஸ்ரீ ஆறுமுக நாவலரவர்களை எந்தச் சைவரும் மறக்க இயலாது. அவரைப் பின் தொடர்ந்து, தமிழகம் போந்து தலையாய முறையில் தமிழ்த் தொண்டும் சைவத் தொண்டும் செய்த

இலங்கைப் பேரறிஞர்கள் இன்னும்பலர் உளர். சைவப் பெருந் திருவாளர்கள் அம்பலவாண நாவலர், சபாபதி நாவலர், ஆறுமுகத்தம்பிரான், ஞானப்பிரகாசர், மேலைப்புலோலி நா. கதிரை வேற்பிள்ளை, இலக்குமண அடிகள், சொக்கலிங்க ஐயா அவர்கள், சி.வை. தாமோதரம் பிள்ளை, விபுலானந்த அடிகள், சிவஸ்ரீ ச.ச. குமாரசாமி குருக்கள், ஸ்ரீ நவநீத கிருஷ்ண பாரதியார் ஆகியோர் பெயர்களும் நினைவிற்கு வருகின்றன. இங்ஙனம் தமிழகமும் இலங்கையும் நெடுங்காலமாக மிக நெருங்கிய ஆன்மிகத் தொடர்புடையனவாக இருந்து வருகின்றன.

மகாசமாஜ ஆண்டு விழாக்களில் இரண்டும் உங்கள் நாட்டிலேயே இதற்கு முன்பு நடந்திருப்பதை மகிழ்ச்சியுடன் நினைவுகூர்கின்றேன். 43வது ஆண்டுவிழா 1948ல் யாழ்ப்பாணத்திலும், 45வது ஆண்டுவிழா 1950ல் கொழும்பிலும் சிறப்பாக நடைபெற்றன.

இனி, இம்மாநாடு கூடியிருக்கும் திருக்கேதீச்சுரத்தின் பெருமையையும் பற்றிப் பேசுதல் பொருத்தம்தான். ஆனால், யானே அதுபற்றி விரிவாகச் சொல்லவேண்டிய அவசியமில்லை. ஏனெனில், இம் மகாசமாஜத்தின் துணைத் தலைவர் இராவ்சாகிப் நல். முருகேச முதலியார், இம்மாதம் வெளிவந்த "சித்தாந்தம்" பத்திரிகையின் தலையங்கமாக, "திருக்கேதீச்சுரம் சேர்மினே" என்னும் தலைப்பில் பொருள் செறிந்த அழகிய கட்டுரை ஒன்று எழுதியிருப்பதைப் பலரும் படித்திருக்கக் கூடும். இத்தலத்தின் தொன்மை இராமாயண காலம் வரையிற் செல்லுகிறது. மயன், இராமர், இராவணன், அருச்சுனன், பாண்டிய மன்னர்கள், சைவசமய குரவர்கள், நாவலர் பெருமான் இவர்கள் எல்லாரும் இத்தலத்துடன் எப்படித் தொடர்பு கொண்டவர்கள் என்பது அதில் இனிது விளக்கப்பட்டுள்ளது.

கூன்பாண்டியர் நின்றசீர் நெடுமாறராய்த் திருந்திய பின்பு அவருடனும், அவர் வாழ்க்கைத் துணை நலமாகிய மங்கையர்க்கரசியாருடனும் திருஞானசம்பந்தர் யாத்திரை செய்து பாண்டி நாட்டின் பல தலங்களை வணங்கிக் கொண்டு சேதுநகரை யடைந்தார். அங்கே திருவிராமேச்சுரத்தை வழிபட்டு அந்நகரில் பலநாள் மகிழ்ச்சியுடன் தங்கியிருக்கும் போதுதான் இலங்கையிலுள்ள திருக்கோணமலையையும், திருக்கேதீச்சுரத்தையும் சேதுவிலிருந்த படியே பாடியருளினார் என்று அறிகிறோம். "சென்னிமதி புனைமாட மாதோட்டத்தில் திருக்கேதீச்சுரத்தண்ணல் செய்ய பாதம் உன்னிமிகப் பணிந்தேத்தி அன்பரோடும், உலவாத கிழி பெற்றார் உவகை யுற்றார்" என்று தெரிவித்தருளுகின்றார் தெய்வச் சேக்கிழார்.

இப்பதிகத்தில் முதல் நான்கு திருப்பாசுரங்களில், மாதோட்டத் திறைவனைக் கைதொழக் ''கைவினையடையா'', ''கெடுமிடர் வினை'', ''அருவினையடையா'', ''மொய்த்தெழும் வினைபோம்'' என்ற ஒரே பயனை வற்புறுத்துகின்றார். இவர் பாடியருளிய திருமருகற் பதிகத்தில் வரும் பதினொரு பாசுரங்களிலும், சிவ பெருமானை வழிபடுபவர்தம் முன்னைத் ''தீவினைகள் தீருமுடனே'', வினைகள் நீங்கும், அடையா என்னும் கருத்தை உறுதியாய்க் கூறியருளியிருப்பது, அக்காலத்தில் ஊழ்வினையை அடக்குமாற்றல் எதற்கும், எவர்க்கும், என்றும் இல்லை என்ற கொள்கையை மறுத்ததாகின்றது. கேதீச்சரப்பதிகத்தின் பயன் கூறும் பாசுரமானது, இப் ''பாமாலைப் பாடலாயின பாடுமின் பத்தர்கள் பரகதி பெறலாமே'' என்று கட்டுரைக்கின்றது. (பரகதி சிவானந்தப் பெருவாழ்வைப் பெறும் நெறி.) கர்மத்திற்கு மேல் கடவுள் என்னும் பழமொழியுண்டு. தருமத்திற்கு மேலும் ஒரு தலைவன் உளன்.

உலகிலும் நம் நாட்டிலும், சைவ சமுதாயத்திலும், தீவினை அதிக வேகத்தோடு துன்பம் பெருக்கி வருகின்றது. இவ்வேகத்தை அடக்க ''நஞ்சுண்ட கண்டன்றன்னை - எண்டோள் வீசி நின்றாடும் பிரான்தன்னை'' - புறக்கண்ணாலும் அகக்கண்ணாலும் காணும் நெறியை அனைவரும் வழுவாது பின்பற்றுவதே சாதனமாகும்.

சைவ சித்தாந்த மகாசமாஜ ஆண்டு விழாக்களில், சைவத்தின் தொன்மையையும் மாட்சியையும் பற்றித் தலைமையுரைகள் பன்முறை நன்கு விவரித்துள்ளன. சிந்துவெளி நாகரிகத்தைப் பற்றிச் சர். ஜான் மார்ஷல் Mohenjo Daro and Indus Civilization என்னும் அரும்பெரு நூலில் எழுதியிருப்பது பற்றியதும், அதனை Father Heras என்னுமத் துரைமகனார் உறுதிப்படுத்தியிருப்பது பற்றியும், பல்லாயிரம் ஆண்டுகட்கு முன்பு இலமுரியாக் கண்டம் என்ற பழந்தமிழகத்தில் வாழ்ந்துவந்த மக்களே, ஆங்கு நிகழ்ந்த கடற்கோள்களின் பின்பு வடக்கு நோக்கிச் சென்று சிந்து நதிக்கரை முதலிய இடங்களில் குடியேறிச் சிந்துவெளி நாகரிகத்திற்கு வித்திட்டனர் என்று ஆராய்ச்சி முறையில் கோவிந்தாசாரிய சுவாமிகள் கூறியிருப்பது பற்றியும், உயர்திரு வே. நாகலிங்கம் பிள்ளையவர்கள் 1953ல் சென்னையில் நடைபெற்ற மகாசமாஜ ஆண்டு விழாவில் தம் தலைமையுரையில் விரிவாக இனிது விளக்கியுள்ளார்கள்.

மேலும் சிவலிங்க வழிபாடு தமிழகத்தில் மட்டுமன்றி ஐரோப்பா, ஆப்பிரிக்கா, அமெரிக்கா நாடுகளிலும் மிகப் பழைய காலத்திலேயே

பரவியிருந்த தென்பதை உயர்திரு. ந.சி. கந்தையா அவர்கள் தமது "சிவன்" என்னும் நூலில் விளக்கி யிருப்பதையும் குறித்துள்ளார்கள். தமிழர் யாவரும் கற்கவேண்டிய சிறந்த இக்கால ஆராய்ச்சி நூல்களுள் இஃதும் ஒன்று என்பது என் கருத்து. இவைகள் யாவும் நாம் நினைவில் வைத்திருக்க வேண்டியவை. பொழுதின் சுருக்கங்கருதி யான் இப் பகுதியை விவரிக்காமல் சர் ஜான் மார்ஷல் சைவ சமயத் தொன்மைபற்றி வெளியிட்ட முடிபு ஒன்றை மட்டும் எடுத்துக்காட்டி மேற்செல்கின்றேன்.

1. "The Saiva Siddhanta System is the most elaborate, influential and undoubtedly the most intrinsically valuable of all the religions of India. It is peculiarly the South Indian and Tamil religion"

*- Rev. G. U. Pope*

2. "This system possesses the merits of great antiquity in the Religious worldl it is heir to all that is most ancient in South India. It is a religion of the Tamil people by the side of which every other form is of comparatively foreign origin."

*- Pu. C. Gowdie*

3. "Among the many revelation that Mohenjo Daro and Harappa have had in store for us, none perhaps is more remarkable than this discovery that Saivism has a history going back to the Chalcolithic Age, or perhaps even further still, and it thus takes its place as the most ancient living faith in the world."

*-Sir. John Marshall*

சைவத்தின் தொன்மையைப் போலவே அதன் தத்துவங்களும் பெருஞ் சிறப்புடையன. அதன் அடிப்படை உண்மைகள் காலப்போக்கில் மாறவேண்டியவையல்ல. சைவர்கள் வணங்கும் சிவபெருமான் "ஆதியும் அந்தமும் இல்லா அரும்பெருஞ் சோதி" யாய்த் திகழ்பவன். "முன்னைப் பழம் பொருட்கும் முன்னைப் பழம் பொருளா"யும், "பின்னைப் புதுமைக்கும்பேர்த்தும் அப்பெற்றிய" னாயுமுள்ளவன். "சிவனோடொக்கும் தெய்வம் தேடினும் இல்லை. அவனோடொப்பாரிங்கு யாவருமில்லை" என்ற திருமந்திரத்தைப் புரிந்த அளவில் கட்டுப்படுத்திப் பார்த்துச் சிவனை ஒரு சமயத்தவர்க்குரிய தெய்வமே எனக் கருதுதல் முறையன்று. அவனை அடைதற்குரிய சைவ சமயமும் பல சமயங்களில் ஒரு சமயம் என்ற அளவில் நிற்பது மன்று. "சைவ முதலா அளவில் சமயமும் வகுத்து, மேல் சமயங்கடந்த மோன சமரசம் வகுத்த நீ" என்று, சமரச நன்னிலை நின்ற சைவத் தாயுமானார் சிவ பரம்பொருளைக்

குறிக்கின்றார். இதனால் சைவம் என்பது ஒரு நிலையில் சமயமாகவும், மற்றொரு பெரு நிலையாய சமயா தீதமாகவும் முரணின்றியே விளங்கும் பெருமையுடையது தாயுமானார் பாடல்களில் முதற்கண் அமைந்துள்ள பரசிவ வணக்கப் பாடல் பெரு மாண்புடையது. "சைவ சமயமே சமயம் சமயாதீதப் பழம்பொருளைக் கைவந்திடவே மன்றுள் வெளிகாட்டும்" என்ற அவர் திருவாக்கும், இவ்விரு அடுக்குகளின் பொருத்தத்தைக் காட்டும். சைவ சமய மென்னும் மரத்தின் உச்சியிற் பழமாய்ப் பொருந்தியிருப்பது சமயா தீதம் என்று உணர்த்துகின்றது.

*"கல்லாலின் புடையமர்ந்து நான்மறையா றங்கமுதற்*
*கற்றகேள்வி*
*வல்லார்கள் நால்வருக்கும் வாக்கிறந்த பூரணமாய்,*
*மறைக்கப்பாலாய்*
*எல்லாமாய் அல்லதுமாய் இருந்ததனை இருந்தபடி இருந்து*
*காட்டிச்*
*சொல்லாமற் சொன்னவரை நினையாமல் நினைந் துபவத்*
*தொடக்கை வெல்வாம்"*

என்ற அரும்பெரும் தோத்திரப் பாடலின் கருத்தாழமும், உயர்வும், தெளிவும் பெரிதும் போற்றத் தக்கவையன்றோ!

இவ்வாறு சைவமானது சமயமாகவும் சமயங் கடந்ததாகவும் அமைந்துள்ள பெருமையை நாம் உணர்ந்து பிறரும் உணரத் தொண்டாற்ற வேண்டும். இக்கால மனப்பான்மையினர் பலர்க்குச் சமயம் என்ற அளவில் வெறுப்புத் தோன்றுகிறது. அது, 'அறிவாராய்ச்சிக்கு ஒவ்வாத குருட்டு நம்பிக்கைகளையும் பழக்க வழக்கங்களையும் உடையது', 'விஞ்ஞான யுகத்திற்கு ஒவ்வாதது' என்றெல்லாம் குற்றஞ் சாட்டுகின்றனர். உலகத்தில் பல்வேறு இடங்களில் பல்வேறு காலங்களில் சமயத்தின் பேரால் பலர் பல கொடுமைகளை இழைத்ததுண்டு என்று சரித்திரம் தெரிவிக்கின்றது உண்மைதான். ஆனால் ஆழ்ந்து சிந்திப்பவர்க்குச் சமயங்கள் தம் சுத்த நிலையில் எக்கொடுமைகளையும் பொய்ம்மைகளையும் ஏற்பன அல்ல என்பதும், அச் சமயங்களைத் தவறாக உணர்ந்த அச்சமயிகளின் குற்றமும் குறைபாடுமேயாகும் என்பதும் புலப்படும்.

மனித வாழ்க்கையின் முன்னேற்றத்திற்கு உண்மையான சமய ஒழுக்கம் இன்றியமையாத ஒன்றாகும். உண்மை, நேர்மை, அன்பு, அருள் முதலிய நற்பண்புகளைக் கடவுளும் சமயமும் வழிபாடும்

இல்லாமலே ஏன் வளர்த்துக் கொள்ளக் கூடாது என்று உண்மை நாடும் நல்லோர்களே சில சமயங்களிற் கேட்பதுண்டு. ''சமயம்'' என்றால் இன்னதென்பதை அவர்கள் அறிந்து கொண்டால் அவர்கள் அதுவும் அவசியம் என்று உணர்வர். தெய்வ நிலைமையை அடையுமுன், மனிதன், 'விலங்கல்லேன் விலங்கல்லா தொழிந்தேன் அல்லேன்' என்று தற்சோதனையில் அறிந்து வருந்தவேண்டிய விலங்கு மனிதனாகத்தான் இருக்கிறான். இவ்விலங்கின் பிடியி லிருந்து அடியோடு விலகிக் கொண்டபின், அவன் தெய்வநிலை அடைந்து விடுகின்றான். அறிவுப்பொருளாகிய ஆன்மா இப்படி விலங்கு நிலையில் அகப்பட்டுத் தவிப்பதற்குக் காரணம் என்ன என்று வினவினால், ஆணவ மலம் என்னும் ஒரு சக்தி அதனைப் பற்றிக் கொண்டு ஆட்டிவருவதே என்றும், ஆன்மாவின் அறிவை அறவே மறைத்து நிற்கும் 'ஆவாரகம்' என்னும் சக்தியும், அதனை இழிந்த வழிகளில் இயங்கும்படி தூண்டும் 'அதோ நியாமிகம்' என்னும் மற்றொரு சக்தியும் இந்த ஆணவ மலத்திற்குள்ளன என்றும், சைவ சித்தாந்தம் காரணம் கூறுகின்றது.

இந்த ஆணவத்தின் பிடிப்பினின்றும் உயிர்களை விடுவிக்கும் பொருட்டே, அருள் வடிவினனாகிய இறைவன், மாயை என்னும் பொருளிலிருந்து, உடம்பு, கரணம், உலகு, இன்ப துன்ப நிகழ்ச்சிக்குரிய பொருள்கள் இவற்றையெல்லாம் ஒரு முறைப்படி படைத்துத் தந்து அவற்றில் இவ்வான்மாக்களைப் புகுத்திப் படிப்படியே மேல் நிலைக்கு உயர்த்தி வருகின்றான். இப்படி மேலேறுதற்குச் சமயநெறி அவசியமாக அமைந்துள்ளது. ''சமயம்'' என்பதற்கு நன்றாகச் செய்யப்பட்டது என்பது பொருள். ஆன்மாக்கள் கீழ்ப் படியிலிருந்து மேற்படிகளிலேறி உய்தற்குச் சமய ஒழுக்கம் அவசியம். இயமம் நியமம் முதலிய எட்டுப் படிகளின் இயல்புகளையும் பயனையும் நம் சாஸ்திரங்கள் இனிது விளக்குகின்றன. இயம நியமப் படிகளிற் கூறும்பொது ஒழுக்கங்களில் உறைந்து நின்றாலன்றி மேலடுக்கிலுள்ள சமய ஒழுக்கம் நிலைபெறாது.

*''ஒழுக்கம், அன்பு, அருள், ஆசாரம், உபசாரம், உறவு, சீலம்,*
*வழுக்கிலாத் தவம், தானங்கள், வந்தித்தல், வணங்கல்,*
*வாய்மை,*
*அழுக்கிலாத் துறவு, அடக்கம், அறிவொடு அர்ச்சித்த லாதி*
*இழுக்கிலா அறங்களானால் இரங்குவான் பணி அறங்கள்''*

**–சிவஞான சித்தியர்**

''ஒழுக்க முதலிய இப்பதினாறும் மற்றும் அவை போல்வனவுமாகிய நன்மைகள் ஒருவனுக்கு உளவாயின், இரங்குவானது பணியாகிய அம்முயற்சி அறமாய் முடியும்'' (சிவஞான சுவாமிகள்)

ஒரு சாதகன் இப்பொது ஒழுக்கங்களை வளர்த்துக் கொண்டு சிறப்பொழுக்கமாகிய சமய ஒழுக்கத்தையும் மேற்கொண்டு, ''மனமது நினைய, வாக்கு வழுத்த, மந்திரங்கள் சொல்ல, இனமலர் கையில்கொண்டு, அங்கு இச்சித்த தெய்வம் போற்றி, சினமுதல் அகற்றி வாழும்'' செயலாகிய அறத்தையும் பெருக்கி வருவானாகில், அவன் விரும்பி வணங்கும்தெய்வத்தினிடமாகச் சிவபிரானே நின்று அச்செயலை ஏற்றுக் கொண்டு பயனளித்தருளுவன் என்றும் சைவ சமயம் கூறுகின்றது. சமய ஒழுக்கத்தின் நன்மையால் பொது ஒழுக்கம் நிலைகுலையாது உறுதிப்பட்டுவிடுகின்றது.

இப்படி நற்குணங்கள் நிலைபெறற்கும் சமய வாழ்க்கை தேவை. பெர்ட்ராண்டு ரஸ்ஸெல் போன்ற மேல்நாட்டுப் பேரறிஞர் போன்ற பலர்கூட இந்த உண்மையை உரைத்து வருகின்றனர்.

"A society cannot hold together, not to speak of its achieving any progress, if it rejects God forgets spiritual values and moves only in a labrinth of egotistic advantages which is more or less our condition now" என்று ஒருவர் எழுதியுள்ளார். அமெரிக்கப் பேராசிரியர் வில்லியம் ஜேம்ஸ் (William James) என்பவர் இந்து மதத்தைப் பற்றிக் கூறியதாக நம் நாட்டுப் பேரறிஞர் டாக்டர் சி.பி. இராமசுவாமி ஐயரவர்கள் பின்வரும் கருத்தைச் சென்னையில் நடந்த கூட்டமொன்றில் தெரிவித்தார் என்று பத்திரிகையொன்று (The Hindu) அறிவித்துள்ளது.

William James has observed that the basis and essentials of the Hindu culture lie in two facts or propositions, the first of them being that the visible world is part of a wider and more spiritual universe from which it drew its deep significance. The second idea is that the union or harmonious relation with that higher universe is the true end of human thinking and human life. Prayer or inner communion is the way and method by which this contact is established between the visible world and its continuity the spiritual universe.

இந்த உண்மையை, டாக்டர் ரோபெர்டோ அஸ்ஸாகி யோலி (Dr. Roberto Assagioli) என்னும் மனோ தத்துவப் பேராசிரியர், 20.11.60 'ஹிந்து' பத்திரிகையில் வெளியிட்டுள்ளார். அவர் கருத்துக்களில் இரண்டு கீழே தரப்படுகின்றன. இவையும் நாம் கருத்தூன்றிக் கவனிக்கத்தக்கவை.

"What interests me most is the dynamic psychology called psychosynthesis and its possibilities for bringing about by its 'conquest of inner space' a constructive solution to the acute crisis in which humanity is at present involved. This crisis has a chief cause: the growing imbalance between man's achievements and power in the external world and his inner lack of control of the psychological forces active and dormant in him...."

"The source of human drives is formed in inner realms of thought and feeling. Man's actions are determined by his conscious and unconscious valuation by inner realities and motive powers. From this follows the indisputable deduction that while doing all possible to alleviate physical ills and improve material conditions in the world, the necessary remedies of effective therapy are to be looked for, and applied from, the same inner regions of reality." The following is a brief summary of his views:

A new "art of living" *can be developed in the world if the wealth of* psycho-physiological and spiritual practices found in the various Yogas of India can be properly integrated with the western methods of *psychotherapy and psychological training*".

இவை போன்ற பேரறிஞர்கள் கூற்றுக்கள் எல்லாம், உண்மையான சமய ஒழுக்கலாறுகள்-சரியை, கிரியை யோக, ஞானப்படிகள்-அவசியமென்று உரைத்தற்கு உதவி செய்வனவாகும்.

இதுகாறும் கூறியதிலிருந்து சமயம் மனிதனின் முன்னேற்றத்திற்கு இன்றியமையாததென்பது புலனாகும். ஆனால் இச்சமயத்தை உள்ளீடற்ற புறவேடம், அறிவிற்குப் பொருந்தாத குருட்டு நம்பிக்கை, பொருளில் ஈடுபடாத புறச்சடங்கு முதலியவற்றைக் கொண்டது என்று தவறாக எண்ணிவிடக்கூடாது. சமயம் என்பது மனிதனுக்கு மெய்ப்பொருள் நாட்டத்தில் பேரூக்கத்தை எழுப்பி அநுபவத்தில் பரம்பொருளை அகத்தும் புறத்தும் தரிசிக்க உதவும் ஆற்றல் படைத்ததோர் அருட்சக்தியாகும். இந்திய நாட்டு உபஜனாதிபதியும், இன்றைய உலகில் உள்ள பெருஞ்சிந்தனையாளரும், தத்துவ ஞான நூல் வல்லாருள் ஒருவராய் உலகெங்கும் போற்றப்படுபவருமாகிய டாக்டர் இராதாகிருஷ்ணன் அவர்கள், "What intersts you most in the world today?" என்ற வினாவிற்கு அளித்துள்ள விடை (*Vide Hindu* Supplement p. 25.12.1960) பல்லாயிரவர் கருத்தைக் கவர்ந்திருக்கும் என்று நம்புகிறேன். "What interests me most is the apparent coming universalisation of religion - The aim of religion is to lift us from our momentary meaning less provincialism to the significance and status of the eternal to transform life's chaos and confusion into that pure and immortal essence which is the ideal possibility of human life It is not

true religion unless it ceases to be a traditional view and is a personal experience. The divinising of the life of man in the individual and the race is the dream of the great religions" என்றெல்லாம் அரிய பல உண்மைகளை அழகுற உரைக்கின்றார். எல்லாம் பரம்பொருளின் வியாபகத்துள்ளிருப்பனவே என்று அவர் கூறும்போது, ''எல்லாம் சிவனென நின்றாய் போற்றி'' என்பன போன்ற பல அருட்பாடற் பகுதிகளும், கடிதங்களின் தலைப்பில் பிள்ளையார் சுழி போட்டு அதன் கீழ் 'சிவமயம்' என்று எழுதும் பழக்கமும் நினைவிற்கு வருகின்றன. இயற்கையில் இறைவனைக் காண்டலும், சைவநெறிக் காட்சியே. ''அவனன்றி ஓரணுவும் அசையாது எனும் பெரிய ஆப்தர் மொழி''க்கு ஆனந்த நடராஜரது ஐந்தொழில் திருக்கூத்துத் திருக்கோலம் பெரியதோர் குறியாகும். பக்திஞான ஊற்றுமாகும்.

"The essence of devotion is the feeling of oneness with God.. God is love. In society where there is devotion to God, there will be the reign of Truth and Love" என்று ஆசாரியா வினோபா பாவே ஒரு பிரார்த்தனைக் கூட்டத்திற் பேசினார் என்று அறிகிறோம். ''அன்பே சிவம்'', ''எவ்வுயிரும் நீங்காதுறையும் இறை சிவன் என்று எவ்வுயிர்க்கும் அன்பா யிரு'' என்பன போன்ற பல வாசகங்கள் சைவ நூல்களிலும் உள. அவற்றின்படியே நாம் நடக்க முயலுவதும், நம்மைச் சுற்றியுள்ளாரையும் அவ்வாறே நடக்க அன்பு முறையில் ஊக்குவித்து உதவுவதும் நம்மனோர் கடமையாகும்.

நம் சமய நெறியின் இயல்பையும் நோக்கையும் அது நிறை வேற்றுவதற்காக அமைந்துள்ள குறிகளையும், அடையாளங்களை யும், கோயில்களையும் அவற்றிலுள்ள மூர்த்தங்களையும், நிகழ்ச்சிகளையும், தீட்சை அநுட்டானங்களையும் வழிபாடுகளையும் பொருளுணர்ச்சியுடன் போற்றி ஏற்று வாழ்க்கையில் கொண்டு வந்தால் நம் வாழ்க்கை விரைவில் மேன்மையுறும். நம் சமய நெறி பொது நலத்திற்கு மாறுபடாததாய் உதவி செய்வதாகவே அமையும்.

சமய நிலையும் சமயங்கடந்த மோன சமரச நிலையும் உடம்பாடாய்க் கொண்டுள்ள சைவ சமயம் பிற சமயங்களோடு நீதி திறம்பா நெறியில் ஒத்துழைக்கவும் செய்யும். இது எல்லாச் சமயங்கட்கும் தாயகமாயும் உள்ளதுதானே.

*''ஓது சமயங்கள் பொருள் உணரு நூல்கள்*
*ஒன்றேடொன் றொவ்வாமல் உளபலவும், இவற்றுள்*
*யாது சமயம்? பொருள்? நூல்? யாதிங்கு? என்னில்*
*இதுவாகும், அதுவல்ல தெனும்பிணக்க தின்றி,*

*நீதியினால் இவையெல்லாம் ஓரிடத்தே காண*
*நிற்பது யாது? அது சமயம் பொருள்நூல்,*
*ஆதலினால் இவையெல்லாம் அருமறை ஆகமத்தே*
*அடங்கியிடும் அவையிரண்டும் அரனடிக்கீழ் அடங்கும்"*

என்ற சித்தியார்த் திருவாக்கு, சைவ சமயம் பிற சமயங்களைத் தன்னோடு இணைத்துக் கொண்டு மதிக்கும் இயல்பை இனிது புலப்படுத்துகிறது.

விஞ்ஞான வளர்ச்சியின் பயன்களுள் ஒன்றாகப் பல நாட்டு மக்களும் பல வசதிகளுடன் வெகுவிரைவில் பிற நாடுகட்குச் சென்று அங்குற்றாரோடு பழக வாய்ப்பேற்பட்டிருப்பது அன்றாட அநுபவமாகியுள்ளது. சாதி, இனம், மொழி, சமயம் என்பவை மக்களை இனி இவை காரணமாகப் பிரிக்க வேண்டுவதில்லை. "யாதும் ஊரே யாவரும் கேளிர்" என்ற சங்கச் செய்யுளின்படி ஒத்துவாழ வசதி வாய்த்துள்ளது. இது ஏற்படுதற்கு முன்னமே பிற பெருஞ் சமயங்களிலும் இப்பரந்த நோக்கங்கள் கொண்ட பெரியோர் சிலர் இருந்தனர். நூறாண்டுகட்கு முன்னமே ஜோசெப் கோரஸ் (Joseph Gorres) என்னும் ஐரோப்பிய அறிஞர் ஒருவர் பின்வருமாறு எழுதியிருப்பதாக பிரெடெரிக் ஹெய்லர் (Dr. Fredric Heiler) என்னும் ஜெர்மானிய தத்துவப் பேராசிரியர் ஒருவர், தாமெழுதிய HOw can Christian and Non-Christian Religions Co-operate என்னும் நூலில் தெரிவிக்கின்றார்.

"One God head alone is at work in the Universe. One religion alone prevails in it, One worship, One fundamental natural order, One law, and One Bible in all; All prophets are One prophet; they have spoken on One common ground in One language though in different dialects. As the great civilisations of every kind are the same, the unfolding of One life, so are also the great mythical elements of the whole world the same and the whole religious genesis is a single growth, planted by the very Spirit of God, and nourished by him with the airs of heaven and the dews of earth, unfolding itself in joy throughout all ages" இதனை விளக்கு முகத்தால் இப்பேராசிரியர் கிறிஸ்து மதத்தையும் பிற மதங்களையும் பற்றிய நூல்களை ஆராய்வோர்க்கு அநேக ஒற்றுமைப்பாடுகள் புலனாகின்றன என்றும், கிறிஸ்துவக் கொள்கைகள், வழிபாட்டு முறைகள், அமைப்புகள், பலவும் பிறமதங்களிலிருந்து தோன்றியவை என்பதும் தெரியவரும் என்றும் கூறுகின்றார்.

இப்போது சமயப் பிணக்குகளிலும் மத மாற்றங்களிலும் பிற நாட்டு அறிஞர்கட்குள்ளும் வெறுப்பு வளர்ந்து வருகிறது. உலக

அரசாங்கம் ஏற்பட வேண்டும் என்று பலர் விரும்புவதுபோல், உலக சமயமும் ஒன்று தேவை என்று எண்ணத் தலைப்பட்டுள்ளனர். "Inter Religious League", "Union for the Study of Great Religions", "World Union" என்பன போன்ற சர்வ மத சங்கங்கள் ஏற்பட்டுள்ளன. நம்சைவமும் தன் தனிப் பண்புகளை இழக்காமலே பிற சமயங்களோடும் ஒத்துழைத்து, ''உலகெலாம் ஒன்று காதலித்து உள்ளமும் ஓங்கிட'' மன்றுளாரை வேண்டுதல் வேண்டும். இக்கருத்து நமக்குப் புதியதல்ல. பின்வரும் பிரமாண வாசகங்கள் இதற்குச் சான்று பகரும்.

*ஒன்றே குலமும் ஒருவனே தேவனும்*
*ஒன்றதே பேரூர் வழியாற தற்குள*
*நன்றிது தீதிது என்றுரை மாந்தர்கள்*
*குன்று குரைத்தெழும் நாயை ஒத்தாரே.*

- திருமந்திரம்

*''சமய வாதிகள் தத்தம் மதங்களே*
*அமைவ தாக அரற்றி மலைந்தனர்''*

- திருவாசகம்

*''ஏதுக்களாலும் எடுத்த மொழியாலும் மிக்குச்*
*சோதிக்க வேண்டா சுடர்விட்டுளன் எங்கள் சோதி''*

- சம்பந்தர் தேவாரம்

*''விரிவிலா அறிவினார்கள் வேறொரு சமயஞ்செய்தே*
*எரிவினாற் சொன்னாரேனும் எம்பிராற் கேற்றதாகும்''*

*''....ஆறு சமயத் தவரவரைத்*
*தேற்றுந் தகையன; தேறிய தொண்டரைச் செந்நெறிக்கே*
*ஏற்றுந் தகையன இன்னம்பரான்றன் இணையடியே''*

- திருநாவுக்கரசு தேவாரம்

*''சுருதி வானவனாம், திருநெடு மாலாம்;*
*சுந்தர விசும்பின் இந்தி ரனாம்*
*பருதி வானவனாம், படர்சடை முக்கட்*
*பகவனாம், அகவுயிர்க் கமுதாம்*
*எருதுவா கனனுமாம், எயில்கள் மூன்றெரித்த*
*ஏறுசே வகனுமாம் பின்னும்*
*கருதுவார் கருதும் உருவமாம், கங்கை*
*கொண்ட சோளேச்சுரத் தானே''*

-கருவூர்த் தேவர்

*"ஒன்றென்றிரு தெய்வம் உண்டென்றிரு"*

- பட்டினத்தார்

*"வருண நெறிசார் மதத்தம் மதமெய்ப்*
*பொருளுணர் வூடிறும் உந்தீபற*
*பொன்றாத தொன்றேயொன் றுந்தீபற.*

*தோல்வியும் வெற்றியும் கொள்மதங்கட் கெலாம்*
*காலவே தத்தி னுண்டு உந்தீபற*
*கருத்தன் செயலதன் றுந்தீபற.*

*வாதிகள் தங்களுக்கல்லால் மதங்களுக்கு*
*ஓதார் வலியின்மை உந்தீபற*
*ஓதி உணர்ந்தோரென் றுந்தீபற"*

- சாந்தலிங்கர்

*"விண்ணவர் இந்திரன் முதலோர்....*
*செப்பரிய சமயநெறி...*
*இயல்பென்றும் திரியாமல்....*
*அந்தோ! ஈததி சயம்...*
*சன்மார்க்க ஞான மதின்பொருளும்...*

எனத் தொடங்கும் ஐந்து பாடல்களில் (ஆகார புவனம் - சிதம்பர ரகசியம் என்னும் பகுதியிலுள்ளவை) சைவ மாண்பை உள்ளவாறு உரைத்துப் பின், "இப்பரிபக்கம் சமயமுமாய் அல்லவாகி, யாதுசமயமும் வணங்கும் இயல்பதாகி", "மௌனமோலி அயர்வாய்ச் சென்னியில் வைத்து ராஜாங்கத்தில் அமர்ந்து வைதீக சைவம் அழகிதந்தோ!" என்று சமரச ஞானியாம் தாயுமானார் வியந்து பாடுவதன் பொருத்தம் போற்றத் தக்கதாம்.

மேற்குறித்த பெரும் பகுதியில் இறங்குமுன் எல்லாப் பெரு நலங்களையும் நோக்கங்களையும் தன்பால் முன்னமே கொண்டுள்ள நம் பண்டைச் சைவ சமயத்தின் தத்துவங்களையும் ஒழுகலாற்றையும் தெளிவாய் உணர்ந்து கொள்ளச் சைவர்களிற் கற்றாரனைவரும் முற்பட வேண்டும். கல்வி வல்லவர்களாயில்லாத நம் சைவ சகோதர சகோதரிகள் யாவரும் அவ்வாறு செய்ய ஊக்கமளிக்க வேண்டும். உதவி புரிய வேண்டும்.

இப்படி நம் சமுதாயமும் பிற சமுதாயங்களும் ஒழுக்கம், புத்தி, ஞானம், தியாகத்தொண்டு இவற்றில் முன்னேற்றம் அடைவதற்கு

எண்ணில பல தொண்டர்கள் தேவை. இத் தொண்டினை மேற்கொள்வோர்கட்கு வேண்டிய முக்கிய தகுதிகளுள் முதன்மை யானது, இவர்களும் அந்நலங்களைக் குறிப்பிடத்தக்க அளவாவது பெற்றிருக்க வேண்டுவது. தம்மை ஆன்மீகத் துறையில் சிறப் புள்ளவர்களாக ஆக்கிக் கொள்வதோடு தம் குடும்பத்தாரையும் உறவினரையும் ஊராரையும் அந்நெறியில் விருப்பங் கொள்பவராக் கவும் விரும்பி இயன்ற அளவு தியாகத் தொண்டாற்ற வேண்டும். பின்பு இதே மனப்பான்மையும் விரிந்த நோக்கமும் உடைய பிற மதத் தொண்டரோடும் கலந்து பொதுநலத் தொண்டு தெய்வ நம்பிக்கை உணர்வுடன் ஆற்ற வேண்டும். ஆலயங்களும், மடங்களும், நன்றாகப் பயிற்சி பெற்ற சமய போதகர்களைக் கொண்டு ஒழுங்கான முறையில் சமயப் பிரசாரம் நாடெங்கும் செய்ய வேண்டும்.

சைவர்கள் தம் தகுதிக்கேற்ற சிவ தீக்ஷையைத் தகுதி வாய்ந்த ஆசாரியர் மூலமாய்ப் பெற்றுக் கொண்டு அவர் உபதேசித்தபடி மனம் வாக்குக் காயங்களைச் சிவநெறியில் செலுத்தித் தூய்மை பெறவேண்டும். ஸ்ரீலஸ்ரீ ஆறுமுக நாவலரவர்கள் "தின நியமம்" என்னும் பழைய கட்டுரை ஒன்றைப் படித்தேன். அவர்களுடைய நியம முழுவதையும் பின்பற்றுதல் பெரும்பாலோர்க்கு இயலாது போகலாம். எனினும், அதை ஒரு குறிக்கோளாகக் கொண்டு இயன்ற அளவு அதனைப் பின்பற்றி, அதில் முன்னேற்றம் தரும்படி திருவருளை வேண்டி முயன்று வருதல் கடன்.

ஆலய வழிபாட்டையும், செவ்விய முறையில் செய்து கொண்டு அடியார் கூட்டத்திற் கலந்து கொள்ளல், தல யாத்திரை செய்தல் போன்ற பதிபுண்ணியச் செயல்களை வளர்த்து வர வேண்டும்.

சிவபக்தி யிருக்குமிடத்துச் சீவ கருணையும் இருக்க வேண்டுமாதலால் இப்பசு புண்ணியச் செயலைத் தனித்தும் சங்கத்திற் சேர்ந்தும் செய்யத் திட்டங்கள் வகுத்துக் கொண்டு நம்மால் இயன்ற அறங்களை அன்புடனும் அடக்கத்துடனும் செய்து வருதல் அவசியம்.

வார வழிபாட்டுச் சங்கங்கள் எல்லா ஊர்களின் முக்கியப் பகுதிகளிலெல்லாம், ஆலயங்களிலோ சமய சபைகளிலோ முறை பிறழாது நிகழ்ந்து வருவதற்கு வேண்டிய உதவிகளெல்லாம் செய்து வருதல் பெரும் புண்ணியமாம். கூட்டுப் பிரார்த்தனையினால் பெரும் பயன் விளையும் என்பதைப் பல இடங்களிலும் உணர்த்தி வருதல்

வேண்டும். தமது வருவாயுள் ஒரு சிறு பகுதியைப் புண்ணிய காரியங்களுக்கென ஒதுக்கி வைத்து, நன் முறையில் அதனை அளித்து வர வேண்டும். இதனோடு நாள்தோறும் வீட்டில் உலையில் அரிசி போடுமுன் வீட்டரசியார் ஒரு பிடி அரிசியை ''இது அடியவர்க்கும் ஏழைகட்கும் உதவுவதாக'' என்னும் ஓர் எண்ணத்துடன் ஒரு கலயத்தில் இட்டுவர வேண்டும். இதனோடு ஒவ்வொரு குடும்பத்திலும் வாரத்திற்கொருமுறை சமயக் காணிக்கையாகச் சிறு தொகையை அன்புடன் உண்டியில் இட்டுவரும் வழக்கமும் ஏற்பட வேண்டும். இப்படிச் சேரும் அரிசியையும் சமயக் காணிக்கையையும் சமய சங்கம் ஒன்றிடத்து ஒப்படைத்துச் சமய குரவர் திருநட்சத்திர நாட்கள், பிற நாயன்மார்கள் நாட்கள் போன்ற நல்ல நாட்களில் ஏழைகட்கும் அடியவர்கட்கும் நன்முறையில் பயன்படுத்த வழி செய்ய வேண்டும். சிற்றூர்களில் சமயப் பிரசாரத்திற்கும் பயன்படுத்தலாம்.

சமயநூல்களை முறைப்படிப் பாடங்கேட்க வசதியுள்ளவர்கள் அங்ஙனம் செய்ய வேண்டும். இவ் வகுப்புகளை நடத்தவல்ல புலவர்களையும் தமிழ்வல்ல பிற புலவர்களையும் பலவகையிலும் ஆதரித்து வர வேண்டும்.

நமது தாய்மொழியிலுள்ள சிறந்த சமய நூல்களையும் இலக்கியங்களையும் பாரத நாட்டுப் பிறமொழிகளிலும் அடுத்துள்ள நாட்டு மொழிகளிலும், உலக மொழியாம் ஆங்கிலத்திலும் மொழி பெயர்த்து நூல் வடிவிலும் பத்திரிகைகளில் வரும் கட்டுரை வடிவிலும் அடிக்கடி வெளியிட்டு வரச் சமய சங்கங்கள் முற்பட வேண்டும். சைவ சமய சங்கங்கள் ஒவ்வொரு ஊரிலும் இருத்தல் விரும்பத்தக்கதே. இவைகள் தலைமைச் சபை ஒன்றோடு இணைந்து நின்று அதற்கும் ஆக்கம் அளித்தல் அவசியம். ஜனநாயக ஆட்சி நடக்கும் நாடுகளில் பலர் ஒன்றுகூடி ஆராய்ந்து ஏற்றமுறையில் அறிவிக்கும் கருத்துக்குத்தான் அரசாங்கம் அதிக மதிப்பளிக்கும் என்பது தேற்றம். இம்முறையில் சைவ சித்தாந்த மகா சமாஜம் போதிய வலிவு பெறாதிருப்பது வருந்தத் தக்கதே. பெருந் தொண்டுகள் பல புரிந்துள்ளதும், தமிழ்நாட்டின் தலைமைச் சைவ சபையாயிருப்பது மாகிய இச் சைவ சித்தாந்த மகா சமாஜத்திற்கு ஆயிரம் பேர் தானும் அங்கத்தினர்களாகச் சேரவில்லையே என்று எண்ணும்போது நெஞ்சம் புண்ணாகின்றது. இந்தக் குறையை இறைவன் எப்போது நீக்குவானோ அறியேன்!

சைவ சமயப் பிரசாரத்தைப் பல அடுக்குகளிலும் செய்தல் அவசியம். சிறப்பு வகையில் ஏழை மக்களின் நலங் கருதி நாமே வலியச் சென்று அவர்கட்கு விளங்கும் வகையில் அவர்களும் நன்னெறி மேற்கொள்ள அவாக்கொள்ளச் செய்யும் முறையில் இசைத்தட்டு முதலிய அவசியமான உதவிகளைக் கொண்டு சென்று பிரசாரம் செய்ய வேண்டும். எல்லோரும் சேர்ந்து பாடிய பின்பு அவர்கட்குப் பிரசாத விநியோகம் செய்வதும் நல்லது. துண்டுப் பிரசுரங்களை இலவசமாக அளிப்பதும் அடக்கவிலைச் சிறு நூல்களை வெளியிடுவதும் இன்னோரன்ன நற்றொண்டுகளைப் பெரிய அளவில் புரிவதும் நம் சைவ சபைகளின் கடமையாகும். சமயப் பாதுகாப்புக்கும் வளர்ச்சிக்குமாக உங்கள் நாட்டில் கையாளப் பெறும் நன் முறைகளை இந்தியாவிலிருந்து வந்திருக்கும் அன்பர்கள் தெரிந்து கொண்டு அவைகளைத் தங்களூர்களில் கையாளவும் எண்ணலாம்.

இன்னோரன்ன பிற பல தொண்டுகளையும் சைவ நன் மக்கள் மேன்மேல் வளர்த்துவந்து, மேல்நிலை அடைய அம்மையப்பர் அருள் புரிவாராக! இமயத்துச்சியில் தியான கோபுரத்தில் அனைத்துயிர்க்கும் அப்பராகிய தக்ஷிணாமூர்த்தி எழுந்தருளியுள்ளார். குமரி முனையில் நீலத் திரைக்கடல் ஓரத்திலே நின்று நம்மன்னை தவக்கோலத்தில் காட்சியளிக்கின்றாள். இவர்கள் குழந்தைகளாகிய நம் எல்லோருக்கும் தவமும் தியானமும் நம் வாழ்க்கையைப் புனிதப்படுத்தும் குறிக்கோள்களாய் மன்னுவனவாக! இந்த அருந்தவ நாயகியே காஞ்சி அறம்வளர் செல்வியுமாக எழுந்தருளி யிருப்பதை நம் பெண்ணினம் சிறப்பு வகையில் ''அண்ணலார் தமை அர்ச்சனை புரிய ஆதரித்தாள், பெண்ணில் நல்லவளாயின பெருந்தவக் கொழுந்து'' என்ற உண்மையைத் தன் உள்ளத்திற் பதித்துப் பெரியோர் மதிப்பிற்குரிய புனித வாழ்க்கையை நடத்தி உயர்வதாக.

*''போற்றி அருளுகநின் ஆதியாம் பாதமலர்*
*போற்றி அருளுகநின் அந்தமாம் செந்தளிர்கள்*
*போற்றி எல்லா உயிர்க்கும் தோற்றமாம் பொற்பாதம்*
*போற்றி எல்லா உயிர்க்கும் போகமாம் பூங்கழல்கள்*
*போற்றி எல்லா உயிர்க்கும் ஈறாம் இணையடிகள்*
*போற்றி மால்நான்முகனும் காணாத புண்டரிகம்*
*போற்றியாம் உய்ய ஆட்கொண் டருளும் பொன்மலர்கள்*
*போற்றியாம் மார்கழிநீர் ஆடேலோர் எம்பாவாய்!''*

*''வான்முகில் வழாது பெய்க! மலிவளம் சுரக்க மன்னன்*
*கோன்முறை அரசு செய்க! குறைவிலா துயிர்கள் வாழ்க*
*நான்மறை அறங்கள் ஓங்க! நற்றவம் வேள்வி மல்க*
*மேன்மைகொள் சைவநீதி விளங்குக உலகம் எல்லாம்!*

திருச்சிற்றம்பலம்

# திருமதி க.ர. ஆதிலட்சுமி அம்மையார்

(55ஆம் ஆண்டு விழா - 1960 - சைவ மங்கையர் மாநாடு)

*''அங்க த்துறு நோய்களடி யார்மேலாழித் தருளி*
*வங்கம்மலி கின்றகடல் மாதோட்டநன் னகரில்*
*பங்கஞ்செய்த மடவாளொடு பாலாவியின் கரைமேல்*
*தெங்கம்பொழில் சூழ்ந்ததிருக் கேதீச்சரத் தானே''*

சிவநேயச் செல்வர்களே, செல்வியர்களே! உங்கள் அனைவருக்கும் என் பணிவான வணக்கம்.

## ஈழமும் தேவாரமும்

பூழியர்கோன் வெப்பொழித்த காழிவேந்தர் திருஞான சம்பந்தராலும், தேசமுய்யத் திருத் தொண்டத் தொகையருளிய சுந்தரமூர்த்தி நாயனாராலும் பாடப்பெற்ற சிறப்புடைய இத் திருக்கேதீச்சரம் ஈழத்தைத் தமிழ்நாட்டுடன் இணைத்துப் பிணைத்து விட்டது. இத்தலத்தில் நடைபெறும் கும்பாபிஷேக நிகழ்ச்சியுடன் சென்னைச் சைவ சித்தாந்த மகா சமாஜத்தை இங்கழைத்து அதன் 55ஆம் ஆண்டு நிறைவு விழாவினையும் நடைபெறச் செய்தது மிகவும் பொருத்தமானதே.

## ஈழமும் சமாஜமும்

ஈழநாட்டிற்கும் சமாஜத்திற்கும் வெகுகாலமாக நெருங்கிய தொடர்புண்டு. சமாஜத்தில் முதலாவது ஆண்டு விழாத் தலைவர் ஈழநாட்டுத் தவத் தோன்றலாகிய சர் பொன்னம்பலம் இராமநாதன் அவர்கள். பின்னிட்டுச் சில ஆண்டுகள் சுவாமி விபுலானந்தர் முதலான ஈழத்துப் பெரியார்கள் தலைமையில் நடைபெற்றுள்ளன. பொன்விழா, பெரியார் திரு. சு. நடேச பிள்ளையவர்கள் தலைமையிலே 1955ஆம் ஆண்டு தில்லையில் நடைபெற்றது. ஆண்டுதோறும் கூடும் சைவசித்தாந்த மாநாடுகளில் ஈழத்துப்

பெருமக்கள் பலரும் சிலருமாகத் தவறாமல் வந்து கலந்து கொள்வ தோடு, ஆயுள் அங்கத்தினராகப் பலரும், ஆண்டுச் சந்தாதாரராகப் பலருமாக, சமாஜ வெளியீடுகளை, ஆயிரக்கணக்கில் வாங்கி ஆதரவளித்து வருவது, சமாஜத் தொடர்பை நன்கு விளக்கு கின்றது.

## சமாஜமும் குடும்பத் தொடர்பும் :

சென்னைச் சைவ சித்தாந்த மகா சமாஜத்தின் தொடர்பு எங்கள் குடும்பத்திற்குச் சுமார் 20 ஆண்டுகளாக வாய்த்துள்ளது. எனது கணவனார் சில ஆண்டுகள் செயலாளராகப் பணிபுரிந்துள்ளார். எனது மூத்த மகள் காமாட்சி, மாதர் கூட்டத்தில் இருமுறை தலைமை வகித்தும் பலமுறை சைவர் மாநாட்டில் பேசியும் உள்ளார். இளைய மகள் டாக்டர் சேதுவும் சீர்காழி மாநாட்டு மாதர் கூட்டத்திற் பேசியுள்ளார். ஆண்டுக் கூட்டம் நடைபெறும் இடங்கள்தோறும் குடும்பத்துடன் சென்று கலந்து கொள்வதும் உண்டு. இவைகளுக் கெல்லாம் காரணம் சமாஜத்தார் தொடர்ந்து காட்டிவரும்அன்புதான். முன்பு ஒருமுறை மாதர் மாநாட்டுத் தலைமைப் பொறுப்பை எனக்களித்த சமாஜத்தார் இவ்வாண்டும் அவ்வாய்ப்பைத் தந்திருப்பது இறைவன் திருவருளும் சமாஜத்தாரின் அன்புமேயாகும். சமாஜத்து அன்பர்களுக்கும் வரவேற்புக் கழகத்தார்க்கும் எனது உளங்கனிந்த நன்றியைத் தெரிவித்துக் கொள்ளுகிறேன்.

## சமாஜ வளர்ச்சி

சமாஜம் முதலிற் பல ஆண்டுகள் ஆடவர், பெண்டிர் இரு பாலார்க்கும் பொதுவாக ஆண்டு விழாக்களை நடத்தி வந்தது. பின்னிட்டு மங்கையர்க்கென்றே தனி மாநாடு ஒன்றையும், அதன் பின்னர் இளைஞர் மாநாடு ஒன்றையும் இணைத்து மூன்று பிரிவுகளாக நடத்தி வருகின்றது. சைவர் மாநாட்டிற் பொதுவாகச் சைவ சமயத்தின் தொன்மை, பெருமை, முப்பொருளுண்மை முதலியவற்றில் நன்கு பயின்று முதிர்ச்சியுற்ற பெரியார்கள், அவற்றையெல்லாம் எடுத்து விரிவாகவும் சிறப்பாகவும் பேசி வருகின்றனர். எனவே, மாதர் மாநாட்டில் மாதர்தம் வாழ்க்கையின் சமயத்துறையிற் செய்ய வேண்டிய கடமைகளைப் பற்றி மட்டும் யானறிந்தமட்டிற் சிலவற்றைக் கூற விரும்புகிறேன்.

## தங்கருமம்

உலகில் மக்களாய்ப் பிறந்த ஒவ்வொருவருக்கும், தத்தம் நிலைக்கேற்ற கடமைகள் உண்டு. ஒரு குடும்பத்திலேயே,

தந்தைக்குரிய கடமை, தாய்க்குரிய கடமை, அவர்தம் மக்கட்குரிய கடமை என்று அவரவர்க்குரிய வெவ்வேறு திறப்பட்ட கடமை களுண்டு. இக்கடமையை வடமொழியில் சுதர்மம் என்று கூறுவர். திருக்குறள் ஆசிரியர் ''தங்கருமம்'' என்கிறார். ''தங்கருமம் செய்வார் தவம் செய்வார்'' என்பது அவர்தம் பொன்மொழி.

## தாயின் கடமை

குடும்பத்தில் தந்தையை விடத் தாய்க்குத்தான் கடமைகள் அதிகம். அக் கடமைகளைச் சரிவர ஒழுங்காகச் செய்வதே அவருக்குத் தவமாகிறது. திருவள்ளுவர் வகுத்த வாழ்க்கை நூலாகிய திருக்குறளில் இல்லற இயலானது, இல்வாழ்க்கை, வாழ்க்கைத் துணை நலம், மக்கட்பேறு என்ற அதிகாரங்களுடன் தொடங்கு கின்றது. அவற்றுள் பெண்களுக்கு இன்றியமையாப் பண்புகளான கற்பு, கொண்டான் வருவாய்க்கேற்பச் சிக்கனமாய் வாழ்க்கை நடத்துதல், பிறந்த, புகுந்த குடும்பங்களின் புகழ் காத்தல் ஆகியவற்றைப் பின்வருங் குறட்பாக்களால் வள்ளுவர் விளக்கு கிறார்.

1. *''மனைத்தக்க மாண்புடைய ளாகித்தற் கொண்டான்*
   *வளத்தக்காள் வாழ்க்கைத் துணை''*

2. *''தற்காத்துத் தற்கொண்டாற் பேணித் தகைசான்ற*
   *சொற்காத்துச் சோர்விலாள் பெண்.''*

மக்களைப் பெற்று அவர்களைப் பண்புநலஞ் சான்றவர்களாகச் செய்வது தாயின் முதற் கடமையாகும். தத்தம் பொருட் செல்வங்களாகிய மக்களை எல்லாப் பண்புகளும் நிறையவனாக்கிக் கண்டு மகிழ்தல் தாய்க்கு இயல்பாயினும், அவனைச் சான்றோன் எனத் தக்கார் சொல்லக்கேட்டு உவத்தலே சாலச் சிறந்ததாகும். இதனை வள்ளுவனார்,

*''ஈன்ற பொழுதிற் பெரிதுவக்குந் தன்மகனைச்*
*சான்றோன் எனக்கேட்ட தாய்''*

என்ற குறள் மூலம் எடுத்துக் காட்டுகின்றார்.

## சங்காலத் தாய்

சங்க நூலாகிய புறநானூற்றில் தமிழ்த் தாயொருத்தி ''ஈன்று புறந்தருதல் என்றலைக் கடனே'' என்றாள். புறந்தருதல் -

காப்பாற்றுதல். உடலை வளர்த்துக் காப்பாற்றுவதோடு மட்டும் நின்றுவிடாமல், ஒழுக்கத்தையும் உடன் வளர்த்துக் காப்பதே சாலச் சிறந்ததாகும்.

## வாழ்விற் சமயம்

நம் நாட்டிற் சமயம் ஒழுக்கத்தினின்றும் இணைபிரியாத தொடர்புடையது. வாழ்க்கையே சமயம் - சமயமே வாழ்க்கை. அன்றாட வாழ்க்கையிலும், வாழ்க்கை நிகழ்ச்சிகளிலும், மணிக்கோவையின் ஊடே செல்லும் நூலைப்போல உயிர் நாடியாக விளங்குவதும் இச்சமய உணர்ச்சியே யாகும். இத்தகைய சமயத்தோடு ஒன்றிய வாழ்க்கையிற் பெண்களுக்கும் பெரும் பங்குண்டு. சிவனடியார்களின் வரலாறான திருத்தொண்டர் புராணத்துள் 63 நாயன்மார்களின் சிறப்புக்களும் கூறப்பெற்ற தென்றால், அவர்தம் உயரிய வாழ்க்கைக் குறிக்கோள்களை யெல்லாம் வெற்றியுற நிறைவேற்றப் பெருந்துணையாய் நின்ற மகளிரை நாம் மறத்தல் முடியாது. இதைச் சேக்கிழாரும் குறிக்க மறக்கவில்லை. இல்லாள் என்ற பெயருக்கேற்பவே எண்ணிறந்த பெரும்பாலான மகளிர், வெளி வாழ்க்கையில் இடம்பெறாது வீட்டில் இருந்தவண்ணமே, அமைதியான முறையில் தொண்டாற்றுவதே இயல்பு. சைவ மகளிருள்ளும் இங்கொரு காரைக்காலம்மையார் அங்கொரு மங்கையர்க்கரசியார் தவிர ஏனைய மகளிரெல்லாம் தத்தம் கணவன்மாருக்குப் பின்னணியிலிருந்தவாறே சமயத்தைப் பேணியது போற்றற்குரியது. இந் நிலையினைச் சேக்கிழார் சிறுத் தொண்டநாயனாரது மனைவியின் பெருமையைக் குறிக்கவந்தவிடத்து ''இல்லறத்தின் வேரனையார்'' எனக் கூறும் உவமை உன்னி உன்னித் தெளியற்பாலது. பரந்த மரந்தான் கட்புலனுக்குத் தோன்றுமேயன்றி, அதனைத் தாங்கும் அதே அளவினதாய வேர் மண்ணில் மறைந்து கிடக்கின்றது. அத்தகையோரிற் சிலரைக் காண்போம்.

கணவன் மனைவியர்க்குள்ளே மிகுந்த கருத்து வேறுபாடு இருந்தும் அது அண்டை அயலாருக்குத் தெரியா வண்ணம் திருநீலகண்டர் மனைவியார் வாழ்க்கை நடத்தினார் என்பதைச் சேக்கிழார் திருநீலகண்டர் புராணத்துள் ''அயலறியாமை வாழ்ந்தார்'' என்று குறிப்பிடுகின்றார். விருந்தோம்பலுக்கு இலக்காய் நின்ற இளையான் குடிமாறனார் மனைவியார் வறுமையின் உச்ச நிலையிலும் கொண்டவற்றைக் கொண்டு "கைம்மை வினையினால்

வேறு வேறு கறியமுதாக்கி'' நள்ளிருளில் வந்த விருந்தை ஓம்பியவர் என்று அம்மையாரது விருந்தோம்பலைப் பாராட்டுகிறார். முதற் குலமாகிய அந்தணர் குலத்திற் பிறந்தும் கடைக்குலத் துதித்த வேளாளராம் அப்பர் பெருமானைத் தெய்வமென்றே கொண் டொழுகிய அப்பூதியடிகளின் மனைவியாரது விருந்தோம்பலைச் சேக்கிழார் கூறும் இலைபோட்டுப் பரிமாறும் விதத்தைக் கூட ''ஈர்வாய் வலம் வைத்து'' என்ற சொற்றொடர், மகளிர் சேக்கிழாரிடங் கற்றறியக்கூடிய அளவில் அமைந்துள்ளது.

இவ்வாறாகப் பின்னணியிலிருந்தே தொண்டாற்றும் பெண்கள் சிற்சில சமயங்களிற் சூழ்நிலை காரணமாக முன்னணிக்கு வரவேண்டிய அவசியமும் ஏற்படுகின்றது. அத்தகையோருள் இருவர் காரைக்காலம்மையார், மங்கையர்க்கரசியார் ஆவர். இவ்விரு வருள்ளும், காரைக்காலம்மையாரை விருந்தோம்பலின் கண் சேக்கிழார் அறிமுகப்படுத்துகின்ற இடம் சமையலறையேயாகும். ''கறியமுதங்குத வாதே திருவமுது கைகூட'' என்ற அடியால் சோறு சமைத்து விட்டுக் கறிகளுக்கான காய்களை நறுக்கும் தருணம் என்பது குறிப்பாக உணர்த்தப்படுகின்றது. இப்படியாக அறையிற் கிடந்த அவ்வம்மையார் அம்பலத்திற்கு வரக் காரணம் அவரது பிற்கால வாழ்க்கையில் ஏற்பட்ட சில மாறுதல்களேயாகும். அத்துடன் அவரது வாழ்க்கை அடியோடு மாறி இல்வாழ்க்கைக்குரிய ஊனுடலையே வெறுத்தொதுக்கி, இறைவன் பால் வேண்டிப் பெற்ற பேய் வடிவத்துடன் திருவாலங்காடு முதலிய திருத்தலங்களுக்குச் சென்று இறைவனை வழிபட்டு சைவ சமயக் கருத்துக்கள் ததும்பி நிற்கும் ''அற்புதத் திருவந்தாதி''யையும், ''திருவாலங்காட்டு மூத்த திருப்பதிகம்'', ''திருவிரட்டை மணிமாலை'' முதலிய அரிய நூல்களையுஞ் செய்தருளினார். இத்தகைய மாற்றம் அவருக்கு அமையத் துணையாய் நின்றது அவரது பிறப்பும் வளர்ச்சியுமேயாகும். இதன் சிறப்பை, அம்மையின் வாக்கினாலேயே அறியலாம். 'அற்புதத் திருவந்தாதி'யின் முதற் பாட்டு

*''பிறந்து மொழிபயின்ற பின்னெல்லாம் காதல்*
*சிறந்துநின் சேவடியே சேர்ந்தேன் - நிறந்திகழும்*
*மைஞ்ஞான்ற கண்டத்து வானோர் பெருமானே*
*எஞ்ஞான்று தீர்ப்ப திடர்.''*

துன்பம் வந்தபோது மெய்யடியார்களும் சிறிது தளர்வதுண்டு. ஆனால் இத்தகைய துன்பங்கள் தாம் ஆன்மாவைப் பற்றி நிற்கும் மாசுகளை நீக்கிப் பொன்போல் விளங்கச் செய்யும் நெருப்புப்

போன்றது என்பதைத் திருவள்ளுவர் "தவம்" என்ற அதிகாரத்தில் விளக்குகிறார்.

*"சுடச்சுடரும் பொன்போல் ஒளிவிடும் துன்பம்*
*சுடச்சுட நோற்கிற் பவர்க்கு."*

தாங்கொணாத் துயருற்ற போதும் மெய்யடியவர் தளர்ச்சி யடைவதில்லை என்ற அரிய கருத்தை அம்மையார் அவ்வற்புதத் திருவந்தாதியின் அடுத்த பாட்டிலேயே உணர்த்துகின்றார்.

*"இடர்களையா ரேனும் எமக்கிரங்கா ரேனும்*
*படரு நெறிபணியா ரேனும் - சுடருருவில்*
*என்பறாக் கோலத்து எரியாடும் எம்மானார்க்கு*
*அன்பறாது என்னெஞ் சவர்க்கு."*

மெய்யுணர்வு பெற்றோர் சமயப் பூசல்களிலும் இறைவன் உறைவிடம் பற்றியும் உள்ள சர்ச்சைகளிலும் இறங்க மாட்டார்கள். இவ்வரிய அனுபவம் அம்மையார் பெற்றிருந்தாரென்பதை மற்றொரு செய்யுள் உணர்த்துகின்றது.

*"வானத்தா னென்பாரும் என்கமற் றும்பர்கோன்*
*தானத்தா னென்பாருந் தாமென்க - ஞானத்தான்*
*முன்நஞ்சத் தாலிருண்ட மொய்யொளிசேர் கண்டத்தான்*
*என்னெஞ்சத் தான்என்பன் யான்"*

என்று தன் அரிய கருத்தை அறுதியிட்டு உறுதியாய்க் கூறுகின்றார். உலகெங்கணும் இக்காலத்தே பிணக்கும் பூசலும் பகையும் மலிந்து இருள்மயமாகக் கிடப்பதற்குக் காரணமே அருளின்மைதான். உலகச் சிக்கல்கள் எல்லாம் நீங்கி அமைதி நிலவ வேண்டுமெனில் நாடுகளிடையேயும் நாட்டுத் தலைவர்களிடையேயும் பகைநீங்கி அருள் மலர வேண்டும். அம்மையார் அருளிய பாட்டொன்றின் முதலடியே விளக்குகின்றது. இதனை,

*"அருளே உலகெலாம் ஆள்விப்பது"*

என்பது அமைதி விரும்பும் நாட்டிற்கும் வீட்டிற்கும் நல்லதொரு மந்திரமாய் விளங்குகின்றது. அற்புதத் திருவந்தாதி சைவ அன்பர்கள் அனைவரும் படித்துச் சிந்தித்து இன்புற வேண்டிய நூலாகும்.

இனி, அடுத்து மங்கையர்க்கரசியாரைக் காண்போம். பாண்டிமாதேவியாம் மங்கையர்க்கரசியாரும் தங்கணவராகிய மன்னர் சைவராய் இருந்திருப்பின் அவரும் கணவருடன் ஆலயம் சென்று

அரனைத் தொழுது அடியவர்க்குதவி செய்தல் முதலிய பணியி லீடுபட்டுப் பின்னணியிலேயே நின்றிருப்பார். பெரிய புராணத்திலும் தனக்கெனத் தனிப் புராணம் பெற்றிருக்கமாட்டார். தன் குலத்திற்கும் சமயத்திற்கும் தமிழ்நாட்டிற்கும் நேர்ந்த இடையூற்றைப் போக்க வேண்டிய அவசியம் நேர்ந்துவிட்டது. நாட்டிற்குரிய குறையைத் தீர்க்க முன்னணிக்கு வந்தார். வெற்றியும் கண்டார். சேக்கிழார் அம்மையாரை "மங்கையர்க்குத் தனியரசி எங்கள் தெய்வம்" என்று போற்றி அவர்கள் தங்குலப் பழியைத் தீர்த்துக் கொண்டதைத் "தென்னர்குலப் பழிதீர்த்த தெய்வப் பாவை" என்ற தொடராலும் "அரிய பெரிய தமிழ்ப் பண்பாடுகள் நீங்கி இடருற்றுக் கிடந்த" தமிழ்நாட்டின் இருளைக் களைந்தமையை "இருந் தமிழ் நாடுற்ற இடர்நீக்கி" என்ற தொடராலும், ஞான சம்பந்தப் பெருந்தகையின் உதவிகொண்டு அருள் ஒளி வீசும் திருநீற்றைப் பரப்பினார்கள் என்பதை, "எங்கள் பிரான் சண்பையர்கோன் அருளினாலே", "பொங்கொளி வெண் திருநீறு பரப்பினாரை" என்ற தொடர் களினாலும் வாயார வாழ்த்துகின்றார்.

இவ்வாறாகப் பின்னணியிலிருந்து பலரும் முன்னணிக்கு வந்து சிலருமாகச் சைவ சமயத்தைக் கொண்ட கொழுநருடன், உறுதுணையாய் நின்று வளர்த்தனர். பிறவாயாக்கைப் பெரியோனாகிய சிவபெருமானே ஆண் பெண் வடிவுடன் கூடிய அர்த்தநாரியாக, அம்மையப்பராகத் திகழ்வதை, சைவத் திருமுறைகளில் முதல் திருமுறையின் முதற்பதிகத்தின் முதற்பாட்டின் முதலடியின் தொடக்கமாய் விளங்கும், "தோடுடைய செவியன்" என்ற தொடர்களால் சிவஞானத்தை மூவாண்டிலேயே பெற்றுச் சைவத்துறை விளங்கப் புனித வாய் மலர்ந்தருளிய ஞானசம்பந்தப் பெருந்தகை நமக்கு அரிய பெரிய உண்மையை உணர்த்துகின்றார். எனவே ஆண் பெண் என்ற மக்கட் டொகுதியின் ஒரு கூறாய் விளங்கும் மாதராய்ப் பிறந்த சைவமகளிர் அனைவரும் நம் மாபெரும் சமயமாகிய சைவசமயத்தின் சிறந்த நூல்களைப் பயின்றும் பயின்றவற்றிலிருந்து தற்போதைய விஞ்ஞான காலத்துக்கேற்றச் சமயக் கருத்துக்களைத் தத்தம் குழந்தைகளுக்கு விளக்கியும் அக்கொள்கைகள் நிரம்பிய நெறியில் தாமும் வாழ்ந்தும் தம் மக்களையும் வாழுமாறு வழிகாட்டியும் நாள்தோறும் வளர்த்தால் அன்பும் அருளும் அமைதியும் நிரம்பி வீடு வாழும். வீடு வாழ நாடு உயரும். நாடு உயர உலகம் உய்யும். அத்தகைய உலக உய்விற்கு இத்தகைய மாநாடுகள் துணைபுரியுமாறு திருக்கேதீச்சரத்துப் பெருமானை வாழ்த்தி வணங்கி முடிக்கின்றேன். வணக்கம்.

*"வான்முகில் வழாது பெய்க மலிவளம் சுரக்க மன்னன்*
*கோன்முறை அரசு செய்க குறைவிலா துயிர்கள் வாழ்க*
*நான்மறை யறங்க ளோங்க நற்றவம் வேள்வி மல்க*
*மேன்மைகொள் சைவ நீதி விளங்குக உலக மெல்லாம்."*

# வித்துவான் அம்பை சங்கரனார்

(55ஆம் ஆண்டு விழா - 1960 - சைவ இளைஞர் மாநாடு)

*''நீதி யைநிறை வைமறை நான்குடன்*
*ஓதி யையொரு வர்க்கும் அறிவொணாச்*
*சோதி யைச்சுடர்ச் செம்பொனின் அம்பலத்*
*தாதி யைஅடி யேன்மறந் துய்வனோ*

**-அப்பர்**

அமிழ்தினுமினிய தமிழ்மொழியைப் பயின்று சைவ சமயமே சமயமாய் அதிற் சார்ந்துறையும் நல்லூழ் பெற்ற சைவப் பெருமக்களே! தாய்மார்களே! சென்ற காலத்தின் பழுதிலாத் திறம்போல் வருங்காலத்தையும் வகையுற வாழ்வாங்கு வாழவைப்போம் என்ற உறுதிப்பாடு கொண்டுள்ள சைவ இளைஞு நண்பர்களே! உங்கள் யாவருக்கும் என் உளங்கனிந்த வணக்கத்தை முதலில் தெரிவித்துக் கொள்கின்றேன்.

''மாணிக்கவாசகர் அறிவாற் சிவனே என்பது திண்ணம்'' என இலக்கணக்கொத்துரைச் சுவாமிநாத தேசிகர் போன்ற பெருமக்களாற் போற்றித் துதித்தற்குரியவரும், அழுதடி அடைந்த அன்பரும், நால்வகை முத்திகளில் இறைவனோடு இரண்டறக் கலத்தலாகிய சிவசாயுச்சியப் பேற்றினைப் பெற்றவரும், மாணிக்கவாசக சுவாமிகள் எனப் பொதுமக்களால் அழைக்கப்பட்ட பெருநிலையுற்றவருமாகிய மணிவாசகப் பெம்மான் தன்னை ஆண்டவன் ஆட்கொண்ட நிலையினை உன்னி, அது ''நாய் சிவிகை ஏற்றுவித்த தன்மையை ஒக்கும்''என்று கூறுகின்றார். அத்தகைய பெருஞானிகள் போன்றவர்களே தங்களைத் தகுதியற்றவராகக் கருதுவார்களானால், கல்லாத புல்லறிவிற் கடைப்பட்ட நாயேனாகிய யான் எத் தகுதியுடையேனோ அறியேன். இருப்பினும் உலகெலாம் நம் சைவ சித்தாந்தச் சமயநெறியைப் பரப்பி வளர்ப்பதையே தம் நோக்கமாகக் கொண்ட நம் சைவ சித்தாந்த மகா சமாஜத்தினரும் இம்மாநாட்டு

வரவேற்புக் குழுவினரும் அடியேனையும் ஆட்கொள்ள வேண்டி இப்பெருந்தொண்டினை என்பாற் பணித்தாற்றச் செய்தனர் என்று கருதுகின்றேன். உங்கள் யாவருக்கும் என் நன்றி உரித்தாகுக. உங்கள் ஆசிப் பெருக்கின் துணை கொண்டு தண்டமிழ்த் தாய்நாட்டின் அணைப்பிலுள்ள சேய்நாடாகிய இவ் வீழநாட்டில் 'வங்கம் மலிகின்ற கடல் மாதோட்ட நன்னகரில்' 'சிறையார் பொழில் வண்டு யாழ்செயுங் கேதீச்சரத்து' நிகழும் சைவ சித்தாந்த மகா சமாஜ 55ஆவது ஆண்டுப் பெருவிழாவில் யான் மேற்கொண்ட இளைஞர் மாநாட்டுத் தலைமைப் பணியினை ஒல்லும் வகையான் ஆற்ற முயல்கின்றேன். 'பிழைத்தன பொறுத்திடுக' எனத் தங்கள் முளரிப்போதுகளை வணங்கிக் கேட்டுக் கொள்வல்.

கல்தோன்றி மண்தோன்றாக் காலத்துக்கும் முன் தோன்றி மூத்தகுடி நம் தமிழ்குடி என்பது யாவரும் அறிந்த உண்மையாகும். அக் குடியினர் வதிந்துவந்த நிலப்பகுதியே 'குமரிநாடு' என நம் சங்க இலக்கியங்கள் சாற்றுகின்றன. அப்பகுதியையே 'இலமூரியாக் கண்டம்' என்று வியன்புலவர் ஹெக்கேல், ஒல்டுஹாம், ஸ்காட் எலியட் போன்ற மேனாட்டாராய்ச்சியாளர்கள் பலரும் ஆய்ந்து வலியுறுத்தி நம் தொன்மைக் கொள்கைக் கரண் செய்கின்றனர்.

பின் கடற் கொந்தளிப்பா லேற்பட்ட பிரிவில் இவ் வீழநாடு தற்பொழுதுள்ள நம் தமிழக வரைப்பிலிருந்து பிரிய நேர்ந்தது. ''ஈழநாடு ஒருகாலத்தில் இப்போதிருக்கிறதைவிடப் பெரியதாயும் வடபுறத்தில் தமிழ்நாட்டோடு சேர்ந்தும் இருந்தது. தாப்பிரபனே என்ற ஆறு பாண்டிய நாட்டையும் ஈழத்தையும் பிரிக்கும் எல்லையாக ஓடிக் கொண்டிருந்தது'' என்ற செய்தி மெகாஸ்தனிஸ் குறிப்பு மூலம் தெரியவருகிறது. தாப்பிரபனே என்பதும் தற்பொழுது பாண்டிய நாட்டிற் பாயும் தாம்பிரவர்ணி என ஆராய்ச்சியாளர் கருதுகின்றனர். இதுபோன்றுதான் பிற சிறு தீவுகளிலும் தமிழர்கள் பிரிந்து சென்றார்கள். ஆனால் அவர்கள் போக்குவரவு வசதியற்ற காரணத்தால் அக்காலத்திலேயே தம் தாய்நாட்டையும் மொழியையும் சமயத்தையும் பிற ஒழுகலாறுகளையும் பற்றி அறிந்து ஒழுக இயலாது போயினர். ஆயினும் நம் ஒழுக்கங்களிற் சிலவற்றை இன்னும் அவர்கள் கால்வழியினர் கைக்கொண்டு ஒழுகிவருகின்றனர் என ஆராய்ச்சி யாளர்கள் பலர் ஆய்ந்து கூறியுள்ளனர்.

இவ் வீழநாட்டின் நிலை அத்தன்மைத்தன்று. இது தமிழ்நாட்டை விட்டு இயற்கையின் ஆற்றலாற் பிரிக்கப்பட்டாலும் தாய்நாட்டோடு

நெருங்கிய தொடர்புண்மையாற்றான் தாய்நாட்டை விடச் சமயவொழுக்கங்களிலும் மொழி வழக்காறுகளிலும் விஞ்சிய நிலையில் தூய்மைத் தன்மையினைக் காத்து வருகின்றது. சிறப்பாக நம் சைவ சித்தாந்த மகா சமாஜப் பெருவிழாக்களில் சேர் பொன்னம்பலம் இராமநாதன், சேர் எ. கனகசபை, டி. பொன்னம்பலம் பிள்ளை, அம்பலவாண நாவலர், முதலியார் சபாரத்தினம், சுவாமி விபுலானந்தர், வட்டுக்கோட்டை நாகலிங்கம்பிள்ளை, சேர் கந்தையா வைத்தியநாதன், சு. நடசே பிள்ளை ஆகிய பெருமக்கள் தலைமை தாங்கி அவ்வக்காலத்துக்குத் தக்க அறிவுரைகளைத் தந்து ஊக்கியிருக்கின்றனர். கிறித்தவ சமயப் படையெடுப்பு ஏற்பட்ட காலத்துத் தமிழ்நாட்டுக்கே நம் சமய உண்மைகளை எடுத்துக் கூறியதோடு, சிறு பாட நூல்கள் மூலமாய்ச் சிறார்களின் உள்ளங்களையுங் கவர்ந்த பெருமை இந்நாட்டுப் பெரியாராய நம் நாவலர் பெருமானுக்கேயுரிய தனிப்பட்ட சிறப்பாகுமன்றோ?

இப் பெருமைமிகு ஈழநாட்டினை நம் சைவசமயாச் சாரியாப் பெருமக்களும் மறந்தனரல்லர். அவர்கள் தமிழ்த் தாய்நாட்டின் கடற்கரையோரங்களிலுள்ள திருக்கோயில்களை வழிபடும்போதே இங்குள்ள கோயில்களையும் தம் அகக்கண்ணால் எண்ணித் துதித்து அரும்பாடல்களைப் பாடியருளியுள்ளார்கள். திருக்கோணமலையும் திருக்கேதீச்சரமுந்தான் இங்குள்ள பாடல்பெற்ற தலங்களாகும். திருக்கோண மலைக்குச் சம்பந்தர் பதிகம் ஒன்று மாத்திரம் உள்ளது. ஆனால் இத் திருக்கேத்தீச்சரத்துக்கோ சம்பந்தர் பதிகம் ஒன்றும், சுந்தரர் பதிகம் ஒன்றும் உள்ளன.

ஆழ்வார்களிற் சிறந்தவராகிய நம்மாழ்வார் தம்மூராகிய ஆழ்வார் திருநகரியிலிருந்து கொண்டே அவ்வத் திருப்பதியிலுள்ள மூர்த்திகளைத் தரிசித்தார் என்றும் உடனே அங்கிருந்தே பாடினார் என்றும் வைணவ நூல்கள் கூறுகின்றன. அதுபோன்றே நம் சம்பந்தப் பெருமானாரும் சுந்தர மூர்த்தி சுவாமிகளும் அக்கரையிலிருந்து கொண்டே அகக் கண்ணாலேயே தரிசனஞ் செய்து பாடினார்கள் என்ற நிலைமை நோக்கின் அவர்கள் பெருமை நனிவிளங்கும். அவர்கள் பாடிய பாட்டுக்களில் ஒருவர் நேராகவந்து கண்டால் எப்படிப் பாடுவாரோ அதற்கும் மேன்மையுறு நிலையிலேயே, பொருள்கள் பொதுளியுள்ளன.

துவட்டா என்ற முனிவர் ஒருவர் தவம் செய்த இடமாதலின் இந்நகருக்கு மகாதுவட்டாபுரம் எனப் பெயராயிற்று. அது பின் மாதோட்டம் என்று மரூஉ மொழியாய்த் திரிந்தது. இங்குள்ள

திருக்கோயிலுக்குத்தான் கேதீச்சரம் என்பது பெயராகும். கேதுவாற் பூசிக்கப்பட்ட தலமாதலின் இதற்குக் கேதீச்சரம் எனப் பெயர் ஏற்படலாயிற்று. தேவாரத் திருப்பதிகங்கள் எல்லாவற்றிலும் 'மாதோட்டக் கேதீச்சரம்' என்று ஊரோடு கோயிலையும் இணைத்தே பாடியிருக்கின்றனர். பாலாவி என்ற பெயரிய ஒரு யாறு இங்குப் பாய்ந்து இந் நாட்டை வளம்பெறச் செய்வதை நம் தேவாரப் பதிகங்கள் கூறுகின்றன.

*"............................மறிகடல் மாதோட்டத்*
*தடிக ளாதரித் திருந்த கேதீச்சரம்*
*பரிந்த சிந்தை யராகி*
*முடிகள் சாய்த்தபடி பேணவல் லார்தம்மேல்*
*மொய்த்தெழும் வினை போமே"*

எனவும்,

*"மத்த யானையை மறுகிட உரிசெய்து*
*போர்த்தவர் மாதோட்டத்து*
*அத்தர் மன்னுபா லாவியின் கரையிற்கே*
*தீச்சரம் அடைமின்னே"*

எனவும் சம்பந்தர் திருவாக்குகளும்,

*"அங்கத்துறு நோய்கள்அடி யார்மேல்ஒழித் தருளி*
*வங்கம்மலி கின்றகடல் மாதோட்டநன் னகரில்*
*பங்கஞ்செய்த மடவாளொடு பாலாவியின் கரைமேல்*
*தெங்கம்பொழில் சூழ்ந்ததிருக் கேதீச்சரத் தானே"*

எனப் பலபடச் சுந்தரர் திருவாக்குகளுமுள்ளன. இம் "மாதோட்ட நன்னகரில் பாவம் வினையறுப்பார் பயில்" கின்றனராம். இப் "பாலாவியின் கரைமேல் தேவன் நமையாள்வான்" என்ற சுந்தரர் அருளிப்பாட்டின்படியே இன்றும் அவனருள் ஊட்ட நாம் இங்குக் கூடியிருக்கின்றோம்.

இத்தமிழக வரைப்பினுள் ஆண்டுதோறும் நிகழும் சமாஜப் பெருவிழாக்களில் நம் பெருமக்கள் சைவ இளைஞருலகமும் முன்னேற வேண்டும் என்ற உயர்நோக்குக் கொண்டே இவ்விளைஞர் மாநாட்டினையும் ஓர் உறுப்பாகக் கூட்டுகின்றார்கள். வருங்கால உலகத்திற்கு அச்சாணி போன்றோர் தற்கால இளைஞரே யாதலின் அவர்களை உருவாக்கிவிட வேண்டிய பொறுப்பு நம் பெருமக்களுக்கு உண்டு. தற்கால இளைஞருலகம் சமயப் பற்றிற் சிறிது சரிந்து

கொண்டு போவதாகச் சிலர் குறை கூறுகின்றனர். இதற்கு முதற்காரணம் அவ்விளைஞர்கள் தக்க சூழ்நிலையைப் பெறாதிருப்பதுதான் என்பதே. அடியேனுடைய எண்ணமாகும். பெற்றோர்கள் சமய ஒழுக்கங்கள் வாய்ந்தவர்களாயிருக்கின் பிள்ளைகளும் அந்நிலையினராதல் இயல்பேயாகும். அவர்கள் சமய நிலையில் தாழின் தாங்கள் கெடுவதோடு தங்கள் அருமருந்தன்ன பிள்ளைகளையும் அவர்களின் பின்வரும் கால்வழியினரையு மன்றோ கெடுக்க மூலகாரணமாகின்றனர். இதனை ஓர்ந்து பெற்றோர்கள் வீட்டிற் சமய வொழுகலாறுகளில் தலைப்பட்டுத் தங்கள் குலக் கொழுந்துகளுக்கும் இளமையிலேயே சமயப்பற்றுப் படிவதற்குரிய தக்க சூழ்நிலையை ஏற்படுத்துவார்களாக.

## சைவசமயச் சிறப்பு

நம் சைவ சமயம் இன்னகாலத்துத் தோன்றியதென்றோ இன்னாரால் தோற்றுவிக்கப்பட்ட தென்றோ சொல்லொணா நிலையினையுடைய அவ்வளவு தொன்மை வாய்ந்தது. திருக் குறளுக்குப் பெருமை கூற வந்த மதுரைத் தமிழ் நாகனார் என்ற புலவர் அஃது எவ்வாறு சிறந்தது என்பதற்கு ஒரு தக்க காரணம் காட்டுகிறார். ''பிற நூல்களில் உள்ள பொருள்கள் யாவும் இத்திருக்குறளில் உள்ளன. ஆனால் இத் திருக்குறளில் உள்ள பொருள்கள் பல பிற நூல்களில் இல்லை. அது மாத்திரம் அன்றி இந்நூலில் இல்லாததே ஒன்றும் இல்லை. எல்லாம் இந்நூலில் அடங்கியுள்ளன. ஆகவே திருக்குறள் மிகச் சிறந்தது'' எனக் கூறுகிறார்.

*''எல்லாப் பொருளும் இதன்பால்உள இதன்பால்*
*இல்லாத எப்பொருளும் இல்லையால்''*

என்பது தான் அவர் கூற்று. இதே அளவையைத்தான் நம் சைவ சமயத்துக்கும் ஏற்றிக் கூறல் வேண்டும். நம் சமயம் மிகவும் பரந்த கொள்கைகளையுடையது; பிற சமயத்தவர் கூறும் நற்கொள்கைகள் யாவற்றையும் தன்னகத்தே கொண்டது. அதற்கு மேலும் அச் சமயங்களிற் கூறாத பல சிறப்பியல்புகளையும் தன்னகத்தே பெற்று மிளிர்வது. இதனிடம் இல்லாத நற்கொள்கைகளே வேறு இல்லை, அதனால் இஃது ஒரு ஒப்பற்ற சிறந்த சமயமாகும். அதைத்தான்,

*''யாதொரு தெய்வங் கொண்டீர் அத்தெய்வ மாகி ஆங்கே*
*மாதொரு பாக னார்தாம் வருவர்....''*

என்று உலகெலாம் வழிபடும் பல தெய்வங்களையும் அணைத்துச் செல்லுந் தன்மையில் நம் சமய நூல் விளக்குகிறது. இதனாலேயே சைவக் கோயில்களில் திருமாலுக்கு இடமுண்டு. அவர் அங்குப் பரிவாரக் கடவுளாகப் போற்றப்படுகிறார். ஆனால் திருமால் கோயில்களிற் சிவனுக்கிடமில்லை. காரணம் இவர் பரிவார தேவதையாம் தன்மை பெறாத நிலையிற் சிறப்புற்றனராதலினா லென்க.

இன்னும் ஒரு சமயத்தைப் பற்றிய உண்மைகளை அக் கடவுளுக்குரிய பெயரமைப்பு முறையிலிருந்தும் உணரலாம். நம்மால் வணங்கப்படுந் தெய்வத்திற்கு நாம் வழங்கும் பெயர்கள் கடவுள், கந்தழி, இயவுள், செம்பொருள், இறைவன் எனப் பலவாம். கடவுள் என்ற் சொல் 'கட' என்னும் பகுதியினடியாகப் பிறந்தது. அவன் ஒரு நாமம், ஓருருவம் ஒன்றுமில்லான், ''இப்படியன் இந்நிறத்தன் இவ்வண்ணத்தன் இவன் இறைவன் என்று எழுதிக் காட்டொணாதே'' என்று அவனுடைய கடந்த நிலையையே நம் சமயாச்சாரியப் பெருமக்கள் அருளிப் போந்தனர். அவ்வாறு கடந்த நிலையும் உருவமற்ற தன்மையுமுடைய பெருமானை நாம் உருவத்தின் மூலம் வழிபடுகின்றோம். சிறு குழந்தைகளுக்குச் செய்முறைப் பயிற்சிமூலம் பாடங் கற்றுக்கொடுத்தால் தெளிவுற விளங்குகின்றது. மனவியல் நூலோர் கொள்கையுமதுவேயாம். அதேபோன்று அவனைக் கண்டு அனுபவிக்கா நிலையில் நாமும் சிறுவாராய்த்தான் இருக்கின்றோம். நாம் உண்மையறிவு பெற்றுச் சிறந்தோங்கும் வரை நமக்கு உருவ வழிபாடு வேண்டியதுதான். ஆகவே எல்லாம் கடந்த ஒருவனை ஒரு குறிப்பிட்ட உருவத்து வழிபடல் சிற்றுயிர்க்குற்ற துணை என நம் பெரியோர் வைத்தனர். அதனால் உருவ வழிபாடு கூடாதென்போர் இவ்வுண்மையை ஓர்ந்து தெளிவாராக.

'கந்தழி' என்ற சொல் கந்து + அழி என்ற இரு சொற்களாலாய ஒரு தொடர் ஆகும். (கந்து - பற்றுக் கோடு) அதனால் கடவுள் பற்றுக் கோடற்றவன் என்பது பொருளாகும். இதனையே பற்றொன்றில்லான், பற்றற்றான், ''வினையின் நீங்கி விளங்கிய அறிவின் முனைவன்'' என்றெல்லாம் பலபட நம் சமயநூல்களும் இலக்கண நூல்களும் பகர்கின்றன. 'இயவுள்' என்ற சொல் 'இய' என்ற பகுதியினடியாகப் பிறந்தது. இய என்பது செலுத்து என்ற பொருளது. எல்லா உயிர்கள் மாட்டும் நீக்கமின்றி நின்று அவைகளை ஆட்டுவிக்கும் தன்மையையே இப் பெயர் புலப்படுத்துகின்றது. திருள்ளுவர் 'செம்பொருள்' என்றே நம் சிவனைக் குறிப்பிடுகின்றார். சிவன்

எனினும் செம்பொருள் எனினும் ஒக்கும், நிறத்தானும், குணத்தாலும், செயலானும், மற்றும் பல்லாற்றானும் செம்மை வாய்ந்தவ னாதலின் அவனைச் 'செம்மேனி எம்மான்' என்று நம் திருமுறைகள் சாற்றுகின்றன. இவைபோன்றே பிற பெயர்களின் பொருள்களும் நம் சமய உண்மைகளைத் தாங்கி அறிவுக் கருவூலங்களாகத் திகழ்கின்றன. இவற்றையெல்லாம் உட்கொண்டே திருவள்ளுவர் இறைவனை 'எண்குணத்தான்' எனச் சுருங்கக் கூறி விளங்க வைத்தனர். இவ்வெட்டுக் குணங்களும் அவனுடைய ஒப்பற்ற தன்மையைத் தெற்றென விளக்கும். அவ்வெட்டுக் குணங்களாவன: தன் வயத்தனாதல், தூய உடம்பினனாதல், இயற்கை உணர்வின னாதல், முற்று முணர்தல், இயல்பாகவே பாசங்களின் நீங்குதல், பேரருளுடைமை, முடிவாற்றலுடைமை, வரம்பிலின்பமுடைமை என்பனவாம்.

## அன்பே சிவம்

மேலும் எல்லா உயிர்கள் மாட்டும் இன்றியமையாது வேண்டப்படுவதொரு பண்பு அன்பேயாகும். அன்பற்ற உயிரைத் தாங்கிய உடலைத் திருவள்ளுவர் "என்பு தோல் போர்த்த உடம்பு" என்று இழிவுபடுத்திப் பேசுகின்றார். அந்த அன்பாம் பண்பையே நம் சமயம் அடிப்படைப் பண்பாகக் கொண்டு மிளிர்கின்றது. அன்புச் சமயம் தான் நம் சைவ சமயம். அன்புக் கடவுள்தான் நாம் வணங்கும் சிவபெருமான். அன்புத் தொண்டர்கள் தாம் நம் நாயன்மார்களாவர். "அன்பே சிவம்" என்ற தொடர் இந்த உண்மையைத்தான் உணர்த்துகின்றது. "அருந்தழல் மாமகம் புரிந்தும், கடவுட் கங்கை யாதியாம் புனல் படிந்தும், அனிலயோகத்திருந்தும், அணிமலர் தூவிப் பூசை நேர்ந்தும், போகமெல்லாம் சிறுகி யனைத்துயிர்க்கும் செய்ய வொண்ணாப் பெருந்தவங்கள் மிகப்பயின்றும் பெறுதற் கெட்டாப் பெரும்பயனை" அன்பு வலைவீசிக் கடவுளிடமிருந்து பெறலாம். கடவுள் மலைபோன்ற மாட்சி மிக்கவர்; காட்சிக்கரியர்; ஆனால் அன்புக்கெளியர். அதனாலேயே "அன்பெனும் பிடியுள் அகப்படும் மலை" என அவர் பெருமை பேசப்படுகின்றது. நித்தமாகிய பக்தியொடு அவரை வழிபடின் அவர் நம்பால் அருள் சுரப்பர். அருளை வெள்ளம் என்று பெரியோர் கூறுவர். வெள்ளம் உயர்ந்த இடத்திலிருந்து பள்ளமாய இடத்திற்குப் பாயும் தன்மையது. அருளும் உயர்ந்தோர் தாழ்ந்தோரிடம் காட்டும் உள்ள நெகிழ்ச்சியாகும். ஆகவே அன்பால் ஈர்த்தால் அவர் அருள் சுரப்பது ஒருதலை. அவரிடமும் அன்பு காட்டாது, "எவ்வுயிரும் பராபரன் சந்நிதியதாகும்" ஆதலின்

பிற உயிர்கள் மாட்டும் அன்பு காட்டாது அருளை மாத்திரம் எதிர் பார்த்து ஏங்கி நிற்பின் அஃது எங்ஙனம் வாய்க்குமோ? அறிகிலேன்.

கடவுளை - அன்பே உருவான இறைவனை - நம் அடியார் பெருமக்கள் அன்பென்றே அழைத்தனர். "என் அன்பே, அன்பிலூறும் ஆனந்த வெள்ளமே" எனப் பலவாறு வரும் ஆன்றோர் அமுதமொழிகளைத் தெளிந்தோர்க. இந்த அன்பாய பண்பு அற்றோர்தாம் பிறவுயிர்களைத் துன்புறுத்துகின்றனர். "எவ்வுயிரும் நீங்கா துறையும் இறைசிவனென், றெவ்வுயிர்க்கும் அன்பாயிரு" என்ற அருளிப்பாடு பிற உயிர்கள் படும் துன்பந் துடைக்க வந்த பொருள் பொதி வாக்கேயாகும். அதனால் உண்மையாகவே இறையருள் தாகமுடையோர் புலாலுண்ணாதவராய் மறந்தும் பிற உயிர்களைத் துன்புறுத்தாதவராய் விளங்க வேண்டும். மரக்கறி உணவுக்கே சைவ உணவு என்ற பெயர் பொது மக்களிடைப் பழக்கத்தில் வந்துள்ள தெனில் அச்சமயம் புலாலுண்ணாமையை எவ்வளவு வலியுறுத்தி யுள்ளது என்பதைத்தான் இந்நிலை காட்டுகின்றது. சைவ உணவு சாப்பிடுவோர் சைவராய்த் தானிருக்க முடியும். அவர் எந்நிறத்தவராயினும் எந்நிலத்தவராயினுமாகுக.

## சமய ஒழுக்கம்

மக்கள் தங்கள் வாழ்க்கையை வளம்படுத்தற்குத் தக்க சூழ்நிலைகளை ஏற்படுத்திக் கொள்ளல் வேண்டும். வாழ்க்கை அக வாழ்க்கை, புறவாழ்க்கை என இரு பகுதிகளைக் கொண்டமைவது.

*"புறந்தூய்மை நீரானமையும் அகந்தூய்மை*
*வாய்மையாற் காணப் படும்"*

என்று வள்ளுவர் பெருமான் தூய்மையை வலியுறுத்தியது போன்றே உடலை ஓம்பும் வாழ்க்கை புறவாழ்க்கையாகவும் உயிரை ஓம்பும் வாழ்க்கை அகவாழ்க்கையாகவும் அமைவதாயிற்று. புறவாழ்க்கை மேற்கொண்டோர் வயிற்றுப் பெருமான் பொருட்டு ஏதோ சில தொழில்களில் ஈடுபட்டு உழைக்கின்றனர். மாடு, மனை, மக்கள் முதலிய செல்வங்களை யெல்லாம் ஈட்டி ஆரத்துய்க்கின்றனர். இப் புற வாழ்க்கை வளம் மாத்திரம் ஒருவனுக்கிருக்கின் அவன் சிறந்தவனாகமாட்டான். அகவாழ்க்கை வளமும் அவன் பெற்றிலங்க வேண்டும். அகவாழ்க்கை வளம் உயிரைச் செம்மைப்படுத்தி நன்னிலையிலுறச் செய்யும். அந்த அகவாழ்வு மேம்பாட்டிற்கு இன்றியமையாது வேண்டப்படுவது சமைய ஒழுக்கங்களேயாகும்.

'சமை' என்ற சொல் 'பக்குவப்படுத்து' என்ற பொருளினதாகும். 'சோறு சமைத்தாள்' என்றால் சோற்றை உண்டற்கு ஏற்ற நிலையிற் பக்குவப்படுத்தினாள் என்பது பொருளாம். தமிழ் நாட்டில் பெண் பூப்புப் பருவம் எய்தியதைக் குறிப்பதற்குச் 'சமைந்தாள்' என்று ஒரு சொல்லைத் தற்பொழுதும் வழங்குகின்றனர். சமைந்தாள் எனில் அப்பெண் கணவனோடு இல்லற வாழ்க்கையை மேற்கொள்ளுதற்குப் பக்குவப்பட்ட நிலையிலுள்ளாள் என்பதே பொருளாகும். அத்தன்மையிலேயே 'சமையம்' என்ற சொல்லும் நம் உயிரைப் பக்குவப்படுத்தி வளமுற வாழச்செய்ய, நன்னிலையிலுய்யும் வழியினை வகுப்பது என்றுதான் பொருள்படும். இத்தகைய அருமைப்பாடுடைய தமிழ்ச் சொல்லின் தனிப் பெருமையினையும் ஓராது சமையம் என்ற பெயரைக் கேட்ட மாத்திரையானே காதுமூடும் காழ்ப்பெண்ணமுடையோரினைப் பற்றி நாம் என்னென்று கருதுவது? அது கிடக்க.

நம் சமய ஒழுகலாறுகளிற் சிறந்தன திருநீறு அணிதல், திருக்கோயில் வழிபாடு, இறைவனருட் புகழைக் குறிக்கும் பாடல்களைப் பாடல், பிறருக்கு ஒல்லும் வகையான் சமய உண்மைகளை விளக்கிக் கூறல், உருத்திராக்கம் முதலிய சமயச் சின்னங்களையும் அணிதல், ஐந்தெழுத்தோதல் அடியவர்களை வழிபடல் முதலிய பலவாம்.

## திருநீறு

உலகத்திலுள்ள சமயங்களில் யாண்டும் சின்னங்கள் காணப்படுகின்றன. சின்னங்கள் இல்லையென்று வாயளவிற் கூறிச் செயல்முறையிற் சின்னங்களைப் போற்றும் சமயங்களுமுண்டு. ஒரு நாட்டுக் கொடி எவ்வாறு அந்நாட்டின் பெருமையைத் தெரிவிக்க எழுந்த சின்னமாகுமோ அதேபோன்று அவ்வச் சமயச் சின்னங்களும் அவ்வச் சமய உண்மைகளை, பெருமைகளைத் தாங்கி நிற்பனவாம் என்பதைத் தவறாது மனத்துட்கொள்ளல் வேண்டும். நம் சமயச் சின்னங்களிற் சிறந்தது திருநீறு ஆகும். "நீற்றினை நிறையப் பூசி" என்பது அப்பர் பெருமானார் அருள் வாக்காகும். திருநீற்றுப் பதிகம் என்றே நம் திருமுறைகளில் ஒரு பதிகமுமுளது. பிற சமயத்தவரைத் தம் சமயத்துக்குச் சேர்க்க ஞானஸ்நானம் என்ற சடங்கினைச் செய்து பாதிரிமார்கள் அவர்களைக் கிறித்தவர்களாக்குகின்றனர். இதுபோன்ற முறை பன்னூறாண்டுகளுக்கு முன்பே நம் சைவ சமயமே குறைந்துள்ள காலத்து நம் பெருமக்களாலும் மேற்கொள்ளப்பட்டது. ஆனால் அவர்கள் அதற்கு ஞானஸ்நானம் என்று பெயர்

வைக்கவில்லை. சமண சமயம் புகுந்த அப்பர் பெருமானாரைத் திலகவதியார் திருவீரட்டம் புகுதற்குத் தகுதியுள்ளவராக்கிய முறையினை

*''திருவீரட்டம் புகுதற்குத் திருக்கயிலைக் குன்றுடையார்*
*திருநீற்றை அஞ்செழுத் தோதிக் கொடுத்தார்''*

எனத் தெய்வச் சேக்கிழாரடிகள் குறிப்பிட்டுள்ளது காண்க.

''திருவாளன் திருநீறு திலகவதியாரளிப்பப் பெருவாழ்வு வந்த'' தெனப் பெருந்தகையாராம் அப்பரும் பணிந்து ஏற்றுப் பூசி உய்ந்தார் என்பது நம் பெரிய புராணம் காட்டும் வழியாகும். அத்தகைய பெருவாழ்வு தரத்தக்க திருநீற்றினைச் சைவர்கள் எல்லோருந் தவறாது அணிதல் வேண்டும். திருநீற்றுக்குக் 'காப்பு' என்ற பெயரும் உண்டு. உயிருறு நோய் நீக்கிக் காக்கவல்லதாதலின் இதற்கு இப்பெயர் வாய்த்த தென்க. பூதி - செல்வம், விபூதி - சிறந்த செல்வமாம் தன்மையது. இது வடசொல்லாகும். ஆகவே எம் மொழியிலுமுள்ள திருநீற்றைக் குறிக்கும் சொற்களும் சிறந்த பொருள் பொதி கருத்தைக் கொண்டுள்ளனவாகவே காணப்படுகின்றன. இத் திருநீறு எவ்வாறு தயாரிக்க வேண்டும்; எங்கெங்கு அணிய வேண்டும்; அதனால் ஏற்படும் பயன்கள் யாவை? தற்கால அறிவியல் முறைக்கு அத் திருநீறணிதல் எம்முறையில் ஏற்புடைத்து? என்பனபற்றியெல்லாம் நம் ஆன்றோர்கள் நூல்களிலும், தற்காலச் சமய இதழ்களிலும் பலபட விரித்து எழுதியுள்ளனர். சிலர் அவைகளை ஒருசேரத் திரட்டித் துய்த்தற்கு முடியாத நிலையில் அந்நீறு பூசும் செயலே தகுதியற்றது என்று சிறிதும் ஆய்வின்றிக் கூறுகின்றனர். நம் சமயச் சின்னங்கள் அணிதல் பற்றிய விளக்கங்கள் சிறப்பாகத் திருநீறு, அக்குமணி போன்றவற்றைப் பற்றிய விளக்கங்களையெல்லாம் ஒருசேர நிரல்படக் கோத்துக் கற்பார் அறிவு தெளிவுறும் முறையில் நவமணியைப் பற்றி வெளியிட்டதுபோல் வெளியீடுகள் வரின், நம் சைவ உலகம் செழித்துவளர வாய்ப்புண்டு. இத்தொண்டில் நம் சைவாதீனங்கள் ஈடுபட்டுப் பொதுவாகச் சைவ உலகத்துக்கும் சிறப்பாக உண்மை தெரியாத விழித்துத் தடுமாறும் ஐயம் விஞ்சிய இளைஞருலகத்துக்கும் 'ஆம் வழி இது எனக்' காட்ட வேண்டுகின்றேன்.

## மேற்கொள்ள வேண்டுவன

நம் சமயச் சின்னங்களைப் பற்றிய விளக்கம் நூல்வடிவாதல் போன்றே நம் சமய ஒழுகலாறுகள் பற்றிய விளக்கங்களையும் விரிந்த

அளவில் ஐயத்திற்கிடமின்றி எழுதிப் பரப்பல் வேண்டும். இத்தகைய சமய சம்பந்தமான நூல்களை எல்லாம் வாணிகக் கண்கொண்டு வெளியிடின் அது சீக்கிரம் விற்காநிலையில் மிகவும் இடருறநேரும். அதனால் சமயப் பற்றுமிக்க நிலையங்கள் தாம் இப்பணிகளை மேற்கொள்ளல்வேண்டும். தக்க பெருமக்கள் ஆதரவு இருக்கின் நம் சமாஜம் பன்னூறாயிரச் சமய நூல்களை வெளியிட்டுப் பரப்பியதுபோன்று இத்தொண்டிலும் முந்திக்கொள்வதிற் சளைக்காது என்று கருதுகின்றேன். உருவ வழிபாட்டின் இன்றியமையாமை, திருக்கோயில்களின் அமைப்புமுறை, திருவிழாக்களின் நுட்பங்கள், புராணங்களின் உட்கிடை, வீட்டில் நிகழும் சமயச் சார்பான சடங்குகளின் விளக்கங்கள், நோன்பு மேற் கொள்ளலின் பலன், சமயச் சின்னங்கள் அணிதலின் மேம்பாடு இன்னோரன்ன நம் சமய ஒழுகலாறுகளைப் பற்றி விளக்கச் சிறந்த நூல்கள் வெளிவரல் வேண்டும். அவ்வாறு வெளிவந்தாலும் போதாது; அவைகளைச் சமயச் சார்பான எல்லா இடங்களிலும் வாங்கிவைத்துப் பொதுமக்கள் படித்து மேம்பாடுறத் தக்க வசதிகளைச் செய்து கொடுத்தல் வேண்டும்.

முற்காலத்தில் ''தமிழும் சைவமும் தழைத்தினி தோங்குக'' என்பதே யாண்டும் கேட்கப்பெற்ற சிறந்த வெற்றி முழக்கமாயிருந்தது. அதற்கு அடிப்படையாய் அக்காலப் புலவர்களை உருவாக்கிய பெருமையை மடாலயங்களே பெற்றிருந்தன. தற்பொழுதோ குறிப்பிட்ட சில நூல்களைப் படித்ததும் புலவர் பட்டத்தைக் கொடுக்கும் நிலையைப் பல்கலைக்கழகம் பெற்றுக்கொண்டது. அப் பல்கலைக்கழகப் பாடத்திட்டத்திற் சமய இலக்கியங்கள் பெரும்பாலும் இடம் பெறுவதில்லை. அவ்வாறு ஒன்றிரண்டு இடம் பெறினும் அவை இலக்கியக் கண்கொண்டு வைக்கப்பட்டனவே யொழியச் சமயக்கண்கொண்டு பாடமாக வைக்குமுறை அங்கு மேற்கொள்ளப்படவில்லை. இந்நிலை மாற நம் ஆதீனங்கள் காலநிலைக் கேற்பப் பொதுவாக ஆசிரியப் பெரு மக்களுக்குஞ் சிறப்பாகத் தமிழ்ப் புலவர்களுக்குஞ் சமயப் பயிற்சி வகுப்புகள் ஆண்டுதோறும் நடாத்தல் வேண்டும். பண்டைத் தொடர்பு முறையைப் புதுப்பித்து அப்புலவர்கள் வாயிலாய்ச் சிறந்த நம் சமய ஆராய்ச்சி நூல்கள் பலவற்றைக் கொண்டுவர மூலகாரணமாயிலங்க வேண்டிக் கொள்கின்றேன்.

நம் பள்ளியிலுள்ள மாணவர்களுக்கு இளமைப் பருவத்திலேயே நம் சமய அடிப்படைக் கருத்துக்களைக் கற்பித்தல் வேண்டும்.

இந்நிலையில், பிற சமய மாணவர்களைவிட நம் சமய மாணவர்கள் ஒன்றும் அறியாத நிலையிலேயே உள்ளனர். அவர்கள் உளங்கொளும் நிலையில் தக்க சமயப் பாட நூல்களை ஆயத்தஞ் செய்ய வேண்டும். அதற்கு ஆசிரியரும் ஊக்கம் காட்டினால்தான் மிகவும் பலனேற்படும். கிறித்தவ சமயிகள் இம்முறையில் மிகவும் வெற்றி பெற்றுள்ளனர். நாம் மிகப் பின்னடைந்துள்ளோம். தற்பொழுதுதான் அம்பா சமுத்திரத்திலுள்ள திரு. வி.எஸ். ஆறுமுகம்பிள்ளை என்ற ஒரு பெரியார், சிவஞான முனிவரின் வழித்தோன்றல், இப்பணியை நம்சமாஜ வாயிலாய்ச் செய்ய ஊக்கி அதற்கு ஆம் பொருளையும் உதவுவதாக முன்வந்துள்ளார். ஆகவே அடுத்த ஆண்டு முதல் நம் சைவ சமயப்பாட அடிப்படைக் கருத்துக்களைக் கொண்ட நூல்கள் சமாஜத்திலிருந்து வெளிவரும். நம் சைவ மாணவர்களுக்குக் கற்பிக்க அவ்வப் பள்ளிப் பொறுப்பாளர்கள் இதற்கு ஊக்கம் செலுத்துதல் வேண்டும். பொதுமக்களும் இதற்குப் பின்நின்று உதவுதல் வேண்டுமென்று கேட்டுக் கொள்கிறேன்.

சமய அறிவு பெற்றும் செயல்முறைப்படுத்தாவிடின் அவ்வறிவு சிறிதும் பயனற்றதாகவே கருதப்படும். அதனால் நம் சமய நியதிகளைக் கூடியமட்டும் கடைப்பிடித் தொழுகல் வேண்டும். தினந்தோறும் கோயிலுக்குப் போய் வரல் வேண்டும். அவ்வாறு இயலாவிடினும் வாரமொரு முறையாவது அவசியம் அவ்வூரிலுள்ளோரோ தெருவிலுள்ளோரோ சேர்ந்துபோய் வழிபட்டு இன்பந்துய்த்தல் வேண்டும். இவ்வாறு வார வழிபாட்டியக்கத்தினை ஆரம்பித்த பெருமை நம் சைவப் பெரியோர் திரு. ச. சச்சிதானந்தம் பிள்ளை அவர்களையே சாரும். அது பலவிடங்களிலும் மேற்கொள்ளப்பட்டிருந்தாலும் அவ்வளவு அதிகமாக இல்லை என்றுதான் கூறல்வேண்டும். வார வழிபாடு ஊரின் பொதுவான கோயிலிடத்தே பல்லோரும் உடனிருக்க வணங்கும் முறையாகும். அதுவுமன்றி ஒவ்வொரு குடும்பத்திலும் குடும்பத்தார் எல்லோரும் ஒன்று சேர்ந்து தினந்தோறும் தங்களுக்கு இயன்றகால அளவுக்காவது இறைவனுடைய பாதாரவிந்தத்தை நினைந்து அவனடியார் பாடிய திருப்பாடல்களை ஓதி உருகி வழிபடல் வேண்டும். நெக்கு நெக்கு உருகுவோர் நெஞ்சுள்ளே புக்கு நின்று உறைபவன் எம் புண்ணியன் அல்லனோ! இவ்வாறு வீட்டகத்தும் புறத்தும் யாண்டும் பாத்திரம் சிவமென்று பணிதிரேல் மாத்திரைக்குள் அவனருள் கிட்டுவது உறுதி என்று நம் பெருமக்கள் அறிவுறுத்துகின்றனர். அதனால் "ஒன்றியிருந்து நினைமின்கள் உந்தமக்கு ஊனமில்லை" என்றபடி

அழுத்தமான, அசைக்க முடியாத பத்தி வேண்டும். ''உறைப்பான எண்ணமே பயன் தரும்'' என்பதுதான் மனவியல் நூலாரின் கொள்கையுமாகும். அதனால் அவனருளால் அவன்தாளை நினைந்துய்வோமாக.

நம் சமாஜம் கடந்த ஐம்பத்தைந்தாண்டுகளாய்ச் சிறந்த சமயப்பணி ஆற்றி வருவது வெள்ளிடைமலை. இருப்பினும் தற்போதுதான் அதற்கென ஒரு இடம் சமாஜத் தலைவர் திரு. அ. சோமசுந்தரஞ் செட்டியார் அவர்களின் பொருட் கொடைமூலம் கிடைத்துள்ளது. இனித்தான் இன்னும் பல ஆக்க வேலைகள் செய்ய வாய்ப்புள்ளது. சமாஜத்திற்கெனத் தனியான ஒரு நூல் நிலையம் சிறந்த முறையில் இருத்தல் வேண்டும். உலகச் சமய இலக்கியங்கள் யாவும் அங்கு இடம்பெறல் வேண்டும். சமய ஆராய்ச்சியாளர்கள் சமாஜக் கட்டிடத்திலிருந்து ஆய்ந்து உலகம் போற்றத் தக்கமுறையிற் சிறந்த சமய ஆராய்ச்சி நூல்களை எழுதுதல் வேண்டும். இன்னும் நம் சமாஜத்தின் வாயிலாய் ஒரு சிறந்த சமயக் கல்லூரியே நடைபெறல் வேண்டும். அரசியலார் ''சமயச் சார்பற்ற அரசியல் என்று கூறி வாளாவிருந்து விடும்போது நம் சமய ஆதிக்கத்தைக் காக்குங் கடமை நமக்கே உரியதன்றோ! ஆதலின் இன்னோரன்ன பல மேம்பாடுகளும் பெற்றிலங்க இச் சமாஜக் கட்டிடம் நல்ல முறையில் எழுப்பப்படல் வேண்டும். அதற்குச் சிறந்த பெருமக்களின் தாராள மனப்பாங்கு உறுதுணையாயிருந்து தங்கள் பொருட் கொடை மூலம் செயலாற்றத் தூண்டுதல் வேண்டும். அதற்கு எல்லாம் வல்ல இறையருள் இனிது வழிகாட்டுமாக.

பெரியோர்களே! யான் தமிழகத்தின் தென்கோடியில் ஒரு மூலையில் பிறந்தவன். அறிவாலும் பொருளாலும் மற்றும் யாவற்றாலும் ஏழைமை நிலையினன். இருப்பினும் ''முன்னைப் பிறவித் தவப்பயனோ முழுதும் அறியா மூடனிவன் என்னக் கருத்தில் இரங்கியோ'' யாது காரணத்தாலோ என்னை நல்வழிப்படுத்தச் சுவாமிநாத குரு என்ற ஒரு பெரியார் கிடைத்தார். அப் பெரியாரின் அருளாரமிர் தத்தை வாரித் துய்த்து அவர் கடைக்கண் ணோக்குற்ற காரணமே ஈண்டைச் சென்னைச் சமாஜ வாயிலாய் ஒரு தொண்டனாக்கி ஈழநாட்டுக் கரையிலீர்த்துக் கொண்டு வந்துள்ளது. என் உள்ளத்தில் மறைந்திருந்த நம் சமய எழுச்சி குறித்த கருத்துக்களிற் சிலவற்றை ஈண்டுக்கூறினேன். குற்றம் நீக்கிக் குணம் கொள்கவெனக் கேட்டுக்கொண்டு எனக்கு இவ்வாய்ப்பையளித்த சமாஜத்தினருக்கும், இம்மாநாட்டு வரவேற்புக் கழகத்தினருக்கும்

மறுமுறையும் என் நன்றி கலந்த வணக்கத்தைத் தெரிவித்துக் கொள்கிறேன். வணக்கம்.

*ஞாலம் நின்புகழே மிகவேண் டும்தென்*
*ஆலவாயி லுறையும் எம்ஆதியே*

வாழ்க உலகெலாம்!

# ஔவை சு. துரைசாமிப் பிள்ளை

(56ஆம் ஆண்டு விழா - பழனி - சைவர் மாநாடு)

*பண்டைமறை வண்டரற்றப் பசுந்தேன்ஞானம்*
*பரிந்தொழுகச் சிவகந்தம் பரந்து நாறக்*
*கண்டஇரு தயகமல முகைக ளெல்லாம்*
*கண்தி ரப்பக் காசினிமேல் வந்த அருட்கதிரோன்;*
*விண்டலமர்ப் பொழில்புடைசூழ் வெண்ணெய் மேவும்*
*மெய்கண்ட தேவன் மிகுசைவ நாதன்*
*புண்டரிக மலர்தாழச் சிரத்தே வாழும்*
*பொற்பாதம் எப்போதும் போற்றல் செய்வாம்.*

*திருவிளங்கும் பலமொழியும் சீர்விளக்கு புலவர்பலர்*
*சிறப்பத் தோன்றி*
*உருவிளக்கும் பாக்கள்பல உரைகள்பல ஆக்குதலால்*
*உளவாம் வாய்மை*
*மருவிளங்கு தமிழ்மொழியின் மருங்கெழுந்த தெனவிளம்பும்*
*மாண்பிற் றாகும்*
*திருவிளக்கு வள்ளுவனார் திருக்குறள் கண்டு அவர் அடியைச்*
*சென்னி வைப்பாம்.*

சிவநெறி பேணும் செல்வர்களே! தாய்மார்களே!

திருவருட் பெருங்கடலாகிய பழனியாண்டவன் திருவடி நீழலில் இன்று இங்கே கூடும் சைவ சித்தாந்த மகா சமாஜத்தின் ஆண்டு விழாவில் தலைமை தாங்கும் சிறப்பை என்னைப் பாராட்டி அளிக்கும் உங்கள் நல்லன்புக்கு என் மனமார்ந்த நன்றி.

இப் பழனி நகரைக் காணும்போது பழம்பெரும் நிகழ்ச்சி ஒன்று என் நினைவில் எழுகின்றது. இரண்டாயிரம் ஆண்டுகட்குமுன், பழனிக்குன்று பொதினி என்றும், இவ்வூர் திருவாவிநன்குடி யென்றும், இதனைச் சூழவுள்ள நாடு வையாவி நாடு என்றும் பெயர் தாங்கி, நிலவின. இப்போது இவ்வூர்க்குக் கிழக்கில் ஆயக்குடி எனத்

திகழும் ஊர் அந்நாளில் ஆவிகுடி என்ற பெயருடன் வையாவி நாட்டுக்குத் தலைநகராக இருந்தது; அதன்கண் இருந்து வையாவிக் கோப்பெரும் பேகன் என்ற வள்ளல் ஆட்சி புரிந்தான். அவன் ஒருகால் பொதினி மலைப்பகுதியில் மயிலொன்று கார்முகிலைக் கண்டு களிமிகுந்து மயிர்சிலிர்த்துத் தன் அழகிய தோகையை விரித்து ஆடுவது கண்டான்; அதன் ஆட்டத்தில் நாட்டம் செலுத்தின அவன் உள்ளத்தே குளிர் காற்று வீசும் இக்கார்கால மாலையில் மயிர்சிலிர்த்து ஆடும் மயில் குளிர்மிக்கு வருந்துமே என எண்ணினான். உடனே தன் போர்வையை அதற்கென அளித்து நீங்கினான். அதுபற்றி அவனை அந்நாளை நல்லிசைச் சான்றோர், ''மடத்தகை மாமயில் பனிக்கும் என்று அருளிப் படாஅம் ஈத்தகெடாஅ நல்லிசைக், கடாஅ யானைக் கலிமான் பேகன்'' எனப் பாராட்டினர். அப்போர்வை, அக்கானமயிலுக்கு உடுக்கும் உடையாகவோ, போர்க்கும் போர்வையாகவோ ஆகாது என்பது அவன் அறியாததன்று. அம் மயில்பால் சுரந்த அருள்மிகுதி அவனது அறிவுக் கண்ணை மறைத்தமையின் அவன் கைகள் தாமாகவே மேலிருந்த போர்வையை எடுத்தளித்தன. அதனை நினைந்த ஆசிரியர் பரணர்,

*''என்றும், உடாஅ போரா ஆகுதல் அறிந்தும், படாஅம் மஞ்ஞைக்கு ஈத்த எங்கோ, கடாஅ யானைக் கலிமான் பேகன்''*

எத்துணையாயினும் ஈத்தல் நன்று என்று எண்ணியும், பிறர் வறுமை களைவது கடன் என்று கருதியும் ஒழுகுபவன் என்று கூறுகிறார்.

இத்தகைய பெருவள்ளல் வாழ்ந்த பெருமை மிக்க இடத்தே அருள் வள்ளலாகிய முருகப் பெருமான் கோயில் கொண்டு தனது அருட் செல்வத்தை வழங்குகிறான். அனைத்துயிரும் அதனைப் பெற்று இன்புறுகின்றன. இவ்வள்ளல் இருந்த வளநாட்டில் கோயில் கொண்டருளும் பழனிப் பரமனது நல்லருள் பெற்ற பெருமக்களான தவத்திரு. சிவசண்முக மெய்ஞ்ஞான சிவாச்சாரிய சுவாமிகள், தவத்திரு. மறைமலையடிகள், தவத்திரு. சம்பந்த சரணாலய சுவாமிகளான திரு. சி.கே. சுப்பிரமணிய முதலியார், திரு.வி.க., திரு. நா. சிவகுருநாதப்பிள்ளை முதலிய பெருமக்கள் தலைமை தாங்கிய இடத்தே நானும் இருந்து பணிபுரிவதென்பது எனக்கே அச்சம் தருகிறது. எனினும், ''கருடன் சென்ற நீள் விசும்பில் ஈயும் பறக்கும் இதற்கு என்கொலோ சொல்வது'' என்ற வீர சோழியப் பாட்டைக் கூறிக் கொள்வது தவிர வேறு சொல்லில்லை.

பெரியோர்களே!

சுமார் முப்பது ஆண்டுகட்கு முன் சமாசப் பெருவிழா நிகழ்ந்தபோது கூடியிருந்த நன்மக்கள் பலரை நான் இன்று காணவில்லை; அந்நாளில் அமைந்த அவைகளில் நிகழ்ந்த பொருளுரைகள் பல இப்போது நிகழவில்லை. கூடும் அன்பரிடையே நிலவிய பேச்சுகளும் செயல்களும் இன்று இல்லை. அவை யாவும் மாறிவிட்டன. மக்களிடையே நினைவும் சொல்லும் செயலும் அன்றுபோல் இன்று இல்லை. அவற்றின் பொருளும் முறையும் புதுமையும் ஒளியும் பெற்றுள்ளன. நினைத்தற்குத் துணைபுரியும் புறப்பொருள்களும் புறநிகழ்ச்சிகளும் நாளும் புதிய புதியவாய் மாறுவதால், நம் நினைவும் சொல்லும் செயலும் புதிய புதிய வண்ணமும் வனப்பும் பெற்றுப் பொலிகின்றன. இம் மாற்றத்தால் மக்களுடைய வாழ்க்கையும், சூழ்நிலையும், மனக் கருத்தும் மாற்றம் பெற்றுள்ளன. 'நாளொரு மேனியும் பொழுதொரு வண்ணமுமாக' இயலுவது வாழ்வாதலால், மாற்றம் உலகியல் வாழ்க்கைக்கு இயல்பு. அதனால் தான் மாற்றம், உலகியல் வாழ்க்கைக்கு இயல்பு. அதனால் தான் மக்கள் அடிவைக்கமாட்டாது உயர்ந்தோங்கி நின்ற பொற்கோட்டிமயமும் இன்று அவர்கள் புல்லிய அடிக்கீழ் மிதப்புண்டது. பல்லாயிரம் மைல்கள் - கற்கள் என்பது வெறுஞ்சொல்லாய்ச் சுருங்கிவிட்டது. சுருங்கக் கூறுமிடத்து, அறமும் பாவமாய் மாறிவிட்டது. மணமக்களை வாழ்த்துங்கால், மக்கள் பலரைப் பெறுக என்பது முன்பு அறமாகக் கருதப்பட்டது. இன்று அது, வறுமைக்கு இரையாகி வருந்துக எனக் கேடு கூறும் பாவ வுரையாகி ஒழிந்தது.

இந்த மாற்றம், உலகம் தோன்றிய நாள்முதல் நிகழ்வது, இதனைத் தொல்காப்பியர், திருவள்ளுவர் முதல் அனைவரும் கண்டனர். கால மாற்றத்தைக் கண்ட வள்ளுவர் "நான் என ஒன்றுபோற் காட்டி உயிர் ஈரும் வாள்" என்றார். அதனை, அருட்பிரகாச வள்ளலார் எளிய சொற்களால்,

*"ஓடுகின்றனன் கதிரவன்; அன்பின்*
*ஓடுகின்றன ஒவ்வொரு நாளாய்,*
*வீடுகின்றன, என்செய்வோம், இனிஅவ்*
*வெய்ய கூற்றுவன் வெகுண்டிடில் என்றே*
*வாடுகின் றனை, அஞ்சலை நெஞ்சே"*

என்று நவின்றருளினார்.

இவ்வாறு மாறுவதே இயல்பாகவுடைய உலகில், இப்பொழுது, சமுதாயம், அரசியல், தொழில், வாணிகம் முதலிய துறைகள் பெருமாற்றம் எய்தியுள்ளன. சாதி சமய வேற்றுமைகள் சமுதாயத்தில் பைய மறைகின்றது. அரசியல் நோக்கங்கள் வேறுபடுகின்றன. தொழில்களில் எந்திரங்கள் புகுந்து மக்களின் மெய்யுழைப்பையும் அது வாயிலாக மக்கட் பண்பையும் மாற்றுகின்றன. வாணிகத்தின் நோக்கமும் போக்குவரவு வாய்ப்புகளும் பிறவும் பெரு மாறுதல்களுக்கு உள்ளாகிவிட்டன. உயர் கல்வித் துறையிலும் மக்கட்பண்பை வளர்க்கும் கல்வி சுருங்கி, எந்திர விஞ்ஞானத் துறையில் பெரிதும் சென்று செல்வாக்குப் பெற்றுள்ளது. மக்களின் உயர்விலும் உரையிலும் செயலிலும் புதுமை மணமே நிலைபெற்று விளங்குகிறது. இம் மாற்றங்கட்கிடையே நம் சமய வுணர்வும் ஒழுக்கமும் பண்டைய நிலையிலேயே நின்று பணி செய்ய முயன்று, நின்று இடம் சுருங்கித் தேய்ந்து வருகிறது. சில சமய நிலையங்களிலும் பல கோவில்களிலும் இன்றுள்ள செல்வம் குன்றியிருக்குமாயின், கால மாற்றமாகிய புயலில் நமது சமயம் நிலைகுலைந்து சிதைந்து ஒழிந்து மறைந்து போயிருக்கும். எப்படியோ இப் புயலிடையே நமது சமயம் ஒருவாறு நின்று நிலவுவது திருவருட் பெருங் குறிப்பு என்று தான் நினைக்க வேண்டியிருக்கிறது! "தெய்வம் காட்டுமே யன்றி ஊட்டாது" என்றபடி, தெய்வத் திருவருள் காட்டும் இச்சூழ்நிலையை உணரும் நாம், அதன் திண்ணிய நிலைபேற்றுக்கு ஆவன செய்தல் சீரிய கடனாகும்.

கால மாற்றந்தான் சாதி சமய வேற்றுமையுணர்வு தளர்ந்தமைக்கும், அவற்றின் பெயரால் நிலவிய கொடுமைகள் மறைந்தமைக்கும் காரணம் என்பர்; அவ்வாறு சொல்வதைவிடத் தொழில், வாணிகம், விஞ்ஞானம், பொருளாதாரம் முதலியவற்றைப் பற்றிய அறிவும், அரசியல், சமுதாயம் முதலிய அமைப்புகளைப் பற்றிய உணர்வும் பெருகியிருப்பதே காரணம் என்பது உலகியலை உணர்ந்து கூறும் உண்மையுரையாகும். உலக மக்களிடையே நிறவேற்றுமையும் சமய வேற்றுமையும் மக்களினத்துக்கே கேடு செய்வன என்ற உணர்வு தோன்றி நிற்பதற்கும் இதுவே காரணம். இந்நிலையில், உலகியற் கல்வியும், உணர்வும், ஒழுக்கமும் மக்களிடையே வேற்றுமையையும் பகைமையையும் எழுப்பி, வாழ்க்கையைச் சீரழிக்காதவாறு காத்துப் பேணும் கருத்துடைய தலைவர்கள் தோன்றியிருப்பதும் நமக்கு மகிழ்ச்சி தருகிறது. சாதி சமய வேற்றுமைச் சழக்கில்லாத சமுதாய அமைப்புத்தான் சித்தாந்த சைவச் செந்நெறியின் சீர்த்த நோக்கமாகும். இதனைச் சைவத்திருமுறைகளையும், திருத்தொண்டர்

வரலாறுகளையும், சிவஞானபோதம் முதலிய மெய்ந்நூல்களையும் நன்கு பயின்றோர் இனிதறிவர். சமய குரவர்களான சான்றோர், மண்ணக வாழ்வு நன்கு அமைந்தாலன்றி, விண்ணுலகிலோ மேலுகிலோ மக்களுயிர்க்கு வாழ்வில்லை என்ற கருத்துடையவர். அதனைப் ''புவனியிற் போய்ப் பிறவாமையின் நாள் நாம் போக்குகின்றோம் அவமே; இந்தப் பூமி சிவன் உய்யக்கொள்கின்ற ஆறு'' என்று அவர்கள், நமக்கு அறிவுறுத்தியது நினைவில் இருக்கிறது.

நமது பிறப்பின் அருமையையும் சான்றோர் நன்கு விளக்கியிருக்கின்றனர். ''எண்ணிய பிறவிகளில் மானிடப் பிறவியே யாதினும் அரிதரிது காண்'' என்பர். மக்களுடம்புதான் ஞானம் பெறுதற்கு வாயில்; அதனை நன்கு பேணுவது அறமாகும். அது பற்றியே திருமூலர், ''உடம்பார் அழியின் உயிரார் அழிவர், திடம்பட மெய்ஞ்ஞானம் சேரவும் மாட்டார்'' என்று அறிவுறுத்தினார். இவ்வுடலை இனிது ஓம்பி, மண்ணக வாழ்வை மாண்புற நடத்து பவனே, அயரா இன்ப அமர வாழ்வு பெறுவன் என்ற சமய குரவரது அருட் கருத்துக்கு ஆதரவாகத் திருவள்ளுவனார், ''வையத்துள் வாழ்வாங்கு வாழ்பவன் வானுறையும் தெய்வத்துள் வைக்கப்படும்'' என்றார். எனவே மண்ணுலகில் பொன்னும்பொருளும் ஈட்டிப், பிறர்க்கும் தனக்கும் பயன்பட வாழ்தல் வேண்டும் என்பது சித்தாந்த செந்நெறிக் கருத்தாவது காணலாம். இது பற்றியே ஞானசம்பந்தரும் ''மண்ணில் நல்ல வண்ணம் வாழலாம்; வைகலும் எண்ணில் நல்லகதிக்கு யாதும் ஓர் குறையில்லை'' என்று அறிவுறுத்தினார்.

அதுவாயின், செல்வ நிலையாமை, யாக்கை நிலையாமை முதலிய இயல்புகள் சமய நூல்களில் பெருகித் தோன்றுதற்கு காரணம் யாது என்று கேட்கலாம். உலகில் இன்ப நுகர்ச்சிக்குக் கருவியாகி உடலும், உலகியற் பொருள்களும், கால வெள்ளத்தில் அலைப்புண்டு, வளர்ச்சியும் தளர்ச்சியும் வீழ்ச்சியும் எய்தி, தம்மால் நல்கப்படும் இன்பத்துக்கு நிலையாமையாகிய சிறுமையைத்தருகின்றன. அதனால் உலகியல் இன்பம் சிற்றின்பமாய் விடுகிறது. ''கண்டு கேட்டு உற்று மோந்து உண்டுழலும் ஐங்கருவி, கண்ட இன்பம் தெரிவரிய அளவில்லாச் சிற்றின்பம்'' என்று அருட் செல்வரான நம்மாழ்வார் நவில்வது இங்கே நினைவு கூரத் தக்கதாகும். சிறிது போதில் கழிவது பற்றி அதனைப் பெரிது பெற்று நெடிது நுகர்தற்கே உயிர்கள் மிகவும் எண்ணி முயல்கின்றன.

''எல்லா உயிர்க்கும் இன்ப மென்பது தான் அமர்ந்து வரூஉம் மேவற்றாகும்'' என்ற தொல்காப்பியர் கருத்தின்படி இன்பப்பேறு குறித்த நாட்டமும் முயற்சியும், எல்லா உயிர்கட்கும் இயல்பாக உள்ளன. ஆயினும், இன்பத்துக்குத் தோற்றமும் நிலைபேறும் தருவது பொருளாதலால், பொருளை ஈட்டுதலிலும், அதனை நுகர்தற்குரிய உடலைப் பேணுவதிலும் தம்முடைய உணர்வு உழைப்பு ஆகிய இரண்டையும் செலவு செய்து, பொருளே வாழ்வு, உடலோம்புவதே வாழ்வு எனக் கருதியுழந்து, அவற்றின் நிலையாமைப் பண்பால் ஏமாந்து, இடும்பையும் கவலையும் எய்தி வருந்துருகின்றனர்.

நிலைத்த பெரிய இன்பம் பெற வேண்டுமென எண்ணுவதும், முயல்வதும் நல்லறம்; நிலையாய பெரிய பொருளை நாடிப் பெற முயல்வது அறிவுடைமை. அந்தப் பெரிய பொருளை அறிந்து, அதனாற் பெறக்கூடிய பேரின்பத்தைப் பெற முயல்பவர்க்கு, உலகியற் பொருளின் நிலையாமையையும் இப் பொருள்கள் நல்கும் இன்பத்தின் சிறுமையையும் காட்டுவது, பேரின்பப் பெருவாழ்வின் இயல்புணர்ந்த பெரியோர்க்கு அறமாதலால், அவர்கள், செல்வம் யாக்கை முதலியவற்றின் நிலையாமைகளை அற நூல்களிலும் சமய நூல்களிலும், காலம் வாய்த்த போதெல்லாம், தொகுத்தும் வகுத்தும் விரித்தும் விளம்பினர். இதனால் மண்ணுலக வாழ்வை வெறுத்து, நிறைந்த பொருளைச் சிறந்த அறநெறியில் ஈட்டுவதைக் கைவிட்டுத், தெளிந்த இன்பத்தைத் துறந்தொழுகுவதுதான் அறம் என்பது அவர்கள் கருத்து எனக் கொள்வது குற்றமாகும். வையத்தில் வாழ்பவர் அறிவு மிகுந்து, உழவு, தொழில், வாணிகம் என்ற துறைகளில் ஈடுபட்டுப், பெருஞ் செல்வர்களாய்ப் பலவகை இன்பங்களையும் ஆரத்துய்த்தல் வேண்டும்; அஃது அவர்கட்கு மெய்ம்மையுணர்வு நல்கி மேன்மை வாழ்வு எய்துவிக்கும் என்பது அறவோர்களின் ஆழ்ந்த அகன்ற நுண்ணிய கருத்தாகும். மேலும், சேய்மையிலுள்ள பொருள்களைத் தெளியக் காண்பதற்குக் கண்ணாடி போட்டுக் கொண்டவன், அதனால் காணப்படும் பொருளின்பாற் பெறலாகும் இன்பத்தை நுகராமல் அக்கண்ணாடியாகிய கருவியையே பெரிதாக எண்ணி, அதனைப் பேணுவதொன்றையே வாழ்க்கையின் நோக்கமாகக் கொள்வானாயின், அறிவுடை உலகம் அவனைப் பொருளாக மதியாது. அதுபோல, உலகியல் இன்பத்துக்குக் கருவியாகிய பொருட்கும் தொழிலுக்குமே கண்ணையும் கருத்தையும் செலுத்துவது முறை யாகாது; அறமுமாகாது என்பது பற்றியே சான்றோர் பொருள் செல்வங்களின் நிலையாமையாகிய சிறுமையைக் காட்டித் தெளிவுறுத்தினர்.

தொழில் வளர்ச்சியும் பொருட் பெருக்கமுமே வாழ்வின் குறிக்கோளாகக் கொண்ட உலக நாடுகள், இன்று விஞ்ஞான அறிவைப் பெருக்கி, விரிந்து பரந்து நிறைந்த உயிர்களையும் பொருள்களையும் சுருங்கிய காலத்தில் அழிக்கும் சிறந்த கருவிகளை ஆக்கும் சூழ்நிலையிற் புகுந்து அல்லற் படுவதை இன்று நாம் கண்ணாரக் காண்கிறோம். உயிர்ப் பண்புகளையும் உலகியல் அறப்பண்புகளையும் ஆராயும் துறையை நாடாது இன்றைய மக்களிடையே விஞ்ஞான அறிவுப் பேற்றில் வேட்கையும் முயற்சியும் வீறு கொண்டிருப்பதே போதிய சான்றுமாகும்.

மக்களின் எதிர்கால வாழ்வுக்கு அமைந்த ஒளியும் ஊக்கமும் உண்டாதற்கும் உண்டாக்குதற்கும் உரிய முயற்சியில் ஈடுபட்ட உலகமேதைகள், இன்று ஓரளவு மேனின்று உண்மையொளி பரப்புகின்றனர். இவ்வாறே ஆயிரம் ஆண்டுகட்குமுன், மக்களுலகில் போர்ப் புகழும் பொருட் புகழுமே குறிக்கோளாக நிலவியது கண்டோர், அகவாழ்வில் வெறுப்பும், துறவு வாழ்வில் விருப்பும் தோன்றத்தக்க நூலும் உரைகளும் ஆக்கி உலகியற் பொருள் வாழ்வில் மக்கட்கு நாட்ட முண்டாகாத வகையில் பணி புரிந்தனர். அதன் விளைவாக மக்களினத்தின் ஒருமை அழிந்தது; வேற்றுமை மிகுந்தது; போரும் பூசலும் பொங்கி யெழுந்தன; ஆண்மை குறைந்தது; ஆற்றல் காற்றில் பறந்தது; உழவும் தொழிலும் உருக்குலைந்து ஒழிந்தன; வறுமை வளர்ந்தது; பிறர்க்கு அடிமையுற்று வாடும் கீழ்மைநிலை உருவாயிற்று. இந்த மனப்பான்மையை மாற்றி, மக்களிடையே நிலவும் வேற்றுமைக் கொள்கைகளைப் போக்கி, ஒத்த உணர்வொழுக்கமும் உயரிய நோக்கமும், மக்கள் மனதில் அடையச் செய்வது கடன் என்று அந்நாளைய சான்றோர் உள்ளம் எண்ணத் தலைப்பட்டது.

இந்நிகழ்ச்சிகட்கிடையே, வேதங்களும், இதிகாசங்களும் தோன்றி, முழுமுதற் பொருளாகிய சிவனுக்கும் மக்கட்கும் இடையே கூறப்படும் விண்ணுலக வாழ்க்கையைக் காட்டி, விண்ணுறையும் தேவர்கள் மண்ணுலக மக்களைப் போல உழவும் தொழிலுமாகிய செயல் வகையின்றி நினைவு போனபடியே எல்லா இன்பங்களையும் நெடிது நுகர்வரென்றும், அவர்கள் சிவபரம்பொருளின் திருவருளை நேரே பெறுவரென்றும் உரைத்து, மக்களைப் போல அவர்கள் மழை, மின்னல், இடி, கடும்புயல், நிலநடுக்கம் முதலியவற்றுக்கு ஆளாகாது, அவற்றுக்குத் தலைமை தாங்கி நடத்துவர் என்றும் உரைத்தனர்; ஆயினும், புராணங்கள் தோன்றி, தேவர்கள் அசுரர்களால் பெருந்துன்பத்துக்கு உள்ளாகி வருந்தி இறந்துபட்டதையும்,

இறப்பைத் தடுப்பதற்காகக் கடல் கடந்து அமுதம் பெற முயன்றதையும், அமுதமுண்டும் அவர்களிற் பலர் இறந்ததையும் ஒளிக்காமல் உரைக்கலுற்றன. "விண்ணோர் அமுதுண்டுஞ் சாவ ஒருவரும் உண்ணாத நஞ்சுண்டு இருந்து அருள் செய்குவாய்" என்று இளங்கோவடிகளும்,

*"நூறு கோடி பிரம்மர்கள் நொந்தினர்*
*ஆறுகோடி நாராயணர் அங்கனே,*
*ஏறு கங்கை மணல் எண்ணில் இந்திரர்,*
*ஈறி லாதவன் ஈசன் ஒருவனே"*

என அப்பரடிகளும் புராணக் கருத்தை வடித்துரைத்தனர்.

மக்களுக்கும் சிவபரம்பொருட்கும் இடையே கூறப்படும் விண்ணகத் தெய்வங்கள், மக்களில் உயர்ந்து பரம்பொருள் அருள் வேண்டி வாழும் உயிர்வகை ஆகுமேயன்றி, வேறல்ல. அதுபற்றியே மணிவாசகர், அத் தேவர்கள் மெய்ம்மை பொய்ம்மை அறியாது துன்புற்று வருந்துதலின் நம் போலும் மக்களே யாவர்; அவர்கள்,

*"மூவர் என்றே எம்பிரானொடும் எண்ணி விண்ணாண்டு மண்மேல்*
*தேவர் என்றே இறுமாந்து என்ன பாவம் திரிதவரே"*

என்று அவர் பொருட்டு இரங்குகின்றார். பிறிதோரிடத்தில்,

*"வாழ்த்துவதும் வானவர்கள் தாம் வாழ்வான்; மனம் நின்பால்*
*தாழ்த்துவதும் தாம் உயர்ந்து தம்மையெல்லாம் தொழ வேண்டி"*

எனத் தேவர்களின் வழிபாட்டுக் குறிப்பும் உயர்வாக இல்லை என விளக்குகின்றார். இதனால், தேவர்கள் பிறவாப் பேரின்பத்தை நோக்காது, தேவபோகமே வேண்டுவர் என்றும், முடிவில் மண்ணில் பிறந்துதான் உய்தி பெறுவர் என்றும் தெரிந்தமையின், நம் சான்றோர் மண்ணுலக வாழ்வையே நன்கு மதித்தமை அறிகின்றோம்.

உலகியலையும் சமய நூல்களையும் ஒப்ப நோக்கிய சான்றோர், விண்ணுறையும் தேவர் வாழ்வையும் வெறுத்து, இறைவன் திருவடிக்கண் பெறலாகும் இறவாப் பேரின்பமே மக்கள் முயன்று பெறற்குரியது; இறைவன் படைப்பு நோக்கமும் அதுவேயாகும் என அறிவுறுத்துவாராயினர். இச் சூழ்நிலையில் தான் உபநிடதங்களும் சிவாகமங்களும் தோன்றத் தலைப்பட்டன. அவற்றால் மக்களுயிர்க்கும் சிவத்துக்கும் நேரே தொடர்புண்டு என்பது விளங்கிற்று. சிவமும் உயிரும் உலகும் என்ற மூன்றுமே உண்மைச் சமய வாழ்வின் அடிப்படை என்று மக்களால் உணரப் பட்டது.

நமதுசிவநெறியாகிய சைவம், மக்களது இயற்கை அறிவு வளர்ச்சி வாயிலாகத் தானே தோன்றி, மெய்யறிவு பெற்ற மேலோர் வழியாக நாட்டில் நிலவுவது; அதனால், இன்ன சான்றோரால் இன்ன காலத்தில் இன்ன இடத்தில் இன்ன சூழ்நிலையில் சிவநெறி தோற்றுவிக்கப்பட்து என உரைக்கும் வரலாறே இதற்கு இல்லாதாயிற்று. ஏனைச் சமயங்கள் ஒருவரால் படைக்கப்பட்டு நிலவுவன; அவர் கூறியனவே வேதம்; அவற்றை ஏன்? எப்படி? என ஆராயாது பட்டாங்கு ஏற்று நம்புவதே மக்கள் செயலாகும். நம் சைவ சமயமோ எனின், அறிவாராய்ச்சியை அடிப்படையாகக் கொண்டது; அறிந்தவற்றைக் கொண்டு அறியப்படாத இறை இயல்பை எண்ணியறிந்து மக்களை ஒழுகச் செய்வது. இதனைச் சிறிது விளங்கக் காண்போம்.

உலகமும் உயிர்களும் யாவரும் அறிந்தவை. உலகு அறிவில்லாதது; உயிர் அறிவு வடிவானது. அறிவில்லாத ஒன்றும், அறிவுடைய ஒன்றும், வேறு வேறு இனமாதாலால், இரண்டும் ஒன்றாய்க்கூடி இயைதற்கு வழியில்லை. அறிவில்லாத உலகப் பொருள்களால் வளரும் அறிவில்லாத உடலும், அறிவுடைய உயிரும், ஒருகாலும் தாமே கூடமாட்டா. உடல் அறிவில் பொருளாதலால், தனக்குரிய உயிரைத் தானே தேடிக் கொள்ளாது; உயிர் அறிவுடைய தாகையால் அழகில்லாத நோய் மலிந்த உடம்பை ஒருகாலும் சென்றடையாது. ஆகவே, இரண்டையும் கூட்டி உருவாக்கி வாழச் செய்யும் மூன்றாவது பொருள் ஒன்று வேண்டும். அப்பொருளே சிவம். முற்றிலும் மாறுபட்ட இயல்புடைய உடம்பினுள் இருந்து உயிரை உலகில் வாழச் செய்வதால், சிவமும் உயிரும் ஒன்றன்று; உலகுக்கு ஒன்றினை அறியும் தன்மையில்லாமையால், பொரு ளியல்பை அறிந்து உருவாக்கும் சிவம் உலகப் பொருளுமன்று; வேறாய் இலங்கும் சிவம் இரண்டிலும் வேறுபட்டது. இதனை அணு விஞ்ஞானம் நன்கு காட்டுகிறது. அணுவுக்குள் மாறுபட்ட சக்திகள் ஒன்றாய்ப் பிணிப்புண்டு புதைந்து கிடக்கின்றன. இன்றைய விஞ் ஞான அறிவுக்கு எட்டாது, இன்ன தன்மைத்தென உணரவும் படாது நிற்கும் ஒரு சக்தி ("Unknown Energy") அவற்றின் மாறுபட்ட தன்மை கெடாத நிலையில் ஒன்றுபடுத்தியுள்ளது. அதுபோல, ''இன்ன தன்மையன் என்று அறிவொண்ணாச்'' சிவ பரம்பொருளும், மாறுபட்ட உயிரையும் உலகையும் பிணித்து நிறுத்தியுள்ளது.

உலகு என்பது நிலவணு நீரணு என்பன முதலிய பல அணுக்களாலாகியது; பல்லாயிரம் ஆண்டுகளுக்கு முன்பே தொல்காப்பியர், ''நிலம் நீர் தீ வளி விசும்போடு ஐந்தும் கலந்த

மயக்கம் உலகம்'' (மரபு. 89) என்றார். அணுக்கள் யாவும் பலவகைச் சக்திகளால் ஆகியவை என்பது இன்றைய விஞ்ஞானத்தின் முடிவு. "Matter", says Eddington, "is composed of electrons and protons i.e., positive and negative charges of electricity"[1] எனவே, நாம் வாழும் உலகிற்கு முதற் காரணம் சக்தி என்பது விளங்கும். இச் சக்தியை நம் சைவம் மாயை என்று குறிக்கின்றது. மாயையாகிய சக்தி, ஒளிமயமாய் இருப்பது என்பதை அணு விஞ்ஞானம் கண்கூடாக ஒளித்திரையில் (Spectrum) காட்டிவிட்டது. "Heat, electricty light etc. represent the last stages of matter before its disappearance into the ether"[2] அந்த மாயையை ''இருளிரி சுடர்'' என்று ஞானாமிருதம் 800 ஆண்டுகட்கு முன்பே காட்டிற்று.

இனி, மாயையாகிய சக்தியை முதற் காரணமாகக் கொண்டு இவ்வுலகமாகிய காரியப் பொருளைச் சிவபரம் பொருள் ஏன் படைத்தது? மாயா காரியமாகிய இவ்வுலகப் படைப்பின் நோக்கம் (purpose of creation) யாது? என்ற கேள்வி சில அறிஞரிடையே எழுகிறது. இவ்வுலகில் வாழ்வன உயிர்கள். உயிர்களாகிய நாம் உலகில் வாழுங்கால், ஒவ்வொரு கணத்திலும் புதிய புதிய அறிவு பெறுகின்றோம். சில ஆண்டு வாழ்ந்த இளைஞனைவிடப் பல ஆண்டு வாழ்ந்த முதியவனுக்கு மதிப்புத் தருகிறோம். இதனால், உலகமாகிய மாயையின் தொடர்பு நமக்கு அறிவு விளக்கம் தருவது என்பது விளங்குகிறது. மேலும்,சிவன் உலகைப் படைத்து நம்மை அதன்கண் வாழச் செய்வதும் நாம் அறிவு விளக்கம் பெறுதற்கே என்பது தெளிவாம்.

உயிர் அறிவுடைப் பொருளாயிற்றே, அதற்கு அறிவு விளக்கம் ஏன்? என்பது அடுத்து நிற்கும்கேள்வி. உயிர்களாகிய நமக்கு நாளை நிகழ்வது தெரிவதில்லை; மாலையில் நிகழவிருப்பது காலையிலோ நண்பகலிலோ தெரிவதில்லை ஏன்? யாதோ ஓர் இருள் நம் அறிவை மறைக்கிறது. இவ்வாறே, நேற்றுக்கு முன்னாளோ நேற்றோ நடந்தது இன்று நினைவில் இல்லை. சென்ற வாரத்தில் நிகழ்ந்தனவும், சென்ற திங்கள், ஆண்டுகளில் நிகழ்ந்தனவும் மறைந்து போகின்றன. அவற்றை யாதோ ஓர் இருள் சூழ்ந்து மறப்பும் மறைப்பும் உண்டாக்குகிறது. அதாவது நாளை வருவதை அறியாமல் தடுக்குங்கால் இருளை மறைப்பு என்றும், நேற்று நிகழ்ந்ததை அறியாமல் தடுக்குங்கால் அதனை மறப்பு என்றும் வழங்குகிறோம்.

1 The Nature of the Physical World P. 3
2 Le Bon 7, 12 & 14

கால வேறுபாடு பற்றிச் சொல் வேறுபட்டதே யன்றிப் பொருளால் இருள் இருளே. இவ்வாறு நம் அறிவு முன்னும் பின்னும் ஒரு வகை இருளால் மறைக்கப்படுகிற தன்றோ, அஃது எங்கே இருக்கிறது? நமக்குள் கிடந்து நம் அறிவைச் சூழ்ந்து கொண்டு மறைக்கிறது. அதனை நம் சிவஞான போதம் மலம் என்று உரைக்கிறது. திருக்குறள் அதனை இருள் என்று காட்டி, ''இருள் சேர் இருவினை'' என்றும், ''இருள் நீங்கி இன்பம் பயக்கும்'' என்றும் கூறுகிறது. தேவாரத் திருமுறைகள், ''ஊனத்திருள் நீங்கிட வேண்டில் ஞானப் பொருள் கொண்டடி பேணும்'' என்றும், ''ஞானத்திறளாய் நின்ற பெருமான் நல்ல அடியோர் மேல் ஊனத்திருளை நீக்குமதுவும் உண்மைப் பொருள் போலும்'' என்றும் அறிவுறுத்துகின்றன. உலகில் உடம்பு கொண்டு வாழ்க்கை நடத்துவதால், அனுபவம் என்ற ஞானவெளியால் இவ்விருள் பைய நீங்குகிறது. இதனால், உலகப் படைப்புக்குக் காரணம் உயிர்கள் இருள் நீங்கி அறிவு விளக்கம் பெறுதற் பொருட்டு என்பது நன்கு விளங்கும். இக் கருத்தையே,

*''காரியம் காசினியாதி; ஏரியல்*
*ஈசன் கத்தா இவற்கு இது போகம்*
*ஆதல் செல்லாது. அகன்றுயர் கருமம்*
*தானோ நுகர்தல் செல்லாது ஆனாது*
*என்னை செய்தது எனின்? அன்னோ!*
*கொன்னே செய்யான் தன்நேர் இல்லோன்;*
*பாரிசேடம் அதனில், பரனுக்கு*
*ஏரியல் பரன்பசு என்று அறி இனிதே''*

என்று ஞானாமிர்தம் கூறுகிறது.

உயிரைச் சூழ்ந்திருப்பது போல, உயிர்கள் வாழும் உலகையும் இருள் சூழ்ந்திருக்கிறது. மன் கணையின் (Sputnik) வாயிலாக ''வளியிடை வழங்கா வழக்கரு நீத்தம்'' (365) என்று புறநானூறு கூறும் நீத்தத்தில் (Ether) உலவிய ருசிய நாட்டு யூரி காகாரின் (Yuri Gagarin) என்பவர், நிலவுருண்டையைச் சுற்றி நீல இருள் சூழ்ந்துளது என்றது பலர்க்கு நினைவிருக்கும். "The earth has a blue halo round it and the colours on the horizon change from light blue, thorough blue, dark blue and violet to the black of the sky."[3] இவ்வளி வழங்கா நீத்தத்தைக் கண்ட தமிழ்ச் சான்றோர், நிலவுலகு இருளில் மூழ்கிக் கிடக்கிறது என்ற கருத்தை, முருகப் பெருமானுடைய திருமுகத்தின் அருள் நிலையை உரைக்குமிடத்து ''மாயிருள் ஞானம் மறுவின்றி

3 Soviet Man in Space - P 22

விளங்கப், பல்கதிர் விரிந்தன்று ஒருமுகம்'' என்று காட்டியுள்ளனர். இவ்விருள், ஞாயிறும், திங்களும் கோள்களும் மறைந்த நள்ளிரவில் நாம் காணத் தோற்றமளிப்பதை நுணுகி உணர்பவருக்கு, உலகம் இருளில் கிடப்பதென்பது தெரியும். நல்ல வெய்யிற் காலத்தில் மாசு மறுவில்லாத நீலவானத்தில் உச்சிப் பொழுதின் ஞாயிறு ஒளிவிட்டுத் திகழும் அமையத்தும் அதன் வெயிலொளியில் இருள் தோய்ந்து உளது என்பாராய் மாதவச் சிவஞான முனிவர், வெயிலொளியில் கையை நீட்டியவழித் தோன்றும் நிழல் யாது? அஃது இருளல்லது வேறில்லை என்று காட்டியது அறிஞர் தெரிந்த தொன்று. ஞாயிற்றின் கதிரை ஆராய்ந்த விஞ்ஞானிகள், நீலக்கூறு கண்டு அது வேறன்று, இருட்கூறு என்கின்றனர். இவ் வுண்மைகளை மெய் பெறத் தெளிந்த மேலோரான உமாபதி தேவர்,

*''ஒளிக்கும் இருட்கும் ஒன்றேயிடம் : ஒன்று மேவிடில் ஒன்று*
*ஒளிக்கும்எனினும் இருள் அடராதுஉள் உயிர்க்குயிராய்த்*
*தெளிக்கும் அறிவு திகழ்ந்துள தேனும்; திரிமலத்தே*
*குளிக்கும் உயிர், அருள் கூடும்படி கொடிகட்டினனே''*

என்று எடுத்துரைப்பது, விஞ்ஞான அறிவு பெருகிய இன்றைய நமக்கு மிக்க இறும்பூது பயக்கின்றது.

இவ்வாறு புறத்தே இருள்சூழ்ந்த உலகில், ஞாயிறு முதலிய ஒளிப்பொருளைத் தந்து உய்விக்கும் முதல்வனாகிய சிவ பரம்பொருள், அகவிருளாகிய மலம் நீங்கி அறிவொளி பெற்று நாம் இன்புற வேண்டுமென்ற திருவுள்ளங் கொண்டே உலகைப் படைத்துள்ளான் என்பது, இதுகாறும் விளக்கியவாற்றால் நன்கு உணரலாம்.

இங்கே, உலக வாழ்வு, உயிர்கள் இருள் நீங்கி இன்புறுதற்கு எவ்வாறு துணை செய்கிறது? என்றொரு கேள்வி எழுகிறது. உயிர்கள் உலகில் வாழ்தற்பொருட்டு உடல் படைக்கப்பட்டது; உலகப் பொருளை யுண்டு வளர்தலால், உடலும் உலகிற்குக் காரணமாகிய மாயையால் ஆகியதாகும். உடலில் அறி கருவி ஐந்தும், செயற் கருவி ஐந்தும், மனம் சித்தம் அகங்காரம் புத்தி என்ற நான்குமாகிய அகக்கருவி நான்கும் உள்ளன. உலகியற் பொருளை அறிதற்கும் அப்பொருளிடையே இருந்து செய்வன செய்தற்கும் அறிகருவி செயற்கருவி என்ற இரண்டும் தொழிற்படுகின்றன. இவ்விரண்டும் உடலின் புறத்தே இருத்தலின் இவற்றைப் புறக்கருவி என்பர். இருவகைக் கருவிகளையும் பொறிவட்டம் (Sensory Zone) எனத்

தொகுத்துரைப்பர். மனம் முதலிய நான்கும் உடலுக்கு உள்ளே இருத்தலால் அகக்கருவி என்றும் புந்தி வட்டம் (Mental Zone) என்றும் குறிக்கப்படும். ''புந்தி வட்டத்திடைப் புக்கு நின்றானையும் பொய்யென்பனோ'' என்று அப்பரடிகள் அருளுவது காண்க. புறக்கருவிகள் நிகழ்கால நிகழ்ச்சிகளை அறிதற்கும் செயற்கும் உரியன. அகக்கருவி முக்கால நிகழ்ச்சிகளையும் எண்ணியறியதற்கு அமைந்தன. அகக் கருவியான புந்திக்கு உள்ளே உயிர் இருக்கிறது. உயிரைச் சூழ்ந்து கலை முதலிய உட்கருவிகள் உள்ளன. அவற்றை உயிர்வட்டம் (Spiritual Zone) என்றல் வேண்டும். அவை உயிரின் அறிவு, விருப்பு, தொழில் என்ற மூவகை ஆற்றல்களையும் தொழிற்படுத்துவனவாகும். அவற்றை வித்தியா தத்துவம் என்ற சாத்திரங்கள் கூறும்.

நம் உடற்குள் இருக்கும் கலை முதலிய உட்கருவிகளைச் சிவ பரம்பொருளின் அருட்சக்தி தோய்ந்து தொழிற்படுத்தும். சிவனது அருட்சத்தி அறிவு தொழில் என இரண்டாய் இயைந்து, கலை முதலிய கருவி வாயிலாக உயிரின் அறிவு விருப்பு செயல் ஆகிய மூன்றையும் எழுப்பி, அவற்றிற்குரிய புந்தி வட்டத்து அறி கருவிகளையும் பொறிவட்டத்துப் புறக்கருவிகளையும் இயக்கும் அறிவைச் சிவம் என்றும், செயலைச் சக்தி என்றும், அறிவும் செயலும் ஒத்த அளவில் சதாசிவம் என்றும், அறிவினும் செயலளவு மிகுதற்கு ஈசுரம் என்றும், செயலிலும் அறிவாற்றல் மிகுங்கால் சுத்தவித்தை யென்றும் நூலோர் வழங்குவர். அருள் வாயிலாகிய சிவ முதலிய ஐந்தையும் சிவதத்துவ மென்பர். சிவ தத்துவம், வித்தியாதத்துவம், புந்திவட்டம் பொறிவட்டம் நிலநீர் முதலிய பூதவட்டம் என்ற மூன்றும் கூடிய ஆன்ம தத்துவம், ஆகிய மூன்றையும் கொண்டது நமது உடல். உடலோடு கூடி உயிர் இயங்கும்போது இம்மூவகைத் தத்துவங்களும் தொழிற்படுகின்றன. மனத்தால் எண்ணும்போதும், வாயாற் பேசும்போதும், கை கால்களால் ஒரு தொழிலைச் செய்யும்போதும் இம்மூவகைத் தத்துவங்களும் செயல்படுகின்றன.

செயல்கள் அத்தனையும் வினை எனப்படும். மனத்தால் நினைத்திலும் நினையாமையும், வாயாற் பேசுதலும் பேசாமையும், உடம்பால் ஒன்றைச் செய்தலும் செய்யாமையும் யாவும் வினையாகும்.

ஒரு வினை நிகழ வேண்டின் அதனைச் செய்வது ஒன்று வேண்டும். வினையால் விளைவது பொருள், பயன் என இருவகைப்படும். பொருள், செயப்படுபொருள்; பயன் இன்பம்

துன்பம் என்பன. இன்பம் பயப்பது நல்வினை; துன்பம் பயப்பது தீவினை. வினைப்பயன் அவ்வினையைச் செய்பவர்க்கே உரியது; அது வினை தொடங்கும்போது உடன் தோன்றி, அது வளரத் தானும் வளர்ந்து, அது முடியுங்கால் இன்ப வடிவிலோ துன்ப வுருவிலோ அமைகிறது. நாளுக்கு இரண்டு ரூபாய் கூலி பேசிக்கொண்டு ஒருவன் ஒரு வினையைச் செய்வதாக வைத்துக் கொள்வோம். அவன் காலையில் அதனைத் தொடங்கும் போதே பயனாகிய கூலியும் தோன்றி வளர்கிறது. பகல் ஒரு மணிக்கு அது ஒரு ரூபாயாகிறது. மாலை மூன்று மணிக்கு ஒன்றரை ரூபாயாகி, ஆறு மணிக்கு இரண்டு ரூபாயாகிறது. வினை முடிந்தபின் அதனிடத்தே ஊழ்த்திருக்கும் பயனாகிய இரண்டு ரூபாயும் அவனை அடைகிற வகையில் வினைப்பயனாய் ஊழாய் நிற்கிறது.

வினைப்பயன் உயிரில்லாத அருவப் பொருளாதலால் அது தானே சென்று செய்பவனை அடையாது; அருவமாய் இருத்தலால் வினைப்பயனைச் செய்பவனும் எடுத்துக் கொள்ள முடியாது. அதனால், ஒருவன் ஒருவினையைச் செய்தால், அவ்வினைப்பயன் அவனையே அடையுமாறு இறைவன் ஊட்டுகிறான். இச்செயலால் வினை செய்பவன் அவ் வினைப்பயனை நுகராமல் போவதற்கு இடமில்லையாகிறது.

இவ்வாறு உயிர்கள் உடலைக்கொண்டு உலகில் வினை செய்வதால், அறிவு விளக்கமும் இன்பமும் பெறுகின்றன. அதனால் அவற்றின் அறிவைச் சூழ்ந்த இருள் நீங்குகிறது. இவ்வகையால் மக்கள் உடலும், வினையும் கொண்டு உலகில் செய்வன செய்து நுகர்வன நுகர்ந்து வாழ்வதால் இருள் நீங்கி இன்பம் பெறுகின்றனர்.

உடம்பும் உலகுமாகிய மாயையும், வினையும் என்ற இரண்டும், உயிர், இருள் நீங்கி இன்புறுதற்குக் கருவியும் உதவியுமாயிருக்க ''வினையின் நீங்கி விளங்கிய அறிவின் முனைவன்'' எனத் தொல்காப்பியரும், ''வினையால் அசத்து விளைதலால் ஞானம் வினை தீரினன்றி விளையாவாம்'' என்று மெய்கண்டாரும், இவர்கட்கு இடையில் தோன்றிய பெரியார்கள், ''வினையாயின தீர்ந்து அருளே புரியும் விகிர்தன் விரிகொன்றை, நனையார் முடிமேல் மதியம் சூடும்நம்பான்'' என்றும், 'வெய்தாய வினைக்கடலில் தடுமாறும் உயிர்க்கு மிக இரங்கி அருள்புரிந்து வீடுபேறு ஆக்கம் பெய்தானைப் பிஞ்ஞகனை'' என்றும், வினையை வெறுத்துப் பேசுகின்றனர். இவ்வாறே உடம்பின் வெறுக்கத்தக்க கூறுகளை வகுத்து ''ஊனார் புழுக்கூடு இதுகாத்து இங்கு இருப்பதானேன்'' என்றும்,

''பொத்தையூன் சுவர் புழுப்பொதிந்து உளுத்து அசும்பொழுகிய பொய்க்கூரை, இத்தை மெய்யெனக் கருதிநின்று இடர்க்கடலில் சுழித் தலைப்படுவேன்'' என்றும் உடம்பை வெகுண்டுரைக்கின்றனர். பெரியோர்களின் இப்பேருரைகள், முன்னே நாம் கண்ட கருத்துக்கு மாறுபடுகின்றனவே என்று உண்மை யாராய்வார் உள்ளத்தில் ஐயங்கள் எழும். எழுவது முறையுமாகும்.

இன்ப வடிவினனாகிய இறைவன், உயிர்கள் இன்பம் பெறுவது கருதி யளித்த உடம்பும் உலகும் வினையும் இன்ப வடிவினவே யாகும். உடம்புற்று நிற்கும் உயிர்கள் மனம் மொழி மெய்களால் உலகப் பொருள்களினூடே வினை செய்து வாழ்க்கை நடத்துங்கால், அவ்வினை முடிவில் இன்பம் தோன்றுகிறது. ''உள்ளிய வினை முடித்தன்ன இனியோள்'' என நற்றிணை கூறுவது காணலாம். அரசியலில் உயர்ந்த வினைக்குரிய பதவியிலிருந்து அதன் இன்பச் சுவை கண்டவன் அதற்கே அடிமையாகித் தன் தனி வாழ்க்கைக்குரியவற்றையும் நன்கு எண்ணாது அப் பதவியையே காதலித்து வருவது போல, வினைக்குரிய கூறுகள் யாவும் ஒழுங்காகத் துணை செய்யுங்கால் வினை வழியாக விளையும் பொருளும் பயனும் தோன்றிப் புகழும் இன்பமும் தருகின்றன; இவ்வின்பத்தை நுகரும் உயிர், இன்ப நாட்டத்தையே இயல்பாக உடையதாகையால், வினைக்கே அடிமையாகி அதுதரும் புகழ் இன்பங்களையே நச்சிப் பற்றுக் கொள்கிறது.

உடம்பும் உலக வாழ்க்கைக்கு ஏற்ற வன்மையும் அழகும் பெற்று இன்பக் கருவியாய், அறமும் பொருளும் நல்கும் இன்பத்தை நுகர்கிறது. இவ்வகையில் உடம்பும் இன்பப் பேற்றுக்கு வாயிலாவதால் அதனுள் உறையும் உயிர் உடம்பின்பால் (மாயைபால்) பற்றுக் கொள்கிறது. ''இழத்தொறும் காதலிக்கும் சூதேபோல் துன்பம் உழத்தொறும் காதற்றுயிர்'' என்று திருவள்ளுவரும், ''உயிர்க்காய் வைத்ததோர் மலமாய் மாயை மயக்கமும் செய்யும் அன்றே'' என்று அருணந்திசிவனாரும் கூறுவர். இவ்வாறு வினையும் உடம்பும் இன்பம் நல்குவதால் அதுபற்றி, உயிர்கள் வினையேவாழ்க்கைக்கு உறுதியாவது என்றும், உடம்பைப் போற்றிப் பேணுவதே வாழ்வின் பயன் என்றும் மயங்கி, அவ்விரண்டுக்குமே அடிமையாகின்றனர். வினை நுகர்வும் உடம்பைப் பேணலும் வினையாதலால், அச் செயல்களால் வினைகளும் பெருகுகின்றன. வினை செய்யச் செய்யப் பயன் பல விளைதலால், அவற்றைச் செய்யும் உயிர்கள் வினைப் பயனை

நுகர்ந்தே கழிக்க வேண்டியவாகின்றன. வினை நுகர்ச்சி உடம்பில்லாமல் ஆகாது. ஆகவே, வினைக்காக வேறு வேறு உடம்பெடுக்க வேண்டிய இன்றியமையாமை உண்டாகிறது. இவ்வாறு உயிரும் வினையும் உடம்பும் ஒன்றோடொன்று பிணிப்புண்டலால், வினையையும் உடம்பாகிய மாயையும் கட்டென்றும் பாசமென்றும், உயிரைச் சூழ்ந்து பற்றி நிற்கும் இருளை மலம் என்றும் அசத்தென்றும் சான்றோர் கூறினர்.

இருள்நீங்கி இன்பம் பெறுதற் பொருட்டு இறைவன் படைத்து உதவிய உலகின்கண், அவன் அருளால் கிடைத்த உடம்பிடை நிலவும் உயிர், இருணீக்கத்துக்குரிய வினையை மேற்கொள்ள வேண்டும் என்பது பெறப்படும். அவ்வினைகள் மேன்மேலும் பிறப்பதற்கே ஏது வாதலையும் காண்கிறோம். இவற்றை எண்ணியே திருஞானசம்பந்தரும் ''அவ்வினைக்கு இவ்வினையாம் என்று சொல்லும் அஃது அறிவீர்; உய்வினை நாடாதிருப்பது உந்தமக்கு ஊனம் அன்றோ'' என்றார். உய்வினை என அவர் கூறியது யாது? உய்வினை என்பது சிவஞானச் செய்தி என அறிவு நூல்கள் கூறும். ஞானசம்பந்தரும், ''ஊனமாம் உடம்பினில் உறுபிணிகெட எண்ணில், ஞான மாமலர் கொடு நணுகுதல் நன்மையே'' என்பர். மெய்கண்டார் ''ஞானம் வினை தீரினன்றி விளையாது'' என்பர். இவர்கள் கூறுவன எல்லாம் அடங்கத் திருமூலர்,

*''வினையால் அசத்து விளைவதும் தேரார்*
*வினைஞானம் தன்னில் வீடலும் தேரார்*
*வினைவீட வீடு என்னும் வேதமும் தேரார்*
*வினையாளர் மிக்க விளைவறி யாரே''*

என்று சுருங்க உரைக்கின்றார்.

வினை தீர்தற்கு வாயிலாயின் அந்த ஞானம் யாது?

இன்று, ஞானம் என்பது உலகியலில் விஞ்ஞானத்தின் மேல் நிற்கிறது. விஞ்ஞானிகளையே இன்றைய அரசியல் - பொருளியல் - உலகுகள் ஞானிகளாகக் கொண்டு அவர்கட்கு வழிபாடு செய்கிறது. அவர்களது விஞ்ஞானம் எங்கே நிற்கிறது என்று காண்பது நன்று. ஓர் உண்மையைக் கண்டறிய முயலும் ஒரு விஞ்ஞானி பன்னாளும் பன்முறையும் பல்வகைப் பொருளையும் கொண்டும் ஆராய்கின்றான்; உண்மை காண முடியாமல் மெய் சோர்ந்து அறிவு சோர்ந்து தளர்ந்து சாய்கிற நிலையில் ஓர்உணர்வு அவன் உள்ளத்தில் ஒளிர்கிறது. அதனைச் செயற்படுத்துகிறான்; உண்மை விளங்கி விடுகிறது.

ஓடுகிறான், ஆடுகிறான், பாடுகிறான், பித்தேறியவன்போல் பேசி மகிழ்கிறான். சிறிது போது கழித்து, இப்பொழுது தோன்றிய இவ் வுணர்வு ஏன் முன்னமே தோன்றவில்லை என எண்ணுகிறான். அவனுக்குப் பெர்க்சன் (Bergson) என்ற அறிஞர், Matter and Memory என்ற நூலில், அது உள்ளுணர்வு (Intuition) என்று உரைக்கின்றார். அவ் வுள்ளுணர்வை (Intuitionism) நம் முன்னோராகிய சிவஞானச் செல்வர்கள் அருள் என்றும், அருள் ஞானமென்றும், அருளறிவு என்றும் பலபடப் பாராட்டியுரைப்பர். விஞ்ஞானியின் கருவியாகிய உடலும் கரணமாகிய மனமும் உண்மையாக முயன்று ஓய்ந்து அயர்ந்து செயலறுகின்ற போது உள்ளுணர்வு தோன்றி ஒளி செய்யப் பார்க்கின்றோம். பாரதத்தில் பாஞ்சாலி, அரசவையில் துச்சாதனன் கைப்பட்டுக் கலங்கியபோது, கணவன்மார் கைவிட்டனர்; குடிப் பிறந்தோர் கைவிட்டனர்; சான்றோர் சமழ்த்தனர்; அரசும் கைவிட்டது. கண்ணீர் சொரிந்தாள்; கை சோர்ந்தாள்; மெய் சோர்ந்தாள். சுருங்கச் சொன்னால், பாஞ்சாலியின் கருவி காரணங்கள் யாவும் வலியழிந்து கையறவுபட்டன. அப்போது அவள் கோவிந்தா கோவிந்தா என அரற்றினாள். அவள் உள்ளத்தில் ஊறாத அமிழ்து ஊறிற்று; உடல் முழுதும் பரவிப் பெருவலி நல்கிற்று; துச்சாதனன் சோர்ந்தான்; அங்கிருந்த அனைவரும் அஞ்சி அலமந்தனர்; இதுதான் திருவருள் உணர்வு, அறிவு, உதவி என்று பாராட்டப்படுவது. இதனைச் சிறிது எண்ணினால் பாஞ்சாலியின் துகில் பற்றிய இச்செய்தி, திருவருள் உயிர்கட்கு அருள் செய்யும் செயற்கு ஏற்ற எடுத்துக்காட்டாவது இனிது விளங்கும்.

இந்த அருளுணர்வை உள்ளத்தின்கண் தோற்றுவித்து அதனை முன்னிறுத்தி, அதற்கு முதலாகிய சிவ பரம்பொருளை உள்ளத்தின்கண் எழுந்தருளச் செய்வதுதான் சித்தாந்தச் செந்நெறியின் அறிவுரை.

அருளொளியை உள்ளத்தில் தோற்றுவிப்பது எவ்வாறு?

மாயை என்ற சக்தி வடிவாய்த் தன் அருளாற்றலில் ஒடுங்கிக் கிடந்ததனை அணுவாக்கிப் பின் அவற்றைக் கொண்டு உலகு உடம்புகளை இறைவன் படைத்து உயிர்கட்கு உதவியது, அவ்வுயிர்கள் உடம்பின்கண் நின்று வாழ்வாங்கு வாழ்தற் பொருட்டு என்று முன்பே கண்டோம். உலகு உடம்புகளின் ஒவ்வோர் அணுவும் ஒழுங்காகவும், முறை பிறழாமலும், வளம் எய்தும்போது வளர்ந்தும், கேடு வரும்போது தற்காத்தும், தானே நிலவுதற்பொருட்டு, அவனது அருளாற்றல் ஒவ்வோரணுவிலும் கலந்து பரந்து நிறைந்து நின்று

இயக்குகிறது. அதனால், நாம் அவற்றின் நலம் கண்டு மகிழ்ந்தும், வேண்டுமளவு கையாண்டு பயன் துய்த்தும் வாழ்கிறோம். இன்று மக்களுயிர் நிலவுலகின் பல்வேறு கூறுகளை நுணுகியாராய்ந்து பயன் துய்த்து இன்புறுகிறது. நிலம் நீர் நெருப்பு காற்று வானம் ஆகிய ஐந்தினும் துருவியாய்ந்து அவற்றின் நுட்பங்களைப் பற்றி நல்லறிவு பெற்று வருகிறது. நிலனும் கடலும் காற்றும் வானும், இன்று மக்களுயிர் இயங்குதற்கு ஏற்ற இடமாய்க் கொண்டு இன்புறுதற்கு அறிஞர் செய்த ஆராய்ச்சிகள் ஏதுவாகின்றன. அந்த ஆராய்ச்சியாளர் உள்ளத்தில் நின்று அவரது அறிவுக்கும் முயற்சிக்கும் ஒப்ப ஒளி தந்து உதவிய திருவருள் திறத்தை உன்னுதல் வேண்டும். இன்றைய விஞ்ஞானம், தனது புதிய புதிய நுண்ணிய கண்டுபிடிப்புகளுக்கும் காரணம் தனது நுழைபுலனும் அதிரா வூக்கமும் அயரா முயற்சியுமே என நினைக்கிறது. அவற்றின் உள்ளீடாய் நின்று ஒளி வழங்கிய திருவருளை மறந்து விடுகிறது. அதனால் உலகியல் வாழ்வை ஆராயும் அறிவு ''அறிதோறு அறியாமை கண்டற்று'' என்று திருவள்ளுவர் கூறியதுபோல, அறிதோறும் அறியாமை கண்டு வருந்துகிறது. அந்த அறிஞர்கள்,

"The more we learn the less we know; every advance reveals new mysteries and new uncertainties; the molecule discloses the atom, the atom discloses the electron, the electron discloses the quantum and the quantum defies and overlaps all our categories and all our laws. Our instruments, we perceive, are bound up with matter, and our senses are bound up with mind; it is through these mists that we, 'flakes on the water' would comprehened the sea"[4]

என்று கூறுகின்றனர். நான் முன்னே காட்டிய பாஞ்சாலியின் செயலை மறுபடியும் காண்போம். அவள் துரியோதனன் பேரவையில்,

*''ஆறாகஇரு தடங்கண் அஞ்சன வெம்புனல் சோர அளகம் சோர*
*வேறான துகில் தகைந்த கைசோர மெய்சோர வேறோர் சொல்லும்*
*கூறாமல் கோவிந்தா கோவிந்தா என்றரற்றிக் குளிர்ந்து நாவில்*
*ஊறாத அமிழ்தூற உடல் புளகித்து உள்ளமெலாம் உருகினாளே.''*

என்று பாரதம் கூறுகிறது. தனக்குக் கோவிந்தன் துணை செய்வான் என்பதை அறிந்திருந்தும், தன் உடல் கருவி கரணங்களை முழுதும் செலுத்தித் தன் மானத்தைக் காக்க முயன்றாள்; அவை யாவும் சோர்ந்து செயலற்றதைக் காண்கிறாள். இறைவன், தான் அருளிய உடலும் மனமும் சோர்வு எய்தும்போது,அச் சோர்வு போக்கி,

4 Will Durant's 'Pleasures of Philosophy' P. 34.

இன்றியமையாத துணை செய்வது தனக்கு அருட் கடனாதலின், ஊறாத அமிழ்து தந்து அவளுடைய உடலின் சோர்வு போக்கி வன்மை தந்தான்; அவனது திருவருள் அவட்கு வேண்டிய சீலையையும் தோற்றுவித்தது. இவ்வாறே இயற்கைப் பொருளை ஆராய்ந்த அறிஞர்களுக்கு, அவர்களுடைய கருவி கரணங்கள் முழுதும் ஒய்ந்து அயர்ந்தபோது வேண்டிய அறிவொளி தந்து பெறுதற்கரிய நுண் கருவிகளைக் காணும்படி திருவருள் உதவியுள்ளது. இன்றைய நமக்கு ஆயிரக்கணக்கான மைல்கள் தூரமாகத் தோன்றவில்லை; ஆயிரக்கணக்கான மைல்களுக்கு அப்பாலிருப்பவரோடு பேசுவது அருமையாக இல்லை. ஆயிரம் மைல்களுக்கு அப்பாலிருந்து பேசுபவரையும் அவர் பேச்சோடு உருவத்தையும் காண்பது வியப்புத் தரவில்லை. இவ்வளவு நலங்களையும் பெறுவதற்குத் தோன்றாத் துணையாவது அருள் என்று அறிதல் வேண்டும்.

ஒரு சிறுவன் ஒரு கணக்குப் போடுகிறான். மிக்க கண்ணும் கருத்துமாய்ப் போட்ட விடத்தும் உண்மைவிடை தோன்றவில்லை. தலையில் அடித்துக் கொண்டு வருந்துகிறான்; அழுகிறான்; புழுங்குகிறான். ஒரு வழிக்குப் பல வழிகளை எண்ணுகிறான்; சோர்வு எய்துகிறது. அதனூடே ஒரு குறிப்புப் பிறக்கிறது. கணக்கைப் போடுகிறான்; உண்மை விடை வந்து விடுகிறது. ஆடுகிறான்; மகிழ்கிறான்; அளவில்லாத இன்பம் அடைகிறான். சோர்வும் வருத்தமும் எய்துமுன் வராத விடை, அச் சோர்வு தோன்றியபின் வருகிறது. கருவி கரணங்கள் மெய்யாக உழைத்துச் சோர்வு எய்துங்கால் உண்மையொளி எய்துகிறது. உடம்பையும் உள்ளத்தையும் மெய்யாக உழைப்பின்கண் செலுத்துவது திருவருளின் துணையைப் பெறுதற்கு நேரிய வழி என்பது இதனால் தெளிவாகக் காணலாம். இதுதான் சிவஞான போதம் கூறும் தவம். அதில் மெய்கண்டார், ''ஐம்புல வேடரின் அயர்ந்தனை வளர்ந்தெனத், தம்முதல் குருவுமாய்த் தவத்தினில் உணர்த்தவிட்டு, அந்நிய மின்மையின் அரன்கழல் செலுமே'' என்றார். தவம் என்றது உண்மை யுழைப்பு. குரு, இருள் நீக்கும் ஒளிப் பொருள்; ஒளி நல்கும் பொருள். அறிவுக் கறிவாய் அகத்தே நின்று ஒளிர்வதேயன்றிப் புறத்தே அறிவு நல்கும் மக்களாகவோ பொருளாகவோ உதவுவது பற்றித் தம் முதல் குருவுமாய் உணர்த்துவன் என்று அருளுகிறார்.

நான் இப்பொழுது உங்கள் முன் பேசுகிறேன். என் பேச்சின் ஒலியை இவ்வொலிபெருக்கி பன்மடங்கு உயர்த்தி, உங்களிடையே

பரப்புகிறது. அது செய்யும் வேலை யாது? என் பேச்சை முதற்கண் வாங்குதல் ஒன்று; பன்மடங்கு பெருக்குதல் ஒன்று; பெருக்கிய அதனை வெளியிடல் ஒன்று. வாங்கும் கருவி ஒலியை வாங்குதல் தவிர வேறு எதையும் செய்யாது; ஒலி மிகுவிக்கும் கருவி அஃது ஒன்றைத் தான் செய்யும்; ஒலி பரப்பும் கருவி பரப்புவதொன்றைத் தான் செய்கிறது. இவை ஒவ்வொன்றும் தனித்தனிக் கூறுகளாயினும், என் வாயினின்றெழும் ஒலி, எழுந்தவுடனே உங்கள் செவியில் விழுமாறு அத்துணை விரைவில் இதன் உட்கருவிகள் பணி புரிகின்றன. இவற்றிற்கெல்லாம் மூலகாரணம் யாது? வேறு ஒன்றுமன்று; மின்சக்தி.

நான் பேசுவதைக் காணுங்கள். சிவதத்துவத்தால் இயக்கப்படும் வித்தியாதத்துவத்தால் என் உயிரறிவு பேச முற்படுகிறது; ஆன்ம தத்துவத்து மனம் அதற்கு வேண்டும் கருத்துக்களை எடுத்து வழங்குகிறது; அவை உடனே சொல்லுருவும் ஒளியும் பெற்று, என் தொண்டை, நா, பல், வாயிதழ் ஆகியவற்றின் செயற்பாட்டால் வெளிவருகின்றன. இவை யாவும் ஒழுங்காக வேலை செய்தாலன்றி என் பேச்சு நிரம்பாது. இவை எங்ஙனம் வேலை செய்கின்றன? இவற்றுக்கு மூல காரணம் யாது? அதுதான் ஒலி பெருக்கியை இயக்கும் மின்சக்தி போலும் அருட் சக்தி. அதனை அறிவதுதான் அருளறிவு. அருளொளியை உள்ளத்தின் கண் தோன்றக் காணும் திறமும் இதுவேயாகும்.

இம்முறையில் காணுமிடத்து எப்பொருளும் அருளாட்சியில் அமைந்து கிடப்பது தெரிவதால், காரைக்கால் அம்மையார்,

*"அருளே உலகெல்லாம் ஆள்விப்பது ஈசன்*
*அருளே பிறப்பறுப்ப தானால் - அருளாலே*
*மெய்ப்பொருளை நோக்கும் விதியுடையேன் எஞ்ஞான்றும்*
*எப்பொருளும் ஆவ தெனக்கு"*

என்று அருளுகின்றார்.

இந்த அருள் எங்கே உளது? இந்த ஒலி பெருக்கியை இயக்கும் மின் சக்தி எங்கும் பரந்து இருப்பது; அஃதே இல்லாத இடமே இல்லை என்பது விஞ்ஞானம் உணர்த்தும் உண்மை. ஆனால், அது இன்ன தன்மைத் தென்று இன்று வரை எந்த விஞ்ஞானியும் கண்டதில்லை. அதனைப் பல பொருளிலிருந்து வெளிப்படுத்திப் பயன் கொள்ள அறிந்த விஞ்ஞானம், அதன் தோற்றக் கூறுகளை அறிய மாட்டாது கைவிட்டு விட்டது. அந்த மின்சக்தி சில பொருள்களின் ஊடே

செல்ல முடிவதில்லை. மரக்கட்டையில், ரப்பரில் அது பாய்வதில்லை. இத்தகைய குறைபாட்டுக்கு உள்ளாகிய மின்சக்தி போலாது, அருட்சக்தி உயிர்ப்பொருள் உயிரில் பொருள் எல்லா வற்றிலும் கலந்து கொள்ளும் பெருமையுடையது. அதன் இயல்பு கண்ட அருளாளர், அருட் சக்தி, உயிரில் பொருள்களில் ஒன்றாயும், உயிர்ப் பொருளில் உடனாயும், தனி நிலையில் வேறாயும் இருக்கும் என்று கூறுகிறார்கள். இதனை, ''உலகெலாமாகி வேறாய் உடனுமாய் ஒளியாய் ஓங்கி'' நிற்பது எனச் சிவஞான சித்தியார் கூறுவதை நினைவிற் கொள்ள வேண்டும். உயிரில் பொருள்கள் அறிவில் லாதவையாதலால், அவை ஒழுங்கு முறை பிறழாமல் அமைவது வேண்டி அவற்றோடு ஒன்றாயும், உயிர்கள் அறிவுடையவை யாதலால் அவற்றிற்கு அறிவு உதவுவது குறித்து உடனாயும் இருக்கிறது. Nature obeys certain laws என்பது விஞ்ஞானி கண்டுரைக்கும் முடிவு.

இவ்வாறே, இத் திருவருள், நம் உடற் கூறுகளில் ஒன்றாயும், உயிரோடு உடனாயும் இருக்கும் திறத்தை அறிதல் வேண்டும் என்பது சிவநெறி கூறும் அறிவுரையாகும். அது சிந்தனையால் அறியப்படும். நான் பேசும்போது என் பேச்சை உருவாக்குங்கால் என் உடற்கூறுகள் ஒழுங்காக வேலை செய்கின்றன. அறிவில்லாத இக்கூறுகள் மின் சக்தியால் இயங்கும் எந்திரக் கூறுகள் போல ஒழுங்காகவும் முறையாகவும் வேலை செய்வதற்குக் காரணம் அருட் சக்தி என்பது ஆழ்ந்த சிந்தனைக்கே புலனாகிறது. கணக்குப்போட்ட சிறுவனுக்குத் தொடக்கத்தில் தோன்றாத உண்மை, பல முயற்சிகட்குப் பின்னே தோன்றியது ஏன் என்று சிந்திக்கும்போது, அருட் சக்தியின் உண்மை புலனாகிறது. இது பற்றியே மெய்கண்டார், ''ஊனக்கண் பாசம் உணராப் பதியை ஞானக் கண்ணினிற் சிந்தை நாடுக'' என்றார்.

மின் சக்தியைக் கண்ட விஞ்ஞானிகள் அது வான வெளியில் ஒளி வழங்காத நீத்தத்தில் (Ether) ஒடுங்குவது கண்டு அதனை ஆராய முற்பட்டனர். அஃது இன்ன தன்மையதென்று யாரும் அறிய முடியவில்லை. "Ether? No body know"[5] என வில்டூரண்டு என்பவரும், "The ether, said Lord Salisbury, is only a noun for the verb to undulate, it is a fiction created to conceal the learned ignorance of modern science"[6] என்று William James என்பவரும், "The ether is not a kind of matter; it is non-material" என்று எடிங்டன் என்பவரும் கூறுகின்றனர்.

5 Pleasures of Philosophy - P 40
6. The meaning of Truth - P. 59

ஆனால், சிவநெறிச் செல்வர்களாகிய நம் முன்னோர், அருட்சக்தி யொடுங்கும் நீத்தம் சிவபரம்பொருள் என்றும், அதற்கு அந்த அருளே திருமேனி என்றும் அறிவுறுத்தருளினார்.

மேலே நிகழ்ந்த அருளாராய்ச்சியால் நமது மனம் நினைப்பதற்கும் வாய் பேசுவதற்கும், உடல் ஏற்ற தொழில்களைச் செய்தற்கும் அருட்சக்தியின் இயக்கம் முதலாதல் கண்டோம்.

இந்த அருளறிவை அருள்ஞானம் என்றும் சிவஞானமென்றும் பதிஞானமென்றும் சான்றோர் குறிப்பிடுவர். இதனை அறிந்து பெறுபவர் அருட்கு முதலாகிய சிவத்தைத் தமக்கு முன்னே நிறுத்தித் தம்மை அதன்கண் ஒடுக்கித் தமது நினைவு சொல் செயல் அனைத்தும் அச் சிவத்தின் செயலாகவே கொள்ளத் தலைப்படுவர். அவ்வாறு ஆணும் பெண்ணுமாகிய ஒவ்வொருவரும் செய்தல் வேண்டும் என்று வற்புறுத்தவே மெய்கண்ட தேவர் ''அவனே தானே ஆகிய அந்நெறி, ஏகனாகி இறைபணி நிற்க'' என்றும், அவ்வாறு நின்றால் பிறப்பறப்பாகிய துன்பச் சூழலினின்றும் நீங்கலாம் என்றற்கு ''மலமாயை தன்னொடு வல்வினை இன்றே'' என்றும் வற்புறுத்துகின்றார்.

அவர்க்குப் பல்லாண்டு கழித்துத் தோன்றிய உமாபதி சிவம், அருளையறிந்தொழுகும் நெறியை ஞானம் பற்றல், தன் பணி நீத்தல், நேயத் தழுந்தல் என்று மூன்றாக்கி, அவற்றை முறையே ஆன்ம தரிசனம், ஆன்ம சுத்தி, ஆன்ம லாபம் எனப் பெயர் தந்து,

*''தேசுற மருவும் ஆன்ம தெரிசனம் ஆன்ம சுத்தி*
*ஆசிலா ஆன்ம லாபம் ஆக மூன்றாகும் மூன்றும்*
*பாசமது அகல ஞானம் பற்றல் தான் பணியை நீத்தல்*
*ஏசில் நேயத்து அழுந்தல் எனும் இவற்று அடங்கும் அன்றே''*

என்று வகுத்தும் விளக்கியும் கூறினர்.

நாம் செய்யும் முயற்சியில் நமது கருவி கரணங்களோடு கலந்து, நாம் அறிய வேண்டியவற்றைத் தானும் அறிந்தும், அதுபற்றி நாம் செய்ய வேண்டியவற்றிற்குச் செய்முறை அறிவித்தும், திருவருள் உதவுவதை நினையின், உதவி புரியும் அவன்பால், உதவி பெறும் நமக்கு அயரா அன்புண்டாகிறது. அந்த அன்பு, நம்மை, முடிவில், உடலின் நீங்கும் காலத்துச் சிவானந்த ஞான வடிவம் நல்கிச் சிவபரம் பொருளின் திருவருள் இன்பம் பெறுவிக்கிறது.

இதனை மெய்கண்டார்

*''காணும் கண்ணுக்குக் காட்டும் உளம்போல்*
*காண உள்ளத்தைக் கண்டு காட்டலின்*
*அயரா அன்பின் அரன்கழல் செலுமே''*

என்றார்.

இச்செயல் முறைகள், சுமார் 700 ஆண்டுகட்கு முன் வாழ்ந்த மக்களினத்துக்கு இனிது அறிந்து கொள்ளும் வகையில் உரைக்கப்பட்டன. இடைக் காலத்தில் நாம் நம் நாட்டின் சூழ்நிலையையும் மக்களினத்தின் நினைவியல்புகளையும் பொருளும் தொழிலும் பிறவுமாகிய வாழ்வியல்களையும் அறியும் அறிவு சுருங்கிப் ''பிறர்க்கே உழைத்து ஏழையானேன்'' எனத் திருமங்கையாழ்வார் சொல்வது போலப் பிறர் பொருட்டு அடிமையுற்றோம். அதனால் இன்று நமக்கு அப்பெருமக்கள் கூறியன அறிதற்கு அருமையாகத் தோன்றுகின்றன. எளியவாய் இருப்பின், நாம் அனைவரும் சீரிய பெரிய சிவஞானச் செல்வர்களாக அன்றோ திகழ்வோம்.

இந்த நிலையில் கல்வி, சமுதாயம், தொழில், வாணிகம், அரசியல் முதலிய துறைகள் அருள்நெறி நோக்காது பிறழ்ந்து போகின்றன. எல்லாவற்றிற்கும் அடிப்படையாக உள்ள மனமும் சொல்லும் செயலும் இருள் நெறியிலே இயங்குகின்றன. மன நினைவில் காரணகாரிய ஆராய்ச்சி நோக்கமில்லை. மெய்யுணர்தல் என்ற தலைப்பில் திருவள்ளுவர் சொன்ன அறவுரை, செயலுக்கு வரவில்லை. எதனையும், ஏன்? எப்படி? என ஆராயும் மனப்பான்மை பெரும்பான்மையும் காணப்படவே இல்லை. அதனால் வாயிலிருந்து வெளிவரும் சொல், உள்ளே மனத்துக்கும் வெளியே செயலுக்கும் ஒவ்வாமல் உளது. சொல் வேறு, செயல் வேறு படுதலால் தொழிலும் வாணிகமும் உலக மக்கள் அரங்கில் நம்பிக்கையிழந்து சோர்வுபடுகின்றன. தான் வாழ ஏனோர் தனக்குக் கீழாக எனும் ஊன அறிவு உயர்ந்து நின்றகின்றது.

மக்கள் மனம் வாழ்க்கைக்கு இன்றியமையாத உணர்வுகளால் நிரம்பாது குறைபடுவதால், பள்ளத்தை நோக்கியோடும் நீர் போலத் தன்னலம் ஒன்றே கருதும் தீயுணர்வுகள் போந்து மனத்தில் நிரம்பிவிட்டன; துன்பமும் இருளும் சூழ்ந்து கொண்டன. அருள்நெறி நல்கும் இன்பமும் ஒளியும் மறைந்தன. அச்சமும் அடக்கப் பண்பும் தோன்றி உலக அரசியற் சூழலில் அலைக்கின்ற காட்சியை நாம் நாளும் காண்கிறோம். நாமும் சமய மாநாடு கூட்டியும் புராணப்

பிரசங்கம் செய்தும் திருவிழாக்கள் எடுத்தும் சமயவுணர்வும் ஒழுக்கமும் ஓங்கச் செய்தோம்; நமது சமுதாயம் இம்மியளவும் அசையவில்லை.

மக்கள் வாழ்க்கையை நோக்காது அதைப் புறக்கணித்து இயலும் எவ்வகைச் சமயமும் சமயமாகாது. வாழ்வில் அறமும் பொருளும் இன்பமும் நிறைந்து அமைவதை வற்புறுத்துவது தான் உண்மைச் சமயம். வையத்து வாழ்வாங்கு வாழ்ந்து சிவப் பேரின்பம் பெறச் செய்வதே நம் சைவ சமயத்தின் குறிக்கோள். அதுபற்றியே, சைவ சமயத்துக்கென வரையறுத்த நூல்களைத் தொகுத்துக் கூறிய பண்டை நாளைப் பெரியோர்,

*''வள்ளுவர்மெய் யன்பர்மொழி வாசகம்தொல் காப்பியமே*
*தெள்ளு பரிமேலழகன் செய்தவுரை - ஒள்ளியசீர்த்*
*தொண்டர் புராணம் தொகுசித்தி ஓர்ஆறும்*
*தண்டமிழின் மேலாம் தரம்''*

என்றனர்.

''வையத்துள் வாழ்வாங்கு வாழ்பவன் வான் உறையும் தெய்வத்துள் வைக்கப்படும்'' என்ற திருக்குறளும், அதன் கடவுள் வாழ்த்து, துறவு, மெய்யுணர்தல், அவாவறுத்தல், ஊழ் என்ற அதிகாரங்களும் பிறவும் சைவத்தின் தனிப்பெருங் கொள்கைகளாத லால், சைவர்கள் திருக்குறளை முதற்கண் நன்கு படித்துப் பயில வேண்டும் என்பதற்காக வள்ளுவர் எனத் தலைமை நூலாகத் திருக்குறளைச் சைவர்கள் மேற்கொண்டனர்.

மண்ணுலகு முதலிய பலவகை உலகுகளையும் இறைவன் படைத்தளிப்பது, ''நாம் மண்ணகத்தே வந்து'' வாழ்தற் பொருட்டே என்று ஞானசம்பந்தர் முதல் மாணிக்கவாசகரை உள்ளிட்ட பலரும் அவ்வப்போது உரைத்துள்ளனர். உடம்பை நன்கு பேணினாலன்றி மக்கள் ஞான வாழ்வு பெறார் என்பதற்காகத் திருமூலர்,

*''உடம்பார் அழியின் உயிரார் அழிவர்;*
*திடம்பட மெய்ஞ்ஞானம் சேரவும் மாட்டார்''*

என்று தெளிவாகக் காட்டியுள்ளார்.

மக்கள் வாழ்வு தனித்தனியாகவும் சமுதாயமாகவும் இயலுவது. இவ்வாழ்க்கைக்கு வேண்டுவன உதவும் வகையில் கல்வியும், தொழிலும் வாணிகமும் பணி புரிகின்றன; இவ்ற்றிற்கு ஏற்ற வாய்ப்பும் பாதுகாப்பும் அரசு நல்குகிறது. மனைவாழ்வு - நோய்க்கிடந்தராத

அகம் புறம் தூய்மை பற்றிய அறிவும், மக்களை நன்முறையில் வளர்த்து நல்லொழுக்க முடையராக்கும் செயல்பற்றிய அறிவும், ஒவ்வொருவரும் மேற்கொண்டிருக்கும் தொழில் பற்றிய அறிவும், சமுதாயத்துக்கும் அரசுக்கும் தனக்கும் உள்ள தொடர்பு பற்றிய அறிவும், திருவருள் முதல்வனாகிய சிவநெறி அறிவும் கருத்தும் அமைய வேண்டும் என்று வில்லியம் குளோவர் (William Glover) என்பவர் உரைக்கின்றார். இந்த அறிவு மக்கள் மனத்தில் சிந்தனையைத் தூண்டி எல்லாவற்றிற்கும் உள்ளீடாய்த் திகழும் திருவருள் ஞானத்தைப் பெறுவிக்கும் என இக்காலத்துச் சமயச் சான்றோர் கூறுகின்றனர். இங்கே குறித்த அறிவுகளும் கருத்துக்களும் உலக வாழ்வை வாழ்வாங்கு வாழத் துணைசெய்து திருவருள் ஞானத்தை விரிவாகப் பெறுதற்கு உதவுகின்றன.

அருளாராய்ச்சியால், மாயா காரியமாகிய உலகியற் பொருள் நிகழ்ச்சிகளின் உண்மை புலனாகிறது; செய்யப்படும் நல்வினை தீவினைகள் முறையே நல்கும் இன்பங்களையும் துன்பங்களையும் சமமாக நோக்கும் மனப்பான்மை எய்துகிறது. அதனால், உண்மையறிவான சிவ ஞானத்தால் உலகியல் பட்டம் தூர்ந்து விடுகிறது; உயிர் சிவத்துள் ஒடுங்குகிறது. எஞ்சி நிற்கும் வினை பற்றுக்கோடின்றிக் கெட்டொழிகிறது.

வாழ்வாங்கு வாழ்ந்து அருள் நிலையை உணரும் உயிர், அதனை விடாது பற்றிப் பயிலுதற் பொருட்டு நாளும் திருவருட் சிந்தனை இன்றியமையாது வேண்டப்படுகின்றது. அருட் சிந்தனைக்குத் திருவைந்தெழுத்தும், அதனைப் பற்றி விடாமைக்குச் சிவ வழிபாடும் துணையாகும். திருவைந் தெழுத்தில் ம என்ற எழுத்து உலகியல் வாழ்வையும், ந அதனை வாழ்வாங்கு வாழப் பண்ணும் அருளையும், ய வாழும் உயிரையும், வ உலக வாழ்வை விடுத்துச் சிவானந்தத்தை நுகர்விக்கும் அருட்சக்தியையும், சி இறவாப் பேரின்பம் நல்கும் சிவத்தையும் குறிப்பன.

நமது உள்ளம், உலகியல் வாழ்வுக்குரிய மனைவாழ்வு சமுதாய வாழ்வுகட்கு வேண்டிய அறிவு செயல் வகைகளில் ஈடுபடுங்கால், அவற்றிற்குரிய கருத்துக்களை வழங்கி உலகியற் பயன்களை நுகரப்பண்ணும் திருவருள், சிவத்தையும் அதன் பேரருளையும் நினையாவாறு மறைக்கும். மறைக்காவிடில், உலகியல் அனுபவம் நிகழாது; உயிர் தன்னைச் சூழ்ந்திருக்கும் இருள் மறைப்பினின்றும் நீங்காது. அதற்காகவே நாம் ஒன்றில் ஈடுபடும்போது, மற்றவை தோன்றாதவாறு மறைக்கப்படுகின்றன. திருவருள் நினைவால்

அதற்கு முதலாகிய சிவத்தை நினைக்கும்போது, உலகியல் உணர்வுகளை மறைத்து, சிவ நினைவால் பிறக்கும் சிவஞான வாழ்வை நுகர்விக்கின்றது. இவ்வாறு உலகியற் பொருளின்பாலும் சிவத்தின்பாலும் நம் அறிவும் மனமும் ஈடுபட்டு இருள் நீக்கம் பெறற்கு இருவழியும் மறைத்துத் துணைபுரியும் திருவருளை ந என்ற எழுத்தால் பெரியோர் காட்டியிருக்கின்றனர்.

உலகில் நாம் வாழ்வாங்கு வாழ்தல் வேண்டியும், அதனை விடுத்து இன்பமே நிலவும் பெருவாழ்வு பெறல் வேண்டியும், தனது திருவருட் சக்தியைச் செலுத்தி, வேண்டுவனவற்றை அறிவித்தும் வேண்டாதவற்றை மறைத்தும் அத்திருவருளே தனக்குத் திருமேனியாகக் கொண்டு, வேறாய் நில்லாது, நம்மோடு உடனாயும் ஒன்றாயும் நின்றருளும் சிவ பரம்பொருளை, நாம் மறத்தல், நன்றி கொன்ற தீவினையாக முடியும்; நன்றி மறத்தல் உலக வாழ்வில் பெருந்துன்பத்தைச் செய்வது போல, சிவன்பால் பெறலாகும் பேரின்ப வாழ்விலும் குற்றமாதல் பற்றியே சிவ வழிபாடு சிறப்பாக வேண்டப்படுகின்றது.

சிவ பரம்பொருள் உயிர்கட்குச் செய்திருக்கும் அருட் செயல்களை நினைதலும், வழிபாடாகும்; அதுபற்றியே திருமுறை ஆசிரியர்களும், அவர்கட்குப் பின்வந்த பெருமக்களும், சிவனுடைய அருட் செயல்களை எழுத்துத் தோறும் இன்பம் பெருக, இனிய இசை கலந்த பாட்டுக்களில் தொகுத்துப் பாடியுள்ளனர். அவற்றைப் பாடிப் பயிலுவதால் நமது உள்ளம் அவனுடைய பேரருட் பெருமையில் தோய்ந்து பேரின்பமும், உலகியல் நுகர்ச்சிகளை மறந்து தூய்மையும் எய்துகிறது.

இன்றைய மக்களினம் பொருட் செல்வம் பெறுவதே வாழ்க்கையின் குறிக்கோளாகக் கொண்டு, அதனைப் பெருகப் பெறுவதற்குரிய விஞ்ஞானம், தொழில், வாணிகம், அரசியல் என்ற துறையிலேயே பெரு மயக்கம் கொண்டு இயலுகின்றது. உலக வாழ்க்கைக்குப் பின் உயிர்கட்கு வேறு வாழ்க்கையில்லை என்று கூறும் சமயவுரைகள் செல்வாக்குப் பெற்றதே இதற்குக் காரணமாகும். மேலும் அச்சமயங்கள் கடவுட் கொள்கையும் வழிபாட்டு மரபும் உடையவாயினும், மக்களை அறிவாராய்ச்சி வகையால் அறிந்துணரும் வழிவகைகளைக் காட்டாமல், கண்மூடி நம்பிக்கையையே வற்புறுத்தின; அதனால் வாழப் பிறந்த மக்களுக்கு மண்ணில் வாழ உரிமையுண்டு என்பதை மறந்து, ஒருவரையொருவர் தாழ்த்தியும் வேறுபடுத்தும் அடிமைப்படுத்தும் அலைத்த செய்தியை

வரலாறு காட்டுகிறது. இன்றோ மக்களினம், நலம் செய்யக் கற்றுணர்ந்த பொறியியல் விஞ்ஞானத்தால், பேரழிவு விளைக்கும் கருவிகளைச் செய்து பெருங்கேட்டை எதிரே நிறுத்திக் கொண்டு வருந்துகிறது. இவ்வுலக வாழ்வுக்குப் பின்னும் வாழ்வு உண்டு. இன்று செய்வன நல்லனவாயின் மறுமையின் இன்பமுண்டு. தீயனவாயின் துன்பமே எய்தும் என்ற எண்ணம் நெஞ்சில் ஊன்றி விடுமாயின் தீமை குறையும்? நன்மை பெருகும்.

தீமை செய்தற்கு அச்சமும், நன்மை செய்தற்கு விருப்பமும் மக்கள் உள்ளத்தில் வளமுற அமைவதற்குச் சமயவுணர்வை மக்களிடையே பரப்புவது தவிர வேறு வழியில்லை. பொருட் பெருக்கத்துக்கான பொறியியல் தொழிலியல் விஞ்ஞான அறிவைப் பரப்புவதற்காகப் பொது மக்களும் அரசும் பெரிதும் முனைந்திருப்பதைக் காண்கின்றோம். அதுபற்றி, அவர்கள் திட்டங்கள் வகுப்பதையும் அவற்றை முறையே செயற்படுத்துவதையும் அறிகின்றோம். அவை சிறந்த பயனை அளித்து வருவதையும் நாம் கண்கூடாகப் பார்க்கின்றோம். அவ்வாறு நாமும் ஏன் திட்டமிட்டு நமது சமயப் பணிகளைச் செய்யக்கூடாது.

இன்றைய மாணவர்களே எதிர்காலத்தில் இந்நாட்டு நன்மக்களாவர். அவர்கட்கும் வழங்கப்படும் கல்வி உலகிற்கு வேண்டுவனவற்றையே முழுதும் தன்கண் கொண்டுளது. அரசும் அதனையே பெரிதும் ஆதரிக்கிறது. அதன் வாயிலாக வளரும் மாணவர்கள் நாளைக்கு உலகிற்கே பெருங்கேடு செய்யும் பெருங்கருவிகளைப் படைத்து நாசகாரிகளாகப் பிறங்குவரோ என்ற அச்சம் இப்பொழுது தோன்றியிருக்கிறது. அமெரிக்க நாட்டு நியூயார்க்கு நகரத்து ஏசிவா (Yeshiva) பல்கலைக் கழகத்தைச் சேர்ந்த டாக்டர் சாமுவேல் பெல்கின் (Dr. Samuel B lkin) என்பார், தற்காலக் கல்வி நிலையையும், அது உண்மைச் சமுதாய அமைப்புக்கு உதவாதொழிந்தமையையும் மக்கள் பால் அமைய வேண்டிய ஆன்மஞான ஒழுக்கங்களை எண்ணாது பகை வளர்க்கும் பண்பில் செயலாய் அக்கல்வி மாறியதையும் எடுத்துக் காட்டி, உண்மை காணும் அறிவும், உண்மை ஞான அருளாராய்ச்சியும், மிகைபடப் பெறச் செய்வதுதான் இன்று கல்வியின் முடிந்த முடிபாக வேண்டும் என்று கருத்துப்பட, "If the present day educators are openly alarmed at the fact that Europe with its ancient seats of learning failed to stem the tyranny and brutality on the continent, it is primarily because the modern age has over estimated the power of secular and material knowledge to influence the conduct of human beings. Our knowledge

of the Natural sciences, the social sciences and humanities has not failed us, we have failed it by expecting these branches of learning to serve a purpose which is not within their domain the creation of an ideal society.

"The complete divorcement between scientific research and spiritual and moral ideas has brought disastrous consequences. A science which remains indifferent to the importance of morality in the life of society becomes an opponent of morality.

"The end of education should be the cultivation of intellectual and spiritual values bringing to a maximum development the moral potentialities of man"[7] என்று கூறுகிறார்.

என்றாலும் பொருள் வேட்கை அறிவை மறைத்து விடுகிறது. கல்வித் துறையில் நாற்பது ஆண்டு அனுபவத்தைக் கொண்டு இதனைக் கண்டுரைக்கிறேன். கெய்சர்லிங் (Keyserling) என்ற மேனாட்டறிஞர், கல்வியாளர் உலகாயதச் சூழ்நிலையைக் கடந்து சென்று விட்டார்கள். இப்பொழுது பொதுமக்கள் அதன்கண் காலை வைத்துள்ளார்கள் என்பாராய், "If men of education have already passed through the materialistic stage, the masses are only just entering it"[8] என்று கூறுகின்றார்.

எதிர்கால மக்களுக்கு இத்தகைய சூழ்நிலை எய்தாமற் காப்பதற்குக் கல்வி நிலையங்களில் திருவருள் உணர்வு ஒழுக்கக் கல்விக்கு இடமில்லை. பொது மேடைகளோ, செய்தித் தாள்களோ இடம் கொடுப்பதில்லை; கோயில்களிலும் போதிய வாய்ப்பில்லை. ஆனால் எங்கள் கல்லூரி நிறுவிய கலைத்தந்தை திரு. கருமுத்து, தியாகராசச் செட்டியார் ஒருவர்தான், திருவருள் உணர்வும் ஒழுக்கமும் நல்குதற்கு மிக்க துணிவுடன் ஏற்பாடு செய்துள்ளார். வேறு யாரும் எவ்விடத்தும் சைவச் செந்நெறியாகிய திருவருள் உணர்வு நெறியைக் கற்பிக்க எண்ணினாரில்லை. பரந்த பெரு நாட்டில், பல கோடி மக்களிடையே பத்துப் பதினைந்து பேர்க்குத்தரப்படும் இக் கல்வி கடலிற் கரைத்த காயம் போல் ஆகிறது.

அரசு வகுக்கும் ஐந்தாண்டுத் திட்டம் போல் அறநிலையங்களும் செல்வக் கோயில்களும் ஐந்தாண்டுத் திட்டங்கள் வகுத்துத் திருவருள் உணர்வுப் பணி புரியத் தலைப்பட வேண்டும். ஆண்டுதோறும் கோயில்களிலும் அறநிலையங்களிலும் விழாக்களும்

7. Span p. 38 Sept. 1961
8 The World in the Making - p. 265

குரு பூசைகளும் நடைபெறுவதில் தவறுவதில்லை. விழா நடக்கும் நாளில் சொற்பொழிவுகளும் நடைபெறுகின்றன. ஆயினும் அவை வெறும் பொழுது போக்காக உள்ளனவேயன்றி முறையாகத் திருவருள் நெறியை உணர்த்துவனவாக இல்லை. இப்பொழுது இந்து அறநிலையத்துறைத் துணை ஆணையாளராக இருக்கும் திரு. விவேகானந்தம் பிள்ளையர்கள் திருச்செந்தூரில கோயில் நிர்வாக அதிகாரியாக இருந்தபோது கந்தர் சட்டி விழாவில் ஆறு நாளும் திருமுருகாற்றுப் படை, சிவஞான போதம் என்ற நூற் பொருளை வகுப்புப் போல அமைத்து நடத்தினார். இருநூற்றுவர்க்குக் குறையாமல், கற்ற அறிஞர்கள் வந்திருந்து கேட்டனர். கற்றவர்கள் திருந்தினால் மற்றவர்கள் அவர்களைப் பார்த்துச் செம்மையான முறையில் திருந்தி விடுவார்கள். இது தொடர்ந்து நடந்திருந்தால், சிவநெறியின் செம்பொருளை உணர்ந்தவர்கள் 2000 பேர்களாகியிருப்பார்கள். இது கோயில் தோறும் அறநிலையங்கள் தோறும் தொடர்ந்து பத்தாண்டுகள் நடக்குமாயின், ஆண்டுக்கு 5000 விகிதத்தில் நாட்டில் 50,000 பேர் திருவருள் ஞானம் பெற்ற தக்கோராய்த் தோன்றி விடுவர். அவர்களுடைய உணர்வும் செயலும் நாட்டின் சமுதாய வாழ்வில் மிகச் சிறந்த நோக்கங்களை உண்டாக்கும்.

நமது சமாசமே ஆண்டு விழாவின் வேறாக இடையிடையே பலவிடங்களில் சைவ வகுப்பு ஏற்படுத்தித் திருவருள் ஞானம் நல்கும் பணியில் முயன்றது. அரசியல் தேர்தல் போல் இந்த மக்கட்பணி கைம்மேல் பயன் தருவதில்லையாதலால் சில ஆண்டுகளில் செல்வரது ஆதரவு குறைந்தது; அதனால் சமாசம் தனது பணியைத் தொடர்ந்து நடத்த இயலாது போயிற்று. ஆகவே அப் பணிகளைக் கோயில்களும் அறநிலையங்களும் மேற்கொள்ளுதல் கடனாகிறதல்லவா?

திருவருள் உணர்வு நல்கும் முறையிலும் சிறிது கருத்தைச் செலுத்த வேண்டும்.

அருள் நூல்கள் தோன்றிய காலத்தில் மக்களினத்தின் அறிவும் சூழ்நிலையும் வேறு வகையில் இருந்தன. இப்போது உலகியல் பொருள் அறிவு பெருகியுள்ளது. காரணகாரிய ஆராய்ச்சி ஆண் பெண் இருபாலாரிடத்திலும் ஓரளவு வளர்ந்துள்ளது. வெறும் நம்பிக்கைகள் நிற்க இடமின்றித் தடுமாறுகின்றன. திருக்குறள், சிவஞான போதம், திருமுறைகள் போன்ற நூல்களே இன்று விஞ்ஞான நெறியில் வளரும் அறிவாராய்ச்சியின் எதிர் நிற்கும் ஆற்றல் உடையவையாக

இருக்கின்றன. ஆண்டுதோறும் கோயில்களும் அறநிலையங்களும், விழா நாட்களில் பதினாறு வயதுக்கு மேற்பட்ட கற்ற இளைஞர்களையும் முதியவர்களையும் கூட்டிச் சிவஞான போதம் திருக்குறள் ஆகிய நூற் கருத்துக்களைக் காலையில் வகுப்பு நிறுவிக் கற்பிப்பதும், மாலை சொற்பொழிவு வாயிலாகத் திருமுறை வரலாறு, திருமுறை ஆசிரியர் வரலாறுகளை எடுத்துரைப்பதும் என ஐந்தாண்டுத் திட்டம் ஒன்று வகுத்துப் பணி புரிவது இக்காலத்துக்கு ஏற்றது. ஓர் ஆண்டுக்கு நமது மாநிலத்தில் பத்தாயிரம் பேர் விகிதம் சமயவுணர்வுடையராகச் செய்வது தக்கது. ஐந்தாண்டில் 50,000 பேர் ஆவர். அவர்கள் வாயிலாக ஆளுக்கு ஐந்து பேர் வீதம் கொண்டாலும், ஐந்து ஆண்டுகளில் இரண்டரை லட்சம் பேர் சமயவுணர்வு பெற்று மகிழ்வர்.

நம் நாட்டில் கோயில் வழிபாடு பொறுப்பற்ற நிலையிலும், விழாக்கள் பொழுது போக்காகவும் மாறி வருகின்றன. சில இடங்களில் பீடி சுருட்டு முதலிய பொருள்களின் விற்பனை விளம்பரம் தருவதற்கு விழாக்கள் வசதி செய்து தருகின்றன. கோயிலுக்குப் போகிறவர்கள், இறைவனுக்கு நீராட்டுவித்தலும், தேங்காய் உடைத்தலும் சூடம் ஏற்றுவிப்பதும், விளக்கிடுவதும் விழாச் செய்வதுமே சமயப் பணியாகக் கருதி அமைகின்றனர். இவை வழிபாட்டில் நம் சிந்தையை ஈர்த்து நிறுத்துவன. ஆயினும், இவற்றைச் செய்பவருள் பெரும்பாலார் மனம் இவற்றோடு நேரே தொடர்பு படுவதில்லை; இது திருவருளின் இயக்கம் என்பது அவர்களுக்குத் தெரியாது,

ஆண்டவனை வழிபடும் போதும், அவனது திருவருளே நம்மில் இயங்குகிறது. "அவன் அருளாலே அவன் தாள் வணங்கி" என்பது மணிவாசகம். இத்திருவருளைச் சிந்திக்கும் பயிற்சி இல்லாமைதான் வழிபாட்டில் மனம் பொருந்தாமைக்குக் காரணமாகும். ஆண்டவனுக்கும் நமக்கும் உள்ள தொடர்பு; ஆண்டவனுக்கும் நாம் வாழும் உலகுக்கும் உள்ள தொடர்பு; நமக்கும் உலகுக்கும் உள்ள தொடர்பு; ஆகிய மூன்று தொடர்புகளும் ஏன் உண்டாகின? எப்படி உண்டாயின? எனச் சிந்திப்பதே திருவருட் சிந்தனை.

அச்சிந்தனை திருவைந்தெழுத்தை முன்நிறுத்தி நமது மனத்தின் கோழைப் பண்பை மாற்றித் திண்மையும், தூய்மையும் உடையதாக்கும். மனம் திண்ணியராயினோர் திருக்குறள் சொல்வதுபோல "எண்ணிய எண்ணியாங்கு எய்துவர்." மனம் தூய்மை, கல்வி, தொழில் வாணிகம் முதலிய வாழ்க்கைக் கூறுகளை

வளமாக்கி மக்கட் செல்வமும், மாநிதிச் செல்வமும், மிக்க வாழ்நாள் மேம்படு செல்வமும் நிறைவிக்கும். மனம் தூய்மை கெடாமல் பாதுகாப்பது அரிது. அதற்கு வழி திருமுறைகளைப் பொருளறிந்து ஓதுவது. சொல்லிய பாட்டின் பொருள் உணர்ந்து சொல்லுவார், பலரும் ஏத்தப் பேரின்பம் பெறுவர். எப்படியெனில் மனம் தீய நினைவுகட்கு இடமாகும்போது தேவாரம், திருவாசகம் முதலிய திருமுறைப் பாட்டுக்களைப் படித்து அவற்றின் கருத்தறிய முற்படுவோமானால் தூய்மையைச் சிதைக்கும் நினைவுகள், ந என்ற மறைக்கும் அருளால் கெட்டுப்போகும்; பாட்டின் பொருளும் அவற்றைச் செய்த திருமுறை ஆசிரியர்களின் ஞானவொளியும் உள்ளத்தில் பாய்ந்து ஒளி செய்யும். மனமும் தூய்மை கெடாமல், திண்மை சிதையாமல் திகழ்ந்து சிறக்கும்.

வெறும் நம்பிக்கைமேல் நில்லாமல் அறிவாராய்ச்சி மேல் நிற்கும் நம் சைவ சமய உணர்வு தழைத்துப் பரவுமானால், மக்கள் அனைவரையும், சமநிலையில் நின்று இயக்கும் திருவருளின் சிறப்பு நன்கு உணரப்படும். ஒவ்வொருவரும் உலகோடு தமக்கிருக்கும் தொடர்பையும், தமக்கும் இறைவனுக்கும் உள்ள தொடர்பையும் உணர்வர்; உணர்ந்தால் தம்போல் உலகில் பிறந்த அனைவரும், இறைவன் அருள் பெறும் இயல்பினராவர் என்ற உணர்வு பெற்று, வேற்றுமையுணர்வைப் போக்கி ஒரு குடும்பத்தவராய் ஒத்து வாழ்ந்து இன்பம் எய்துவர். இதனை முடிபாகக் கொண்டே மெய்கண்டதேவ நாயனார்,

*''தம்மை யுணர்ந்து தமையுடைய தன்உணர்வார்*
*எம்மை உடைமை எமை இகழார் - தம்மை*
*உணரார் உணரார் உடங்கு இயைந்து தம்மில்*
*புணராமை கேளாம் புறன்''*

என்று சிவஞான போதத்தின் தொடக்கத்திலேயே எடுத்துரைத்தார்.

இதில் தம்மை யுணர்வது என்பது ஒரு பெரிய செயல் அன்று. இந்த உணர்வு, உலகத்தையும், உடம்பையும், படைத்தளித்து வாழச் செய்யும் தலைவனாகிய சிவ பரம் பொருளின் திருவருட் செயலை அறிந்து கொள்ளச் செய்யும். இனி தம்மையுடைய தன் உணர்தல் என்பது இவ்வாறு தன் உணர்வார். தம்மைப்போல் ஏனை நாம் எல்லாரும் சிவத்தின் அருட்கு இலக்கானவர் என்ற கருத்து விளங்கப்பெற்று நம்மைத் தம் போலவே எண்ணிச் சமநிலையில் கொண்டு தழுவி ஒழுகுவர் என்பதற்காக, 'எம்மை உடைமை எமை

இகழார்'' என்று சிவஞானபோதம் கூறுகிறது 'தன்' என்ற சொல் முதல்வனாகிய சிவ பரம்பொருளைக் குறிக்கிறது.

தம்மை உணரார் உணரார் : அதாவது சொன்ன முறையில் தம்மை ணராதவர் வேற்றுமையற்ற ஒருமைச் சமநிலைச் சமுதாய அமைப்பே வேண்டியது என்று அறியப்பட்டார்கள். அந்த உணர்ச்சியின் தம்மில் மனம் கலந்து ஒன்று சேர்ந்து வாழ ஒருப்படவும் மாட்டார்கள் என்பது விளங்க, உடங்கு இயைந்து தம்மில் புணரார் என்றும், பின்பு அவர்கள் என்ன செய்வார்கள் என்றால் பிறரைப் புறங்கூறிச் சமுதாயத்தின் ஒருமையைச் சீரழிப்பர் என்றும் அவர் கூறுவதை யாங்கள் ஒருநாளும் செவியில் ஏற்கமாட்டோம் என்றும் கூறலுற்ற மெய்கண்ட தேவர், கேளாம்புறன் என்றும்விளங்க உரைக்கின்றார்.

இன்றைய அரசியல் தலைவர்கள் பலரும் இத்தகைய ஒருமைச் சமுதாயம் அமைய வேண்டும் என்று தமக்குரிய முறையில் அரசியல் மேடைகளிலும், பொது மேடைகளிலும் பறையறைந்து வருகின்றனர். நமது சிவநெறிச் சமயக் கருத்தும் அதற்கு ஒத்து இயங்குவதால், அவர்கட்கு இதனை எடுத்துரைப்பின் அவர்களும் வேண்டும் உதவிகளைச் செய்வர்; அவரவர் எண்ணும் எண்ணங்களும் ஈடேறும்.

*''நாமார்க்கும் குடியல்லோம் நமனையஞ்சோம்*
*நரகத்தில் இடர்ப்படோம் நடலையில்லோம்*
*ஏமாப்போம் பிணியறியோம் பணிவோ மல்லோம்*
*இன்பமே எந்நாளும் துன்பமில்லை''*

என்று செம்மாந்து பேசும் செல்வ வாழ்வு பெற்றுச் சிறக்கலாம்.

பெருமக்களே, இதுகாறும் என் உள்ளத்தில் தோன்றிய கருத்துக்களை எடுத்துரைத்தேன்; நீங்களும் அமைதியுடன் இருந்து கேட்டீர்கள். இவ்விழாவிற்குத்தலைமை தந்து என்னைச் சிறப்பித்த வரவேற்புத் தலைவரையுள்ளிட்ட பெருமக்களுக்கும், சென்னைச் சைவ சித்தாந்த மகா சமாஜத்தினர்க்கும், இங்கே கூடியிருக்கும் ஏனை நன்மக்கள் அனைவர்க்கும், என் பணிவன்பு கலந்த வணக்கத்தைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

என் கருவி கரணங்களை இயக்கியும், இச்சமாச ஆண்டு விழா இங்கே நிகழ்தற்கு வேண்டிய எண்ணத்தையும் முயற்சியையும் உண்ணின்று தூண்டியும், உதவிய சிவபரம் பொருளாகிய பழனிப் பால தண்டாயுத முருகப் பெருமான் திருவடிகள் வாழ்க என வாழ்த்தி, என் தலைமையுரையை இவ்வளவில் நிறுத்துகின்றேன். வாழ்க சிவநெறி.

# ராவ்சாகிப் நல். முருகேச முதலியார்

(57ஆம் ஆண்டு விழா
திரு.வி.க. மணிமண்டபம், சென்னை - சைவர் மாநாடு)

*திருவாக்கும் செய்கருமம் கைகூட்டும் செஞ்செல்*
*பெருவாக்கும் பீடும் பெருக்கும் - உருவாக்கும்*
*ஆதலால் வானோரும் ஆனை முகத்தானைக்*
*காதலால் கூப்புவர்தங் கை.*

சிவநேயச் செல்வர்களே!

நீங்கள் இன்று அடியேனுக்குப் பணித்த பணியை ஸ்ரீ மெய்கண்ட குருநாதரின் பொற்பாதங்களைச் சென்னியிலும் சிந்தையிலும் வைத்து நிறைவேற்ற முற்படுகிறேன். நான் சமாஜத்திற்கு ஒரு அடித் தொண்டன். கடையவனாகிய எனக்கு இம்மாநாட்டுக்குத் தலைமைத்தானம் நீங்கள் தந்தது எனது முழுத் தகுதியின் காரணம் பற்றியன்று. உங்கள் அன்பே காரணமாகும். நமது சமாஜம் சிறந்ததோர் ஸ்தாபனம். அது அறிவிலும், பண்பிலும் சைவ ஒழுக்கத்திலும் மேம்பட்ட பல பெரியோர்களின் தொடர்பு கொண்டிருப்பது. மடலாயங்கள், அறநிலையங்கள் முதலானவைகள் செய்ய முன்வராத பல அரிய பெரிய பணிகளை நம் சமாஜம் செய்து வந்திருக்கிறது. அவைகளை யான் இங்கு விரிவாகக் கூறத் தேவையில்லை. ஆனால் சமாஜத்தின் வெற்றி இதுகாறும் செய்த பணிகளில் மட்டும் இல்லை. இன்றைக்கும் எதிர்காலத்துக்கும் யாது செய் ல் நன்று என்று சிந்திப்பதே இந்த மாநாட்டின் கடமையாகும். மேன்மைகொள் சைவநீதி உலகெங்கும் விளங்க வேண்டும் என்று சொல்லிய பாட்டின் பொருள் உணராது பாடுகிறோம். சைவநீதி யென்பது யாது, அது உலகெங்கும் ஏன் பரவவேண்டும், தம்மிடத்தில் விளங்காதது உலகெங்கும் விளங்குமா என்பதை மனத்தில் சோதனை செய்ய வேண்டும். சமயமோ, தத்துவமோ, மகனொருவன் தனக்கோ, தன் குடும்பத்துக்கோ, தன் சமுதாயத்துக்கோ உதவாதது உலகத்துக்கு எவ்வண்ணம் பயன் தரும்? சைவ சமயாசாரியார்களும் மற்ற அடியார்களும் உலகெலாம் உய்ய வேண்டுமென்றே கருத்

துடையவர்களாயிருந்தனர். எனவே சைவத்தை உணராதவர்கள் பிறருக்கு அதன் பெருமைகளை எடுத்துக் கூறுவது பயனற்ற ஒரு காரியமாகும். சைவம் என்பது அன்பு நெறி, உண்மைநெறி; அதனாலன்றோ அதை நீதி எனக் கூறுகிறோம். நமது நாயன்மார்களும், பிற்காலத்துப் பெரியார்களும் சிந்தையிலும், செயலிலும், அன்பையே வளர்த்து வந்தார்கள். தாம் கடைப்பிடிக்காத கொள்கையைப் பிறரைக் கைக்கொள்ள வேண்டவில்லை. செயற்கரிய செய்கைகள் செய்தார்கள். தம் வாழ்விலும், தம் சமயத்துக்கு வெற்றி கண்டார்கள். அரசர்களையும் திருத்தினார்கள். நாட்டில் வறுமை, நளிர்சுரம் முதலானவைகளையும் தீர்த்தார்கள். சமயம் என்பதின் உள்ளொளி பெற்றவர்களின் அடையாளம் என்ன? ஆல்பார்ட் ஐயன்ஸ்டீன் என்ற விஞ்ஞானியின் கூற்று உண்மையென்று எமக்குத் தோன்றுகிறது. அவர் கூறுவது : ''சமயத்தின் ஒளிபெற்றவன், தான் தனது என்ற இச்சைகளாகிய கட்டுகளின் விடுபட்டு, எந்நேரமும் சிந்தையிலும் உணர்ச்சியிலும், பரந்த குறிக்கோளுடையவனாவான். அதனுடைய வெற்றி அந்தப் பரந்த நோக்கத்தின் பண்பும், ஆழமுமே. அதனுடைய தேவை அவனுக்கு மற்ற தேவைகளைப் போலவே, பொருந்தி விடுகிறது''. இது ஒரு நல்ல தீர்வையாகவே எமக்குத் தோன்றுகிறது. சமய ஒளி வாழ்க்கையில் ஒரு தேவையாக வேண்டும். அது இயல்பாகவே நம்மிடம் பொருந்த வேண்டும். நாட்டார் போற்ற, நாமே அகமகிழ ஒரு சட்டையைத் தரிப்பது போலச் சமயத்துக்குத் தகுந்தவாறு மேற்கொள்ளத் தக்கதன்று. எனவே சமயமோ சமயத்தின் தத்துவமோ ஒரு மகனின் வாழ்க்கையின் ஒவ்வொரு செயலிலும் அமைந்திருக்க வேண்டும். ஸ்ரீ மாணிக்கவாசகப் பெருந்தகையே ''யானே பொய் என் நெஞ்சும்பொய் என் அன்பும் பொய்'' என்று கதறும்போது, அடியேன், பட்டிமண்டபம் ஏறி என்னிலும் சாலப்பெரியோர்கள் அமைந்துள்ள இம்மாநாட்டினர்க்குச் சமயத்தைப் பற்றிப் பேசுவது தகுதியா என்பதைச் சிந்திக்கும்போது சற்றுத் திடுக்கிடுகிறேன். இந்த நாடகமாட இறைவன் திருவருளே கூட்டியது. அதிலும் ஒரு நல்ல சூழ்ச்சி இருக்கலாம். போலி அடக்கத்தால் அல்லாது, உண்மையிலேயே என் குறைகளை அறிவித்தல் நலமென எண்ணுகிறேன். நான் சமய சாத்திரங்களை, நான் விரும்பும் அளவு ஆராய்ச்சி செய்தவனல்லன். பெரியோர்களைத் துணைக்கொண்டு சந்தேகம் களைந்தவனல்லன். ஆனால் சிறு பிராயம் தொட்டே பெற்றோர்களின் நல்லுபகாரத்தாலே கடவுள் நம்பிக்கையிலும், உண்மையிலும் பற்றுடையவனானேன். இளமையில் தேவாரம், திருவாசகம், திருப்புகழ் முதலிய தெய்வீக அருளிப்பாடுகள் என்னைக்

கவர்ந்தன. பின், தொழிலிலும், மற்றும் எல்லா ஈடுபாடுகளிலும் வேலையையே வழிபாடாக எண்ணி இறைவனுக்குச் சமர்ப்பிக்க முயன்றேன். சமாஜத்தின் தொடர்பு எனது சமய அறிவை வளர்க்கப் பெரிதும் துணை செய்தது. சைவ சித்தாந்தத்தின் உண்மைகளை நான் கற்கும்போதும், சிந்திக்கும்போதும் என் சொந்த அடிப்படையி லிருந்தே நோக்குவதுண்டு. திருமுறைகளையும், பெரிய புராணத் தையும் சித்தாந்த தத்துவ முறைமையில் காணும்போது சொல்லொணா ஆனந்தத்தைப் பெறுகிறேன். சமீபத்தில் திருவாசகத்தை ஊன்றிப் பார்க்க ஒரு பெரியாரின் நல்லாசியினால் வாய்ப்புக் கிடைத்தது. சித்தாந்தத்தையும் மற்ற அபிமதங்களோடு சிறிது ஒப்பு நோக்கிப் படிக்கவும் வேறொரு வாய்ப்பு கிடைத்தது. இந்த நல்வாய்ப்புக்களினால், என் கொள்கை சித்தாந்தம் வெறும் தத்துவம் அன்று, அது ஒரு வாழ்க்கைவழி என்பது மேலும் வலியுற்றது. எனவே, சமயம் நேர்ந்துழி சித்தாந்த வாழ்வை யூட்ட சித்தாந்தக் கலாசாலைகளும் பல்கலைக்கழகமும் அமைத்தல் தகுதியென்று தீவிரமாக எழுதியும் பேசியும் வருகிறேன். இந்த எண்ணம் நல்ல முறைகளில் நிறைவேற இறைவன் திருவருள் பாலிக்க வேண்டும்.

## II

வாழ்க்கையில் சம்பந்தப்படாத தத்துவஞானம் பயனற்றதாகும். சித்தாந்தத்தின் மேன்மை, உலகம் இறைவனுடன் ஒட்டி வாழ இடையூறு அன்று என்று புகட்டுவதே. ஆணவத்தை விட்டு வாழ்ந்தால் மெய்த்தாணுவுடன் ஒட்டி வாழலாம். அவன் அவள் அது என்பவையெல்லாம் எதிர்மறைப் பொருள்கள் ஆகமாட்டா. ஆணவத்தை விட்டு, கன்மத்தைத் தூய்மை செய்து, மாயையைத் துணைக்கொண்டு இறைவன் அருளைப் பெறுதலே பிறவியின் பயனாகும். இதுவே அன்புநெறி. அறநெறி, திருநெறி. இதை நாம் அறியவேண்டும். நாமறிந்தால் பிறருக்கும் வெளிப்படுத்துதல் ஆகக்கூடியதொன்றே. நாட்டின் போக்கையும் உலகத்தின் போக்கையும் உன்னுங்கால் சித்தாந்தத்தின் மாண்பும், சமரசமும் எவ்வளவு தேவை என்பது புலனாகாமல் இருக்காது. எனவே சித்தாந்தத்தின் புகழை வெறும் பேச்சாக ஆக்காமல் வாழ்க்கையில் நிரூபித்துப் பயன் செயல்வேண்டும். "மலர் தலையுலகின் மாயிருள் துமியப் பலர் புகழ் ஞாயிறு படரிலல்லதைக் காண்டல் செல்லாது கண்". எனவே மலத்தீர்வுக்கு ஆராய்ச்சி, அனுபூதி யென்னும் இருவகை யுணர்வும் இன்றியமையாதன. அந்தப் பெற்றியால் ஸ்ரீ மெய்கண்டாரால் மயர்வற அளிக்கப்பட்டது நம் உயர்சிவஞான

போதம். அதில் கடல்போல அடங்கிய பொருளை யார் அனுபவ மின்றிச் சொல்லல் வல்லார்? எனவே இந்தத் தலைமையுரையில் ஏட்டிலுள்ளதைத் திருப்பிச் சொல்லத் தேவையில்லையென நினைக்கிறேன். அனுபவ அடிப்படையிலிருந்து ஞானம் புகட்டவும் வல்லனல்லேன். ஆனால் படித்துச் சிந்தனையில் யான் உணர்ந்த சில கருத்துக்களேனும் சொல்வது தகுதியென எண்ணுகிறேன்.

## III

சைவத்தின் தொன்மைப் பற்றியோ, சித்தாந்தத்தின் வரலாற்றைப் பற்றியோ, சித்தாந்த சாத்திரங்களின் பொருளடக்கத்தைப் பற்றியோ காலச் சிக்கனத்தைக் கருதி ஈண்டு யாம் எடுத்துக் கூறத் தேவையில்லை. ஆனால் இந்திய, மேனாட்டுத் தத்துவங்களில் சித்தாந்தம் எந்த நிலையில் இடம் பெறுகிறது என்பதை ஆராய்வது அவசியமாக இருக்கிறது. சித்தாந்தம் இந்தியத் தத்துவ திருஷ்டி முழுமையையுமே தன்னிடத்தில் அடக்கியுள்ளது என்று பாராட்டுகிறார் பேராசிரியர் சூரியநாராயண சாஸ்திரியார். அது ஒருமுனையில் அபேதவாதத்தையும் மற்றொரு முனையில் பேதவாதத்தையும் ஆராய்ந்து பொய்யகற்றி மெய்கண்டு சமன் செய்கிறது. ஆஸ்திக மதங்களிலேயே சித்தாந்தம் தலைசிறந்தது என்கிறார் பேராசிரியர் மாக்னிகால். ''இந்தத் தத்துவத்தின் உயர்வும் பரந்த நோக்கமும் கடவுள் அருள் வடிவம் என்று வற்புறுத்துவனவே இந்தியத் தத்துவ சிந்தனையிலேயே, கடவுள் ஒரு நீதி தத்துவம், உயிர்களுக்கு அருள் பாலிப்பதே முதலிலிருந்து ஈறுவரை அவர் தொழில் என்பதை வேறெங்கும் இவ்வளவு தெளிவாகவும் உறைப்பாகவும் சித்தாந்தத்திலன்றி வேறெங்கும் காண முடியாது. கடவுளுக்கும் சிருஷ்டிக்கும் நிற்கலா சம்பந்தமாகிய அழகிய உண்மையைப் பரக்கப் பேசுவது சித்தாந்தம் என்கிறார் மாக்னிகால். சிவஞான போதம் இரண்டாம் சூத்திரம் முதல் அடியிலேயே இந்த உண்மையை நாம் காண்கிறோம். ''அவையே தானேயாய்'' என்ற பெரும் பொருளின் விரிவே சித்தாந்தத்தின் முடிபு என்று கூறலாம். வேதாந்த பாஷ்யகாரர்களெல்லாம் கடவுளுக்கும் சிருஷ்டிக்கும் சம்பந்தம் - அபேதம், பேதாபேதம், பேதமென்று மூன்று விதங்களாகப் பேசியுள்ளார்கள். சித்தாந்தம் ஒன்றாதல், வேறாதல், உடனாதல் மூன்றினையும் திருஷ்டிக்கிறது. மற்ற தத்துவங்கள் மேற்கூறிய அபேதம், பேதாபேதம், பேதம் என்ற மூன்றில் ஒரு சம்பந்தத்தை ஆதாரமாக ஒப்புக்கொண்டு மேற்கட்டிடம் கட்டியுள்ளன. அபேத சம்பந்தத்தைக் காட்டும் உபமானம் 'பொன்னும் பணியும்'' என்பது.

பேதத்தைக் காட்டுவது "இருயும் ஒளியும்" என்பது. பேதாபேதத்தைக் காட்டுவது "சொல்லும் பொருளும்" என்பது. ஆனால் சித்தாந்தம் காட்டும் உண்மை உபமானங்களில் "உடம்பும் உயிரும்" என்பது அபேத வாதத்துக்குப் பயன்படுகிறது. கண்ணொளியும் அருக்க னொளியும்' பேதத்தைக் குறிக்கிறது. 'ஆன்மாவும் கண்ணொளியும்' என்பது பேதாபேத இலக்கணத்தைக் குறிக்கிறது. சித்தாந்தம் இம்மூவகைத் திருஷ்டியையும் முரண்படுத்துவதில்லை. எனவே ஸ்ரீ உமாபதிசிவம் சித்தாந்தம் வேதாந்தத்தின் தெளிவு என்கிறார்.

*"புறச்சமயத் தவர்க்கிருளாய் அகச்சமயத் தொளியாய்ப்*
*புகல் அளவைக் களவாகி பொற்பணிபோல் அபேதப்*
*பிறப்பிலதாய் இருள் வெளிபோற் பேதமும்சொற் பொருள் போல்*
*பேதாபே தமும்இன்றிப் பெருநூல் சொன்ன*
*அறத்திறனால் விளைவதாய் உடலுயிர்கண் அருக்கன்*
*அறிவொளிபோல் பிறிவரும் அத் துவிதமாகும்*
*சிறப்பினதாய் வேதாந்தத் தெளிவாம் சைவ சித்தாந்தம்"*

என்பது "சிவப்பிரகாசத்தில்" கூறிய பெருமிதமாகும்.

ஸ்ரீ மெய்கண்ட தேவர் அத்துவித சம்பந்தம் அந்நிய நாத்தியை உணர்த்துகிறது என்று தெளிவாகக் கூறியுள்ளார். "ஏகமே வாத்விதீயம்" என்ற மகாவாக்கியத்தின் உண்மைப் பொருளை மயர்வற விளக்குகிறது மெய்கண்டாரின் உதாரணச் செய்யுள்:

*"ஒன்றென்றது ஒன்றேகாண் ஒன்றே பதிபசுவாம்*
*ஒன்றென்ற நீபாசத் தோடுளைகாண் - ஒன்றின்றால்*
*அக்கரங்க ளின்றாம் அகரவுயிரின்றேல்*
*இக்கிர மத்தென்னு மிருக்கு"*

இந்த மெய்ப்பொருள் அகச் சமயங்களுக்கெல்லாம் ஒளியாய்த் திகழ்கிறது.

அவனே தானே யாதல் தன்மையையும் அத்துவித நிலையையும் பற்பல இடங்களில் ஸ்ரீ மாணிக்கவாசகர் திருவாய் மலர்ந்துள்ளார். அத்துவித நிலையை அவர் 'பேதமில்லதோர் கற்பு" என்பர். அந்தக் கற்பு நிலையில் இறைவன் "நிச்சம் என் நெஞ்சில் மன்னி யானாகி நின்றானே" என்கிறார் மணிவாசகர். "புண்ணியன் மண்ணிடைவந்து தோன்றிப் பேதங் கெடுத்தருள் செய் பெருமையை" பலவிடங்களில் விளக்குகிறார். தானேயாதல் தன்மையைப் பேசும்போது "மெய்ப்

பொருட்கண் தோற்றமாய், மெய்யே நிலைபேறாய், எப்பொருட்குந் தானேயாய், யாவைக்கும் வீடாகும் அப்பொருளால்'' என்றும் விளக்குகிறார். பேதம் பேதாபேதம் அபேதம் என்ற மூன்றையும் மெய்யுணர்ந்து கண்ட சித்தாந்த திருஷ்டியை:

*''இன்றெனக் கருளி இருள்கடிந் துள்ளத்*
*தெழுகின்ற ஞாயிறே போன்று*
*நின்றநின் தன்மை நினைப்பற நினைந்தேன்*
*நீயலால் பிறிதுமற் றின்மை*
*சென்றுசென் றணுவாய்த் தேய்ந்துதேய்ந் தொன்றாம்*
*திருப்பெருந் துறையுறை சிவனே*
*ஒன்றும் நீயல்லை அன்றியொன்றில்லை*
*யாருன்னை அறியகிற் பாரே''*

என்ற திருவாசகத்தில் காண்கிறோம். இது மகத்தான திருவாசகம். இதுவே நமக்குப் பிரமாணம்.

உண்மையிலேயே சித்தாந்திகள் ஏகான்ம வாதிகளை விட ஒரு மடங்கு இறைவனன்றிவேறு பொருளில்லை என்ற கொள்கையில் கடைபோயினவர்களே. ஆனால் பிரமப் பொருள் உயிரோடு சிவமாக ஒன்றாகிறது என்ற உண்மை சித்தாந்தத்தில் தான் காணலாம். நமது பிரமம் சூன்யப் பொருள் இல்லை. சித்தாந்தம் திருஷ்டிக்கும் அத்துவித சம்பந்தத்தைப் பட்டினத்துப் பிள்ளையார்,

*''அது அவன் அவளென நின்றமை யார்க்கும்*
*பொது நிலை யாளென் உணர்த்திய பொருளே''*

என்று அழகாகக் கூறுகிறார். இந்த அற்புத வாக்கியத்தில் பொது நிலையாள், உணர்த்திய, பொருள், என்ற சொற்களை உன்னுக.

## IV

சித்தாந்தம் கேவல அத்துவிதமாகாது என்பது நனி விளக்கம். அது விசிஷ்டாத்வைத அத்துவிதமும் இல்லை. (Neither monism nor pantheism) அப்பர் பெருமான் சிவன், ''விரிகதிர் ஞாயிறல்லர் மதியல்லர் வேத விதியல்லர் விண்ணும் நிலனும் திரிதருவாயுவல்லர் செறுதீயுமல்லர் தெளி நீருமல்லர் தெரியில் அரிதருகண்ணியாளை யொரு பாகமாக அருள் காரணத்தில் வருவார்'' என்று கூறியுள்ளதை நோக்குக. இறைவனின் தடத்த இலக்கணத்தையும், கடவுளின் அத்துவித சம்பந்தத்தையும், தனித்தனியே விளக்கமாகச் சித்தாந்தம் கூறுவதுபோல வேறொன்றும் கூறவில்லை. சித்தாந்தமும்

விசிஷ்டாத்வைதமும் ஏறக்குறைய ஒன்றே என்று சிலர் கூறுவது ஒப்பத்தக்கதன்று. தத்துவங்களுக்கு அதீதமான கடவுளுக்கு இப்பிரபஞ்சம் அவனுடைய பிராகாரமாகக் கருதுதல் இழுக்கேயாகும். காரணமில்லாத லீலை யென்றால் அது பித்தர் தொழிலோடொக்கும். அல்லது அரையர் முதலோர் காரணமின்றி வேட்டையாடுதல் போன்ற செயல்களாகும். அல்லது உயிர்த்தல், இமைத்தல், ஆவித்தல் போன்ற செயல்களாயின் அவைகள் தன்குறியினன்றிச் செய்யும் தொழில்களாகும். இவைகள் இறைவனுக்கு ஒப்பாது. எனவே, பொருட்டன்மையால் வேறாயினும் கலப்பினால் உயிர்களுடன் அவையேயாகும் இயைபு உயிர்களின் பொருட்டு முதல்வன் செய்யும் கருணை என்று சித்தாந்தம் கூறுவதே உண்மை என்பது தெள்ளிதில் விளங்கும் என்கிறார் மாதவச் சிவஞான முனிவர். மேலும் அவர் சொல்லாராய்ச்சியினாலேயே ஏகான்ம வாதத்தைப்பரபக்கம் செய்கிறார். மேநாட்டில் 'லிங்குவிஸ்டிக் அனாலிசிங்' என்ற ஒரு தத்துவ முறை மேலும் மேலும் இப்போது விருத்தியாய்க் கொண்டு வருகிறது. அம்முறைப்படி வார்த்தைகளின் மெய்ப்பொருள் கொண்டே தத்துவக் கொள்கைகளை நிரூபிப்பது. அந்த முறையை நமது மெய்கண்டாரும் மாபாடியக்காரரும் கையாண்டிருப்பது கவனிக்கத் தக்கது வியக்கத்தக்கது "அத்துவிதமென்ற சொல்லானே ஏகமென்னில் ஏகமென்று சுட்டுவதுண்மையின் அத்துவித மென்ற சொல்லே அந்நியநாத்தியை யுணர்த்துமாயிட்டு" என்று ஏதுக் கூறியுள்ளார் மெய்கண்டார். வேதவாக்கியங்கள் "ஏகம் பிரம்மம்" என்று கூறுவதல்லாமல் 'பிரமம் அத்து விதம்' என்றும் கூறுகின்றன. அத்துவிதம் இரு பொருட்கண் ணதெனக் கொள்ளின் ஒரு பொருளை அத்துவித மென்றால் பொருந்தாது எனக் கூறுகிறார் சிவஞான முனிவர். (ஏகம், ஏகன், ஏகமாய, ஏகனாகி என்ற பதங்களின் உண்மைப் பொருள்களை மாபாடியத்தில் 2, 10, 11 சூத்திரங்களின் வியாக்கியானங்களில் கண்டு கொள்க). இதுகாறும் கூறியதெல்லாம் இறைவன் அத்து விதமாய் உளன், ஏகனாகி இறைபணிநிற்க வேண்டியது உயிரே என்று காட்டுதற் பொருட்டே. வேதாந்தம் 'நீ அதுவாகிறா'ய் என்கிறது. சுத்தாத்வைதமான சைவ சித்தாந்தம் தானே அவையாகிறான் என்கிறது. நாயன்மார்கள் வாழ்க்கையிலும் திருவாக்குகளிலும், ஏன் இறைவன் அருள் பெற்ற உலக மகான்கள் யாவர் வாழ்க்கையிலும் காண்பது சித்தாந்த உண்மையே என்பது எமது சிற்றிவிலும் படிப்பிலும் கண்ட ஓர் உறுதி. சித்தாந்தத்தின்படி இறைவன் ஏகனாய் இருப்பது ஊழிக்காலத்தில் ஒன்றுதான். இக்கருத்தை நக்கீரர் அருளிய கயிலைபாதி காளத்திபாதி அந்தாதியில் காண்கிறோம்.

*அலரோன் நெடுமால் அமரர்கோன் மற்றும்*
*பலராய்ப் படைத்துக் காத்தாண்டு - புலர்காலத்*
*தொன்றாகி மீண்டுபலவாகி நிற்கின்றான்*
*குன்றாத சீர்க்கயிலைக் கோ.*

இறைவன் பலரைப் படைக்கின்றான். தான் பலவாகி நிற்கிறான். தான் பலராவதில்லை. இதை நோக்குக.

அப்பர் பெருமானும் 'ஆண்டுலகேழனைத்தினையும் வைத்தார் தாமே அங்கங்குச்சிவமாக நின்றார் தாமே'' என்பார். உயிர் சிவமாவதில்லை. சிவம் உயிரை நிலைப்பொருளாக அருளினால் ஏற்றுக் கொள்கிறான். சிவம் ஏகமாய் நின்றால் உயிருக்கு உய்வு ஏது? உலகந்தான் எதற்கு? இறைவன் உயிரோடு தானே யானபோது ஏகனாகி நிற்க வேண்டியது உயிரின் செயலாக வேண்டும். இதையே போதத்தின் பத்தாம் சூத்திரம் விளக்குகிறது. ஏகமாய் நின்றுழி மலமாயையொடு வலிய கன்ம மலமும் ஒழியும். உயிரானது ஏகனாகி இறைபணி நிற்கும்போது இறைவன் ''பவமகலவுடனாகி நின்று கொள்வன்'' என்று சிவஞான சித்தியார் கூறும். மேற்கூறிய வற்றிலிருந்து இறைவன் தானே யாதலும் ஒன்றாதலும் வெவ்வேறு அவசரங்கள் என்று துணியப் பெறும். இறைவன் ஊழிக்காலத்தன்றித் தனித்திருக்க மாட்டாதவன். இக்கருத்துக்களெல்லாம் திருஞான சம்பந்தர் தேவாரத்தில் நனி காண்கிறோம்.

*ஈறாய்முத லொன்றாயிரு பெண்ணான் குண மூன்றாய்*
*மாறாமறை நான்காய்வரு பூதம்மவை ஐந்தாய்*
*ஆறார்சுவை யேயோழசையொ டெட்டுத்திசை தானாய்*
*வேறாயுட னானானிடம் வீழிம்மிழலையே*

இந்தத் திருவாக்கையே மெய்கண்டார் பிரமாணமாகக் கொண்டுள்ளார் என்பதில் ஐயமில்லை.

மற்றைய தத்துவங்கள் பேதா பேத முக்கூறுகளில் ஒன்றை மட்டும் கைக்கொள்வதின் இழுக்கை மாதவச் சிவஞான முனிவர் வெகு அழகாக விளக்கியுள்ளார். முதல்வன் செய்யும் தொழில்கள் யாவையும் அர்த்தமில்லாமல் போய்விடும் என்கிறார். பதிபசு சம்பந்தம் பொன் னும் பணியும் போல அபேதமென்றால், அது பதி தன் பொருட்டு நிகழ்த்தும் செயலாகும். இச்செய்கையால் பதிக்குவரக்கடவதோர் பயன் ஒன்றும் இல்லை. இருளும் ஒளியும் போலப் பேதமாயின் உயிர்களின் பொருட்டு ஐந்தொழில் செய்தற்கு ஒருவாற்றானும் இயையில்லை. சொல்லும் பொருளும் போல் பேதாபேதமெனின்,

சமணர் கூறும் அநேகாந்தவாதமாகவே முடிந்து விடுகிறது. ஒரு பொருட்டு இரண்டு தன்மைகோடலும் போலியாகும்.

## V

சித்தாந்தத்துக்கும் மற்றுமுள்ள தத்துவங்களுக்கும் உள்ள ஒற்றுமை வேற்றுமைகளை இன்னும் சிறிது எடுத்துக்காட்ட விரும்புகிறேன். பவுத்தம் கடவுள் உண்டென்பதைப் பற்றியோ, மரணத்துக்குப் பின் உயிரின் நிலை என்ன வென்பதைப் பற்றியே ஆராயவில்லை. விருப்பு வெறுப்பு அற்ற நிலையையே சமுசாரக் கடலினின்று விடுதலையென்று பவுத்தம் கருதுகிறது. விருப்பு வெறுப்பு என்ற கடலிலிருந்து விடுதலையடையவது வேண்டுவதே ஆனால் அது நிர்மல சுகத்தைத் தருமா என்பது ஐயுற வேண்டியதே. சித்தாந்தமும் கடவுள் அருளைப் பெற இருவினை ஒப்பு அல்லது கரும சாம்மியம் தேவை யென்று கூறுகிறது. இக்கொள்கை உலகம் மாயை யென்ற அடிப்படையில் எழுந்ததன்று. இந்திரியங்களால் வரப்பெற்ற சுகதுக்கங்கள் நிலைபெற்றவையல்ல என்பதை உணர்ந்ததின் அடைவே இது. இல்லையேல் சுகத்தை நர்டுதலும் துக்கத்தைத் தவிர்த்தலுமே பெரிய தொல்லையாய்விடும். எனவே புண்ணியங்ககள் செய்வதொன்றே சித்தாந்திக்குக் குறிக்கோள் இல்லை. பாவத்தைப் புண்ணியத்தால் சுந்தோபசுந்த நியாயப்படி தீர்ப்பதும் குறிக்கோளில்லை. துறவினால் மட்டும் சமுசாரக் கடலைத் தாண்ட முடியாது. ஆணவத்தால் வரும் கரும பலன்கள் முடிவாக இறைவனருளால்தான் அற்றுப்போம் எனச் சித்தாந்தம் கூறுகிறது.

கிறித்துவ மதத்தை எடுத்துக் கொள்வோம். கிறித்துவ மதம் கடவுளை இரக்கமுள்ள பிதாவாகக் கருதுகிறது. சித்தாந்தம் கடவுளைச் சகுணமாகவும் நிர்க்குணமாகவும் காண்கிறது. திருமூலநாயனார் இதை எங்கும், என்றும் அதற்குமேல் சிறப்பாகக் கூறமுடியாதபடி செப்பியுள்ளார்.

*அன்பும் சிவமும் இரண்டென்பார் அறிவிலார்*
*அன்பே சிவமா வதாரு மறிகிலார்*
*அன்பே சிவமா வதாரு மறிந்தபின்*
*அன்பே சிவமா யமர்ந்திருந் தாரே*

கிறித்துவ மதம் பேசும் ஆண்டவன், மகன், தூய ஆவி என்பவை சித்தாந்தத்தில் காணப்படும் இறைவனின் இலக்கணங்களுக்கு ஒப்பாக இருக்கிறது. ஆண்டவன் சுத்த சைதன்யமாகையால் உணர முடியாதவன். இதையே நாம் சொரூப இலக்கணம் என்கிறோம்.

இறைவன் உயிர்களோடு சம்பந்தப்படுவது தடஸ்தம் என்கிறோம். கிறித்துவ மதம் ஆண்டவன் உயிர்களின் பொருட்டுத்தன் மகனாகிய ஏசுநாதரைத் தந்துளான் என்கிறது. இறைவன் அருள் காரணம் பற்றிக் குருவாய்வருதல் என்ற சித்தாந்தக் கொள்கையைக் கிறித்துவப் பரிசுத்த ஆவிக் கொள்கைக்கு ஒப்பிடலாம். கிறித்துவம் மக்களை உய்விக்க ஒருமுறை தான் இறைவன் வெளிப்பட்டுள்ளான் என்கிறது. சித்தாந்தத்தில் இறைவன் ஒவ்வொரு உயிர்க்கும் பக்குவநிலையில் குருவாக வெளிப்பட்டு ஆட்கொள்கிறான். "செங்கணவன்பால், திசைமுகன்பால், தேவர்கள் பால் எங்கும் இலாததோர் இன்பம்நம் பாலதாக் கொங்குண் கருங்குழலி நந்தம்மைக் கோதாட்டி இங்கு நம் இல்லங்கள் தோறும் எழுந்தருளிச் செம்பொற்பாதந்தந்தருளுகின்றான். யாவரும் அறியமுடியாத பரன் நம் பழங்குடில்தோறும் எழுந்தருளி அருள் பாலிக்கின்றான். கிறித்துவத்தில் இறைவனின் அருள் பாலிப்புப் பாவ மன்னிப்பாகும். சித்தாந்தத்தில் இருவினை ஒப்பு மலபரிபாகம் எய்தியே உயிரானது ஏகனாகி இறைபணி நிற்பதற்குப் பக்குவமடையும் காலத்தில் இறைவன் அருள் பாலிக்கிறான். சித்தாந்தத்தில் எல்லா உயிர்களுக்கும் இன்றில்லாவிட்டால் ஒருகாலத்தில் நிச்சயம் உய்வுண்டு. கிறித்துவ இறைவனின் அருள் கொள்கை சித்தாந்தக் கொள்கையுடன் ஒப்பாகவே இருக்கிறது. சித்தாந்தம் படித்த கிறித்தவர்கள் பெரிதும் வியப்பெய்துகிறார்கள்.

இஸ்லாமியர் கொள்கை போலவே சித்தாந்தமும் இறைவன் மானுடமாக அவதாரம் எடுப்பதில்லையென நம்புகிறது. சூபி கொள்கைகளும் சித்தாந்தக் கொள்கைகளும் நெருங்கிய உறவு கொண்டவை போலக் காணப்படுகின்றன. குலிஸ்டானில் ஜீவன் முத்தனின் நிலையை ஒரு கதையால் விளக்கப்பட்டிருக்கிறது. பூக்களைக் கொண்டு வருவேன் என்று தம் நண்பர்களுக்குச் சொல்லி நந்தவனத்துக்குச் சென்ற ஒருவன், பூக்களின் நறுமணத்தில் திளைத்து கையில்எடுத்துச் சென்ற கடமையையும் நெகிழவிட்டான், நண்பர்களையும் மறந்தான், தன்னையும் மறந்தான். "ஊன் கெட்டு உயிர் கெட்டு உணர்வு கெட்டு என் உள்ளமும் போய் நான் கெட்ட" நிலையை மாணிக்க வாசகர் அழகாகப் பேசியுள்ளார். கிறித்துவம் கடவுளைப் பிதாவாகக் கருதுகிறது. இஸ்லாம் யஜமானனாகக் கருதும். சித்தாந்தத்தில் புத்ர மார்க்கம், தாச மார்க்கம் என்ற இரண்டுக்கும் இடம் உண்டு. சூபி கொள்கை கடவுளைச் சித்தாந்தம் போல் அனன்யனாகவே பாராட்டுகிறது.

சமணத்தின் தூய கொள்கையாகிய அஹிம்சையைச் சித்தாந்தம் ஏற்கிறது. தயையே மூலதன்மம் என்கிறார் அப்பர் இது அஹிம்சை

பரமோ தர்மம் என்பதைவிட ஒருபடிமேல். அஹிம்சையை விட தயைபயன் தரவல்லது.

## VI

சமுதாய நலன்களில் ஈடுபடும் பிற மதங்களையும் தத்துவங்களையும் சிறிது ஒப்பிட்டுப் பார்ப்பது நலமெனக் கருதியே ஈண்டு சில வார்த்தைகள் கூறினோம். ஏனெனில் ஒரு கோடியில் அத்வைத வேதாந்தத்துக்கும் மற்றொரு கோடியில் வாழ்க்கையிலும் உலக வழக்கிலும் சம்பந்தப்பட்ட பல தற்காலத் தத்துவங்களைக் கொண்டு சித்தாந்தத்தை ஒத்திட்டுப் பார்ப்பது பொருத்தமே. முதற் கண் சித்தாந்தத்தின் சமரஸத்தையும் முற்போக்கான கொள்கைகளைப் பற்றியும் கவனிப்போம். சித்தாந்த தத்துவமோ சமயமோ மனிதனுக்கும் மனிதனுக்கும் பேதம் காண்பதில்லை. அதிகார பேதம் என்று பேசப்படும் கொள்கை இங்குப் பிறப்பினால் எழுவது அன்று. ஸ்ரீமத் சங்கரர் யாவர்க்கும் பிரம்மஞானம் சொந்தமே, ஆனால் சிலர் மட்டுமே வேத மோதுதலுக்குத் தகுதி என்று கூறியுள்ளதாகச் சொல்லப்படுகிறது. சைவத் திருமுறைகளை யாவரும் ஓதலாம். சிவஞான போதத்தை உணர விரும்புபவர்கள் ''மனத்தூய ராய் நித்தியா நித்தியவுணர்வு தோன்றி பிறவிக்கஞ்சி வீடு பேற்றின் அவாமிக்குடையவராய்'' இருத்தல் வேண்டும் என்று மாதவச் சிவஞான முனிவர் கட்டளையிட்டுள்ளார். தீக்கைகள் தகுதிக்கேற்ப வெவ்வேறு இருப்பினும் யாவரும் ஆசான் திருவருள் பெறுதல் மட்டும் அவசியமாகும். தொன்று தொட்டுவரும் கேள்வியால் அனுபவ முடைய தேசிகன் திருவருள் பெறாவிடின் உண்மையை அறிவதற்குத் தடையாகவுள்ள மயக்கங்களால் பாதிக்கப்பட வேண்டும். ''சாத்திரத்தை யோதினர்க்குச் சற்குருவின் வசன மாத்திரத்தே வாய்க்கு நலம் வந்துறுமோ - வார்த்த கடற் - றண்ணீர் குடித்தவர்க்குத் தாகந்தணித்திடுமோ தெண்ணீர்மையாயிதனைச் செப்பு'' என்று திருக்களிற்றுப்படியார் வினவுவது இக்கருத்துப் பற்றியே. இந்தக் கொள்கை அறிவியலுக்கு ஒப்புக்கொள்ளத் தக்கதாகவேயுள்ளது. இதுபொது விதியாயிருந்தபோதிலும் நாயன்மார்கள் சரிதைகள் ஞான அனுபவத்துக்கு ஒரு தடையுமில்லை என்று காட்டுகின்றன. அப்படி ஞான மடைந்தவர்களைச் சைவவுலகம் தெய்வத்துக்கும் உயர்வாகப் பாராட்டிற்று என்பதைக் காண்கிறோம். பேராசிரியர் சூரியநாராயண சாஸ்திரியார் இந்தக் கருத்தை அழகாக விளக்கியுள்ளார். ''ஆன்மாசத் பொருளாயிருந்தால், தூய்மையை அழுக்கிலும் விவேகத்தை அஞ்ஞானத்திலும் கூட்டில் விடுதலை

யையும் காண முடியாதா? எங்கும் பரந்த சுத்த சைதன்னியம், இம் முறையன்றி வேறு முறையில் வெளிப்படாதென்றோ, இந்த அல்லது அந்தப் பிறவி அல்லது சாதியில்தான் அது கைகூடுமென்றோ, இந்த அல்லது அந்தக் கிரியைகளாலோ மார்க்கத்தாலோ தான் அடையலாமென்றோ கூறுவதற்குச் சிற்றறிவுள்ள நமக்கென்ன அதிகாரம்? குறிக்கப்பட்ட வழிவகைகள் நல்லவைகளே. அவைகள் வழிகாட்டிதான். ஆனால் வற்புறுத்தும் சட்டமல்ல, அவைகளைத் தவிர வேறெல்லாம் படுகுழியல்ல'' என்கிறார். ''ஆட்பாலவர்க்கருளும் வண்ணமும் ஆதிமாண்பும் கேட்பான் புகில் அளவில்லை கிளக்க வேண்டா, தாட்பால் வணங்கித் தலைநிற்பதே'' நம் கடன் என்று திருஞான சம்பந்தர் கட்டளையிட்டுள்ளார். சங்கரர் மீமாஞ்சகர்கள் விதியிட்ட கிருபைகளை இடைவிடாது எதிர்த்தாலும், தம் தத்துவத்தில் புத்தி தத்துவத்தால் உண்மையைக் காணும் முறைக்கே மிகுதியான இடம் தந்துள்ளார். உள்ளம் அன்பில் உருகுவது, அறிவால் விரிவடைவதைவிட ஒரு சிறிதும் கீழ்ப்பட்டதல்ல, என்கிறார் திரு சாஸ்திரியார். சித்தாந்தத்தில் பக்திக்கும் ஞானத்துக்கும் சரியிடம் உண்டு.

## VII

சில தத்துவங்களில் ஒழுக்கத்துக்கு இடம் வெளிப்படையாகக் கூறுவதில்லை. சித்தாந்தம் கடவுள் அன்பின் வடிவம் என்றே கூறுகிறது. பஞ்சகிருத்தியங்களும் அருட் காரியங்களே. பதி உயிர்களுக்குத் தம் ஆணையால் கரும பலன்களைக் கொடுக்கும் ஒரு அதிகாரி மட்டுமல்ல. பேராசிரியர் பிரிங்கில் பாட்டிசன் கருமத்துக்குத் தக்கபடி இன்ப துன்பங்களைப் படியளந்து விட்டுத் தம் கருணையால் உயிருக்கு ஆதரவு தந்து நல்லறிவையும் நற்குணங்களையும் வளர்க்காத கடவுள் கொள்கையைத் தாம் விரும்புவதில்லையென்கிறார். சித்தாந்தத்தின் கடவுள் கொள்கை அன்பை வளர்க்க வல்லது. சித்தாந்தம் மனிதர்கள் செய்யும் வினைகளை இதம், அகிதம், என்ற பிரிவுகளாகப் பிரிக்கிறது. இதம் செய்தலே தவமும் ஞானமும் பெற வழியாம் என்று பேசுகிறது. மற்ற உயிர்களுக்கு இதம் செய்தால் தான் இறைவனிடம் அன்புடையவனாயிருக்க முடியுமென்கிறது.

*ஒழுக்கம்அன் பருள்ஆ சாரம் உபசாரம் உறவு சீலம்*
*வழுகிலாத் தவம்தா னங்கள் வந்தித்தல் வணங்கல்வாய்மை*
*அழுக்கிலாத் துறவடக்கம் அறிவொடர்ச் சித்த லாதி*
*இழுக்கிலா அறங்க ளானால் இரங்குவான் பணியறங்கள்*

என்று சிவஞான சித்தியாரில் ஸ்ரீ அருணந்தி சிவம் விளக்கிக் காட்டியுள்ளார். இன்னும்,

*இதமகி தங்கள் என்ப திகல்மன வாக்குக் காயத்(து)*
*இதமுயிர்க் குறுதி செய்தல் அகிதமற் றதுசெய் யாமை*
*இதமகித ங்கள் எல்லாம் இறைவனே ஏற்றுக்கொண்டிங்கு*
*இதமகி தத்தால் இன்பத் துன்பங்கள் ஈவனன்றே*

என்றும் கூறுகிறார்.

இதைவிட உயர்ந்த சமுதாய தத்துவம் வேறு எங்குக் காண முடியும். சித்தாந்தத்தில் மற்றும் சில தத்துவங்களில் காணப்படாதது போல சமுதாய தத்துவம் (Social Philosophy) காணப்படவில்லை யென்பார்கள் கண்மூடிகளே. சித்தாந்தம் தம் தம் சொந்த முத்தி நலன்களைக் கருதுவதே உயிர்களின் கடமை என்று போதிக்கவில்லை. சர்வ முத்தியையே சித்தாந்தம் நாடுகிறது. ஜீவன்முத்தியை அடைந்தவர்களும் உலகை விட்டகலாது, "அன்பரோடு மரீஇ மாலறநேய மலிந்தவர் வேடமும் ஆலயத்தானும் அரனெனத் தொழுவார்கள்" என்று சித்தாந்தம் கூறுகிறது. இதம் அகிதம் செய்வதெல்லாம் உயிர் தனக்குமட்டும் கர்மபலனைத் தேடிக் கொள்வதில்லை. அவை உலகையெல்லாம் பாதிக்கும் என்கிறது. இந்த இதம் அகிதம்யெல்லாம் பாதிக்கும் என்கிறது. இந்த இதம் அகிதம் எவ்விதம் செய்யவேண்டுமென்று சித்தாந்தம் கூறுகிறது;

*மனமது நினைய வாக்கு வழுத்தமந் திரங்கள் சொல்ல*
*இனமலர் கையிற் கொண்டாங் கிச்சித்த தெய்வம் போற்றிச்*
*சினமுத லகற்றி வாழும் செயலறம் ஆனால் யார்க்கும்*
*முனமொரு தெய்வ மெங்கும் செயற்குமுன் நிலையாமன்றே*

என்ற சித்தியார் செய்யுள் இதனை விளக்குகிறது. இவ்விதம் இதத்தையே செய்தால் நீங்கள் இச்சிக்கும் தெய்வம் ஏதுவாகிலும் சரி, நீங்கள் அருளை நாடுவீர்கள் என்று பேசுகிறது? இதைவிட உயர்ந்த, பரந்த அன்பு தத்துவம் (Humanism) வேறு எங்குக் காண முடியும். சினமுதல கற்றி வாழும் செயலே இந்த நாளில் மாந்தரிடம் தேவையாயிருக்கிறது. இது நிகழுமேல், குடும்பத்தில், நாட்டில் உலகத்தில் எங்கும் அன்புபொங்கும். இந்தத் தத்துவம் உலகெங்கும் உணரப் பெற வேண்டும். இந்த உண்மையை இதுவரை நாம் உலகுக்குப் பரக்க எடுத்துச் சொல்லவில்லை. இந்தத் தலைமை யுரையில் இந்த அன்புக் கொள்கைக்கே முக்கியத்துவம் தர விரும்புகிறேன்.

மனிதனின் தனிப்பட்ட ஒழுக்கமே உலகத்தின் ஒழுக்கமாகும். (Individual morality is the basis of social morality) உலகம் எவ்வளவு செல்வம் கொழித்தும், முன்னேற்றம் என்று கூறப்படும் செம்மை யடைந்திருந்தாலும், உள்ளுணர்வு இல்லாதவிடத்து மனிதர்கள் பிணங்களேயாவர். அவர்களைச் சூழ்ந்து நின்று அவர்களை மதிப்பவர் களும் நடைப்பிணங்களே என்று சித்தாந்தம் கூறுகிறது:

*அரிசனம் பூசி மாலை அணிந்து பொன்ஆடை சாத்திப்*
*பரிசனம் பின்பு செல்லப் பாரகர் பரிக்கக் கொட்ட*
*வரிசின்னம் ஊதத் தொங்கல் வந்திட உணர்வு மாண்டு*
*பெரியவர் பேச்சும் இன்றிக் கிடத்தலால் பிணத்தோ டொபபார்*

என்று சித்தியார் கூறுகிறது.

*பிணத்தினை ஒத்து வாழ்வோர் பின்நடைப்பிணங்கள் போல*
*உணக்கியே உழல்வீர் உங்கள் உடலுயிர் உணர்வும் எல்லாம்*
*கணத்திடைத் தோன்றி மாயும் காயமென் றறிந் தொருக்கால்*
*வணக்குறீர் அரனை என்றும் வானவர் வணங்க வைப்பன்*

என்று மேலும் சித்தியார் பேசுகிறது. இது மெடீரியலிசம் இம்பீரியலிசம் என்பவைகளின் கண்டனமாகும். அன்பென்னும் அடிப்படையில் இல்லாத வாழ்க்கை உயர்வும் முன்னேற்றமும் பயனற்றது. அந்த வாழ்வு கணநேரந்தான் இருக்கும். பின் மாய்ந்து விடும். இந்த உண்மைகளையெல்லாம் நீதி சாத்திரங்களில் காணலாம். அரசியல் தத்துவங்களில் ஊகிக்கலாம். ஆனால் சித்தாந்தம் ஒன்றே அருள் நெறியில் இவைகளையெல்லாம் பிணைத்துப் பேசுகிறது. மனிதனின் அருள் வாழ்வே உலகை அருளுலகாக மாற்றும். போக உலகமல்லாத அருள் உலகமான சுவர்க்கத்தை இகப்புவியின் மேலேயே சித்தாந்தம் நிறுவ வல்லது.

இத்தகைய சித்தாந்தத்தின் பெருமைகளைப் பேசினால் போதாது சித்தாந்திகள் வாழ்க்கையில் அவைகளை அமைத்துக் கொள்ள வேண்டும். முக்கியமாக ஒரு கருத்தை ஈண்டு வலியுறுத்த விரும்புகிறோம். தனிப்பட்ட மனிதனோ, சமுதாயமோ, நாடோ அருள் வழியை மறந்து ஆதிக்கத்தை மட்டும் நாடலாகாது. இது யாவரும் உணர வேண்டிய ஒரு படிப்பினையாகும். ஒருவரை ஒருவர் ஆளமுயல்பவர் நடைப்பிணங்கள் பிணங்களையாளுவது போலாகும். நாஸ்திக உலகத்திலே வீழ்த்தப்பட்ட மக்கள் பிணங்கள். ஆதிக்கம் பெற்ற மக்கள் நடைப்பிணங்கள். இதைச் சித்தாந்த செந்நெறி வெறுக்கிறது.

## VIII

இதுகாறும் சித்தாந்தத்துக்கும் சமுதாய தத்துவத்துக்கும் உள்ள தொடர்பைக் கவனித்தோம். இனி விஞ்ஞானம் தலைசிறந்த இந்த நாளிலே சித்தாந்தத்தின் இடம் என்னவென்று சிறிது சிந்திப்போம். உண்மையிலேயே தற்காலத்து உண்மை விஞ்ஞானிகள் தத்துவ ஞானிகளாகவே காணப்படுகிறார்கள். விஞ்ஞானத்தின் முடிவைக் காண மாட்டாதவர்கள் விஞ்ஞானத்தால் இடையில் வரும் சக்திகளை மன்பதைக்குத் தீங்கு விளைக்க உபயோகிக்கிறார்கள். முதற்கண் பிரபஞ்ச உற்பத்தியைப் பற்றித் தற்கால உன்னத முடிவுகளையும் சித்தாந்தத்தின் கொள்கைகளையும் சிந்திப்போம். சித்தாந்தத்தின் முக்கிய உண்மைகள் பதியைப் போல் உலகு அனாதி. பிரகிருதி மாயை இறைவனின் பரிக்கிரகசக்தியின்வழி உண்டானதொன்றே, காலமானது அசுத்த தத்துவமே. இறைவனின் தாண்டவமே மற்ற சராசரங்களை இயக்குவிக்கின்றது. சடப் பொருள்களின் இயக்கமெல்லாம் இறைவனின் சக்தியில் உண்டானதே என்பவையாகும். ஒளி, ஒலி இவைகளின் வேகம் தனித்தத்துவமல்ல. சம்பந்தவிதி (Theory of realativity) யால்தான் நிர்ணயிக்கலாம். அணுவைப் பிளந்தபின்னும் கடைசியாக உள்ள சக்தியாதென்றும் எப்படி நிலை பெற்றதென்றும் அறியொணாதது. சடமானதென்று எண்ணப்படும் ஒன்றே தன்னிடத்தில் நிலைத்துள்ள ஒரு தன்மையால் சக்தியாக மாறும். சக்தியும்சடப்பொருளாக மாறலாம். சக்திக்கும் எடை, பருமன் உண்டு. உள்ளது போகாது இல்லது வாராது என்ற காப்புவிதியே (Law of conservation) எங்கும் காண்கிறோம். எல்லாம் ஒன்றுக்குள் ஒன்றாய்த் தொக்கி நிற்கிறது. கூர்தலும் அடங்குதலும் உலகத்தில் காணும் நியதி. இவைகளைப் போன்ற உண்மைகளைத் தற்கால விஞ்ஞானம் முடிவுகட்டிக் கூறுகிறது. இந்த உண்மைகளெல்லாம் சித்தாந்தத்தில் கூறப்படும் முப்பத்தாறு தத்துவ சம்பந்தங்களுக்கு உடன்பாடுடையதாக இருக்கின்றன. இன்னும் தற்கால மனோதத்துவ சாஸ்திர உண்மைகளும் சித்தாந்தத் தத்துவக் கட்டளைக்கு விளக்கம் தருவதாகவே இருக்கின்றன. இவ்வுண்மைகளையெல்லாம் ஆராயின் அறிவிற்கு இன்பமாகவே இருக்கும். இங்கு ஒன்றிரண்டைமட்டும் தொட்டுக்காட்டலாமென எண்ணுகிறேன்.

பிரபஞ்சத்தின் நிலையைப் பற்றி பேராசிரியர் பிரெட் ஹாயில். என்பவர் சொல்லி வந்த கூற்று இதுவரையில் நிலவி வந்தது. அது பின்வருமாறு. பிரபஞ்சம் என்றும் இருந்தபடியே இருக்கிறது, ஆனால்

எங்கிருந்தோ நியூட்ரான்களும் ஜலவாயு அணுக்களும் வருவதால் அவைகள் நக்ஷத்திரங்களுக்கும் மண்டலங்களுக்கும் சக்தியைத் தருகின்றன என்பது. ஆனால் இது முற்றிலும் உண்மையன்று. ஏனெனில் பிரபஞ்சம் இருந்தபடியே இருந்தால் நக்ஷத்திரங்களின் பருமன், எடை மாறாமல் இருக்க வேண்டும். ஆனால் மாறி வருகிறதென்று வான சாஸ்திரிகள் கண்டுள்ளார்கள். சமீபத்தில் பேராசிரியர் மார்டின் ரைலி என்பவர் ஹாயிலின் கூற்று ஒப்புக் கொள்ளத்தக்கதன்று. பிரபஞ்சம் தொடர்ந்து இருந்துகொண்டே இருந்தால் (Continuous Creation) எந்தக் காலத்தில் அம்மாதிரி ஆரம்பித்தது என்பதற்கு விடையில்லை. இயக்கத்துக்கு உஷ்ண சக்தி (Entroply) இல்லையென்றால் சூரிய சந்திரர்களும், பூமியும் சுழலா. எனவே பிரபஞ்சம் ஒரு மூலப் பொருளினின்று வெளிப்பட்டிருக்க வேண்டும், உஷ்ண சக்தி குன்றியதால் இயக்கம் ஓய்ந்தபின் எதனிடத்திலேயோ மறைந்துவிடும். சாங்கியம், பாஞ்சராத்திரம் முதலானவைகளில் கூறப்படாத நாதம், விந்து, சாதாக்கியம், ஈச்சுவரம், சுத்தவித்தை என்ற சித்தாந்தத்தில் பேசப்படும் தத்துவங்கள் திரைலி கூறும் உண்மைகளை விளக்கமாக விரித்துக் கூறுகின்றன.

காலதத்துவத்தை எடுத்துக் கொள்வோம். கால வாதிகள் 'காலம் ஆதி அந்தமில்லாத எப்போதுமுள்ள ஒன்று. அது மற்றப் பொருள்களால் அளவுபடுகிறதே ஒழிய அது அளவுக்கு அடங்காது' என்பர். இந்தக் கொள்கை காலத்தை அனவஸ்தை (Infinite regress) க்கு உள்ளாக்கி விடும். காலம், பொருள் நிகழ்ச்சியில் உணரப் படும் ஒன்றே. அது ஒரு தனித்த பொருள் அன்று. எனவே காலத்தை சித்தாந்தம் அசுத்த மாயையின் சங்கையில் தான் சேர்க்கிறது. சமீபத்தில் சில ருஷ்ய விஞ்ஞானிகள் காலம் ஒரு பிரகிருதி சம்பந்தமான தத்துவம் (Material factor) என்றே கூறியுள்ளார்கள்.

தற்கால விஞ்ஞானக் கூற்றுகளைப் பற்றிக் கூறியது நவீனத்தைக் குறித்தோ, அதிசயச் செய்தியாகவோ கூறினோமில்லை. சென்ற நூற்றாண்டில் விஞ்ஞானமும் சமயமும் முரண்பாடானவை, விஞ்ஞானம் நாத்திகத்தில் முடியுமென்று சொல்லிவந்தார்கள். இக்காலத்து அணுவாராய்ச்சி முதலானவை மனிதனுக்கு என்றுமில்லாத சக்திகளைக் கையாள வாய்ப்புத் தருகின்றது. ஆனால் கூர்த்த அறிவுடையவர்கள் விஞ்ஞானம் அபரஞான எல்லைக்கு அழைத்துச் செல்வதாய்க் காண்கின்றனர். சுத்த தத்துவத்துக்கும் பிரகிருதி தத்துவத்துக்கும்இப்போதுதான் சம்பந்தத்தை மேனாட்டார்

காண்கிறார்கள். இதைச் சித்தாந்தம் முன்னமேயே உணர்த்தியுள்ளது. அப்பர் இறைவன்

*"இருநிலனாய்த் தீயாகி நீருமாகி*
*இயமான னாயெரியுங் காற்றுமாகி*
*அருநிலைய திங்களாய் ஞாயிறாகி*
*ஆகாசமாய் அட்ட மூர்த்தியாகி*
*பெருநலமும் குற்றமும் பெண்ணும் ஆணும்*
*பிறருருவும் தம்முருவும் தாமே யாகி*
*நெருநலையாய் இன்றாகி நாளையாகி*
*நிமிர்புன் சடையடிகள் நின்ற வாறே"*

என்றும்,

"கலையாகி, கலைஞானமும் தானேயாகி, பிரளயத்துக்கப்பால் ஓர் அண்டமாகி நின்றானென்றும், பூலோக புவலோக சுவலோகமாய் எல்லாம் தானேயாகி ஏலாதனவெல்லாம் ஏல்விப்பான்" என்றும் நின்ற திருத்தாண்டகத்தில் அருளியுள்ளார். மணிவாசகர்

*'முன்னைப்பழம் பொருட்கு முன்னைப் பழம் பொருளே*
*பின்னைப் புதுமைக்கும் பேர்த்துமப் பெற்றியனே'*

என்றும் அருளியுள்ளார். எனவே அறிவுக்கும் அனுபவத்திற்கும் ஒப்பவுளது என்றும் நிலவக்கூடியது (Living Philosophy) சித்தாந்தம் என்பது நனி விளங்கும்.

## IX

இக்காலத்துத் தத்துவ ஆசிரியர்கள் சித்தாந்தத்தைப் புகழ்ந்தே பேசியுள்ளார்கள். பேராசிரியர்கள் ஜுவாகிம்வாக், ரினோ குவினோ முதலியவர்கள் இங்குக் குறிப்பிடத்தக்கவர்கள். நம்நாட்டுத் தத்துவ ஆசிரியர்களும் சித்தாந்தத்தை இப்போது அதிகமாக ஆராய்ந்து பார்த்து வருகிறார்கள். பெரும்பாலும் சித்தாந்தத்தை ஒப்பற்ற தத்துவமென்றே பாராட்டியுள்ளார்கள். எனினும் சித்தாந்தத்தில் சிற்சில குறைகளைக் கண்டுள்ளார்கள். பூர்வ ஆசிரியர்களான மூன்று பாஷ்யக்காரர்களும் சித்தாந்தத்தைப் பற்றிப் பூர்வபக்ஷம் செய்ததாகத் தெரியவில்லை. சித்தாந்தத்தைப் பெரும் பகுதியில் ஒப்பிடத்தக்க ஸ்ரீ கண்ட பாஷ்யத்தை ஸ்ரீ ராமானுஜர் முதலியோர் கையாண்டுள்ளதாகக் கருதப்படுகிறது. பிரம் சூத்திர பாஷ்யத்தில் (11.2.27) சித்தாந்த சாத்திரத்தைப் பற்றி ஸ்ரீ சங்கரர் குறிப்பிட்டுள்ளதாகப் பேராசிரியர் தாஸ் பதா 1955ல் வெளிவந்த தமது பெரு நூலின் V வால்யத்தில்

குறிப்பிட்டுள்ளார். அவர் குறிப்பிட்ட சித்தாந்தம் எது என்பது விளங்கவில்லை, ஆனால் அது திரிபொருள் நிச்சயத்தையும் கடவுள் நிமித்த காரணத்தையும் ஒப்புக் கொள்கிறது என்று குறிப்பிட்டுள்ளார். மற்றும் சிலர் சித்தாந்தம் காஷ்மிரப் பிரதி அபிஞ்ஞசைவத்துக்குத் தொடர்புள்ளது என்றும் கூறுவர். சாதாரணமாகக் காஷ்மீர சைவம் ஒருபொருள் உண்மையைத் (Monism) தழுவுகிறது என்று எண்ணப்படும். ஆனால் சில சூத்திரங்களுக்கு ராமகாந்தர் முதலானவர்களால் பின்னால் எழுதப்பட்ட பாஷ்யங்கள் சித்தாந்தத்திற்கு ஒப்பாகவே உள்ளன என்று பேராசிரியர் சூரிய நாராயண சாஸ்திரியார் கூறியுள்ளார். ஒருசமயம் திருமூலர் வடநாடு சென்று பிரதி அபிஞ்ஞ சைவத்தைத் திருத்தி அமைத்து மீண்டும் தென்னாடு திரும்பினாரோ அறிகிலோம். வட நாட்டில் சித்தாந்தம் என்ற கொள்கை கல்வெட்டுக்களில் காணப்படுகின்றது என்று சாகர் பல்கலைக் கழகப் பேராசிரியர் பல்லா என்பவர் தமது சமீபத்தில் வெளி வந்த ஒரு நூலில் கண்டுள்ளார். மேநாட்டுப் பழைய தத்துவப் பிரஸ்தாபகர்கள் சித்தாந்தத்தை அறிந்ததாகத் தெரியவில்லை. மாக்ஸ் மூலர்,பால் டாசன் முதலானவர்கள் கூட சித்தாந்தத்தை அறிய வாய்ப்பில்லை. ஆனால் 18ஆம் நூற்றாண்டில் இருந்த ஸ்வீடன் பர்க்கின் தத்துவம் சித்தாந்தத்தை ஒத்ததாகப் பல அம்சங்களில் காணப்படுகின்றது. இதைக் காலஞ்சென்ற திரு. கோபால செட்டியார் தமது நூலில் விளக்கியுள்ளார். ஹோசிங்குடன் முதலிய மேநாட்டவர்களல்லாது, நமது ஜெ. எம். நல்ல சாமிபிள்ளை அவர்கள் சித்தாந்தத்தைப் பற்றி ஆங்கிலத்தில் எழுதியிராவிட்டால் சித்தாந்தத்தைத் தமிழ் நாட்டிலன்றி மற்றவர்கள் அறிந்திருக்க மாட்டார்கள். பிள்ளை அவர்களது நூறாவது பிறந்ததினம் அடுத்த ஆண்டு வருகிறது. அதை நாம் சிறந்த முறையில் கொண்டாடி அவர் நூல்களை மீண்டும் அச்சேற்றுவதற்குத் தூண்டுதலாக இருக்க வேண்டும். ஷோமிரசின் ஜர்மானிய மொழியில் எழுதியுள்ள நூலைத் தமிழாக்கம் செய்ய வேண்டும். நம் சித்தாந்திகள் தவிர, ரெவரண்டு பீட்,வயலட் பரஞ்சோதி முதலியவர்கள் சித்தாந்தத்தை விமர்சனம் செய்துள்ளார்கள், சமீபத்தில் வெளிவந்த டாக்டர் தேவசேனாபதியின் நூலும், பேராசிரியர் சூரிய நாராயண சாஸ்திரியார் நூலும் குறிப்பிடத்தக்கவை. இவைகளையெல்லாம் சேர்த்து ஒரு நூல் நிலையத்தில் வைக்க வேண்டும். திரு சாஸ்திரியார் சித்தாந்தமும் அத்வைதத்தைவிட சில அரிய முறைகளில் கருத்துவாதத்தைத் (Idealism) தழுவியதே என்று சில சிந்திக்கத்தக்க கருத்துக்களை எழுதியுள்ளார்.

## X

சித்தாந்தம் தம்மிடத்திலே முரண்பாடுகளை உள்ள கொள்கைகளைக் கொண்டதன்று. எனினும் ஒரு சில கருத்துக்களை முழுதும் விரித்துப் பேசவில்லை. உதாரணமாக உயிர் பதியுடன் அநாதி என்பது. அந்தக் கொள்கையில்லாவிட்டால் அத்வைதம் எதிர்ப்படும் விலங்குகட்குச் சித்தாந்தம் உள்ளாகும். இறைவனால் உணர்த்த வேண்டிய பொருள்களைத் தத்துவ ரீதியில் அடக்க முடியாது சிலர் எழுதின தப்புக் கருத்துக்களை திரு. சிவபாதசுந்தரம் முதலியோர் திருத்தியுள்ளார்கள். எனினும் அவைகளை மீண்டும் மீண்டும் ஆராய்ந்து விளக்கம் செய்ய வேண்டும். பிறர் கூறும் குறைகளில் சில பின்வருமாறு : இறைவன் குருவாய் வருவதால் மாயா சம்பந்தமாக மாட்டானா? இறைவனோடு உயிரும் அநாதி என்றால் இறைவனுக்கு இழுக்கல்லவோ? இறைவன் மாயையினால்தான் தொழில் நடத்த வேண்டுமென்றால் அவன் பூரணத்துக்குக் குறைவில்லையா? மலம் செம்பில் களிம்பு போலுள்ளதென்பது உதாரணமேயொழிய சமாதானம் இல்லை, சீவன் முத்தர்களையும் அரக்கோயில்களையும் அடியார்களையும் வணங்க வேண்டுமென்று சட்டத்துக்கு உட்படுத்துவது பொருந்துமா? சிவோகம் பாவனையை ஒப்புக்கொண்டு, உயிர் சிவமாகாது என்பது பொருத்தமா? இந்தத் கடாக்களுக்கு எம்மால் இயன்ற விடைகள் தர விருப்பமே. ஆனால் இந்தத் தலைமையுரையில் அவைகளைப் பற்றிப் பேசப்புகின் விரியும். மாநாட்டுச் சொற்பொழிவுகளுக்குக் கருத்துரை கூற ஏற்படின் எம்மால் முடிந்தவரை எடுத்துப் பேசுவோம். இந்தக் கேள்விகளை எழுப்புவோர்களைச் சித்தாந்தத்தைக் குறை கூறியவர்களாக எண்ணக்கூடாது. அவைகள் எல்லாம் விளக்கம் தர வேண்டிய பிரச்சினைகளே. நாமும் தீவிரமாகச் சிந்தித்துச் சமயம் நேர்ந்துழி தக்கமுறையில் எழுதி விளக்க வேண்டும். அந்தப் பணிகளுக்கு இந்தியத் தத்துவங்கள் எல்லாவற்றையும் சிறிது கற்றுணர வேண்டும். அந்தக் கல்விகளுக்கும் அதைக் கற்றவர்களை ஆதரிக்கவும் நம் சமாஜம் போன்ற நிலையங்கள் தொழில்பட வேண்டும். சமாஜம் செய்ய வேண்டிய பணிகளைப் பற்றியும், சித்தாந்திகள் கடமையைப் பற்றியும் மாநாட்டில் ஒரு நிகழ்ச்சியில் சிந்திக்க வேண்டும். அதற்கு வாய்ப்பிருக்குமென நம்புகிறேன். செய்ய வேண்டிய பணிகளைப் பற்றி ராயப்பேட்டை (1953), விருதுநகர் (1955) மயிலம் (1958) முதலிய மாநாடுகளில் விரிவாக எடுத்துரைத்துள்ளேன். அப்பணிகளில் திட்டமிட்டு விரைவில் ஈடுபட வேண்டும்.

## XI

தற்சமயம் நம் நாட்டை எதிரிகளின் படையெடுப்பிலிருந்து பாதிக்காமல் காப்பாற்ற எல்லோரும் ஒருமனதாக உழைக்கிறோம். முக்கியமாகச் சைவர்களுக்கு இந்த நெருக்கடியில் பெரிய பொறுப்பு இருக்கிறது. நமது சிவபிரான் உகந்து உறையும் கயிலாயமும், ஆகமங்களை மிகவும் போற்றிக் காப்பாற்றும் காஷ்மீரம், நேபாளம், காமாக்கியம் முதலிய பிரதேசங்களும் ஆபத்துக்கு உள்ளாகி இருந்தன. இறைவன் திருவருளால் அபாயம் நீங்கிற்று. நம் எதிரிகளைப் பகையாது அவர்களுக்கு நமது தத்துவ ஒருமைப்பாட்டை எடுத்துப் புகட்ட வேண்டும். தம்மபதத்தில் ஒரு வாசகம் 'வெற்றி வெறுப்பையே விளைவிக்கிறது, வென்றவர்களும் சுகமடைவதில்லை தோல்வியுற்றவர்களும் சுகமடைவதில்லை' யென்கிறது. நடுவு நிலைமையே நல்லது என்று கூறுகிறது.

கன்பூசியரின் ஒருவாசகம் 'பேச்சில் உண்மையைக் காக்காதவர்களை யாரும் நம்ப மாட்டார்கள் வெறுப்பார்கள்' என்று கூறுகிறது.

அச்சாணி இல்லாத வண்டியில் யாராவது சேர்ந்து போக விரும்புவார்களா என்று கேட்கிறார் சீன தத்துவ ஞானியான கன்பூசிநாயனார்.

குறளைச் சீன பாஷையில் ஆயிரக்கணக்காக அச்சிட்டு அந்நாட்டுக் குடிமக்களுக்கு வழங்க வேண்டும். தென்னாட்டுத் தேவாலயங்களும், மடாலயங்களும் பொன்னாலும், பணத்தாலும் தர்மத்தை நிலைநாட்ட இந்த நெருக்கடியில் ஆதரவு வழங்கி யுள்ளார்கள். வெளிப்பகையைவிட கல்லாமை மிகப்பெரிய பகையாகும். எனவே நம்நாட்டு மக்களிடத்தே தெய்வீக வாழ்வு நிலைக்க முந்தியைவிட அதிகமாகப் பாடுபட வழிவகை தேட வேண்டும்.

## XII

இந்துமத தர்ம கமிஷன் யாதாஸ்து நல்ல முறையில் அமுலுக்கு வர தீர ஆய்ந்து அதிலுள்ள குற்றங் குறைகள் இருந்தால் நீக்க வேண்டும். இந்துமத ஸ்தாபனங்களின் பொருள்களைப் பெரும்பாலும் அந்தந்த சம்பிரதாய நிலையங்களுக்கும் தத்துவங்களை ஆதரிப்பதற்குமே பயன்படுமாறு செய்தல் வேண்டும். நாட்டில் சமரசம் ஓங்கிநிற்பது நல்ல அறிகுறியே. அதை வளர்க்க வேண்டும். இப்பணிகளில்சமாஜம்

முன்னணியில் நிற்க வேண்டும். அவைகளுக்குச் சான்றோர்கள் ஒன்றுகூடி உழைத்தல் வேண்டும் இறைவன் இப்பணிகள் புரிய அருள் புரிவானாக!

*என்று மின்பம் பெருகு மியல்பினா*
*லொன்று காதலித் துள்ளமு மோங்கிட*
*மன்றுளாடி யாரவர் வான்புகழ்*
*நின்ற தெங்கும் நிலவி யுலகெலாம்*

நமச்சிவாய வாழ்க!

# திருமுருக கிருபானந்த வாரியார்

**(60ஆம் ஆண்டு விழா - 1965 - சிதம்பரம் - சைவர் மாநாடு)**

உலகம் பலவிதம் என்பது பழமொழி. இதற்கு என்ன பொருள்? உலகம் பலவிதம் என்று பதச்சேதஞ் செய்து உலகம் பலவிதமாக இருக்கின்றது என்று பொருள் செய்கின்றார்கள். அது அத்துணைச் சிறந்த பொருளன்று. ஏன்? உலகம் ஒரு விதமாகத்தானே இருக்கின்றது? மக்களைப் பெறுவது பெண்கள்தானே? உண்பதும் உறங்குவதும் ஒன்றுபோல்தானே? பலவிதம் இல்லை யல்லவா?

உலகு அம்பலவிதம் என்று பதஞ்சேதஞ் செய்தல் வேண்டும், அம்பலத்திலே இறைவன் ஆடுகின்றான். உலகம் இனிது நடைபெறுகின்றது.

கண்ணாடியில் தெரிகின்ற நிழலை அசைக்கும் பொருட்டுத் தான் அசைவதுபோல், அகில உலகங்களும் அசையும் பொருட்டு இறைவன் அசைகின்றான்.

இவ்வாறு இறைவன் ஆடத்தொடங்கிய காலம் எது என்று ஆராய்வாருக்கு அறிவுரை கூறுவார்போல் சேக்கிழார் பெருமானார்,

*"மாதொரு பாகம் நோக்கி மன்னுசிற் றம்ப லத்தே*
*ஆதியும் முடிவும் இல்லா அற்புதத் தனிக்கூத் தாடும்*
*நாதனார்...."*

என்கின்றார்.

இறைவனுடைய ஆனந்தக் கூத்துக்கு ஆரம்பமும் இல்லை; அந்தமும் இல்லை. அத் திருநடனத்தால், ஆக்கல், அளித்தல், அழித்தல், மறைத்தல், அருளல் என்ற ஐம் பெருந் தொழில்களும் நடைபெறுகின்றன.

நம்முடைய இதய கமலத்திலே யுள்ள தகராகாயத்திலே ஒரு அசைவு நடைபெறுகின்றது. அதனால் இந்த உடம்பு அசைகின்றது. இதயத்தின் உள்ளசைவு இல்லையானால் உடம்பு அசையாது. அசையாத உடம்பை நான்கு பேர் சேர்ந்து அசைத்துவிடுவார்கள்.

இவ்வாறு உயிர்கள்தோறும் நின்று அசைந்து அசைக்கின்ற பொருள் சிவம் எனப்படும். சிவம் இல்லையானால் சவம் எனப்படும்.

சிவம் என்பது மங்கலம் எனப்படும். சிவத்துடன் தொடர்புடையது சைவம்.

*தில-எள். திலத்தின் தொடர்புடையது தைலம்*
*சிலா-கல். சிலாவின் தொடர்புடையது சைலம்*
*சிவ-மங்கலம். சிவ சம்பந்தமுடையது சைவம்.*

இதனை யுணர்ந்தவன் சைவன்.

*''நின்றதுவும் சரிப்பதுவும் சைவமே யாய்''*

என்பார் திருஞான சம்பந்தர்

சிவம் பேரொளிப் பிழம்பாகத் திகழ்கின்றது. ஒளி மேல்நோக்குந் தன்மையது. அதனால் அக்கினி மேல்நோக்கி எரிகின்றது.

*மேல்நோக்கித் திகழ்வது சிவ சோதி*
*அதைச் சூழ்ந்துள்ளது அருட்சோதி*
*அது ஆன்ம சோதியில் தங்கியுள்ளது*

இந்த மூன்றும் ஒன்றுசேர்ந்த ஒரு அருளமைப்பே சிவலிங்கம்.

சிவலிங்கத்தின் மேல்நோக்கிய வடிவம் சிவசோதி. அதனைச் சூழ்ந்து ஆன்மாவையே நோக்கியுள் ஒன்று அருட்சோதி. அடியில் உள்ள வட்டமான வடிவம் ஆன்மசோதி.

*''சோதியுட் சோதியுட் சோதி''*

என்று அருட்பிரகாச வள்ளலார் பாடுகின்றார்.

*உள்ளம் பெருங்கோயில் ஊனுடம் பாலயம்*
*வள்ளல் பிரானார்க்கு வாய்கோ புரவாசல்*
*தெள்ளத் தெளிந்தார்க்குச் சீவன் சிவலிங்கம்*
*கள்ளப் புலனைந்துங் காளா மணிவிளக்கே*

என்பது திருமந்திரம்.

பிரமன், திருமால், உருத்திரன், மகேச்சுரன் இந்த நான்கும் உருவத் திருமேனிகள்.

சிவம், சக்தி, நாதம், விந்து இந்த நான்கும் அருவத் திருமேனிகள்.

சதாசிவம் என்ற சிவலிங்கம் உருவாருவத் திருமேனியாகும்.

இந்த "நவந்தரு பேதங்கொண்டு நடிப்பவன் நாதன்தானே" என்று சிவஞான சித்தியார் கூறுகின்றது.

ஆதலால் சிவலிங்க வழிபாடு செய்வது இன்றியமையாதது. சிவலிங்கத்தை வழிபட்டோர் எல்லா நலன்களும் எளிதிற் பெறுவார்கள்.

சிவ பூசைக்குச் சிறந்த சாதனங்கள் திரு நீறு, உருத்திராட்சம், ஐந்தெழுத்து.

கருப்பு என்றால் யாருக்கும் வெறுப்பாக இருக்கும். வெண்மையான ஒரு பொருளை நெருப்பில் இட்டால் கரியாகிவிடும். கரிய சாணத்தை நெருப்பில் இட்டால் வெண்மையாகின்றது.

எனவே, 'திருநீறு அணித்தால் உள்ளம் மென்மையாகப் பால் போல் மாசற்றுத் திகழும். திருநீற்றை முறைப்படி ஐந்தெழுத்தோதி யணிவாரை நோயும், பேயுந் தீண்டமாட்டா.

திருநீறு தரித்துச் சிவபூசை செய்யாதார் ஏன் பிறந்தார்? என்று வினாவுகின்றார் அதிவீரராம பாண்டியர்.

*சிவகருமஞ் செய்யார் திருநீறு சாத்தார்*
*தவநிலையாஞ் சைவநெறி சாரார் - அவனிதனில்*
*கான்பரந்த பச்சைக் களாநிழலைக் கைதொழார்*
*ஏன். பிறந்தார் மானிடராய் இன்று.*

உமை யம்மையார் காஞ்சி முதலிய திருத்தலங்களில் சிவலிங்க வழிபாடு செய்தார். விநாயகர் சிவபூசை செய்த தலம் திருச் செங்காட்டங்குடி. முருகவேள் வழிபட்ட தலம் திருமுருகன்பூண்டி. திருமால் சிவபூசை செய்து சக்கராயுதம் பெற்றார். அத் தலம் திருவீழிமிழலை. பிரமா வழிபட்ட தலம் பிரமபுரம். இந்திரன் வழிபட்டான் மதுரையில். முத்தரும், சித்தரும், முனிவர்களும், இமையவரும், இப் பூதலத்தில் வந்து சிவலிங்கத் திருமேனியை அருச்சித்து அருள் பெற்றார்கள்.

மைந்தனாகிய அபிமன்யு மாண்ட அன்றிரவுகூட அர்ச்சுனன் சிவபூசை செய்தான் என்று மகாபாரதம் கூறுகின்றது. இராமர் சிவபூசை செய்தார். கிருஷ்ணர் சிவபூசை செய்து வழிபட்டார். இராமேசுரமும், சோமநாதமும் சான்று பகர்கின்றன.

ஐந்தெழுத்தை ஓதுவார் உள்ளத்தில் ஞான ஒளி வீசும். ஓதாதார் உள்ளம் மருண்டு இருண்டு பாழ்படும்.

*..... ..... ..... ..... .... ... "அரன்*
*அஞ்செழுத்தும் உணரா அறிவிலோர்*
*நெஞ்சும் என்ன இருண்டது நீண்டவான்"*

என்கின்றார் சேக்கிழாரடிகள்.

சிவா சிவா என்பார் காலன் வயப்படார். பிராணவாயு வாசி எனப்படும்.

அது பன்னிரு அங்குலம் வெளிப்படுகின்றது. எட்டு அங்குலந்தான் உள்ளே புகுகின்றது. ஆதாயம் எட்டு. விரயம் பன்னிரண்டு.

வா. சி. வா - எட்டு அங்குலம். சி - நான்கு அங்குலம்.

வாசி வந்து நான்கு அங்குலம் விரயமாகின்றது. பன்னிரு அங்குலமும் உள்ளே செல்ல வேண்டுமாயின் சிவா என்று சொல்லும்.

*"விட்ட எழுத்தை விடாத எழுத்தால்*
*கட்ட வல்லார் காலனைக் கட்ட வல்லாரே"*

என்கின்றார் திருமூலர்.

விட்ட எழுத்து சிகாரம். விடாத எழுத்து வகர ஆகாரம். வாசி என்று வந்து, சிவா என்று திரும்புதல் வேண்டும்.

## ஐந்து உறுதிப் பொருள்கள்

கிருஷ்ணன் என்ற சொல்லுக்குக் கரியவன் என்று பொருள் கூறுவர் பலர். அது சிறந்த பொருளாகாது.

கிருஷ் - தோண்டுவது. ஆகு பெயராக நிலத்தைக் குறிக்கின்றது.

ந - நலம்.

எனவே கிருஷ் - நிலம்; ந-நலம். நிலத்துக்கு நலஞ்செய்கின்றவர் கிருஷ்ணர். துவாபர யுக முடிவில் கிருஷ்ணாவதாரம் நிகழ்ந்தது. கிருஷ்ணர் பூபாரந் தீர்ந்து, பன்னிரு சோதி லிங்கங்களுள் ஒன்றான சோமநாதத்தை வழிபட்டு, மேற்கடலின் அருகில் இரண்ய நதிக் கரையில் ஒரு அரச மரத்தின்கீழ் சிவயோகத்து அமர்ந்தார். பகவான் வந்த வேலையை முடித்துக் கொண்டு புறப்படுகின்றார் என்பதையறிந்த முனிவர்கள், ஆன்றோர்கள் அனைவருந் திரண்டு, 'கிருஷ்ணரை வணங்கி செம்மையில்லாத, வெம்மையான கலியுகத்தில் நாங்கள் எவ்வாறு உய்வு பெறுவோம்? நாங்கள்

கடைத்தேறும் வழியாது? அருள் செய்யும்'' என்று வேண்டி நின்றார்கள்.

அப்போது முனிகணங்களைப் பார்த்து, கிருஷ்ணமூர்த்தி தனது கடைசி உபதேசமாகக் கூறியருளினார். ''முனிவர்களே! நீங்கள் ஏன் அறிவில்லாதவர்களைப் போல் அல்லல்படுகிறீர்கள்?

கருணையுடன் பிறை மதியைத் தலையில் சூடிய சிவபெருமானுடைய பாதமலர் உண்டு; அப் பாதமலரை அர்ச்சிக்க மலர் உண்டு; திருமஞ்சனம் புரிய குளிர்ந்த நீர் உண்டு; வேத இதயமாகிய திருவைந் தெழுத்துண்டு; ஐந்தெழுத்தோதி யணிய திருநீறு உண்டு. இந்த ஐந்து பொருள்களும் உங்கட்கு 'அரண்புரியும்.' அஞ்சமின்'' என்று அருளிச் செய்தார்.

*திங்களங் கண்ணிப் புத்தேள் சேவடிக் கமலமுண்டு;*
*கொங்கவிழ் மலருமுண்டு; குளிர்தரு புனலுமுண்டு;*
*தங்கும் அஞ்செழுத்து முண்டு; தவளவெண்ணீறு முண்டு;*
*வெங்கலிக் குடைவ தென்னே வெளிற்றறி வுடைய ரேபோல்?*

ஆதலால் காதலாகிக் கசிந்து கண்ணீர் மல்கிப் பஞ்சாக்கரம் ஓதி, வெண்ணீறு பூசி சிவ வழிபாடு செய்வோர் கலிக்கு அஞ்ச வேண்டியதில்லை.

யாண்டும் நீக்கமற நிறைந்திருக்கின்ற நிமலன் சிவலிங்கத் திருமேனியில் விளங்கித் தோன்றுகின்றான். பசுவின் உடம்பெங்கும் பால் பரவி நின்றாலும் மடியில் அப் பால் வெளிப்படுமாறு என்றுணர்க.

எல்லா உயிர்களிலும் இறைவன் பாலில் படு நெய்போல் மறைய நின்றுளான். அப் பரமபதியை நினைந்து நினைந்து நெக்கு நெக்கு உருகி வழிபடும் அடியாரது திருவுள்ளத்தில் கடைந்த தயிரில் வெண்ணெய்போல் விமலன் வெளிப்பட்டு நிற்பன். அதனால் ஆலயங்களையும் அடியாரையும் அரனாகவே வணங்குதல் வேண்டும்.

*''மாலற நேயமும் மலிந்தவர் வேடமும்*
*ஆலயந் தானும் அரன்எனத் தொழுமே''*

என்கின்றது சிவஞான போதம்.

திருக்கோயிலிற் சென்று இறைவனைக் கண்டவர் முத்தி கண்டவராவார்.

*பண்டைப் பண்டனையோது பெம்மானைப் பணிவரைகோ*
*தண்டனைத் தண்டனைத் தண்டனைச்செய்யுமுத் தண்டனைமு*
*தண்டனை யண்டர்தொழுந் திருமாற்பே றமர்ந்தமணி*
*கண்டனை கண்டனை யாயின்நெஞ்சே முத்திகண்டனையே*

ஆதலால் மனிதப் பிறவியை எடுத்த நாம் அனைவரும், அவ நெறியில் செல்லாது, சிவநெறியைக் கடைப்பிடித்து, திருக்கோயில் வழிபாடு, பாராயணம், ஜெபம், தியானம், மனவொடுக்கம் முதலிய சாதனங்களைச் செய்து உய்வு பெறுவோமாக.

# ‘செந்தமிழ் வித்தகர்’ கீ. இராமலிங்கனார்

**(65ஆம் ஆண்டு விழா - 1971 - வேலூர் - சைவர் மாநாடு)**

*தென்னாடுடைய சிவனே போற்றி!*
*எந்நாட்டவர்க்கும் இறைவா போற்றி!*

**செம்மனச் செல்வர்களே! அன்னை நல்லோர்களே!**

அம்பலவாணரும் அம்பிகையும் போன்று வீற்றிருக்கும் உங்கள் அனைவர்க்கும் எனது உளங்கனிந்த வணக்கம்.

சைவ சித்தாந்த மகா சமாசம், இம்மாநிலம் முழுவதுக்குமான ஒரு பெரிய நிறுவனம். அறுபத்து ஐந்தாண்டுகளுக்கு முன்பு தொடங்கப்பெற்றது. சென்னையைத் தலைமையிடமாகக் கொண்டு திருப்பணி புரிந்து வருவது. மாவட்டந்தோறுஞ் சென்று மாநாடுகள் நிகழ்த்திச் சமய உணர்வை நாடெங்கணும் பரப்பி வருவது. இவ்வாண்டு, வட ஆர்க்காடு மாவட்டத்தின் தலைநகரானதும், வரலாற்றுப் பெருமை மிக்கதுமான, இவ்வேலூரில், இம்மாநாட்டை நடத்துவதற்கு ஆவன யாவும் செய்துள்ள இம்மாவட்ட வாழ்நர்கள், இந்நகரப் பெருமக்கள், சிறப்பாக இவர்கள் சார்பில் இம்மாநாட்டை நடத்தும் பொறுப்பேற்றுள்ள வல்லமை படைத்த வரவேற்புக் குழுவினர்கள் யாவரும் அனைவரின் பாராட்டுக்கும் போற்றுதலுக்கும் பெரிதும் உரியவர்கள் ஆவார்கள்.

## சிவநெறி

### 1. அறமே அடிப்படை

சிவநெறியைச் சேர்ந்தவர் என்பவர் அறநெறியில் நடக்க முயல்பவர். நேர்மை தவற அஞ்சுபவர். ஒழுக்கம் கெடுக்கும் செயல் என்றால், நடுங்குபவர். பணம் ஈட்டும் போது பழிகள் அணுகாமல் பார்த்துக் கொள்பவர். பிறருக்கு மறந்துங்கூட கெடுதி செய்ய

எண்ணாதவர். தமக்குக் கெடுதி செய்தவர்களுக்கும் நன்மையே செய்ய நினைப்பவர். இப்படியெல்லாம் தம் வாழ்க்கையை, அறத்தின் அடிப்படையில் அமைத்து நடத்துவதே ஒருவர் சிவ நெறியாளர் என்பதற்கு முதல் அடையாளமாகும். இறைவன் அற வடிவானவர் என்று அவர் உணர்வார்.

## 2. அன்பு இன்றியமையாதது

சிவ நெறியாளர், எல்லாரிடத்திலும் அன்பாக இருப்பார். ஈ எறும்பு போன்ற எளிய உயிர்கள் பாலும் இரக்கம் காட்டுவார். அவருடைய அன்பும் இரக்கமும், உதட்டு அளவினதாக இல்லாமல், உள்ளங் கனிந்து வெளிப்படுவனவாக இருக்கும். பழிக்கு அஞ்சி ஈட்டும் பொருளைப் பலருக்கும் பகிர்ந்து அளிக்கும் பரிவு மனம் படைத்தவராக இருப்பார். எவ்வுயிரும் பசித்திருக்கக் கண்டு மனம் பொறார். பிறர் மனம் எள் அளவும் நோக வொட்டாமல் நடந்து கொள்வார். கடவுளை அன்பு வடிவினனாகக் கருதுவார்; அருள் திருமேனி தாங்கினவனாகப் போற்றுவார்.

## 3. அறிவின் திருவுருவம்

இறைவன் பேரொளிப் பிழம்பு. ஒளி அறிவைக் குறிப்பது. சிவ நெறியாளர் அறிவார்ந்த முறையிலே தம் செயலைச் செய்வார். அறிவை ஆண்டவனாகப் போற்றுவார். அவன் அறக்கடலாக விளங்குபவன் என்று உணர்வார். அவனுக்கு அன்பும் திருமேனியாக இருப்பதால், அன்பை ஒதுக்கித் தள்ளிவிட்டு, வெறும் அறிவினால் மட்டும் எந்தச் செயலும் செய்யமாட்டார். அவர் நினைப்பது, பேசுவதிலும், அறிவோடு அன்பை உடன் வைத்துக் கொண்டே நினைப்பார், பேசுவார். அவருடைய அறிவு, என்றும், எப்போதும் அன்போடு உடன் இணைந்து செயற்படுவதாகவே இருக்கும். எனவே, அவர் தமது அறிவைப் பயன்படுத்தி எவருக்கும் தீங்கு இழைக்க மாட்டார். எவரையும் கெடுத்து விடமாட்டார்.

## 4. அறிவு + அன்பு / அறம்

சிவபெருமானார் எல்லையற்ற அறிவினராகவும், அன்பு வடிவினராகவும், அறக் கடலாகவும் விளங்குகின்ற உண்மையை, அவர் ஏறு ஊர்ந்து அம்மையப்பராகக் காட்சியளிப்பதைக் கொண்டு இனிது அறிகிறோம். ஏறு என்பது எருது. இறைவன் அறிவு. அம்மை அன்பு. எருது அறம்.

பெருமானார், அம்பிகையோடு ஏறு ஊர்தியில் - அதாவது எருது வாகனத்தில் அளிக்கும் காட்சியை, அனைவரும் பெரிதும் போற்றுகின்றனர். சிவன் கோவில் பெருவிழாவிலே அது ஐந்தாம் நாள் காட்சியாக விளங்குகின்றது. அன்றைய நாள் விழாவுக்கு ஏராளமான கூட்டம். வெள்ளியிலும் தங்கத்திலும் எருதுகள் - ரிஷபங்கள். பஞ்ச மூர்த்திகளுக்கும் ரிஷப வாகனங்கள். மின் விளக்குகளால் அழகுபடுத்திய ஏறூர்திகள்.

ரிஷப வாகன சேவை, காணற்கு அரிய சேவை, சேவிப்பதற்கு உரிய சேவையென்று எல்லோரும் விரும்பிச் சென்று பார்த்து வழிபடுகிறோம். நாயன்மார்களுக்கு இறைவன் ரிஷப வாகனத்தில், அம்மையப்பராகக் காட்சியளித்து ஆட்கொண்டான் என்னும் செய்தியைத் திருத்தொண்டர் வரலாற்றில் படிக்கிறோம். இந்தக் காட்சியும் இங்ஙனம் ஆட்கொண்ட உண்மையும் எவற்றைப் புலப்படுத்துகின்றன? ஒருவரது வாழ்வில் கடவுளை அறக்கடலாகக் கருதி அறநெறி பிறழாது நடக்கவும், அன்பும் அறிவும் இணைந்த வடிவினன் என்று உணர்ந்து அன்பை நெகிழவிடாது அறிவைப் பயன்படுத்தவும், ஒருவருக்கு வாய்த்து விட்டால், அவருக்கு இறைவன் அம்மையோடு கூடிய அப்பனாக ஏறூர்ந்த செல்வனாகத் தன்னை வெளிப்படுத்துகிறான் என்னும் உண்மையை நன்கு தெரிவிக்கின்றன. அறவாழ்வு அன்பினோடு பின்னிப் பிணைந்த அறிவு வாழ்வு, ஒருவருக்கு வாழக் கிட்டி விட்டால், அவர் பிறவிப் பெரும்பயனை யடைந்தவராகி விட்டார் என்பது கருத்து.

அம்மையப்பரது அருட்கொடியும், எருது உருவம் அமைந்த அழகுக் கொடியேயாகும். எருது அறத்தின் வடிவம். தன் வாழ்க்கையை மக்களின் நன்மைக்கே உரிமையாக்கியது எருத்து இனம். பசுவாக இருந்து, படிபடியாக தன் இரத்தத்தைப் பாலாக்கிப் பிழிந்து அளிக்கிறது வேறு எது? ஆண் ஏறாக இருந்து உழுதும், நீர் இறைத்தும், பண்டம் சுமந்தும், வண்டி இழுத்தும், மனித நலத்துக்குக் காலமெல்லாம் உழைக்கிறது எது? எருத்து இனமே. எனவே, அதைக் காட்டிலும் அறத்துக்கு வடிவம் வேறு எதையும் கொள்ள முடியாது. நம் முன்னோர்கள் இவ்வுண்மையை உணர்ந்தவர்களாய், எருதை அறத்தின் உருவம் என்று குறித்து வைத்திருக்கின்றனர். இறைவனின் கொடியையும், அறக்கொடியாகவே அமைத்து வைத்துப் போயினர். ஆக ஒரு சிவ நெறியாளரின் கொடியும் அறக்கொடியே. அறக்கொடி நாட்டி வாழ்வு நடத்தும் அவர், அறச் செயல்களையே செய்யாமல் வேறு எப்படி வாழக் கூடும்? அது அம்மையப்பரது கொடியாதலின்,

அறத்தின் அடித்தளத்தின் மீது அன்பும் அறிவும் இணைந்த வாழ்வினை வாழ்வதே அவரது குறிக்கோளாகும்.

## 5. அறிவு + அன்பு

திருக்கோவில் பெரு விழாக்களிலே, பெரும்பாலும் கடைசிநாள் விழா திருக்கலியாணத் திருவிழாவாக இருப்பதை அறிவோம். அன்பைப் புறக்கணித்துவிட்டு வாழ்வில் அறிவு தனியே இயங்கக்கூடாது என்னும் எண்ணத்தை, மக்கள் மனங்களில் பதிய வைக்கவே, இத் திருமணத் திருவிழா நடக்கின்றது. இந்நுட்பத்தை அறியாதார் ஆண்டுதோறும் எதற்காக இறைவனுக்குத் திருமணம் என்றும் கேட்பர்.

அம்மையுருவம் தனியாகவும், அப்பன் உருவம் தனியாகவும் இருப்பதைத் தவிர்த்து, இணை பிரியாது ஈருருவமும் ஓருருவமாக விளங்க வேண்டும் - அதாவது அறிவும் அன்பும் பிரிக்கலாகாதபடி தொடர்பு கொண்டு இயங்க வேண்டும் - என்னும் கருத்தை நிலைநாட்டவே இறைவி, இறைவனது மேனியில் ஒரு பாதியைத் தனக்கெனத் தவமிருந்து பெற்றுவிட்டாள் என்னும் வரலாறும், இருந்து வருவதையறிவோம். சிவனார், உமையொரு பாகனார் - அர்த்த நாரீசுவரர் - என்னும் புதுமைத் திருமேனி பூண்டார் என்பது, ஐப்பசித் திங்களில் தீபாவளியை யடுத்துவரும் கேதார கௌரி நோன்பின் கருத்தாகக் கூறப்பெறுவதை, நம் அன்னை நல்லோர் பலரும் செவிமடுத்து அறிந்து இருப்பர்.

## 5. ஒருமை நோக்கு

சிவநெறியில், மக்களை இனத்தால் வேறுபடுத்திப் பிரிப்பது இல்லை. அவரவர்கள் தொழிலைக் கொண்டும் உயர்வு தாழ்வு கருதுவது இல்லை. பணக்காரர் ஏழை என்னும் பாகுபாட்டாலும் 'மேல்', 'கீழ்' என்று நிலைப்படுத்துவதும் இல்லை. நாட்டையும், காலத்தையும் வைத்து மக்களுக்குள் வேறுபாடு தோன்றிவிடுவது இல்லை. உண்மைச் சிவநெறியின் பண்பட்ட தொன்மை மரபுகளே இவை.

பிறப்பினால் வேறுபாடு பாராட்டலாகாது என்று அறுதியிடும் இந்நெறியில்,கால மாறுதல்களால், மக்கள் உள்ளங்களும் மாறி, உயர் பிறப்பு தாழ்பிறப்பு என்னும் எண்ணங்கள் இடம் பெற்று விடுவதை வரலாற்றில் அவ்வப்போது காண்கிறோம். ஏறுத்தாழ ஆயிரத்து முந்நூறு ஆண்டுகளுக்கு முன்பு இப்படியொரு சூழ்நிலை ஏற்பட்டது.

சிவபெருமான் திருவருளால் திருஞானசம்பந்தப் பெருமான் தோன்றினார். அவர் பழுத்த வைதிகக் குடும்பத்திலே பிறந்தவர். அக்காலத்தில் சிவநெறிச் சமுதாயத்தில் புகுந்து விட்டிருந்த இன வேறுபாட்டுணர்ச்சிகளைக் கண்டார். அதை வேரறுத்துவிட முனைந்தார். தம்முடன் கோயில்கள் தோறும் சென்று தம் பாடல்களுக்கு யாழ்மிழற்ற ஒரு யாழ் வல்லுநர் தேவைப்பட்டார். பிராம்மண இனத்திலோ, அல்லது அக்காலத்தில் கோயிலுக்குள் வரக்கூடிய தீண்டத் தடையில்லாத, வகுப்புகளைச் சேர்ந்த ஒருவர் கிட்டாது போயிரார். ஆனால் பெருமானார், அந்நாளில் தீண்டத் தகாதவர் என்று கருதப்பட்டவர்களும் தீண்டத் தகாதவர் என்று புறக்கணித்து வந்த குலத்தைச் சேர்ந்த திருநீலகண்ட யாழ்ப்பாணரை யாழ் வாசிக்க அமர்த்திக் கொண்டார். கோயில்கள் தோறும் கருவறை வரையில் பெருமானாரோடு பாணர் பிரான் சென்று வழிபட்டு வந்தார். அவருடன் அவர் இளம் அகவையினரான தம் வாழ்வரசியாரும் உடன் சென்று வழிபாடு ஆற்றி வந்தார்.

திருஞானசம்பந்தப் பெருமானின் திருமணத்தை, பின்னால், நடத்தி வைத்த திருநீலக்க நாயனார் என்னும் பரம வைதிகர், பெருமானைத் தம் திருமாளிகைக்கு அழைத்தார். பாணர் பிரானும் அவர் தம் மனைவியாரும், திருக்கூட்டத்தின் பிறரும் உடன் சென்றனர். அன்று இரவு பாணர் பிரானின் இல்லக்கிழத்தியாருக்குத் திருநீலக்க நாயனாரின் திருமாளிகைக்குள் படுக்கை வசதி செய்யுமாறு திருஞானசம்பந்தப் பெருமான், நாயனாரிடம் தெரிவித்தார்; அதற்கு முன்பே, நாயனார் அவ்வம்மையார் தம் இல்லத்தில் படுக்க ஏற்பாடு செய்து விட்டிருந்தார். எங்கே, தெரியுமா? அவரது பூசை அறைக்குள்! பாணர்பிரானும் அம்மையாரோடு அவ்வறைக்குள்ளேயே படுப்பதற்கும் வசதி செய்துவிட்டிருந்தார். சட்டத்தால் இன வேறுபாடுகளை ஒழித்து விட்டதாக எண்ணும் இன்று இப்படி நடக்குமா என்று எண்ணிப் பாருங்கள்!

தாமே இருவரையும் அழைத்துச் செல்கிறார் நாயனார். பூசை அறைக்கு முன்பு யாக குண்டம் இருந்தது. அதில் வளர்த்திய தீ அணைந்து நீறு பூத்திருந்தது. நாயனார் அதைக் கண்டார். அப்படியே யிருந்தது அச்சாம்பல் பூத்த நிலை. பாணர்பிரானும் அம்மையாரும் அக்குண்டத்தின் பக்கம் தொடர்ந்து சென்றனர். அப்போது திடீர் என யாக குண்டத்திலிருந்து தீப்பிழம்புச் சுடர்விட்டு எழுந்து நின்று எரிந்தது. பரம வைதிக பிராம்மணர் வீட்டில் இப்படி நடப்பது அடுக்குமா? என்று ஐயுறுவார்க்கு 'இதுதான் அறம்', 'இதுதான்

தூய்மை', 'இது தான் சிவநெறி' என்று பறை சாற்றியது இத் தெய்வம்.

பிறப்பினால் உயர்வு தாழ்வு கருதக்கூடாது என்னும் சிவநெறிக் கொள்கையை விளக்க அப்பர் பெருமானிடம் பிராம்மண இனத்தினரான அப்பூதியடிகள் அடிமை பூண்ட திறத்தினையும் காணலாம்.

ஓர் ஆயிரத்து நூறு ஆண்டுகளுக்கு முன்பு தோன்றிய சுந்தரமூர்த்தி நாயனார் காலத்திலும் அவர் காலத்துக்கு முன்பும் வாழ்ந்த சிவனடியார்களை வரிசைப் படுத்திப் பாடிய தமது திருத்தொண்டத் தொகையில், பிறப்பைக் கருதி வேறுபாடு காட்டவில்லை. ஒவ்வொருவருக்கும் 'அடியேன்' 'அடியேன்' என்று ஆதி சைவப் பிராம்மணரான அந்தணச் செம்மல் பாடுகிறார். தீண்டத் தக்கவர் தீண்டத்தகாதவர் என்று வேறுபாடு செய்யவில்லை. நால்வகை இனப்பாகுபாடும் அங்கு உயர்வு தாழ்வு உண்டாக்கவில்லை. அத்தகைய வேறுபாடுகளையும் பாகுபாடுகளையும் புறக்கணிக்கின்ற முறையிலே, நுளையர், பிராம்மணர், வணிகர், வேடர், வேளாளர், இடையர், அரசர், ஆதிசைவர், நாடார், செக்கார், ஏகாலியர், புலையர், குயவர், பரணர், சாலியர் என்று அக்காலத்துப் பிரித்துப் பேசப்பட்டிருந்த எல்லா இனத்து அடியார்களையும் ஒப்ப நோக்கி ஒரே தன்மையாகப் பாடுகிறார் சுந்தரனார். சிவநெறியினர் என்னும் ஒருமைக் கண்கொண்டு, அவர்களைக் காணும்போது இன வேறுபாட்டுக்கே இடமில்லை.

அப்படியே, சிவநெறியாளரிடம், தொழிலாலும், செல்வத்தாலும் இருந்த வேறுபாடு பொருள் படுத்தப்படவில்லை. காலத்தாலும், இடத்தாலும் அப்பாற்பட்டவர்களையும் ஒருங்கிணைத்து, 'அப்பாலும் அடிசார்ந்தார்' என்று அவர்களை நினைத்துப் பாடுகிறார் சுந்தரமூர்த்தி சுவாமிகள்.

சில நூற்றாண்டுகளுக்குப் பின் சிவமெய்யியல் உண்மைகளைத் தொகுத்து எழுதிய சந்தான குரவர்களும் இவ் இனப் பிணக்கைப் புறக்கணித்த மாண்பை அவர்கள் வரலாற்றில் காணலாம். மெய்கண்டார் வேறான இனத்தவர். அவர் குடும்பத்துக்குச் சமய ஆசிரியராக இருந்த அருணந்தி சிவனார், ஆதி சைவப் பிராம்மணர்; இவர் மெய்கண்டாரை ஞானத் தந்தையாராக ஏற்றுக் கொண்டு அவரது மாணவரானார். மறைஞான சம்பந்தர் கைக்கோளர். அவரை ஞானக் குரவராக ஏற்றார் தில்லைவாழ் அந்தணரான உமாபதி சிவம்.

சைவ ஒழுக்கமும், சிவஞான அடைவும், போற்றப் பெற்றனவேயன்றி, பிறந்த இனம் இடை நின்று வேறுபாட்டை விளைக்கவில்லை.

சிவநெறியின் துணை நெறியான திருமால் நெறியிலும் பிறப்பைக் கருதி உயர்ந்தவர் தாழ்ந்தவர் என்று கருதும் மனப்போக்கு இல்லாமல் இருந்ததை இங்கு ஒப்பிட்டுப் போற்றுவது பொருத்தமாகும். வேளாள குலத்தவரான ஆழ்வார்களிற் சிறந்த நம்மாழ்வாரை, பிராம்மண குலத்தவரான மதுரகவி யாழ்வார், திருமாலாகவே ஏற்று, அவர்மீது 'கண்ணிநுண் சிறு தாம்பு' என்னும் பாசுரம் பாடியிருக்கிறார். அப்பாசுரம் நாலாயிர திவ்விய பிரபந்தத்தில் உள்ளது. வேத பிரம்ம சூத்திரத்துக்குப் பேருரை எழுதிய இராமாநுசர் பிறப்பினால் உயர்வு தாழ்வு கருதும் உணர்ச்சிக்குத் திருமால் நெறியில் இடமில்லை யென்பதனைக் காட்ட விடியலில் நீராடப் போகும்போது ஒரு பிராம்மணரைப் பிடித்துக் கொண்டு செல்வார் என்றும், நீராடித் திரும்பும்போது ஒரு திருக்குலத்தார் (அரிசனர்) மீது கை வைத்துக் கொண்டு வருவார் என்றும் வரலாறு கூறுவதைப் பார்க்கிறோம்.

பிறப்பினால் உயர்வு தாழ்வு கருதாதது போலவே, மொழியினாலும் உயர்வு தாழ்வு கருதாத கொள்கை சிவ நெறிக்கு உரியது. இக் கொள்கை வைணவ நெறிக்கும் ஒப்ப உரியதாக இருந்தது.

திருஞானசம்பந்தப் பெருமான் தமது மூன்றாவது வயதில் திருவருள் உணர்வினால் பாட வாய்த்தபோது இயல்பாக, வடமொழியில், பாடியிருக்க வேண்டும். ஏனெனில் அவர் தந்தையாரும் மூதாதையரும் வேதங்களையே ஓதி ஓதி வைர முற்றவர்கள். ஆயின் பெருமான் தமிழிலேயே 'தோடுடைய செவியன்' என்று திருவாய் மலர்ந்தார். பிறகும் தமிழிலேயே ஊர் ஊராகச் சென்று பாடுவாராயினர். இறைவனின் திருவருட் குறிப்பு தமிழிலேயே பாட வேண்டும் என்று இருந்தது. இப்பெருமான், சிவநெறி உணர்வை, தமிழ் கொண்டு, மக்களிடையே ஊட்டினார். இவரை இரு நூறு ஆண்டுகளுக்குப் பின் தோன்றிய சுந்தரமூர்த்தி நாயனார், "நாளும் இன்னிசையால் தமிழ் பரப்பும் ஞானசம்பந்தன்" என்று பாடுகிறார்.

தாமே, தம்மைத் 'தமிழ் ஞானசம்பந்தன்', 'நற்றமிழ் ஞானசம்பந்தன்', 'ஞாலம் மல்கும் தமிழ் ஞான சம்பந்தன்', 'நல்ல செந்தமிழ் வல்லவன் ஞானசம்பந்தன்', 'முத்தமிழ் நான்மறை ஞானசம்பந்தன்', 'அருந்தமிழ் ஞான சம்பந்தன்', 'தமிழ்நாதன், ஞான நல்லவாய இன்தமிழ் நவிலும் ஞானசம்பந்தன்' என்றெல்லாம்

பெருமையோடு சொல்லிக் கொள்ளுகிறார் திருஞான சம்பந்தப் பெருமான்.

திருநாவுக்கரசர் நாயனார், 'தமிழோடு இசை பாடல் மறந்தறியேன்' என்று தமக்கு இயல்பாக அமைந்த மொழியில் இறைவனை வழுத்துவது பற்றிக் குறிப்பிடுகின்றாராயினும், வேறு பல இடங்களில் வடமொழிக்கு முதலிடந் தந்து சிவபெருமானை ''ஆரியம் தமிழோடு இசையானவன்'' என்றும், ''வடமொழியும் தென்தமிழும் மறைகள் நான்கும் ஆனவன்'' என்றும், ''ஆரியன் கண்டாய் தமிழன் கண்டாய்'' என்றும், அம்மொழியையும் புறக்கணிக்காமல் போற்றியிருக்கின்றார்.

சுந்தரமூர்த்தி நாயனார், அப்பர் பெருமானுக்கும் ஞான சம்பந்தப் பெருமானுக்கும், திருவீழிமிழலையில் படிக்காசு உதவியதைக் குறிக்கும் இடத்தில், இறைவனே! ''தமிழோடு இசை கேட்கும் இச்சையால் நித்தல் காசு நல்கினீர்'' என்றும், வேறு இடங்களிலும் ''பண்ணாரின் தமிழாய்ப் பரமாய பரஞ்சுடரே!'' என்றும், 'பண்ணிசைத் தமிழ் ஒப்பாய்' என்றும் சிவபெருமானுக்குத் தமிழும் எத்துணை உகந்தமொழியாக உள்ளது என்று விளங்க வைத்துள்ளார். அம்மையப்பரே, சுந்தரரிடம், ''அர்ச்சனை பாட்டேயாகும். ஆதலால் மண்மேல் நம்மைச் சொற்றமிழ் பாடு'' என்று தெரிவித்ததாகச் சேக்கிழார் பெருமான் தமது திருத்தொண்டர் வரலாற்றில் பதிவுசெய்து வைத்திருக்கிறார். வன்தொண்டர், தம்மைப் ''பொய்யாத் தமிழ் ஊரன்'' என்று கூறிக் கொள்வதில், தமிழின் மந்திரத் தன்மையை இனிது காணக்கூடும்.

''திருவடிக்கீழ்ச் சொல்லிய பாட்டின் பொருள் உணர்ந்து'' சொல்ல வேண்டுமென்ற மாணிக்கவாசகப் பெருமானின் மறைமொழியையும் இங்கு நினைவு கூர்ந்து கொள்வோம்.

இவ்வாறாக சிவநெறியின் தலைமைக் குரவர்களாகிய நால்வரும், நமக்கு இருகண்கள் போல விளங்கும் வடமொழி தென்மொழியாகிய இரண்டையும் ஒப்ப நோக்கிப் போற்றியிருக்கவும், தமிழ் மக்கள் பொருளுணர்ந்து ஓதக் கூடியது, 'அர்ச்சனை பாட்டே', 'தமிழ்பாடு' என்று ஆண்டவன் கட்டளைப்படி மந்திரமாகப் பயன்படுத்தக் கூடியதுமான, தமிழ்மொழிக்கு இரண்டாவது இடம் தருவது பொருத்தமாகுமா? பெருவாரியான தமிழ் மக்கள் புரிந்து கொள்ளக் கூடிய தமிழ் மொழிக்கும், வடமொழிக்கும் ஒத்ததான உயர் இடத்தைக் கோவில் கிரியைகள், அர்ச்சனைகள், வழிபாடுகள் யாவற்றிலும் தரவேண்டுமென்பதில் எவருக்கும் தடையிருப்பது ஞாயமாகாது.

வெறும் குருட்டு நம்பிக்கையினால் மட்டும், அறிவு வளர்ந்துள்ள இக்காலத்திலும் இனி வருங்காலத்திலும் புரியாத மொழியில் நடக்கும் பூசனைகளில் பற்றுக் கொள்ளப் பலரால் முடியாது. உள்ளத்தைத் தொடுகின்ற மொழியிலேயே பூசனைகள் நடக்க வேண்டும். கோவில்களின் சிறப்பு, அங்கு எழுந்தருளியுள்ள மூர்த்தியை, அருளாளர்கள் தமிழால் பாடியதனாலேயே மிகுந்து நிற்கிறது. 'பாடல் பெற்ற கோவில்' என்று நாம் அவற்றையே இறை நலம் இலங்கும் இடங்களாக இன்றும் போற்றுவதை எல்லோரும் அறிவர்.

நாட்டில், திருவருள் பற்றும், அதன் விளைவான நல்ல பண்பும், வளர வேண்டுமானால், இனி உள்ளத்தை உருக்கிச் சிந்தனையைப் பெருக்கும் தமிழ்த் திருமறைகளுக்கும், வடமொழி ஆகமங்களுக்குத் தருவது போன்ற இடத்தைத் தந்தாக வேண்டும். கோவில்கள் ஆகமங்களின்படி அமைக்கப்பெற்றன. அங்கு நடக்கும் கிரியைகள் பூசனைகள் யாவும் அவ் ஆகமங்களில் வகுத்துள்ளபடியே இன்று நடந்து வருகின்றன. அந்த ஆகமங்கள் வடமொழியில் எழுதப்பெற்றுள்ளன. அவை, முன்பு தமிழிலேயே இருந்தன என்றும், வடமொழியில் இருப்பது பெருமை தரும் என்னும் ஏதோ ஒரு கருத்தால், ஒரு காலத்தில் அவற்றை வடமொழியில் எழுதி வைத்துக் கொண்டோம் என்றும், இதற்குரிய அகச் சான்றுகளும் பல உள்ளன என்றும் பேரறிஞர்கள் கூறியும் வரைந்தும் வைத்துள்ளனர். வருங்காலத்திலாவது, திருநெறியில் மாண்பு மக்கள் மனங்களைப் பற்றவேண்டுமானால், அந்நெறியில் மக்கள் யாவரும் வாழ விழைய வேண்டுமானால், மீளவும் ஆகமங்கள் தமிழிலும் ஓதப் பெற வேண்டும். இதைச் செய்வது அரிதாகாது. சமயப் பற்றுள்ளவர்கள் முனைய வேண்டும்.

கடவுள் நம்பிக்கையையும், உண்மைச் சமயப் பற்றையும் வளர்க்க வேண்டியதற்குத் தக்கன செய்வது இக்காலத்தின் மாபெரும் பணியே தவிர, நமது இருக்கைகளில் நாம் காண்பதற்கு உடனடியாக உதவாதிருக்கும் ஒன்றைப் பாதுகாக்க மடிதற்றிக் கொண்டு எழுது வதும் பேசுவதும் இன்றைய நம் வாழ்வு மேன்மை பெறுவதற்குப் பயன்படாத செயல்களாகா. பிறப்பினால் மக்களிடை உயர்வு தாழ்வு கருதுவதும், மொழியால் வேறுபாடு பேசிக் கொண்டிருப்பதும், கடவுள் நம்பிக்கையற்று உலகம் போற்றும் நமது பண்பாடு பறிபோய்க் கொண்டிருக்கும் இந்நாளில், வேண்டத்தகாத செயல்களாகும். நிலைமை இன்னமும் மோசமாகாதபடி தடுத்து நிறுத்தவும், திருவருள் பற்று விரைந்து வளரவும் உடனடியாக வகை

காணாவிட்டால், நாம் நம் கடமையைச் செய்யத் தவறியவர் களாவோம். நாட்டின் தீங்குபெருக வழிவிட்டவர்களாவோம்.

எத்தனையோ இளைஞர்கள் உண்மையாகவே எண்ணுகிறார்கள். தமிழனின் சமய வாழ்வில் அவன் எளிதில் புரிந்துகொள்ள முடியாத மொழி ஏன் இடையிட்டிருக்கிறது என்று. அம்மொழியை எல்லாத் தமிழர்களும் என்றாவது பயின்றிருந்தனரா என்றும் வினவுகிறார்கள். இனியாவது தமிழர் அனைவரும் இலேசாகப் பயின்று கொள்ளக்கூடிய எளிமை அம்மொழியில் இருக்கிறதா என்று ஐயப்படுகிறார்கள். அவர்களுக்கு வடமொழி மீது வெறுப்பும் இருப்பது போல் தெரிந்தது. 'சைவ சித்தாந்த மகா சமாசம்' என்னும் பெயரும் தமிழாக இல்லையே என்று என்னிடம் குறைபட்டார்கள். அவர்களுக்குப் பலவாறு அமைதி கூறி, சமாசத்தின் பெயரையும் ''சிவநெறி மெய்ப்பொருள் மாமன்றம்'' என்று அவர்கள் நயக்கச் சொல்லிக்காட்டி, இந்நிறுவனத்தில் அவர்கள் ஈடுபடுமாறு செய்ய வேண்டியிருந்தது. வடமொழியை நம் சமய குரவர்கள், நம் இரு கண்களில் ஒன்று என்று போற்றியிருப்பதைச் சுட்டிக்காட்டி, அம்மொழிமீது அன்பு கொள்ளும்படியும் செய்ய வேண்டி யிருந்தது. இப்போது அவர்கள் இந்நிறுவனத்தில் பற்றுள்ளவர்களாய்ப் பலர் ஆயுள் உறுப்பினர்களாகியும், வேறு பலரையும் ஆயுள் உறுப்பினர்களாகச் சேர்த்தும் வருகின்றார் களாயினும், இன்னமும் உள்ளூர அவர்களுக்குத் தமிழ் மொழிக்கும் நம் சமய குரவர்கள் அளித்த உயரிடம் தரப்பெறவில்லையே என்னும் ஏக்கம் இல்லாமல் இல்லை. அவ்வுயரிடம் என்றைக்கு வருமோ என்றும் அவாவி எதிர்நோக்கியபடி இருக்கின்றார்கள்.

இவற்றையெல்லாம் எண்ணிப் பார்க்காமல், நாம் தப்புக் கணக்குப் போட்டுக் கொண்டிருக்கக் கூடாது. நம் இளைஞர் சமுதாயத்தைச் சமய நெறிக்கு ஈர்த்து ஆக வேண்டும். ஈர்க்க வேறு வழி தோன்றவில்லை. அவர்கள் எப்படியாவது போகட்டும் என்று விட்டுவிடுவது, எதிர்காலத்தில் சமய வாழ்வு நாட்டில் இல்லாதபடி செய்வதாகும். காய்தல் உவத்தல் அகற்றி, நாட்டின் சமய நலன் ஒன்றையே குறிக்கோளாகக் கொண்டு இன்றைய அவல நிலையை அடியோடு அகற்ற, அறிவுள்ளவர்கள் யாவரும், அன்புள்ளத்தோடும் அற நெஞ்சினோடும் முயல வேண்டும்.

## பிறநெறிகளும் நடைமுறையில் சிவநெறியே

உலகில் பல நெறிகள் உண்டு. ஒவ்வொன்றும் வேறு வேறு கொள்கைகள் உடையன.

ஒரு மதம் காணும் உலகம் ஒன்றே உள்பொருள் என்று வாதாடும் நல்வினை தீவினைகளையும் அம்மதம் நம்புவதில்லை. 'கண்டதே காட்சி கொண்டதே கோலம்' என்று இருந்து மாய்வதே அதன் முடிபு.

இன்னொரு நெறியில் நல்வினை தீவினைகள் உண்டு. மறுபிறவி உண்டு. ஆனால், தனித்தனி உயிர்களும் இல்லை, தனியே ஒரு கடவுளும் இல்லை.

மற்றொரு நெறி உயிர்கள் பல உண்டு என்று ஒப்புக் கொள்ளும், ஆயின் கடவுள் என்று ஒருவர் கிடையாது; வினைகள் உண்டு என்று கூறும். வினைகளுக்கு ஏற்றபடி உயிர்களுக்கு உடல்கள் தாமே வந்து பொருந்தும் என்றும் சொல்லும்.

வேறொரு சமயத்தில் கடவுள் நம்பிக்கை உண்டு. ஆனால் உயிர்கள் அக்கடவுளால் படைக்கப்பட்ட பொருள்கள் என்று அச்சமயம் நம்புகிறது. மறுபிறவி உண்டு என்று எண்ணுவதில்லை. இறைவன் உயிரோடு படைத்த ஒரே உடம்பில் உயிர் செய்யும் நல்வினை தீவினைக்கு ஏற்றபடி வானுலகமோ நரகமோ கிடைக்கும் என்று அச்சமயம் கருதுகிறது.

பிறிதொரு மதமும் பெரும்பாலும் அதே கொள்கைகளையுடையது.

ஒரு நெறியில், உலகமும் இல்லை உயிர்களும் இல்லை, எல்லாம் வெறுந் தோற்றமே. கடவுள் மட்டும் உண்டு. அவரே பல உடலங்களில் - அவ்வுடலங்களும் இல்லாத பொய்ப்பொருள்களில் - காணப்படுகிறார். 'நான் என்பது ஒன்று இல்லை. என் உடல் என்பதும், உலகம் என்பதும் இல்லை' என்று உணர்ந்து விடுவதே முடிவு என்று முடிவுகட்டிக் கூறும்.

இந்நெறிக்குத் துணையான இன்னொரு நெறி உண்டு. அதில் கடவுள், உயிர், உலகம் இவை மூன்றும் என்றும் உள்ள மெய்ப்பொருள்களே. ஆனால், கடவுள் ஒரு பெரிய தீப்பிழம்பு என்று கொண்டால்,அதிலிருந்து தெறித்த தீத்திவலைகளே உயிர்கள்; உலகமும் அக்கடவுளின் விரிவாக்கமே என்று கூறும். வினைகள் உண்டு, அவ்வினைகளுக்கு ஏற்றபடியே உடல்கள் வாய்க்கின்றன. வினையை யொழித்து, உலகமான உடலையும் உதறிவிட்டு, சிறு தீத்திவலையான உயிர், எங்கிருந்து வந்ததோ அந்த இடமான பெரும் தீப்பிழம்பில் சென்று கலந்துவிடுவதே முத்தி என்று பேசும். இதற்கும் கடவுள் மட்டுமே உள் பொருள் என்று கூறும் மதத்திற்கும் வேறுபாடு பெரிதும் இல்லை என்பதை உணரலாம்.

இம்மதங்கள் பலவும் ஒன்றுக்கு ஒன்று மாறுபட்ட கொள்கைகள் உடையவை. சிவநெறிக்கும் இம்மதங்களுக்குங்கூட பெருத்த வேறுபாடு உண்டு. கொள்கைகளில் எவ்வளவு வேறாக இருந்தாலும், நடைமுறையில் இம்மதங்கள் அத்தனையும், சிவநெறியையே பின்பற்றுவனவாக இருப்பது பெரும் வியப்பளிப்பதாகும். அந்நெறியைச் சேர்ந்த பலர்க்கும் விம்மிதம் தருவதாகும்.

சிவநெறியின் மெய்யியல் (Philosophy) அறிவுக்கும் வாழ்க்கைக்கும் மிகப் பொருத்தமானது. இது ஓர் அறிவியல் நெறி (Scientific Religion). இதில் என்றும் உள்ள மெய்ப்பொருள்கள் மூன்று : கடவுள், உயிர், மலம், இதை மெய்யியற் கலைவல்லார் பதி, பசு, பாசம் என்பர்.

கடவுள் ஒருவரே. அறம் அறிவு அன்பு மூன்று பண்புகளும் ஒருசேரப் பெற்றவர் என்று முன்னமே கூறப்பெற்றது. அவர் அருமையானவர். அவருக்குப் பெயர் கிடையாது. ஆனால் அவர் அடியவர்கள் விரும்பும் எந்த உருவத்திலும் காட்சியளிக்கும் கருணை உள்ளவர். அவ்வுருவங்கள் அருளுருவங்கள். அவரை எந்தப் பெயராலும் அழைக்கலாம். இந்த உண்மையை, 'ஓர்உருவம் - ஒரு நாமம் ஒன்றும் இலார்க்கு ஆயிரம் திருநாமம் பாடி நாம் தெள்ளேணம் கொட்டாமோ' என்று மணிவாசகப் பெருமான் திருவாய் மலர்ந்துள்ள திருவாசகம் இனிது விளக்கும். உருவம் ஏதும் இல்லாதாரை ஆயிரம் திருப்பெயர் இட்டு அழைக்கும்போது, அத்திருப்பெயர்களுக்கு ஏற்ற ஆயிரம் திருவுருவங்களோடும் காட்சி யளிப்பார் என்பதை இப்பாடற் பகுதியில் குறிப்பாக அமைத்து வைத்து விட்டிருக்கிறார்.

உயிர்கள் எண்ணிறந்தன. இவையும் அறிவு வடிவானவையே. ஆனால், அறியாமையாகிய 'ஆணவம்' என்னும் ஓர் அழுக்கினால் மூடப்பெற்றவை. அம்மலம் அப்புறப்படுத்தப்பட்டால், இயல்பான அறிவு வடிவம் பெற்று இறைவனுடன் ஒன்றக் கூடியவை உயிர்களுக்கு, இயங்கிக் கொண்டிருக்கும் ஆற்றலும் - அதாவது, வினை செய்யும் சத்தியும் - இயல்பாகவே உண்டு.

மலம் மூன்று பிரிவானது. ஒன்று மேற்கூறிய ஆணவ வடிவாய், உயிரின் அறிவை மறைத்துக் கொண்டிருப்பது, இரண்டாவது அடுத்தபடி மேலே சொன்ன, வினை செய்து கொண்டே யிருக்கும் ஆற்றல். மூன்றாவது 'மாயா' எனப்படுவது. தோன்றி மறைவது என்று அதற்குப் பொருள். வித்து வடிவில் அது என்றும் இருந்து கொண்டிருக்கிறது. இதிலிருந்து இறைவன் எல்லா உலகங்களையும், அவற்றில் உயிர்கள் ஏற்பதற்கான உடலங்களையும் விரித்துப்

படைக்கிறார். நம்மைக் கடவுள் படைக்கவில்லையாயினும், நமது உடலையும், இதிலுள்ள கை கால்கள் மூக்கு மனம் புத்தி முதலிய கருவி கரணங்களையும், நாம் பயன்படுத்திக் கொள்வதற்கான உலகின் பொருள்களையும், அப்பொருள்களை நுகரும் ஆற்றலையும், அவரே படைத்து அளித்து இருக்கிறார். இவற்றையே 'தனு, கரண, புவன, போகம்' என்பர். தோற்றக் காலத்தில் விரித்துப் படைத்தது போலவே, ஊழிக்காலத்தில், சுருக்கி ஒடுக்கி விடுவதையும் கடவுளே செய்கிறார்.

உயிர்களுக்கு இறைவன், தனு கரண புவன போகங்களைத் தருவது அவரது பெருங் கருணைத் திறத்தின் செயலாகும். இவற்றைக் கருவிகளாகக் கொண்டு உயிர்கள் செயலாற்றி ஆணவமலம் தேயப்பெற்று வினையும் அறப்பெற வேண்டும் என்பது ஆண்டவனின் அருட் குறிப்பு. துணியில் இயல்பாக ஏற்பட்டுள்ள அழுக்கினை, ஏகாலி, அத்துணியைச் சாணத்தில் நனைத்து உவர் மண்ணும் சேர்த்து, மூல அழுக்கைப் போக்குமாறு போல, இறைவன் செயல் இயங்குகின்றது என்பர் மெய்யியல் வல்லார்,

கடவுள் ஆண்டவன், உயிர் அடிமை, தனது அறியாமையைப் போக்கும்படி, ஆண்டவனிடம் முறையிட்டுக் கொள்கிறது உயிர். இவ்வாறு முறையிட்டுக் கொள்ளத் தனக்குத் துணையாக உள்ளது வினையும் இறைவன் படைத்தளித்த உடலும் உலகமும். கடவுள் எல்லாம் வல்லவர், உயிர் ஆற்றலற்றது. எனவே, தன்னைத் தெய்வத்தின் திருவடிகளில் அடைக்கலப்படுத்திக் கொண்டு, செய்யும் வினையை விருப்பற்றும் பயன் கருதாதும் செய்து, வினையறப்பெற்று, மாயையின் பகுதியான உடலும், புளியம் பழத்தின் ஒடுபோல விலக, ஆணவ மலம் ஒடுங்க இறைவனோடு இரண்டறக் கலந்து இன்புற்றிருப்பதே உயிரின் குறிக்கோளாக இருப்பது.

இதற்காக வழிபாடு கோவில்கள் முதலியன தேவையாகின்றன. ஆயின் கடவுளே இல்லை என்பவருக்கு இவை எதற்கு? உயிரே இல்லை என்பவருக்கு இவற்றைப் பற்றிய கவலை ஏன்? நல்வினை தீவினையென்பவகை எங்குள்ளன என்பவர் மேலே ஒருவர் உண்டு என்று நினைப்பானேன்? உலகமே இல்லை, உயிர்களும் இல்லை, ஒரே பொருள் உண்டு. அதுவே கடவுள், அதுவே நான் என்பாருக்குக் கடவுளைப் பற்றிய சிந்தனை ஏன்? வழிபாடு ஏன்? கோவில் ஏன்? உண்மையில் மேற்சொன்ன சமயங்களைச் சார்ந்தவர்கள் கடவுள் எனத் தனியே ஒரு பொருளை வணங்கத் தேவையேயில்லை.

இப்படியிருக்கவும், அவ்வளவு சமயத்தினரும், சிவநெறி போற்றும் ஆண்டான் அடிமைத் திறத்தையே போற்றுகின்றனர். வழிபாடு ஆற்றுகின்றனர். இறைவன் தம்மைக் காத்து வரவேண்டுமென்று முறையிடுகின்றனர். கடவுளே இல்லை யென்பவரும், தம் தலைவர்களாக இருப்பவர்களைக் கடவுள்போல போற்றுவதைக் காண்கிறோம். அல்லது, உயர்நிலை அடைந்துவிட்ட ஆன்மாக்கள் என்று கொண்டு, தமது சமயத்துப் பெரியவர்களுக்குக் கோயில்கள் கட்டிப் பூசனைகள் நடத்துவதைப் பார்க்கிறோம்.

அவ்வச் சமையங்களின் கொள்கைகளுக்கும் இத்தகைய பூசனை களுக்கும் தொடர்பே இல்லை. சொல்வது ஒன்று செய்வது வேறொன் றாக இருக்கிறது. ஆனால் சிவநெறியினர், மெய்ப்பொருள்கள் எவையெனக் கொண்டுள்ளனரோ, அவை ஒவ்வொன்றுக்கும் உள்ள தொடர்பு யாதெனக் கருதுகின்றனரோ, வாழ்வில் அடைய வேண்டிய நிறைய பயன் என்ன என்று எண்ணுகின்றனரோ, அவற்றிற்கு ஏற்றபடியே அவர்களின் ஒழுகலாறு அமைந்திருக்கின்றது. கொள்கைகளுக்கும், நடைமுறைக்கும் வேறுபாடு ஏதும் இல்லை.

சிவநெறியின் நடைமுறைகளையே கையாளும் பிற நெறிகள், கொள்கைகளால் வேறுபட்டன வாயினும், நடைமுறையில் சிவநெறியைப் பின்பற்றுவதிலிருந்து, சிவநெறியானது வேறுபட்ட பல சமயங்களையும் தன் ஒழுகலாற்றின்படி ஒன்றுபடுத்தும் பெருநிலை பெற்றிருக்கின்றது என்னும் உண்மையை உணர்ந்து உவகை மீதூரப் பெறலாம்.

## இன்றைய நிலை

இவ்வளவு சிறந்து விளங்கும் சிவநெறியின் பேருண்மைகள், சிவநெறியாளர்களாலேயே இன்று மறைக்கப் பெற்று விட்டிருப்பது, எண்ண எண்ண ஏக்கந் தருவதாகும். 'சைவம்' என்றாலே, அது என்ன? என்று கேட்பவர் பலராகி விட்டனர். மரக்கறி உணவு கொள்வது ஒன்றுதானே சைவம் என்பது எனச் சிலர் நினைக்கின்றனர். பொதுவாக சமைய உணர்வு குன்றியுள்ள இக்காலத்தில், சிவநெறிக் கொள்கைகள் பெருவாரியான மக்கள் மனங்களில் இடம் பெறாமலே போயிருக்கின்றன. பலப்பல கல்விப் பட்டங்கள் பெற்றவர்களும் சைவ ஒழுகலாறு அறியாதவர்களாயுள்ளனர். இந்நிலை இப்படியே இன்னும் இழிந்து கொண்டே செல்ல விட்டால், உலகம் என்னாகுமோ என்று எண்ணிப் பார்க்க முடியவில்லை. வேறுபாட்டு உணர்ச்சிகளும், மொழிச் சிக்கல்களும் சமையத் துறையிலும் வந்து முட்டுகின்றன.

## கொம்பும் கிளையும்

சிவநெறியை நுண்ணிதாக்கி, வளமுற வளர்த்துவிட்டுள்ள வள்ளற் பெருமானின் அருள்நெறி, சிவநெறியின் தெளிவு என்று எண்ணவும் சில சிவநெறியினர் தயங்குகின்றனர். நால்வர் அடைந்த அருள்நிலையையே இராமலிங்க வள்ளலாரும் அடைந்திருப்பதை யறிந்தும் இத்தயக்கம் இருந்து வருகிறது. நால்வரும் அவரவர் திருமேனியோடு மறைந்து விட்டது போலவே, அருட்பிரகாசரும் மறைந்து விட்டதையும், நால்வர் கண்டு நுகர்ந்து, உலகுக்கு உணர்த்திய, அருட்பெருஞ்சோதி ஆண்டவர் என்று உணர்ந்து உலகுக்கும் பறைசாற்றிவிட்டு மறைந்ததையும் மறந்துவிடலாகாது. சைவம் வளர, சிவநெறியில் இன்றுள்ள குறைபாடுகள் நீங்க, பன்னிரு திருமுறைகள் பதினான்கு சாத்திரங்களுடன், திருவருட்பா ஆறு திருமுறைகளும் பயிலப்பெற வேண்டும். வள்ளற் பெருமான் நால்வரின் வேறானவர், சிவநெறிக்குப் புறம்பானவர் என்று சிலர் எண்ணும் எண்ணமும் அகன்று விடவேண்டும்.

இப்படியே, சிவநெறியின் கொம்பும் கிளையுமான வேறு பல அருள்நெறிகளும் தோன்றி நாட்டின் பல பகுதிகளில் இன்றும் செயலில் இருந்து வருகின்றன. அவற்றில் ஒன்று திரு. இரெட்டியப்பட்டி சுவாமிகள் சட்டநெறி. அடிகளார் பொதிகையில் பன்னீராண்டு தவமிருந்து கண்ட நெறியிது. படிக்க வாய்ப்பில்லாத கல்லாதவர்களும், செல்வ வளமில்லாத ஏழைத் தொழிலாளரும், உடல் நலப் பெருக்கமில்லாத எளியார்களும், எளிதில் கைப்பற்றிப் பயிலக்கூடிய ஏற்றம் மிக்க முறையாகும். திருநீற்றுக்கு முதலிடம் தரப்பெற்றிருக்கிறது. ஆண்டவனிடம் அகலாத நம்பிக்கையை வளர்க்கும், பச்சை நீர்ப் பழக்கம், மருந்து அருந்தாமை, நித்திய நிட்டை என்பனவே இந்நெறியின் சிறந்த கோட்பாடுகள். இதுவும் சிவநெறியின் சாரம் எனப் போற்றற்பாலது.

சிவநெறியை அடிப்படையாகக் கொண்டு வளர்ந்து பின்னரும் இத்தகைய அருள் நெறிகளையும் நாம் போற்றி வர வேண்டும். அந்நெறிகளில் இருப்பவர்களும் அந்நெறிகள், சிவநெறியின் திருவிளக்கமே என்று உணர வேண்டும்.

## செய்ய வேண்டுவன

இந்நிலைகளைச் சிந்தித்துப் பார்க்கும் அறிவுடைய எவரும் வாளா இருந்துவிட மாட்டார். முதற்படியாக, மற்றவர்களுக்கு அறிவுரை

கூறுவதற்கு முன்பு, நம்மை நாம் திருத்திக் கொள்ள வேண்டும். நமது அன்றாட வாழ்க்கையில், சமையம் உயிரோட்ட முள்ளதாக அமைய வேண்டும். சமையத்தின் புறச்செயல்களுடன், உண்மைச் சமைய உணர்வும் பூரண உண்மைச் சமைய உணர்வும் பூண முயன்று வரவேண்டும். இதுவே, சமையப் பற்றில்லாத பலரை ஈர்த்துத் திருத்தும் பாங்குடையதாய்விடும். சமையச் சாத்திர, தோத்திர நூல்களின் அறிவை நாமும் ஈட்டிக் கொள்ளவும், பிறரிடை பரப்பவும் சமைய நிறுவனங்கள் திட்டங்கள் போட்டுச் செயற்பட வேண்டும்.

நமக்காக நாம் கடவுளை வேண்டுவதோடு அன்றாடம் இன்னொருவர் நலத்துக்காகவும் நாம் வேண்டுதல் செய்ய வேண்டும். சமையமே இன்னதென்று அறியாதவராக, எளியவராக, அந்த இன்னொருவர் இருப்பது நலம். உலக அல்லலை நீக்குமாறு உடையவனிடம் முறையிட்டுக் கொள்ள வேண்டும். நமது ஏழை வேண்டுகோளுக்கு இரங்கிய வரையில் இறைவன் இரங்கட்டும்.

இவற்றுக்கும் மேலாக, ஞானசம்பந்தர் போன்ற அருளாளர் ஒருவர் நாளை இன்று தோன்றவேண்டும் என்று இறைவனிடம் மன்றாட வேண்டும். அன்றிருந்த அவல நிலை நீங்க ஓர் அருள்மகவு தோன்ற வேண்டும் என்று அவர் பெற்றோர் ஆற்றிய அருந்தவமே, ஞானசம்பந்தரை அக்காலத்துக்கு அளித்து, நமக்கும் வழிகாட்ட உதவியிருக்கிறது. நாமும் தவம் புரிந்துவர வேண்டும், இக்காலத்தில் அத்தகையதொரு ஞானத்தின் திருவுருவம் தோன்ற வேண்டும் என்று. அங்ஙனம் தோன்றினாலன்றி, நாம் செய்யும் முயற்சிகளால் நிறையபயன் விளைவது அரிது.

*"எண்ணிய எண்ணியாங்கு எய்துப எண்ணியர்*
*திண்ணியர் ஆகப் பெறின்"*

தென்னாடுடைய சிவனே போற்றி!
என்னாட்டவர்க்கும் இறைவா போற்றி!

# பேராசிரியர் திரு. கா. பொ. இரத்தினம்

(66ஆம் ஆண்டு விழா - 1971 - சேலம் - சைவர் மாநாடு)

மெய்யன்பர்களே,

சென்னைச் சைவ சித்தாந்த மகா சமாஜத்தின் 66ஆவது ஆண்டு நிறைவு விழாவுக்கு அடியேனைத் தலைமை தாங்குமாறு பணித்தமைக்கு நன்றி. யாழ்ப்பாணத்தில் 1948இல் நடைபெற்ற சமாசத்தின் நாற்பத்து மூன்றாவது நிறைவு விழாவின்போது சைவ இளைஞர் மாநாட்டுக்குத் தலைமை தாங்கினேன். இருபத்திரண்டு ஆண்டுகளின் பின் சைவர் மாநாட்டுக்குத் தலைமை தாங்குகின்றேன்.

நான் ஒரு பாராளுமன்ற உறுப்பினன்; அரசியலில் ஈடுபட்டவன், ஈழத் தமிழன் விடுதலைக்காகப் போராடுபவன், உயிரின் விடுதலைக்கு வழி காட்டும் சைவ நெறி மாநாட்டில் இன்று பங்கு கொள்கிறேன். பாராளுமன்ற உறுப்பினன் என்ற முறையில் எல்லாரும் இன்புற்றிருக்கப் பாடுபடுபவன். எல்லாரும் இன்புற்றிருக்க அரசியலால் மட்டும் வழிவகுக்க முடியாது, சமய நெறியும் இன்றியமையாதது. சமுதாய நீதி நிலை கொண்டாலன்றி அரசியலாலும் சமயவியலாலும் மக்கள் நிலைத்த பயனடையார்; ''இன்பமே என்றும் துன்பமில்லை'' என்று மக்கள் வாழும் நிலைமை உருவாகாது. அரசியல் வேறு, சமயம் வேறு, சமுதாயம் வேறு என்று கொள்வதனாலேயே உலகம் முழுவதும் பூசல்கள் தோன்றிப் போட்டி - பொறாமைகள் வளர்கின்றன. அரசியலும் சமுதாயத்துக்கு நலவாழ்வு அளிக்கவே முயல்கின்றது; சமயமும் சமுதாயத்தை நன்னெறிப் படுத்தவே முயல்கின்றது. எனினும் சமுதாய வாழ்வு நிறைவடையவில்லை. சமுதாய நீதிக்காகப் போராடும் மக்களின் போராட்டமும் முழு வெற்றியடையவில்லை.

சமுதாய வாழ்வை நோக்குவோருக்குச் சமுதாய நீதியை ஓம்பவேண்டிய அரசியலும் அதனைச் சிதைப்பது நன்கு புலனாகும்.

இதனால் மக்கள் பலர் அரசியல் முறைகளை மாற்றியமைக்கவும் சமய நெறிகளை வெறுக்கவும் முயல்கின்றனர்.

அரசியல் முறைகள் மாற்றத்துக்கு உட்பட்டனவாக இருத்தலின் மக்கள் அவற்றை மாற்ற முயல்கின்றனர். சமயநெறிகள் பழமையிற் கால்கொண்டு மரபினிற் கையூன்றி இடைச் செருகல்களில் சிக்கி, மெய்யியலை ஒதுக்கி, ஒழுகலாற்றில் வழுக்கிப் பெரிதும் நீதிக்கும் நேர்மைக்கும் பகுத்தறிவுக்கும் பண்பாட்டுக்கும் முரண்பட்டுக் காட்சி அளிக்கின்றன. இதனால் மக்கள் பலர் சிறப்பாக இளைஞர்கள் - அவற்றை ஒதுக்குகின்றனர்; வெறுக்கின்றனர். சில மக்கள் அவற்றைப் போதைப் பொருள்கள் என்றும் கூறுகின்றனர்.

இந்த நிலைமை உலகத்திலுள்ள சமயங்கள் யாவற்றுக்கும் உண்டாகியுள்ளது. சமயநெறிகள் மக்கள் மனதைக் கவர்ந்து நம்பிக்கையை ஊட்டி அவர்களை நல்வாழ்வுக்கு இன்ப வாழ்வுக்கு வழிப்படுத்தத் தக்கனவாய் இயங்க முடியாதா? இந்தக் கேள்விக்கு இன்று விடை கொடுக்க வேண்டும்.

சமயங்களின் பெயரால் மக்களை மருட்டியும் - மயக்கியும், தெருட்டியும் - வெருட்டியும் பேராட்சி செய்து வந்தவர்கள் இனி அவ்வாறு செய்ய முடியாது. இந்த உலக வாழ்வை விட்டுவிட்டு மறு உலக வாழ்வைப் பேசுவதாலோ, முற்பிறப்பு பிற்பிறப்புக்களைத் துணைக்கிழுத்து ''எல்லாம் விதி'' என்று மயக்கி ஏமாற்றுவதாலோ இக்கால மக்களின் ஆராய்ச்சி உணர்வையும் அறிவுத்திறனையும் அடக்க முடியாது.

*''செத்த பிறகு சிவலோகம் வைகுந்தம்*
*சேர்ந்திடலா மென்றே எண்ணி யிருப்பார்*
*பித்த மனிதரவர் சொலும் சாத்திரம்*
*பேயுரையாமென்று இங்கு ஊதேடா சங்கம்''*

என்று இப்பொழுதுள்ள குழப்ப நிலையையும், மக்களின் எண்ணப் போக்கையும், இனித் தேவையான சமயப் போக்கையும் பாரதியார் தொட்டும் சுட்டியும் காட்டியுள்ளார்.

*''ஆயிரந் தெய்வங்க ளுண்டென்று தேடி*
*அலையு மறிவிலிகாள் - பல்*
*லாயிரம் வேத மறிவொன்றே தெய்வமுண்*
*டாமெனல் கேளீரோ?''*

*"மெள்ளப் பலதெய்வம் கூட்டி வளர்த்து*
*வெறுங் கதைகள் சேர்த்துப் - பல*
*கள்ள மதங்கள் பரப்புதற் கோர்மறை*
*காட்டவும் வல்லீரோ?"*

*"மந்திரத்தை முணுமுணுத் தேட்டை*
*வரிசையாக அடுக்கி அதன்மேல்*
*சந்தனத்தை மலரை யிடுவோர்*
*சாத்திரம் மிவள் பூசனை யன்றாம்"*

*"மந்திரத்தாலே எங்குங் கிளியே*
*மாங்கனி வீழ்வதுண்டோ"*

என்பன போன்ற பாரதியார் கூற்றுக்கள் மக்கள் உள்ளத்தில் தோன்றியுள்ள புதிய திருப்பங்களை நன்கு புலப்படுத்துகின்றன.

உலகத்திலுள்ள பெரும் சமய நெறிகள் யாவும் மக்கள் வாழ்வைச் செம்மைப்படுத்தவே தோன்றியன. இவை வேறுபட்ட பல சூழ்நிலைகளில் தோன்றிப் பற்பல நிகழ்ச்சிகளால் தாக்கமும் மாற்றமும் அடைந்து உருவாகியுள்ளன. எனினும், வளர்ச்சி முறையிலும் அமைப்பு முறையிலும் செயல் முறையிலும் பொது இயல்புகளையும் கொண்டுள்ளன. ஒவ்வொரு சமயத்துக்கும் மெய்யியலும் ஒழுகலாறுகளும் உள. ஒழுகலாறுகள் மக்கள் தனித்தும் சேர்ந்தும் கைக்கொள்ளும் முறையில் அமைந்துள்ளன. ஒவ்வொரு சமயத்துக்கும் சமய நிலையங்களும், சிறப்பாகப் பொது வழிபாட்டுக்குரிய இடங்களும், சமயத் தலைவர்களும், சமயச் சின்னங்களும் உள. சமயக் கதைகளுக்கும் குறைவில்லை.

விஞ்ஞான ஆராய்ச்சி சிறந்துயர்ந்து விளங்கும் இக்காலத்தில் - மக்களின் பகுத்தறிவு முற்ற முழுதாகத் தொழிற்படும் இக்காலத்தில் பழைய சமய ஒழுகலாறுகளும் வரலாறுகளும் நிலைத்து நிற்க முடியாது. சமய ஒழுகலாறுகள் மக்களுடைய தனிவாழ்வையும் சமுதாய வாழ்வையும் சீர்படுத்தத்தக்கதாக அமைதல் இன்றியமையாதது. சமய வாழ்வு பகுத்தறிவுக்கும் பண்பாட்டுக்கும் சமுதாய நீதிக்கும் இசையச் சமூக வாழ்வுடனும் தனிவாழ்வுடனும் இணைந்து விளங்க வேண்டும். ஒவ்வொருவருக்கும் மனநிறைவையும் சமுதாய இசைவையும் உண்டாக்குதற்குச் சமய வாழ்வு எப்பொழுதும் இன்றியமையாதது.

*கவலை துறந்து இங்கு வாழ்வது வீடென்று*
*காட்டு மறைகளெல்லாம் - நீவிர்*
*அவலை நினைந்து உமிமெல்லுதல் போல் இங்கு*
*அவைகள் புரிவீரோ?*

என்று வினாவுகிறார் பாரதியார்

கவலை துறந்து வாழ்வதற்கு - இன்பமாக வாழ்வதற்கு வையத்தில் வாழ்வாங்கு வாழ்வதற்குச் சமய நெறிகள் தயக்கமும் தடையுமின்றி வழிப்படுத்தல் வேண்டும்.

இத்தகைய வாழ்வை நல்குதற்குத் தமிழர் கண்ட சைவநெறி பல்லாற்றானும் ஏற்றம் மிக்கது. தமிழர் எல்லாம் கடந்து நின்ற ஒன்றினையே கடவுள் என்றார்கள். கடவுள் எனும் இச்சொல்லே தமிழர்களின் கற்பனைத் திறனையும், கருத்துத் திறனையும் விளக்கத்தக்கது. கடவுள் இருக்கிறாரா இல்லையா என்ற வினாக்களுக்கே இடமின்றி, மக்கள் தத்தம் ஆற்றலுக்கும் அறிவுக்கும் ஏற்கக் கருதத்தக்க முறையில் கடவுளைத் தமிழர் காட்டியுள்ளர்.

*''ஒருநாமம் ஓர்உருவம், ஒன்றுமில் லாற்கு*
*ஆயிரந் திருநாமம் பாடி''*

*''ஈறில்லாப் பதங்கள் யாவையும் கடந்த இன்பமே''*

*''அனைத்தும் நீ அனைத்தின் உட்பொருளும் நீ ஆதலின்*
*உறையும் உறைவதும் இலையே''*

*''தனக்குவமை இல்லாதான்''*

*''உரைஉணர்வு இறந்துநின்று உணர்வதோர் உணர்வே''*

*''மன்னிய நாண்மீன் மதிகனலி யென்றிவற்றை*
*முன்னம் படைத்த முதல்வனைப் - பின்னரும்*
*ஆதிரையா னாதிரையான் என்றென் றயருமால்*
*ஊர்திரைநீர் வேலி யுலகு.''*

*''உலகெலாமாகி வேறாய் உடனுமாய் ஒளியாய் -*
*நிலவுசீர் அமலனாகி நின்றனன்''*

*''எக்கோலத்து எவ்வுருவாய் எத்தவங்கள் செய்வார்க்கும்-*
*அக்கோலத் தவ்வுருவே யாம்.''*

*''அறிவானுந்தானே அறிவிப்பான் தானே*
*அறிவாய் அறிகின்றான் தானே - அறிகின்ற*
*மெய்ப் பொருளுந்தானே....''*

அடியார்களின் இக்கூற்றுக்கள் புலப்படுத்தும் இப்பேருண்மையினை நோக்குக.

சைவ சமயக் கோயில்கள் சமூக வழிபாட்டுக்கு மட்டுமன்றிச் சமுதாய வாழ்வுக்கும் உதவுவதற்கும், கல்வியையும் கலைகளையும் வளர்ப்பதற்கும் தொண்டாற்றின. இக்கோயில்கள் பன்னூறாறு ஆண்டுகளாகச் சமுதாயத்தின் தேவைகளை நிறைவேற்றின; சமுதாயத்தை சமதர்மத்துக்கு வழிப்படுத்தின; சமய வாழ்வைச் சமுதாய வாழ்வோடு இணைத்தன. தமிழ்நாட்டுக் கோயில்கள் ஊர்ப் பொது நிலையங்களாக விளங்கிச் செய்த சமூகப் பணிகள் பாராட்டுக்குரியன. கோயில்களை மையமாகக் கொண்டு பல குடியிருப்புகளும் நகரங்களும் வளர்ச்சியடைந்தன. இன்று கோயில்கள் குடிசைகளைக் கவனிக்கவில்லை. அர்த்தமற்ற ஆடம்பரங்களுக்கும், அந்நிய மொழிகளுக்கும், குறுக்கு வழிகளில் பணம் படைத்தவர்களுக்கும் புகலிடமாகி விட்டன. கோயில்களின் வருவாய் ஏழைகளின் வாழ்வை வளம்படுத்தப் பயன்படுத்தப்பட வேண்டும்.

எளிமைக்கும், தூய்மைக்கும், அமைதிக்கும், அன்புக்கும், அறத்துக்கும் நிலைக்களமாகக் கோயில்கள் மாற்றி அமைக்கப்பட வேண்டும். பணம் கொடுத்துக் கடவுள் அருளை வாங்கும் நிலைமை அறவே ஒழிக்கப்பட வேண்டும். கோயிலைப் பேணுதற்கும் அங்கு பணியாற்றுவோருக்குப் பணம் வேண்டும்தான். ஆனால் அப்பணத்தை வழிபாட்டுக்குச் சீட்டுக் கொடுத்துப் பெறுதல் முறையாகாது. வழிபாட்டு மொழி தமிழ் மொழியே ஆக வேண்டும். தமிழில் அர்ச்சனை செய்தற்கும் எதிர்ப்பு இப்பொழுதும் இருக்கிறதென்றால், அதுவும் தமிழரென்று தங்களைக் கூறிக் கொள்வோர் சிலர் எதிர்க்கிறார்களென்றால் சமுதாயத்தில் அறியாமையும் ஆணவமும் நீங்கவில்லை என்பதையும் ஏமாற்று வித்தையும் வாழ்வில் புகுந்துள்ள சுரண்டல் தந்திரமும் கைவிடப் படவில்லை என்பதையுமே இந்த எதிர்ப்பு நிலைநாட்டுகின்றது. கடவுள் வழிபாடு மட்டுமன்றிச் சைவ சமயச் சடங்குகள் யாவும் தமிழிலே தான் செய்யப்படல் வேண்டும். இதுதான் அறிவுவழி; இயற்கை நெறி.

சைவ சமய ஒழுக்கலாறுகளிற் புகுந்துள்ள கண் மூடிப் பழக்க வழக்கங்களைத் துணிந்து நீக்கிடல் வேண்டும். "விதி விதி" என்று மக்களிடையே தாழ்வு மனப்பான்மையையும், சோம்பலையும், அறியாமையையும் வளர்க்கக் கூடாது.

*"காலத்தின் விதிமதியைக் கடந்திடுமோ என்றேன்*
*காலமே மதியினுக்கோர் கருவியா மென்றான்"*

என்று பாரதியார் விதியை மதிக்கு அடிமையாக்கிக் காட்டினார்.

நமது சமுதாய வாழ்வைப் பாழாக்கி வந்தது இந்த விதிதான். மக்களிடையே பிறப்பினாலும், கல்விப் பொருள் செல்வப் பொருள்களாலும் உயர்வு தாழ்வைக் கற்பித்து நிலைக்கச் செய்தற்குச் சமயத்தின் போர்வையில் இந்த விதியைச் சமூக விரோதிகளும் தன்னலக்காரரும் பயன்படுத்தியுளர்.

*"ஊழையும் உப்பக்கம் காண்பர் உலைவுஇன்றித்*
*தாழாது உஞற்று பவர்"*

என்றும்,

*"தெய்வத்தான் ஆகாது எனினும் முயற்சிதன்*
*மெய்வருத்தக் கூலி தரும்"*

என்று திருவள்ளுவர் கூறியதையும் பொருட்படுத்தாமல் இந்த விதியை வைத்துக் கொண்டு சமூகப் புல்லுருவிகள் மக்களின் மதியைக் கெடுத்து வந்துள்ளனர்.

*"அவ்வினைக்கு இவ்வினையா மென்று சொல்லும் அ:.தறிவீர்.*
*உய்வினை நாடாதிருப்பது உந்தமக் கூன மன்றே*
*கைவினை செய்தெம் பிரான்கழல் போற்றுதும் நாமடியோம்*
*செய்வினை வந்தெமைத் தீண்டப்பெறா திருநீல கண்டம்"*

என்று சம்பந்தர் முயற்சியினால் மனிதன் நல்ல வாழ்வு வாழலாம் என்பதை அழுத்தம் திருத்தமாக எடுத்துரைத்தார்.

*"மண்ணில்நல் லவண்ணம் வாழலாம் வைகலும்*
*எண்ணில்நல் லகதிக் கியாதுமோர் குறைவிலை*
*கண்ணினல் ல:.துறும் கழுமல வளநகர்ப்*
*பெண்ணினல் லாளொடும் பெருந்தகை இருந்ததே"*

என்பதும் சம்பந்தர் அறிவுரை,

இந்த உலகத்திலே ஒவ்வொருவரும் உழைப்பினாலே தாம் எண்ணியபடி நல்வாழ்வு வாழலாம் என்று ஊக்குவது சைவ சமயம். இச்சமய நெறியின் உரிமையாளர் பலர் இன்று சமயத்தின் பெயரால் நெறியல்லா நெறிகளிற் சென்று வறுமையிலும் அறியாமையிலும் உழல்கின்றனர். இந்நிலைமையை மாற்றுதற்குச் சைவப் பெருமக்கள் ஒன்றுபட்டு உழைக்க வேண்டும்.

தான் வாழாமல் பிறர் வாழச் - சமுதாயம் வாழ - இறைவனிடம் இரந்தவர்கள் தமிழர்கள்.

*''யாஅம் இரப்பவை பொருளும் பொன்னும் போகமும் அல்ல,*
*நின்பால் அருளும் அன்பும் அறனும் மூன்றும்*
*உருளிணர்க் கடம்பின் ஒலிதாரோயே''*

என்று இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு முன்னரே தமிழர்கள் இறைவனிடம் வேண்டினர்.

*''எல்லாரும் இன்புற்றிருக்க நினைப்பதுவே அல்லாமல்*
*வேறொன் றறியேன் பராபரமே''*

என்றார் தாயுமானவர்.

*''எவ்வுயிரும் நீங்காது உறையும் இறைசிவனென்று*
*எவ்வுயிர்க்கும் அன்பா யிரு''*

எனச் சைவ சமய நெறி பணிக்கின்றது.

அன்பு அருள் அறம் எனும் மூன்றின் அடிப்படையிலேதான் சைவம் மலர்ந்தது. இம்மூன்றும் அன்பில் அடங்கும். அன்பும் சிவமும் ஒன்று. சைவநெறி - சிவநெறி - அன்பு நெறி - தமிழ்நெறி - திருக்குறள் நெறி என்பன ஒரே நெறிகள்.

*''அன்புஞ் சிவமும் இரண்டென்பர் அறிவிலார்*
*அன்பே சிவமாவது ஆரும் அறிகிலார்*
*அன்பே சிவமாவது ஆரு மறிந்தபின்*
*அன்பே சிவமாய் அமர்ந் திருப்பாரே''*

என்பது திருமூலர் வாக்கு.

*''அன்புற் றமர்ந்த வழக்கென்ப ஆருயிர்க்கு*
*என்போ டியைந்த தொடர்பு''*

என்றார் திருவள்ளுவர். வாழ்வின் உயிர் நிலை அன்பு. சைவத்தின் உயிர் நிலையும் அன்பே. ''அன்புடையார் என்புமுரியர் பிறர்க்கு''

என்றார் வள்ளுவர். அன்புடையார் பிறருடன் இனியன பேசி அவர்களுடன் இசைந்து வாழ்வர்; தம் பொருளைப் பிறர்க்கும் பயன்படுத்தி இன்புறுவர்; விலங்குகளிடத்தும் அன்பு கொள்வர். இத்தகைய வாழ்வு வாழ்தல் எல்லாருக்கும் இயைந்ததே. எவரும் இவ்வாறு அன்பு வாழ்வை - சைவ வாழ்வை வாழலாம் என்று திருமூலர் திறம்படச் செப்புகின்றார்.

*''யாவர்க்குமாம் இறைவற்கொரு பச்சிலை*
*யாவர்க்குமாம் பசுவுக்கொரு வாயுறை*
*யாவர்க்குமாம் உண்ணும்போதொரு கைப்பிடி*
*யாவர்க்குமாம் பிறர்க்கின்னுரை தானே''*

இந்தத் திருமந்திரம் சைவப் பெருநெறியைத் தனி மனிதருடைய எளிய தூய அன்பு வாழ்வுடனும், சமுதாய வாழ்வுடனும் இணைக்கும் திறமைப்பாடு எண்ணி எண்ணி வியக்கத்தக்கது. இந்த ஒரு மந்திரமே சைவ வாழ்வுக்கு வழிகாட்டத் தக்கது; சமதர்மத்துக்கு வழிப்படுத்தத் தக்கது; சமூக நீதியை நிலைநாட்டத்தக்கது.

# திருமதி இரத்தினா ஆர் நவரத்தினம்

(66ஆம் ஆண்டு விழா - 1971 - சேலம் - சைவர் மங்கையர் மாநாடு)

*"வாக்குண்டாம் நல்ல மனமுண்டாம் மாமலராள்*
*நோக்குண்டாம் மேனி நுடங்காது-பூக்கொண்டு*
*துப்பார் திருமேனி தும்பிக்கை யான்பாதம்*
*தப்பாமல் சார்வார் தமக்கு"*

அறிவிற் சிறந்த பெரியோர்களே!

சைவ சமய'ஒளியின் பிரதிபிம்பங்களாய் விளங்கும் மெய்ன்பர்களே!

அன்பிற்கணிகலமாய் இங்கு நான்கு பக்கத்திலிருந்தும் சமூகமளித்திருக்கும் தாய்மார்களே!

சைவக் கொழுந்தாய் மிளிரும் இளைஞர்களே!

சைவக் கனியின் தித்திப்பான சுவையை அனுபவிக்க ஆவலாயிருக்கும் குழந்தைகளே!

எல்லோருக்கும் எமது அன்பார்ந்த உளங்கனிந்த வணக்கத்தைச் செலுத்துகினே்றேன்.

சைவ சித்தாந்த மகா சமாஜத்தின் 66ஆம் ஆண்டு நிறைவு விழா இன்பத்தை அனுபவிக்க, நாம் எல்லோரும் இங்கு இந்நெருக்கடியான காலத்திலும் தளர்வின்றி இறையன்புப் பெருக்கால் தூண்டப் பெற்றுக் கூடியிருப்பது, சைவத்தின் மாண்பிற்கு எடுத்துக்காட்டாகவுளது எனப் பெருமைப்படுகிறோம். நமது சித்தாந்த சமாசம் சென்ற பல ஆண்டுகளாகப் பொதுவாகத் தமிழுக்கும் சிறப்பாகச் சைவ சமயத்துக்கும் சீரிய தொண்டாற்றி வருவதைத் தமிழுலகம் நன்கு அறியும். சைவத் திருமுறைகளையும் சித்தாந்த சாத்திரங்களையும், திருக்குறள், திருப்புகழ், ஔவைப் பிராட்டியாரின் பிரபந்தங்கள் முதலிய அரிய நூல்களையும் அச்சிட்டுப் பரப்பி உதவி செய்தும், மாத சஞ்சிகையான சித்தாந்தப் பத்திரிகையினைச் சிறந்த

முறையில் தமிழிலும் ஆங்கிலத்திலும் வெளியிட்டும், நாடெங்கும் சைவ சித்தாந்த உண்மைப் பொருள்களாகிய தேனமுதினை இரசிக்கச் செய்தும், இன்னும் பல்வேறு வகையால் சைவத்தைப் பேணியும் வரும் அன்பின் திறத்தை நாம் எங்ஙனம் மதிப்பிட வல்லேம்.

இவ்வாண்டு சைவ மங்கையர் மகாநாட்டில் தலைமை வகித்துப் பேருரை நிகழ்த்துமாறு பணித்துள்ள சைவ சித்தாந்த சமாசத்தின் நிர்வாக சபையாருக்கு எமது மகிழ்ச்சி பூர்வமான நன்றி உரித்தாகுக. எவ்வகையிலும் தலைமை தாங்கும் தகுதியற்ற தமியேனை ஒரு பொருளாகக் கருதி, செந்தமிழ் நாட்டைத் தாய் நாடாகக் கொண்ட சேய்நாடாகிய ஈழத்திலிருந்து வரவழைத்து, இத்திருத்தொண்டில் ஈடுபடச் செய்த எமது மதிப்பிற்குரிய சைவ சித்தாந்த மகா சமாஜ அறிஞர் குழுவின் பேரன்பையும், எல்லாம் வல்ல இறைவனின் திருவருளையும் நாம் என்றும் மறவோம்.

இன்னும் "சீலுமின்றி நோன்பின்றிச் செறிவேயின்றி அறிவின்றித் தோலின் பாவைக் கூத்தாட்டாய்ச் சுழன்று விழுந்து கிடப்பேனை மாலுங்காட்டி வழி காட்டி வாரா உலக நெறியேறக் கோலங்காட்டி" எமையாண்ட எங்கள் சற்குருவாகிய சிவயோகநாத சுவாமிகள் திருவடிக் கமலத்திற்கு அஞ்சலி செய்கின்றோம். ஞான நிலையின் திருவுருவெனக் கொழும்புத் துறையில் வதிந்தருளி, எமக்கெல்லாம் நல்லருள் நெறி காட்டி, இறை பணிப் பத்திமார்க்கத்தில் ஊக்குவித்து வந்த சுவாமிகளது திருவடித் தொண்டு பூண்ட சிறியேனுக்குத் தாங்களிட்ட பணியை ஒல்லும் வகையான் நிறைவேற்ற முயலுகிறேன்.

*"மந்திர மாவதும் மாமருந் தாவதும்*
*தந்திர மாவதும் தானங்க ளாவதும்*
*சுந்தர மாவதும் தூநெறி யாவதும்*
*எந்தை பிரான்றன் இணையடி தானே"*

என்ற திருமூலர் வாக்கின்படி இம்மை, மறுமை, வீடு பேறுகள் பெறுதற்குரிய தனிப் பெருஞ் சாதனம், இறைவன் திருவடிக்குச் செய்யும் அன்புப் பணியன்றி வேறில்லை என்ற மெய்ப் பொருளாராய்வை தங்கள் முன்னிலையில் அன்பினாலெழுந்த ஆர்வத்தால் சமர்ப்பிக்க இறையருள் புரிக.

*"நின்னாவார் பிறரின்றி நீயே யானாய்*
*நினைப்பார்கள் மனத்துக்கோர் வித்துமானாய்*
*மன்னானாய் மன்னவர்க்கோ ரமுத மானாய்*

*மறைநான்கு மானாயா றங்க மானாய்*
*பொன்னானாய் மணியானாய் போக மானாய்*
*பூமியேற் புகழ் தக்க பொருளே யுன்னை*
*என்னான யென்னானா யென்னி னல்லால்*
*ஏழையே னென்சொல்லி யேத்து கேனே''*

என்று திருநாவுக்கரசு நாயனார் நெஞ்சுருகிப் பாடியிருப்பதை உணர்ந்து, இங்ஙனம் மக்கள் உய்யுமாறு அருள் பாலிக்கும் அம்மை அப்பராய் விளங்கும் சிவபெருமானது மகிமைகளை, இமைப் பொழுதும் எம்நெஞ்சில் நீங்காது இணையடிகளை, நின்றும் இருந்தும் கிடந்தும் நடந்தும் தியானிப்போமாக.

*''சித்தம தொன்றிச் செய்கழல் உன்னிச் சிவனென்று*
*நித்தலும் ஏத்தத் தொல்வினை நம்மேல் நில்லாவே''*

என்ற ஆளுடையபிள்ளையின் ஆப்த வாக்கியத்தைக் கைக்கொண்டு, ''இதுவே எங்கள் வாழ்க்கையின் குறிக்கோளாகக் கொள்ளத் தக்கது'' என இயம்புவதே, இத் தலைமைப் பேருரையின் சாராம்சமாகும்.

இன்றைய உலகம் அணுசகாப்தம் ; அணுவின் ஆற்றலைப் பயன்படுத்த உலக மக்கள் தீவிர முயற்சியில் ஈடுபடுகின்ற நிலை வளர்ந்து வருகின்றது. அதனால், எல்லோருடைய மத்தியிலும் அச்சம் நடுக்கம் தாண்டவ மாடுகிறதையும் காண்கிறோம். எல்லா இனத்தவரின் உள்ளத்திலும் சமுதாயம் வாழவேண்டும், வளர வேண்டும் என்கிற எண்ணம் நிலை கொண்டிருந்தும், அதற்கு மாறாக, வழிமாறிச் செல்லும் தடுமாற்றம், அழிவு தரும் வேலைகளில் ஈடேற்றம், சமாதான அரங்கில் ஏமாற்றம் போன்றவை தோன்றக் காரணமென்ன? இவ்வித இடர்களிலிருந்து நாங்கள் நீங்குவதற்கு ஏற்ற பரிகாரமான வழி வகைகள் எங்கள் சைவத் திருமுறைகளிலும் சைவ சித்தாந்த சாஸ்திரங்களிலும் போதிய அளவு தெளிவு பெறப் பொருந்தியிருப்பதை, நம்மவரிற் பெரும் பாலோர் அறியாது இருக்கின்றனர். இவைகளை நாங்கள் அனைவரும் ஒன்றுகூடி ஆராய்ந்தறிந்து ஆவன செய்யும் ஆக்கத் திருப்பணியில் ஈடுபடும் முகமாக, குருலிங்க சங்கம பக்திப் பண்பினையும், சிவநெறித் தொண்டின் பயனையும், விளங்கிக் கைக்கொள்ளும் வண்ணம் ஆணித்தரமான முறையில் பரப்புதற்குத் திருத்தகவுடையீர் யாவரும் சேர வம்மின்.

இன்று இறையருள் மாட்சியென்னும் விஷயத்தைப் பற்றி யான் தங்கள் முன்னிலையில் சமர்ப்பிக்க எண்ணிய துணிவும் எம்பெருமான்

செயலென்றே கருதற்பாலது. அடியேனது ஆர்வம் அதிகமாய்த் திருவாசகத்தில் உறைந்திருப்பதால், அம்மணி வாசகத்தில் செறிந்து மிளிரும் பிரமாணங்களையே மேற்கொண்டு கையாளுதல் சாலும்.

## அவாவிடைப் பிழைத்தலும்

இவ்வுலக இன்ப வாழ்க்கையை அன்றி, ஆன்மீக இன்பத் துறைகளை நோக்காதாருட் பெரும்பாலோர், தம் ஆசையால் தத்தம் வாழ்க்கைத் துறைகளில் பொய், களவு, வெகுளி, பொறாமை முதலிய குற்றங்களைச் செய்தும் ஒழுகுவதை, நாம் காண்கின்றோம். அக்குற்றங்களால் இன்பமொழியத் துன்பமே விளையுமென்பதை உணர்கிலர்.

*''பித்த உலகர் பெருந்துறைப் பரப்பினுள்*
*மத்தக் களிறெனும் அவாவிடைப் பிழைத்தும்''*

என்றருளினர் திருவாதவூரடிகள். இத்தகைய துக்க சாகரத் துயரிடைப் பிழைக்க வேண்டில், தெய்வமென்பதோர் சித்த முண்டாக வேண்டுமெனவும் வற்புறுத்துகிறார். கடவுள் உண்டு என்று உணர்வதோர் கருத்துத் தோன்றி, எஞ்ஞான்றும் வெறுக்கபடாததாகிய அவ்வொப்பற்ற பொருளை அடைய விரும்பிய அளவிலே, அளவில்லாத மாயையின் ஆற்றல்கள் தனித்தனியே தம்மயக்குஞ் செயல்களைச் செய்யத் தொடங்கி விடுமென்றும் எடுத்துக் கூறுகின்றார் மணிவாசகப் பெருந்தகையார். கடவுளுணர்வு தோன்றிய பின்னரும், நிலை பெறத் தொழிலைச் செய்வது அம்மாயா சக்தியின் செயல்களே என்பதும் அடுத்த வரிகளின் உட்கிடக்கை.

*''அதிற்பெரு மாயை யெனைப்பல சூழவும்*
*தப்பா மேதாம் பிடித்தது சலியாத்*
*தழலது கண்ட மெழுகது போலத்*
*தொழுதுள முருகி யழுதுடல் கம்பித்து*
*ஆடியு மலறியும் பாடியும் பரவியும்...*
*மற்றோர் தெய்வங் கனவிலும் நினையாது*
*அருபரத் தொருவன் அவனியில் வந்து*
*குருபர னாகி யருளிய பெருமையைச்*
*சிறுமையென் றிகழாதே திருவடி யிணையைப்*
*பிறிவினை யறியா நிழலது போல*
*முன்பின் னாகி முனியாது....''*

எனக் கடவுளுணர்விற்கு மாறாவன பலவற்றையும் கூறி, முனிவிலாத பொருளை அடையக் கருதிய கருத்தைக் குறிப்பால் உணர்த்தி, அதன் பின்னர் மெய்யன்பு மீதூரப் பெற்றும், இறைவன் குருவாகி, ஞானாசிரியனாய் வந்து அருளிய பெருமையை எடுத்துக் காட்டுகிறார் வாதவூரடிகள்.

## தாயேயாகி வளர்த்தனை போற்றி

இங்ஙனம்

*சாயா அன்பினை நாடொறும் தழைப்பவர்*
*தாயே யாகி வளர்த்தனை போற்றி*
*மெய்தரு வேதிய னாகி வினைகெடக்*
*கைதர வல்ல கடவுள் போற்றி....*

என இறைவனது திருவருளையும், அன்பரை ஆட்கொள்ளும் முறையையும் விரிவாக எடுத்தோதித் துதித்த மாலையாகிய போற்றித் திருவகவலைத் தினமும் அன்போடு வழிபடுபவர்கள் பெறும் பேற்றை என்னென்று சொல்வது?

## இறைவழிபாடு

இறை வழிபாட்டினது நலப்பாட்டினை, அறியமாட்டாமல் வருந்துகிற நிலையில், இப்போதைய மக்கள் காணப்படுகிறார்கள் என முன் குறிப்பிட்டிருந்தோம். இதுவே கலியுகத்தின் போக்கு. இதிலிருந்து தப்புவதற்கு இறையன்பு வழிபாட்டில் நிலைபெறுதற் குரிய வழியே சிறந்த வழியாகுமென்பது, சைவ சமயத்தின் அடிப்படைக் கொள்கையாகும். ஞான நிலை கைவந்தும், அப்பரடிகள் கடைப்பிடித்த தாசமார்க்கமாகிய பக்தி வழி பாட்டின் நிலையை, அவரது பாடலால் அறியலாம்.

*''நீநாளும் நன்னெஞ்சே நினைகண்டாய் யாரறிவார்*
*சாநாளும் வாழ்நாளுஞ் சாய்க்காட்டெம் பெருமாற்கே*
*பூநாளுந் தலைசுமப்பப் புகழ்நாமஞ் செவிகேட்பப்*
*பாநாளும் நவின்றேத்தப் பெறலாமே நல்வினையே''*

ஞானப் பாலுண்டு சிவானுபூதி பெற்ற திருஞானசம்பந்த மூர்த்தி சுவாமிகள் அனுசரித்த சற்புத்திர மார்க்கமும், இறையன்பின் விளைவே. இதனை அவர் பாடியருளிய

*''நின்னடியே வழிபடுவான் நிமலா நினைக்கருத*
*என் அடியான் உயிரைவவ்வேல், என்ற-டற் கூற்றுதைத்த,*

*பொன்அடியே பரவிநாளும், பூவொடுநீர் சுமக்கும்*
*நின்அடியார் இடர்களையாய், நெடுங்கள மேயவனே''*

என்ற திருப்பாட்டிற் காணத்தக்கதாம்.

இன்னும் தம்பிரான் தோழராகிய சுந்தரமூர்த்தி சுவாமிகள் பாடிய திருமுறைகளிலிருந்து காணப்பட்ட சகமார்க்கமும், இறைவன்பால் வைத்த அன்பின் உன்னத நிலையை இனிது விளக்கும்.

*''தம்மையே புகழ்ந்திச்சை பேசினுஞ் சார்வினுந்*
*தொண்டர் தருகிலாப்*
*பொய்மை யாளரைப் பாடாதே யெந்தைபுகலூர்*
*பாடுமின் புலவீர்காள்!*
*இம்மையே தருஞ்சோறும் கூறையு மேத்தலா*
*மிடர் கெடலுமாம்,*
*அம்மையே சிவலோக மாள்வதற் கியாது*
*மையுற வில்லையே''*

மாணிக்கவாசக சுவாமிகள் சன்மார்க்க நெறியை ஒழுகி, ஞானிகள் ''எம்மெய்ப்பதம் பெறுவார்கள்'' என்ற உண்மையை, திருவாசகப் பாடல்களில் பொதுவாகவும், வரும் திருப்பாட்டில் சிறப்பாகவும் உணரலாம். சன்மார்க்க நெறியில் நின்று வழிபட்ட முறையை இங்கு விவரிக்கிறார்.

*''சிந்தனை நின்தனக் காக்கி நாயினேன் தன்*
*கண்ணிணை நின்திருப் பாதப்போதுக் காக்கி*
*வந்தனையும் அம்மலர்க்கே யாக்கி வாக்குன்*
*மணிவார்த்தைக் காக்கி ஐம்புலன்க ளார*
*வந்தனைஆட் கொண்டுள்ளே புகுந்த விச்சை*
*மாலமுதப் பெருங்கடலே, மலையே யுன்னைத்*
*தந்தனை செந்தாமரைக் காடனைய மேனித்*
*தனிச்சுடரே யிரண்டுமிலித் தனிய னேற்கே.''*

இங்ஙனும் மெய்ஞானச் செல்வரான வாதவூரடிகள் அனுட்டித்த சன்மார்க்கத்தின் இலக்கணத்தை,

*''பசுபாச நீக்கிப் பதியுடன் கூட்டிக்*
*கசியாத நெஞ்சங் கசியக் கசிவித்*
*தொசியாத உண்மைச் சொரூபோ தயத்துள்*
*நசைவான தில்லாமை யான சன்மார்க்கமே (1486)*

என்னும் திருமூலர் திருவாக்காற் காண்க.

ஆகவே, தாசமார்க்கம், சற்புத்திர மார்க்கம், சக மார்க்கம், சன்மார்க்கம் முறையே அரும்பு, மலர், காய், கனி போல்வனவாம் என்பதை,

*''விரும்புஞ் சரியைமுதல் மெய்ஞான நான்கும்*
*அரும்பு, மலர், காய், கனி போலன்றோ பராபரமே''*

என்று தாயுமானவர் விளக்கியருளினார்.

## தாரகமான திருவருள்

*''பிறப்பென்னும் பேதைமை நீங்கச் சிறப்பென்னும்*
*செம்பொருள் காண்பதறிவு''*

என்றார் திருவள்ளுவ நாயனார். அறியாமையே பிறப்பாகும். வீட்டுக்கு நிமித்த காரணமாகிய செம்பொருளைக் காண்பதே, ஒருவருக்கு மெய்யுணர்வாகும். இங்கு சிறந்த பொருளைச் செம்பொருளென்று சொல்லப்பட்டது. முப்பொருளாய் விளங்குவது, பதி, பசு, பாசம். பாசத்தின் விளைவான உலகமோ தோற்றக் கேடுகளுக்கு உட்பட்டது. உயிரோ நித்தியமாயினும், மல சம்பந்தத்தால் சிறப்பாகமாட்டாது. கடவுளோ தோற்றக் கேடுகளில்லாது, நித்தியமாய், தூயதாய், தான் எல்லாவற்றிலும் கலந்து நின்று, முதற் பொருளாய், விகாரமின்றி என்றும் ஒரு தன்மையாய் இருத்தல்பற்றிச், செம்பொருள் எனப் பெரியோர் கூறினர். இச்செம் பொருளை யாரறிவார்?

*''இருமையின் ஒருமையும் ஒருமையின் பெருமையும்*
*மறுவிலா மறையோர்*
*கழுமல முதுபதிக் கவுணியன் கட்டுரை*
*கழுமல முதுபதிக் கவுணியன் அறியும்*
*அனைய தன்மையை ஆதலின் நின்னை*
*நினைய வல்லவர் இல்லை நீள்நிலத்தே''*

என்கிறார் திருஞானசம்பந்தர் சுவாமிகள்.

தாரகமான சிவசக்தி நிலம்போல ஆதாரமாக உள்ளது. சட சக்தியாகிய மாயை, நிலத்தின்கண் வித்துப் போன்றது. வினையாகிய கன்மம் பசளை போன்றது. அவன், அவள் அது எனும் அவையாகிய உலகுயிர்கள், பயிர் போன்றவை. அவை ''ஆணையின் இரு வினையின் போக்கு வரவுபுரிவதாகும்'' என்பது சிவஞான போதக் கூற்று.

சிவசக்தி மாயையின் காரியமாகிய உலகரங்கிலே, ஐந்தொழிலாகிய ஜாலவித்தையைப் புரிகின்றாள். மல பந்தர்களாகிய ஆருயிர்கள்,

இருவினைக்குத் தக்கவாறு இவ்வரங்கிலே நடித்துப் போக்குவரவு புரிகின்றன.

*''ஆட்டு வித்தால் ஆரொருவ ராடாதாரே....*
*காட்டு வித்தால் ஆரொருவர் காணாதாரே*
*காண்பாரார் கண்ணுதலாய்க் காட்டாக் காலே''*

என்பது அப்பர் சுவாமிகள் வாக்கு.

*''அவளுந் தானும் உடனே காண்க''*

என்பதால் தம்மை ஆட்கொண்ட பெருமான் மாதொரு கூற்றனாய் அவளோடு நீங்காதே நிற்பவன், என்பதைத் தெற்றெனத் தெளிந்தார் மணிவாசகப் பெருமான்.

*''தீதுறுவள் ஆனால் சிவபதிதான் கைவிடுமோ?*
*மாதொருகூ றல்லனோ மற்று''*

என்பது திருக்களிற்றுப்படியார் வாக்கு.

இங்ஙனம் சிவபிரான் மாதொரு கூறனாய், அருள் நிலை நிற்றல், திருமூலர் மந்திரமும் வலியுறுத்தும் என்பது ''அருளல்ல தில்லை அரன் அவனன்றி அருளில்லை'' என்னும் பாட்டில் அறியற்பாலது. இதே உண்மைக் கருத்து,

*''அருளுண்டா மீசற்கது சக்தி யன்றே*
*அருளு மவனன்றி யில்லை; யருளின் றவனன்றேயில்லை''*

என வரும் சிவஞான போதத்தினும் அமைந்துள்ளது.

*''அவளால் வந்தஆக்கம் இவ்வாக்க மெல்லாம்''*

என்பது சிவஞான சித்தியார். சூரியன் நின்றபடி நிற்க, இந்த உலகமும் நாள் கோள்களும் சுழன்று திரிகின்றன. சூரியன் சக்தன்; அவன் கிரணங்கள் சக்தி. காந்தம் இருந்தபடி இருக்க இரும்பு அசைகின்றது. காந்தம் விகாரப்படாமல் இரும்பை அசைக்கின்றது.

*''தன்னிலமை மன்னுயிர்கள் சாரத் தருஞ்சத்தி*
*பின்னமில னெங்கள் பிரான்''*

எனத் திருவருட் பயன் சாற்றுகின்றது. முதல்வன் ஒருவனே ஆயினும், அவனும் அவன் அருளும், ஞாயிறும் ஒளியும் போல, இருதிறப்பட்டுச் சிவமும் சக்தியெனப் பெயர் பெற்று, அருவம், அருவுருவம், உருவம் எனும் மூன்றிலும் நின்று உபகரிக்கும் தன்மையை, சைவ சித்தாந்த சாத்திரங்களில் கூறப்பட்டமை காண்க.

புருஷார்த்த பேறுகளுக்கெல்லாம் மூலசாதனம் அம்மை அப்பனே என்ற உண்மையை பெண்மணிகளாகிய நாங்கள் ஒருபோதும் மறவாமலிருத்தல் வேண்டும்.

*''செம்மைநல மறியாத சிதடரொடுந் திரிவேனை*
*மும்மைமலம் அறுவித்து முதலாய முதல்வன்தான்*
*நம்மையுமோர் பொருளாக்கி நாய்சிவிகை ஏற்றுவித்த*
*அம்மையெனக் கருளியவாறார் பெறுவாரச் சோவே''*

எனவே அன்பாகிய ஆகர்ஷண சக்தியைக் கொண்ட சைவ நெறியின் மேன்மையை, ஆராய்ச்சி மேடையில் ஏற்றி தத்துவ ரீதியில் வெறும் போதனையால் மாத்திரம் கணிக்க யான் இங்கு முயலவில்லை. இறைவனை அறிவதற்கு உயிருக்கு மெய்யுணர்வோடு, அவரது அருளைப் பெறுதற்கு ஏதுவான பெரு முயற்சியில், நாம் ஈடுபட வேண்டும் என்பதே எமது முடிவான கருத்து. அவ்வகையில் சரியை, கிரியை, யோகமெனச் சாத்திரங்கள் ஓதும் செயல்முறைகளில் யாதேனும் உகந்த ஒரு நெறியைத் தழுவி, நாம் செயற்கரியன செய்தல் வேண்டும். சரியையில் நிற்பவர் நல்லொழுக்கம் பெரிதென்பர். கிரியையில் ஒழுகுபவர் அறம்பிறழாத செய்கையே பெரிதென்பர். யோகத்தில் நிற்பவர் மனத்தின் திட்பமே பெரிதென்பர். ஆகவே சரியை, கிரியை, யோகம், ஞானமென்னும் நான்கு பாத நெறிகளின் சாதனைகளால்,

*''அன்பி னுள்ளாகி வருமரும் பேரருள்*
*அன்பி னுள்ளார்க்கே அணைதுணை யாமே''*
*''அன்பே சிவம்''*

என்னும் அனுபவ உண்மையை, ஓரளவு உணரலாமென்பது அனுபவ ஞானியர் கருத்து. என்பதை, இங்கு சிறிதாகக் குறிப்பிட்டுரைத்தேன். இதன் கருத்தையே தைத்திரேய உபநிஷத்திலும் குறிப்பிட்டிருப்பதை நாம் அறிவோம் "Satyam Vada, Dharmam Chara, Sathyaya Pravachana Nesra" - ருதஞ்ச, மானுஷஞ்ச, தபஸ்ர, அக்னி.

## சைவ சமய வளர்ச்சி

சைவ மங்கையர் சார்பில் நடைபெறும் இம்மகாநாட்டிலே கூடியிருக்கின்ற எங்களது, சமயமாகிய சைவ சமயம் சரித்திர காலங்கட்கும் அப்பாற்பட்டடு வழங்கி வருவது; அது சர்வலோகங்களுக்கும் முழுமுதற் கடவுளாகிய சிவபெருமானாலே அருளிச் செய்யப்பட்ட வேதாகமங்களாகிய முதல் நூல்களையும் புராணங்கள் இதிகாசங்கள் முதலிய வழி நூல்களையும் திருவள்ளுவர்

அருளிய தமிழ் வேதம் எனப் போற்றப்படும் திருக்குறளையும், சிவானுபூதி ஞானம் பெற்ற சமய குரவர் முதலாயினோரால் வெளிவந்த பன்னிரு திருமுறைகளையும், திருக்கயிலாய பரம்பரைச் சந்தான குரவர்களால் வெளிவந்த பதினான்கு சைவ சித்தாந்த சாத்திரங்களையும் பிரமாணமாகக் கொண்டுள்ளது. அவைகளில் நிலை நாட்டிக் கூறப்பட்ட மெய்ப் பொருள்களைக் கைக்கொண்டு ஒழுகும் பெரும்பேற்றைச் சைவர்களாகிய நாங்கள் பெற்றிருக் கின்றோம்.

இக்காலத்தில் வெகு சிலரே, இதன் மாண்பினை முற்றுணர்ந்த வராய்க் காணப்படுவர். சைவ நெறியின் மகத்தான கொள்கை யொன்றினை சிவஞான போதத்தின் பத்தாம் சூத்திரம் விளக்குவதை இங்குச் சுருக்கமாகச் சொல்ல விரும்புகிறேன்.

*''அவனே தானே யாகிய அந்நெறி*
*ஏக னாகி இறைபணி நிற்க*
*மலமாயை தன்னொடு வல்வினை யின்றே.''*

அஃதாவது எழுகிற எண்ணங்கள், சொல்லுகின்ற சொற்கள், செய்கிற செயல்கள் யாவும் முதல்வன் செயலென்று எண்ணி, தன் செயலற்று ஒழுகுதல் வேண்டும். இங்ஙனம் நடைமுறையில் செயற்படுவது கஷ்டமான சாதனையென்று பெண்மணிகள் நன்கு அறிவார்கள். இதற்கொரு வழியுண்டு. வாழ்க்கையில் சிறிய இடையூறுகள் உண்டாகும்போது, அவை இறைவனது ஆணைப்படி நடக்கின்றன என்று எண்ணிப் பழகினால், பின்னர்ப் பெரிய இடையூறுகள் ஏற்பட்டபோதும், அவற்றையும் இறைவன் செயல் எனக் கருதும் மனப்பான்மை உண்டாகும். இதுவே இறைபணி என நிற்பதற்குரிய வழியாகும். இவ்வாறு நிற்பதால் நாடோறும் செய்கின்ற வினையினால் வரும் இடர்கள் உண்டாகா. இறைவன் ஆணைப்படி செய்யும் செயலால் வரும் பயனும், உயிரைச் சாராது. எல்லாம் அவன் செயலே,

*''நம்செய லற்றிந்த நாமற்ற பின்நாதன்*
*தன்செயல் தானேஎன் றுந்தீபற''*

என்ற திருவுந்தியார் பாடலும் இக்கருத்தைத் தழுவியுள்ளது.

நம் முன்னோர் மெய்யன்பினால் சிவத்தை அனுபவித்தனர். அக்காலம் உலகெங்கும் சைவ மணம் பரவிற்று. ''தென்னாடுடைய சிவன்'' எந்நாட்டவர்க்கும் இறைவனாய் விளங்கினார். இக்காலம்

எஞ்ஞான்றும் துன்பத் தொடர்பையே நாம் பற்றுவதால், சைவத்தை நாமே புறக்கணிக்கும் நிலைமையேற்பட்டிருப்பது போல் எண்ணக் கிடக்கின்றது. இந்நிலைமையை நாம் ஒழிக்க வேண்டும். எவ்வகையிலும் அருள் ஞானம் உண்டாகும் தேட்டத்தைத் தேட வேண்டும். உலக வாழ்வியல் உழன்று விதிர் விதிர்க்கும் உயிருக்குக் குளிர்ச்சியாய் இன்பம் செய்வது பற்றி ''தண் நிழலாம் பதியை'' விளங்க உரைக்கின்றார் அப்பர் சுவாமிகள்.

*''படைக்கலமாக உன்நாமத் தெழுத் தஞ்சென்நாவிற் கொண்டேன்*
*இடைக்கலமல்லேன் எழுபிறப்பும் உனக்காட் செய்கின்றேன்*
*துடைக்கினும் போகேன்தொழுது வணங்கித் தூநீறணிந்துன்*
*அடைக்கலம் கண்டாய் அணிதில்லைச் சிற்றம்பலத்தரனே''*

*''நாதன் நாமம் நமச்சிவா யவே''*

என்பது திருஞானசம்பந்தர் வாக்கு.

*'அந்தியும் ஈண்பகலும் அஞ்சுபதம் சொல்லி''*

என்கிறார் சுந்தரர்.

இங்ஙனம் இவ்வின்பப் பயனைப் பெறுவதற்குரிய வழியே திருவைந் தெழுத்தாகும். மாணிக்கவாசக அடிகளும் உலக பந்தமாகிய கடலினைக் கடக்க அஞ்செழுத்தாகிய தெப்பத்தினைப் பற்றிக் கொண்டிருக்கின்றேன் என்கிறார்.

இப்பாடலில்,

*''இனியென்னே உய்யுமாறென் றெண்ணி*
*அஞ்செழுத்தின் புணைபிடித்துக் கிடக்கின் றேனை*
*முனைவனே முதலந்தம் இல்லா மல்லற்*
*கரைகாட்டி யாட்கொண்டாய் மூர்க்க னேற்க''*

என்று கூறுவது காண்க.

இத்துணைப் பழமையும் சிறப்புமுடைய நம் சமயத்தின் இக்கால நிலைமையைப் பற்றிச் சிறிது ஆராய்வோம். பெரும்பாலும் இளைஞர்களிடையே நம் சமயத்தில் பற்றில்லாதிருப்பது மாத்திரமன்றி, அதன் கொள்கைகள் தத்துவங்கள் முதலியவற்றைப் பற்றி அறியாதும், அறியாமையால் ஏற்படும் மறைப்பினால் தம் சமயப் பண்புகளையும் வழிபாடுகளையும் கண்டனஞ் செய்வதிலும், குறை கூறுவதிலும் முனைந்து நிற்கின்றனர். பெற்றோர்களும் விசேடமாகத் தாய்மார்களும் பொது மக்களும், எமது சமயத்தின் அடிப்படையான கொள்கைகளையும் அதன் தத்துவங்கள் முதலியவற்றையும்

நன்குணர வேண்டிய நிலைமையில் உள்ளனர். ஒவ்வொரு இல்லத்திலும் இயன்றவாறு திருமுறைகளைப் படித்தும், சைவ சமய ஒழுக்கங்களின் பழக்க வழக்கங்களை அனுசரித்தும், விசேட பண்டிகைகளையும் விரதங்களையும் அனுட்டித்தும், வழி பாடியற்றியும், சமயப் பற்றினை வளர்க்க முயல வேண்டும். சமய குரவர் எவ்வழிச் சென்றார்களோ, அவ்வழியை நாமும் இக்காலச் சூழ்நிலைக்கியைந்தபடி பின்பற்றக் கடமைப்பட்டுள்ளோம். கிறிஸ்தவ மதத்தைச் சார்ந்தவர் கிறிஸ்துவின் மலை உபதேசத்தை நடுநாயகமாகக் கொண்டு, கிறிஸ்தவத்தில் பேருவகை கொண்டு, தம் மதக் கொள்கையை உலகமெங்கும் பெருகச் செய்வதில் ஆர்வங்கொண்டிருப்பதை நாம் அனைவரும் அறிவோம். ஒவ்வொரு புத்த சமயத்தினரும் தங்கள் மதத்தின் அடிப்படையான தம் கொள்கையை மிக எளிதாக,

*''புத்தம் சரணம் கச்சாமி*
*தர்மம் சரணம் கச்சாமி*
*சங்கம் சரணம் கச்சாமி''*

என ஏற்ற சந்தர்ப்பங்களில் வெளியிடுவதை எங்கள் ஈழ நாட்டில் காண்கிறோம்.

இவ்வாறு எங்கள் சைவ சமய உண்மைகளையும் அதனால் அடையும் நன்மைகளையும், இலகுவில் நாம் அறியவும் பிறர் வினவிய விடத்து அறிவிக்கவும், தக்க நிலைமை எம்மவரிடையே இக்காலத்தில் குன்றி வருகின்றது. இன்னும் இப்போதனை முறையோடு அமையாமல், அவற்றை அனுட்டிக்கும் சாதனை முறையிலும் நம் கவனத்தைச் செலுத்த வேண்டும்.

## அறநெறியே சைவ நெறியாகும்

அறநெறி மக்களிடத்து ஓங்கி வளரச் சாதனமான சிவ தொண்டுகளாகிய அருட்பாக்களைப் பண்ணுான் ஓதல், புராண படனங்கள் போல்வனவற்றைக் கிராமந் தோறும் பயிலச் செய்தல், பெருஞ் சிவ புண்ணியமும், உலக நலத்துக்கு ஏதுவுமாகும். அன்பு நெறியில் வழுவாது ஒழுகுவதே நாம் சமுதாயத்திற்குச் செய்யும் மாபெருந் தொண்டு. அறவாழ்க்கையை விரும்பியும் சிவ நெறி சார்ந்தாரின் புகழை ஓதியும் அறமே திறலும் விறலும் என்ற உண்மையை விசுவாசித்து ஒழுகுவதும் உத்தம புண்ணியம். சில பல மறத்துறைகளில் ஒழுகும் மாந்தர்க்குத் திருவள்ளுவர் அறத்துப்

பாலில் வகுத்த அறநெறிகள் மேன்மையை உணர்ந்து, திருந்துதற்கு ஆவன செய்தலும் சிவபுண்ணியமாகும்.

இன்னும், இச்சாதனை முறைகளுள் திருவாசகத்திற் சிவபுராண பாராயணம் தலைசிறந்த கருவியாயமையும் எனக் கருதி, ஈழத்தில் எம்மவர் சிவபுராணத்தைத் தினந்தோறும் இல்லங்களிலும், ஆலயங்களிலும், வழிபாட்டிலும் பெரிதும் வழங்கி வருகின்றனர். திருவாதவூரடிகள் சிவபுராணத்திலே தாம் அன்பு நெறியினையும் திருவருளையும் துணைக் கொண்டு, இன்ப வாழ்வு பெற்ற நிலையை விரித்து, நெக்கு நெக்குறுகி இறைவனைப் போற்றுகிறார். அதனையுணர்ந்து படிக்குந்தோறும், படிப்போர் உள்ளத்திலும, அவ்வித அன்புப் பெருக்கினை உதவுந் தன்மையது அப்பாடல். அவ்வுதவியால் அச்சிவ புராணத்திற் கூறிய பயனும் சித்திக்கப் பெறுவர்.

*''சொல்லற் கரியானைச் சொல்லித் திருவடிக்கீழ்*
*சொல்லிய பாட்டின் பொருளுணர்ந்து சொல்லுவார்*
*செல்வர் சிவபுரத்தி னுள்ளார் சிவனடிக்கீழ்ப்*
*பல்லோரு மேத்தப் பணிந்து''*

வருவது காண்க.

ஆகவே இன்று நாம் செய்யவேண்டுவது என்ன? அன்பு வலைப்பட்டு ஒளிரும் சிவத்தைச் சிக்கெனப் பிடிப்பதா? இல்லையேல் அணுச் சக்தியைப் பின்பற்றுகிறதா? எதனால் நம் வாழ்வு செம்மை நலம் பெறலாம்? அணுவை அடுத்தால் அழிவு-''அன்பே சிவம்'', ''அன்பருக்கன்பனே சிவன்'' என்னும் உண்மையை உணர்ந்து அவர் திருவடியைப் பற்றினால் ஆக்கம்.

*''தேற்றனே தேற்றத் தெளிவேயென் சிந்தனையுள்*
*ஊற்றான வுண்ணா ரமுதே உடையானே''*

என்று உருகி உருகி சிவபுராணத்தைத் தினமும் ஓதிப் பற்றற்ற திருவடியைப் பற்றினால், அன்பு பெருகும்; அன்பு பெருகின் ஆன்மலாபம் கிட்டும். அழியாச் செல்வமும் இதுவே.

*''திருவடி ஞானஞ் சிவமாக்கு விக்கும்*
*''திருவடி ஞானஞ் சிவலோகஞ் சேர்க்குந்*
*''திருவடி ஞானஞ் சிறைமல மீட்குந்*
*''திருவடி ஞானமே திண்சித்தி முத்தியே''*

என்பது திருமூலர் திருவாக்கு. எனவே எமது ஒப்பிலாச் சிவநெறியின் மாண்பினை முற்றுமறிந்தும், அவ்வழி ஒழுகியும், பயன் பெறுவதற்கு நாம் ஒவ்வொருவரும் சலிப்பற்ற சாதனை செய்ய வேண்டும். இவ்வுண்மைகளை நாளாந்த சீவியத்தில் செயற்படுத்துவது அவ்வளவு எளிதன்று. ஆதலால் அருள் நிலையும் அன்பு நிலையும் எய்திய சிவஞானிகளின் வரலாற்றையும், இறைவனது திருவருளைப் பெற்ற அடியார்களின் வாழ்க்கைப் பேறுகளையும், நாம் நன்றாய் அறிந்து, சிந்தித்து நடப்பது நமக்கு இன்றியமையாத கடமையாகும்.

இதைத் தொடர்ந்து தகைமை வாய்ந்த சிவநெறித் தொண்டர்கள் வெளிநாடு சென்று உலகத் தத்துவ அரங்குகளில், எங்களுடைய சமயக் கொள்கைகளை விஞ்ஞான விருத்தி மேம்பட்ட சூழலுக்குகந்த முறையில் பிரசாரம் செய்வது மிகவும் வேண்டத்தக்க பணியாகும். ஏனெனில் வேதாந்தத்தைப் பற்றிய அறிவே உலகெங்கும் இந்து சமயமெனக் கருதப்பட்டு வருவதால், சைவ சமயக் கொள்கைகளையும், பண்பாட்டையும், சைவ சித்தாந்தத்தின் தத்துவ ஞானங்களையும், எடுத்துத் தெளிவுபட நூல் முகமாகவும், வாய்மொழி மூலமாகவும் பரவச் செய்தல் எமது கடமையில் முக்கியமான கடனெனக் கொள்ளல் வேண்டும்.

தைத்திரீயோப நிஷத்தில் வரும் சீஷாவல்லீயில், வேதம் ஓதுவதும், ஓதுவித்தலும் பிரம்ம யஜ்ஞம் எனப்படும். உலகில் காணும் அழகையும் ஒழுங்கையும் ஆண்டவனுடையதாய்ப் போற்றிக் காப்பதுடன், ஸ்வாத்தியாயமும் பிரவசனமும் கைவிடாமல் காக்கப்பட வேண்டுமென்கிறார் வேதரிஷியாகிய முத்கலர்.

| | | |
|---|---|---|
| ருதஞ்ச | ஸ்வாத்யாய | ப்ரவசனேச |
| தபஸ்ச | ,, | ,, |
| சமஸ்ச | ,, | ,, |
| அக்னி | ஹோத்ரஞ்ச | ,, |
| ப்ரஜாச | ,, | ,, |
| சத்யஞ்ச | சுவாத்யாய | ,, |
| தமசஸ்ச | ,, | ,, |
| அகனயஸ்து | ,, | ,, |
| மானுஷஞ்ச | ,, | ,, |

ஆகவே சைவத்தில் பிறந்து, சைவத்தில் வளர்ந்து, சைவத்தில் ஊறி இருக்கும் சைவ மக்கள், எமது சைவ நூல்களை உலகிற்கு ஈந்த சிவஞானச் செல்வர்களையும், குருபரம்பரையாக விளங்கிய ஞானக் குரவர்களையும், நன்குணர்ந்து அன்பு செலுத்தினால், அவர்களது அயார அன்பிற்கு இலக்காகிய மாதொரு பாகனை அடையலாம்.

இது நிற்க. இனி அருள் நெறியைக் கவனிப்போம்.

## அருள் நெறி

*குருவே சிவமெனக் கூறினன் நந்தி*
*குருவே சிவமென்பது குறித்த தோரார்*
*குருவே சிவனுமாய்க் கோனுமாய் நிற்கும்*
*குருவே யுரையுணர் வற்றதோர் கோவே.*

என்பது திருமூலர் திருவாக்கு.

திருவாதவூரடிகளை அடிமையாக்கிக் கொள்ளவிரும்பிச் சிவபிரான் ஆசாரிய மூர்த்தங்கொண்டு கைலை மலையினின்றிங்கிப் போந்து, விளக்கு தன்முன் கிடந்த இருளைக் கெடுப்பது போல, தம்முடைய அருட்பார்வையால் மாணிக்கவாசகப் பெருந்தகையாரைப் பிறவித் துன்பத்தை யொழித்து, அவர் சிரசில் தம்மிரண்டு திருவடிகளையுஞ் சூட்டி முத்திநெறிகளை உபதேசித்தருளினார்.

இறைவனான பரமசிவன் சிவலோகத்தினின்றிறங்கித் தாம் ஆட்கொள்ளத் திருவுளம் பற்றியிருக்கும் ஆன்மாக்களது மலபரிபாகத்துக்கு ஏற்றவாறு, திருமேனிதரித்துத், தமது குளிர்ந்த பாதத்தை, ஆன்மாக்களை மலப்பிணிப்பு மீண்டும் அணுகாது பாதுகாக்கைக்குத் தலைக்காவலாய் வைத்து, உயிருக்குயிராய் நின்று மனத்தைக் கசியச் செய்து, உவமையற்ற திருவருட் பார்வையால் முத்தி நெறிகளைக் குறிப்பாற் காட்டிப் பாசத்தை நீக்கினார் என்பதே இங்கு குறிப்பிடும் திருமந்திரச் செய்யுளின் பொருளாகும்.

*''விண்ணின் றிழிந்து வினைக்கீடாய் மெய்கொண்டு*
*தண்ணின்ற தாளைத் தலைக்காவல் முன்வைத்து*
*உண்ணின் றுருக்கியொ ரொப்பிலா வானந்தக்*
*கண்ணின்று காட்டிக் களிம்பறுத் தானே''*

''விண்ணின்றிழிந்து'' என்றதின் கருத்து ''சித்திதரு தேசிக சிறந்த வடிவங்கொண்டு'' என்னும் கடவுண் மாமுனிவர் திருவாக்கினும், ''தண்ணின்ற தாளைத் தலைக் காவல் முன்வைத்து'' என்றதின்

கருத்து, ''தாளுடையான் தொண்டர் தலைக்காவல்'' என்னும் உய்ய வந்த தேவநாயனார் திருவாக்கினும், ''உணின் றுருக்கியொ ரொப்பிலா ஆனந்தக் கண்ணின்று காட்டி'' என்றதின் கருத்து ''உண்ணின்று உருக்கி உலப்பிலா வானந்தக் கண்ணீர் தருவரால் அன்னேயென்னும்'' என்ற திருவாசகத் திருவாக்கினும், இறைவன் உபதேசம் அருளுமுன் திருவருட் பார்வை செய்வார் என்பது, ''பந்தனை யொழிவார் தம்மேற் பரிந்தருட் பார்வை செய்து'' என்னும் கடவுண் மாமுனிவர் திருவாக்கினும் அமைந்துள்ளன என்பதால், சைவ நெறியின் பரந்த கொள்கைகள் ஒருவாறு ஊகித்தறியற்பாலன.

## குருநெறி

திருவருள் வழி நின்றால், வினையும் வினையால் வரும் துன்பமும் நீங்கும் இப்பேருண்மையை அனுபவ வாயிலாகத் திருமுறைகளில் காணலாம்.

*'துன்பமே பிறப்பே, இறப்பொடு மயக்காந்*
*தொடக்கெலாம் அறுத்தநற் சோதி!*
*இன்பமே உன்னைச் சிக்கெனப் பிடித்தேன்'*

என்று நெக்கு நெக்குருகி, இறையருளை விக்க விக்கப் பருகி, பேரானந்தத் தேனமுதைப் பெற்ற மாணிக்க வாசகப் பெருமான் காட்டிய குரு நெறியைத் தழுவி, நாமும் உய்ய வேண்டும். இதுவே எனது பேரவாவுடன் நிகழ்த்தும் பிரார்த்தனை.

*''அருட்கண் ணிலாதார்க் கரும்பொருள் தோன்றா*
*அருட்கண் ணுளோர்க் கெதிர்தோன்று மான்''*

என்பது திருமூலர் திருமந்திரம். ஆகவே ஞானக்கண்ணால் உள்ளத்தில் நாட்டப்பட்ட இறைவனை, எங்கள் குருநாதன் சிவயோகபிரான், நற்சிந்தனை யெனும் ஞான நூலில் இவ்வாறு போற்றிப் புகழ்கின்றார்.

*தொழு துபணங்கி நின்தூநெறியே செல்லும்*
*முழுமனத்தார் தங்கூட்டம் முன்னி - அழுதே*
*உருகி உருகி உளநைந்து கண்ணீர்*
*பெருக வரந்தருவாய் பின்*

*நினைவி னினைவாகி நீயிருக்க நாயேன்*
*வினைவழியே சென்று மெலிசோ - எனையும்*
*இடுக்க ணெனக்கில்லை நினசெயலே யாவும்*
*நடுக்கமெனக் குண்டோ நவில்.*

*''எந்தைபிரான் இருந்தநிலை கண்டார்கள் எப்பொழுதும்*
*நன்றாக நினைவார்கள்; நாடார்கள் பிறபொருளை,*
*பிரிதொன்றில் அயரார்கள், கரவார்கள், உழலார்கள்,*
*கண்டதிலே மனம்வையார்; அறநெறியில் வழுவார்கள்;*
*அன்பர்பணி மறவார்கள் பிறவொன்று மறியார்கள்*
*பிரியாத சிந்தையரே என்னுயிருக் குயிரானை*
*மன்னுயிர்கள் எல்லாமாய் மருவிநின்ற திறலானை*
*குருவாய்க்கோ னானானைக் கண்டுள்ளம் குளிர்ந்தனவே''*

இது யாழ்ப்பாணச் சிவயோக சுவாமிகளின் திருவருட் செல்வமாய் விளங்கும் நற்சிந்தனைவாக்கு.

இங்ஙனம் சற்குருவின் அருளை நாடிச் செல்பவர்க்கு, ஓர் அரிய நற்சிந்தனை அமுதினை வழங்குகின்றார் சிவயோக சுவாமிகள். கேண்மின்!

*நீதி யொன்றை நெஞ்சிடை வைத்திடு*
*உபாதி செய்யும் புலன்வழி யுறாதே*
*அபாய மொன்று மென்றுமுனக் கில்லை.*
*செய்ய வேண்டிய செவ்வனே செய்வாய்.*
*உயர்ந்தாய் முன்னர் உலகமுன் கைவசம்.*
*சந்தேக மில்லைச் சாற்றினன் கேணீ.*
*சற்குரு உன்துணை சாட்சி நீயாவாய்*
*அற்புத னடியிணை யென்றும் வாழ்கவே.*

இவ்விதத் திருவருட் பயனின் விளைவு மணிவாசகப் பெருமானின் திருப்பாட்டினும் அமைந்துள்ளது.

*''யாமார்க்கும் குடியல்லோம் யாதும் அஞ்சோம்*
*மேவினோம் அவரடியார் அடியா ரோடு*
*மேல்மேலுங் குடைந்தாடி ஆடுவோமே''*

என ஆண்டாள் அருளுடைமையையும், அடியார் அடிமைத் திறனையும், பேரானந்தம் பொங்க எடுத்துரைக்கிறார் மணிவாசகப் பெருமான்.

## பெண்குலத் திலகம் ஔவைப் பிராட்டியார்

இங்ஙனம் முதல்வன் தொடர்புடையார் உள்ளத்தில் உதிக்கும் அன்பு, வளர்ந்து பெருக்கெடுக்கையில், எல்லா மன்னுயிர்கள் மாட்டும் செல்லும். இதுவே அருள் ஊற்று. இவ்வாறு அருளும், அறமும் நிறைந்த உள்ளம் மாசற்று விளங்கும். அவ்விளங்கு நிலைக்கண்

தோன்றுவதே மெய்யுணர்வு. இவ்விதம் இறைவனாகிய செம்பொருளைத் தலைப்பட்டு நின்று ஒழுகி, உலகப்பற்றைத் தீரவிட்டுப் பேரானந்தத்தின் நிலையினை அடைந்த பெண் குலத் திலகமே ஔவைப் பிராட்டியாராவர்.

*''எவ்வுயிரும் நீங்கா துறையும் இறைசிவ னென்று*
*எவ்வுயிர்க்கும் அன்பா இரு''*

என்ற திருவாக்கிற்கிலக்காக வாழ்ந்த அம்மையாரின் வாழ்க்கை முறையும், அம்மையாரின் நூற்றிறங்களும் உலகறிந்த உண்மையாம்.

*''நினைமின் மனமேன நினைமின் மனனே-*
*கடிமலர்க் கொன்றைச் சடைமுடிக் கடவுளை*
*ஒழிபெருஞ் சிவபெரும் போகவின் பத்தை.. நினைமின்...''*

என்ற கோயிற்றிருவகவல் பாட்டில், பட்டினத்தடிகள் உரைப்பதுபோல், நினைந்து மனங்கசிந்து, திருவருள் நாட்டத்தால் ஒளிக்குஞ் சோரனாகிய இறைவனை, அம்மையார் இளமுருகனாகவும், பிரணவ சொரூபியான வித்தக விநாயகராகவும், கண்டவராதலின், இப்பூலோக சரஸ்வதி அனுட்டித்து வழிகாட்டிய அன்பு நெறி பெரிதும் போற்றற்குரியது. ஔவையார், சேர-சோழ-பாண்டியராகிய மூவேந்தர்களாலும் போற்றப்பட்ட தமிழ்த்தாய். அம்மூதாட்டியின் வாயிலாகப் பல நீதிகளை உலகமுய்யுமாறு அருளியமை குறித்து அருணகிரி சுவாமிகளும், ''சீர் சிறக்கு மேனி பசேல் பசேலென'' என்னும் பழமுதிர்ச் சோலைத் திருப்புகழில் ''பாடன் முக்ய மாது தமிழ் என்னும் வார்த்தைகளால் விளக்குகிறாரென ஊகிக்கலாம். அவர் ஆத்திசூடி, கொன்றை வேந்தன், நல்வழி முதலிய நீதி நூல்களையும், விநாயகரகவல், ஔவைக் குறள், பல தனிப்பாடல்களையும் சீரிய செந்தமிழ்ப் பாக்களால் எங்களுக்குச் சேமநிதியாக ஈந்தருளியிருக்கிறார்.

உலகங்களும் உயிர்களும், ஆதியுமந்தமுமில்லாச் சிவபிரானது திருவருட் சங்கற்பமாகிய நியதியின்படி, மாயையிலிருந்து தோன்றி, சில பல காலமளவு நிலை பெற்று, மீளவும் மாயையில் ஒடுங்குனவாயுள்ளன. இக்கருத்துப் பற்றியே ஔவைப் பிராட்டியார்,

*''ஒன்றை நினைக்கின் அதுஒழிந்திட் டொன்றாகும்*
*அன்றி யதுவரினும் வந்தெய்தும் - ஒன்றை*
*நினையாத முன்வந்து நிற்பினும் நிற்கும்*
*எனையாளும் ஈசன் செயல்''*

என்ற பாடலால் ''எல்லாமீசனாகிய சிவன் செயல்'' என்று தம் அனுபவ சித்தாந்தத்தைக் கூறி, எங்களையும் உற்சாகப்படுத்துவதே அவரது முக்கிய நோக்கமாகும்.

இன்னும் ஔவையாரின் மூலமாக ஞானப் பழம் உதிர்வதற்காக, இறைவன் நாவற் பழமுதிர்ந்த திருவிளையாடலை, நாம் இங்கு சிந்திப்போமாக. ஔவையார் வரும் வழியில் முருகவேள். மாட்டுக்காரச் சிறுவனைப் போன்ற வடிவுடன், ஒரு நாவல்மரத்தின் கிளையில் அமர்ந்திருந்தார். களைப்புடன் வந்து கொண்டிருந்த மூதாட்டியை அழைத்துக் களைப்பைப் போக்க ''சுட்டபழம் வேண்டுமா, சுடாத பழம் வேண்டுமா'' எனப் பரிவுடன் வேண்டினான் சிறுவன். மகிழ்வுற்ற ஔவையாரும் சுட்டபழம் வேண்டுமெனக் கூறவே சிறுவன் மரக்கிளையை உலுக்கவே, பழங்கள் தரையில் உதிர்ந்தன. கீழே விழுந்த பழங்களில் மண் ஒட்டிக் கொண்டிருக்கவே, ஔவையார் ஒவ்வொன்றாக எடுத்து மண்ணைப் போக்க வாயினால் ஊதினார். 'பாட்டி, பழம் மிகவும் சுடுகின்றதோ? நன்றாக ஊதி ஊதி ஆறியபின் சாப்பிடு' என்று கூறிச் சிரித்தான், மாட்டுக்காரச் சிறுவன். சிறுவனின் மதிநுட்பத்தை எண்ணிய மூதாட்டி தன் அறிவின் சிறுமையை எண்ணிக் கண் கலங்கினார்.

*''காரெருமை மேய்க்கின்ற காளைக்கு நான்தோற்ற*
*தீரிரவு துஞ்சாதென் கண்''*

என்று கூறி மிகவும் வருந்தினர். இத்திருவிளையாடலை இறைவன் எமக்கு ஓர் அரிய தத்துவத்தை உணர்த்துகின்றார். இவ்வுலகில் வந்துள்ள உயிர்கள், உலக பாசம் எனும் மண்ணால் ஒட்டப் பட்டிருக்கின்றன. இம்மண்ணைப் போக்கவெறும் கல்வியறிவுமட்டும் போதாது. இறைவனை உணரும் மெய்யறிவு இருந்தால்தான், பற்று என்னும் மண்ணை அகற்ற முடியும் என்பதே, இவ்விளையாடலின் உட்பொருளாக அமைந்திருக்கிறது. இதனை அருணகிரிநாத சுவாமிகளும்,

*''அறிவா லறிந்துண் இருதாள் இறைஞ்சும்*
*அடியார் இடைஞ்சல் களைவானே''*

எனக் குறிப்பிடுகிறார். இம்மெய்யறிவை இறைவன் தானே அருள முடியும். எம்பிரான் இவ்வாறு தமிழ்த் தாய்க்கு அருள் புரிந்த வரலாற்றையும், அதன் மூலம் வெளிப்பட்ட நீதிகளையும் சிந்தித்துச் சிந்தித்து இன்புறுவோமாக.

## அருளாட்சி

ஆகவே சமய ஒழுக்க நெறியில் பூரண நம்பிக்கை வளரவேண்டில், ஔவைப் பிராட்டியாரைப் போல் தியான யக்ஜ்ஞும், மானுஷ யக்ஜ்ஞும், ஞாய யக்ஜ்ஞும் முதலிய நற்றொண்டு செய்வதில் ஆற்றலும் தியாகமும் வாய்ந்த திருத்தொண்டர்களை ஆதரித்தும், பேணியும், மேலும் மேலும் விஞ்ஞான ஏற்றத்தால் உண்டாகும் ஆயுதப் படைகளைப் பெருக்காமல், அருளாட்சி புரியவல்ல காப்புத் திருப்படைகளை, எம்மத்தியில் உருவாக்க வேண்டும். இப்பணியைப் பெண்மணிகள் தான் வெற்றிகரமாகச் செய்து முடிக்கலாம்.

*"தொண்டர்காள் தூசிசெல்லீர், பக்தர்காள் சூழப்போகீர்*
*ஒண்டிறல் யோகிகளே, பேரணி உந்தீர்கள்*
*திண்டிறல் சித்தர்களே, கடைக்கூழை செல்மின்கள்*
*அண்டர் நாடாள்வோம்நாம் அல்லற்படை வாராமே"*

யுத்தப்படை வீரர்களிலும் பார்க்க. இப்போது எம் நாட்டுக்குத் திருத்தொண்டர் படை எழுச்சியே மிகவும் தேவைப்படுகிறதென, மட்டில்லா நம்பிக்கை பூண்டவர்களாதலால்தான் இச்சைவ சித்தாந்த 66ஆம் ஆண்டு விழாவை இவ்விதச் சிறந்த முறையில் வியாபார விவசாயங்களில் முன்னேற்றம் வாய்ந்த சேல நன்னாட்டில் கொண்டாடத் தீர்மானித்தீர்கள் என எண்ணற்பாலது.

இவ்வித மகாநாட்டில் அருளாணையின் துணை கொண்டு, ஞானவாளேந்திப் பிரபஞ்சப்போர் புரியவும் பின்வாங்க மாட்டோமென, நாமெல்லோரும் ஏகமனதாய் உறுதிகொள்ள வேண்டுமெனப் பெரிதும் விழைகின்றேன்.

நாதப் பறையை முழக்குவோம்; வாழ்த்து வகையானும், வணக்க வகையானும், வெற்றிவகையானும் சிவ நாமங்களை ஓதியும், அடியார்களின் வழித் தொண்டைப் போற்றியும், வேத சிவாகமங்களை உலகத்தார் உய்யும் வண்ணம் அருளிச் செய்த சர்வஞ்ஞத்துவம் உடைய அம்மை - அப்பனைப் பல்காலும் துதித்தும், வெற்றிமுரசு முழக்குவோம். மாணிக்கவாசகர் அருளிச் செய்த தொண்டர் படையினது எழுச்சி, எக்காலத்திற்கும் பொருத்தமானதே. இவ்வாறிருப்பின், இன்று அணுச் சக்தியின் ஆற்றலால் ஆக்கிரமிக்கும் நிலையாதனவாகிய படைகளையும், அறியாமையால் ஏற்படும் உட்பகைகளையும் அழிப்பதற்குத் திருப்படையெழுச்சி எம்மத்தியில் இன்றியமையாது வேண்டற்பாலது. பெண்மணிகளின் சிரத்தையும்,

ஒத்துழைப்பும், தாய்மையன்பும் இயல்பான சகிப்புத் தன்மையும், பெரிதும் உதவியளிக்குமென்பதில் சற்றும் ஐயமில்லை.

ஆகவே, விரைந்து செயலாற்றும் சிவத் தொண்டர்களை முன்னணிப் படையாகவும், அன்பு மிக்க பக்தர்களை இருமருங்கும் அமைத்து, படைஞர்கள் உள்ளம் அயராது வீறு கொண்டிருத்தற்கு, ஒண்திறல் யோகிகளை நடுப்படையாகிய பெரிய அணிகளில் நிறுத்தி, இறைவனது அருளால் வியத்தகு செயல்கள் செய்து, அவ்வருளின் பெருமையை உலகிற்கு உணர்த்துபவர்களாகிய சித்தர்களைப் பின்னணிப் படையில் நிறுத்தினார், அன்று மாணிக்க வாசகர். இவர் வகுத்த அணியினைத் தொடர்ந்து இன்று நாமனைவரும் திருவருளின் துணைகொண்டு ஞான வாளேந்தி, அல்லற் படையை நீக்க ஏற்ற வழிவகைகளைக் காலத்துக்கும் சூழலுக்கும் ஏற்பக் கண்டுபிடித்து வாழ்வதே வாழ்க்கையின் குறிக்கோளாகும்.

ஞானக்கண் நிற்பவர்களே, சிவபிரானது நாடாகிய சிவலோகத்தை ஆள்வார்கள். துன்பமாகிய படை அவர்களை ஒருகாலும் அணுகாது. என்றும் இன்பம் தழைக்க விருப்பார்கள். அப்பர் சுவாமிகளின் மதுரப் பாடலொன்றை இங்கு சமர்ப்பித்து, எனது சிற்றறிவுக்கேற்றவாறு நிகழ்த்தின தலைமை உரையைப் பூர்த்தி செய்கின்றேன்.

*''அல்லல் என்செயும் அருவினை என்செயும்*
*தொல்லை வல்வினைத் தொந்தந்தான் என்செயும்*
*தில்லை மாநகர்ச் சிற்றம்பலவ னார்க்(கு)*
*எல்லை யில்லதோ ரடிமை பூண்டேனுக்கே''*

சிந்திமின் அன்பர்காள்! அருமைத் தாய்மார்களே ஒருப் படுமின்! சகோதர சகோதரிகளே! உங்கள் அனைவரின் பொறுமைக்கும் அமைதிக்கும், எம் உளங்கனிந்த நன்றி.

*''கால முண்டாகவே காதல்செய் துய்மின்!*
*தன்அடி யவர்க்குமூல பண்டாரம் வழங்குகின்றான்*
*வந்து முந்து மினே''*

*அருளால் அமுதப் பெருங்கடல் ஆட்டி*
*அருளால் அடிபுனைந் தாரமுதம் தந்திட்டு*
*அருளான ஆனந்தத் தாரமு தூட்டி*
*அருளால் என்நந்தி யகம் புகுந்தானே.*

Sahanava Vatthv, Sahanan Bunalthu
Saha Viryam Karavavahai
Dejavıneva Shitawastuma Visten Savahav - Aum.

எங்கும் பொங்குக திருவருள்!

வாழ்க தமிழ் நாடு! வாழ்க சைவர் குலம்!

சிவ சிவ சிவாயவே.

# வித்துவான் க. வெள்ளைவாரணனார்

(68ஆம் ஆண்டு விழா - 1973 - சீகாழி - சைவர் மாநாடு)

*வேதநெறி தழைத்தோங்க மிகுசைவத்துறை விளங்கப்*
*பூதபரம்பரை பொலியப் புனிதவாய் மலர்ந்தழுத*
*சீதவள வயற்புகலித் திருஞான சம்பந்தர்*
*பாதமலர் தலைக்கொண்டு திருத்தொண்டு பரவுவாம்*

யாவருக்குந் தாயுந் தந்தையுமாகப் பெரிய பெருமாட்டியுடன் தோணிமீது வீற்றிருந்தருளும் அம்மையப்பர் திருவடிகளை உள்ளத்திருத்தி இங்கு எழுந்தருளிய திருத்தருமையாதீனத்தின் குருமகா சந்நிதானம் திருப்பெருந்திரு சண்முக தேசிக ஞானசம்பந்த பரமாசாரிய சுவாமிகளின் பொன்னார் திருவடிகளை மனமொழி மெய்களால் வணங்கி இப்பேரவையிற் குழுமியுள்ள சிவநேயச் செல்வர்கள் எல்லோர்க்கும் அடியேனது உளமார்ந்த வணக்கத்தைத் தெரிவித்துக் கொள்கின்றேன்.

அன்பார்ந்த பெரியோர்களே! அன்னையர்களே! அன்பு கெழுமிய உடன் பிறப்பாளர்களே!

உயிர்களாகிய தம்மை உள்ளாவாறுணர்ந்து தம்மை ஆளாகவுடைய தலைவனாகிய இறைவனது உண்மையையும் உணர்ந்து செம்மை நலம் வாய்ந்த சிவநெறியினைக் கடைப்பிடித்தொழுகும் செம்புலச் செல்வர்களாகிய பெரியோர்கள் என்னையும் ஆளாகவுடையர் ஆதலால் யான் கூறும் சொற்களிலுள்ள குற்றங்களைந்து குணங் கொண்டு அன்பு செய்வர் என்னும் துணிபுடன் இப்பேரவையில் முன்னுரையாகச் சில கருத்துக்களை நினைவு படுத்துகின்றேன்.

'மைவைத்த கண்டன் நெறியன்றி மற்றோர் நெறிகருதாத் தெய்வக்குடிச் சோழர்' ஆட்சி புரிந்த சிறப்புடையது சோழ நாடு. பொன்னி நதிபாயும் சென்னி நன்னாட்டிலே பிரம்மபுரம், வேணுபுரம், புகலி, வெங்குரு, தோணிபுரம், பூந்தராய், சிரபுரம், புறவம், சண்பை,

காழி, கொச்சைவயம், கழுமலம் என்னும் பன்னிரண்டு திருப்பெயர்களையுடையதும், பிறந்துவளர் மூவாண்டிலேயே சிறந்த பெரும் பொருளாகிய இறைவனை நினைந்து 'அம்மே அப்பா' என்று அழைத்து அழுதருளி, சிந்தைக்கும் மொழிக்கும் எட்டாத சிவபரம் பொருளே அம்மையப்பராக அருள் திருமேனி கொண்டு எழுந்தருளக் கண்டு அறம் பயந்தாளாகிய உமையம்மை யளித்த ஞானப் பாலைப் பருகி, இவ்வாறு எம்மை ஆண்டருளியவன் 'தோடுடைய செவியன் விடையேறி என்னுள்ளங் கவர்கள்வன் பிரமாபுர மேவிய பெம்மான் இவனே' எனத் தம் தந்தையார்க்கு அடையாளங் கூறித் தம் விரலொன்றினாற் சுட்டிக்காட்டும் முறையில் திருநெறிய தமிழாகிய ஞானப் பனுவவலைத் திருவாய் மலர்ந்தருளிய திருஞானசம்பந்தப் பிள்ளையார் திருவவதாரஞ் செய்தருளிய பெருமை வாய்ந்ததும், சிவனடியார்களை அன்புடன் போற்றித் திருமுறை எழுதுதல் வாசித்தல் முதலிய திருத்தொண்டின் நெறியில் ஈடுபடுத்தி ஆதரித்த கணநாத நாயனார் பிறந்தருளும் பேறு பெற்றதும், பெருங்கடல் நீர் பொங்கி மீதூர்ந்த பேரூழிக் காலத்தும் கடல் கொளப்படாது மேலுயர்ந்து மிதந்த தொன்மை வாய்ந்ததும் ஆகிய தெய்வச் சிறப்புடைய திருத்தலம் இச்சீகாழிப் பதியே என்பதனைச் சைவ நன்மக்கள் யாவரும் நன்குணர்வார்கள்.

யாவராலுங் காணுதற்கு அரிய கடவுள் அன்பினால் நெஞ்சம் நெக்குருகித் தன்னை நினைந்து போற்றும் அடியார்களுக்கு மிகவும் எளியனாகி அவர்கள் கண்ணாரக் கண்டு மகிழும்படி அவர் முன்வெளிப்பட்டுத் தோன்றி அருள் புரிவான் என்னும் உண்மையினை உலகத்தார்க்குத் தெளிவாக அறிவுறுத்தும் நிலையில் இற்றைக்கு ஆயிரத் திருநூறு ஆண்டுகளுக்கு முன்னே மூன்று வயது குழந்தையாகிய கவுணியப் பிள்ளையார்க்கு அம்மையப்பராக எழுந்தருளி வந்து காட்சி தந்து அருள் ஞானம் வழங்கிய தெய்வ நலந்திகழும் இச் சீகாழிப் பதியிலே சைவ சித்தாந்த மகாசமாசத்தின் அறுபத்தெட்டாம் ஆண்டு விழா நிகழ்வது, நம் சைவ சமய ஆசிரியர்களாகிய ஆளுடைய பிள்ளையார் முதலிய திருநெறித் தலைவர்கள் திருவாய் மலர்ந்தருளிய செந்தமிழ்த் தெய்வப் பனுவல்களாகிய திருமுறைகளால் இத்தமிழ்நாடு பெற்றுள்ள நலங்களைச் சைவ நன் மக்கள் உளங்கொண்டு பேணுதற்குரிய சிறப்புடைய நிகழ்ச்சியாகும்.

எல்லாம் வல்ல இறைவனது திருவருட்பயனாகத் தோன்றிய சைவத் திருமுறைகள் பன்னிரண்டினுள் ஆளுடைய பிள்ளையார்

அருளிய முதல் மூன்று திருமுறைகளின் விளைநிலமாகத் திகழ்வது பிரமபுரமாகிய இத்திருத்தலமே என்பதனை அன்பர் பலரும் நன்குணர்வர். இத்தலம் பிரமபுரம் முதலிய பன்னிரு திருப் பெயர்களாலும் போற்றப்பெறும் புராண வரலாறுகளாகிய திருவருள் நிகழ்ச்சிகளுக்கு நிலைக்களமாகத் திகழுந் தொன்மையினைத் திருஞானசம்பந்தப் பிள்ளையார் தாம் அருளிய பல்பெயர்ப் பத்து முதலிய திருப்பதிகங்களில் எடுத்துரைத்துப் போற்றியுள்ளார். தேவாரப் பாடல்பெற்ற தலங்கள் எல்லா வற்றுள்ளும் மிகுதியான திருப்பதிகங்களைப் பெற்றுள்ள பெருமை புகலியாகிய இத் தலத்திற்கேயுரிய தனிச் சிறப்பாகும். ‘செந்தமிழ் பரப்புறு திருப்புகலி’ எனப் பிள்ளையாரால் பாராட்டிப் போற்றப்பெற்ற இத்தலத்திற்குரிய தேவாரத் திருப்பதிகங்களாக இப்பொழுது கிடைத்துள்ள பதிகங்கள் எழுபத்தொன்று. இவற்றுள் திருஞானசம்பந்தர் அருளிச் செய்த பதிகங்கள் அறுபத்தேழு. திருநாவுக்கரசர் அருளிய பதிகங்கள் மூன்று. சுந்தரர் அருளிய திருப்பதிகம் ஒன்று. இவையன்றி மணிவாசகர் அருளிய திருவாசகத்தில் பிடித்த பத்தும், பதினொராந் திருமுறையில் திருவெண் காட்டடிகள் அருளிய திருக்கழுமல மும்மணிக் கோவையும், நம்பியாண்டார் நம்பிகள் ஆளுடைய பிள்ளையாரைப் பரவிப் போற்றிய ஆளுடைய பிள்ளையார் திருவந்தாதி, திருச்சண்பை விருத்தம், திருமும்மணிக் கோவை, திருவுலாமாலை, திருக்கலம்பகம், திருத்தொகை ஆகிய பனுவல்களும் செவ்வேளருள் பெற்ற அருணகிரிநாதர் பாடியருளிய திருப்புகழ் முதலிய பனுவல்களும் இக்காழிப் பதியின் தெய்வச் சிறப்பினை நன்கு புலப்படுத்தும் அருள் நூல்களாகும்.

இத்தகைய தெய்வ நலம் வாய்ந்த சீகாழிப் பதியிலே நம் சைவ சித்தாந்த சமாசத்தின் ஆண்டு விழா முப்பதாண்டுகளுக்கு முன்னே எங்கள் பேராசிரியர் மகா மகோபாத்தியாய பண்டித மணி மு. கதிரேசச் செட்டியார் அவர்கள் தலைமையில் மிகவும் சிறப்பாக நிகழ்ந்தது என்பதனை இங்கு வந்துள்ள பெரியோர் பலரும் நன்குணர்வர். முப்பதாண்டுகளுக்கு முன்னே நம் நாட்டில் அமைந்திருந்த அரசியல் சமுதாயச் சூழ்நிலைக்கும் இன்றுள்ள அரசியல் சமுதாயச் சூழ்நிலைக்கும் பெரிதும் வேறுபாடுண்டு என்பதனைச் சைவர்களாகிய நாம் எண்ணிப் பார்த்தல் வேண்டும். சமயம் என்பது, தன்னை மேற்கொண் டொழுகு வோரது உள்ளத்தில் என்றும் மாறாத வாழ்வியல் உண்மையைத் தெளிவுபடுத்தி வையத்து வாழ்வாங்கு வாழ்தலாகிய இம்மைப் பயனையும் நிலைத்த பேரின்பத்தினை

மன்னுயிர்க்கு வழங்குதலாகிய அம்மைப் பயனையும் ஒருங்கே யளிக்கவல்ல நல்லொழுக்க நெறியேயாகும். உலக மக்கள் தாம் தாம் விரும்பிய பொருள்களிலெல்லாம் வேட்கை மீதூர்ந்து ஐம்பொறி களால் ஈர்க்கப்பட்டு ஒருவர் முயற்சியில் மற்றவர் குறுக்கிட்டு அல்லற்படும் அவலநிலை ஏற்படாதவாறு ஐம்பொறிகளை வெல்ல வல்ல ஆற்றலை உயிர்களுக்கு அளிக்கும் முறையில் உயிர்க்குயி ராகிய இறைவனால் மக்களது உணர்வு நிலைகளுக்கு ஏற்பப் படிமுறையாக வகுத்தருளிச் செய்யப் பெற்றனவே உலகிலுள்ள எல்லாச் சமயங்களும் என்பது நம் சைவ சமய ஆசிரியர்களின் தெளிந்த கொள்கையாகும். சமயவாதிகள் தத்தம் மதங்களே அமைவுடையன எனத் தம்முள் மாறுகொண்டு வாதிடும் நிலையைத் தவிர்த்துச் சமயங்கடந்த பழம் பொருளாகிய முழுமுதற் கடவுளியல்பினை மக்கள் உளங்கொண்டு உலகில் எல்லா மக்களோடும் அன்பினால் அளவளாவி மகிழும் முறையில் மண்ணில் நல்ல வண்ணம் வாழச் செய்து எண்ணின் நல்ல கதியாகிய வீடுபேற்றினை ஐயுறவின்றி அளிக்கவல்ல மெய்ம்மைச் சமயம் சைவ சமயமே என்பதனை இறைவனருள் பெற்ற செம்புலச் செல்வர்களாகிய சிவனடியார்கள் தம் வாய்மொழிகளாலும் எவ்வுயிரும் தம்முயிர் என எண்ணி நிகழ்த்திய வாழ்க்கைத் தொண்டுகளாலும் உறுதிப்படுத்தியுள்ளார்கள். சிவனருட் செல்வர்களாகிய அப்பெரி யோர்கள் அறிவுறுத்திய திருவருள் நெறியினை இக்காலத்தில் நமது வாழ்க்கையில் கடைப்பிடித்து ஒழுகுவோமாயின் இனி எதிர்காலத்தில் நாமும் நம் வழியினரும் உலகிற் சிறப்பாக வாழ்தல் இயலும் என்பதனையும் சிவநெறியாகிய இச்சமயம் ஞாலத்தார் அனைவரும் நலம் பெறுதல் வேண்டும் எனும் சீலமுடைய செம்மை நெறி என்பதனையும் நம்மவர்க்கு நினைவு படுத்தும் முறையிலேயே இச்சமயப் பேரவை இங்கு நிகழ்கின்றது.

எந்நாட்டவர்க்கும் இறைவனாகிய முழுமுதற் கடவுளைத் தென்னாடுடைய சிவபெருமானாகச் செந்தமிழ் மக்கள் நெடுங் காலமாகப் பரவிப் போற்றும் வரலாற்றுண்மையையும் இந்நாட்டில் பன்னூறாண்டுகளுக்கு முன்தோன்றி நிலை பெற்று வளரும் தமிழ் மக்களின் தத்துவக்கொள்கையாகிய சைவ சித்தாந்தச் செந்நெறியின் சிறப்பினையும் குமரி முதல் இமயம் வரையிலும் கடல் கடந்த வெளிநாடுகளிலும் பரவியுள்ள சிவவழிபாட்டின் தொன்மையினையும் இந்நாட்டில் தோன்றி வளர்ந்த எல்லாச் சமயங்களையும் தனக்குள் அடக்கிச் சமயங் கடந்த சமரச நன்னிலையாகிய ஒருமைப் பாட்டினைத் தன்னகத்தே கொண்டு திகழும் சைவத்தின் சமயப்

பொது நோக்கினையும் கற்றுத் துறைபோகிய சான்றோர் பலர் சொற்பொழிவுகள் வாயிலாகவும் ஆராய்ச்சி நூல்கள் வாயிலாகவும் வெளியிட்டு வந்துள்ளார்கள். பிற சமய அன்பர்கள் தம் சமய வுண்மைகளைத் தாம் பேணிப் போற்றுவதுடன் சமயம் பரப்பும் பணியிற் பெரிதும் ஊக்கமுடையவராய்த் தம் சமயத்தினரல்லாத பிறரையும் தம் சயமத்தினை மேற்கொள்ளச் செய்து பொருள் வளத்தாலும் மக்கள் தொகைப்பெருக்கத்தாலும் தம் சமயத்தை வளர்த்து வருதலைக் கண்ணாரக் கண்டு வருகின்றோம். சைவர் களாகிய நாம் சிவனை வழிபடுவோர் அனைவரும் ஓரினத்தவரே என்னும் சமுதாயக் கட்டுக்கோப்பினை இழந்தமையால் நம் சமயத் திருக்கோயில்களைச் சிதைவு நீக்கிப் பேணிப் போற்றுதற்கும் சமய வுடைமைகளைப் பாதுகாத்து அவற்றை நமது சமய வளர்ச்சிக்குப் பயன்படுத்துதற்கும் இயலாத நிலையில் அரசியல் வாழ்க்கையில் வலியிழந்துள்ளோம் என்பதனை இங்கு எடுத்துரைத்தல் மிகையாகும். பிற சமயத்தினரை நமது சமயத்திற் சேர்க்கும் அளவுக்கு இல்லாவிட்டாலும் நம் சமயத்தினரை மற்றவர் தம் சமயத்தில் ஈர்த்து நமது சமய நெறி முறைகளையும் நம் நாட்டின் அரசியல் சமுதாயக் கட்டுக்கோப்பினையும் குலைக்காத அளவுக்கேனும் நம் சமய மக்களிடையே சைவ சமய வுண்மைகளை எடுத்துரைத்து அவர்தம் உள்ளத்தில் தெய்வக் கொள்கையை நிலைபெறச் செய்து எக் காலத்தும் எந்நிலையிலும் மனங் கலங்காத் திண்மை நிலையினராகச் சிவ நெறியை வளர்த்தல் வேண்டும்.

மக்களது வாழ்க்கை வளம் பெற்றுயர வேண்டுமானால் அவர்கள் தொன்று தொட்டு வாழும் தாய் நாட்டிலும் அவர்கள் பேசும் தாய் மொழியிலும் அவர்தம் முன்னோர் வழிமுறை வழிமுறையாக மேற்கொண்டொழுகும் தெய்வ வழிபாட்டு முறையிலும் அயராத பற்றும் நிலையான உறுதியும் உடையராதல் வேண்டும். மேலே குறித்த நாட்டுப்பற்று மொழிப்பற்று சமயப் பற்று என்னும் இம்மூன்றுமே வாழ்க்கைக்கு ஒவ்வாத ஏனைய தன்னலப் பற்றுக்களை நீக்கி நாட்டின் அரசியல் சமுதாய வளர்ச்சிக்கும் மக்கட் குலத்தாரின் ஒருமைப் பாட்டுணர்வுக்கும் இன்றியமையாத ஆக்கங்களை விளைக்கும் சார்பு நிலைகளாகும். உலகிற் பல்வேறு நாட்டு மக்களின் வரலாறுகளைக் கூர்ந்து ஆராய்வார்க்கு இவ்வுண்மை இனிது புலனாகும்.

வாழ்க்கைக்கு இன்றியமையாதனவாக முன்னே கூறிய மூவகைச் சார்பு நிலைகளுள் நிலச் சார்பும் மொழிச் சார்பும் ஆகிய இரண்டும்

நாம் எடுத்துள்ள பிறவியளவில் சுருங்கக் கூறின் நம் உடம்பளவில் பயன் தந்து பின் நம்மை விட்டு நீங்காமல் நம் உயிர்க்குச் சார்பாய் நாம் எடுக்கும் பிறப்புத் தோறும் உடனிருந்து பிறவாப் பெருநிலையாகிய வீடுபேற்றினைத் தந்து உதவுவது. இது பற்றியே தெய்வப் புலவர் திருவள்ளுவர் மெய்யுணர்வின் பயனாகிய தெய்வக் கொள்கையை மக்களுயிர்க்கு நிலையுடைய சார்பாக அறிவுறுத்தி யுள்ளார்.

*''சார்புணர்ந்து சார்புகெட வொழுகின் மற்றழித்துச்*
*சார்தரா சார்தரு நோய்'' (359)*

என்பது தெய்வப் புலவர் வாய்மொழியாகும்.

''ஒருவன் எல்லாப் பொருட்குஞ் சார்பாய் விளங்கும் செம்பொருளாகிய இறைவனை யுணர்ந்து யான் எனது என்னும் இரு வகைப் பற்றும் அற்றொழிய அம்முழுமுதற் கடவுளை வழிபட்டு ஒழுகுவானாயின் அவனை முன் சாரக்கடவனவாய் நின்ற வினைப் பயனாகிய துன்பங்கள் அவனுடைய உணர்வொழுக்கங்களை யழித்து அவனைச் சாரமாட்டா'' என்பது இதன் பொருளாகும். உயிர்களுக்கு எக்காலத்தும் நீங்காச் சார்பாக உடனிருந்து அவ்வுயிர்களுக்கு வினையால் வருந் தளர்ச்சி நீக்கி அருள் புரிவோன் எப்பொருட்குஞ் சார்பாயுள்ள இறைவனே என்னும் மெய்ம்மையினை இத்திருக்குறள் இனிது புலப்படுத்தல் காணலாம்.

மக்களிற் பலர் உலகிற் காணப்படுவனவாய் ஒரு நிலையில் நில்லாத புறப்பொருள்களை மட்டும் தம் வாழ்க்கைக்குச் சார்பாம் எனப் பற்றிக் கொண்டு, உயிர்க்குயிராய் உள்நின்றுணர்த்தும் அகப்பொருட் சார்பாகிய பரம்பொருளை நினையாமையால் மெய்யுணர்வாகிய தெளிவினைப் பெறாது யான் எனது என்னுஞ் செருக்கில் அகப்பட்டு மக்கட் பிறவியின் மாண்பினைப் பெறாது மருளென்னும் மாணாப் பிறப்பினராய்த் தமக்கும் பிறர்க்கும் பல்வகைத் துன்பங்களைப் பெருக்கி அடங்காமையாகிய ஆரிருளில் மூழ்கி அல்லலுழக்கின்றார்கள்.

இவ்வகைப் பாசப் பிணிப்பினின்றும் விடுபட்டு மக்கட் குலத்தார் நல்லுணர்வுடையராய் உய்திபெற வேண்டுமானால் வாழ்க்கையில் ஒரு நிலையில் நில்லாத உலகப் பொருள்களையே நிலையுடையன வாக நம்பும் புல்லறிவாண்மையினை ஒழித்து உலகுயிர்களுடன் பிரிவின்றிக் கலந்து நின்று எல்லாவுலகங்களையும் இயக்கியருளும் முழுமுதற் பொருளாகிய தெய்வம் ஒன்று உண்டு என்ற

தெளிவினைப் பெற்று அதன் அருள்வழியடங்கி எவ்வுயிரும் தம்முயிர்போல் எண்ணி வாழும் அன்பின் வழிப்பட்ட அமைதியான வாழ்க்கையினை மேற்கொள்ளுதல் வேண்டும். இறைவன் ஒருவன் உளன் என்னுந் தெளிவுடைய சிந்தையராய் எவ்வுயிருந் தம்முயிர்போல் எண்ணிப் பிறர்படுந் துயரத்திற்கு இரங்கித் தம்மால் இயலுமளவு துயர்நீக்கித் துணை நின்றுதவும் தொழிலினராய் எல்லார்க்கும் நல்லனவே புரிந்து வாழும் நல்லொழுக்க முடையவர் களே உண்மையாகத் தெய்வக் கொள்கையுடையோர் எனச் சிறப்பித்துப் போற்றத் தக்கவராவர்.

*"எவ்வுயிரும் தம்முயிர்போல் எண்ணி யிரங்கவும்நின்*
*தெய்வ அருட்கருணை செய்யாய் பராபரமே"*

என வரும் தாயுமானவர் வாய்மொழி எல்லோரும் இன்புற்று வாழ இறைவனைப் போற்றும் தெய்வக் கொள்கையாளராகிய சைவ சமயச் சான்றோர்களின் நல்லியல்பினை விளக்கும் அருளநுபவ மெய்ம்மொழியாகும்.

நூலுணர்வினாலும் உயிரறிவினாலும் உணரப்படாத நுண்ணி யோனாகிய இறைவன் தன்னியல்பாகிய பெருங் கருணையினாலே உயிர்களை உய்வித்தல் வேண்டி எளிவந்து தன் உண்மைத் தன்மையினை உணர்த்தி அருள்புரிகின்றான் என்பது சைவ சமய அருளாசிரியர்கள் தமது வாழ்க்கையில் வைத்து உணர்த்திய அநுபவ வுண்மையாகும். உலக மாந்தர் அனைவரும் உணர்ந்து பயன்பெறுதற் குரிய இப்பேருண்மையினை உலகம் உணரச் செய்தல் வேண்டும் என்னும் இறைவன் திருவருளின் விளைவே திருஞானசம்பந்தப் பிள்ளையாரின் திருவவதாரமாகும்.

வேதநெறி தழைத்தோங்க மிகு சைவத்துறை விளங்கத் திருஅவதாரஞ் செய்தருளியவர் திருஞானசம்பந்தர். உலகியல் ஒழுகலாறுகளை விரித்துரைக்கும் நால் வேதங்களில் விதிக்கப் பெற்றுள்ள நியமங்களை மேற்கொண்டு வேள்விகள் பல செய்தொழுகுதலாகிய வேத நெறியை வைதிகம் எனவும், வேதத்தின் முடிபுகளாகிய உபநிடதங்களையும் கடவுள் வழிபாட்டிற்கு இன்றியமையாத ஆகமங்களையும் நன்குணர்ந்து சிவபரம் பொருளை வழிபட்டு வாழும் சிவநெறியினைச் சைவம் எனவும் வழங்குவர் சான்றோர். இந்நிலவுலகில் வாழ்வார்க்குரிய பொது நெறியாகிய வைதிகமும் சிறப்புடைய தெய்வ வழிபாட்டு நெறியாகிய 'மாதவம்' எனப்படும் சைவம் முதலிய சமயங்களும் உலக மக்கள் உய்ய வேண்டி இறைவனால் வகுத்தருளிச் செய்யப்பெற்றன என்பது,

*"மண்ணின் மறையோர் மருவு வைதிகமும்*
*மாதவமும் மற்று முலகத்*
*தெண்ணில் பொருளாயவை படைத்த*
*இமையோர்கள் பெருமான்'* (3-80-6)

எனவரும் ஆளுடைய பிள்ளையார் வாய்மொழியால் இனிது புலனாம். உலகியல் ஒழுகலாறு விரித்துரைப்பன வேதங்கள். எல்லாம் வல்ல இறைவனை உணர்ந்து இன்புறுதற்கு இன்றியமையாத நெறி முறைகளாகிய சரியை கிரியை யோகம் ஞானம் என்னும் நால்வகை நன்னெறிகளையும் சிறந்தெடுத்து மொழிவன சிவாகமங்கள். பொதுவும் சிறப்புமாகிய இவ்விருவகை மெய்ந் நூல்களையும் இறைவனூல் எனப் போற்றுவர் பெரியோர்.

*"வேதமோ டாகமம் மெய்யாம் இறைவனூல்*
*ஓதும் பொதுவுஞ் சிறப்பு மென்றுள்ளன"*

எனத் திருமூல நாயனாரும்,

*"உலகியல் வேதநூல் ஒழுக்கமென்பதும்*
*நிலவு மெய்ந்நெறி சிவநெறிய தென்பதும்"*

எனச் சேக்கிழாரடிகளும் கூறுவன இங்கு உளங்கொளத் தக்கனவாகும்.

பெரிதும் ஆராய்தற்குரியதாய், நீண்ட சடையினையுடைய முழுமுதல்வனாகிய சிவபெருமானது வாக்கை விட்டு நீங்காததாய், அறம் ஒன்றையே மேவிய நான்கு கூறுபாட்டையுடையதாய், ஆறங்கங்களாலும் உணரத்தக்க ஒப்பற்ற பழைய நூல் வேதமாகும். வேதம் ஒருவராலும் செய்யப்படாத தொன்னூல் என்பாரும் உளர். உலக மக்கள் வினைத் தொடர்பு நீங்கி உய்தி பெறுதல் வேண்டும் என்னும் பேரருளால் விருப்பு வெறுப்பற்ற முனிவர் முதலியோர் வாயிலாக இறைவனால் அருளிச் செய்யப் பெற்றவை வேதம், ஆறங்கம் முதலிய மெய்ந்நூல்களாகும். இக்கருத்தினை,

*"விழையாருள்ளம் நன்கெழு நாவின்*
*வினைகெட வேதம் ஆறங்கம்*
*பிழையா வண்ணம் பண்ணிய வாற்றால்*
*பெரியோர் ஏத்தும் பெருமான்"* (1-42-7)

எனவரும் திருப்பாடலால் உய்த்துணரலாம். வினையின் நீங்கி விளங்கிய அறிவின் முனைவனாகிய இறைவனால் அருளிச் செய்யப் பெற்ற நூல் வேதம் என்னும் கருத்தினாலேயே சங்க காலத் தமிழ் முன்னோர் வேதத்தினைப் பாராட்டிப் போற்றியுள்ளார்கள்.

இனி, வடநாட்டில் கடவுட் கொள்கைக்கு முதலிடந் தராது வேதத்தில் விதிக்கப்பெற்றுள்ள யாகம் முதலிய சடங்குகளுக்கே முதன்மை தந்தமையால் எங்கும் மிகுதியாகப் பரவிய உயிர்ப்பலி வேள்விகளைக் கண்டித்து அருளற நெறியொன்றையே வற்புறுத்தும் நோக்கத்துடன் வைதிக நெறிக்கு மாறாகப் புத்தம், சமணம் ஆகிய சமயங்கள் தோன்றின. அவற்றை விரைந்து மேற்கொண்ட வடநாட்டவரிற் சிலர் தம் சமயத்தை எங்கும் பரப்ப வேண்டும் என்னும் பேராவாவினால் உந்தப்பட்டுத் தமிழ் நாட்டிற் பலவூர்களிலுந் தங்கித் தம் சமயத்தைப் பரப்பும் பணியில் ஈடுபட்டிருந்தார்கள். கி.பி. இரண்டாம் நூற்றாண்டிற்கு முன்பே சமணரும் புத்தரும் தமிழ் நாட்டுப் பேரூர்களிலும் சிற்றூர்களிலும் தங்கித் தமிழ் மக்களின் ஆதரவு பெற்றுத் தம் சமயத்தைப் பரப்பும் உரிமை பெற்று விளங்கிய செய்தி சங்கச் செய்யுட்களாலும் சிலப்பதிகாரம் முதலிய தொன்னூல்களாலும் தமிழ் நாட்டில் ஆங்காங்கே பொறிக்கப் பெற்றுள்ள பிறமொழிக் கல்வெட்டுக்களாலும் நன்கு விளங்கும்.

சமணர் புத்தர்களாகிய புறச் சமயத்தினர் தருக்கநூற் புலமையால் வாதிட்டுத் தம்சமயத்தைப் பரப்பும் பணியினைத் தமிழ்நாட்டில் மேற்கொண்ட பொழுது அன்னோரது தருக்க வாதத்தின் மிகுதியைக் கெடுத்து அவர்களாற் கூறப்படும் மெய் போன்ற உரைகளின் பொய்மையை அறிந்து அவர்தம் உரையினை மெய்யென்று கருதாமல் உண்மைப் பொருளை மக்கள் உளங்கொள்ளும்படி கடவுளுண்மையை வற்புறுத்தி வேதத்திற் கூறப்படும் வேள்விகளைக் குறைவின்றிச் செய்து முடித்த அருமறையந்தணர் பலர் சங்க காலத்தில் தமிழ் நாட்டில் வாழ்ந்தார்கள். அவர்கள் மரபில் தோன்றி வாழ்ந்தவனே சோணாட்டுப் பூஞ்சாற்றூர்ப் பார்ப்பான் கௌணியன் விண்ணந்தாயன் என்பான். அம்மறையோன் சிவபெருமான் அருளிச் செய்த வேதநெறியில் ஒழுகிச் சிறந்த வேள்விகள் பலவற்றைச் செய்து நிறைவேற்றிய புலமையின் வெற்றியினை ஆவூர் மூலங்கிழார் என்னும் புலவர் புறநானூறு 166ஆம் பாடலில் 'பார்ப்பன வாகை' என்னுந் துறையமைய வியந்து பாராட்டியுள்ளார்.

கடைச் சங்க காலத்தில் தமிழ் மக்கள் ஆதரவுடன் தமிழகத்தில் வாழ்ந்த புத்தர் சமணர்கள் இங்குள்ள பல சமயத்தினரோடும் அன்பினாற் கலந்து பழகினார்கள் என்பது சங்கத் தொகை நூல்களாலும் சிலப்பதிகாரத்தாலும் இனிது புலனாம். களப்பிரர் என்னும் அயலார் கி.பி. மூன்றாம் நூற்றாண்டில் பாண்டி நாட்டைக் கைப்பற்றி யாண்ட நிலையில் அவ்வயலவர் ஆதரவால் சமணர் பலர்

பாண்டி நாட்டிற் குடிபுகுந்தனர். கி.பி. ஏழாம் நூற்றாண்டில் காஞ்சியைத் தலைநகராகக் கொண்டு ஆண்ட மகேந்திர பல்லவனது சார்பினால் தொண்டை நாட்டிலும் சோழ நாட்டிலும் சமண சமயம் மேலோங்கியது. கடைச் சங்க காலம் வரை பல வேறு சமயங்களிடையே பொது நோக்கமே நிலை பெற்று விளங்கிய தமிழ் நாட்டில் தமிழ் மக்களோடு தொடர்பில்லாத அயலவர் ஆட்சியால் சமணரும் புத்தரும் தத்தம் சமயக் கொள்கைகளைப் பரப்புமளவில் நில்லாது, இந்நாட்டின் தொல்பெருஞ் சமயமாகிய சிவநெறியையும் மக்களால் மதிக்கப் பெறும் நிலையில் இந்நாட்டில் முன்னமே வேரூன்றியிருந்த வேத நெறியையும் இகழ்ந்துரைத்தலையே தமது தொழிலாகக் கொண்டு திரிந்தமையால், 'ஒன்றே குலமும் ஒருவனே தேவனும்' என நெடுங்காலமாகத் தமிழ் மக்கள் சிந்தையிற் குடிகொண்டிருந்த கடவுட்கொள்கை சிதைவுறும் நிலையேற்பட்டது. தெய்வ வழிபாட்டில் மக்கள் கொண்டிருந்த உறுதியான நம்பிக்கை நெகிழ்ந்து சிதைந்தமையால் தமிழ மக்களிற் பலர் உள்ளத் திண்மை யிழந்து உரிமையுணர்விற்குன்றி அயலார்க்கு அஞ்சி யடிமைப்படும் அவல நிலைக்கு உள்ளாயினர். தமிழ் மொழியும் தனது உயர் நிலையை இழந்தது. புறச் சமயத்தார் பயன்படுத்திய ஆரிய மொழி யும் அதன் திரிபாகிய பாகத மொழியும் தமிழ் நாட்டில் அரசியலிலும் சமயத் துறைகளிலும் சிறப்பிடம் பெறும் நிலை ஏற்பட்டது. தமிழ் மக்களின் சமுதாய வாழ்வும் சிதைவுறுவதாயிற்று.

இங்ஙனம் தமிழ்நாடு அயலவர் ஆட்சியுட்பட்டு அரசியல் முறையிலும் வழிபாட்டுத் துறையிலும் மொழி வளர்ச்சியிலும் தளர்ச்சியுற்ற நிலையில் அத்தளர்ச்சி நீக்கித் தமிழ்நாடு வளம் பெறத் திருவவதாரம் செய்தவர் திருஞானசம்பந்தர் என்பதனை நம்பியாண்டார் நம்பிகளும் சேக்கிழார் நாயனாரும் தெளிவாக விளக்கியுள்ளார்கள். ஆளுடைய பிள்ளையார் திருவவதாரஞ் செய்தமையால் தமிழ்மொழி தெய்வத் தமிழ் எனப் போற்றப்பெறும் சிறப்புடையதாயிற்று. உமையம்மையார் அளித்த ஞானப்பாலைப் பருகித் திருநெறிய தமிழால் சிவபரம் பொருளின் இயல்பினைப் பரவிப் போற்றிய திருஞான சம்பந்தர் தாம் பெற்ற சிவஞானம் தமிழ்மொழி வாயிலாக வெளிப்பட்டுப் பயன்தருந் தன்மையது என்பதனைத்தமிழ் ஞானசம்பந்தன், நற்றமிழ் ஞானசம்பந்தன் எனத் தாம் பெற்ற மெய்யுணர்வினைத் தமிழுடன் தொடர்புபடுத்திக் கூறுமாற்றால் உலகத்தார்க்கு இனிது புலப்படுத்தியுள்ளார். இயலிசைத் தமிழால் பிள்ளையார் செய்தருளிய சிவஞானத் தொண்டினைச்

செந்தமிழ் பரப்புந் திருத் தொண்டாகவே கொள்ளுதல் வேண்டும் என்பது நம்பியாரூரர் முதலிய அருளாசிரியர்களின் கருத்தாகும்.

*''நாளும் இன்னிசையால் தமிழ் பரப்பும்*
*ஞானசம் பந்தனுக்குல கவர்முன்*
*தாளம்ஈந்து அவன்பாடலுக் கிரங்கும்*
*தன்மையாளனை என்மனக் கருத்தை''*

எனவரும் சுந்தரர் தேவாரம் இக்கருத்தினை உறுதிப்படுத்துவதாகும்.

இனி, ஆளுடைய பிள்ளையார் மதுரையில் சமணர்களுடன் நிகழ்த்திய வாது, சமய வாதமாக மட்டும் அமையாமல் தமிழுக்கும் அயல்மொழிக்கும் உள்ள ஆற்றலை விளக்கும் மொழி வாதமாகவும் அமைந்து தமிழுக்கு வெற்றி நல்கிய திறத்தினை 'அறிவாகி யின்பஞ்செய் தமிழ் வாதில் வென்று' என வருந்தொடரில் நம்பியாண்டார் நம்பிகள் தெளிவாகக் குறித்துள்ளார்.

எல்லாம் வல்ல இறைவனை இயலிசைத் தமிழ்ப் பாடல்களால் உளமுருகிப் போற்று முகத்தால் அப்பெருமானை அடைந்து இன்புறுதற்குரிய வழிபாட்டு நெறியினைத் தமிழ் மொழி வாயிலாக அமைத்தருளியவர் ஞானசம்பந்தப் பிள்ளையாராவர். பிள்ளை அமைத்தருளிய நெறியினைப் 'பதிகப் பெருவழி' எனவும் அதனை அமைத்தருளிய பிள்ளையாரை 'ஆறதேறுஞ் சடையான் அருள்மேவ அவனியர்க்கு வீறதேறுந் தமிழால் வழிகண்டவன்' எனவும் நம்பியாண்டார் நம்பி பாராட்டிப் போற்றுகின்றார். இங்ஙனம் திருநெறிய தமிழால் தமிழ் மக்களுக்கு மெய்ப்பொருளைக் காட்டுந் திறத்தால் தமிழர்க்கு ஞானக் கண்ணாகவும் சாதி சமய வேற்றுமையின்றி யாவரும் அன்பினாற் கலந்து இறைவனை வழிபட்டு இன்புறுதற்குரிய உயர்ந்த உண்மைகளை உலகத்தார்க்கு அறிவுறுத்திய அருட் பண்பினால் விரிந்த உள்ளத்தினராகவும் உலகம் போற்றும் உயர்ந்த குணநலங்களைப் பெற்றவர் ஆளுடைய பிள்ளையாராதலின் அப்பெருந்தகையாரை 'தீந்தமிழோர் கண்ணென வோங்குங் கவுணியர் தீபன்' எனவும், 'குறுமன முன்கலவாத் தமிழாகரன்' எனவும் 'உலகம் பரசுங் குணந்திகழ் ஞான சம்பந்தன்' எனவும் நம்பியாண்டார் நம்பிகள் உளமுருகிப் போற்றுகின்றார்.

கொன்றை மலர் மாலையினை யணிந்த சிவபெருமான் திருவடிகளை யன்றிப் பிறர் எவரையும் பேணாத தெளிவுடைய சிந்தையினையுடையவர் திருஞானசம்பந்தர் என்பதனை,

*''ஒருநெறிய மனம் வைத்துணர் ஞானசம்பந்தன்'*

எனவரும் அவரது வாய்மொழியாலும்

*''வம்பறா வரிவண்டு மணநாற மலரும்*
*மதுமலர்நற் கொன்றையான் அடியலாற் பேணா*
*எம்பிரான் சம்பந்தன் அடியார்க்கும் அடியேன்''*

என வரும் ஆரூரர் வாய்மொழியாலும் நன்குணரலாம்.

செந்தமிழ் நாடு செய்த தவப் பயனாகத் தோன்றிய திரு ஞானசம்பந்தப் பிள்ளையார் திருவவதாரஞ் செய்தருளிய பெருமை வாய்ந்த சீகாழிப் பதியினைத் தம் பாதங்களால் மிதித்தல் கூடாது எனக் கருதிய சுந்தரமூர்த்தி சுவாமிகள் இந்நகரத்தின் புறவெல்லையை வணங்கி வலஞ் செய்த பொழுது காழிப்பெருமான் நம்பியாரூரர்க்கு எதிரே அம்மையப்பராக விடைமீது தோன்றிக் காட்சிக் கொடுத்தருளினார் என்பதும் அத்திருக்கோலத்தைக் கண்டு மகிழ்ந்த சுந்தரர் 'என்னை ஆட்கொண்டருளிய பெருமானைக் கழுமல வளநகரிற் கண்டுகொண்டேன்' என்னும் தெளிவுநிலை புலப்படச் 'சாதலும் பிறத்தலும்' என்னும் முதற்குறிப்புடைய தக்கேசிப் பதிகத்தினைப் பாடிப் போற்றினார் என்பதும் திருத்தொண்டர் புராணம் கூறும் சிறந்த வரலாற்று நிகழ்ச்சியாய்த் திருஞானசம்பந்தப் பிள்ளையாரின் திருவவதாரச் சிறப்பினை நன்கு புலப்படுத்தல் காணலாம். காழியின் எல்லையிற் கடவுளைக் கண்டு வணங்கிய சுந்தரர் பாடிய இத்திருப்பதிகத்தின் திருக்கடைக் காப்புப் பாடலில்,

*''செழுமலர்க் கொன்றையும் கூவிள மலரும்*
*விரவிய சடைமுடி யடிகளை நினைந்திட்டு*
*அழுமலர்க் கண்ணிணை யடியவர்க் கல்லால்*
*அறிவரிது அவன்திரு வடியிணை யிரண்டும்''*

என ஞானசம்பந்தப் பிள்ளையார் பிரமதீர்த்தக் கரையில் நின்று தம் மேலைச் சார்புணர்ந்து கண்களில் நீர்மல்க 'அம்மே அப்பா' என இறைவனை நினைந்து சிவஞானம் பெற்று யாவராலும் காண்டற்கரிய கடவுளைக் கண்ணாரக் கண்டு மகிழ்ந்த அற்புத நிகழ்ச்சியினை நன்கு புலப்படுத்துகின்றார்.

ஆளுடைய பிள்ளையார் திருவாய் மலர்ந்தருளிய திருப்பதிகங் களில் முதலேழு திருப்பாடல்களில் பாடப்பெற்ற திருத்தலங்களின் இயற்கை வனப்பும் அங்கே கோயில் கொண்டெழுந்தருளிய பெருமானது தெய்வ வனப்பும் அம்முதல்வன் வானோர்க்

கரியவனாயினும் தன்னடியார்க்கு எளிவந்தருளும் பெருங்கருணைத் திறமும் அம்முதல்வனை வழிபட்டு மகிழும் அடியார்களது திருத்தொண்டின் திறமும் விரித்துரைக்கப் பெற்றுள்ளன. பிள்ளையார் இறைவனுடைய திருவருட்டிறங்களுள் மூன்றினைத் தெரிந்து கொண்டு ஒவ்வொரு பதிகத்திலும் 8,9,10ஆம் திருப்பாடல்களிற் சிறப்பாக எடுத்துரைக்கின்றார். இறைவன் வீற்றிருந்தருளும் திருக்கயிலாயத்தை ஆராயாமல் எடுக்க முயன்ற இராவணன் அம்மலைக் கீழ் அகப்பட்டு வருந்தித் தன் தவறுணர்ந்து இன்னிசைப் பாடலால் இறைவனை உளமுருகிப் போற்றிய நிலையில் இறைவன் அவனது பிழையைப் பொறுத்து அருள்புரிந்த பெருங்கருணைத் திறத்தை விளக்குவது எட்டாந் திருப்பாடல். மண்ணுலகில் வாழ்வார்கள் அறியாமையாற் பிழை செய்தாலும் பின் தமது தவறுணர்ந்து இறைவனை நெஞ்ச நெக்குருகி வழிபடுவாராயின் இறைவனது திருவருள் அவர்களை உய்விக்கும் என்னும் உண்மையை விளக்குவது இத்திருப் பாடலாகும்.

இறைவனை அன்பினால் வழிபாடு செய்வார்களுக்கே இறைவனது திருவருள் எளிதிற் கிடைக்கும் என்பதனை யுணர்ந்து இறைவனைத் தொழாமல் தாங்களே முதல்வர் எனக் கருதும் வழுவான மனத்தாலே மயங்கிய திருமாலும் பிரமனும் பன்றியும் அன்னமுமாகி இறைவனுடைய அடியும் முடியும் தேடி அறியாது அயர்வுற்றுப் பின்பு திருவைந்தெழுத்தோதி உய்ந்த செய்தியினை விரித்துரைப்பது ஒன்பதாந் திருப்பாட்டு. இறைவன் பசு ஞானத்தாலும் பாச ஞானத்தாலும் உணரப்படாதவனாதலின் அம்முதல்வனை அவனருளே கண்ணாகக் கொண்டு வழிபட்டுய்தல் வேண்டும் என வற்புறுத்துவது இத்திருப்பாடலாகும். சிவ பெருமானது திருவருள் நெறியை யுணர்ந்துய்யும் மெய்யுணர்வின்றி வேதநெறி சைவ நெறிகளைப் பழித்துரைக்கும் புறச் சமயத்தாராகிய சமணர் புத்தர் ஆகியோர் உலகினை இயக்கியருளும் தெய்வம் உண்டு என்னுந் தெளிவில்லாதவராதலின் அன்னோர் கொண்ட சமயக் கொள்கைகள் அவர்க்கும் பிறர்க்கும் பயன்படாது பழிவிளைக்குங் குற்றமுமடையனவே என்னும் உண்மையினை அறிவுறுத்துவது பத்தாந் திருப்பாடலாகும்.

இவ்வாறு ஒவ்வொரு திருப்பதிகத்தினையும் பத்துப் பத்துப் பாடல்களால் நிறைவித்த ஆளுடைய பிள்ளையார் அத்திருப்பதிகங்களைப் பத்தியுடன் பயின்று பாடும் உலக மக்கள் அடையும் நற்பயன்களை விளக்கும் முறையில் பதிகத்தின் பயனுரைக்கும்

இறுதித் திருப்பாடலாகப் பதினோராந் திருப்பாடலை அருளிச் செய்துள்ளார். பதிகங்களின் இறுதியிலுள்ள திருப்பாடல்கள் அவ்வப்பதிகங்களைப் பாடுவோராகிய அன்பர்களுக்குச் சிறிதும் இடர் நேராமற் காக்கும் அருள் நோக்குடன் திருஞான சம்பந்தரால் அருளிச் செய்யப்பெற்ற செழும் பாடல்களாதலின் திருக்கடைக் காப்பு என வழங்கப் பெறுவனவாயின. இங்ஙனம் பிள்ளையார் அருளிய திருப்பதிகங்கள் யாவும் இறைவன் உளன் என்பதற்குரிய பிரமாணங்களையும் இறைவனுக்குரிய இலக்கணங்களையும் இறைவனை வழிபடுதற்குரிய சாதனங்களையும் வழிபாடு செய்தலால் உளவாம் நற்பயன்களையும் அறிவுறுத்தும் முறையில் அமைந்துள்ளமை காணலாம்.

நாளும் இன்னிசையால் தமிழ் பரப்பும் ஞானசம்பந்தப் பிள்ளை யார் பண்பொருந்தப் பாடிய இன்னிசை திருப்பதிகங்களிலே விருந்தாய சொன்மாலைகளாகிய மொழிமாற்று, மாலை மாற்று, வழிமொழி, மடக்கு, இயமகம், ஏகபாதம், எழுகூற்றிருக்கை, ஈரடி, ஈரடி வைப்பு, நாலடி மேல்வைப்பு, முடுகியலாகிய திருவிராகம், சக்கரமாற்று, கோமுத்திரிகம் முதலியவற்றை மூல இயக்கங்களாக அருளிச் செய்துள்ளார்.

ஞானத்தின் திருவுருவாய் ஞாலமுய்யத் தோன்றிய ஆளுடைய பிள்ளையார் அருளிய திருப்பதிகங்கள் சைவ சித்தாந்த வுண்மைகளைத் தெளிய வுணர்த்தும் இலக்கியங்களாகத் திகழ் கின்றன.

அவன், அவள், அது என்று பகுத்துரைக்கப்படும் உலகத் தொகுதி தோன்றுதல் நிலைபெறுதல் ஒடுங்குதல் என்னும் முத்தொழி லுடைமையால் அஃது ஒரு முதல்வனால் தோற்றுவிக்கப் பெற்ற உள்பொருளே எனவும், உள்பொருளாகிய உலகம் உயிர்களின் மலத் தீர்வு காரணமாகத் தான் ஒடுங்குதற்குக் காரணமான கடவுளாலேயே மீளவும் தோற்றுவிக்கப் பெற்று நிலைபெறுவது எனவும், உலகிற்கு அந்தத்தைச் செய்யும் கடவுளே மீளவும் உலகினைத் தோற்றுவிக்கும் ஆதியும் ஆவான் எனவும் சிவஞான போதம் கூறும். உலகிற்கு அந்தத்தைச் செய்யும் சங்கார காரணனாகிய சிவபெருமானே உலகினைத் தோற்றுவிக்கும் ஆதியாகவும் திகழ்கின்றான் என்னும் உண்மையினை.

*''அந்தமும் ஆதியும் ஆகிய அண்ணலார்''* *(1-35-1)*

எனவருந் தொடரில் தெளிவாக அருளிச் செய்துள்ளார். உலகினைத் தோற்றுதல், நிலை பெறுத்துதல், ஒடுக்குதலாகிய முத்தொழில் களையும் தன் நினைவளவாலே செய்தருளும் வினை முதல் சிவபெருமான் ஒருவனே என்பதனைப் 'புவம் வளி கனல் புனல்' எனத் தொடங்கும் திருச் சிவபுரத் திருப்பதிகத்தின் முதல் மூன்று திருப்பாடல்களில் பிள்ளையார் தெளிவாக விளக்கியுள்ளார்.

உலக முதல்வனாகிய இறைவன் யாண்டும் எல்லாப் பொருள்களோடும் நீக்கமற நின்ற கலப்பினால் உடம்பின் உயிர்போல் அவ்வுயிர்களேயாகியும் அவற்றின் தன்மை தனக்கெய்தலின்றிப் பொருட்டன்மையால் அவ்வுயிர்களின் வேறாகியும் கண்ணொளி யினுடன் உயிரறிவு உடனிருந்து காணுதற்றொழிலை நிகழ்த்தல் போன்று உயிர்க்குயிராய் உள்நின்று இயக்குதலால் அவ்வுயிர்களோடு உடனாகியும் இயைந்து தனது திருவருட் சத்தியினால் நுகர்விக்கப்பெறும் இருவினைகளால் உயிர்கள் இறத்தல் பிறத்தல்களைப் புரியும் வண்ணம் தனது திருவருளாணையிற் பிரிப்பின்றி ஒன்றாய் நின்றன என்னும் அத்துவித வுண்மையினை உணர்த்துவது சிவஞான போத இரண்டாஞ் சூத்திரமாகும். இவ்வாறு இறைவன் உலகுயிர்களோடு ஒன்றாய் வேறாய் உடனாய் நிற்கும் உண்மையினை,

*''ஈறாய்முத லொன்றாயிரு பெண்ணாண்குண மூன்றாய்*
*மாறாமறை நான்காய்வரு பூதம்மவை யைந்தாய்*
*ஆறார்சுவை யேழோசையொ டெட்டுத்திசை தானாய்*
*வேறாயுட னானானிடம் வீழிம்மிழலையே''*

எனவரும் திருப்பாடலில் ஆளுடைய பிள்ளையார் விளங்க அருளிச் செய்துள்ளமை இங்கு உணரத் தகுவதாகும்.

ஆணவம் கன்மம் மாயை என்னும் மும்மலங்களின் இயல்பினை முறையே குறிப்பிட்டு, அம்மலங்களை நீக்கி அருள் புரிவோன் இறைவன் ஒருவனே என்னும் மெய்ம்மையினைப் புலப்படுத்துவது,

*''விளையாததொர் பரிசில்வரு பசுபாச வேதனையொண்*
*தளையாயின தவிரவ்வருள் தலைவன்'' (1-12-3)*

எனவரும் ஆளுடைய பிள்ளையார் தேவாரமாகும். இதன்கண் 'விளையாததொர் பரிசில்வரு பசு (வேதனை)' என்ற தொடர், புதிதாகத் தோன்றாத நிலையில் அஃதாவது அநாதிகாலந் தொட்டே உயிர்களைத் தொடர்ந்து பற்றி உயிரறிவினை மறைத்து நிற்கும்

பசுத்துவம் எனப்படும் ஆணவமலத்தினையும், 'பாச வேதனை' என்பது இருவினைப் பாசம் எனப்படும் கன்ம மலத்தினையும், 'ஒண் தளை' என்பது உயிர்கட்குச் சிறிது அறிவு நிகழ்ச்சியை (ஓட்பத்தை) விளைவிப்பதாய் உடல் கருவி உலகு நுகர்ச்சிகளாய் உயிரைத் தளைத்துள்ள மாயையினையும் குறித்தல் காணலாம். 'ஆணவமலம் என வேறொன்றுமில்லை, மாயாகாரியமே மலம் எனப்படும்' என்பாரும் உளர். ஆணவமலம் என்பது உயிரறிவினை மறைத்து நிற்பது. அதுபோலன்றி உயிர்களின் அறிவிச்சை செயல்களை விளக்கி நிற்பது மாயை எனப்படும். மலத்திற்கும் மாயைக்கும் உள்ள வேறுபாடு விளங்க மாயையை 'ஒண்தளை' (அஃதாவது உயிரறிவுக்கு ஒண்மையைத் தரும் பிணிப்பு) எனக் குறித்தருளினார் ஆளுடைய பிள்ளையார். இந்நுட்பத்தினை

*''மலமென வேறொன்றில்லை மாயாகாரியம தென்னின்*
*இலகுயிர்க் கிச்சாஞானக் கிரியைகள் எழுப்பும்மாயை*
*விலகிடும் மலம் இவற்றை வேறுமன் றதுவேறாகி*
*உலகுடல் கரணமாகி யுதித்திடும் உணர்ந்துகொள்ளே''*

என அருணந்தி சிவாசாரியாரும், ''உயிரோடு ஒற்றித்து நின்று அறிவு இச்சை செயல்களை மறைப்பதாகிய மலத்துக்கும், வேறு அவற்றை விளக்குவதாகிய மாயைக்கும் வேற்றுமை பெரிதாகலான் மாயையே மலம் என்பார் மதம் போலி'' எனச் சிவஞான முனிவரும் விளக்கியுள்ளமை இங்கு நினைக்கத் தகுவதாகும்.

கண்ணொளியை மறைத்து நிற்கும் புறவிருளைப் போன்று உயிர்களின் அறிவினை அநாதியே மறைத்துக் கொண்டு அகவிருளாய் நிற்பது ஆணவ மலமாதலின் அதனை இருள் என்ற பெயராலும் வழங்குதல் உண்டு. 'இருள்சேர் இருவினையும் சேரா' எனவரும் திருக்குறளும் 'இருள் தரு துன்பப் படலம் மறைப்ப' எனவரும் திருநாவுக்கரசர் திருவிருத்தமும் ஆணவ மலத்தினை இருள் என்ற பெயராற் குறித்துள்ளமை காணலாம். ஒளியின் இல்லாமையே இருள் என்பார் கருத்தினை யுடன்படாது ஒளிக்கு மறுதலையாய் இருள் என்னும் பொருள் வேறு உண்டு என்பது நமது முன்னோர் களின் துணிபாகும். கண்ணிற்குப் பொருளைப் புலப்படுத்தும் ஒளியின் வேறாகக் கண்ணினது ஒளியினைத் தடைசெய்து நிற்கும் இருள் என்னும் பொருளினது உண்மைத் தன்மை வெள்ளிடையில் அலரவிழித்து நோக்கிய வழியும் மறைத்தற்றொழில் நிகழ்தல் பற்றிப் பாரிசேட அளவையான் அறியப்படும் எனச் சிவஞான முனிவர் இருளினது உண்மையினை இனிது விளக்கியுள்ளார். புறத்தே

காணப்படும் பூத இருள் உலகிலுள்ள எல்லாப் பொருளையும் சூழ்ந்து கொண்டு தான் ஒரு பொருளேயாய் மறைத்து நின்றாற்போல அகவிருளாகிய ஆணவ மலமும் எல்லாவுயிர்களையும் சூழ்ந்து கொண்டு எல்லாந்தானேயாய் மறைத்து நிற்கும் தன்மையதாகும். புறவிருள் உலகப் பொருள்களை மறைத்து நிற்பதாயினும் தன்னைப் புலப்படுத்திக் காட்டும். அகவிருளாகிய ஆணவமலமோ பிற பொருள்களை மறைத்து நிற்பதோடு இன்ன தன்மைத்தென ஒருவருமுணராதவாறு தன்னையும் மறைத்து கொண்டு உயிரறிவுடன் பிரிவின்றி நிற்குந் தனித்தன்மையுடையதாகும். இந்நுட்பத்தினை

*''ஒருபொருளுங் காட்டா திருளுருவங் காட்டும்*
*இருபொருளுங் காட்டா திது'' (22)*

எனவரும் திருவருட்பயன் இனிது விளக்குதல் காணலாம்.

இவ்வாறு தன்னால் மறைக்கப்படும் உயிரையும் அதனை மறைத்து நிற்பதாகிய தன்னையும் காட்டாத திணிந்த இருளாதல் பற்றி இவ்வாணவ மலத்தினை 'இருளாய வுள்ளத்தின் இருள்' என்றும் 'திணிந்ததோரிருள்' என்றும் திருமுறையாசிரியர்கள் ஏனைய புறவிருளின் வேறுபடுத்திக் காட்டியுள்ளார்கள். இத்தகைய அகவிருளாய ஆணவமலத்தின் உண்மையினையும் அம்மல விருளை நீக்கி உயிர்களின் உள்ளத்திலே அறிவொளி பரப்பும் ஒளிதிகழ் ஞாயிறாகத் திகழ்வோன் இறைவன் ஒருவனே என்பதனையும்,

*''இன்றெனக் கருளிஇருள் கடிந்துள்ளத்*
*தெழுகின்ற ஞாயிறே போன்று*
*நின்ற நின்தன்மை நினைப்பற நினைந்தேன்''*

எனவரும் திருவாசகச் செழும்பாடல் இனிது புலப்படுத்துவதாகும்.

ஞானத் திரளாகத் திகழும் இறைவன் தன்னை அன்பினால் வழிபடும் நல்ல அடியார்களுக்கு அகவிருளாகிய ஊனத் திரளை நீக்கி அருள்புரியும் திறத்தைக் கூர்ந்து சிந்திக்குமிடத்து அம் முதல்வனால் நீக்கப்படும் மல இருளும் தத்துவ நூலோரால் ஒரு பொருளெனவே கருதப்படும் தனித் தன்மையுடையதென்பது புலனாகும். இங்ஙனம் சைவசித்தாந்தங் கூறும் இருள்மலத் துண்மையினை வற்புறுத்தும் முறையில் அமைந்தது,

*''ஞானத்திரளாய் நின்ற பெருமான் நல்ல அடியார்மேல்*
*ஊனத்திரளை நீக்கும் அதுவும் உண்மைப் பொருள்போலும்''*
*(1-69-3)*

எனவரும் ஆளுடைய பிள்ளையார் வாய்மொழியாகும். இதன் கண் ஊனத்திரள் என்றது. பல்வேறு ஆற்றலுடையதாய் அனாதியே உயிரைப் பற்றி நின்று உயிர் அறிவினைத் தடை செய்து நிற்கும் இருள் மலத்தினை, இந்நுட்பம்

*''ஊனத்திருள் நீங்கிட வேண்டில்*
*ஞானப் பொருள்கொண் டடிபேணும்''*

எனவரும் பிள்ளையார் அருளுரையாலும்,

*''இருள்தரு துன்பப்படல மறைப்பமெய்ஞ் ஞானமென்னும்*
*பொருள்தரு கண்ணிழந் துண்பொருள் நாடிப் புகலிழந்த*
*குருடருந் தம்மைப் பரவக்கொடு நரகக்குழிநின்*
*றருள் தருகை கொடுத்தேற்றும் ஐயாறன் அடித்தலமே''*

எனவரும் திருவிருத்தத்தாலும் இனிது புலனாகும்.

இங்ஙனம் சைவ சித்தாந்த நுட்பங்கள் பலவற்றையும் உய்த் துணர்ந்து தெளிதற்குரிய சிவஞான நிதியமாக ஆளுடைய பிள்ளையார் அருளிய திருப்பதிகங்கள் அமைந்துள்ளமை உணர்ந்து மகிழத் தகுவதாகும்.

சிவனடியே சிந்திக்கும் திருப்பெருகு சிவஞானம் பெற்ற சீவன் முத்தராகிய ஆளுடைய பிள்ளையார், பத்தரது திருவேடத்தையும் சிவாலயத்தையும் சிவனெனவே தெளிந்து போற்றியவர்; தமிழ் மக்களின் பயனாகத் திருத்தொண்டின் நெறி வாழத் தோன்றித் தமக்கு அயலார் செய்த இடையூறுகளை யெல்லாந் திருத்தொண்டின் உறைப்பாலே வென்ற திருநாவுக்கரசருடன் அன்பினாற் கலந்த பெருங்கேண்மையினர்; தெய்வ இசையில் வல்ல திருநீலகண்ட யாழ்ப்பாணரும் அவர்தம் மனைவியார் மதங்க சூளாமணியாரும் செம்முறைக் கேள்வியாகிய யாழிலும் கண்டத்திலும் இசைத்துப் பாடி மகிழும்படி இன்னிசைத் திருப்பதிகங்களால் இறைவனது பொருள் சேர் புகழ்த்திறங்களை அருளிச் செய்தவர்; திருநீலநக்கர், முருகனார், சிறுத்தொண்டர், குங்குலியக்கலயர், மங்கையர்க்கரசியார், நின்றசீர் நெடுமாறர், குலச்சிறையார் முதலாகத் தம் காலத்தில் நிலவிய அடியார்களால் தெய்வமென மதித்துப் போற்றப் பெற்றவர். தமிழ்நாடெங்கும் யாத்திரை செய்து மூர்த்தி தலம் தீர்த்தம் என்னும்

மூன்று திறத்தாலும் இறைவனை வணங்கிப் போற்றி மக்கள் உள்ளத்திலே இறைவனது மெய்ப்புகழ் நன்கு பதியும் வண்ணம் பதினாறாயிரம் பாடல்களை அருளிச் செய்தவர்; 'எனதுரை தனதுரையாக' என்னும்படி நனவிலும் கனவிலும் ஒளி நினைவாகிய தியானத்திலும் சிவ பரம்பொருளைக் கண்டு போற்றித் தம் செயலற அம்முதல்வன் திருவருளோடு ஒட்டி வாழ்ந்து பல அற்புதங்களை நிகழ்த்தியருளியவர்; ஞானத் தமிழால் புறச்சமயத்தாரை வாதில் வென்று தென்னாடெங்கும் சிவநெறி பரப்பியவர். பண்டு திருவடி மறவாப் பான்மையோ ராகிய பிள்ளையார் திருவவதாரஞ் செய்தமையால் சைவ சமயம் உயர்ந்தது; தமிழகம் நல்வாழ்வு பெற்றது; தமிழ்மொழி தெய்வத் தமிழென்னும் சிறப்பினைப்பெற்றது. தமிழ் மக்கள் அயலவரை வென்று நாடாளும் உரிமை பெற்றனர்; தமிழ் வேந்தர்களின் ஆட்சி தமிழகத்திலும் கடல் கடந்து புறநாடுகளிலும் பரவித் தமிழ் மக்களின் அரசியல் ஆண்மையினை உலகமுணரச் செய்தது; தேவாரப் பாடல்பெற்ற திருக்கோயில்கள் மன்னர்களாலும் மற்றவர்களாலும் திருப்பணி செய்யப்பெற்றுக் கலை வளர்க்குங் கற்றளிகளாகப் புதுப்பொலிவு பெற்றன; சைவத் திருமுறைகளின் பயனாகத் திருவுந்தியார், திருக்களிற்றுப் படியார், சிவஞான போதம் முதலிய மெய்கண்ட நூல்கள் தோன்றித் தமிழ் மக்களின் தத்துவக் கொள்கையாகிய சைவ சித்தாந்தத்தின் தெளிந்த மெய்யுணர்வின் திறத்தினை நன்கு விளக்கமுறச் செய்தன. ஆளுடைய பிள்ளையார் முதலிய அருளாசிரியர்களின் திருவவதாரத்தால் நம் தமிழகம் பெற்றுள்ள சென்ற காலத்தின் பழுதிலாத் திறம் இவையாகும். இவற்றை யுறுதியாகக் கடைப்பிடித்துச் செந்தமிழும் சிவநெறியும் தமிழர் வாழ்வும் சிறந்து விளங்கச் சிவ பரம்பொருளை வழிபட்டு நமது சமய வளர்ச்சிக்கு ஆக்கமாகும் பணிகளை மனமொழி மெய்களால் ஒல்லும் வகையால் ஓவாது புரிதல் சைவர்களாகிய நமது கடமையாகும் எனப் பணிவுடன் தெரிவித்து எனது உரையை இவ்வளவில் நிறைவு செய்கின்றேன்.

கல்வி யறிவொழுக்கங்களிற் சிறந்து செல்வன் கழலேத்துஞ் சிவநெறிச் செல்வர்களாகிய பெரியோர்கள் பலர் இருக்கவும் ஒன்றிலும் பற்றாத எளியேன்மீது வைத்த பேரன்பினால் சைவ சித்தாந்த மகா சமாசத்தார் அடியேனுக்கு இத்தகைய பெருஞ் சிறப்பினை அளித்தமைக்கு எனது நன்றியையும் வணக்கத்தையும் தெரிவித்துக் கொள்கிறேன். இதுகாறும் என் சிறு சொற்களை அன்புடன் செவிமடுத்த அவையோர்க்கு அடியேனது நன்றி என்றும் உரித்தாகும்.

*கற்றறியேன் கலைஞானங் கசிந்துருகேன் ஆயிடினும்*
*மற்றறியேன் பிறதெய்வம் வாக்கியலால் வார்கழல்வந்*
*துற்றிறுமாந் திருந்தேனெம் பெருமானே அடியேற்குப்*
*பொற்றவிசு நாய்க்கிடுமா றன்றேநின் பொன்னருளே.*

திருச்சிற்றம்பலம்

# டாக்டர் வ.ஆ. தேவசேனாபதி

**(69ஆம் ஆண்டு விழா - 1975 - மதுராந்தகம் - சைவர் மாநாடு)**

வட திருச்சிற்றம்பலம் என்று கருதப்பெறும் மதுராந்தகத்துக்கு அருகிலுற்ற மாம்பாக்கம் குருகுலத்தில் நடைபெறும் சைவ சித்தாந்த மகா சமாசத்தின் 69ஆம் ஆண்டு நிறைவு விழாவுக்குத் தலைமை தாங்கும் பெருஞ் சிறப்பை எனக்களித்த மகா சமாசத்தாருக்கும் தம்முடைய குருகுலத்தின் ஆன்மிய நலன்களை நான் பெற வேண்டும் என்று திருவுளங்கொண்ட தவத்திரு அழகரடிகளார் அவர்களுக்கும் என் உளமார்ந்த நன்றி.

மதுராந்தகத்துக்குரிய திருப்புகழில் அருணகிரியார்,

*.... .... ... ... .. சடையிடத்துக்*
*கங்கை வைத்த நம்பர் உரைமாளச்*
*செயல்மாண்டு சித்தமவிழ நித்தத்*
*தவம்பெறப் பகர்ந்த*
*சிறியோன் தனக்கு முறைசெயிற்சற்*
*றுங்குருத் துவங்கு றையுமோதான்.*

என்று முருகப்பெருமானை உரிமையுடன் கேட்கிறார். இறைவனே குருவாக வந்து உபதேசஞ் செய்கிறார் என்னும் சைவ சித்தாந்தக் கொள்கையைப் பின்பற்றும் நமக்கும் அத்தகைய உபதேசம் கிடைக்க வேண்டும் என்னும் சீரிய வேட்கையை எழுவிப்பதாக உள்ளது நாம் கூடியிருக்கும் சூழல். இதனைப் பெறலரும் வாய்ப்பாகக் கருதி இறைவனுக்கு நன்றி செலுத்துகிறேன்.

அண்மையில் ஆங்கில இதழ் ஒன்றில் (The Illustrated Weekly of India, Sunday, 9-3-75) சைவத்தைப் பற்றிய கட்டுரையொன்று வெளிவந்தது. அக்கட்டுரை, சைவத்தின் எதிர்காலத்தைப் பின்வருமாறு குறிப்பால் உணர்த்துகிறது. "வீரசைவம் வழங்கும் கன்னட ஆந்திரப் பகுதிகளிலும் தமிழ் நாட்டிலும் சைவம் இன்னும் செல்வாக்குடனிருக்கிறது. சக்தி, கணபதி, முருகர் வழிபாடுகளில் சைவக்கூறு மேலோங்கி நிற்கிறது. எனினும் சைவம் வாழும் ஆற்றலை இழந்துவிட்டது. பரவலான அளவில் மக்கள்

வாழ்க்கையைச் சைவம் உருவாக்குவதாக இல்லை. கயிலாயத்தை விட்டுச் சிவன் இறங்கி வந்து பொன்னம்பலத்திலும் நம் நெஞ்சத் தாமரையிலும் மீண்டும் நடனம் செய்ய வேண்டும். ஆனால் அவர் தாமரைமலர் வாடிவிட்டதையும் வில்வ மரத்தின் இலைகள் அனைத்தும் உதிர்ந்தமையுமே காணக்கூடும்'' என்று சைவத்தின் வருங்கால வாழ்வில் நம்பிக்கையற்ற முறையில் இக்கட்டுரை முடிகிறது.

சைவம் மறைந்துவிடுமோ என்று அஞ்சிய காலத்தில் திருஞானசம்பந்தரும் அப்பரும் தோன்றினார்கள். 'ஞாலம் நின்புகழே ஆக வேண்டும், தென் ஆலவாயில் உறையும் எம் ஆதியே' என்று திருஞானசம்பந்தர் இறைவனை வேண்டிக் கொண்டார். 'அஞ்சுவதியா தொன்றுமில்லை, அஞ்சவருவதுமில்லை' என்று அப்பர்கூறிய வீரமொழி அவருடைய பின் தோன்றல்கள் அனைவருக்கும் அஞ்சா நெஞ்ச ஆக்கம் தரவல்லதாக உள்ளது. சமயாசாரியர்கள் சிவபரம் பொருளைக் கண்ணாரக் கண்டு வாயாரப்பாடி வணங்கினார்கள். அவர்களுடைய அருள்நூல்களும் பிற திருமுறைகளும் சமய மெய்யுணர்வு நூல்களுக்கு அடிப்படையாக அமைந்தன. பதினான்கு மெய்யுணர்வு நூல்களுக்குப் பிறகு தத்துவப் பிரகாசம், சிவநெறிப் பிரகாசம், பண்டார சாத்திரங்கள், சிவஞான பாடியம் போன்ற நூல்கள் எழுதப்பெற்றன.

சைவத்துக்கு எதிர்ப்பிருந்த காலத்தில் அவ்வெதிர்ப்பையடுத் தூர்வது எங்ஙனம் என்று திருஞானசம்பந்தரும் அப்பரும் வாழ்ந்து காட்டினார்கள். சைவ சமயக் கருத்துக்கள் அளவை முறைப்படித் திட்டவட்டமாகவும் கட்டுக் கோப்புடனும் அமைந்தவை என்பதை நம் சைவ மெய்யுணர்வு நூல்கள் தெளிவு படுத்துகின்றன. பதினொரு திருமுறைகளிலும் காணப்பெறும் அநுபூதி நிலைகள் குறிக்கோள் என்னும் அளவில் அடங்கிவிடுவன அல்ல, வாழ்க்கையில் எய்தப் பெற்ற நிலைகளே என்னும் உண்மையைப் பெரியபுராணம் பரக்கக்கூறுகிறது.

மெய்யுணர்வு நூல்கள் சைவக் கருத்துக்களைக் கூறுவதோடு அமையாமல் வெளிப்படையாகவோ குறிப்பாகவோ அவற்றைப் பிறமெய்யுணர்வுக் கொள்கைகளுடன் ஒப்பிட்டுக் கூறுகின்றன. குறிப்பாக அருணந்தி சிவாசாரியரும் உமாபதிசிவாசாரியரும் சித்தியார் பரபக்கத்திலும் சங்கற்ப நிராகரணத்திலும் பூர்வ பக்கம் சித்தாந்தம் என்னும் முறையில் சைவ சித்தாந்தக் கருத்துக்களை விளக்கி யுள்ளனர். இவ்வாறு, நம் முன்னோர்கள் சைவர்களாக வாழ்வது

எங்ஙனம், சைவத்தை வாழவைப்பது எங்ஙனம் என்னும் கேள்விகளுக்குத் தெளிவான விடையளித்துள்ளனர்.

ஒரு சமயத்துக்கு எதிர்ப்பு பிற சமயங்களிடமிருந்து ஏற்படலாம். அத்தகைய நிலை, இன்று பெரும்பாலும் இல்லையென்றே சொல்லலாம். இயன்றவரை, அனைத்துச் சமயங்களும் கலந்து உரையாட வேண்டும் என்னும் சிறந்த நோக்கம் இன்று பரவி வருகிறது. கிறித்தவச் சமயத்தின் இந்நோக்கம் நிறைவேறுவதற்காகப் பிற சமயத்தவரை அன்புடன் அழைத்து அவர்கள் கொள்கைகளையும் அநுபவங்களையும் பேசச் சொல்லி மிகப் பொறுமையாகக் கேட்கிறார்கள். 'இதுவரை நாம் பேசி வந்தோம் இனி மற்றவர்கள் பேசுவதைக் கேட்போம்' என்று முடிவு செய்து கலந்து உரையாடும் வாய்ப்புக்களை ஏற்படுத்துகின்றனர். 'ஓம்', 'சாந்தி' போன்ற சொற்கள் ஒரு சமயத்துக்கே உரியவை எனக் கொள்ளாமல் அவை அனைவரும் ஏற்கத் தக்கவை எனக் கருதி அவற்றைத் தம் எழுத்திலும் பேச்சிலும் பயன்படுத்துகின்றனர். இந்த வகையில், 'காணாத அருவினுக்கும் உருவினுக்கும் காரணமாய், நீணாகம் அணிந்தார்க்கு நிகழ் குறியாம்' சிவலிங்கமும் காலப்போக்கில் சமயங்கடந்த முறையில் பரம்பொருளின் அறிகுறியாக ஏற்கப் பெறலாமோ என்னும் எண்ணம் உண்டாவதில் வியப்பில்லை. இத்தகைய உரையாடல் இந்தியத் தத்துவ மரபுக்குப் புறம்பானதன்று என்பது கருதுதற்குரியது. பூர்வபக்கம், சித்தாந்தம் என்று மெய்யுணர்வுத் துறையில் கையாளப்பெறும் முறையையே பரந்த உள்ளங் கொண்டு பார்ப்போமானால் சித்தாந்தம் தாழ்வடையாது, விரிவு பெறும். 'விரிவிலா அறிவினார்கள்' என்று அப்பர் எதிர்மறை வாய்பாடாகக் கூறுவதன் உட்கிடை அறிவை விரிவாக்கிக் கொள்ள வேண்டுமென்பதே என்று கொள்வது தவறாகாது. யானை கண்ட குருடர் கூறியவை முற்றிலும் குற்றமுடையனவல்ல. குறைவானவையே; அவற்றை நிறைவு செய்ய அனைத்தையும் சேர்த்துப் பார்க்க வேண்டும் என்று முடிவு செய்கிறோம். இவ்வாறே இன்று உலகச் சமய, மெய்யுணர்வுக் கொள்கைகள் அனைத்தையுமே சேர்த்துப் பார்க்கும் முயற்சியை மேற்கொள்ளலாம். இந்த நூற்றாண்டில் இவற்றை மூலநூல்களைக் கொண்டோ, அவற்றின் மொழிபெயர்ப்புகளைக் கொண்டோ, தெரிந்து கொள்வது அரிதன்று. தத்துவப்பிரகாசம் என்னும் நூலில் 216ஆம் பாட்டுக்குள்ள உரையில் 'அது துருக்கர் மதம் என்று இதனை கைவிட்டு நன்னெறியில் நிற்குதி' (பக்கம் 331) என்று காணப்படுகிறது. கைவிட வேண்டியவற்றில் கருத்தைச் செலுத்துவதைவிடக் கொள்ள வேண்டியவை எவை

என்பதை ஆராய்ந்து ஏற்பது இன்று மிகவும் தேவைப்படுகிறது. மேலும் நம் சைவத்தையும் உலக நோக்கில் பார்ப்பது நன்று (Saivism in world perspective) ஆனால் இம்முயற்சிக்கு அடிப்படையாக வேண்டப்படுவது நம் சமயத்தைப் பற்றிய தெளிவான அறிவு. நம் சமயத்தை மையமாகக் கொண்டு ஏனையவற்றை அறிவதற்காகச் செல்லுமளவும் நம் சிந்தையைச் செலுத்தலாம். இவ்வாறு வெளியே சென்று பார்த்துத் தாயகமாகிய மையத்துக்கு நம் சிந்தை மீளும்போது நம் சமயத்திலுள்ள ஆர்வம் குறையாது, வலுவேபெறும். பிற சமயங்களுடன் கலந்து உரையாடுவதில் நமக்கு இழப்பில்லை, ஆக்கமே விளையும். வேதாந்த சித்தாந்த சமாசத்தைப் போற்றிப் பாடிய தாயுமானவரல்லரா.

*பொய்கண்டார் காணாப் புனிதமெனும் அத்துவித*
*மெய்கண்டான் பொன்னடியை மேவுநாள் எந்நாளோ*

என்றும் சித்தியார் தனிச் சிறப்பைப் பாராட்டியும் சமயாசாரியர்கள், சந்தானாசாரியர்களின் சிறப்பியல்புகளை நினைவிருக்கும் வகையில் சுருக்க விளக்கமாகப் பாடியுள்ளார்! இவ்வாறே சமரச சன்மார்க்க சங்கம் நிறுவ விழைந்த இராமலிங்க வள்ளலாரும் நால்வரை நினைந்துருகிப் பாடியிருக்கிறார்.

நாம் அஞ்ச வேண்டுவது பிற சமயங்களின் எதிர்ப்பன்று. சமயத்தைப் பற்றிய அக்கறையில்லா மனப்பான்மையே. சமயத்தில் சரியான ஊற்றம் உண்டாகி வளர்வதற்காக நம் முன்னோர் சரியை, கிரியை, யோகம், ஞானம் என்னும் படிமுறையை அமைத்துந் தந்தனர். உடலும் உள்ளமும் உயிருமான மூன்றின்ஒருங்கமைப்பாக உள்ளது நம் ஆளுமை (Personality). இறைவழிபாட்டில் ஞானநிலை எடுத்த எடுப்பிலேயே நம்மனோர் பெரும்பாலோர்க்குக் கைகூடுவதன்று. உடலையும் உள்ளத்தையும் உயிரையும் ஒழுங்காக ஒருங்கமைக்க அல்லது ஒருங்கிணைக்க இம்மூன்றையும் வழிபாட்டில் ஈடுபடுத்த வேண்டும். இளமையிலேயே வழிபாட்டிற்கு வாய்ப்பான சூழல் அமைய வேண்டும். மேலும் சொல்ல வேண்டுமென்றால் கருவிலேயே திரு அமைவதற்கு வாய்ப்பாக நம் இல்லங்களில் திருமுறைகளை ஓதும் வழக்கம் இருக்க வேண்டும். நாள்தோறும் கோயிலுக்குச் செல்லும் வழக்கமும் நமக்கு இன்றியமையாதது. கோயிலில் வழிபடுவோர் சைவ மரபு தெரிந்தும் கட்டுப்பாட்டுடனும் வழிபட்டால் மிகுந்த நன்மை பெறுவர். மேலும் கோயில்களில் அன்பர்கள் பெறும் திருநீற்றைக் கம்பங்களின் மீதும் கம்பிகள் மீதும் தூவி விடுகிறார்கள். இது பற்றிக் கீழ்வரும் பாடலைக் காண்க.

*"நீற்றைச் சிந்தினை யல்லையிந் நிகழ்பவத் தடையும்*
*பேற்றைச் சிந்தினை யறவினை யுளனெனப் பேசும்*
*கூற்றைச் சிந்தினை யிவணடைந் துறுசுகம் குலவும்*
*ஆற்றைச் சிந்தினை சிந்தினை நின் திரு அனைத்தும்"*

- மீனாட்சி சுந்தரம்பிள்ளை வரலாறு - பக்கம் 134

கோயிலில் செய்வன எவை, தவிர்வன எவை என்பவற்றை நன்கு அறிந்து வழிபடுவதற்காக அறநிலையப் பாதுகாப்புத் துறையினர் சிறு குறிப்புக்கள் கோயிலில் கிடைக்குமாறு செய்யலாம். இலிங்கத்துக்கும் நந்திக்கும் இடையே செல்லக் கூடாது என்னும் விதியை மீறுவதே இன்று வழக்கமாகக் காணப்படுகிறது. இத்தகைய தவறுகள் நேராமல் பார்த்துக் கொள்ள வேண்டும். மேலும் கோயில்களில் விரிவுரை நிகழ்த்துவோர் சிவாலய வழிபாட்டு முறைகளைச் சுருக்கமாகவாவது எடுத்துரைக்கலாம். கோயிலுக்கு வருவோர் வழிபாட்டினால் பயன்பெற விரும்பியே வருதலால் (அப்பயன் யாதாயிருப்பினும்) சரியான முறையில் வழிபடுவது எங்ஙனம் என்பதை அவர்கள் தெரிந்து கொள்வதற்காக விளக்கங்களும் குறிப்புக்களும் அவர்களுக்குத் தருவது கோயில் அலுவலர்களின் கடமையாகிறது. சில கோயில்களில் பக்திப் பாடல்களை ஒலிபரப்புகின்றனர். ஒலி பெருக்கிகளைப் பயன்படுத்துவதில் வரையறை இருக்க வேண்டும். கோயிலில் ஓதுவார் பாடும் சமயத்திலேயே ஒலி பெருக்கிகளை வைத்துப் பக்திப் பாடல்களை ஒலிபரப்புவதும் காதைப் பிளந்து கருத்தைச் சிதற அடிக்கும் அளவுக்கு ஒலியைப் பெருக்குவதும் அமைதியான வழிபாட்டுக்கு உதவாமல் இடையூறாகவே மாறி விடுகின்றன. இந்நிலையை மாற்ற அல்லது திருத்த அறங்காவலர்கள் உளங்கொள்ள வேண்டும்.

சிவாசாரியர்கள் நலத்திலும் நம் கருத்தைச் செலுத்த வேண்டும். 'முப்பொழுதும் திருமேனி தீண்டுவார்' என்று சுந்தரரால் வணங்கப் பெற்று சிவாசாரியர்கள் சரியான முறையில் நாள்தோறும் நடைபெறும் வழிபாடுகளையும் அவ்வப்போது கொண்டாடப்பெறும் திருவிழாக் களையும் நடத்துவதற்கு வேண்டிய வசதிகளையும் வாய்ப்புக் களையும் தரவேண்டும். சில ஆண்டுகளுக்கு முன் மயிலையில் அரசினர் ஆதரவில் வகுப்புக்கள் நடத்தப் பெற்றன. சிவாசாரி யர்களுக்கு உதவும் வகையில் மீண்டும் இவை நடத்தப்பெறலாம். கோயில் வழிபாட்டை முறைப்படிச் செய்ய ஆகமங்கள் எளிதில் கிடைக்க வேண்டும். இலங்கையிலும் இதுபற்றித் தீர்மானம் நிறைவேற்றப்பட்டதாக இந்த மாதம் வெளிவந்த நம் சித்தாந்தத்தில்

செய்திக் குறிப்பு காணப்பெறுகிறது. எளிதில் பொருள் விளங்கக்கூடிய வகையில் சொற்களைப் பிரித்து நம் சமய இலக்கியத்தின் அடிப்படையான நூல்கள் சிலவற்றையாவது கிடைக்கும்படிச் செய்வது சிறந்த தொண்டாகும். திருமுறைகள் கூட்டங்களில் ஓதப் பெறும்போது உரையாடாது அமைதியாக இருந்து கேட்கும் நிலை இன்று காணப்பெறவில்லை. இது மிக வருந்தத்தக்கது. திருமுறைகள் நம் சமயச் சான்றோர் நமக்களித்த பெருஞ் செல்வம். இவை ஓதப்பெறும்போது ஓதுவார்களுக்கு ஊக்க மளிப்பதுடன் சமயச் சான்றோர்க்கும் நம் வணக்கத்தைத் தெரிவிக்கும் வகையில் நாமே அமைதியைக் கடைப்பிடிக்கவில்லை யெனின் ஏனையோரிடம் என்ன எதிர்பார்க்க முடியும்?

சைவம் வாழ்வதற்குத் தேவையான நூல்கள் தமிழிலும் வட மொழியிலும் நிறைய உள்ளன. மூவர் அருளிய தேவாரத்தில் ஒரு பகுதியே நமக்குக் கிடைத்திருக்கின்றது என்பது உண்மைதான். எனினும் கிடைத்துள்ள இப்பகுதியின் முழுப்பயனையும் நாம் அடைந்திருப்பதாகக் கருதுவதற்கில்லை. திவ்யப்பிரபந்தத்துக்கு உரை எழுதப் பெறவில்லை. உரை எழுதுவதால் முதல் நூலின் பெருமை குறைந்துவிடும் என்னும் அச்சத்தால் பல பெரியோர்கள் தாம் உணர்ந்தவற்றை எழுதிப் பரப்பாமல் மறைந்துவிட்டனர். திருமுறைகளை மீண்டும் மீண்டும் ஓதும்போது புலப்படும் அரிய கருத்துக்களை அறுதியிட்டுச் சொல்லாமல் அடக்கமாகவும் பிறர் கருத்தைத் தூண்டும் வகையிலும் 'இன்ன பதிகத்துக்கு இதுதான் உரை' என்று சொல்லாமல் 'இதுவும் உரையாக இருக்கலாமோ?' என்னும் வகையில் பொருள் கொள்ளலாம். அண்மையில் ஆங்கிலத்தில் வெளிவந்த சில நூல்கள் அழைப்பு என்னும் நயமான தலைப்புடன் நம்மைக் கவர்வனவாயுள்ளன. (eg. Invitation to Sociology, Invitation to Indian) இம்முறையில் நாம் காணும் பொருளைச் சீர்தூக்கிப் பார்க்க அனைவரையும் அழைக்கலாம். இதன் பயனாகத் தவறுகள் திருத்தப் பெறலாம். பொருத்தமானவை ஏற்றுக் கொள்ளப்பட்டுப் பரப்பப் பெறலாம். நாமும் பயில்தொறும் புதிய நயங்களைக் கண்டு அவற்றைப் பிறருடன் கலந்து நவில் தொறும் இன்பமுறலாம்.

இவ்வாறே மெய்கண்ட நூல்களைப் பயிலும்போது நமக்குக் கிடைக்கும் விளக்கங்களைப் பிறருடன் பகிர்ந்து கொள்ளலாம். புகழ் நூல்களையோ பொருள் நூல்களையோ தனிப்பட்ட முறையில் கற்பதுடன் ஒப்பியல் முறையில் கற்கும்போது ஒற்றுமையும் புலப்படலாம். வேற்றுமையும் புலப்படலாம். நம் சைவ சித்தாந்தம்

எவ்வெவ்வகைகளில் சங்கரரின் அத்வைதம், இராமாநுஜரின் விசிஷ்டாத்வைதம், மத்வரின் துவைதம் ஆகியவற்றுடன் ஒத்தும் ஒவ்வாமலும் நிற்கின்றது என்று பார்ப்பதால் தெளிவு மிகுதியாகும். இவ்வாறே மேலை நாட்டு மெய்யுணர்வுக் கொள்கைகளுடனும் நம் சைவத்தை ஒப்பிட்டுக் கற்பதால் சிறந்த எடுத்துக் காட்டாகக் கடவுள் உண்டு என்பதற்கு மேலை நாட்டில் கூறப்பெறும் காரணங்களை நம் நூல்களில் கூறப்படும் காரணங்களுடன் ஒப்பிட்டுக் கற்கலாம். மொழி இயல், மனித இயல், சமூக இயல் இவற்றின் நோக்கிலிருந்து சமயத்தை மேலை நாட்டினர் ஆராய்வதைப் போல நாமும் நம் சமயத்தை ஆராயலாம். சமயத்தின் அடிப்படை அறிவியல், உள இயல், மொழிப் பகுப்பியல் போன்றவை எதிர்நோக்கும் போது எதிர்ப்பின் அடிப்படையை நன்குணர்ந்து தடைகளுக்கு விடைகூறி மேற்செல்லும் போக்கு - முன்னேற்றம் காணும் போக்கு - மேலை நாட்டில் காணப்பெறுவது போல நம் நாட்டிலும் கட்டாயமாக இடம் பெற வேண்டும்.

தமிழில் மட்டுமன்றி ஆங்கிலத்திலும் சைவ சித்தாந்தத்தைப் பற்றி எழுதி வருவதால் தமிழ் தெரியாதவர்களோ, ஓரளவே தமிழ் தெரிந்தவர்களோ சைவ சித்தாந்தத்தில் அக்கறை கொண்டு தாமும் இதனைக் கற்க முற்படுகின்றனர். இவ்வாறே சைவத்தைப் பற்றி வடமொழியிலுள்ள நூல்கள் - ஆகமங்கள், சைவ பாஷை, சைவ பரிபாஷை போன்வற்றையும் மொழி பெயர்ப்புக்களுடன் வெளியிட்டால் மேலைநாட்டவரேயன்றி நம் நாட்டு வடமொழிப் புலவர்களும் சைவ சித்தாந்தத்தைத் திறனாய்வார்கள். எடுத்துக் காட்டாக, வடமொழியிலுள்ள சத்யோஜோதி சிவாசாரியரால் இயற்றப்பட்ட மோக்ஷகாரிகை என்னும் நூலிலிருந்து பேராசிரியர் எஸ்.எஸ். சூரிய நாராயண சாஸ்திரியார் எடுத்துத் தந்துள்ள ஒரு குறிப்பை உங்களுக்கு நினைவூட்ட விரும்புகிறேன். குலாலன் குடம் முதலியவற்றைச் செய்வது போல இறைவன் உலகைப் படைக் கிறான் ('ஆரியன் குலாலனாய் நின்று ஆக்குவன் உலகமெல்லாம்' சித்தியார்) என்பது சித்தாந்தம். இதற்குக் கூறப்பெறும் தடை எடுத்துக் காட்டு பொருந்தாது என்பதாம். குலாலன் இருவினைக்கும் அறியாமைக்கும் உட்பட்டவனாதலால் பொருந்தாமை பெறப்படும் என்பதாம். இனி இதற்குப் பின்வருமாறு விடை தருகிறார் சத்யோஜோதி சிவாசரியர்: (உவமை பெரும்பாலும் முற்றுவமையா யிருப்பதில்லை என்பது ஒருபுறமிருக்க) குயவன் ஏனையவற்றைப் பற்றி அறியாதவனாக இருக்கலாம். ஆனால் மண்ணினால் பானை,

சட்டி போன்றவற்றைச் செய்யத் தெரியாதவனாக இருக்க முடியாது. இவ்வாறே, பிரபஞ்சமே முழுக்காரியம் அதாவது பிரபஞ்சத்தைத் தவிர படைக்கப்பட்ட தொன்றுமில்லை. எனவே, அதனைப் படைப்பவனுக்குத் தெரியாததாக வேறொரு காரியமுமில்லை. எவ்வாறு மண்ணினால் செய்யக் கூடியவை அனைத்தையும் அறிந்தவனே குயவனோ அவ்வாறே பிரபஞ்சகாரியம் அனைத்தையும் அறிந்தவன் இறைவன். எனவே குலாலனை எடுத்துக்காட்டாகச் சொல்வது பொருத்தமுடையதே என்கிறார் சத்யோஜோதி சிவாசாரியர். இவ்வாறெல்லாம் நம் சைவ சித்தாந்தக் கருத்துக்களை உடன் படுவோர் கூறும் அரிய விளக்கங்களைக் கொண்டும் எதிர்ப்போர் கூறும் தடைகளுக்கு விடை காணும்போது தோன்றும் புதிய கருத்துக்களைக் கொண்டும் சைவத்தின் முன்னேற்றத்துக்குத் துணை புரியலாம்.

நூல்களைக் கற்று ஆராய்வதாலும் வழிபாட்டினாலும் நாம் அடைய விரும்பும் பயன் மலநீக்கமும் திருவடிப்பேறும் என்று சுருக்கமாகக் கூறலாம். மலநீக்கம் என்று பொதுவாகக் கூறினும் இத்தொடர் முதன்மையாகக் குறிப்பது ஆணவமலத்தின் நீக்கத்தையே. ஆணவத்தின் தொடர்பினால் மாயையும் கர்மமும் தளையாகின்றன. ஆணவம், 'யான்' 'எனது' என்னும் செருக்கு. இச்செருக்கு உயிருடன் அனாதியாகவும் இயல்பாகவும் இருப்பதால் சகஜமலம் எனப் பெயர் பெறுகிறது. 'நெல்லிற்கு உமியும் நிகழ் செம்பினிற் களிம்பும் சொல்லிற் புதிதன்று தொன்மையே'. நீக்கப்பட வேண்டியதாயினும் இவ்வாணவம் உயிரின் வளர்ச்சிக்காகத் தேவைப்படுகிறது. 'பண்டு முளைப்பது அரிசியே யானாலும் விண்டுமி போனால் முளையாதாம்' என்பது நினைவுக்கு வருகிறது. உயிரின் அல்லது ஆளுமையின் (Personality) வளர்ச்சிக்கு 'யான்' 'எனது' என்னும் எண்ணம் எவ்வாறு தேவைப்படுகிறது என்பதைச் சற்று பார்ப்போம். உயிரற்ற பொருள் களினின்றும் பிற உயிரினங்களினின்றும் நம்மைப் பிரித்து நம் செயல்களுக்குப் பொறுப்புள்ளவர்களாக நாம் நடந்து கொள்ளும் அளவுக்கு 'யான்' என்னும் எண்ணம் தேவைப்படுகிறது. ஆனால் 'அவனன்றி ஓரணுவும் அசையாது' என்னும் ஆக்க மொழியை மறந்தும் நம் செயல்களின் நற்பயன்களனைத்தையும் நாமே நுகரவேண்டுமென்றும் தீயவிளைவுகளிருப்பின் அவற்றைப் பிறர் தலையில் சுமத்திவிட வேண்டும் என்றும் போகும் போக்கில் நம்மையே அனைத்துக்கும் முதல்வனாகக் கொண்டு செயல் படுவதால் 'யான்' என்னும் எண்ணம் தீமை பயக்கிறது. இந்தப்

போக்கை மாற்றி இறைவனையே அனைத்துக்கும் மையமாகக் கொண்டு அவன் திருவருளின்வழி இயங்கும் கருவியாக நம்மை மதித்துச் செயல்படும்போது ஆணவத்தின் தீமை குன்றி விடுகிறது. இனி 'முத்திதனில் மூன்று முதலு மொழியக்கேள்' என்பதற்கேற்ப முத்திநிலையில் ஆணவம் இருந்தால் அது எங்ஙனம் முத்தி யாகக்கூடும் என்னும் கேள்வி எழுகிறது. இதற்கு விடை 'இத்தை விளைவிப்பது மலம்' என்று கூறப்படுகிறது. மலம் அறவே அழிகின்றது என்றால் சைவ சித்தாந்தம் கூறும் முப்பொருள் உண்மையை நிலைநிறுத்த முடியாது. எனவே, ஆணவ மலம் பல சக்திகளை உடையது என்றும் அதன் சக்திகளே மடங்குகின்றன என்றும் விளக்கம் தரப்பெறுகிறது. சக்திகள் மடங்கினால் அவற்றையுடைய பொருள் எங்ஙனம் உள்பொருளாக நிலைத் திருக்கக்கூடும் என்றும் தடைஎழுகிறது. குணங்கள் அடங்கியோ அழிந்தோ போனால் குணி எவ்வாறு இருக்கக்கூடும் என்பது ஐயத்துக்குரியது. இதைத் தீர்க்க, வீடுபேறடைந்த உயிர்களினின்றும் ஆணவம் நீடித்திருக்கக் கூடும் என்று கூறப்படுகிறது. ஆணவம் நீடித்திருப்பதற்காகச் சிலவோ பலவோவான உயிர்கள் கட்டுநிலையிலுள்ளன என்பது அமைதி தரக்கூடிய விடையாக இல்லை. மேலும் அனைவரும் முத்தியடைந்த பின் ஆணவம் என்னாகும் என்னும் கேள்வி எழும். முத்தி நிலையிலும் ஜீவன் முத்தி நிலையிலும் ஆணவம் திருந்திய வகையிலிருக்கிறது என்றும் விளக்கத்தைத் தரலாமா என்பதை உங்களுடன் சேர்ந்து கருத விரும்புகிறேன். திருந்திய ஆணவம் அல்லது ஆணவம் நன்முறையில் மாறுவது என்னும் விளக்கத்துக்கு ஆதாரமாக மாபாடியத்தில் திரோதான சக்தி சித்சக்தியாக மாறுகிறது என்று சிவஞான முனிவர் கூறுவதை வைத்துக் கொண்டு (மாபாடியம் பக்கம் 420-421, கழகப் பதிப்பு 1936) என் விளக்கத்தை அமைத்துள்ளேன். இவ்விளக்கத்துக்கு ஆதரவாகச் சான்றோர் மொழிகளையும் மேற்கோளாகத் தருகிறேன்.

திருவடிச் செம்மாப்பு என்னும் தலைப்பில் அப்பர் தேவாரத்துக்குத் தருமபுரமடம் வெளியிட்டுள்ள உரையில் சில மேற்கோள்கள் தரப்பெற்றுள்ளன. செம்மாப்பு அல்லது இறுமாப்பு என்பது பெரும்பாலும் தவறாக இருப்பினும் ஒரோ வழி நல்லதாகவும் இருக்கக்கூடும்என்பதற்குச் சான்றாக 'இறுமாந்திருப்பன் கொலோ ஈசன் பல்கணத் தெண்ணப் பட்டுச் சிறுமானேந்தி தன் சேவடிக்கீழ்ச் சென்றங்கு இறுமாந்திருப்பன் கொலோ' என்பதையும் 'வாக்கியலால்

வார்கழல் வந்து உற்றிறுமாந்திருந்தேன்' என்பதையும் நினைவுகூர்க. ஆங்கிலத்திலும் False pride என்றும் Proper pride என்றும் வழக்கிருப்பதை நினைவுகூர்க. தவறான இறுமாப்பு நானே அனைத்துக்கும் முதல் என்னும் நினைவு, சரியான இறுமாப்பு 'தம்மை யுணர்ந்து தமையுடைய தன்னுணர்வினால்' தம்மை இறைவனின் உடைமையாகவும் அடிமையாகவும் கருதிச் செயல்படுவதில் ஞாயிற்றின் ஒளியைக் கொண்டு விளங்கும் திங்களைப் போல இறைவனுடைய ஆள் என்னும் நிலையில் பெருமை கொள்வது (Shining in the Reflected Glory of the Lord).

'பல்கணத் தெண்ணப்பட்டு' என்னும் தொடரைக் கொண்டு மேலும் விளக்கம் பெறலாம் என்று தோன்றுகிறது. இறுமாந் திருப்பதற்குக் காரணம் சிறுமானேந்தி தன் சேவடிக்கீழ்ச் சென்று அங்கிருப்பது மட்டுமன்று. 'அவன் பல் கணத்தெண்ணப்பட்டு' என்பதால் 'பலவாறே தொழும்பாகும் அங்கு' என்று பின்னர் மெய்கண்டார் கூறியவாறே வீட்டு நிலையிலும், நமக்கு 'இப்போது விளக்கமில்லாத ஆனால் அப்போது விளங்கக் கூடிய வகையில், வீடுபேறடைந்த உயிர்கள் தொழும்பாய்ப் பணி செய்கின்றன' என்று கொள்ளலாம். 'புகுவிப்பாய் நின்தொழும்பின்' என்பதையும் நினைவு கூர்க. ஜீவன் முக்தி நிலையிலும் தொண்டு செய்ய முந்தும் ஊக்கத்தை அணைந்தோர் தன்மை என்னும் தலைப்பில் உமாபதிசிவம்.

*'கள்ளத்தலைவர் துயர்கருதித் தாம் கருணை*
*வெள்ளத்தலைவர் மிக'*

என்று விளக்குகிறார் அல்லரா?

இவ்வாறு கருணையால் பிற உயிர்களை மீட்கும் பணியில் முந்துறுவது திருந்திய ஆணவத்தின் முனைப்பால் என்று சொல்லலாமெனத் தோன்றுகிறது.

*'நறுமுறுதேவர் கணங்களெல்லாம் நம்மிற்பின்*
*பல்லது எடுக்க ஒட்டோம்'*

என்பதிலும்,

*எனக்கென்றப் பொருட் டங்கத்*
*தொடுக்குஞ் சொற்றமிழ்த் தந்திப் படியாள்வாய்.*

- திருச்செந்தூர் திருப்புகழ்

(எனக்கென்றே சிறப்பான வழியில் அப்பெரும் பொருள் நிரம்பித் தங்கும்படித் தொடுக்கப்படும் தமிழ்ச் சொற்களைத் தந்து இப்பொழுதே ஆண்டருள்வாய்) என்பதிலும் சிறந்த பணிக்கு முந்தும் திருந்திய முனைப்பைப் பார்க்கிறோம்.

இதனை மேலும் சற்று விவரமாகப் பார்ப்போம். விலங்குகளுக்கு உரிமை உண்டு. அவை அதைக் கேட்டுப் பெறவழியில்லை. விலங்குகளின் உரிமைகளை நாம் பாதுகாக்கிறோம். மக்களுக்கு உரிமைகளும் உண்டு. பண்படா நிலையில் உரிமைகளை வற்புறுத்திக் கேட்டு வாங்கிக் கடமைகளை மறக்கிறோம்; மறுக்கிறோம். தன்னலப் போக்கை விட்டு மன்னுயிர்ஓம்பும் பக்குவம் வாய்க்கின்ற நிலையில் உயிர்கள் தனக்கெனப் பாராட்டி எந்த உரிமையையும் விழைவதில்லை. இவ்வுயிர்கள், கடமைகளைச் செய்து அவற்றின் நற் பயன்களைப் பிறர்க்களித்து விடுவதைத் தம் உரிமையாகக் கருதுகின்றன. இனி இதற்கும் மேற் சென்று பிறர் தம் கடமைகளைச் செய்யாததாலோ தவறாகச் செய்ததாலோ ஏற்படுகிற தீய விளைவுகளைத் தாமே ஏற்க இவ்வுயிர்கள் முன்வருகின்றன. தீய விளைவு உடலுக்குத் துன்பமும் உள்ளத்துக்குத் துயரும் தருகின்ற அளவில் நில்லாது உயிர்க்கிறுதி பயப்பதாயும் சீறிவருகின்ற காலத்தில் அப்பொழுதும் அஞ்சாது அதனைப் பிறர்க்காக ஏற்க முன் வருவது திருந்திய ஆணவத்தின் செயல் எனக் கூறலாம். இடரோ இடர்ப்பாடோ எதிர்ப்படுகின்ற நிலையில் பிறரை விலக்கி அதனை மேற்கொள்ளத் தான் முந்துறும் நிலையை விளக்கப் பின்வரும் பெரியபுராணப் பாடலை நினைவுகூர்க.

*'சிரபுரத்துப் பிள்ளையார் அருளிச் செய்த திருப்பதிகங்*
*கேட்டதற்பின் திருந்து நாவுக்*
*கரசும் அதற்குடன்பாடு செய்துதாமும் அவர்முன்னே*
*எழுந்தருள அமைந்த போது*
*புரமெரித்தார் திருமகனார் 'அப்பர்! இந்தப் புனல்நாட்டில்*
*எழுந்தருளி இருப்பீர்' என்று*
*கரகமலங் குவித்திறைஞ்சித் தவிர்ப்பவாக்கின் காவலருந்*
*தொழுதரிதாங் கருத்தில் நேர்ந்தார்'*

மேலும், ஆணவத்தைப் பற்றி 'ஒன்றதாய் அனேக சக்தி உடையதாய்' என்று சித்தியார் கூறுவதைப் பொதுவாகப் பல உயிர்களின் அறிவு ஆற்றல் முதலியவற்றைப் பல சக்திகளைக் கொண்டு மறைக்கின்றது என்று பொருள் செய்கிறோம். ஆணவத்தின்

சக்திப் பன்மையை எண்ணிக்கை அளவில் மட்டும் கொள்ளாது பல தொழில்களைச் செய்யக்கூடிய தொழிற்பன்மையாகவும் கொண்டால் திரோதான சக்தி சித்சக்தியாக மாறுவதைப் போல ஆணவமும் தன் சக்திகளில் ஒன்றால் என்றும் மறைத்தலையே செய்ய வேறு சக்தியால் அல்லது வேறு சக்தியாக மாறி மறைத்தல் தொழிலைத் தவிர்த்துத் தொண்டுக்கு முன்வரும் ஊக்கத்தைத் தரும் சக்தியாகச் செயல்படுகிறது என்று கூறலாம். 'சத்திகளும் பலவாய் ஒவ்வொரு சத்தி ஒவ்வோர் உயிரைப் பொருந்தி நின்று மறைப்பன அல்ல, ஒவ்வோர் உயிரையும் பல சத்திகள் மறைக்கும் கன்மத்துக்கேற்பச் சில ஆன்மாக்களைச் சத்தி கூடியும் சில ஆன்மாக்களைச் சத்தி குறைத்தும் பந்திக்கும்' என்று திருவிளங்கம் தம் சித்தியார் உரையில் கூறுவதை நினைவுபடுத்துகிறேன் (பக்கம் 150 1925 ஆம் ஆண்டு பதிப்பு). இருவினை யொப்புக்குப் பிறகு இத்தகைய கன்ம மிகுதி குறைவு இராதாகையால் அந்நிலையில் ஆணவத்தின் தொழில் திருந்தியமுறையில் தொண்டுக்கு ஊக்கும் வகையில் நிகழ்கிறது என்று கொள்ளலாம்.

மேலும் கந்த புராணத்தின் அடிப்படைக் கருத்தை விளக்கும்போது சூரபத்மனை ஆணவத்தின் உருவமாகக் கூறுவது வழக்கம். ஆணவத்துக்கு அழிவில்லை, அதன் தன்மையில் தொழிற்பாட்டில் சீர்திருத்தம் ஏற்படுகிறது என்று கருதுவதற்குத் துணையாகப் பின்வரும் கந்தபுராணப் பாடல்களை நினைவூட்டுகிறேன். தொழில் மாற்றத்துக்கு வேல் 'அங்கியின் வடிவம் நீங்கி அருளுருக்கொண்டு' என்று கூறப்பெறுவதையும் நினைவுகூர்க.

*மருள்கெழு புள்ளேபோல வந்திடுஞ் சூரன் எந்தை*
*அருள்கெழு நாட்டம் சேர்த்த ஆங்கவன் இகலை நீக்கித்*
*தெருள்கெழு மனத்த னாகிநின்றனன் சிறந்தார் நோக்கால்*
*இருள்கெழு கரும்பொன் செம்பொன் ஆகிய இயற்கையேபோல்*

*தீயவை புரிந்தா ரேனும் குமரவேள் திருமுன் உற்றால்*
*தூயவ ராகி மேலைத் தொல்கதி அடைவர் என்கை*
*ஆயவும் வேண்டும் கொல்லோ அடுசமர் இந்நாட் செய்த*
*மாயையின் மகனு மன்றோ வரம்பிலா அருள்பெற் றுய்ந்தான்.*

*... ... ... ...*
*குக்குட உருவை நோக்கிக் கடிதின்நீ கொடியே யாகி*
*மிக்குயர் நமது தேரின் மேவினை ஆர்த்தி என்னத்*
*தக்கதே பணியீ தென்னா எழுந்தது அமித்து விண்மேல்*

*... ... உணர்வுகொண்டு ஒழுகி நின்ற*
*சூர்திகழ் மஞ்ஞை ஏறிச் சுமக்குதி எம்மை என்னாப்*
*பார்திசை வானம் முற்றும் பரியென நடாத்தல் உற்றான்*

- கந்தபுராணம்

*படைபட்ட வேலவன் பால் வந்தவாகைப் பதாகை யென்னும்*
*தடைபட்ட சேவல் சிறகடிக் கொள்ளச் சலதிகிழிந்*
*துடைபட்ட தண்ட கடாக முதிர்ந்த துடுபடலம்*
*இடைபட்ட குன்றமு மாமேரு வெற்பு மிடிபட்டவே.*

- கந்தரலங்காரம் 12

தவறு நீங்கித் திருந்திய ஆணவத்தின் உருவமான சூரபத்மன் முருகனையே சுமந்து திரியும் புதிய ஆற்றல் பெற்றதைப் போலவே வேறொரு காட்சியையும் நினைவுபடுத்துகிறேன். ஆணவம் மிக்க நிலையில் இராவணன் கயிலையைப் பெயர்க்க முயல இறைவன் கால்விரலைச் சிறிதே ஊன்றுகிறான். அதனைத் தாங்க முடியாது இராவணன் அலறி வீழ்கிறான். அப்பர் தம் பணிவால் இறைவன் விரல் ஒன்றை மட்டுமன்று. திருவடிகளை மட்டுமல்ல, அடிகளையுடைய உருவத்தை மட்டுமன்று, அருளோடு சேர்ந்து நிற்கும் 'இருவரும் ஒருவனாய உருவத்தையே - தம் தலை மீது சுமப்பதுமட்டுமன்று, சுமந்து திரியவும் வல்லவராகிறார், இவ் வல்லமையை நினைந்து இறும்பூதுடன் பாடுகிறார்.

*பெருவிர லிறைதானூன்றப் பிறையெயி றிலங்கஅங்காந்*
*தருவரை யனையதோளான் அரக்கன் அன் றலறிவீழ்ந்தான்*
*இருவரு மொருவனாய உருவமங் குடையவள்ளல்*
*திருவடி சுமந்துகொண்டு காண்கநான் திரியுமாறே.*

இனி, 'யான்', 'எனது' என்னும் போக்கை உலகியலில் மடைமாற்றுவதைப் பற்றிச் சிறிது கருத விரும்புகிறேன். அரசியல், சமுதாயம், பொருளியல் துறைகளிலெல்லாம் வேற்றுமையற்று மன்பதை எல்லோரும் 'ஓர் இனம், ஒருகுலம்' என ஒன்றுபட வேண்டுமென்பது அனைவர்க்கும் உடன்பாடான குறிக்கோள். பொருளியலைப் பொறுத்தவரை - 'தம் திறமைக்கேற்ப ஒவ்வொருவரும் உழைப்பைத் தர வேண்டும், தம் தேவைக்கேற்ப ஒவ்வொருவரும் ஊதியத்தைப் பெற வேண்டும்' என்பது சிறந்த குறிக்கோள்தான். ஆனால் நடைமுறையில் நாம் காண்பது என்ன? 'கேட்பது எங்கள் உரிமை, கொடுப்பது உங்கள் கடமை' என்னும்

போக்கில்தானே இன்று நாமனைவரும் நடந்து கொள்கிறோம்! உரிமைகளையே வற்புறுத்திக் கடமைகளை மறுப்பது வடிகட்டிய தன்னலப் போக்கு. இந்நிலையில் மன்பதை வாழ முடியுமா? நம் தேவைகளை இன்றியமையாதவற்றின் அளவுக்குக் கட்டுப்படுத்தி நம் உழைப்பைப் பிறர் தேவைகளை நிறைவு செய்யும் அளவுக்காவது பெருக்குவது சால்புடைமையாகும், சைவப் பொருளியலாகும். இதற்கு மாறாக நம் தேவைகளை வீணாகப் பெருக்கி நம் உழைப்பை மிகச் சுருக்கி வாழ முயன்றால் முடிவு அனைவர்க்கும் தாழ்வுதான், அழிவுதான்! உலகத்தில் வாழவேண்டிய முறையை மேலைநாட்டு அறிஞர் கார்லைல் (Carlyle) சுருக்கமாக அறிவுறுத்துகிறார். மேல் எண்ணை மிகுதியாக்க வேண்டா, கீழ் எண்ணைக் குறைத்துக் கொள்க'. (Do not increase the numerator, decrease the denominator) வள்ளுவர் வாக்கில் கூறவேண்டுமானால் போகாறு அகலாமல் பார்த்துக் கொண்டால் ஆகாறு அளவிட்டி தெனக் கவலைப்படத் தேவையிராது. இவ்வாழ்வியல் உண்மையை நம் சைவ மரபில் பார்ப்போம்.

*ஆழித்தேர் மறுகிற்பயில் மெய்த்திரு*
*நீறிட்டான் மதிற்சுற்றிய பொற்றிரு*
*ஆனைக்காவினில் அப்பர் ப்ரியப்படு பெருமாளே.*

என்பது திரு ஆனைக்காவின் திருப்புகழ்.

'அகில காரணர் விளைஞர்பால் பூதியை அளித்து, முகில் சுலாவ நன்கிழைத்த மாமதில்' என்பது திருவானைக்காபுராணம். திருவானைக்காவில் நான்காவது மதில் மிகப் பெரியது என்பர். சிவபிரான் சித்தராய் எழுந்தருளித் திருநீற்றையே கூலியாகக் கொடுத்தார் என்றும் அவர் கொடுத்த திருநீறு அவரவர் உண்மையாக உழைத்த அளவுக்குப் பொற்காசாக மாறியது என்றும் கூறப்படுகிறது. அகவிலைப்படியைக் கணக்கிடுவது விலைவாசிகளுக்கு ஏற்ப ஊதியத்தைக் கூட்டியோ பெருக்கியோ தருவது என்பவை யெல்லாம் பொருளியல் துறையினர் வகுக்கும் முறைகள். சமயத்தின் அடிப்படையில், குறிப்பாக நம் சமயத்தின் அடிப்படையில் பொருளியல் அமைக்க முடியுமா என்று பார்ப்போம்.

இவ்வுலக வாழ்க்கை ஆன்மிகப் பயணத்தின் ஒரு பகுதி என்பது நமது கொள்கை. எனவே ஆக்கைக்கே இரைதேடி அலமறுவதும் தாம் ஊனைப் பெருக்கி உள்ளொளியைச் சுருக்குவதுமாகிய போக்கைத் தவிர்த்து உழைப்பையே நம் கடமையும் உரிமையுமாகக் கருதினால்

நாம் பெறும் ஊதியம் யாதாயினும் அது நமது தேவைகளுக்குத் தக்கதாயிருக்கத் திருவருள் துணை செய்யும். இந்நோக்கம் நம் உள்ளத்தில் குடி கொண்டால் இறைவன் நம் தேவைக்கேற்பப் பொன் தருவதுடன் மெய்ப் பொருளும் தருவான். திருநீறு அகத்தூய்மைக்கு உதவுவதில் தன்னலப்போக்கை மாற்றி மன்னுயிர்க்கு உழைக்கும் மனப்பான்மையையும் தரும். இதனால் உள அமைதி ஏற்படுவதுடன் ஆன்மியப் பயணமும் தடையுறாமல் முன்னேறும். தொண்டினையே குறிக்கோளாகக் கொண்டு வாழ்ந்த அடியார்கள் ஈர நெஞ்சினரா யிருந்ததால் யாதும் குறைவிலராயு மிருந்தனர். இவ்வாறு உயிர்கள் வளர்வதும் வாழ்வதும் எங்ஙனம்? ‘என்னை வளர்ப்பவனே’ என்று மாணிக்கவாசகர் இறைவனை விளிக்கின்றார். இறைவன் உயிர்கள் வளர்க்கும் முறையை விளக்குவதாக உள்ளது பின்வரும் திருவிசைப்பா.

*புனல்படா உருகிமண்டழல் வெதும்பிப்*
*பூம்புனல் பொதிந்துயி ரளிக்கும்*
*வினைபடுநிறை போனிறைந்த வேதகத்தென்*
*மனநெக மகிழ்ந்த பேரொளியே*
*முனைபடு மதின்மூன்றெரித்த நாயகனே*
*முகத்தலை யகத்தமர்ந் தடியேன்*
*வினைபடுமுடனீ புகுந்து நின்றமையால்*
*விழுமிய விமான மாயினதே.*

ஆணவத்தின் காரணமாக உயிர்கள் வினைபடுமுடலில் புகுந்து பிறப்பு இறப்பு என்னும் சுழலில் சிக்கி வாடுகின்றன. வினைப்பிறவி யென்கின்ற வேதனையில் அகப்பட்டுத் தனைச் சிறிதும் நினையாத தளர்வெய்திக் கிடக்கும் நிலை இது. இந்நிலை மாறி மறதி என்பது சிறிதுமிராது இறைவனையே நினைந்துருகும் நிலை ஏற்பட வேண்டும். காருறு கண்ணியர் ஐம்புலன் ஆற்றங்கரை மரமாவேர் உறும் உயிர்களின் அவல நிலையை மாற்றி வளர்ப்பவன் இறைவனே. இறைவனது வளர்ப்பு முறை மேற் சொன்ன திருவிசைப்பாவில் ஓர் எளிய எடுத்துக்காட்டால் விளக்கப் பெறுகிறது. மண்ணினால் நீர்ச்சால் செய்து வைத்தால் அந்நிலையில் நீர்படும்போது அது கரையத் தொடங்கும். நீரைத் தாங்கி நிற்கும் ஆற்றலும் அதற்கப்போதில்லை. மண்ணால் செய்த சால் மிகுந்த தீயிலே வைத்துச் சுட்டால் மண்டழலால் வெதுப்பப்பட்ட அச்சால் திண்மை பெற்று நீரைத் தன்னகத்தேதாங்கி உயிர்களின் நீர் வேட்கையைத் தணிக்கவல்லதாகிறது. இவ்வாறு உயிர்களும்

பக்குவப்பட வேண்டும். உயிர்கள் உருகுவதில் அல்வழியும் நல்வழியும் இருக்கின்றன. அல்வழி, 'வேனில் வேள் மலர்கணைக்கும் வெண்ணகைச் செவ்வாய்க்கரிய பானலார் கண்ணியர்க்கும் பதைத்துருகும் பாழ்நெஞ்'சின் உருக்கம். நல்வழி, 'கூத்தனின் குரைகழற்கே கற்றாவின் மனம்போலக் கசிந்துருகுதல்.' நல்வழி உருக்கம் ஒரோவழி நிகழ்வதாயிராது எப்போதும் இருந்து கொண்டிருப்பது. 'உருகுவது உள்ளங் கொண்டு ஓர் உருச் செய்தாங்கு அள்ளூறு ஆக்கை'யை உயிர்கள் அடையும்படி வளர்ப்பதையே இறைவன் உயிர் வளர்ச்சியின் முடிநிலையாய் வைத்துள்ளார் போலும்! புலன்வழி இயங்கியும் மயங்கியும் கரைந்து போகாமல் ஈசனுக்கன்புடையவராய் அடியவர்க்கன்புடையவராய் எவ்வுயிர்க்கும் அன்புடையவராய் இவற்றில் தமக்கும் அன்புடையவராய் உயிர்கள் வளர்ச்சியுறுகின்றன. மண்ணால் செய்யப்பட்ட சாலை மண்டழலைக் கொண்டு வெதுப்புவதைப் போல உயிர்களையும் இறைவன் ஞானத் தீயிலிடுகிறான்.

*யான்செய்தேன் பிறர்செய்தார் என்னதியா னென்னும்*
*இக்கோணை ஞானஎரியால் வெதுப்பி நிமிர்த்துத்*
*தான்செவ்வே நின்றிட வத்தத்துவன் தான்நேரே*
*தனையளித்து முன்னிற்கும் வினையொளித் திட்டோடும்.*

சித்தியார், 305

இவ்வாறு ஞானத்தீயில் வெதுப்பி நிமிர்த்துவதை இரும்பையோ செம்பையோ பொன்னாக்கும் வேதகமாகவும் கருதலாம். 'செம்பொன் னாகும் சிவாயநம என்னில்'. இனி, வேதகத்தால் தவறான உருக்கத்தைத் தவிர்த்துச் சரியான உருக்கம் கைவரப் பெற்றால் - இறைவன் திறத்தும் அனைத்து உயிர்களின் திறத்தும் உருகும் அன்பை நம்முள் பெற்றால் - நீர்ச்சுழலில் உள்ள நீரைப் போலக் கொள்ளக்குறையும் அளவினதாக இராமல் இந்த அன்பு வற்றாத ஊற்றாகி உலகூட்டும். சரியான உருக்கத்தை நிலையாக உயிர்கள் பெறும்போது உயிர்களின் துன்பத்தால் துயருறும் இறைவன், 'உயிர்கள் மனம் நெகத்தான் அகமகிழ்கிறான். உயிர்கள் மயர்வு அறும்போது இறைவன் துயர் அறுகிறான்' என்று இராமாநுஜர் திரு வாய் மொழிக்கு விளக்கம் கூறியதுபோல் நாமும் 'என் மனநெக மகிழ்ந்த பேரொளியே' என்பதற்கு உரை காணலாமென்று நினைக்கிறேன்.

நீர்ச்சால் உவமையைப் போலவே திருவாசகத்தில் வரும் சுரைக்காய் உவமையையும் நினைவு கூறலாம். சுரைக்காயைச்

சமைத்துச் சாப்பிடலாம். இந்த வகையில் அதன் பயன் நீடித்திராது உடனடியாகக் கழியும். அதன் உட்பகுதியை நீக்கி வெயிலில் காயவைத்தால் சுரைக்காய் நீண்ட காலம் எதையாவது சேமித்து வைக்க உதவும். இவ்வகையில் பக்குவப்படுத்தப்பட்ட சுரையைப் போல நாம் மாற வேண்டும்.

*மானோர் பங்கா வந்திப்பார் மதுரக்கனியே மனம்நெகா*
*நானோர் தோளாச் சுரையொத்தால் நம்பிஇத்தால் வாழ்ந்தாயே*
*ஊனே புகுந்த உனையுணர்ந்தே உருகிப்பெருகும் உள்ளத்தைக்*
*கோனே அருளும் காலந்தான் கொடியேற் கொன்றே கூடுவதே.*

உருகினால் கரைந்து மறைவது உலகியல், உருகினால் உருகி நிலைத்திருப்பது அருளியல் ! நல்ல புதுமை!

சைவம் வாழ, நாம் வாழ, உய்யும் வகையின் உயிர்ப்பான இவ்வுருக்கத்தை உமையொருபாகன் தருவாராக!

# க. வச்சிரவேல் முதலியார்

**(70ஆம் ஆண்டு விழா - 1976 - சிவகங்கை - சைவர் மாநாடு)**

*''நீல மாமிடற் றால வாயிலான்,*
*பால தாயினார் ஞால மாள்வரே;*

*அடிகள் ஆலவாய் படிகொள் சம்பந்தன்*
*முடிவில் இன்தமிழ் செடிகள் நீக்குமே!''*

**சிவநேயச் செல்வர்களே! செல்வியர்களே!**

உங்கள் அனைவருக்கும் என் அன்பு கலந்த வணக்கத்தைச் செலுத்திக் கொள்கிறேன். சிவகங்கை என்னும் தூய பெயரை உன்னும்போது பலவகையான உயர்ந்த கருத்துக்கள் நம் உள்ளத்தில் எழுகின்றன. இங்குள்ள பெருமக்கள் அனைத்திந்தியாவை, திருக்கைலை முதல் குமரிவரை உள்ள நிலப்பரப்பை, இணைத்து உணர்ந்து, சிவபெருமானால் உலகிற்கு வழங்கப்பட்ட சிவகங்கையை இங்குத் தங்களுக்குப் பயன்படும் தீர்த்தத்தில் காண்கின்றார்கள். காசியில் விளங்கி அருள்புரியும் உலக முதல்வனையே இங்கும் திருக்கோயில் கொண்டு அருள்புரிந்து வருவதாக நினைந்து வழிபட்டு வருகின்றார்கள். இந்த நிலப்பரப்பு எத்துணையோ வீரர்களின் வீரச் செயல்களை நமக்கு நினைவூட்டி, தொல்காப்பியம் விளக்கும் வாகைத்திணை ஒழுக்க நெறியை எடுத்துக்காட்டுவதாக இலங்குகிறது. கொடைச் சிறப்பினாலும் இவ்விடம் புகழ்பெற்று விளங்குவதை இதனைச் சூழ்ந்துள்ள திருத்தலங்களும் அவற்றின்கண் உள்ள ஆதீனத் திருமடங்களும் நினைவூட்டுகின்றன. இன்னும் மக்கள் குறைகளுக்குத் தீர்ப்பு வழங்கும் தெய்வ நிலையங்களும் (கொல்லங்குடிகாளி) கொல்லங்குடி போன்ற அணுக்கமான இடங்களில் உள்ளன. இத்தகைய பல சிறப்புக்கள் வாய்ந்துள்ள சிவகங்கைச் சீர்மையில் நமது சைவ சித்தாந்த மகா சமாசத்தின் 70வது ஆண்டு நிறைவு விழாவும் மாநாடும் நடப்பது மிகவும் பொருத்தமேயாம்.

இச்சீரிய ஆண்டு விழாவிற்கு ஒன்றுக்கும் பற்றாத என்னையும் தலைமை தாங்கி நடத்தும்படி பணித்தமைக்குச் சமாசச்

செயற்குழுவினருக்கும் மற்றும் அன்பர்களுக்கும் என் உளமார்ந்த நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

தலைமை உரையில் நம் சமய மரபு, தத்துவம் என்பவற்றில் நாம் மறவாது கடைப்பிடிக்க வேண்டிய சில கருத்துக்களை என் சிந்தனைக்கு ஏற்றபடி இங்குத் தெரிவிக்கலாம் என எண்ணுகின்றேன். முதலாவதாக இறைவன் நிலவுக்கதிர் முடித்த வரலாற்றினை எண்ணுவோமாக. தக்கன் சாபத்தினால் குறைந்து அடைந்த மதியினை இறைவன் தன் முடியில் எடுத்து வைத்துக் கொண்டதாக மக்கள் கூறிவருவதைக் கேட்கின்றோம். ஆனால் அது பொருத்தமன்று. மதிக்கு 16 கலைகள் உள்ளன என்று நூல்கள் தெரிவிக்கின்றன. கலை என்பது ஒளியின் ஒரு கூறு. இப்பொழுது மதியினிடத்தில் 15 கலைகளே முறையாக வளர்ந்தும் தேய்ந்தும் வருகின்றன என்பதைக் கண்டு அறிகின்றோம். 16வது கலை எங்குள்ளது என்பது வினா? அக்கலைதான் இறைவன் சென்னியில் உள்ளது. மதியையே இறைவன் தன் சென்னியில் ஏற்றுக் கொண்டான் என்பதினும் அதன் கலையை வாங்கிச் சூடிக் கொண்டான் என்பது சிறப்புடையது. மேலும் குறைந்தடைவார் ஒருவர் தம்மிடத்து எஞ்சியுள்ள பொருளை இறைவனுக்கு என வைப்பின் அவர் அப்பொருளில் வளர்ச்சி யடைவர் என்பதையும் இது காட்டும்.

தம் குழவிப் பருவத்தில் திருஞானசம்பந்தர் உமையம்மை, சிவபிரான் இருவராலும் அருளப்பெற்றவர். உமையம்மை திருமுலைப் பாலை வள்ளத்துக்கறந்தருளி, எண்ணரிய சிவஞானத்தின்னமுதம் குழைத்தருளி உண் அடிசில் என ஊட்டினார்; இங்ஙனம் அம்மை ஊட்ட, எதிர்நோக்கும் கண்மலர் நீர் துடைத்தருளிக் கையிற் பொற்கிண்ணம் அளித்து, அண்ணலை அங்கு அழுகை தீர்த்தருள் புரிந்தார் அங்கணனார். யாவருக்கும் தந்தை தாய் எனும் இவர் இப்படி அளித்தார். அதனால் அவர் ஆளுடைய பிள்ளையாராய் அகில தேவருக்கும் முனிவருக்கும் தெரிவரிய தாவில் தனிச் சிவஞான சம்பந்தர் ஆயினார் எனச் சேக்கிழார் கூறியுள்ளது நோக்கி உணரத் தக்கது.

அந்நிலையில் அவர் உணர்ந்த ஞானத்தைச் சேக்கிழார் அடிகள் பின்வருமாறு அருளிச் செய்கின்றார்.

*''சிவனடியே சிந்திக்கும் திருப்பெருகு சிவஞானம்*
*பவமதனை அறமாற்றும் பாங்கினில் ஓங்கியஞானம்*
*உவமையிலாக் கலைஞானம் உணர்வரிய மெய்ஞ்ஞானம்*
*தவமுதல்வர் சம்பந்தர் தாம்உணர்ந்தார் அந்நிலையில்''*

இப்பாட்டில் ஞானம் என்னும் சொல் நான்குமுறை வருகின்றது. அவற்றுள் முதற்கண் சிந்திககும் திருப்பெருகு சிவஞானம் என்பது உள்ளது. கேட்டல், சிந்தித்தல் தெளிதல், நிட்டை என்னும் நான்கையும் ஞானம் எனக் குறித்தல் மெய்ந் நூல்களின் மரபு. ஆதலால் அந்த நான்குமே குறிக்கப்பட்டன எனக் கொண்டனர் ஒரு சார் உரையாசிரியர். உவமையிலாக் கலைஞானம் என்பது கேட்டல், சிவனடியே சிந்திக்கும் திருப்பெருகு சிவஞானம் என்பது சிந்தித்தல், பவமதனை அறமாற்றும் பாங்கினில் ஓங்கிய ஞானம் என்பது தெளிதல், மற்றையது நிட்டை எனக் கொண்டனர் அவர்.

இப்பொருளைப் பொருந்தும் எனக் கொள்ளுதற்குக் கேட்டல், முதலிய நான்கும் முறைப்பட வைத்துக் கூறப்படவில்லை. மேலும் கேட்டல், தெளிதல், நிட்டை என்பவை தெளிவாகக் குறிக்கப்படவும் இல்லை. சிந்தித்தலும் சிவனடியைச் சிந்திப்பதாக உள்ளதே யன்றிக் கேட்டலைச் சிந்திப்பதாகக் கூறப்படவில்லை. மேலும், இவை நூல்பற்றி உணரும் வைநயிகருக்குப் படிமுறையில் நிகழும் ஞான சாதனங்களேயன்றி, சாமுசித்தராய்ப் பிரளயாகலரைப் போல அம்மையப்பரால் அருளப்பெற்று உள்நிறைந்து பொழிந்தெழுந்த உயர்ஞானமாகிய தாவில் தனிச் சிவஞானத்தைக் குறிக்கும் சொற்களும் அல்ல என மறுத்து, ''ஞானபானு'' என வேறுரை பகர்ந்தனர் ஒரு பெரியார். அவர் கொண்ட பொருள்:

''சிவபெருமானது திருவடியையே சிந்திக்கிற (அருட்) செல்வம் பெருகுதற்குக் காரணமாகிய சிவஞானமும், பிறவிக்குக் காரணமாய மலமாயா கன்மங்களை அற ஒழிக்கும் முறைமையால் உயர்ந்த அவன் பணி நிற்கும் ஞானமும், ஒப்பில்லாத பூரண கலைஞானமும், உணர்தற்கரிய மெய்ஞ்ஞானமாகிய அனுபூதி ஞானமும் முதன்மையாகிய தவப்பேற்றினை உடையவராகிய ஆளுடைய பிள்ளையார் ஞானபோனகம் ஊட்டியருளிய அம்மையுடனே சிவபெருமானைத் தரிசித்த அந்நிலையிலேயே உணரப் பெற்றனர்'' என்பது. இவ்வுரையில் பின் இரண்டு ஞானமும் முறையே அபரதடத்தமாகிய கலைஞானத்தையும், பரசொரூபத் திருவருள் ஞானத்தையும் குறிக்கும் என உடன் பட்டுக் கொள்ளப்பட்டன. முன் இரண்டு ஞானமும் முறையே ஏகனாகி இறையடி சிந்தித்தலையும், இறைபணி நிற்றலாகிய சிவாலயந் தொழுதலையும் திருப்பதிகம் அருளிச் செய்தலையுங் குறிக்கும் என, திருஞானசம்பந்தர் அருள் வாழ்க்கையின் மேலனவாக வைத்து, உரைக்கப்பட்டன. இவ்வாறு

1891ல் மதுரை மகாவித்துவான் திரு. சு. சபாபதி முதலியார் அவர்கள் உரைத்துள்ளனர்.

இனித் திருவாடுதுறை ஆதீனத்தைச் சார்ந்த ஸ்ரீகச்சியப்ப முனிவர் இவர்களுக்கு முன்பே இப்பாட்டின் பொருளை மிகச் சிந்தித்துணர்ந்து உணர்த்தியுள்ளனர். பின்னர் கூறப்படும், ஞானம் இரண்டும் முறையே அபரஞானமும் பரஞானமும் ஆதல் தெளியப்படுதலின், முன் உள்ள சிவனடியே சிந்திக்கும் திருப்பெருகு சிவஞானம் என்பதும், பவமதனை அறமாற்றும் பாங்கினில் ஓங்கிய ஞானம் என்பதும் அவற்றை முறையே விசேடிக்கும் அடைகள் எனக் கொண்டனர் கச்சியப்ப முனிவர். அவ்வடைகள் அபரஞான, பரஞானங்களின் பயன் உணர்த்துவனவாய், இனஞ்சுட்டாது இயைபின்மை மாத்திரை நீக்கி வந்தன எனக் கொண்டருளினர் முனிவர்பிரான். இவர் தாம் கொண்ட பொருளைத் தணிகைப் புராணத்தில்,

*மேவருஞானம் இரண்(டு) அவற் றொன்று*
*விமலனார் பாததா மரையே*
*ஓவறும் அன்பின் உணர்திரு அளிக்கும்*
*ஒப்பிலா உயர்கலை ஞானம்*
*தாவரும் பவத்தை வேரொடுங் களையும்*
*தக்கமெய்ஞ் ஞானம் ஒன்(று) இவற்றால்*
*சாவதும் பிறப்பும் தணப்புறச் சிவத்தைச்*
*சார்ந்(து) அதுவாய் நிற்றல் யோகம்.*

என்னும் திருவிருத்தத்தில் குறித்தருளுகின்றார்.

பெரிய புராணத்தில் ''சிவனடியே சிந்திக்கும் திரு'' என்பதனால், சிந்தித்தலையே திரு என்றருளினார் என்பதும், பெருகு என்பது பெருகுவிக்கும் எனப் பொருள்படும் என்பதும் கலை ஞானத்தின் பயன் சிவனடியையே சிந்தித்து அவன் அருள் வழிப்பட்டு ஒழுகுதலே ஆகும் என்பதும் இப்பாட்டால் விளங்கும் கருத்துக்கள். மேலும், சிலர்க்குத் திருவருள் ஞானம் விளங்கிக் கலைஞானம் விளங்காமல் இருத்தல்கூடும். திருஞான சம்பந்தருக்கு அவ்வாறன்றி உண்மை ஞானம் உணர்ந்த அளவில் நில்லாது, அதனையே உயர்ஞானத் திருமொழியால் எடுத்தோதி எழுதுமறை அளித்து நற்றமிழ்க்கு இன்துணையாதலும், நான் மறைப் பொருளைத் தெரிந்துணர்த்தி அதற்குத் தனித்துணை யாதலும் ஆகிய ஆசிரியத் தலைமையினையும் உடன் எய்தினார் என்பதும் இதனால் விளங்குதல்

இனிது உணரப்படும். இவ்வாற்றால் கச்சியப்ப முனிவர் கொண்ட பொருளே மரபாகக் கொள்ளற்பாலது என்பது என் கருத்து.

இனி, முருகப் பெருமானை யுற்றுக் கூறும்போது வேல் அவர் தம் ஞான சத்தி எனவும், தெய்வயானையம்மையார் கிரியாசத்தி எனவும் வள்ளியம்மையார் இச்சாசத்தி எனவும் கூறிவருதல் விரிவுரை யாளர்களது வழக்கமாக உள்ளது. தணிகைப் புராணத்தில் ஞானசத்திதரன் என்னும் திருக்கோலத்தை விளக்கும்போது,

*''இச்சா ஞானக் கிரியையெனும்*
*இவைமுன் றிலையாக் கிளைத்தெழுந்திட்(டு)*
*அச்சா ணாழி அறச்சுவற்றும்*
*அயில்வேல் ஒருகை வலத்த மைத்து*
*நச்சா தவரைத் தெறும்ஒருகை*
*நளினங் குறங்கின் அமைத்திமையோர்*
*விச்சா தரர்சூழ் ஞானசத்தி*
*தரன(து) உருவம் விதிப்போரும்''*

எனக் கூறுகின்றார்.

இதனால் வேல் ஞானசத்தி என ஒரு கூறாய் மட்டும் அமையாது அறிவு விழைவு செயல் என்னும் மூன்றுக்கும் முதலாக உள்ள திருவருட் சத்தியின் பிழம்பே என்பது பெறப்படுகின்றது. மேலும் அவர் திருத்தணிகை ஆற்றுப்படையில் வானவர்கோன் மகளை ஞானசத்தி எனவும், வள்ளியம்மையைக் கிரியா சத்தி எனவும் கூறுகின்றார். பாம்பன் குமரகுருதாச சுவாமிகள் கருத்தும் இதுவே எனத் தெரிகின்றது. கச்சியப்ப சிவாசாரியார் தாம் அருளிச் செய்த கந்தபுராணத்தில்,

*''கல்லகங் குடைந்த செவ்வேற் கந்தனோர் தருவ தாக*
*வல்லியர் கிரியைஞான வல்லியின் கிளையாய்ச் சூழப்*
*பல்லுயிர்க் கருளைப் பூத்துப் பவநெறி காய்த்திட் டன்பர்*
*எல்லவர் தமக்கும் முத்தி இருங்கனி உதவும் என்றும்''*

எனக் கூறுதலின், உயர்ந்தோர் மரபு பற்றிக் கூறும்போது தெய்வ யானையம்மையை ஞானசத்தி எனவும், வள்ளியம்மையைக் கிரியா சத்தி எனவும் வழங்குவதே பண்டைய மரபு எனத் தெரிகின்றது.

# மறை திருநாவுக்கரசு அவர்கள்

(72ஆம் ஆண்டு விழா - 1978 - சின்னமனூர் - சைவர் மாநாடு)

*பூழியர்கோன் வெப்பொழித்த புகலியர்கோன் கழல்போற்றி,*
*ஆழிமிசைக் கன்மிதப்பில் அணைந்தபிரான் அடிபோற்றி*
*வாழிதிரு நாவலூர் வன்தொண்டர் பதம்போற்றி,*
*ஊழிமலி திருவாத ஊரர்திருத் தாள்போற்றி*

** ''உலகமெலாம் தொழுதேத்தும் பெரும்புலவன்*
*உரைவரம்பு கண்ட செல்வன்*
*திலகமெனும் சித்தாந்த நிலைதெளிந்தோன்*
*திட்பநுட்பம் செறிந்த நூல்கள்*
*பலபலவாச் செய்தளித்துத் தமிழகத்தை*
*அடிமைகொண்ட பாண்மை யாளன்*
*அலகில் அரும் புகழுறுமா மறைமலையின்*
*அடிகளடி இணைகள் போற்றி*

*சைவத்தின் மேற்சமயம் வேறிலை அதிற் சார்சிவமாம்*
*தெய்வத்தின் மேல்தெய்வம் இல்எனும் நான்மறைச் செம்பொருள் வாய்*
*மைவைத்த சீர்திருத் தேவாரமும் திருவாசகமும்*
*உய்வைத்தரச் செய்தநால்வர் பொற்றாள் எம் உயிர்த்துணையே'*

## முன்னுரை

சிவனடியே சிந்திக்குந் திருவுடைச் சான்றோர்களே! பெரியோர்களே! தாய்மார்களே! இளைஞர்களே! வாழ்க! வணக்கம்.

''பாண்டி நாடே நம் அம்மையப்பராம் சிவபெருமானுக்குப் பழமையான பதியாம்'' என்று மணிவாசகப் பெருமான் அருளிச் செய்கின்றார். இதன் பெருமை பேசின் அஃதோர் நூலாகி விடும். இத்தகைய சிவநட்டிலே ஈராயிரம் ஆண்டுகட்கு முன் அரசு புரிந்த

---

* இப்பாட்டில் ''அலகில அரும்புகழ்...'' என்றது வரையில் மறைந்த பேராசிரியர் சென்னை, மணி. திருநாவுக்கரசு முதலியார் பாட்டு. இவர் அடிகளின் முதல் மாணவர்.

குறுநில மன்னன் கடியநெடு வேட்டுவன் என்பவனின் மலையே, கோடைக்கானல். பெருமை மிக்க இவ்வழகிய மலையின் அடியிடத்தில் எழில் கொழிக்கும் சிறுநகராம் இச்சின்னமனூரிலே நம் சைவர் மாநாடு நடப்பது மிக இனிதாகும்.

## அண்ணாமலைப் பிள்ளை

இச்சீர்மிகு மாநாடு இங்கு நிகழ மூல காரணர், முப்பது ஆண்டுகட்கு முன் இவ்வூரில் வாழ்ந்த சிவத்தரு. அண்ணாமலைப் பிள்ளையவர்கள் ஆவார். இப்பெரியார் சிவ வேடப் பொலிவுடன் செம்மேனியம்மானாகக் காட்சியளிப்பார். சிவநெறியில் ஆழ்ந்த புலமையாளர். சிவபூசைச் செம்மல். வாணாள் எல்லாம் அன்பர் பலர்க்குச் சிவநெறியூட்டிச் சிவபூசைப் பேற்றை வழங்கியர். இவ்வூரில் மணிவாசகர்பால் கொண்ட பெரும் பித்தால் அப்பெரு மானுக்குத் தனிக்கோயில் ஒன்றமைத்தவர். அவர்தம் தொண்டின் பயனே இப்பேரவை. அப்பெரியார் திருவடிகட்கு என் நெடு வணக்கங்கள் பல.

## அவையடக்கம்

விழாக்களுக்குத் தலைமை தாங்கும் தகவுடையார்க்கு தலைமை, சிறப்பளிக்காது; அவர்களால் விழா சிறப்படையும். ஆனாலிங்கே தொண்டனாகிய அடியேன் தலைமையிலிருப்பது எனக்குச் சிறப்பளிப்பதாகும்.

இப்பெருமையை நம் சமாசத்தார் எளியேனுக்கு வழங்கியதை எண்ணும்போது மணிவாசகப் பெருந்தகையார் அருளிய,

*ஆயநான் மறையவனும் நீயே ஆதல்*
*அறிந்துயான் யாவரினுங் கடையன் ஆய*
*நாயினேன் ஆதலையும் நோக்கிக் கண்டு*
*நாதனே நான்உனக்கு ஓர் அன்பன் என்பேன்*
*ஆயினேன் ஆதலால் ஆண்டு கொண்டாய்*
*அடியார்தாம் இல்லையே அன்றி மற்றோர்*
*பேயனேன் இதுதான் நின்பெருமை என்றே,*
*எம்பெருமான் என்சொல்லிப் பேசு கேனே*

என்னும் திருப்பாட்டை நினைவு கூர்கின்றேன். இதனையே நம் சமாசத்தார்க்கு என் பணிவான நன்றியாகக் கூறிக்கொள் கின்றேன்.

## முன்னோர் பெருமை போற்றல்

செந்தமிழ் விளங்கச் சிவநெறி ஓங்க இச்சமாசத்தை நிறுவிய எந்தையார், இதனைத் தாய்போல் காத்து வளர்த்த சிவத்திரு. ஞானியாரடிகள், வார வழிபாட்டுத் தந்தை ச. சச்சிதானந்தம் பிள்ளை, ம. பாலசுப்பிரமணிய முதலியார், திரு.வி.க. ஆகிய சான்றோர்கட்கும், சமாச விழாக்கட்குத் தலைவர்களாய் இருந்து சிறப்பித்த சர். பொன்னம்பலம் இராமநாதன், ஜெ. எம். நல்லசாமிப் பிள்ளை, கா. சுப்பிரமணிய பிள்ளை, பண்டிதமணி மு. கதிரேசன் செட்டியார், நாவலர் - பண்டித - ந.மு. வேங்கடசாமி நாட்டார், முதலாம் வரலாற்றுப் பேர் அறிஞர்கட்கும்எளியேன் நெடுவணக்கங்கள் பலப்பல. இப்பெரியோர்கள் அமர்ந்த பெருமனையின் சிறப்பு என்னே! என்னே! இதில் அமரும் எளியேன் சிறுமை என்னே! என்னே! எல்லாம் சிவபெருமான் ஆடல். அடியேன் என் செய்வேன்?

மற்றும், சமாசத்தை மேற்குறித்த பெருமக்களோடு தம்தம் பெரு நாவன்மையாலும், புலமையாலும் வளர்த்துதவிய திருக்கோவிலூர் குமாரசாமி பிள்ளை, அ.மு. சரவண முதலியார், நாகர்கோவில் ஆறுமுக நாவலர் முதலாம் பேச்சாளர்கட்கும், சமாசத்தைத் தம் பெருங்கொடையால் வாழ்விக்கும் மறைந்த அ. சோமசுந்தரஞ் செட்டியார், இன்றுவரை சமாசத்தை வளர்க்கும் பணியில் முனைந்துள்ள தலைவர்கள், செயலாளர்கள், செயற்குழு உறுப்பினர்கள், புலவர்கள், பொது உறுப்பினர்கள், அன்பர்கள், யாவர்க்கும் என் பணிவான வணக்கங்கள் பலப்பல உரியனவாகும்.

## நால்வர் பொற்றாள் நம் உயிர்த்துணை

இனி, யான் தலைமைப் பேருரையாகப் பேச மேற்கொண்ட "நால்வர் பொற்றாள் நம்முயிர்த் துணை" என்னும் பொருள் பற்றி ஒரு சில முதன்மையான சிவநெறிக் கருத்துக்களை இங்குக் கூறுவேன்.

### (க) இறைவன்

எல்லாம் வல்ல மெய்ப்பொருளாம் கடவுள் ஒன்றே உண்டு. அவர் பிறப்பு, இறப்பு இல்லாதவர்; எங்கும் நிறைந்தவர்; முற்றறிவினர்; அன்பு நிறைவானவர்; பேர் இன்ப நிலையினர். அருவம், உருவம், அருவுருவம் ஆகிய முப்பொருள்களிலும் கலந்துள்ளவர், இவற்றைக் கடந்து அப்பாலும் உள்ளவர், அருளே குணமாக உடையவர், எவ் வகையாலும் யாவராலும் உணர முடியாதவர், ஆனால் அடியார்கட்காக அவர்கள் விரும்பும் வடிவில் தோன்றிப் பேரின்பந் தருபவர்.

*கரணங்கள் எல்லாங் கடந்துநின்ற கறைமிடற்றன்*
*சரணங்களே சென்று சார்தலுமே தான்எனக்கு*
*மரணம் பிறப்பென்னும் இவைஇரண்டின் மயக்கறுத்த*
*கருணைக் கடலுக்கே சென்றுஊதாய் கோத்தும்பீ.*

*சோதியாய்த் தோன்றும் உருவமே அருவாம்*
*ஒருவனே சொல்லுதற்கரிய*
*ஆதியே நடுவே அந்தமே பந்தம்அறுக்கும்*
*ஆனந்த மாகடலே.*

- மணிவாசகர்

*யானே தவமுடையேன் என்நெஞ்சே நன்னெஞ்சம்*
*யானே பிறப்பறுப்பான் எண்ணினேன் - யானேஅக்*
*கைம்மா உரிபோர்த்த கண்ணுதலான் வெண்ணீற்று*
*அம்மானுக் காளாயி னேன்*

-காரைக்காலம்மையார்

*உலகெலாம் உணர்ந்து ஓதற் கரியவன்*
*நிலவு லாவிய நீர்மலி வேணியன்*
*அலகில் சோதியன் அம்பலத் தாடுவான்*
*மலர்சி லம்படி வாழ்த்தி வணங்குவாம்*

-சேக்கிழார்

**சுந்தரர்-**

*தீதகன்று உலகம் உய்யத் திருஅவதாரஞ் செய்தார்*

**அப்பர்-**

*உலகில் வளர்இருள் நீங்கி ஒளிவிளங்கு கதிரவன்போல்*
*அலகில் கலைத்துறை தழைப்ப அருந்தவத்தோர் நெறிவாழ*
*மலரும் மருள்நீக்கியார் வந்து அவதாரஞ் செய்தார்*

**சம்பந்தர் -**

*தவம்பெருக்கும் சண்பையிலே தாவில் சராசரங்களெல்லாம்*
*சிவம்பெருக்கும் பிள்ளையார் திருஅவதாரம் செய்தார்*

-பெரிய புராணம்

**மணிவாசகர்-**

*சேய இளம்பரிதி எனச் சிவனருளால் அவதரித்தார்*

-திருவிளையாடற் புராணம்

நல்லொழுக்கங்களால் நிறைந்தார்க்கே சிவபிரான் வீடு அருள்வான் என்பதனைப் பின்வரும் திருமுறைப் பாடல்களால் அறியலாம்.

*அகனமர்ந்த அன்பினராய் அறுபகை செற்று*
*ஐம்புலனும் அடக்கி ஞானப்*
*புகலுடையோர் தம்முள்ளப் புண்டரிகத்து*
*உள்ளிருக்கும் புராணர்...*

-சம்பந்தர்

*கரவு ஆடும் வன்னெஞ்சர்க் கரியானைக் கரவார்பால்*
*விரவு ஆடும் பெருமான்... .... ....*
*பொய்யஞ்சி வாய்மைகள் பேசிப்புகழ் புரிந்தார்க்கருள்*
*செய்யும் ....... ....... அம்மானே.*

-அப்பர்

*களவுபொய் காமம்கோபம் முதலிய குற்றங் காய்ந்தார்.*

*நம்பரடியார் அணைந்தால் நல்லதிரு வமுதளித்தும்,*
*செம்பொன்னும் நவமணியும் செழுந்துகிலும் முதலான*
*தம்பரிவினால் அவர்க்குந் தகுதியின் வேண்டுவ கொடுத்தும்.*

-பெரிய புராணம்

*இரப்பவர்க் கீய வைத்தார் ஈபவர்க்கு அருளும் வைத்தார்*
*கரப்பவர் தங்கட்கெல்லாம் கடுநரகங்கள் வைத்தார்*

-அப்பர்

*பொய்யாத நாவதனால் புகழ்வார்கள் மனத்தினுள்ளே*
*நெய்யே நின்றெரியும் விளக்கேஒத்த தேவர்பிரான்*

*மெய்யனை மெய்யில் நின்றுணர்வானை*
*மெய்யிலாதவர்களுக் கெல்லாம்*
*பொய்யனை ... ... ...*

-சுந்தரர்

*முத்தனே முதல்வா முக்கணா முனிவா*
*மொட்டறா மலர்பறித் திறைஞ்சிப்*
*பத்தியாய் நினைந்து பரவுவார் தமக்குப்*
*பரகதி கொடுத்து அருள் செய்யுஞ்*
*சித்தனே.... ... .... ..*

-திருவாசகம்

*புண்ணியஞ் செய்வார்க்குப் பூவுண்டு நீருண்டு*
*அண்ணல் அதுகண்டு அருள்புரியா நிற்கும்*
*எண்ணிலி பாவிகள் எம்மிறை ஈசனை*
*நண்ணறி யாது நழுவுகின்றாரே*

-திருமூலர் திருமந்திரம்

*களித்துக் கலந்ததோர் காதற் கசிவொடுங் காவிரிவாய்க்*
*குளித்துத் தொழுதுமுன்னின்ற இப்பத்தரைக்கோதில் செந்தேன்*
*தெளித்துச் சுவை அமுதூட்டி அமரர்கள் சூழிருப்ப*
*அளித்துப் பெருஞ்செல்வம் ஆக்கும் ஐயாறன் அடித்தலமே*

-அப்பர்

## மெய்கண்ட நூல்கள்

உலகிற் சிறந்த நாடு நம் பாரதப் பெருநாடு. அதன் மணி முடிபோல் தெய்வமணி ஒளிவீசி நிற்பது நம் தமிழ்நாடு. மெய்யுணர்வு நிறையப் பெற்ற தெய்வம் நிகழ் சான்றோர் நிரம்பிய பேறுடைய நாடன்றோ இது. இத் தெய்வத் திருநாட்டில் வரலாற்றுக் காலத்திற்கு முன்பே - ஐயாயிரம் ஆண்டுகட்கு முன் வரையில் தோன்றி வளர்ந்து நிறைந்த அரிய மெய்யுணர்வுக் கருத்துக்கள் யாவும் தேவாரத் திருவாசகம் முதலாம் தெய்வத் திருமறைகளில் விரிவாகப் பாடப்பட்டுள்ளன. இவ்வுண்மையை மேலே காட்டிய அழகொழுகும் தெய்வத் தீந்தமிழ்த் திருமுறைப் பாடல்கள் ஒரு சிலவற்றால் நன்கறியலாம்.

நாயன்மார்கள் காலம் ஆயிரம் ஆண்டுகளுக்கு முற்பட்டது. அதற்குப்பின், ஏறத்தாழ 400 ஆண்டுகட்குப் பின் அஃதாவது இன்றைக்கு 600 ஆண்டுகட்கு முன் இலக்கியங் கண்டதற்கு இலக்கணம் இயம்பல் என்றவாறு மேற்கூறிய திருமுறைகளிலிருந்து கருத்துக்களை முறைப்படி அமைத்த மெய்கண்டநூல்கள் பதினான்குந் தோன்றின. அவை திருவுந்தியார், திருக்களிற்றுப்படியார், சிவஞான போதம், சிவஞான சித்தியார், சிவப்பிரகாசம், திருவருட் பயன் முதலியனவாகும். இவற்றுள் மெய்கண்ட தேவ நாயனார் அருளிய ''சிவஞான போதம்'' என்னும் நூலே தலையாயது. இச்சிவஞான போதம் இலக்கண முறைமை பற்றி, கடவுள், உயிர், பொருட்கள் (உலகம்) இவை மூன்றும் முதலும், முடிவும் இல்லாது என்றும் நிலையாக உள்ள பொருட்கள் என்றும் இவற்றின் இயல்பான குணங்கள் - தன்மைகள் - பண்புகள் இவை என்றும் கூறும். மேலும்

இம்மூன்றிற்கும் உள்ள தொடர்புகளையும், இத்தொடர்புகளின் பயன்களையும், உயிர்கள் உலகப் பொருட்களை விட்டுத் துன்ப நீக்கமும் இன்பப்பேறும் பெறல் வேண்டும் என்றும், அதற்கான வழி வகைகள் இன்ன இன்ன என்றும் எடுத்து விளம்பும். அன்றியும், அவ்வழியில் மாந்தர் நடந்து சிவபெருமான் திருவருளைப்பெறுதல் வேண்டும் என்றும் பெற்றால் பெறும் பெரும் பயனையும் எடுத் துரைக்கும். இறுதியாக இம்மையிலேயே இறைவன் பேரின்பத்தைப் பெற்றவர்களான மெய்யுணர்வுடையோரும் சிவனடிப் பேரின்பத்தில் திளைத்திருக்க, எப்போதும் அடியார் கூட்டத்தில் கலந்திருத்தல் வேண்டும்; அடியார் திருவேடத்தைப் போற்றல் வேண்டும்; (அஃதாவது அடியார்களுக்குத் தொண்டு செய்க என்றபடி) திருக்கோயில் வழிபாட்டிலும் ஈடுபட்டிருத்தல் வேண்டும் என்றும் அறிவுரை கூறுகின்றது.

திருஉந்தியார், திருக்களிற்றுப்படியார் தவிர இச்சிவஞான போத முழு முதல் நூலுக்கு விளக்க உரையாக எழுந்தனவே, மேற்கூறிய சிவஞான சித்தியார் முதலிய நூல்களாகும். இந்நூல்களில் சிவஞான போதத்தில் கூறப்பெறாத சிலபல கருத்துக்கள் கூறப்பட்டுள்ளன, அல்லது விளக்கப்பட்டுள்ளன, அல்லது தம் காலத்தில் தோன்றிய கருத்துக்களை வெளியிட்டுள்ளன. ஆனால் மெய்கண்ட நூல்கள் அனைத்தும் ஒத்த கருத்துடையனவே.

இவையெல்லாம் கருதியே - உணர்ந்தே

*வேதம்பசு அதன்பால் மெய்யாகமம் நால்வர்*
*ஓதுதமிழ் அதனின் உள்ளூறுநெய் - போதம்மிகு*
*நெய்யின் உறுசுவையாம் நீள்வெண்ணை மெய்கண்டான்*
*செய்த தமிழ் நூலின் திறம்*

என்ற திருவாக்கும் எழுந்தது.

சிவஞான போதச் சிவநெறியின் முடிந்த கொள்கைகட்கு, மாறான பிற சமயத் தவறான கொள்கைகளைச் சிவஞான சித்தியார் கூறும். பின் அவற்றைக் காரணங் கூறி மறுத்துரைக்கும். அதன்பின் சிவ சமய உண்மைக் கருத்துக்களை அறிவியலுக்குப் பொருந்துமாறு நிலைநாட்டும். இவ்வாறு சிவஞான போதத்திற்கு வழிநூல் செய்தார் அருணந்தி சிவாசாரியார். இவர், நூல் முறையிலன்றியும் மெய்கண்டாரின் நேர் மாணவருமாவர். இவர் மாணவர் மறைஞான சம்பந்தர். இவர்க்கு மாணவர் உமாபதி சிவாசாரியார். இவர் சிவநெறியின் தீர்ந்த முடிபுக் கொள்கைகளைச் சுருக்கியும், விளக்கியும்

சிவப்பிரகாசம் முதலாம் எட்டு நூல்கள் செய்தார். இந்நால்வரையும் சைவ சமயத்தின் ''சந்தான ஆசிரியர்கள்'' என்று, நாம் போற்றி வருகின்றோம்.

## சிவஞான முனிவர்

இப்பேரறிஞர் இதுவரை கூறியபடி பன்னிரண்டு திருமுறை களையும், அதனின்றுங் கடைந்தெடுத்த அமுதமாம் பதினான்கு மறைகளாம் சாத்திரங்களையும், தமிழ் இலக்கிய இலக்கணங்களையும் ஓதி உணர்ந்து தெளிந்தவர். அம்மட்டோ, வடமொழிக் கடலின் ஆழங் கண்டவர். நாயன்மாரிடத்து எல்லையற்ற அன்பு பூண்டவர். எந்தையாரால் தமிழக வரலாற்றில் திருவள்ளுவருக்கு அடுத்தபடி பேரரறிஞர் சிவஞான முனிவரே என்று போற்றப் பெற்றவர்.

## திராவிட மாபாடியம்

இம்மாபெரும் பாவலர் தம் இணையில்லாப் பெரும் புலமையால் மெய்கண்டாரின் சிறுநூலுக்கு உரைநடையில் விளக்கப் பெருநூல் ஒன்றளித்தார். திராவிட மாபாடியம் என்பது அதன் பெயர். இவ்வரும் பெரும் நூலில் இம்முனிவர் பிரான் அறிஞர் அனைவரும் ஒப்பும் வகையில் சிவநெறியின் முடிந்த முடிபான கருத்துக்களை எல்லாம் மெய்கண்டாரின் சிவஞான போத முதனூல் கொண்டு தருக்க நெறி பிறழாது ஆணித்தரமாக நிலைநாட்டியுள்ளார். கொள்கை மறவரான இப்பெருமான், தாம் இப்பிறவியில் பெற்ற பெரும்பேற்றை

*பேயன்ன புறச்சமயப் பிணக்கு நூல்வழி*
*அனைத்தும் பிழையே அன்றி*
*வாயன்மை தெளிந்து சைவ சித்தாந்த*
*நெறிதேறி அதீத வாழ்வில்*
*போய்அண்மி அஞ்செ ழுத்துந் திருநீறுங்*
*கண்டிகையும் பொருளாக் கொண்ட*
*நாயன்மார் திருக்கூட்டம் பணிந்து இறைஞ்சும்*
*பெரும்பேறு நான்பெற் றேனால்*

என்று உண்மை விளங்க - உணர்ச்சி பொங்க, ''ஆனந்த நடனம்'' ஆடுகின்றார். நாயன்மாரின் திருமுறைகளை - சந்தான ஆசிரியர்களின் மெய்யுணர் நூல்களை - சிவநெறியின் ஒப்புயர் வில்லா உண்மைக் கோட்பாடுகளை - உணரும் சைவர்கள் மட்டுமல்ல உலக அறிஞர் அனைவருமே இவ்வாறே பேரின்பக் கூத்தாடுவர் என்பது உறுதி; உறுதி; வாழ்க சிவஞான முனிவரின் சேவடிகள்! வாழிய சிவநெறி! வாழிய செந்தமிழ்!

புறச் சமயக் கருத்துக்களின் முடிந்த முடிபான கருத்துக்களை - அதிலும் இறைவன் பிறந்தான், இறந்தான் என்னும் பொய்க் கவிதைகளை - அஃதாவது பொய்யை மெய்யாக நம்பிப் பிறப்பு இறப்புக்களில் பட்டு மக்கள் பேய்போல் அலைந்து கெடுதலை - முனிவர் உணர்ந்தார். அக்கருத்துக்கள் தவறானவை என்பதனை அழுத்தமாக உணர்த்தி மக்களை உய்யக் கொள்ளவே ''பேயன்ன புறச்சமயம்'' என்று முனிவர் கூறினார் என்றுணர்தல் வேண்டும். உண்மையை அஞ்சாது கூறும் ஆண்மை, இரக்கம் இம்மாதவச் சிவஞான முனிவர்க்கன்றி யார்க்கு வாய்க்கும்.

பிறப்பிறப்பில்லா முழுமுதற் செம்பொருளை மனிதனாக்கி, அவன் தன் பொருட்டுத் துயருற்று, அழுது புலம்பிப் போரிட்டதும், வென்றதும், பெண்பாலார் பலர் கற்பை அழித்தும், பகைவர்களை வஞ்சனைகள் - சூழ்ச்சிகளால் சான்றோர் அஞ்சுமாறு தீவினைகள் பல செய்தும், பொய்கள் கூறியும், வண்மை (தியாகம்) என்பதே அறியாது ஆணவத்தால் மக்களை அடக்கி அரசு புரிந்தும் இறுதியில் பிறரால் கொல்லப்பட்டு இறந்தும் உழந்தவர்களைக் கடவுள் என நம்பி ஏமாந்தழியும் கோடிக்கணக்கான மக்களை மயக்கும் புறச்சமயங் களைப் ''பேயன்ன புறச்சமயம்'' என்றுரைத்தல் பொருத்தந்தானே!

மக்களில் தலையாய் மேலோரைத் தெய்வம்போல் போற்றலில் தவறில்லைதான். இதற்காக அவர்களைக் கடவுளே என்று நம்பச் செய்வது எவ்வளவு பெருங்குற்றம்! பாவம்! மாந்தர்களுக்கு உய்வுநெறி காட்டித் தம் வாழ்வைத் திருத்தொண்டிற்கே ஆக்கிய நம் தெய்வம் நிகழ் நாயன்மார்களையே சைவர்களாகிய நாம் ''அடியார்'' என்றுதானே கூறுகின்றோம்? அவ்வகையில் பிற சமய உண்மைச் சான்றோர்களை உலகர் போற்றுவதை நாமும் ஏற்கின்றோம். பொய்க் கதைகளால் புறச்சமயச் சான்றோர் தொண்டு - வாழ்க்கை மாசுபடாத் தூய்மையாம் என்றே கொள்வோம். அச்சமயத் தலைவர்களும் தம்மை ஈசனுக்கடியார் என்றே கூறிக் கொண்டனர். தம்மையே மறந்து மன்பதை உய்யக் கீதை, பைபிள், குர்ஆன் முதலிய மறைகளை அருளிய தெய்வம் நிகழ் சான்றோர்கள் சேவடிகள் வாழ்க என வாழ்த்துவோம்.

## சைவத்தின் மேல் சமயம் வேறில்லை

### மூவுருவம்

எல்லா ஆற்றலும், அறிவும், இன்பமும் நிறையப்பெற்ற முழுமுதற் செம்பொருள் சிவமே! பிறப்பிறப்பில்லாதது. அதற்கு அருவம்,

உருவம், அருவுருவம், அதற்கும் மேம்பட்ட நிலை என்ற நான்கு தன்மைகள் உண்டு. கூறப்பெறும் உலகங்கள், உலகத் தொகுதிகள் (அண்டம்), பொருட்கள், உயிர்கள் அனைத்திலும் கடவுள் ஊடுருவி அவற்றை இயக்கல் வேண்டும். ஆம்! உயிர், வான் முதலாம் நுண் பொருட்களை இயக்கும் இறைவன் மிக மிக நுண் பொருளாகத்தானே இருத்தல் வேண்டும்? அல்லாவிடில் அப்பொருட்கள் எங்ஙனம் செயற்படும்? ஓட்டுவோன் இல்லாது அறிவில் பொருட்கள் எவ்வாறு செயற்படும்? மாந்தர் முதலாம் உயிர்களுக்கும் கருவிகள், உடம்புகளைத் தாமே ஆக்கிக் கொள்ளல் இயலாதன்றோ? ஆசிரியன் இன்றி மாணவர் அறிவு பெறுதல் கூடுமோ? அதுபோல உயிர்க்குயிராய் நின்று - அறிவில் நின்று உயிர்களுக்கு அறிவித்தால் அன்றி உயிர்கள் எவ்வாறு அறிவு பெறுதல் கூடும்? ஆகவே, இறைவன் எல்லாப் பொருள்களிலும், உயிர்களிலும் கலந்து நிற்க அருவமாயிருக்கிறான்.

பிற சமயத்தார் ''அருவம்'' என்பதற்கு ''இல்லாமை'' என்றே தவறான பொருள் கூறினர். இல்லாப் பொருள் எவ்வாறு செயற்படும்? இல்லாப் பொருளை எங்ஙனம் கடவுள் என்று கூறுவது? கடவுள் அருவம் - இல்லாப் பொருள் என்று கொள்வது நாத்திகத்தில் தான் கொண்டுபோய் முடியும்! இப்பிழையினை நீக்கிக் கடவுள், ''அருவம்'' என்பதற்குப் பொருள், ''உருவத்தின் நுண்மைப் பொருளே'' யாம் என்று நம் சைவம் கூறுகின்றது. இதனை

*அருவினில் உருவந் தோன்றி அங்காங்கி பாவ மாகி*
*உருவினின் உருவ மாயே உதித்திடும் உலக மெல்லாம்*

என்ற சிவஞான சித்தியார்ப் பாட்டு தெரிவிக்கும். இங்கே அருவினில் உருவம் தோன்றி என்னுமிடத்தல் ''அருவம்'' என்பதற்கு ''உருவத்தின் நுட்பம்'' என்று சிவஞான முனிவர் பொருள் கூறியுள்ளார். அதற்கான விளக்கம் மேற்கூறிய பாட்டில், ''உருவினில் உருவ மாயே உதித்திடும் உலகமெல்லாம்'' என்று கூறியுள்ளமையால் காணலாம்.

நிலம் பருமை. அதிலும் பருமை குறைந்து நுண்மையுடையது நீர். நீரினும் நுண்மையுடையது தீ. மேலும் நுன்மையுடையது காற்று. காற்றிலும் நுண்மையுடைய பொருள் வான். அறிவியலார், ''வானினும் மிக மிக நுண்ணிய பொருள்கள் மேன் மேல் உள்ளன. அந்நுண்மைப் பொருட்களுக்கு எல்லை, எண்ணிக்கை கிடையாது'' என்கின்றனர்.

உயிராகிய நுண்பொருளை இயக்குதற்கு வான்முதலாம் நுண்பொருளே யன்றி மேன்மேலும் செல்லும் நுண்பொருள்களும் காரணமாகும். இவ்வெல்லாவற்றிலும் கலந்து நின்று இயக்கும் நுண்பொருளாம் சிவனை,

*"நூலுணர் வுணரா நுண்ணியோன் காண்க"*

என்றது திருவாசகம் (தமிழ்மறை). காற்று, வான் முதலாம் நுண்பொருட்களை உருவமின்மை நோக்கி அவற்றை இல்லை என்பாரும் உளரோ? இல்லையன்றோ? யாவற்றிலும் மிக மிக நுண் பொருளாயிருக்கும் சிவனை அது பற்றி இல்லை என்பார் தம்மை அறியாமலே கடவுள் இல்லை என்பவர் ஆகின்றாரன்றோ?

இவை எல்லாம் உணர்ந்தே நம் சிவநெறியில் அருவம் என்பதற்கு உருவத்தின் நுண்பொருள் என்றே பொருள் கண்டமை எவ்வளவு சிறப்புடையது என்பதை எண்ணிப் பார்த்தால் சைவத்தின் மேற் சமயமில்லை என்றது நூற்றுக்கு நூறு உண்மையாம் என உணர்ந்து மகிழ்வதில் வியப்பில்லையன்றோ?

இவ்வாறே செம்பொருளாம் சிவத்திற்கு, உருவம், அருவுருவம், அருவம் முதலாம் யாவற்றிற்கும் மேம்பட்ட நுண்மை உருவம் உண்டு. மற்றும் சிவநெறியின் ஏனைய முடிந்த முடிபுகளெல்லாம் விளக்கி உரைக்க முற்பட்டால் இச்சிற்றுரை உண்மையிலேயே பேருரையாகிவிடும் என்றஞ்சி அவற்றை எல்லாம் வருத்தமுடன் விளக்காது விடுகின்றேன்.

"ஒரு பானை சோற்றுக்கு ஒரு சோறு பதம்" போதுமன்றோ? ஆயினும் வலியுறுத்தும் முறையில் சிவநெறியின் மற்றொரு பேருண்மையையும் இங்கு வலியுறுத்திக் கூறுவேன். அது சிவம் என்பதன் சிறப்பியல் பற்றியாம்.

**சிவம்**

கடவுளுக்குள்ள பெயர்கள் யாவுங் காரணப் பெயர்களே. அப்பெயர்கள் கடவுளின் ஒவ்வோர் இயல்பை எடுத்தோதும். ஆனால் இறைவனுக்குரிய பொதுவியல்பு, சிறப்பியல்புகள் யாவும் விளங்கத் தெய்வச் சான்றோர்களால் ஆழ்ந்தெண்ணப்பட்டு முடிவாக அமைந்த பெயர், "சிவம்" என்பதே பொருத்தமாகும். அதனால்தான் மாணிக்கவாசகர், "சிவன் என யானுந் தேறினன் காண்க" என்றார். இப்பேருண்மையை விளக்குவன மறைமலை அடிகளாரின் "திருவாசக விரிவுரை", "சைவ சித்தாந்த ஞான போதம்", "தமிழர்

மதம்'' முதலிய நூல்களாகும். யான் விளக்கங் கூற வேண்டாம். விரிவு நோக்கி விடுகின்றேன். ஆகவே இறைவனின் சிறப்புப் பெயராலேயே அவனைச் ''சிவம்'' என்றே ஓதுக, முழங்குக என்று நம் நாயன்மார்கள் அனைவரும் ஒருமுகமாகக் கட்டுரைக்கின்றனர். அவை

*நாதன் நாமம் நமச்சிவாயவே* - *சம்பந்தர்*

*நற்றுணை யாவது நமச்சிவாயவே*

*சொல்லும் நா நமச்சிவாயவே.*

*நானேயோ தவஞ் செய்தேன் சிவாய நம எனப் பெற்றேன்.*
- *மணிவாசகர்*

*சிவசிவ என்கிலர் தீவினை யாளர்*
*சிவசிவ என்றிடத் தீவினை மாளும்*
*சிவசிவ என்றிடத் தேவரு மாவர்*
*சிவசிவ என்னச் சிவகதி தானே* -*திருமூலர்*

ஆனால் இதனை உணர்ந்திருந்தும் நம் தலைவர்களும், பரப்புநர்களும் பெரும்பாலும் 'ஆண்டவன்' என்றே சொற்பொழிவுகளில் கூறிவிடுகின்றனர். வேண்டுமென்றன்று, பிற சமயிகளை உடன்படச் செய்யவோ? கூர்ந்து எண்ணாமையோ என்னவோ? சைவர்களாகிய நாமே இப்படிச் செய்தால் பேரின்ப வீட்டுக்கு வாயிலாகிய இத்திருப்பேர் எப்படி உலக வழக்கில் நிலைபெறும்; பயன்தரும்.

இத்தவறான போக்கால் பொதுமக்கள் சிவம் என்ற பெயரை மறந்து - துன்புற்று - இறந்து போனவர்களின் பெயர்களைக் கடவுட் பெயராம் என்று கொண்டு தவறான பெயர்களை ஓதி மாய்கின்றனர். அவர்கள் கடவுளை எப்பெயரில் போற்றினாலென்ன - எவ்வுருவத்தில் வழிபட்டாலென்ன? உண்மை அன்பிருந்தால் போதாதோ? என்கின்றனர். ''பன்றி மாடன்'', ''சுடலை மாடன்'' என்ற பெயரோடும், உருவத்தோடும் ஏது மறியாதவர்கள் அவற்றிற்குக் கள், சாராயம், புலால், ஆடுவெட்டு முதலியவற்றால் உண்மையன்புடன் வழிபட்டால் அவை பொருந்துமா? யாகங்களில் அமைதியான - உதவும் விலங்குகளை இரக்கமின்றிப் பலியிட்டு வேள்வி செய்தால் பொருந்துமா? காளியின் வடிவத்தைக் கொடிய படைகளால் சீற்ற மிகு தோற்றத்தோடு பூசித்தல் பொருந்துமா? அருளுருவாகிய அம்மையை - சிவசக்தியை எருமையைக் கொன்று அதன் தலை மீது கோர வடிவில் நிறுத்துவது தக்கதா? இவற்றை எல்லாம் வடமொழி வேதங்களைக் கொண்டு நிலைநாட்டிப் பேசும் அறியாமையுடையோர்

உண்டு. தத்துவார்த்தங் கூறுவோருமுண்டு. என்ன அறியாமை! கொடுமை! வடமொழி வேதங்களில் உண்மை, அறிவு, இன்பம் ஓதும் சிவநெறி நூல்களுமுண்டு. சிவாகமங்களும் உண்டு. நம் சிவநெறி வடமொழியில் உள்ள ''இருக்கு நான்மறை''களை ஏற்றுக் கொள்வதால் நாம் வடமொழியையும் போற்றுபவர் தாமே.

ஆகவே, அறிவு, அன்புக்குப் பொருத்தமில்லா இறைவன் பெயர்களில் பலவற்றைக் கைவிட்டுச் ''சிவம்'' என்ற பெயராலேயே அவனை வழிபட்டுய்வோம். அவன் திருப்பெயர்களாக உள்ள அம்மையப்பன், அம்பலவாணன், முருகன், பிள்ளையார், ஐயப்பன் முதலாம் பெயர்களையும் ஓதிச் சிவபெருமானை வழிபடலாம். ஆயின், திருஞானசம்பந்தர், திருநாவுக்கரசர், சுந்தர மூர்த்திகள், மாணிக்கவாசகர் முதலாம் சிவநெறித் தலைவர்கள் ஆணைப்படி சிவன் என்று தொழுவதே சிறப்பு.

## சிவநெறியே சிறந்த நெறி

இதனைத் தாயுமான அடிகளின்

*சைவ சமயமே சமயம் சமயாதீதப் பழம்பொருளைக்*
*கைவந்திடவே மன்றுள் வெளிக்காட்டும், இந்தக் கருத்தைவிட்டுப்*
*பொய்வந்துழலும் சமயநெறி புகுத வேண்டாம்*

என்றும், வடலூர் வள்ளல்,

*செப்பாத மேனிலைமேல் சுத்தசிவ மார்க்கம்*
*திகழ்ந்தோங்க அருட்ஜோதி செலுத்திடல் வேண்டும்*

என்றும், கூறியுள்ளவற்றை அறிந்து கடைப்பிடித்துய்வோமாக.

## சிவநெறி ஆசிரியர்கள் காட்டிய நல்வழி

சிறியேன் வார்த்தைகளைக் கேட்குந் திருத்தகு நல்லீர்! எழுத்தன்றிச் சொல், தொடர், கருத்து நூல் ஏது? அதுபோல், சிவஞான போதம் முதலாம் மெய்யறிவு நூல்கள் யாவும், சிவநெறிக் குருமார்களான நால்வர் அருள் மறைகளாம் தேவாரம், திருவாசகம் முதலாம் நூல்கள் இல்லாது ஏது? நம் சித்தாந்த சமாசம் ஏது? நாம் தான் உண்டா?

## பொதுவும் சிறப்பும்

சிவநெறிக்கு அடிப்படையான நூல்கள் திருமுறைகள் 12ஆம், மெய்கண்ட நூல்கள் 14ம் ஆம். இவற்றின் கருத்துக்கு மாறுபடாத

வேத சிவாகமப் பகுதிகளும் ஆம் என்பது நம் சமாசம் மறைமலை யடிகள் தலைமையில் ஞானியாரடிகள் முன்னிலையில் 1929ல் திருப்பாதிரிப் புலியூரில் கூடிய - கா. சு. பிள்ளை, திரு.வி.க. சச்சிதானந்தர் முதலாம் பேரறிஞர்கள் ஆராய்ந்து கண்ட சைவர் மாநாட்டின் முடிபாகும்.

1953ல் அடியேன் தேவாரம் பெற்ற திருக்கேதாரம் அநேக தங்காவதம் முதலிய தலங்களை வழிபட்டேன். காசுமீரமும் சென்றேன். காசி, தில்லி, அரித்துவாரம், இருசிகேசம், கல்கத்தா முதலிய தலங்களுக்குச் சென்றேன். 1964லும் சென்றேன். சென்ற இடங்களில் எல்லாம் நம் தமிழ்நாட்டை விடச் சிவலிங்கங்கள் அழகாக ஆயிரக்கணக்கில் (ஏன் இலட்சக்கணக்கிலும் இருக்கலாம்) கண்டேன். சிவ வழிபாட்டினையும் கண்டேன். ஆகவே, சிவநெறி தமிழ்நாட்டில் தோன்றி பாரத நாட்டிலும், பண்டு உலகெங்கும் விளங்கியது. இவ்வுண்மையை உலகுக்கு அறிவிக்கவே மணிவாசகரின்

*தென்னா டுடைய சிவனே போற்றி*
*எந்நாட் டவர்க்கும் இறைவா போற்றி*

என்ற திருவாக்கு எழுந்தது.

இதுபோலவே, நமது செந்தமிழில் தோன்றி வடமொழி வேதங்கள், உபநிடதங்கள், ஆகமங்கள், தொன்மங்களில் (புராணம்) நம் சிவநெறியின் கருத்துக்களும், சிவபிரானைப் பற்றிய பாடல்களும் அளவின்றி அமைந்து விளங்கக் காண்கின்றோம். ஆதலினாற்றான்,

*வேதம் நான்கிலும் மெய்ப்பொரு ளாவது*
*நாதன் நாமம் நமச்சி வாயவே* - *சம்பந்தர்*

*இருக்கு நான்மறை ஈசனை யேதொழும்* - *அப்பர்*

*இருக்கொடு தோத்திரம் இயம்பினர்* - *மாணிக்கவாசகர்*

என்று தமிழ்மறை முழங்குவதாயிற்று.

கன்னட மாநிலத்திலும் இப்படியே எங்குச் சென்றாலும் சிவலிங்கங்களே! ஆம்! அங்குதானே நம் வீர சைவப் பெருங்குரவர் பசவேசர் தோன்றிச் சிவநெறியை வளர்த்தார். ஆந்திரர் தம் மாநிலத்தின் மொழியும் நாடும் 'திரிலிங்கம்'' என்ற சொல்லடியாக வழிபாட்டின் அடியாகப் பிறந்தன வென்று கூறிப் பெருமை கொள்கின்றனர். இவ்வாறே பிற மாநிலங்களிலும். ஆதலின் சிவநெறியும் சிவவழிபாடும், வடமொழியும் நம் பாரதப்

பெருநாட்டிற்குப் பொதுவும், தமிழ்நாட்டிற்குச் சிறப்புமாம் என்றறிந்து சிவநெறி யாண்டும் ஓங்கத் திருத்தொண்டு செய்வோமாக.

## மற்றுமொரு சிறப்பு

வடநாட்டளவில் சிவநெறிக்கு வடமொழியே வேண்டும். ஆனால் தம் தமிழ் மாநிலத்திற்குத் தனித்தமிழ் மறைகளான திருமுறைகளே, மெய்கண்ட நூல்களே போதும். இவற்றில் இல்லாத கருத்துக்கள் வடமொழியில் இல்லை. அம்மொழியில் இல்லா அருங்கருத்துக்கள் நம் செந்தமிழ் மறைகளில் உள்ளன. ஆனால் ஒருமைப் பாட்டின் பயன் நோக்கி வடமொழி வேதங்கள் முதலியவற்றை வாய்ப்புடையோர் கற்றல் வேண்டும். இவை என் கருத்துக்கள் மட்டுமல்ல. எந்தையார் கருத்துக்களுமாகும். இதனை அவர்கள் எழுதியுள்ள ''பண்டைக் காலத் தமிழர் ஆரியர்'', ''பழந்தமிழ்க் கொள்கையே சைவசமயம்'', ''கடவுள் நிலைக்கு மாறான கொள்கை கள் சைவம் ஆகா'', ''திருவாசக விரிவுரை'', ''மாணிக்கவாசகர் வரலாறும், காலமும்'', மேற்கூறிய ''சைவ சித்தாந்த ஞான போதம்'' முதலாம் நூல்களில் கண்டு தெளியலாம்; உய்யலாம்.

## மறைமலையடிகளாரின் மாண்பு (1876-1950)

இவ்விருபதாம் நூற்றாண்டில் சிவநெறியைத் - செந்தமிழை வளர்த்தவர்களில் - வாழ்வித்தவர்களில் பேரறிஞர் மறைமலையடிகள் ஆம் எந்தையார் ஒருவரே யாவர் என்பதனைச் சிறியேன் பெருமிதத்துடன் கூறிக் கொள்கின்றேன். இவ்வுண்மையைக் கா.சு. பிள்ளையவர்கள், பின்வருமாறு எழுதுகின்றார்கள்:

''மறைமலையடிகள் தமிழ்நாடு செய்த பெருந்தவத்தின் தவ உருவினர் ஆவர். செந்தமிழினையும், சிவநெறியினையும் அவற்றின் பகைவரால் நலிவுறா வண்ணம் பாதுகாத்து அவற்றிற்குப் பேரறிவின் அடிப்படை இட்டவராதலின் தமிழ்ச் சைவ உலகத்தாரால் தமது தலைமணியாகப் போற்றற்பாலர். தனித் தமிழிலேயே தேனும் பாலுங் கலந்தனைய தீஞ்சொற் சுவைமிக்க இழுமெனும் இனிய உயரிய உரைநடை எழுதுவதிலும், சொன்மாரி பொழிவதிலும் இவர்க்கு ஒப்பரவார் எவருமிலர். இவரது சொல்லினிமைக்கேற்பக் குயிலோசை போன்ற குரலினிமையும் இவர்க்கு இயற்கையில் அமைந்துள்ளது பெருமகிழ்ச்சி தரத்தக்கது. தொல்காப்பியர் காலத்துக்கு முன் இருந்த பண்டைத் தமிழ் நாகரிக நிலையினுக்குப் புத்துயிர் அளித்து அதனை இன்னும், என்றும் நிலவச் செய்வதற்குரிய பெருமுயற்சியினை இவர் தமது தலையாய கடமையகாகக் கொண்டவர்''

இனித் திரு.வி.க. அவர்கள் எழுதுவதைப் பார்ப்போம்; ''மறைமலை ஒருபெரும் அறிவுச் சுடர். தமிழ் நிலவு, சைவ வான். அவர்தந் தமிழ்ப் புலமையும், வடமொழிப் புலமையும், ஆங்கிலப் புலமையும், ஆராய்ச்சியும், பேச்சும், எழுத்தும், தொண்டும் தென்னாட்டை விழிக்கச் செய்தன. தென்னாடு அடிகளால் விழிப்புற்றது. அடிகளே தென்னாடு. தென்னாடே அடிகள்''

இனித் திரு. வையாபுரிப் பிள்ளை, பி.ஏ.பி.எல், அவர்கள் கூறு வதைக் காண்போம்: ''அவர்களைப் போன்ற (அடிகள்) பேராசிரியர்கள் இனித் தமிழ்நாட்டில் தோன்றுவது மிக மிக அருமை என்றே சொல்லலாம்''

இனி, டாக்டர் மு.வ. அவர்கள் கூறுவதைப் பார்ப்போம்: ''தமிழ்த் தலைவர் மறைமலையடிகள், தமிழ் மெல்ல மணிப்பிரவாள மொழியாக மாற இருந்த தறுவாயில், தன் செம்மையும், சிறப்பும் சிதைவுற நேர்ந்த நெருக்கடியான நிலையில், அதற்கு உறு துணையாய் முன்னின்று தனித்தமிழ் இயக்கந் தோற்றுவித்து வளர்த்த பெருந்தொண்டு, அவராற்றியதாகும். இனித் தமிழ்மொழி தலை நிமிர்ந்து வாழும் என்று நம்பக்கூடிய நிலையில் தமிழை வாழ வைத்த பெருமை அவரைச் சார்ந்ததாகும்.

இச் சான்றோர்கள் எழுதியுள்ள உரைகளால் யான் கூறியவாறு அடிகள் மாண்பு உறுதியாய் அறியலாம்.

மேலும், இச்சான்றோர்களால் இவ்வாறு போற்றப்பெற்ற அடிகளின் கோட்பாடுகளையும், தொண்டுகளையும், வாழ்க்கை வரலாறு களையும் அறிய விரும்புவோர் ஏறத்தாழ ஆயிரம் பக்க அளவில் யான் யாத்துள்ள ''மறைமலை அடிகள் வரலாறு'' என்ற பெருக்க நூலில் - விரிவான நூலில் விளக்கமாக அறியலாம் இந்நூல் தமிழ்நாடு அரசின் முதற்பரிசைப் (உரூபா ஆயிரம்) பெற்றுள்ளது என்பது குறிப்பிடத் தக்கதாகும்.

அடிகளைப் பற்றி யான் இவ்வளவுங் கூறுவது, அவர்கள் எழுதிய நூல்களைக் கற்று மக்கள் உண்மைச் சிவநெறி, உயர்ந்த தமிழ் இவற்றைப் பற்றி நின்றுய்தல் வேண்டும் என்பதற்கேயாம்.

## நாயன்மார் பெருமை

கடவுளைக் கண்ணாரக் கண்டு அவரருள் பெற்றுச் செயற்கரிய செயல்கள் புரிந்து சிவநெறி ஓம்பிச் செந்தமிழ் காத்துத் தெய்வம் என விளங்கித் திருமறைகளை உலகிற்களித்த ஒப்பில்லாச் சம்பந்தர்,

அப்பர், சுந்தரர், மணிவாசகர் முதலாம் தெய்வம் நிகழ் சான்றோர்களே நம் உயிர்க்கு உயிராவர். அவர்கள் காட்டிய ''சரியை, கிரியை, யோக, ஞான'' நெறிகளில் நின்று - கடைப்பிடித்து நடந்தாலன்றி நம்முயிர் மாந்தர் உயிர் எனப்படாது. இழிந்த உயிர்களினுங் கடைப்பட்ட தாகும்.

மனிதர் உடலுக்கு உணவு பயன்படும். உயிர்க்கு உணவும் முதலாகாது, துணையாகாது. நால்வர் தமிழே - மாந்தர் உயிர்க்கு உறுதுணையாகும். அவர்களை வாழ்விக்கும்; பிறவிப் பயனை அளிக்கும். இவ்வுண்மைகளை எல்லாம் உலகர்க்கு எடுத்துரைக்கவே - உலகோரை உய்விக்கவே, 16ஆம் நூற்றாண்டின் பிற்பகுதியில் வாழ்ந்த ''திருவருணைக் கலம்பகம்'' என்ற தமது நூலில், சைவ எல்லப்ப நாவலராம் நல்லோர்.

*சைவத்தின் மேற்சமயம் வேறிலை அதிற்சார் சிவமாம்*
*தெய்வத்தின் மேல்தெய்வம் இல்எனும் நான்மறைச் செம்பொருள்வாய்*
*மைவைத்த சீர்திருத் தேவாரமும் திருவாசகமும்*
*உய்வைத் தரச்செய்த நால்வர் பொற்றாள் எம்முயிர்த் துணையே!*

என்றார். அவர் தாம் சுருங்கச் சொல்லி விளங்க வைக்கும் அழ கொழுகும் இப்பாடல் சைவர்கள் அனைவர்க்கும் உயிர்க்குயிராகும். அவர் சேவடிகள் வாழ்க!

நாயன்மார்கள் அருமை பெருமைகளை எல்லாம் - இப்பாடலின் அடிப்படைக் கருத்துக்களை எல்லாம் விளக்கும் வகையில் அடியேன், தெய்வச் சேக்கிழார் பெருமான் அருள் நூல் கொண்டு பெரிய புராண ஆய்வுரை என்ற பெயரில், ''சுந்தரர் வரலாற்றாய்வுரை'', ''அப்பர் வரலாற்றாய்வுரை'', ''சம்பந்தர் வரலாற்றாய்வுரை'', ''அறுபது அடியார் வரலாற்றாய்வுரை'' என்னும் நான்கு தொகுதி நூல்களை எழுதி வெளியிட்டுள்ளேன். ''சைவ மத வினாவிடை'' என்னும் சிறு நூலையும் வெளியிட்டுள்ளேன். இவற்றையும் நந்தமிழ்ச் சைவ நன்மக்கள் யாவரும் படித்துப் பயன்பெற வேண்டிக் கொள் கின்றேன்.

## இந்து சமய ஒருமைப்பாடு

சிவநேயச் செல்வர்களே! நம் தமிழகத்துத் தெய்வச் சான்றோர் களால், பல்லாயிரம் ஆண்டுகட்கு முன்பே இயற்கையாயமைந்த சிவநெறி, திருமால்நெறிகள் வளர்க்கப்பெற்றன. இவை யிரண்டுமே நம் பாரத நாடெங்கணும் பரவி உள்ளன. வரலாற்றியலின்படி இவை

சில பல மாறுதல்கள் பெற்றாலும், இன்றும் அவையே நம் மாபெரும் நாட்டில் சிறப்புடன் திகழ்கின்றன. இவ்விருபெருஞ் சமயங்களைச் சார்ந்தோர் பொதுவாக இந்துக்கள் என்று பேசப் பெறுகின்றனர். பெயர் வேறுபாடு தாமே ஒழிய இரு சமயங்களின் நெறிமுறைகள் 90 பங்கு ஒன்றே! வழிபாட்டு முறைகளும் ஒன்றே. பிற்காலத்தில் தத்துவக் கருத்துக்களால் வேறுபாடுகள் சிலபல உண்டாயினும் பொதுவாக இந்து மக்கள் இரு சமயக் கோயில்களையும், திருவுருவங்களையும் அன்புடன் போற்றியே வருகின்றனர். இஃதோர் சிறந்த பண்பாடு, இந்து சமயம், இந்துக்கள் வாழ்வதால் இப்பாரத நாடு இந்தியா என்றாயிற்று. ஆயினும், ஆணவத்தால் - நம்முள் ஏற்பட்ட இயற்கைக்கு முரணான சாதிப்பாகுபாட்டால் - உட்பூசல்கள் தோன்றின. இதனைப் பயன்படுத்திக் கொண்டு சமயங்களின் பேரால் ஏனைய நாட்டவர், சென்ற ஆயிரம் ஆண்டுகளாக நம்மை அடிமை கொண்டு ஆண்டு வந்தனர். அதனால், அயல் சமயங்கள் இங்கே ஆக்கம் பெற்றன. அதனாலும், நம் இந்து மக்களிடையே சொல்லொணாத் துயரங்கள் தொடர்ந்தன. நாடு பிளவுபட்டது. நம் சமய உணர்வு, நாட்டுணர்வு, மொழி உணர்வுகள் பெரும்பாலும் ஒழிந்தன.

இன்று வள்ளல் காந்தியடிகள் அருளால் நம்நாடு விடுதலை பெற்றதாயினும், நம் சமய உணர்வு இன்று இளைஞரிடையே அருகியுள்ளது. எங்கு பார்த்தாலும், அயல்மொழிப் பயிற்சியில் வெறி! ஆதிக்கம்! பாருங்கள்! பிற சமயப் பெரியார்களின் பெயர்களில் கல்லூரிகள், பள்ளிகள், மாணவர் விடுதிகள்! நம் நாயன்மார்கள் பெயரில் ஒரு கல்லூரிதானுண்டோ? அவர்களில் 90 பேர் விரும்புவது, போற்றுவது, புகழ்வது, தொழுவதும் அயல்மொழிகள். தமிழ்ச் சொற்களைக் கொன்று, அயல்மொழிச் சொற்களைத் தமிழிற் கலந்து, பேசுவது, எழுதுவது, இந்நிலையில் தமிழ்ப் பற்றும், அதனால் சமய நூல்களில் ஆர்வமும், பத்திமையும் எங்கே உண்டாகும்? நம் செந்தமிழ் மொழியே ஆட்சிமொழி, பயிற்சிமொழி, அறமன்றங்களின் மொழி என்றாதல் வேண்டும். எங்கும் எதிலும் தமிழேயாதல் வேண்டும்.

அப்போதுதான் நாட்டன்பும், சமயப் பற்றும், மக்களின் அறிவும், ஆற்றலும் செயற்படும். இதற்கு உலகில் முன்னேறியுள்ள நாடுகளே எடுத்துக்காட்டு. அங்கெல்லாம் தம்தம் ஆங்கிலம், பிரஞ்சு, செர்மன், சீனம், உருசியம், சப்பான் மொழிகளே எல்லாத் துறைகளிலும் ஆக்கம் பெற்றிருத்தலை அறிந்தும், இன்னும் பிற மொழியையே நம்பி அதில்

பித்துப் பிடித்துத் திரியும் நம் நாட்டில் சமய உணர்வு ஏற்படுதல் எங்ஙனம்? சமய நிறுவனங்கள், சமயக்கல்வி, நாயன்மாரிடத்தில் பத்திமை, சிவவழிபாடு, திருமுறைகள் ஓதல், தமிழிசை, தமிழ்ப் பண்பாடுகள் எங்ஙனம் உண்டாகும்?

நம்மிந்துக்களிடம் நம் சமயப் பற்றிலும், பிற மொழிப் பித்தமே மேலோங்கி உள்ளதே! இவர்கள் பெயர்களின் முன் எழுத்துக்கள், வீட்டு முகவரிகள், தெருக்கள், கடைகள், நிறுவனங்கள், செயல்கள், படிக்கும் நூல்கள் யாவும் ஆங்கிலமே!என்று இவ்வடிமைப் புத்தி ஒழியுமோ அன்றுதான் நாடு உண்மை விடுதலை பெற்றதாகும். அன்றுதான் நம் சமயங்கள் வளரும்; வாழும். நம் சமயமும், மொழியும்; உயிரும் உடலும் போல வேறு பிரிக்க ஒண்ணாது. ஆகவே, நம்மவர்களில் கற்றோர், சமயம் வேறு - மொழி வேறு என்று கருதித் தாய் மொழிப் பகைவர்களாக இருத்தல் கூடாது; கூடாது.

இனி, அயல் அரசுகளால் நந்தமிழ் நாட்டில் - பாரதத்தில் கோடிக்கணக்கான இந்துக்கள் இசுலாம், கிறித்துவச் சமயங்களிற் சேர்ந்தனர்; சேர்கின்றனர். சமயப் பரப்புக்களால் நம்மவர்களைத் தம் மதங்களில் ஈர்க்கின்றனர். அதன் பொருட்டுத் தம் உடல், பொருள், ஆவிகளை வழங்குகின்றனர். எங்குந் தம் கோயில்கள், கழகங்கள், கல்வி நிலையங்கள், மருத்துவ மனைகள் முதலாம் நிலையங்களை ஏற்படுத்தியுள்ளனர், அமைத்து வருகின்றனர். மன்பதைத் தொண்டிற்காக அற்றார் பள்ளி (அநாதை இல்லம்), ஊமை, செவிடு, குருடு இல்லங்களை அமைத்துத் தொண்டாற்றுகின்றனர்.

இத்தகைய நன்முயற்சிகட்கு அச்சமயங்களைச் சார்ந்த வெளிநாட்டு, நம்நாட்டுப் பெருஞ் செல்வர்களும் ஏழைகளும் கூடக் கோடி கோடியாகப் பொருளைக் குன்றெனக் குவித்துத் தருகின்றனர். இவை எல்லாங் கண்டு வைத்தும் நம் தமிழ் நாட்டுச் சைவர்கள்-நாம், நம் பெருஞ்செல்வர்கள், ஏனையோர், பொதுமக்கள் - பெரும்பாலும் பணத்தைப் புதைத்து வைப்போராகத்தானே உள்ளனர்? ஒரு சிலர் - விரல்விட்டெண்ணக் கூடியவர் இத்தகைய அறங்களை உலகியல் நலங்கட்காக மேலும் பொருளீட்டுவதற்காகச் செய்கின்றனர். இந்துக் கல்லூரி, உயர்பள்ளி, பள்ளி என்றிருக்கும் அங்கே நம் சமயகச் கல்வியின் காற்றும் வீசாதே! கிறித்துவக் கல்வி நிலையங்களில் பைபிலுக்குத் தானே முதலிடம். அதனாற்றான் அவர்களிடையே அன்பும், ஒருமைப்பாடும், உயர் நலங்களும் காணப்படுகின்றன. நம் சமயத்தவர்களிலும் வடவர் இராமகிருட்டிண மடத்தின் பேரால்' கல்வி நிலையங்கள், சமயப் பரப்பு நிலையங்கள், மன்பதைத் தொண்டு

நிலையங்கள் அமைத்து நல்ல தொண்டுகள் செய்து வருகின்றனரே. இவ்வாறே சிவானந்தரின் தெய்வ நெறிக் கழகம், முதலியனவும் செய்கின்றனவே. இந்நிலையங்கட்கு நந்தமிழ்ச் செல்வர்கள் பலர் பெரும் பொருட்களை வழங்கியுள்ளனரே. அவர்களில் ஒரு சிலராவது நம் சமயப் பரப்பு நிலையங்களை அமைத்தலாகாதோ? இல்லை நம் சமாசம் போன்ற நிலையங்கட்கும் உதவி அப்பணிகளைச் செய்யலாகாதா?

## எது சிவபத்தி?

சிவபிரான் எல்லா உயிர்களிலும், பொருட்களிலும் ஊடுருவி நின்று அவை உய்ய இடையறாது தொண்டாற்றுகின்றான் அன்றோ? ஆதலின், சிவபிரானிடத்தே உண்மையான அன்பைக் காட்டிச் செலுத்த விரும்பும் சிவநேசர் அனைவரும் அவன் கோயில் கொண்டுள்ள பிணியாளர், வறியர், அழகில்லார், அருவருப்பானவர், ஊனமுற்றோர் யாவரிடத்தும் அன்பு கொண்டு தொண்டாற்றல் வேண்டும். அவர்தம் சாதி, மதம், நாடு, மொழி முதலியவற்றைக் கருதலாகாது. இவ்வாறு தானே கிறித்துவ நண்பர்கள் செயற் படுகின்றனர்!

மற்றும், ஏழை விலங்குகள், பறவைகள், சிற்றுயிர்களிடத்தும், புல், மரஞ்செடி கொடிகளிடத்தும், மண் முதலாம் அறிவில் பொருள்களிடத்தும் நாடு, மொழி, இனம், சமயம் இவற்றினிடத்தும், நாட்டிற்கான சட்டங்கள், குடும்ப நலம் முதலாம் மன்பதைத் தொண்டுகளிடத்தும், ஊர்த் தொண்டு, பல்வகைத் தொழிலாளர் நலத் தொண்டுகளிலும் பரிவுடன் அன்பொடு தாழ்வெனுந் தன்மையொடு பணியாற்றல் வேண்டும். பொறாமை முதலாம் தீக்குணங்களை விட்டு அன்பு, அருள், கொடை முதலாம் உயர்பண்புகளை மேற்கொள்ளல் வேண்டும். இவையே சிவபெருமானிடத்துக் காட்டும் உண்மையான பக்தியாகும். ''நல்லவை எல்லாங் கடன் என்ப'' என்றார் வள்ளுவர். நல்லவை யாவும் சிவமே, ஆம்!''அவன் நன்றுடையான் தீயதில்லான்'' அன்றோ? நம் சமாசம் முதலாம் நற்கழகங்கள் வளரத் தொண்டாற்றுவதும் மேலான சிவநேயமாகும்.

## முடிவுரை

### சமாச விழா அறக்கட்டளை

என்றும் நின்று வாழ்ந்து சிவநெறி பரப்ப இன்றியமையாதது, சமாசமும், ஆண்டு விழாவும். ஆண்டுதோறும் இவ்விழாவை நடத்தப்

பெருந் தொல்லையாகின்றது. நடக்குமா? என்ற நிலையும் ஏற்படுகின்றது. இந்த இழிநிலை ஒழியச் சமாச விழா ஆண்டுதோறும் தவறாது நடைபெற அறக்கட்டளை ஒன்று அமைந்துள்ளது. குறைந்த அளவு உரூபா ஆயிரம் கொடை என்று குறிக்கப்பட்டுள்ளது. இன்றுவரை ஐவரே தந்துள்ளனர். நம் சமாச உறுப்பினர்களிலேயே ஆயிரந் தரக்கூடிய வாய்ப்புள்ளோர் நூறு பேராவது இருக்கின்றனர். இப்படியானால் வெளியார்க்கும் நாம் எப்படி வேண்டுகோள் விடுக்க முடியும்? செல்வரிற் பலர் கண்ணீர் வாரச் சிவபூசைகள் செய்கிறார். திருமுறைகளை ஓதுகிறார். நாடோறுங் கோயிலுக்குப் போகின்றார். அடியார் வேடத்தில் அப்பரை விஞ்சுகின்றார். இப்படிப் பட்டவர்''பொக்கமும் நீருங் கண்டு, சிவபெருமான் 'என்னையுமா ஏமாற்றுகின்றாய்' என்று சிரிக்க மாட்டானா?''

இன்று நம் நாட்டுப் பொது மக்களுக்கும், ஏழைகட்கும், இளைஞர்கட்கும், செல்வர்கட்கும் சினிமாவே கோயில்; நடிகர்களே தெய்வங்கள், நாயன்மார்கள்; சினிமாப் பாடல்களே திருமுறைகள்; திரையங்குகளே திருக்கோயில்கள். விரும்பிப் படிக்கும் நூல்கள், துப்பறியும் நாவல்களே! அதுவும் பெரும்பாலும் ஆங்கிலத்தில் நடை, உடை, பாவனைகள் ஆங்கில முறைகள். கேட்பது இந்தி, ஆங்கில டப்பா இசைகள். உண்பதோ பிரியாணி, பிடிப்பதோ கூற வேண்டாம். பேசுவதோ சினிமா பற்றி. ஆராய்ச்சியோ அதுவே. பற்றோ ஆங்கிலம். இங்ஙனம் குறிக்கோள் இல்லாது கெட்டு மக்கட் பிறப்பின் சிறப்பை உணராது அழியுங் கோடிக்கணக்கான மக்களை எங்ஙனம் நல்வழிப் படுத்துவது?

இவர்கட்கும் தம்மையறியாமலே தெய்வப் பற்றுண்டு. திருக்கோயில் விழாகட்குப் பெரும் பொருட் செலவு செய்து மாபெருங் கூட்டமாகச் செல்வர். விழாக்களை ஆடம்பரமாக நடத்துவர். ஆனால், சமயக் கல்வியோ - நல்லொழுக்கங்கள் பண்பாடுகள் பற்றியோ சிறிதும் அக்கறை இல்லை. தன்னலமே பற்றி இறைவனை வழிபடுவார். அதுவும் மூடபத்தி. அரசியல், ஆட்களைப் பற்றியோ சொல்ல வேண்டியதில்லை.

இவர்கள் எல்லாம் திருந்தி உண்மைப் பத்திமையைச் சமய அறிவை, ஒழுக்கங்களைப் பெற, இன்பமுடன் வாழ இந்துக்களில் இளைஞர் முதலியோர் கைம்மாறு கருதாது பணியாற்ற முன் வரவேண்டும். பணமுடையோர் கோடிக்கணக்கில் பொருள் தர வேண்டும். இவர்கள் கிறித்தவர்கள், வடநாட்டு நம் இந்துச் சமய நிறுவனங்களில் பணிபுரியும் தொண்டர்கள் போல் பணியாற்றுதல்

வேண்டும். நம் சிவநெறி வளரத் தொண்டு இன்றியமையாதது என்று கூறவும் வேண்டுமோ? ''தொண்டல்லால் துணையுமில்லை'' அல்லவா? நம் கடன் பணி செய்து கிடப்பதே தானே! ஆதலின், தெருத் தெருவாய், ஊரூராய் - நம் சிவநெறித் தொண்டுகளைப் பரப்பச் சிவநேயர்களே வருக! வருக!

சமாசக் கிளைக் கழகங்களை எங்கும் நிறுவுங்கள். சமாசத்திற்கு உறுப்பினர்களைச் சேருங்கள். சமாச வெளியீடுகளான தமிழ், ஆங்கிலம் ''சித்தாந்தம்'' இதழ்களுக்கும் அன்பர்களைச் சேர்ப்பீர்கள். எளிய, அடக்க விலையிலான சமாச நூல்களை வெளியிடுகளை விற்பீர்கள். நால்வர் வரலாறுகளை எளிய நடையில் எழுதி இலட்சக் கணக்கில் வெளியிட்டுப் பரப்புங்கள். அவர்களுடைய அழகிய திருவுருவப் படங்களை உருவாக்கி விற்பீர்கள். திருமுறைப் பாடல்கள் சிலவற்றை உரையுடன் தொகுத்துப் பத்துக்காசு விலையில் யாண்டும் வழங்குங்கள் !''செல்வத்துப் பயனே ஈதல்'' என்றறிந்த செல்வர்களே! செல்லும் நெறிக்கும் மூலதனமாகப் பொருளை வாரி வாரி இச்சிவபுண்ணிய முயற்சிக்கு வழங்கிச் சிவனருள் பெற்று வாழ்வாங்கு வாழ்வீர்கள்.

*காகம் உறவு கலந்துண்ணக் கண்டீர் அகண்டா காரசிவ*
*போகம் எனும்பேரின்பவெள்ளம் பொங்கித் ததும்பிப் பூரணமாய்*
*ஏகஉருவாய்க் கிடக்குது ஐயோ இன்புற்றிட நாம்இனி எடுத்த*
*தேகம் விழும்முன் புசிப்பதற்குச் சேரவாரும் செகத்தீரே.*

- தாயுமானவர்

என்று கூறி யாவரையும் தொண்டாற்ற வாரீர் ! வாரீர் என வேண்டுகின்றேன். அழைக்கின்றேன்.

சமாசத்தின் செயற்குழுவினராகிய நாங்கள் மேற்சொன்ன தொண்டுகளில் முன் நிற்க வேண்டும், எடுத்துக் காட்டிகளாகத் திகழல் வேண்டும் என்பதை உணர்ந்து மேன்மேலும் தொண்டில் உறைத்து நிற்போம். உறுப்பினர்களுக்கு வழிகாட்டிகளாக விளங்குவோம். யாவரையும் மறைமுகமாகவோ - நேர்முகமாகவோ புண்படுத்தும் நோக்கத்துடன் எளியேன் எதுவுங் கூறவில்லை. அது கீழ்மக்கள் செய்கையாம் என்றறிவேன். யாவர்க்கும் அவர்கள் திருவடிகளில் தலைவைத்துப் பணிந்து நெடுவணக்கஞ் செய்கின்றேன். செந்தமிழோங்கிச் சிவநெறி விளங்கி மக்கள் இம்மையிலேயே சிவபெருமான் அருளாம் பேரின்ப வாழ்வைப் பெற்று, இன்பமே எந்நாளுங் கொண்டு திகழ வேண்டும்.

இக்குறிக்கோளுடன்தான் இப்பேருரையும் வேண்டுகோள்களும் என்று கூறி அமைகின்றேன். என்புன் சொற்களைச் செவியேற்ற எல்லீர்க்கும் என் அன்பு நிறை வணக்கங்கள். இம்மாநாட்டினை முன்னின்று பேருழைப்போடு நடத்தும் வரவேற்புக் குழுவினராகிய நும் அனைவீர்க்கும் என்புல்லிய அன்பு நிறைந்த வணக்கங்கள். வாழ்க!

## பண்டிதர், சைவப் புலவர்

# தங்கம்மா அப்பாக்குட்டி

யாழ்ப்பாணம், இலங்கை

(74ஆம் ஆண்டு விழா, ஆரணி)

*''கைப்போது மலர் தூவி காதலித்து வானோர்கள்*
*முப்போது முடி சாய்த்துத் தொழ நின்ற முதல்வனை*
*அப்போது மலர் தூவி ஐம்புலனும் அகத்தடக்கி*
*எப்போது மினியானை என்மனத்தே வைத்தேனே''*

எல்லாம் வல்ல பரம்பொருளின் திருவருள் துணைநிற்க.

சிவநெறியும் செந்தமிழ் நெறியும் தழைத்தோங்க அரும்பணி யாற்றும் சைவ சித்தாந்த சமாஜத்தினர்களே. சைவப் பெருமக்களே சக்தியின் அம்சமாக விளங்கும் திருவுடை மங்கையர்களே, உங்கள் அனைவருக்கும் எனது உளங்கனிந்த வணக்கம் உரித்தாகுக.

''இறைவனைப் பேசாத நாளெல்லாம் பிறவாநாளே'' என்று குறிப்பிடுகிறார் அப்பர் சுவாமிகள். அவனை மறந்த நாள் வாழ்விலே கெட்ட நாள் எனப் பேசுகிறார் சுந்தரமூர்த்தி சுவாமிகள். இத்தகைய அருளாளர் வழியிலே நின்று வாழ்ந்து கொண்டிருப்பவர்கள் பலரை இவ்வவையின் கண் காணும் பேறு கிடைத்துள்ளது. வாழ்த்த வாயும் நினைக்க மட நெஞ்சும் தாழ்த்த சென்னியும் தந்த தலைவனாகிய சிவனுக்கு நாம் என்றும் நன்றி செலுத்தக் கடமைப்பட்டுள்ளோம். திருவாசகத்தில் திருப்பூவல்லி என்ற பகுதியில் பெண்கள் இத்தகையதொரு நன்றி கூறி மலர் கொய்யும் பரிசினை மணிவாசகப் பெருமான் காட்டுகிறார்.

*''வணங்கத் தலை வைத்து வார்கழல்வாய் வாழ்த்தவைத்து*
*இணங்கத் தன் சீரடியார் கூட்டமும் வைத்தெம்பெருமான்*
*அணங்கொடணி தில்லை யம்பலத்தே யாடுகின்ற*
*குணங்கூரப்பாடி நாம் பூவல்லி கொய்யாமோ''*

அவன் புகழ் பாடவும், அடியார்க் கெளிவந்த அவன் கருணை பற்றி நினைக்கவும், அவனடியார் அடியாரோடு கூடிச் சிவானுபவம் பெறவும் இத்தகைய மகா நாடுகளே வாய்ப்பளிக்கின்றன.

இன்று காலையில் சைவ மங்கையர் மகா நாட்டுக்காகக் கூடியிருக்கிறோம். இம்மகாநாட்டுக்குத் தலைமை தாங்கும் பேறு அடியேனுக்குக் கிடைத்துள்ளது. தாமும் தரமுடையவர்களாகி மற்றவர்களையும் தரமுடையவர்களாக்குவது தான் சிறந்த சமயப் பணி, அவ்வகையில் சைவ சித்தாந்த சமாசத்தினர் அடியேனையும் தரமுடையளாக்கி இப்பணிக்கும் பணித்துள்ளார்கள். இந்நேரத்தில் எனது மனமுவந்த நன்றியை சமாஜத்தினருக்கு மகிழ்ச்சியோடு தெரிவிக்கின்றேன். மேடையிலே வீற்றிருக்கும் அருள் நலமும் அறிவு நலமும் வாய்க்கப் பெற்ற சகோதரிகளின் உரையைக் கேட்க நீங்கள் எல்லோரும் ஆவலாக இருப்பீர்கள் என்பது அடியேன் நம்பிக்கை. அதுவுமன்றி என் முன்னிலையிலே சைவ சித்தாந்தப் பேரறிஞர்கள் பலர் வீற்றிருக்கிறார்கள்.

*''வஞ்சகப் பெரும் புலையனேனையுன் கோயில்வாயிலில்*
*பிச்சனாக்கினாய் பெரிய அன்பருக்குரியனாக்கினாய்''*

என்ற வாசகத்தைத்தான் இச்சந்தர்ப்பத்தில் நினைந்து திருவருளை ஏத்துகிறேன்.

''இந்த சரீரம் இறைவனால் நமக்குத் தரப்பட்டது, அவனை வழிபட்டு முத்தியடைவதற்காகவே'' என்பது யாழ்ப்பாணத்து நல்லூர் ஸ்ரீலஸ்ரீ ஆறுமுக நாவலர் பெருமான் அருளிய வாக்கு. இவ்வாக்கையே முன்வைத்துத் தலைமையுரையை ஆற்றலாம் என்று நினைக்கின்றேன்.

ஈழநாட்டுக்கும் இந்நாட்டுக்குமிடையே அமைந்த ஆன்மீகத் தொடர்பில் நாவலர் பெருமானுக்குப் பெரும் பங்குண்டு. நூற்று இருபத்தைந்து ஆண்டுகளுக்கு முன்பு அங்கிருந்து இங்கு வந்து சைவப்பணி ஆற்றியதுமன்றி ஈழத்தில் சைவசித்தாந்த நெறியை எழுத்தாலும் பேச்சாலும் நிலைநிறுத்திய பெருமை அவருக்கு உண்டு. இதன் பயனாகவே 1948, 1960ஆம் ஆண்டுகளில் யாழ்ப்பாணத்திலும் திருக்கேதீஸ்வரத்திலும் மிகச்சிறப்பாகச் சைவசித்தாந்த மகா நாடுகள் நடைபெற்றன. ஈழத்திலிருந்தும் காலத்துக்குக் காலம் சைவ சித்தாந்தப் பேரறிஞர்கள் இங்கு அழைக்கப்பட்டு மகாநாடுகளுக்குத் தலைமை தாங்கியும்,

உரையாற்றியும் சென்றுள்ளனர் என்பதைப் பணிவுடன் ஞாபகப் படுத்திக் கொள்கிறேன்.

*''வாழ்வெனும் மையல் விட்டு வறுமையாம் சிறுமைதப்பி*
*தாழ்வெனும் தன்மையோடு சைவமாம் சமயஞ்சாரும்*
*ஊழ் பெறலரிதுசால உயர் சிவஞானத்தாலே*
*போழிள மதியினானைப் போற்றுவார் அருள் பெற்றாரே*

''குலம், இளமை, கல்வி, செல்வம் என்னும் இவற்றாலேற்படும் செருக்கு ஒழிந்து வறுமையினாலேற்படும் பின் செல்லலாகிய சிறுமையும் அகன்று மெய்யன்பினாலேற்படும் பணிவோடு சைவ சமயத்தில் பிறந்து வாழும் புண்ணியப்பேறு கிடைப்பது மிக அரிதாகும்'' என்பது அருணந்தி சிவனார் கருத்து. சைவ சமயத்திற் பிறந்து, சைவ சமயமே சமயம் என்று பெருமை பேசிக் கொண்டிருக்கிற நாம் சைவத்தின் உயர்வுபற்றியும் அறிந்து கொள்ள வேண்டும்.

சைவம் சிவசம்பந்தமுடையது. சிவம் என்பதற்கு அன்பு, இன்பம் ஆனந்தம் எனப்பல பொருள் கூறுவர். ''ஈறிலாப் பதங்கள் யாவையும் கடந்த இன்பமே என்னுடை அன்பே'' என்று பேசுகிறார் மணிவாசகப் பெருமான். ஆண்டவனிடத்தன்றி அனைத்துயிர்களிடத்தும் அன்பு செலுத்துவதே சைவத்தின் தலையாய சிறப்பாகும். இதனாலேயே கொல்லாமை, கொன்றதைத் தின்னாமை சைவத்தில் வற்புறுத்தப் படுகிறது.

*''எவ்வுயிரும் தன்னுயிர் போல் எண்ணி இரங்கவும் நின்*
*தெய்வ அருட்கருணை செய்யாப் பராபரமே''*

என்று வேண்டுகிறார் தாயுமானவர். சைவத்தின் பெருமைக்கும், பழமைக்கும் மொகஞ்சோதரோ, ஹரப்பா கால நாகரீகச் சின்னங்கள் மாத்திரமன்றி உலகெங்கணும் அதாவது மெக்சிக்கோ ஆஸ்திரரேலியா, தென்கிழக்கு ஆசிய நாடுகள் ஆகியவற்றில் இடம் பெற்றிருந்த சிவ வழிபாடும் சான்றாக அமைகிறது. 'உலகெலாம்' என்று சிந்தித்த ஒரேயொரு சமயம் சைவம். ''வையகமுந்துயர் தீர்கவே'' என்பதும் ''அப்பாலுமடிச் சார்ந்தாரடியார்க்கும் அடியேன்'' என்பதும் சைவத்தின் பரந்த கொள்கையைத் தெற்றென விளக்குகிறது.

*''யாதொரு தெய்வம் கொண்டீர் அத் தெய்வமாகி ஆங்கே*
*மாதொரு பாகனார் தாம் வருவார்'' என்றும்*

''விரிவிலா அறிவினோர்கள் வேறொரு சமயம் செய்தே எரிவினாற் சொன்னாரேனும் எம்பிராற் கேற்றதாகும்'' என்பதும் சைவத்தின்

விரிந்த நோக்கையும் பரந்த தத்துவத்தையும் காட்டி நிற்பன. சைவ சித்தாந்தம் என்று சொல்லும்போது "சைவ" என்ற அடைமொழி சேர்ந்து அது ஒரு தனிப்பெருங் கடவுட் கொள்கை என்பதைக் காட்டி நிற்கிறது. "சைவத்தின் முடிந்த முடிவு" என்று இதற்கு விளக்கம் கூறுவர். வாழ்க்கையோடு இணைந்த நெறியே இது. இக்கொள்கைகள் எக்காலத்தும் மாறாதவை. வாழ்வாங்கு வாழ்ந்தால் போது மென்றே இந்நெறி காட்டுகிறது. இறைவனை அடைவதற்கு மிக அழுத்தமான பாதை சைவ சித்தாந்தமே என்று பேரறிஞர்கள் பலர் எடுத்துக் காட்டியுள்ளனர்.

*"ஓரும் வேதாந்த மென்றுச்சியிற் பழுத்த*
*ஆரா இன்ப அருங்கனி பிழிந்து*
*சாரங் கொண்ட சைவ சித்தாந்தத்*
*தேன முதருந்தினர் சிலரே"*

என்று குமர குருபர சுவாமிகளும் எடுத்துக் கூறியுள்ளார். கந்த புராணத்திலே காசிபர் உபதேசமும் இவ்வடிப்படையிலேயே அமைகிறது.

*"சான்றவர் ஆய்ந்திடத்தக்க வாம்பொருள்*
*மூன்றுள மறையெலாம் மொழிய நின்றன*
*ஆன்றதோர் தொல்பதி ஆருயிர்த்தொகை*
*வான்றிகழ் தளையென வகுப்பர் அன்னவே"*

என்று பாடத்தைத் தொடங்குகினார் காசியர்.

இங்கே முதற் பொருளாகப் பேசப்பட்ட பரம் பொருளையே "சிவம்" என்று குறிப்பிட்டு வழிபட்ட மக்கள் அதனுடனிணைந்த சக்தியையும் உணரத் தலைப்பட்டனர்.

"சிவமெனும் பொருளும் ஆதிசக்தியோடிணைந்திடின் எத்தொழிலும் வல்லதாம்" என்ற கூற்றுப்படி அவனது பேராற்றலே அனைத்தையும் இயக்குகிறது என்ற நம்பிக்கையிலே சக்தி தத்துவம் காட்டப்படுகிறது. சைவ மங்கையர் மகாநாட்டிலே இச்சக்தி தத்துவத்தைப் பற்றிச் சிறப்பாக நாம் நினைப்பதும் பொருத்தமானதே.

*"சிவம் சக்திதன்னை யீன்றும் சக்திதான் சிவத்தை யீன்றும்*
*உவந்திருவரும் புணர்ந்திங் குல குயிரெல்லாமீன்றும்*
*பவன் பிரமசாரியாகும் பான்மொழி கன்னியாகும்*
*தவந்தரு ஞானத்தோர்க்கித் தன்மைதான் தெரியுமன்றே*

இதிலிருந்து சக்தியும் சிவமும் ஒன்றே என்பது வெளிப்படை. ''அப்பன் நீ அம்மை நீ'' என்ற வாக்கும் ''அம்மையே அப்பா'' என்ற வாசகமும் இந்த அடிப்படையிலே எழுந்தவை. குழந்தையைப் பெற்றுப் பாலூட்டி தொட்டிலில் வளர்த்திச் சிறிது வளர்ந்த ஞான்று விளையாடவிட்டுப் பார்த்து மகிழ்பவள் தாய். குழந்தை குறும்பு செய்யுமாயின் அச்சுறுத்தி அழுங்குழந்தையை அணைத்து அதற்கு வேண்டுவனவற்றைக் கொடுத்து அமைதியாக உறங்க வைப்பவள் தாய். இறைவனும் இவ்வாறே தாயாக நின்று உயிர்களை வளர்க்கிறான் என்ற கருத்தில் தாயுமானார் பாடலொன்றைக் காணலாம்.

*''காரிட்ட ஆணவக் கருவறையில் அறிவற்ற*
*கண்ணிலாக் குழவியைப் போற்*
*கட்டுண்டிருந்த எமை வெளியில் விட்டல்லலாங்*
*காப்பிட்டதற்கிசைந்த*
*பேரிட்டு மெய்யென்று பேசு பாழ்ம் பொய்யுடல்*
*பெலக்கவினை அமுதம் ஊட்டிப்*
*பெரிய புவனத்தினிடை போக்குவரவு றுகின்ற*
*பெரிய விளையாட்டமைத்திட்*
*டேரிட்ட தன் சுருதி மொழி தப்பின் நமனைவிட்*
*டிடருற வுறுக்கி இடர்தீர்த்*
*திரவு பகல் இல்லாத பேரின்ப வீட்டினில்*
*இசைந்து துயில் கொண்மின் என்று*
*சீரிட்ட உலகன்னை வடிவான எந்தையே*
*சித்தாந்த முத்தி முதலே*
*சிரகிரி விளங்கவரு தட்சிணா மூர்த்தியே*
*சின்மயானந்த குருவே.*

உயிர்கள் அனாதியாகவே ஆணவ மலத்தால் கட்டுண்டு கிடக்கின்றன. இருள் செரிந்த இக்கருப்பையில் அகப்பட்டுக் கேவல நிலையில் நிற்கின்றன. இவ்வழுந்துதலிலிருந்து நீங்குவதற்குப் பற்பல உடம்பைக் கொடுத்து உயிரறிவைச் சிறிது விளங்க வைக்கின்றான் இறைவன். பிறவிதோறும் இவ்விளக்கம் ஏற்பட்டுப் பிறவாமையாகிய பேரின்ப நிலை கிட்டுகிறது. எனவே நித்தியானந்தப் பெரு வாழ்வில் உயிர்கள் அமைதி யுற்று வீடு பேறடைகிறதே முடிந்த முடிவு. இந்நிலையைத் தாயாக நின்று இறைவன் தருகின்றான், என்பதே சைவ சித்தாந்த முடிவு.

*''தன்னிலைமை மன்னுயிர்கள் சாரத் தருஞ்சத்தி*
*பின்னமிலான் எங்கள் பிரான்''*

என்பது திருவருட்பயன். சக்தி தரும் சாரத்தரும். தன்னிலைமை (இறைவனது ஒப்பற்ற தன்மையை) சாரத்தரும் என்பதை விளக்கமாகக் காண்கிறோம். கேவல, சகல, சுத்தம் ஆகிய மூன்று நிலைகளுக்கும் மேற்காட்டிய தாயுமானார் பாடல் சிறந்த எடுத்துக் காட்டாக அமைகிறது. இறைவன் தாயாக நின்று உயிர்களைப் பக்குவப்படுத்தி முத்தியை வழங்குகின்றான் என்பதைச் சிறப்பித்துப் பேசுகிறார் சுவாமிகள்.

"தாயுடன் சென்று தாதையைக் கூடிப்பின் தாயை மறந்து ஏயுமதே நிட்டை" என்று கூறிய பட்டினத்தார் வாக்கும் இவ்வுண்மையையே காட்டுகிறது. சக்தியின் அம்சமாக விளங்கும் தாய்மாரும் இத்தகையதொரு தியாகத்தையே சமுதாயத்தில் ஆற்றுகின்றனர். அம்பாளே தியாகேஸ்வரியாக நின்று இவ்வுண்மையைக் காட்டு கிறாள். தம்முடைய அடியார் செய்த பாவங்களையும் பிழைகளையும் போக்கி அருளி அவர்களை அடியராக்கி ஏற்றுக் கொள்ள வேண்டும் என்று உமையம்மை சிவ பெருமானையே வேண்டி நின்றதாகக் காஞ்சித் தலவரலாறு காட்டுகிறது. அர்ச்சனை புரியும் ஆகம விளக்கத்தை இறைவனே திருக்கைலாயத்திலே உமாதேவிக்கு விளக்கி அருளினார்.

*வெள்ளி மால்வரைக் கயிலையில் வீற்றிருந்தருளித்*
*துள்ளு வார்புனல் வேணியரருள் செயத் தொழுது*
*தெள்ளு வாய்மையினாகமத் திறனெலாந் தெரிய*
*வுள்ளவாறு கேட்டருளினாருலகை யாளுடையார்*

அதாவது வெள்ளியங்கிரியில் வீற்றிருப்பவரும் கங்கையைத் தரித்தவருமான சிவபெருமானின் திருவாக்கினின்றும் வெளிவந்த சிவாகமத்தை உமாதேவி கேட்டருளினாள்.

*"எண்ணிலாகமமியம்பிய இறைவர் தாம் விரும்பு*
*முண்மையானது பூசனை யெனவுரைத் தருள*
*வண்ணலார் தமை அர்ச்சனை புரிய வாதரித்தாள்*
*பெண்ணினல்லவளாயின பெருந்தவக் கொழுந்து*

எண்ணிறந்த ஆகமங்களைத் திருவாய் மலர்ந்தருளிய இறைவனுக்கு உவந்தது பூஜையாதலால் அந்தப் பூஜையைச் செய்து அவருடைய அருளைப் பெற வேண்டுமென்று தேவியே விரும்பினாள். அதன் பயனாகக் காஞ்சியிலே முப்பத்திரண்டு அறங்களையும் வளர்த்து அறம் வளர்த்த நாயகியாகக் காட்சியளித்துக் கொண்டிருக்கிறாள். உமையம்மையின் அம்சமாக விளங்குபவர்கள்

பெண்கள். இவர்களின் உயர்விலேயே வீட்டின் உயர்வும் நாட்டின் உயர்வும் தங்கியுளது. உலக வாழ்க்கைக்கு ஜீவ ஒளியாகப் பெண்குலமே அமைய வேண்டும். தர்மம், சத்தியம், தாய்மை, பொறுமை, கருணை, கற்பு, தன்னம்பிக்கை, தன்னடக்கம் ஆகியவை அனைத்தும் பெண்குலத்துக்குப் பெருமை தருவன. பிறந்த இடத்துக்கும் புகுந்த இடத்துக்கும் பெருமையைத் தேடிக் கணவனைக் கண்கண்ட தெய்வமாகப் போற்றி விளங்க வேண்டிய கடமை பெண்களுக்கு உண்டு. அம்பிகையின் பல்வேறு வடிவங்கள் பெண்களின் பல்வேறு சக்திகளை விளக்கி நிற்பன். அன்னபூரணியாக இருந்து ஆண்டவனுக்கே ஈகையின் சிறப்பைக் காட்டியவள் உமாதேவி. அவள் உலகுக் கெல்லாம் படியளந்து எல்லாப் பெண் களும் அறம் வளர்க்கும் செல்விகளாக விளங்க வேண்டுமென்றும் வழிகாட்டினள்.

திருநாவுக்கரசு நாயனார் காலத்தில் அவர் பெயராலே தர்ம கைங்கரியங்களில் ஈடுபட்ட அப்பூதி அடிகளாரையும் அவரின் மனைவியாரையும் பற்றியறிகின்றோம். இறைவனின் சோதனையாக மூத்த மகனை இழந்தும் ஈகையின் பெருமைக்கு எடுத்துக் காட்டாக இக்குடும்பம் விளங்குகிறது. பசித்து வந்த சிவனடியாருக்கு இன்னமுதும் மாங்கனியும் அளித்து ஈகையின் சிறப்பை எடுத்துக் காட்டியவர் புனிதவதியார். நள்ளிரவிலே வீட்டுக்கு வந்து சிவனடியாரை அன்னமூட்டி பசி நீக்குவதற்கு வழி காட்டியவர் இளையான்குடி மாறநாயனாரது மனைவியார். அமுத சுரபி கொண்டு பசியால் வருந்துவோருக்கு அமுதளித்தவள் மணிமேகலை. கணவனைப் பிரிந்திருந்த காலத்தில் ''அறவோர்க்களித்தலும, அந்தணர் ஓம்பலும், துறவோர்க் கெதிர்தலும், தொல்லோர் சிறப்பின் விருந்தெதிர் கோடலும் இழந்த என்னை'' என்று கண்ணகி கூறுவதிலிருந்து பெண்குலம் பெருமையோடு வாழ்க்கையின் குறிக்கோளாகக் கொண்டது ஈகை என்பது வெள்ளிடைமலை.

*''படமாடக் கோயில் பகவற் கொன்றீயில்*
*நடமாடுங் கோயில் நம்பற் கங்காகா*
*நடமாடுங் கோயில் நம்பற் கொன்றீயில்*
*படமாடுங் கோயில் பரமற்கங் காமே''*

இத்திரு மந்திரக் கருத்துப்படி மக்களுக்கு ஈவதே மகேஸ்வரனுக்கு உவப்பானது எனக் காட்டப்படுகிறது. உயிர்களின் உண்மை ஊதியம் ஈகையின் சிறப்பிலேயே அமைந்துள்ள தென்பதை வள்ளுவரும் காட்டுகிறார்.

*"ஈதல் இசைபட வாழ்தல் அது வல்லது*
*ஊதியம் இல்லை உயிர்க்கு"*

ஈதலினாலேயே புகழ் கிடைக்கிறது என்பதை அழுத்தமாகக் கூறவந்த வள்ளுவர் ஈதலையும் புகழையும் இணைத்து ஒருமையிலே வைத்து "அது" என்று பேசுகிறார்.

அடுத்து விருந்தோம்பும் பண்பில் பெண் மக்கள் சிறந்திருந்த தன்மையை நோக்கலாம். கோசல நாட்டின் பெருமையைக் கூற வந்த கம்ப நாட்டாழ்வார்

*"பெருந்தடங்கண் பிறை நுதலார்க் கெல்லாம்*
*பொருந்து செல்வமும் கல்வியும் பூத்தலால்*
*வருந்தி வந்தவர்க்கு ஈதலும் வைகலும்*
*விருந்து மன்றி விளைவன யாவையே"*

என்று பாடியுள்ளார். இன்றும் விருந்தோம்பும் பணியில் பெண் குலம் கொண்ட ஈடுபாட்டிற்குச் சங்க இலக்கியங்கள் பெரும் சான்றாக விளங்குகின்றன. விருந்து வரும் என்று கரைந்த காக்கைக்கு அன்னமிட்டு மகிழ்ந்தது சங்ககாலப் பெண்குலம். கணவனுடன் கொண்ட ஊடலை நீக்குவதற்கு விருந்து ஒரு வாயிலாக அமைந்ததைச் சங்க இலக்கியம் காட்டுகிறது.

திருவாமூர்ச் சிறப்பைக் கூற வந்த சேக்கிழார்

*"மேலேல்லாம் அகில் தூபம் விருந்தெல்லாம் திருந்துமனை"*

என்று சிறப்பிக்கிறார். இல்லங்களெல்லாம் விருந்தினால் சிறப்படைய வேண்டும். இதற்குரியவர்கள் இல்லத் தரசிகளே. செல் விருந்தோம்பி வருவிருந்து பார்த்திருப்பவர்க்கு வானத்தவர் நல்விருந்தளிப்பர் என்பது பொதுமறை.

சைவத்தின் பெருமையிலும் வளர்ச்சியிலும் பெண்கள் பெரும் பங்கு பெற்றுள்ளமையை எடுத்துக் காட்டும் முகமாகப் பூம்பாவையை எழுப்பிய இடத்தில் ஞான சம்பந்தர் கருத்தைக் காண்கிறோம்.

*மண்ணினிற் பிறந்தார் பெறும்பயன் மதிசூடும்*
*அண்ணலார் அடியார் தமை அமுது செய்வித்தல்*
*கண்ணினால் அவர் நல்விழாப் பொலிவு கண்டார்தல்*
*உண்மையா மெனில் உலகர் முன் வரு கென உரைப்பார்*

அடியாரைப் போற்றலும் அமுது செய்வித்தலும் ஆண்டவன் பணிகளில் ஈடுபடுதலும் பெண்குலத்தின் கடமைகள் என்பதை இவ்வரலாறு காட்டுகிறது.

இன்னும் பக்தி நெறியில் பெண் மக்கள் கொண்டுள்ள பங்கைக் கவனிப்போம். திருவாசகத்திலே மணிவாசகர் கூற்றொன்றில் காணலாம்.

*முன்னைப் பழம் பொருட்கும் முன்னைப் பழம் பொருளே*
*பின்னைப் புதுமைக்கும் பேர்த்துமப் பெற்றியனே*
*உன்னைப் பிரானாகப் பெற்றவுன் சீரடியோம்*
*உன்னடியார் தாள் பணிவோம் ஆங்கவர்க்கே பாங்காவோம்*
*அன்னவரே எங்கணவராவா ரவருகந்து*
*சொன்ன பரிசே தொழும்பாய்ப் பணி செய்வோம்*
*இன்ன வகையே எமக்கெங் கோன் நல்குதியேல்*
*என்ன குறையு மிலோ மேலோர் எம்பாவாய்''*

கன்னியர்கள் தமக்குக் கிடைக்கப் பெறும் கணவன்மார் சிவ தொண்டர்களாகவே அமைய வேண்டுமென்று பிரார்த்தனை செய்கின்றனர். ஏனென்றால் பக்தியனுபவம் கணவனுக்கும் மனைவிக்கும் ஒன்றாய் அமையாவிடத்துத் திருப்தியாக இல்லற தர்மம் அமையாது. இதற்கு எடுத்துக்காட்டாகக் காரைக்காலம்மையார் வாழ்வு அமைகிறது. விடையவர் பால் அல்கிய அன்புடன் அழகின் கொழுந்தெழுவதென வாழ்ந்தவர் அம்மையார். ஆனால் திருமண வாழ்வு சிறப்பாக அமையவில்லை. எனினும் கணவனாலேயே ''தெய்வம்'' எனப் போற்றப்படும் பெருநிலையும் இவருக்கு ஏற்படுகிறது. அந்நிலையிலே சிவனறிவொன்றே கைவரப் பெற்றவராய் உற்பவித்தெழுந்த ஞானத் தொருமையிலே அற்புதத் திருவந்தாதியைப் பாடுகிறார். அதில் ஒரே வொரு பாடலை மாத்திரம் எடுத்துக் கொள்வோம்.

*''வானத்தா னென்பாருமென்க மற்றும்பர் கோன்*
*தானத்தா னென்பாரும் தாமென்க -ஞானத்தான்*
*முன் னஞ்சத்தாலிருண்ட மொய் யொளிசேர்கண்டத்தான்*
*என் னெஞ்சத்தான் என்பன் யான்''*

இங்கே ஒரு பெருமிதம் தோன்றுகிறது. அதாவது ஆண்டவன் தன்னகத்திலே குடியிருக்கிறான் என்பதே அதற்குக் காரணமாகும்.

ஒன்றே நினைந்திருந்தேன் ஒன்றே துணிந்தொழிந்தேன் ஒன்றே என்னுள்ளத்தினுள்ளடைத்நேன்'' என்று பாடிப் பேய் வடிவுடன் காற்றிலும் கடிதாகச் செல்லுகிறார்.

*''அண்டர் நாயகனார் என்னை அறிவரேல் அறியா வாய்மை*
*எண்டிசை மாக்களுக்குயான் எவ்வுருவாயென்''*

என்பது அவர் கருத்து.

தலையினால் நடந்து திருக்கயிலையை அண்மிய பொழுது ''வருமிவள் நம்மைப் பேணும் அம்மை'' என்று கூறி, இறைவன் உமையம்மைக்கு அறிமுகம் செய்து வைக்கிறார், அதுவுமன்றி அம்மையே உனக்கு என்ன வேண்டும் என்று கேட்டஞான்று அதற்குப்பதிலாக வெளிப்பட்ட அருள் வாக்குகளை நாம் என்றென்றும் போற்றி ஓத வேண்டியவர்களாக இருக்கிறோம்.

*''இறவாத இன்ப அன்பு வேண்டிப் பின் வேண்டுகின்றார்*
*பிறவாமை வேண்டும் மீண்டும் பிறப்புண்டேல் உன்னையென்றும்*
*மறவாமை வேண்டும் இன்னும் வேண்டும் நான் மகிழ்ந்துபாடி*
*அறவா நீ ஆடும் போது உன்னடியின் கீழ் இருக்க என்றார்''*

சமய வாழ்விவ் தலைப்பட் பெண்கள் தியாகத்தின் சின்னங்களாகவும் வாழ்ந்து வந்திருக்கிறார்கள். இயற்பகையார், சிறுத் தொண்டர் ஆகியோரின் மனைவியர்களை இதற்கு எடுத்துக்காட்டாகக் கூறலாம். இயற்பகையாரின் நிலையான அன்பைப் பெற்றவர் அவர் மனைவியார். இதனைச் சோதிக்கும் முகமாக இறைவனே எழுந்தருளி சிவனடியாராக வந்து நாயனாரின் மனைவியைத் தனக்குத் தரும்படி வேண்டுகிறான். விதி மணக்குல மடந்தையுன்னை இம்மெய்த் தவர்க்கு யான் கொடுத்தனன் என்கிறார் இயற்பகை. இதனை ஏற்றுக் கொண்ட மாதரசி'' இன்று நீர் எனக்கு உரை செய்த திதுவேல் என்னுயிர்க் கொருநாத நீருரைத்த தொண்றை நான் செயுமல்லால் உரிமை வேறுளதோ எனக் கூறிய மாண்பினை நினைந்து நினைந்து போற்ற வேண்டியுள்ளது.

கணவனாரின் நியமத்தை நிறைவேற்றும் பொருட்டு தன் மகனையே இழக்கத் துணிந்த திரு வெண்காட்டு நங்கையின் தியாகத்துக்கு எதிர் நிற்க வல்லவர் யார்?

*''இல்ல தென் இல்லவள் மாண்பானால் உள்ளதென்*
*இல்லவள் மாணாக்கடை''*

என்பது பொய்யா மொழியன்றோ!

அடுத்து ''தர்மம்'' என்ற இடத்துக்கு வருவோம். இவ்வழியில் நின்று நாட்டை சைவ ஒளியில் மேலோங்கச் செய்த பெருமை மங்கையர்க்கரசியாருக்கு உண்டு. நாட்டையும் குடி மக்களையும்

நன்னெறியில் செலுத்த வேண்டியது அரசியல் தருமம். ஒப்பற்ற சிறந்த பாண்டி நாடு நீற்றொளி விளக்கம் குன்றி, ஆலயங்களில் ஒளி குன்றி, சைவசீலங் குன்றி, இருந்த காலத்தில் மனமுடைந்து சிவ தர்மத்தை நாட்டிலே நிலைநாட்டப் பாடுபட்டவர் மங்கையர்க்கரசியார். இதனாலேயே மங்கையர்க்குத் தனி அரசி என்று போற்றுகிறார் - சேக்கிழார். அதுமாத்திரம் அன்று, ''பொங்கொளி வெண்திருநீறு பரப்பினாரைப் போற்றுவார் கழல் எம்மால் போற்றலாமே'' எனப்பாடியுள்ளார். ஞானசம்பந்தப் பெருமானும் ஆலவாயம் மானைப் பாடு முன்பு அரசியாரைப் பாடுகின்றார். சிவநெறி வழுவாத சோழர் குலத்திலே அவதரித்த அரசியார் ''தெய்வப் பாவை'' என்று போற்றப்படுகிறார். இடர்ப்பாடு மலிந்த காலத்திலே நெருக்கடிக் குள்ளே சைவத்தை வளர்த்தார் அரசியார் என்பதை ஞான சம்பந்தர் கூற்றில் இருந்து அறியலாம். ''சூழு மாகிய பரசமயத்திடையே தொண்டு வாழும் நீர்மையீர் உம்மைக்காண வந்தனம்'' என்று கூறுவதில் இருந்து இவர் காலத்தை நோக்கி ஆற்றிய பணியை ஊகித்தறிய முடியும்.

தம்மைப்பேணி, தம் கணவனைப் பேணி, சைவத்தைப் பேணி, பாண்டி நாட்டையே பேணிய பெருமை மங்கயர்க்கரசியாருக்கு உண்டு. ஆன்மீகத்தோடு கலவாத அரசியல் அர்த்தமற்றது என்பதை மன்னவனுக்கே எடுத்துக் காட்டிய பெருமை இவருக்குடையது. புகலியில் வந்து ஆண்டு கொண்டவர் தம்பால் அமணர் தாம் செய்த தீங்கு முண்டவாறு இவ்வாறாகி முடிந்ததோ' என்று சிந்திக்கின்றார். தாய் போல் கழறலும் தழீஇக் கோடலும், ஆய்மனைக் கிழத்திக்கு உரியவாகும், என்றபடி வேண்டிய நேரங்களில் கணவனுக்கு உறுதி யுரைப்பதில் மனைவி தவறக்கூடாது. கொண்ட கொழுநனை நன்னெறிப் படுத்தலும் இல்லாளின் முக்கிய கடனாகும். மங்கையர்க்கரசியார் சைவத்தை தாமும் உணர்ந்து கணவனாருக்கும் உணர வைத்தார். சிவனடியாரைச் சிவனென மதித்துப் போற்றியவர். இவருடைய தூய உள்ளத்தையும் உயர்ந்த சைவப் பற்றையும் உன்னிய ஞான சம்பந்தர் அவர் மேற் பரிவு கொண்டார். மன்னவன் குற்ற மிழைத்தானென்று தெரிந்திருந்தும் பையலே சென்று பாண்டியற் காகவே என்று பாடினார். அரசியாரின் மங்கல வாழ்வுக்குக் குறையேற்படக் கூடாது என்பதே ஞான போனகர் கருத்து.

*பாண்டிமா தேவியார் தமது மொற்பில்*
*பயிலு நெடு மங்கல நாண் பாதுகாத்தும்*
*ஆண்டகையார் குலச் சிறையாரன் பினாலும்*

*அரசன் பால் அபராதம் உறுதலானும்*
*மீண்டும் சிவநெறியடையும் விதியினாலும்*
*வெண்ணீறு வெப்பகலப் புகலி வேந்தர்*
*தீண்டியிடப் பேறுடைய னாதலாலும்*
*தீப்பிணியைப் பையவே செல்க என்றார்.*

தீப் பிணிபையவே சென்று பாண்டியனை வருத்தியதும் பெருமான் திருநீற்றுப் பதிகம் பாடியதால் நோய் நீங்கியதும் நாமறிந்த வரலாறுகளாகும். இதனாலேயே மங்கையர்க்குத் தனியரசி எங்கள் தெய்வம்'' என்று நாமும் போற்றி நின்றதோடு ''போற்றுவார் கழல் எம்மாற் போற்லாமே'' என்று கூறி அரசியாரின் மாண்பினை உலகுக் கறிவிக்கின்றார்.

இன்னும் தவக் கோலத்தோடு வாழ்ந்த திலகவதியாரையும் சங்கிலியாரையும் நாம் மறக்க முடியாது. தூண்டு தவ விளக்கணையார் என்று திலகவதியார் போற்றப்படுகிறார். தூண்டு சோதி விளக்கனையார் என்று சங்கிலியார் போற்றப்படுகிறார். தந்தையார் புகழனாருடைய கால் வழி யற்றுப் போகாமல் பாதுகாத்தவர் திலகவதியாரே. மருணீக்கியார் சமணம் புக்க செயலைத் தாங்க மாட்டாது'' அடியேன் பின் வந்தவனை மீண்டு வினைப்பரசமயக் குழியினின்றும் எடுத்தாள வேண்டு மென்று இறைவனிடமே விண்ணப்பித்தார். இதனை ஏற்றுக் கொண்ட எம்பெருமான் ''உன்னுடைய மனக்கவலை ஒழி'' என்று ஆறுதல் கூறியது மன்றி மருணீக்கியாருக்குச் சூலை நோய் கொடுத்து ஆட் கொண்டார். தம்பியாருக்குத் திருநீறணிவித்து திருப்பதிகம் பாடுவித்து எம்பெருமான் வாக்காக ''நாவுக்கரசு என்னும் நாமம் உலகேழினும் மன்னுக'' என்ற பெரு நிலைக்கு ஆக்கிவைத்தார். இதனாலேயே, ''உற்றவிடத்து உய்யு நெறி தருவாராய்த் தம்முன்பு வந்தார் பின் தாம் வந்தார்'' என்று. திருநாவுக்கரசர் புராணத்திற் சிறப்பித்துப் பேசப்படுகிறது.

இன்னும் சங்கிலியாருடைய தவ வாழ்வையும் நாம் அறிகின்ற போது, பெற்றோர்கள் அவருக்குத் திருமணம் பேசியபோது,

*''இன்று என்திறத்து நீர் மொழிந்த திது*
*வென் பரிசுக் கிசையாது*
*வென்றி விடையார் அருள் செய்தார்*
*ஒருவர்க் குரியேன் யான்.''*

என்று மொழிந்த திறன் அவரினுறுதிப்பாட்டையும், தவக்கோல விருப்பையும், எடுத்துக் காட்டுகிறது. இதனாலேயே, தம்பிரான் தோழரையும் விஞ்சிச் சங்கிலிக்கு அருள் கொடுத்த சிறப்பை சத்தியம் கேட்ட நிகழ்ச்சியின் மூலம் நாமறிகிறோம். தம்பிரான் தோழரை மணம் புரிந்து கொள்ளும்படி சங்கிலியிடம் இறைவன் இரு தடவைகள் எழுந்தருளிச் சென்றதை, "வஞ்சியிடைச் சங்கிலியார், வழியடிமைப் பெருமையோ?" என்று வியப்போடு எடுத்துக் காட்டுகிறார் சேக்கிழார். எனவே இம்பர் மனைத்தவம் புரிந்து திலகவதியார் பணியாற்றியதும், திருவொற்றியூர் ஆலயத்திலேயே பூமாலை கட்டும் தொண்டிற் சங்கிலியார் ஈடுபட்டதும், சைவக் கன்னியர்களின் அருட்பணி களுக்குச் சிறந்த சான்றுகளாக அமைகின்றன.

இவ்வாறு, சைவத்திற் பெண்கள் பெரும்பங்கு கொண்டு, அதனை மேலோங்கவைத்த சம்பவங்கள் பலவுள. இவர்களில் அன்றாட வாழ்க்கையிலும் நிகழ்ச்சிகளிலும், சமய உணர்வு உயிர் நாடியாக வரைந்து அரன் பூசை, அடியார் பூசை, விருந்தெதிர்தல், திருத்தொண்டு புரிதல், சிவச்சின்னம் பேணல், தற்காத்தல், தற்கொண்டார்ப் பேணல், கற்பு நெறி வாழாமை யாகிய பெரும் பண்புகளுடன் வாழ்ந்து வந்துள்ளார்கள். இந்த வழியைச் சைவ மங்கையர்கள் பின்பற்றி வாழ முயல வேண்டும். சைவத்தின் பெருமையையும், சித்தாந்தக் கருத்துக்களையும், திருமுறைகளையும் சைவ மங்கையர்கள் நன்றாக அறிந்து கொள்ள வேண்டும். குடும்பத்தினருக்கும் இவற்றைப் போதிப்பதிற் சிறந்த சைவ ஆசிரியராகப் பெண்கள் விளங்க வேண்டும். இல்லங்களிலே, வாரத்திற்கொருமுறை கூட்டுப் பிரார்த்தனைகளும், திருவிளக்குப் பூஜைகளும் நிகழ்த்தப் பயின்று கொள்ள வேண்டும். வருடமொருமுறை, தலயாத்திரை செய்வதிற் பெண்கள் ஈடுபட வேண்டும். திருமணங்களை நிறைவேற்றி வைத்தல் அநாதை இல்லங்கட்கு உதவுவதல், வாழ்க்கையிலே விரக்தியுற்றார்க்கு ஆறுதல் கூறி நல் வழிப்படுத்தல் ஆகியவற்றில் ஈடுபடுவதும், சைவ மங்கையின் பெருங்கடனாகும். குடும்ப வருவாயிற் குறிப்பிட்ட வொரு விகிதத்தை சமயப் பணிக்கு ஒதுக்கி வைத்துப் வாழப் பயின்று கொள்வதோடு சிறந்த சைவ கலாச்சாரத்தோடு வாழும் நெறியினையும் மேற்கொள்ள வேண்டும். இவ்வாறு சமய வாழ்வில் எமக்கு எமது பங்கை ஆற்றி வருவோமானால் வீடும் நாடும் சிறந்து தெய்வ ஒளி வீசும் என்பதற்கு ஐயமில்லை.

இன்று காலை இத்தகையதொரு திருவருள் அனுபவத்தைப் பெற அனைவருக்கும் நல் வாய்ப்புக் கிடைத்துள்ளது. எனவே ஈழத்துக்கெவ மக்கள் பேரிலே எனது மனமுவந்த நன்றியைச் சமாசத்தினருக்குச் சமர்ப்பித்து எல்லாம் வல்ல சிவ பரம் பொருளின் கருணையினால் சமாஜப் பணிகள் மேன் மேலும் ஓங்க வேண்டுமென்று பிரார்த்தித்து அமைகின்றேன்.

# டாக்டர் திரு. அ. நாகலிங்கம்

(சைவ சித்தாந்த மகா சமாசப் பவள விழா - தெல்லிப்பழை)

அன்பார்ந்த சமாசத் தலைவர் அவர்களே! சமாசத் துணைத் தலைவர்களே! சமாசச் செயலாளர் அவர்களே! வரவேற்புக் குழுத் தலைவர் மதிப்பிற்குரிய அம்மையார் அவர்களே! வரவேற்புரையாளர் இந்து சாதனப் பத்திராதிபரான திரு நம சிவப்பிரகாசம் அவர்களே! வாழ்த்துரையாளர் திரு. ச. அம்பிகை பாகன் அவர்களே! சைவப் பெரியோர்களே! மக்கள் குலம் தழைக்கப் பாடுபடும் தாய்க்குலமே! என் நெஞ்சுக்கு இனிய சகோதர சகோதரிகளே உங்கள் அனைவருக்கும் என் மனமார்ந்த வணக்கத்தைப் பணிவன்புடன் தெரிவிக்கிறேன்.

சைவ சித்தாந்த மகா சமாசப் பவள விழாவினை மூன்றாம் நாளான இன்று இச் சைவ மாநாட்டிற்கு என்னைத் தலைமை ஏற்கப் பணித்த சமாசத்தார்க்கும், மாநாட்டு வரவேற்புக் குழுவினருக்கும் என் உளமார்ந்த நன்றி!

ஒரு மாநாட்டில் தலைமை வகிப்பது என்பது, ஒரு பெருஞ் செயல். அறிவு, அனுபவம் முதலியன ஒருங்கு வாய்க்கப் பெற்றவரே அதற்கு முற்றிலும் தகுதியானவர். நானோ அவை இரண்டும் நிறைந்தவன் அல்லன்; தலைமைப் பொறுப்பிற்கு ஏற்றவனும் அல்லன். ஆனாலும், என்பால் சமாசத்தாரும், நீங்களும் கொண்ட அன்பே என்னை இப்பணிக்கு இருத்த எண்ணியது போலும்! உங்கள் அன்புக் கட்டளைக்கு இணங்கி, ஒல்லும்வகை பணியாற்ற முயல்கிறேன். ஆட்டுவித்தால் ஆர் ஒருவர் ஆடாதாரே!

அருள்மிகு மறைமலை அடிகள் திருப்பாதிரிப்புலியூர் ஞானியார் சுவாமிகள், ஜே. எம். நல்லசாமிப் பிள்ளை போன்ற அறிஞர் பெருமக்களால் தோற்றுவிக்கப்பட்டது சிறப்பு வாய்ந்த சைவ சித்தாந்த மகா சமாசம். கடந்த 75 ஆண்டுகளாக இது, சைவ சமய நூல்களை வெளியிட்டும், சாத்திர சமயச் சொற்பொழிவுகளை நிகழ்த்தியும் தமிழ் மக்களையும் சைவத் தமிழையும் அரும்பாடுபட்டு வளர்த்து

வருகிறது. இதன் பண்டைப் பணிகளைத் தமிழ்ச் சித்தாந்த ஆங்கிலச் 'சைவ சித்தாந்தா' இதழ்களைக் காணுகின்ற ஒவ்வொரு இளைஞரும் அரும்பெரும் அறிஞர்கள் பலர் சமாசத்தில் இத்தகு சிறந்த பணிகளை ஆற்றியுள்ளனரே! நாம் சமாசத்திற்கு சைவ சமயத்திற்கு இதுவரை என்ன செய்தோம்? இனி என்ன செய்யப் போகிறோம்?' என்று தம்மைத் தாமே வினவாமல் இருக்க இயலாது இந்த நேரத்தில், சமாசத்தில் தன்னலம் கருதாது அரிய பணிகளைச் செய்த அனைவருக்கும் உங்கள் சார்பில் அஞ்சலியைச் செலுத்துகிறேன்!

சைவ சித்தாந்த மகா சமாசத்தை எனக்கு அறிமுகப் படுத்தியவை தமிழ்த் தென்றல் திரு.வி.க.வின் நூல்களே சைவக் குடும்பத்தில் பிறந்திருந்தாலும், சைவத்திற்கென இத்தகைய ஓர் அமைப்பு இருப்பதை நீண்ட காலமாக நான் அறியவில்லை. சென்னைப் பல்கலைக்கழகத்தில் 1970ஆம் ஆண்டு முனைவர் பட்ட ஆராய்ச்சி மாணவராகச் சேர்ந்தபோது, புகழ் வாய்ந்த சாது அச்சகத்தின் முன்னாள் பொறுப்பாளரும் நம் சமாசத்தின் துணைச் செயலாளரு மான திரு. மு. நாராயணசாமி அவர்கள் வாயிலாய் இவ் அமைப்பின் உறுப்பினரானேன். அன்று முதல் கடந்த ஆண்டுவரை இதன்பால் சேய்மை நேயம் செலுத்தி வந்தேன். ஆரணியில் நிகழ்ந்த முந்தைய சமாச மாநாட்டில்தான் சமாசத் தலைவர் திரு. தி. கி. நாராயணசாமி அவர்களால் நம் தமிழ்ச் சித்தாந்தத்தின் துணை ஆசிரியராய்த் தொண்டாற்றும் வாய்ப்புப் பெற்றேன். சமாசத்துக்கும் எனக்கும் இத்தொடர்பை ஏற்படுத்தித் தந்த இம்மூவருக்கும் நான் நன்றி கூறக் கடமைப்பட்டுள்ளேன்.

சமாசத்துக்கும் எனக்கும் உள்ள உறவு தாய்க்கும் சேய்க்கும் உள்ள நேயமே போலாம். சமாசச் சேய்களுள் ஒருவனாக உள்ள நான் சைவ இளைஞர் மாநாட்டுத் தலைமை தாங்குவது குறித்து எனை ஆளும் கூத்தப் பெருமானுக்கு நாவினால் நவில இயலா வணக்கத்தையும் நன்றியையும் தெரிவிக்கும் பாங்குடையேன்.

இளமையில் 1955ல் கிராமத்திலிருந்து சென்னைக்குக் கல்வி பயில வந்தபொழுது இலங்கை வர்த்தக ஒலிபரப்பு வானொலி நிலையம் வழி இந்நாட்டின் மீது எனக்குப் பற்று ஏற்பட்டது. பின்னர், தமிழ் முதுகலை பயின்ற காலத்தில் வரலாற்று அறிஞர் திரு. தி. வை. சதாசிவப் பண்டாரத்தாரின் 'பிற்காலச் சோழர் சரித்திரம்' வழியாக இலங்கையின்பால் பாசம் கொண்டேன். தொடர்ந்து தமிழ் இலக்கிய உலகில் பயின்று வருங்கால் இந்நாட்டு மறைந்த அறிஞர்களான சைவத்திரு. ஆறுமுக நாவலர், சி. வை. தாமோதரம் பிள்ளை, சர்

பொன்னம்பலம் இராமநாதன், ஆனந்தக்குமாரசாமி, நா. கதிரைவேற்பிள்ளை சுவாமி நாத பண்டிதர், சுவாமி விபுலானந்தர் முதலியோரையும் இப்பொழுது நம்மிடையே வாழும் அறிஞர்களான முனைவர்கள் திரு. சு. வித்தியானந்தம், திரு. க. கைலாசபதி, திரு. ஆ. வேலுப்பிள்ளை, திரு. கா. சின்னத்தம்பி, திருமதி இரத்தினா நவரத்தினம், செல்வி தங்கம்மா அப்பாக்குட்டி முதலியோரையும் நூல்கள் வாயிலாகவும் நேரிலும் அறியப் பெற்றேன். இவர்களின் காட்சி, என் உள்ளத்தில் பசுமையான எண்ணங்களையும் ஆக்க பூர்வமான சிந்தனைகளையும் எழுப்பி உள்ளன. இத்தகைய அறிஞர் பெருமக்கள் வாழ்கின்ற எழில்மிகு இலங்கையைக் காணும் வாய்ப்பும், உங்களோடு பழகும் பேறும் பெற்றமைக்கு நான் பெரிதும் மகிழ்கிறேன்.

தமிழ் உலகில், மொழிப்பற்றிலும் பணியிலும் ஈழத்து அறிஞர்கள் மேலோங்கி இருக்கிறார்கள். அதற்கு பெருமை பெற்றுள்ள அறிஞர்களை ஈன்ற இலங்கை மண் வாழ்க! இங்கு வாழும் மக்கள் பணி சிறக்க! என்று மனமாரப் போற்றுகிறேன்!

இத்தகு சிறப்பு வாய்ந்த இலங்கையில், சைவப் பெரு மக்கள் காண வேண்டிய திருத்தலங்கள் மூன்று உள்ளன. அவை நம் முன்னோர்களால் பாடப்பெற்ற திருக்கோணமலை, திருக்கேதீச்சரம், கதிர்காமம் ஆகிய மூன்றாம். இவற்றுள் திருக்கோணமலை ஈசனைப் பற்றி

*எடுத்தவன் தருக்கை இழித்தவர் விரலால்,*
*ஏத்திட ஆத்தம்ஆம் பேறு*
*தொடுத்தவர், செல்வம் தோன்றிய பிறப்பும்*
*இறப்பு அறியாதவர் வேள்வி*
*தடுத்தவர், வனப்பால் வைத்த ஓர் கருணை*
*தன அருள் பெருமையும் வாழ்வும்*
*கொடுத்தவர் விரும்பும் பெரும்புகழாளர்*
*கோணமாமலை அமர்ந்தாரே!*

என்ற பாடல் கொண்ட ஒரு பதிகமும், திருக்கேதீச்சரத்துச் சிவபெருமானைப் பற்றிய வேறு ஒரு பதிகமும் திருஞானசம்பந்தர் பாடியுள்ளார். மேலும், சுந்தரமூர்த்தி சுவாமிகள் திருக்கேதீச்சரத்தைப் பற்றிய ஒரே பதிகத்தில்,

*அங்கத்து உறுநோய்கள் அடியார்மேல் ஒழித்துஅருளி,*
*வங்கம் மலிகின்ற கடல் மாதோட்ட நல்நகரில,*

*பங்கம் செய்த மடவாளொடு, பாலாவியின் கரைமேல்*
*தெங்கம் பொழில் சூழ்ந்த திருக்கேதீச் சரத்தானே!*

என்று உளம் உருகிப் பாடியுள்ளார். இவ் இருவரைத் தவிர, முருகன் அடியாரான அருணகிரிநாத சுவாமிகளும் கதிர்காம முருகனைப் பற்றி,

*திருமக ளுலாவு மிருபுயமு ராரி*
*திருமருக நாமப பெருமாள்காண்!*
*செகதலமும் வானு மிகுதிபெறு பாடல்*
*தெரிதரு குமாரப் பெருமாள்காண்!*
*மருவுமடி யார்கள மனதில் விளையாடு*
*மரகத மயூரப் பெருமாள் காண்!*
*மணிதரளம் வீசி அணியருவி சூழ*
*மருவு கதிகாமப் பெருமாள்காண்!*
*அறுவரைகள நீறு படஅசுரர் மாள*
*அமர்பொருத வீரப் பெருமாள் காண்!*
*அரவுபிறை வாரி விரவுசடை ஈசர்*
*அருள்செய் குருநாதப் பெருமாள்காண்!*
*இருவினை யிலாத தருவினைவி டாத*
*இமையவர்கு லேசப் பெருமாள் காண்!*
*இலகுசிலை வேடர் கொடியினதி பார*
*இருதனவிநோ தப் பெருமாளே!*

என்று சில பாடல்களைப் பாடியுள்ளார்.

சைவ சமயப் பெருமக்கள், தம் சமய வாழ்க்கையைத் தம் இளைய ஆண் பெண்களிடம் படிவிக்க வேண்டும் 'எனக்குத் தான் வயது ஆகிவிட்டது. சமயத்தில் ஈடுபட்டுத் தேவாரத் திருவாசகங்களைப் படிக்கிறேன். பாவம், அவர்கள் இளைஞர்கள் தானே! இப்பொழுது அவர்களுக்கு அகநூற்கல்வி எல்லாம் எதற்கு?'' என்று தாங்களே இளைஞர்களைப் புறக்கணிக்கக் கூடாது.

சமய வாழ்க்கை வாழும் பெரியவர்கள் முதலில் தெளிவான சிந்தனையும் திடமான செயல்திறனும் பெற்றவர்களாக விளங்க வேண்டும். 'சமய வாழ்க்கை என்றால் என்ன? அவ்வாழ்க்கையால் தாம் பெற்ற பயன் யாது? சமய நூல்கள் எந்தெந்த வகைகளில் தங்கள் வாழ்க்கைக்குத் துணை புரிந்தன' என்பனவற்றைத் தெளிவாகவும் உறுதியாகவும் அறிந்திருக்க வேண்டும். இவை இரண்டையும் பெற்ற பெரியோர்கள் இளைஞர்களிடம் அன்போடும் ஆதரவோடும் பழகுகின்றபொழுது, நிச்சயம், இவர்களின் கருத்துகள் இளைஞர்கள்

உள்ளத்தில் பசுமரத்து ஆணி போல் உறுதியாகப் பதியும்; பயனும் தரும்.

சான்றாக, தமிழ்ப் பெரியார் திரு.வி.க.வின் வாழ்க்கையில் நடந்த நிகழ்ச்சி ஒன்று என் நினைவுக்கு வருகிறது. திரு.வி.க. தோற்றுவித்த பாலசுப்பிரமணிய பக்த ஜன சபை சென்னையில் உள்ளது. அமைதியோடு செயலாற்றி வந்த அச்சபையில் ஓர் ஆண்டு உறுப்பினர்கள் இடையே பொய்மையும் பொறாமையும் மனக்கசப்பும் மலிந்திருந்தன. இச்சூழலில் சமயப் பெரியார் ஒருவரை அழைத்து ஆண்டு விழா நடத்தத் திட்டமிட்டார் திரு.வி.க. 'முதலில் சபையின் சூழலை மாற்ற வேண்டும். பின்னர் அப்பெரியவரை அழைக்க வேண்டும் என்று எண்ணினார். உடனே அப்பெரியவரிடம் சென்று சபையின் நிலையை எடுத்துக் கூறி, அதைப் போக்கும் வழிகளை வினவினார். அதற்கு அப்பெரியவர் நக்கீரரின் திருமுருகாற்றுப் படையையும் அருணகிரிநாத சுவாமிகளின் கந்தர் அனுபூதியையும் சபையில் 40 நாள்கள் தொடர்ந்து ஓதி வருமாறு பணித்தார். உடனே, சபையில் அவ் இரு நூல்களும் நாள்தோறும் அன்பர்களால் ஓதப்பட்டன. நாளடைவில் அங்கிருந்த வேண்டாச் சூழ்நிலை மாறியது. பின்னர் அந்தப் பெரியவரும் விழாவிற்கு வந்தார். ஆண்டு விழாவும் சிறப்பாக நடந்தது. அப்பெருந்திருவினரே நம் சமாசத்தைத் தோற்றுவித்த திருப்பாதிரிப்புலியூர் தவத் திரு. ஞானியார் சுவாமிகள் ஆவர்.

இந்தச் செய்தியைச் சில ஆண்டுகளுக்கு முன்னர்தான் அறிந்தேன். நாளடைவில் இந்நிகழ்ச்சி என் உள்ளத்தில் ஆழப் பதிந்து விட்டது. அதன்பின், கடந்த ஈராண்டுகளில் தனி வாழ்க்கையிலும் சரி கல்லூரிப் பொது வாழ்க்கையிலும் சரி, இன்னல்கள் நேரும்போது மேற்சொன்ன நூல்கள் இரண்டையும் படிப்பேன். ஓரிரு நாள்கள் படித்தாலே துன்பங்கள் தொலைவதை நாளடைவில் உணர்ந்தேன். அப்பொழுதெல்லாம் நான் அந்த நூல்களை முழு ஈடுபாட்டுடன் படித்தேன் என்று சொல்ல முடியாது. 'பெரியவர் சொன்னதில் ஏதோ ஓர் உண்மை உள்ளது' என்ற நம்பிக்கை கொண்டு படித்தேன்; பயன் கண்டேன். ஈடுபாடு இன்றிப் படித்ததற்கே இத்தகைய பயன் என்றால் உண்மையில் உள்ளன்போடு நம் வழிபடு கடவுளை நினைந்து நினைந்து, உணர்ந்து உணர்ந்து நெகிழ்ந்து நெகிழ்ந்து, அன்பே நிறைந்து நிறைந்து ஊற்றெழும் கண்ணீர் அதனால் உடம்பு நனைந்து நனைந்து, 'அருளமுதே! நன் நிதியே! ஞான நடத்தரசே! என்னுரிமை நாயகனே!' என்று ஏத்தி வந்தால் எத்தகைப் பயன் கிட்டுமோ? யான்

அறியேன்! எனவே, இளைஞர்கள் சமய வாழ்க்கையில் ஈடுபாடும் உறுதியும் கொள்ள வேண்டும் என்றால் அதற்குப் பெரியவர்கள் தாம் முழுப் பொறுப்பேற்றுச் செயல்புரிய வேண்டும். அவர்களை ஆற்றுப் படுத்துவது அறிஞர் கடனேயாம்!

என்னிடம் சிறப்பான பண்பு ஏதேனும் உள்ளது என்று கருதினால் அதற்குக் காரணம் இளமையிலும் இப்பொழுதும் கொண்ட பெரியோர்களின் கூட்டுறவே. கடந்த பத்து ஆண்டுகளாகப் பேராசிரியர் மு. சண்முகம் பிள்ளை அவர்களோடும் நம் சமாசத் தலைவர் திரு. தி. கி. நாராயணசாமி நாயுடு அவர்களோடும் வேறு சிலரோடும் பழகி வருகிறேன். அதனால் என் வாழ்க்கை பல வழிகளிலும் துலங்கி வருகிறது.

என் மனத்தில் நெடுநாட்களாக ஊறிக்கிடக்கும் உண்மை ஒன்று உள்ளது. அஃது ஒவ்வோர் இளைஞரும் ஆண் அல்லது பெண் தமக்குப் பிடித்த பெரியோர் ஒருவருடன் உள்ளார்ந்த நட்புக் கொள்ள வேண்டும் என்பதே. அத்தகைய நட்பால் அவ் இளைஞர் வாழ்க்கை சிறக்கும்; வளம் வாய்க்கும்; இன்பம் பெருகும். ஆனால், இன்றைய இளைஞர்களுக்குத் துணை செய்யும் நல்லொழுக்கமும் சான்றாண்மைப் பண்பும் கொண்ட பெரியவர்கள் கிடைக்க வேண்டுமே! அவர்களும், இளைஞர்கள் தவறு செய்கின்றபோது, அவர்களை வெறுத்து ஒதுக்காமல், அன்பு காட்டி, நேசத்துடன் பழகி, தக்க கருத்துரை வழங்கி நல்வழிப் படுத்த வேண்டுமே!

மனித வாழ்க்கையில் இளமைப் பருவம் அடிப்படையானது; இனிமையானது; எழுச்சி தரக்கூடியது. அப்பருவத்தில் உடல் அழகும் சிந்தனை வளமும் செயல் திறனும் திரண்டுள்ளன. 16 முதல் 40 வயது வரை உள்ள ஆண், பெண் இருபாலாரையுமே இளைஞர் எனக் கூறலாம்.

இந்நூற்றாண்டின் முற்பாதிவரை பெரியவர்களுக்கு மூத்தவர் களுக்கு இளைஞர் உலகம் கண் மூடித்தனமான மதிப்புக் கொடுத்தது; பண்பாட்டுடன் முன்னேறியது. ஆனால் இக்கால இளைஞர் உலகு எதையுமே, அறிவியல் கண்கொண்டு பார்க்கிறது; எதற்கும் காரண காரியத்தைத் தேடுகிறது; அவற்றை நடைமுறை வாழ்க்கையோடு பொருத்திப் பார்க்கிறது. தத்துவ நுட்பங்களை உணர்த்துகின்ற கதைகளை - கற்பனைகளைப் புறக்கணிக்கிறது உலக வாழ்க்கையில் பல இடங்களில் பெருகி வரும் ‘உழைக்காமல் ஊதியம் பெறும் தன்மை’யையும், திறமை இன்றிப் பணத்தாலும் செல்வாக்காலும்

பெயரும் புகழும் பெறுகின்ற நிலையையும் காணுகின்ற இளைஞர் சமுதாயம் 'படிக்காமல் பட்டம் பெற வேண்டும்' என்று, உழைக்க மறுக்கிறது; பெரும்பயனை எதிர்பார்க்கிறது; இன்ப வாழ்க்கை வாழத் துடிக்கின்றது. தன் எண்ணம் நிறைவேறினால் பேரின்பம் கொள்கிறது இல்லை எனில், பெருந்துன்பத்தில் உழல்கிறது; உடலை மாய்க்கவும் துணிகிறது.

இளைஞர்களின் பிற்கால வாழ்க்கை செழிப்பாக அமைய இளமைப் பருவம் - கல்விப் பருவம் மிகவும் அடிப்படையானது. ஆனால், இந்தப் பருவத்தில்தான் வெளி உலக நிகழ்ச்சிகள் மாணவர் உலகைப் பெரிதும் ஈர்க்கின்றன. அக்கவர்ச்சியில் பேரீடுபாடு கொண்டு அவற்றில் சிக்குவோர்க்கு அந்த நேரத்தில் அவை பேரின்பமாகவும் பெருமை தருவனவாகவும் இருந்தாலும், பிற்கால வளமான வாழ்க்கைக்குத் தடையாய் உள்ளன. கல்வி உலகில் வாழும் மாணவர், உலக நிகழ்ச்சிகளை எல்லாவற்றையுமே அறிந்துகொள்ள வேண்டும் என்று ஆவல் கொள்ளக் கூடாது. தம் கடமையை அறிந்து ஏட்டுப் படிப்பிலோ அல்லது தொழிற்கல்வியிலோ தங்களை ஈடுபடுத்திக் கொள்ள வேண்டும். வேறு துறைச் சிந்தனைகள் இருந்தால், தம் கடமையில் தவற நேரும். கல்வியில் பரந்த ஆழமான அறிவைப் பெற இயலாது. பின்னால் வருந்த வேண்டி வரும். உரிய காலத்தில் - உரிய வயதில் உரிய கடமைகளையே செய்தல் வேண்டும். எல்லோரும் எல்லாவற்றையும் அறிய முடியாது ஒன்றுமே தெரியாமல் ஒருவரும் இருப்பதில்லை. ஒவ்வொருவருக்கும் ஒரு சில செய்திகள் தெரிந்தும் தெரியாமலும் இருக்கத்தான் செய்கின்றன. இதுதான் வாழ்க்கை நிலை. இதனை இளைஞர் உலகம் உள்ளத்துள் கொள்வதாக!

இளைஞர்கள் தாய்மொழியைப் பெரிதும் போற்ற வேண்டும். அம்மொழியிலுள்ள பயன்தரும் பலதுறை நூல்களைத் தேடிப் படிக்க வேண்டும். சிறப்பாக, சமய இலக்கிய நூல்களை விரும்பிப் படிக்க வேண்டும். காரணம் வாழ்க்கையில் காணப்படும் பலவிதப் போராட்டங்களையும் இன்னல்களையும் போக்கும் வழிமுறைகளைக் கூறுவன அந்நூல்களே அவை இன்பத்தைத் தருவன; அறிவைப் பெருக்குவன; துன்பத்திற்கு மருந்தாய் இருப்பன; வாழ்க்கை வழிகாட்டிகளாய் உள்ளன. அவற்றைப் பயிலப் பயிலச் சிந்தனை செழிக்கும்; செயல் சிறக்கும்; வாழ்க்கை இன்ப மயமாகும். இஃது உறுதி.

இளைஞர்கள் தாய்மொழி அறிவு பெறுவதுடன் அண்டை மாநிலங்களில் உள்ள மொழிகளையும் பயில்வது சிறப்பு. தமிழ்

நாட்டில் உள்ளவர்கள் தெலுங்கு, மலையாளம், கன்னடம் முதலிய மொழிகளையும் ஈழத்தில் உள்ளவர்கள் சிங்கள மொழியையும் இருநாட்டாரும் சிறப்பாக ஆங்கில மொழியையும் படிப்பது தமிழுக்கு ஆக்கம் தேடுவதாகும். பன்மொழி அறிவு அவ்வம்மொழி பேசும் மக்களின் நாகரிகப் பண்பாட்டை அறியவும் அவற்றில் காணப்படும் சிறப்புக் கூறுகளை நம் மொழிக்குக் கொண்டு வரவும் வாய்ப்பாய் இருக்கும். அதனால் தமிழ்மொழி வளம் பெற ஏதுவாகும். இதனை உணர்ந்தே பாரதியாரும்,

*சென்றிடுவீர் எட்டுத் திக்கும் - கலைச்*
*செல்வங்கள் யாவும் கொணர்ந்திங்கு சேர்ப்பீர்!*

என்று கூறியுள்ளார். மேலும், அண்மையில் மறைந்த பேராசிரியர் முனைவர் தெ. பொ. மீனாட்சிசுந்தரனார் பன்மொழி அறிவு பெற்றவர். அவரால் தமிழ்மொழி, சிறப்பாக மொழியியல் வளம்பெற்று வருவதை எவரும் அறியாமல் இருக்க இயலாது. எனவே இளைஞர்கள் இப்பருவத்திலேயே பலமொழி அறிவு பெற்றிருக்க வேண்டும்.

இளைஞர்களின் வாழ்க்கை சிறக்கச் சமயம் என்ற ஊன்றுகோல் தேவை. இதனையே வள்ளுவப் பெருந்தகையும்,

*இழுக்கல் உடையுழி ஊற்றுக்கோல் அற்றே*
*ஒழுக்கம் உடையார்வாய்ச் சொல்*

என்றார்.

சமயம் என்பது வாழ்க்கையை நெறிப்படுத்துவது. அச்சமயம் அந்தந்த நாட்டு இயற்கைச் சூழலுக்கேற்ப அமைவது. அவ்வாறு அமைந்துள்ள சமயங்கள் பல. அவற்றுள் ஒன்று நம் சைவ சமயம்.

சைவம் சிவபெருமானை உயிராகக் கொண்டுள்ளது. சிவபெருமான் சோமாஸ்கந்தராகவும் கூத்தப் பெருமானாகவும் தட்சிணாமூர்த்தியாகவும் இலிங்க உருவிலும் அமைந்து உருவ, அருவ வழிபாட்டுக்கு இயைந்து உள்ளான். மேலும், அவனே உமையொடு இணைந்து உமையொருபாகனாக - பார்வதி பரமேசுரனாக விளங்குகின்றான். சிவபெருமானின் சக்தியான உமையம்மை அம்பாளகத் தனித்தும் சிவத்தோடு இணைந்தும் காட்சி வழங்குகிறாள். இவர்கள் இருவரைத் தவிர இவர்தம் மக்கள் எனச் சொல்லப்படும் விநாயகர், முருகர் என்னும் இருவரும் சைவ சமயத்தில் வழிபடு கடவுளராய் உள்ளனர். ஆகவே, இவர்கள் நால்வரும் ஒருவரே! உருவத்தால் இவர்கள் வேறுபட்டிருக்கக்

காரணம், வழிபடும் மக்களின் மனநிலைகளே! அம்மன நிலைக்கு ஏற்ப வழிபடு கடவுளர் அமைகின்றனர்.

வழிபாடு என்னும் சொல் நெறிப்படுத்துதல் என்னும் பொருளைக் கொண்டுள்ளது. இங்கே உடலை நெறிப்படுத்துதல் அதன் வழி மனத்தை வழிப்படுத்தல் ஆகும். ஒவ்வொரு மனிதனும் தன் உடலையும் மனத்தையும் நெறிப்படுத்தி வாழ வேண்டும். இக்கருத்தைக் கூறுகின்றபொழுது நீண்ட நாள்களாக என் மனத்தை அரித்து வருகின்ற ஒரு கருத்தை இங்குச் சொல்லியாக வேண்டும். இன்றைய இளைஞர் உலகம் தவறான பாதையில் செல்லுகிறது என்று சொன்னால் அதற்கு முழுமையான காரணம் அவர்களின் பெற்றோர்களும் சமுதாயத்தில் வாழும் பெரியவர்களும் தான்! காரணம், கடந்த இருபதாண்டுகளாக நானும் பார்த்து வருகிறேன். நாற்பது அல்லது நாற்பத்தைந்து வயதைக் கடந்த நிலையில் உள்ளவர்கள் இளைஞர்களைப் போன்று ஆடை அணிகளிலும் வாழ்க்கையிலும் புதுமை விரும்பிகளாக - ஆசை மிகுந்தவர்களாக மோகம் மிகுந்தவர்களாக - நெறியற்றவர்களாக நடந்து கொள்கிறார்கள். சமுதாயத்தில் வாழ்கின்ற இவர்கள், தம், சொல்லாலும் செயலாலும் பெரிய மனிதர்களுக்கேற்ற அறிவும் அனுபவமும் பெற்ற நிலையில் வாழவில்லை. திருமணம் செய்துகொண்டு மக்களைப் பெற்று விட்டாலே எல்லாம் அறிந்தவர் என்றும், தம்மை யாரும் தட்டிக் கேட்க இயலாது என்றும் பலர் தான் தோன்றித்தனமாக நடந்து வருகிறார்கள். சிறப்பாக, ஆடை அணிகளிலும் பிற பெண்களோடு பழகுவதிலும் மோகம் மிகுந்தவர்களாக இளைஞர்களுக்குக் காட்சி தருகின்றார்கள். வாழ்க்கைக்கு வழிகாட்ட வேண்டிய இவர்களே இவ்வாறு நடந்தால், இவர்களின் மக்களுடைய வாழ்க்கை எப்படிச் சிறப்பாக அமைய முடியும்? மேலும், செல்வர்களும் அதிகாரிகளும் தமக்கென ஒரு செல்வாக்கை எல்லா இடங்களிலும் எதிர்பார்க்கின்றனர். செல்வாக்கும் சிறப்பும் அந்தந்த இடத்தோடு அமைய வேண்டுமே தவிர, எல்லா இடங்களிலும் எல்லா நிலைகளிலும் அவற்றை எதிர்பார்க்கக் கூடாது. இவ்வாறு பெரியவர்கள் பலர் நடந்து கொள்வதால் தான் இளைஞர்கள் உள்ளத்தில் அப்பெரியவர்கள் மதிப்பை இழப்பதோடு புறக்கணிக்கவும் படுகிறார்கள். பின், வேறு எந்த ஆலோசனைக்கும் அப்பெரியவர்களை நாட வேண்டும் என்ற எண்ணமே இளைஞர் உள்ளத்தில் தோன்றுவதில்லை. இவ்வாறு நான் கூறுவது, பலருக்கும் பிடிக்காமல் இருக்கலாம். என்றாலும் இவற்றை நான் சொல்லியே ஆகவேண்டும். இவ்வாறு நான் செல்வதற்காக இங்குள்ள

பெரியவர்கள் அருள்கூர்ந்து மன்னிக்க வேண்டும். எனவே, இளைஞர்கள், 'என் முன்னோர் அவ்வாறு செய்யவில்லை' என்றோ, 'எனக்குப் பிடிக்கவில்லை' என்றோ கூறாமல் வழிபாட்டு நெறி ஒன்றைக் கடைப்பிடிக்குமாறு அன்போடு வேண்டுகிறேன்.

நாள்தோறும் புதுப்புது மக்களைச் சந்திக்கிறோம்; பல்வேறு அனுபவங்களைப் பெறுகிறோம். இவற்றால் நம் மனநிலை ஒரு நாள்போல் மற்றொரு நாள் அமைவதில்லை. மன அமைதி கெடுகின்றது. பரபரப்பான உலகில் ஆரவாரச் சூழலில் நம்மால் எதையும் அமைதியோடும் திறமாகவும் செய்ய முடிவதில்லை. அன்றாட வாழ்வில் இன்னின்னவை செய்யத் தக்கவை, இவையிவை செய்யத் தகாதவை என்று நிகழ்ச்சிகளை ஒழுங்குபடுத்திக் கொண்டால், அன்றன்று நிகழும் செயல்களால் ஏற்படும் ஏமாற்றங்களையும் தவிர்க்க இத்தகைய வழிபாடு தேவைப் படுகின்றது. ஏனெனில், ஒருவருக்கொருவர் தம் செயல்களை - மன நிலைகளை உற்றார் உறவினரிடமும் நண்பரிடமும் சொல்லி மாற்று வழிகளையும் கருத்துகளையும் கேட்டால், அவர்களும் நம்மைப் போன்ற மனிதர்கள் ஆதலால், நாம் செய்யும் காரியங்களையும் மனப்போக்குகளையும் தம் மன விருப்பு வெறுப்புகளுக்கேற்பப் பிறரிடம் சொல்லி நம்மைத் தூற்றுவார்கள். எனவே தான், நம்மைக் கடந்துள்ள ஒன்றை வழிபடு கடவுளாகக் கொண்டு, தம் செயல்களையும் குறைகளையும் மறைக்காமல் சொல்லி வழிபாடு நிகழ்த்த வேண்டும். அன்றாடம் ஒரு குறிப்பிட்ட நேரத்தில் உடலாலும் உள்ளத்தாலும் ஓரிடத்தில் ஒருமைச் சிந்தனையுடன் இருக்கவும் செயல் புரியவும் பழக்கம் ஏற்படுகிறது. இதனால் அரிய காரியங்கள் யாவும் எளியவை ஆகின்றன. உடலிலே பொலிவும் உள்ளத்திலே தெளிவும் ஏற்படுகின்றன. எனவே, இளைஞர்க்கு வழிபாடு மிகமிக இன்றியமையாதது.

வழிபாடு பல திறப்படும். உருவ வழிபாடு அவற்றுள் சிறந்தது. உங்கள் உள்ளம் கவர்ந்த சிவபெருமான், பார்வதி, விநாயகர், முருகன் அல்லது ஏதேனும் ஒரு தெய்வ உருவைத் தேர்ந்தெடுங்கள். நாள்தோறும் சிறிது நேரம் அதன் முன்னால் இருந்து, அதைப் பற்றிச் சிந்தியுங்கள். அவ்வாறு சிந்தனை செய்வதற்கு முன்னும் பின்னும் தேவாரம் திருவாசகம் முதலிய அருட்பாடல்களைப் படிக்கலாம்; அல்லது மனம் ஒன்றிப் பாடலாம். சான்றாகத் திருமுறை ஆசிரியர் களின் பாடல்களுள் பஞ்சாக்கரப் பதிகங்கள், திருநீற்றுப் பதிகங்கள், விடந்தீர்த்த பதிகங்கள், தாயுமானார் இராமலிங்க சுவாமிகளின்

கண்ணிகளையும் விண்ணபங்களையும் பயன்படுத்தலாம். இதனால் மன அமைதி கிடைக்கும்; உள்ளத்தில் தெம்பு ஏற்படும். அன்றாடக் கடமைகளில் ஒழுங்கும் செப்பமும் ஏற்படும்.

மனிதப் பிறவி குறை உடையது. நாம் எவ்வளவுதான் விழிப்பாய் இருப்பினும், தவறு நிகழ்ந்து விடுகிறது. அவ்வாறு நடந்து விடும் தவறு, மேலும் நிகழாதவாறு நாம் நம்மை வழிபாட்டின் மூலம் காத்துக் கொள்ளலாம். அவ்வழிபாட்டில் நம்பிக்கையும் உறுதியும், உண்மை ஈடுபாடும் இருக்க வேண்டும். வாழ்க்கையின் எந்த நிலையிலும் சோதனை ஏற்படத்தான் செய்யும்.சோதனைகள் உலக இயற்கை. அவற்றைக் கடந்து தான் நாம் மேன்மேலும் உயர வேண்டும். சோதனைகளைக் கண்டு தளர்ந்தால் முன்னேற்றம் இல்லை; வளர்ச்சி இல்லை. இவ்வாறு சோதனைகள் நிகழும்பொழுது நம்மால் இயன்றவரை முயன்று அவற்றைக் கடக்க முயல்க; அதற்கு மேல்.

*வானம் துளங்கில்என்? மண்கம்பமாகில் என்? மால்வரையும்*
*தானம் துளங்கித் தலைதடுமாறில் என்? தண்கடலும்*
*மீனம் படில்என்? விரிசுடர் வீழில் என்? வேலை நஞ்சுண்டு*
*ஊனம் ஒன்றிலா ஒருவனுக்கு ஆட்பட்ட உத்தமர்க்கே!*

என்ற அப்பர் மொழியை நினைவில் கொண்டு அமைதியோடிருக்க! நிச்சயம் நீங்கள் வெற்றி பெறுவீர்கள்! இந்த நம்பிக்கை தான் வாழ்க்கையில் தேவை. மணிவாசகரும்,

*அன்றே என்றன் ஆவியும் உடலும்*
*உடைமை எல்லாமும்*
*குன்றே அனையாய் என்னை ஆட்கொண்ட*
*போதே கொண்டிலையோ*
*இன்றுஓர் இடையூறு எனக்குண்டோ?*
*எண்தோள் முக்கண் எம்மானே*
*நன்றே செய்வாய் பிழை செய்வாய்*
*நானோ இதற்கு நாயகமே!*

என்ற நம்பிக்கை கொண்டு அமைதியோடு வாழ்ந்தார். இன்று நம்மால் போற்றப்படுகிறார்.

இத்தகைய நம்பிக்கையோடு நெறி பிறழாமல் உலகில் வாழ்ந்து கோபம். கடுஞ்சொல், பொறாமை, பேராசை முதலியவற்றைக் களைந்து அடக்கம், பொறுமை, இன்சொல் முதலான பண்புகளைப் பெற வேண்டும். இப்பண்புகளைப் பெறுதலே வாழ்க்கையின் குறிக்கோள் ஆகும். இக்குறிக்கோளை இளைஞர்கள் இளமையிலேயே

கொள்ள வேண்டும். வாழ்க்கைக்குக் குறிக்கோள் வேண்டும் என்பதைக் 'குறிக்கோள் இலாது கெட்டேன்' என்னும் திருநாவுக்கரசரின் மணிமொழி வலியுறுத்தும்.

இறுதியாக நம் சைவ அமைப்பினால் இளைஞர்கள் ஈடுபாடு கொள்வதற்காக ஒரு சில முறைகளைக் கோலலாம். சிறப்பாக அறக்கட்டளை ஒன்று நிறுவி, பள்ளி, கல்லூரிகளில் பயிலும் மாணவர்களுக்குக் கட்டுரை, மனப்பாட, பேச்சுப் போட்டிகளை நடத்தலாம். இதனால் பெரும் பயன் ஏற்படும். சமாமச அன்பர்கள் இதை மனத்தில் கொள்ள வேண்டுகிறேன்.

அன்பர்களே! இங்கு வருவதற்கு முன்னர் 'தெல்லிப்பழை எத்தகைய ஊராய் இருக்குமோ? மாநாடு எவ்வாறு நடக்குமோ?' என்ற ஐயம் பலருக்கு ஏற்பட்டது. ஆனால், இங்கு வந்த பின்னர் இலங்கையின் மீது கொண்டிருந்த எங்கள் எண்ணம் இந்த மாநாட்டின் வாயிலாக உயர்ந்துவிட்டது. கடந்த ஆண்டு ஆரணியில் நடந்த சைவப் பெண்கள் மாநாட்டுக்குத் தலைமை வகித்த செல்வி தங்கம்மா அப்பாக்குட்டி அவர்கள் சமாசத்தின் பவள விழாவைத் தெல்லிப்பழையில் வைத்துக் கொள்ள வேண்டும் என்று சொன்னார்கள் 'சொல்லுதல் யார்க்கும் எளிய; அரியவாம் சொல்லிய வண்ணம் செயல்' என்னும் வள்ளுவர் வாய்மொழிக்கேற்ப அரிய செயலை எளிமையாக்கி விட்டார் அம்மையார் அவர்கள். 'அவர்கள் சொன்ன சொல்லைக் காப்பாற்ற வேண்டும்' என்றும், 'தெல்லிப்பழைக்கு எவ்வித இழுக்கும் வரக்கூடாது' என்றும் இங்குள்ள மக்களும் இந்து இளைஞர் மன்றமும் அம்மையாருக்குப் பெரும் ஒத்துழைப்பைக் கொடுத்துள்ளன. இதைப் பார்க்கும்பொழுது, இலங்கைத் தமிழ்ச் சகோதரர் மீது பெருமதிப்பும் பேரீடுபாடும் எங்களுக்கு ஏற்படவே செய்கின்றன. இம்மாநாடு சிறப்புற, இதுகாறும் பொறுமையுடன் என் மொழிகளைச் செவிமடுத்த உங்கள் அனைவருக்கும் என் மனமார்ந்த வணக்கமும் நன்றியும்!

திருச்சிற்றம்பலம்

# முரு. பழ. இரத்தினம் செட்டியார்

(78ஆம் ஆண்டு விழா - 1984 - நாகர்கோவில் - சைவர் மாநாடு)

பேரன்பு சான்ற பெரியோர்களே!

''வடவேங்கடம் தென்குமரி ஆயிடைத் தமிழ் கூறும் நல்லுகத்து'' என்னும் தொடரால் குறிக்கப் பெற்ற தமிழகத்தின் தெற்கெல்லை யாகிய குமரிமுனை அருகே, சீரும் சிறப்பும் மிக்க நகராக நாகர்கோவில் விளங்குகிறது. சில ஆண்டுகட்கு முன் ''சைவ சித்தாந்தம்'' பற்றிப் பேசுவதற்காக அன்பர் திரு. கு. வைத்தியநாதன் என்னை நாகர்கோவிலுக்கு அழைத்திருந்தார். அவையின்கண் ஆயிரம் பேருக்கு மேல் கூடியிருந்தனர். ''சித்தாந்தம்'' கேட்க, இவ்வளவு மக்கள் கூடி இருந்ததைக் கண்டதும், பெரு வியப்புற்றேன். சித்தாந் தத்திற்கு ஒரு கோட்டையாக இந்நகர் திகழ்வது உடனே எனக்குப் புலனாயிற்று. சைவமும் தமிழும் தழைத்தினிதோங்கப் பெரும் பணியாற்றும் நாகர்கோயில் சைவப் பெருமக்களுக்கு முதற்கண் என் வாழ்த்தையும் நன்றியையும் தெரிவித்துக் கொள்கிறேன்.

## நாகராஜா கோவில்

இந்நகர் பாடல் பெற்ற தலமாக இல்லாவிட்டாலும், திருக் கோயில்கள் பலவற்றை அகத்தும் புறத்தும் கொண்டு விளங்குகிறது. இங்கே நாகராஜாவுக்கு ஒரு கோயில் உண்டு. பழங்காலத்தில் பயம் காரணமாக, மக்கள் பாம்பை வழிபட்டனர். பாம்புக்குப் பால் வார்த்து வழிபட்டால், அது நம்மைத் தீண்டாது என்று அக்கால மக்கள் நம்பியிருந்தனர். பின்னர், சடப்பொருட்களுக்கும் அஃறிணை உயிர்கட்கும் அதிதேவதைகள் உண்டு என்னும் வேத நூற் கொள்கை பரவியது. நாக வணக்கம், நாக தேவதை வணக்கமாக மாறியது நாகங்களின் அதி தேவதை நாகராஜா எனக் கொண்டு வழிபாடு செய்யத் தொடங்கினர்.

சைவம், சிவபெருமானை ''நாகாபரணன்'' என்று கூறும், மாயையை நாகமாக உருவகம் செய்து, மாயையோடு இறைவன்

கலந்திருந்தும், அதனால் பாதிக்கப்படாமல் அவன் இருக்கிறான் என்பதை உணர்த்தவே. நாகத்தை அணிந்திருந்தும் அதனால் சிவபெருமான் பாதிக்கப்படாமல் இருக்கிறான் எனச் சைவம் இதற்குத் தத்துவப் பொருள் சொல்லும். குண்டலி சக்தியை நாகமாக உருவகம் செய்து, யோக சாத்திரங்கள் பேசும். என்ன தத்துவம் சொன்னாலும், மக்கள் பாம்பைத் தெய்வமாக வைத்து வணங்கும் வழக்கத்தை விடவில்லை. சிவபரம் பொருளைத் தவிர, வேறு தெய்வ வணக்கம் வேண்டுவதில்லை என்னும் கருத்தை மக்களிடையே போதிய அளவு வலியுறுத்திச் சைவ அறிஞர்கள் பிரசாரம் செய்யாமையே இதற்குக் காரணமாகும்.

## அதி தெய்வங்கள்

சூரியன், சந்திரன், செவ்வாய், புதன், வியாழன், வெள்ளி, சனி, ராகு, கேது, அக்கினி, வருணன், இந்திரன், ஐயப்பன், சரஸ்வதி, இலக்குமி முதலியவை அதி தெய்வங்களாகும். அதி தெய்வங்கள் மிகப் பல. அவற்றுள் சிலவற்றையே மக்களால் வழிபட இயலும்; அவ்வாறு தான் மக்கள் வழிபட்டு வருகின்றனர். ஒவ்வோர் இடத்திலும் வெவ்வேறு அதி தெய்வங்கள் பிரபலமாக விளங்கு கின்றன. அதிதெய்வங்கள் அனைத்தும் ஆன்மாக்களே ஆகும்.

## சிறு தெய்வங்கள்

மதுவும் உயிர்ப்பலியும் இட்டு வணங்கும் தெய்வங்கள் யாவும் சிறு தெய்வங்கள் எனப்படும். கிராம தேவதைகள், காடன், மாடன், கறுப்பண்ணசாமி, வனதேவதை, பல்வேறு வகை துர்க்கை முதலியவை சிறு தெய்வ வர்க்கத்தைச் சார்ந்தவையாகும். மதுவும் உயிர்ப்பலியும் இடப்படும் எந்தத் தெய்வத்தின் பக்கமும், நாம் அறவே சேரக்கூடாது என்பதை உணர்த்தவே, அப்பர் சுவாமிகள், ''சென்று நாம் சிறு தெய்வம் சேர்வோம் அல்லோம்'' எனக் கூறியருளியிருக்கிறார். இச்சிறு தெய்வங்களில் பல, துர்மரணம் அடைந்த ஆன்மாக்களாகும். வீடுகளில் படையல் போட்டு வணங்கும் மூதாதையர் வழிபாடும் சிறுதெய்வ வணக்கமே ஆகும். மூதாதையர் நற்கதி அடைய இறைவனை வேண்டிச் செய்யப்படும் திவசம் இதனின் வேறாகும்.

## அதி தெய்வ வழிபாடு

உயிர்ப்பலி பாவம் என்பதால், சிறு தெய்வ வழிபாடு அறவே கூடாதென்று சொல்லும் சைவம், அதி தெய்வ வழிபாடு ஆன்ம

முன்னேற்றத்திற்கு தடை என்னும் கருத்தில், அது நமக்கு வேண்டுவதில்லை என்று கூறுகிறது.

*''கல்லால் நிழல்*
*அல்லாத் தேவை*
*நல்லார் பேணார்*
*அல்லோம் யாமே''*

என்பது ஞானசம்பந்தர் வாக்கு. சிவபெருமான் அல்லாத வேறு தெய்வங்களை நல்லார் பேண மாட்டார்; நாமும் பேண மாட்டோம்'' என்பது இதன் பொருள். வேறு தெய்வங்களை நல்லவர் அதாவது ஆன்மாவின் நன்மையைக் கருதுபவர் வழிபட மாட்டார் என்று ஏன் கூறியிருக்கிறார்?

அதிதெய்வங்கள் தம்மளவில் வேதனைப்படும்; பிறக்கும்; இறக்கும். எனவே அவை, நமக்கு ஞானத்தையோ முத்தியையோ வழங்க முடியாது. உலகியல் பயன்களையும் அவை நேரடியாக வழங்கும் ஆற்றல் படைத்தவை அல்ல; அவற்றால் பெறப்படும் பயன் அற்பமானதாகும். ஊழ்வினையை நீக்கி அருள் பாலிக்கும் அதிகாரம் அவற்றிற்கு இல்லையாதலால், அவை வழங்கும் அற்பப் பயனும், ஊழ் வகுத்து வந்து ஊட்டும் போது, அடிபட்டுப் போகும் அவற்றால் பெறும் உலகியல் பயன்களில் நாம் அழுந்தி, மேன்மேலும் ஆசை வயப்படுவோமாதலால்,நம் ஆன்ம முன்னேற்றம் தடைப்படும். இதனாலேயே, ஞானசம்பந்தர், ''நல்லார் பேணார்'' எனக் கூறியருளினார். ''செத்துத் செத்துப் பிறப்பதே தேவென்று, பக்தி செய் மனப்பாறைகட்கு ஏறுமோ?'' என அப்பர் சுவாமிகள் சாடுவதும் இங்கே சிந்திக்கத் தக்கது.

சிவபெருமானை இதய கமலத்தில் வைத்து உள்குகின்றவர், வேறு தெய்வத்தை நினைத்தால், தியானத்தின் ஒருமைப்பாடு சிதைந்து போகும் என்பதாலேயே மணிவாசகர், ''உள்ளேன் பிற தெய்வம் உன்னை அல்லாது எங்கள் உத்தமனே'' எனக் கூறியருளியிருக்கிறார் வேறு தெய்வத்தை நினைத்தால், இதயம் எச்சில் பட்டுப் போகும் என்பதும் இவ்வாக்கினால் தெரிய வருகிறது.

அப்பர் சுவாமிகள் திருவாரூர்த் திருக்கோயிலுக்குள் நின்று ''உன்னை அல்லால் ஒரு தெய்வம் உள்கேன் என்றும்... பொழிலாரூரா என்றே போற்றா நில்லே'' (6-31-8) எனப் பாடுவதால், நாம் அக்கோயிலில் உள்ள சிவபெருமானையே வழிபடல் வேண்டும் என்பதும், அங்குள்ள அதி தெய்வங்கள் அந்தந்தக் கால பூஜைகளில்

பரார்த்தமாகச் சிவாசாரியார்கள் தூப, தீபங்களுக்கு உரியனவே அல்லாமல், வழிபடுதற்கு உரியன அல்ல என்பதும் புலனாகும். இவ்வாறு கொள்ளாவிட்டால், சந்நதிக்குள் நின்று அப்பர் சுவாமிகள் சொல்வதற்குப் பொருளில்லாமற் போகும்.

''உலகியல் இன்பங்களை அதி தெய்வங்களிடமிருந்து எளிதில் பெறலாம்; சிவன் சங்காரக் கடவுளாதலால் முத்தியைத் தான் தருவான்'' எனப் பலர் கருதுகின்றனர். சங்கரன் என்பதற்கு, 'இன்பம் செய்பவன்' என்பது பொருள். உலகியல் இன்பங்களை, அதி தெய்வங்கள் தாமாக வழங்கும் ஆற்றல் உடையன அல்ல. சிவபெருமான்தான் அவையாக நின்று நமக்கு வழங்குகிறான். இதனையே ''யாதொரு தெய்வம் கொண்டீர், அத்தெய்வமாகி ஆங்கே மாதொரு பாகனார் தாம் வருவர்'' எனச் சிவஞான சித்தியார் பேசுகிறது. சிவபெருமான் அந்த அந்தத் தெய்வமாகவே நின்று அருள் வழங்குவதால், அந்த அந்த தெய்வத்தின் தன்மை, ஆற்றல் ஆகியவற்றிற்கு ஏற்பவே நமக்குப் பயன் கிடைக்கும். இதனாலேயே, அதிதெய்வங்கள் வழங்கும் பயன்கள் அற்பமானவை என்றும், ஊழின் முன் நிற்க முடியாதவை என்றும் கூறுகிறோம்.

எந்தத் தெய்வத்தை வணங்கினாலும், அவ்வணக்கம் சிவபெருமானையே சென்று சாரும் என்பது உண்மையே. ஆனால், நமக்கு எந்தத் தெய்வத்தை வணங்குகிறோமோ அந்தத் தெய்வத்தின் ஆற்றலுக்கு ஏற்ற பயனைத்தான் சிவபெருமான் தருவானே அல்லாமல் அவனை நேரடியாக வணங்கிய பயனைத் தரமாட்டான். ''காண்பவன் சிவனே ஆனால் அவன் அடிக்கு அன்பு செய்கை மாண்பறம்'' என்பது சிவஞான சித்தியார் வாக்கு. ''சிவன்தான் அதி தெய்வத்தை அதிட்டித்து நின்று அருள் தருகிறான் என்றால், அவனை நேரடியாக வணங்கிப் பயன் பெறுவது தானே சிறப்பு'' என்பது இதன் பொருளாகும்.

தன்னை நேரடியாக வணங்குபவர்க்கு, இறைவன் உலகியல் இன்பங்களையும் வழங்குவான்; முத்தியையும் வழங்குவான். அதி தெய்வங்களிடமும் உருகி வழிபட்டுத்தான் உலகியல் பயன்களைப் பெற வேண்டும். கேட்ட உடனேயே அவை தருவதில்லை. ஆனால் சிவபெருமானிடம் சிறிதளவு உண்மை அன்பு செலுத்தினால் போதும்; உலகியல் இன்பங்களைத் தாராளமாக வழங்குவான். ஊழ் இடையூறாக இருந்தால் நாம் திருத்தம் பெறுவதற்காக அவன் தாமதிப்பதுண்டு. எனினும் ஊழை நீக்கி அருள் செய்யும் திறம் சிவனுக்குத்தான் இருக்கிறது. அதி தெய்வங்களால் அது முடியாது.

உலகியல் இன்பங்களைச் சிவபெருமானிடம் வேண்டிப் பெறுவதற்குத் திருமுறை ஆசிரியர்கள் அனுமதி தந்திருக்கின்றனர். அவன், அவற்றை மிகத் தாராளமாக வழங்குவான் என்றும் அவர்கள் நமக்கு உறுதி அளித்திருக்கின்றனர்.

''ஐயனே, அரனே என்று அரற்றினால் வையம் ஆளவும் வைப்பர் மாற்பேறரே'' என்றும்.

''பொன்னடைந்தார் போகங்கள் பல அடைந்தார், புண்ணியரே'' என்றும்,

''பொன்னும் மெய்ப்பொருளும் தருவானை'' என்றும்,

''இம்மையே தரும் சோறும் கூறையும்'' என்றும்,

''ஈட்டு மாநிதி சால இழக்கினும்... காட்டில் நடமாடுவாய், கா எனில், வாட்டம் தீர்க்கவும் வல்லர் மாற்பேறரே'' என்றும், திருமுறைகள் பரக்கப் பேசுவதால், சிவபெருமானிடம் நாம் எல்லா உலகியற் பயன்களையும் பெறலாம் என்பது தெளிவு. ''போகங்கள் பல அடைந்தார்'' என்னும் சம்பந்தர் வாக்கில் ''பல'' என்று வருவதால், சிவபெருமான் போகங்களைத் தாராளமாக வழங்குவான் என்பதும், ''அடைந்தார்'' என நிச்சயம் பற்றி இறந்தகாலத்தாற் கூறுவதால், தருவது உறுதி என்பதும், ''காட்டில் நடமாடுவாய், கா எனில் வாட்டம் தீர்ப்பர்'' என அப்பர் வாக்கில் வருவதால் காக்குமாறு வேண்ட நமக்கு அனுமதி உண்டு என்பது பெறப்படும்.

''வாதியா வினை, மறுமைக்கும் இம்மைக்கும் வருத்தம் வந்தடையாவே'' எனச் சம்பந்தரும், ''பத்தர்தம் ஊழ்வினை அறுவிப்பார்'' என அப்பரும், 'ஒருவனார் அடியாரை ஊழ்வினை நலிய வொட்டார்'' எனச் சுந்தரரும் கூறுவதால், இறைவன் ஊழை நீக்கி அருள் செய்வான் என்பது புலனாகும்.

''ஆசை தீரக் கொடுப்பார்'' என்னும் சம்பந்தர் வாக்கிற்கு இரு பொருள் உண்டு. ''நம் ஆசை நிறைவேறும் படியாகத் தருவார்'' என்பது ஒரு பொருள்; ''அவ்வாறு தருவதால் நாம் ஆசை தீர்ந்து, ஞானம் பெறுவோம்'' என்பது மற்றொரு பொருள். அதி தெய்வங்களிடமிருந்து உலகியல் பயன்களைப் பெற்றால், நம் ஆசை பெருகுமே அன்றி நீங்காது. சிவபெருமானிடமிருந்து அவற்றைப் பெற்றால் நம் ஆசை அறும். இதனால்தான் அதி தெய்வ வழிபாடு கூடாதெனப் பெரியோர்கள் விதித்துள்ளனர். சிவபெருமானிடம் உலகியற் பயன்களை வேண்டாலாமா? எனச் சிலர்

ஐயப்படுவதுண்டு. சிவனை வேண்ட வேண்ட வேண்டாமை தானே வரும் - என்பதாலேயே அருளாசிரியர்கள், அந்த அனுமதியை நமக்குத் தந்திருக்கின்றனர்.

''அதி தெய்வங்களை வணங்காவிட்டால் அவற்றின் கோபத்திற்கு நாம் ஆளாகுவோம்'' எனச் சிலர் அஞ்சுவதுண்டு சிவபெருமான் நமக்கு மட்டும் தலைவன் அல்லன்; அதி தெய்வங்கட்கும் அவனேதான் தலைவன். தம் தலைவனாகிய சிவபெருமானை நாம் வணங்குவது கண்டு, அவை மகிழுமே அன்றிக் கோபிக்க மாட்டா. சிவனை வழிபடுவோர்க்குத் துணை நின்றால், தமக்குச் சிவப் புண்ணியப் பேறு கிடைக்குமென அவை எண்ணி நமக்கு ஆதரவாக இருக்குமே அன்றி எதிராக இருக்கமாட்டா. அதி தெய்வங்கள் மிகப்பல வாதலால் அவை அனைத்தையும் ஒருவர் வழிபடுவது சாத்தியம் இல்லை. சிவபெருமானுக்குள் எல்லா அதி தெய்வங்களும் அடங்கி நிற்பதால், அவனை வணங்குவது, அவை அனைத்தையும் வணங்கியதாக முடிகிறது. இதனாலும் அதி தெய்வங்கள் தம்மை வணங்கவில்லையே எனக் கோபம் கொள்ளாமல் மகிழ்ச்சி எய்தும் என்பது பெறப்படும்.

சிவபெருமானை முழுமுதற் பொருளாகக் கொள்ளாமல், ஏனைத் தெய்வங்களை முழுமுதற் பொருளாகக் கொள்வதுதான் தவறு. அவனைத் தலைவனாகக் கொண்டு, ஏனைத் தெய்வங்களைப் பரிவாரமாக வைத்து வணங்குவதில் தவறில்லை 'பரிவாரம் இருந்தால் தானே அவன் தலைவன் என்பது புலனாகும்?' எனச் சைவாகமங்கள் கற்ற அறிஞர் சிலர் சொல்வதுண்டு. வழிபாட்டில் பரிவார தெய்வங்களை, ஒரு சிறிது உள்ளினாலும், சிவ தியானத்தில் உள்ள ஒருமைப்பாடு சிதறும். சிவபெருமான் தலைவன் என்பதைப் பரிவாரத்தை வைத்துத் தான் அறிய வேண்டும் என்பது, உலகியல் மனப்பான்மையாகும். உலகியலை மனத்தில் வைத்துக் கொண்டு, தலைவன் என்றால், பரிவாரம் வேண்டும் என எண்ணியிருக் கின்றனர். சிவபெருமான் தனக்கே உள்ள தனித்தன்மையால், பரிவாரம் இன்றியே, தலைவனாக விளங்குகிறான். சிவபூஜைக்கும் பரிவாரங்களின் காப்பு வேண்டும் என நினைப்பதும் உலகியல் உணர்வால் விளைந்த ஒன்றே ஆகும். ''திருநீற்றுக்காப்பை'' விட வேறு காப்பு மிகை எனச் சேக்கிழார் கூறுகிறார். அதுபோலச் சிவபூஜைக்குப் பரிவார தேவதைகளின் காப்பு மிகையாகும். ஆகமங்களில், பரிவாரங்களுக்குப் பத்திரமோ, புட்பமோ வைக்கும்படி கூறியிருக்கிறதே? என வினாவலாம். சிவபெருமானைத் தவிர வேறு

எதற்கும் அஞ்சலி செய்யக்கூடாதெனக் கூறும் ஆகம வாக்கியங்களும் பல உண்டு. பூஜையைக் கேவலம், மிச்சிரம், சுத்தும் என மூவகையாக ஆகமங்கள் பேசும். பரிவாரத்தை ஒரு சிறிதும் மனத்தில் உள்காமல் பத்திரமோ புட்பமோ வைக்க இயலாது. "உனை அல்லேன் ஒரு தெய்வம் உள்கேன்" எனத் திருமுறை பேசுவதால், பரிவார வழிபாட்டை, அஃது ஏற்கவில்லை என்பது தெளிவு. திருமுறையில் ஒரு கருத்துக் கூறப்பட்டுவிட்டால் அப்புறம், ஆகமத்தையும் அதற்கேற்றவாறு பொருள் கொள்ள வேண்டுமே அன்றி, நாமாக நேரடியாகப் பொருள் கொள்ளக் கூடாது. பலபடப் பேசும் ஆகமத்திற்குப் பொருள் ஒருமை காண்பதற்கே, இறையருளால் திருமுறைகளும் சித்தாந்த சாத்திரங்களும் தோன்றி இருக்கின்றன. திருமுறைகள் தோன்றியபின். ஆகமத்தை நேரடியாகப் பொருள் கொள்ள நமக்கு உரிமை இல்லை. நம் ஆசாரியர்களின் வாக்கிற்கு ஏற்ப இருப்பவற்றைக் கொண்டு ஏனையவற்றை அமைதி செய்து கொள்ள வேண்டும்.

"பாமர மக்கள் சிவனை வழிபடும் அறிவோ, ஆற்றலோ, தகுதியோ, உடையவர்கள் அல்லர்; பல தெய்வங்களை நம்பி இருக்கும் அவர்களிடம் சிவனை மட்டுமே வழிபடுங்கள் என்று சொன்னால், உள்ள நம்பிக்கையையும் இழந்து விடுவார்கள்" எனச் சிலர் கூறுவதுண்டு. சிவபெருமானை யார் வேண்டுமானாலும் வழிபடலாம். "கொல்வாரேனும் குணம் பல இல்லாரேனும்" வழிபடலாம் என ஞானசம்பந்தர் கூறுகிறார். "ஏதும் ஒன்றும் அறிவிலராயினும்" வழிபடலாமென அப்பர் கூறுகிறார். சிவபெருமான் பரம கருணாநிதி. அறிவு, ஆற்றல், தகுதி, ஆகியவற்றில் குறைந்தோர்க்கும் அவன் அருள் சுரப்பான், படித்தவர் நெஞ்சில் வஞ்சம் குடிபுகுந்திருக்கிறது; பாமரர் வஞ்சமில்லாதவராகக் காணப்படுவதால், அவர் தாம் சிவனை வழிபடுதற்கு மிகுதியும் தகுதி உடையவர் ஆவர். எல்லாக் கிராமத்திலும் சிவன் கோயில் இருக்கிறது. படிக்காத பரம பாமரனும், "சிவபெருமான் தான் பெரிய சுவாமி" என்பதை நன்கறிந்திருக்கிறான். புதிதாக ஒரு சுவாமியைக் கொண்டுவந்து புகுத்தினால்தான், உள்ள நம்பிக்கையும் போய் விடுமோ? என அஞ்ச வேண்டும். ஆயிரமாயிரம் ஆண்டுகளாக உள்ள சிவ வழிபாட்டைச் செய்யுங்கள் எனச் சொல்வது ஒரு போதும் நம்பிக்கையைக் குலைக்காது. பாமரரைக் கீழே அழுத்தி வைக்கும் நோக்கில், இது சொல்லப்படுகிறதென்றே நினைக்க வேண்டியதிருக் கிறது. அப்படியானால் அது மிகப் பெரிய பாவம் - என்பதைச் சொல்ல வேண்டுவதில்லை.

## சிவ வழிபாடு

சிவபெருமானுக்கு உருவத் திருமேனிகள் பலவாகும்; அடியவர் பொருட்டு அவன் பல்வேறு திருமேனிகள் எடுத்திருக்கிறான். ஒரு நாமம், ஓர் உருவம் ஒன்றும் இல்லாத அவன் நம் பொருட்டுக் கருணை காரணமாக இத்திருமேனிகளைக் கொண்டிருப்பதால், அவற்றை வழிபட்டே நாம் உய்ய வேண்டும். உருவ வழிபாட்டுக்குள் அருவம் அருவுருவம் ஆகிய திருமேனி வழிபாடுகளும் அடங்கி விடும்.

நடராசர், அம்மையப்பர், சோமாஸ்கந்தர், கல்யாண சுந்தரர், அர்த்த நாரீஸ்வரர், தட்சிணாமூர்த்தி முதலிய மூர்த்தங்கள் உருவத் திருமேனிகளாகும்.

சிவன் கோயிலில் உள்ள அம்பாள், சிவபெருமானின் அருட்சக்தியேயாதலால், அந்த மூர்த்தமும் சிவமூர்த்தமேயாகும். "பெண்ணாகிய பெம்மான்" என்பது ஞானசம்பந்தர் வாக்கு.

சிவஞானபோதச் சிற்றுரையில் மங்கல வாழ்த்துப் பாடலுக்கு உரை எழுதும்போது, சிவஞான சுவாமிகள், "விநாயகருக்கும் சிவபெருமானுக்கும் வேறன்மை பெற்றாம்" எனக் கூறுவதால், விநாயகரும் சிவமூர்த்தமே ஆகும். கந்த புராணத்தில் சிவபெருமான் சொல்வதாகக் கச்சியப்பர், "ஆதலின் நமது சத்தி அறுமுகன் அவனும் யாமும் பேதகம் அன்றால்" எனப்பாடுவதால், சுப்பிரமணியரும் சிவமூர்த்தமே என்பது பெறப்படும். "சிவபெருமான் மிகவும் இறங்கி வந்து எடுத்த வடிவம், கணபதி, கந்தன் வடிவம் என்பதை உணர்த்தவே, அவர்கள் இருவரும் சிவகுமாரர்கள்" எனப்பட்டனர். நம்மைப் போலச் சிவனுக்குப் பிள்ளைகள் உண்டெனக் கருதுவது அறியாமை.

"விநாயகரும் சிவனும் வேறல்லர்" எனக் கூறிய சிவஞான சுவாமிகள், சிவஞான பாடியச் சிறப்புப் பாயிரத்தில் "சர்வஞ்ஞானோத்தர முதலிய சிவாகமங்கள், கந்தன், கணபதி முதலாயினோர்க்கு அருளிச் செய்தது, கந்தன் முதலாயினோரை நோக்க, முனிவர் முதலாயினோர் பரிபாகத்தில் தாழ்ந்தவர்" என எழுதியிருப்பது பொருந்துமா? என வினாவலாம். "பரிபாகம்" என்ற சொல்லாலே இங்கே குறிப்பிடப் பெறும் கந்தன், கணபதி முதலாயினோர் ஆன்ம வர்க்கத்தைச் சார்ந்தவர் என்பதும், அவர்கள் பெற்ற பதம் நோக்கிக் கந்தன், கணபதி என அழைக்கப்படலாயினர் என்பதும், சதாசிவரில் அணுசதாசிவர் இருப்பது போல, இவர்கள்

அணுபக்கத்தைச் சார்ந்த அமர கணபதி, அமர கந்தன் என்பதும் இனிது புலனாகும். நாம் வழிபடும் கணபதி, கந்தன் இருவரும் சம்புபட்சத்தைச் சார்ந்த பரகணபதி, பரகந்தன் ஆவர். இவர்கள் சிவபெருமானே என ஐயம், திரிபுக்கிடனின்றி அறிந்து கொள்ள வேண்டுவது, சைவப் பெருமக்களின் கடமையாகும். இதனாலேயே பதினோராம் திருமுறையில் இவர்கள் இடம் பெற்றுள்ளனர்.

நடராசர், அம்மை அப்பர் முதலிய வடிவங்கள் போல அம்பாள் வடிவமும், விநாயகர், கந்தன் வடிவமும் சிவபெருமானின் உருவத்திரு மேனிகளேயாகும். இந்த உருவத் திருமேனிகள் அனைத்தையும் வழிபடத் துவங்கினால், தியானத்தில் ஒருமை உண்டாகாது. இந்தத் திருமேனிகளுள், ஒரு மேனியை உபாசனா மூர்த்தமாக எடுத்துக் கொள்ள வேண்டும். இத்திருமேனிகளுக்குள் ஏற்றத் தாழ்வு இல்லை. எல்லாம் அவன் திருமேனியே ஆகும். ஒரு குறிப்பிட்ட வரத்தை அடியவர்க்கு வழங்குவதற்காக எடுத்த திருமேனியாக இருப்பினும், அத்திருமேனி அவன் திருமேனியாதலால்; இம்மை, மறுமை, முத்தி ஆகிய அனைத்தையும் அது தரவல்லதாகும். நாம் விரும்பும் ஒரு திருமேனியை வழிபடு மூர்த்தமாக எடுத்துக் கொண்டு அதனையே தியானித்து வரல் வேண்டும். ஏனைத்திருமேனிகளைத் தரிசிக்கும் போதும், உபாசகத் திருமேனியாகவே அத்திருமேனியைப் பாவித்து வழிபடல் வேண்டும். உபாசனை முதிரும்போது, உபாசனா மூர்த்தம் குரு வடிவு கொண்டோ, ஒரு குருவை ஆவேசித்தோ வந்து ஞானத்தை உணர்த்திப் பேரின்பத்தை வழங்கும்; இம்மைப் பயன்களையும் அது நமக்கு எளிதில் தரும். திருமுறைப் பாராயணமும் திருவைந் தெழுந்தை உருவேற்றலும் இன்றியமையாத சாதனங்களாகும்.

## ஞானமும் அன்பும்

சைவம், இறைவனை அன்பு ஒன்றினால்தான் அடையலாம் எனத் தெளிவாகக் கூறியிருக்கிறது. ''அன்பரால் அன்றி யாவர்க்கும் அறியொணா மலர்ச் சோதியான்'' என்பது மணிவாசகம். ''ஞானத்தால் வீடு'' என்னும் சித்தியார்ச் செய்யுளை நாம் நன்கு விளங்கிக் கொள்ள வேண்டும். இங்கே ''ஞானம்'' என்பது பதி ஞானத்தைக் குறித்து நிற்கிறது. பதிஞானம் இறைவனின் ஞானமாகுமே அன்றி உயிரின் ஞானமாகாது. உயிர் இடையறாது அன்பு செலுத்தினால், இறைவன் பதிஞானத்தை வழங்கி அதன் வாயிலாகத் தன்னை உணர்த்துவான். ஆகவே உயிரால் செய்யற்பாலது அன்பே ஆகும். ''அயரா அன்பின் அரன்கழல் செலுமே'' என்பது சிவஞான போதச் சூத்திரம். உலகப்

பொருட்களின் கண் உள்ள பற்றை அறவே நீக்கினால், இறைவனிடத்தே முழு அன்பு உண்டாகும். அந்நிலையில் இறைவன் குருவாக வந்து பதிஞானத்தை தந்து வியாபக நிலையை உணர்த்துவான். இறைவனிடத்தே செலுத்தும் முழு அன்பே ஞானம் என உணரவே சேக்கிழார், ''ஞானம் ஈசன்பால் அன்பே,'' என ஞானசம்பந்தர் பாசுரத்திற்கு விளக்கம் கூறினார். சரியை, கிரியை, யோகம், ஞானம் ஆகிய நான்கும் பக்திநெறியின் கூறுகளே ஆகும். இந்நான்கையும் உள்ளடக்கியே மணிவாசகர், ''பத்தி நெறி அறிவித்து'' எனத் திருவாய் மலர்ந்தருளினார்.

## சைவ சித்தாந்தம்

உலகத்துப் பொருட்கள் அனைத்தும் அறிவதால் அவற்றுக்குத் தோற்றம் இருந்தே ஆக வேண்டும். தோற்றம், அழிவு ஆகிய இரண்டையும் செயல்படுத்தத் தோற்றமும் அழிவும் இல்லாத ஒரு பொருள் வேண்டும். அப்பொருளையே ''கடவுள்'' எனச் சைவ சித்தாந்தம் கூறுகிறது. தோற்றம், அழிவு இரண்டையும் செயல் படுத்தும் பொருளுக்குப் பேரறிவும் பேராற்றலும் இருக்க வேண்டும். ஒன்றுக்கு மேற்பட்ட தன்மைகள் இருந்தால் அதனைப் ''பொருள்'' என்று சைவ சித்தாந்தம் கொள்கிறது. இதனாலேயே ''கடவுள்'' ஒரு பொருள் எனச் சைவ சித்தாந்தம் தெளிவு செய்திருக்கிறது.

கடவுளுக்கு எந்தத் தேவையும் இருக்க முடியாது. உயிர்களைக் கடவுள் படைத்தார் என்றால் ஏன் படைத்தார் என்னும் வினா எழும். அவர்க்கு ஒரு தேவையும் இல்லையாதலால், உயிர்களைக் கடவுள் படைக்கவில்லை என்றும் அவையும் கடவுளைப் போல அநாதி என்றும் சைவ சித்தாந்தம் சொல்கிறது.

நம் உள்ளம் தீமையின்பால் இயல்பாகவே செல்கிறது. நன்றின்பால் செல்வதற்கு அறிவுரையும் பயிற்சியும் அனுபவமும் வேண்டப் படுவதால், நம் அறிவை ''ஆணவ மலம்'' என்னும் ஒரு இருட்பொருள் மறைத்திருக்கிறதெனச் சைவ சித்தாந்தம் கண்டு பிடித்திருக்கிறது. இப்பொருளை இறைவன் உண்டாக்கியிருக்க மாட்டானாதலால், இஃதும் கடவுளைப் போல - உயிர்களைப் போல - அநாதியாக உள்ள பொருள் என்பது தெரிகிறது. அஃது அநாதிப் பொருளாதலால் உயிர்களின் அறிவை அநாதியாகவே மறைத்திருக்க வேண்டும் என்பது தெறிவு.

அநாதியே மறைத்திருக்கும் ஆணவ மலத்தை உயிர் பற்றி அழுந்தியிருப்பதால், தான் உடனே விடுதலை பெற முடியாமல்

தடுமாறுகிறது. உயிரின் வலிமைக் குறைவால் இஃது நிகழ்கிறது. படிப்படியே பயிற்சி பெற்றால்தான், உயிர் அறிவு வலிமை பெறும். உயிரை இறைவன் படைக்கவில்லையாதலால், அதன் வலிமைக் குறைவுக்கு அவன் பொறுப்பாளியாக மாட்டான். பயிற்சிவழி வலிமை பெறும் தன்மை உயிர்க்கு இருப்பது அதற்கு அநாதியே அமைந்த இயல்பாகும். அநாதியே மலத்தைப் பற்றுவது உயிரின் வினையாய் ''மூலகன்மம்'' என்று கூறப்படும். வேறு, வேறு கூறுவது சிவஞான சுவாமிகள் வாக்கிற்கு முரணாகும்.

உலகத்துச் சடப்பொருள்கள் அனைத்தும் காலம், இடம் இரண்டிற்கு உட்பட்டு அழிவதால் இவற்றிற்கு மூலமாய்க் காலம் இடத்திற்கு உட்படாத ஒரு பொருள் இருக்க வேண்டும். சடப்பொருட்கு மூலமாய் உள்ள பொருள், சடமாகவே இருத்தல் வேண்டும். இப்பொருளுக்கு ''மாயை'' எனச் சைவ சித்தாந்தம் பெயரிட்டுள்ளது. கடவுள், மாயையைப் படைத்தார் என்றால், எதிலிருந்து அதனைப் படைத்தார்? என்னும் வினா எழும். இறைவன், ''உண்டாகுக'' என்றதும் அஃது உண்டாயிற்று என்றால், அஃது அவரிடமிருந்து தோன்றியதென்று தான் பொருள். அவர், அறிவுடைப் பொருளாதலால், அவரிடமிருந்து தோன்றிய ஒன்று அறிவுடையதாக இருக்க வேண்டும். அறிவற்ற சடப் பொருட்கு மூலமாய் உள்ள மாயை அறிவற்றதாகவே இருக்குமாதலால், அஃது அவரிடமிருந்து தோன்றியிருக்க முடியாது. ஆகவே, மாயையும் கடவுளைப் போல - உயிரைப் போல - ஆணவம் போல யாராலும் படைக்கப் படாத அநாதி நித்தியப் பொருள் எனச் சைவ சித்தாந்தம் முடிவு கண்டிருக்கிறது.

உயிர்களை ஆணவமல பந்தத்தினின்றும் விடுவிக்க இறைவன் திருவுள்ளம் கொள்கிறான். அவனுக்குக் கருணை காரணமாக இந்தச் சங்கற்பம் உண்டாகிறது. அவனுக்கு எந்தத் தேவையும் இல்லாததால், உயிரை அவன் படைக்கவில்லை என்று கொண்டோம். ஆனால், உயிர்களின் பொருட்டு உலகையும் உயிர்களுக்குள்ள உடலையும் மாயையிலிருந்து இறைவன் படைத்தளிக்கிறான். உடல் பெற்ற உயிர்கள், உலகிடை வாழ்ந்து நல்வினை தீவினைகளைப் புரிகின்றன. வினைகளுக்கு ஏற்ப அவைகளுக்கு இன்ப - துன்ப அனுபவங்களை இறைவன் உண்டாக்குகிறான். அனுபவம் ஏற ஏறப் பயிற்சி வழி அனுபவம் பெறும் தன்மையுடைய உயிர்கள், வலிமை பெற்று, இறைவனே உண்மை இன்பத்தைத் தரவல்லவன் என உணர்ந்து அவனை இறுகப் பற்றுகின்றன. பற்றியதும் மாறாத பேரின்ப

அனுபவத்தை அவற்றிற்கு இறைவன் வழங்குகிறான். இந்த முத்தி இன்பத்தில் அவை என்றும் திளைத்துக் கிடப்பதே அவை இறுதியில் பெறும் பெறற்கரிய பேறாகும். பயிற்சிவழி அனுபவம் பெறும் தன்மை உடைய உயிர்களைத் துவக்கத்திலேயே, ஆணவ மலத்தைப் பற்றாதவாறோ, உடனே ஆணவமல பந்தத்தினின்றும் நீங்குமாறோ செய்தால், அவை பயன் பெற இயலாது. இதனாலேயே அவற்றைப் பிறப்பு, இறப்புக்குட்படுத்தி மெல்ல மெல்ல அனுபவம் பெறச் செய்கிறான்.

உயிர்கள் எண்ணில என்பது சைவசித்தாந்தம், பிரபஞ்ச வெளி எல்லையற்றது. இவ்வெளியின் எல்லையக் காண ஒருவன் பறந்து சென்றால், அவன் எவ்வளவு தூரம் சென்றாலும், வெளி இருந்து கொண்டே இருக்கும். உயிர்கள், பிரபஞ்சம் எங்கும் நுண்ணுடல் அல்லது தூலஉடல் பெற்று நிறைந்து இருப்பதால், எல்லை இல்லாத பிரபஞ்சத்துள் இருக்கும் உயிர்களும் எண்ணிலியாகத்தானே இருக்க வேண்டும்? இதனாலாயே கணித சாத்திரமும் எண்ணுக்கு முடி வில்லை என்று கூறுகிறது. எவ்வளவு தூரம் சென்றாலும், பிரபஞ்ச வெளி எல்லையற்று இருப்பது போல, எத்தனை உயிர்கள் முத்தி பெற்றாலும், முத்தி பெற வேண்டிய உயிர்கள் எண்ணிலியாகவே இருக்கும். ஆகவே, படைத்தல், காத்தல், அழித்தல் முதலிய தொழில்கள் என்றும் உண்டு. என்பது பெறப்படும். புறச் சமயங்களில் சில, ஒரு காலத்தில் உலகம் முடிவுக்கு வரும் என்றும், அப்புறம் படைத்தல், காத்தல் முதலிய தொழில்கள் இல்லை என்றும், கூறிகின்றன. அப்படியானால் படைத்தலுக்குத் துவக்கம் இருக்க வேண்டும். இங்கர்சால், ''படைத்தலுக்கு முன் இறைவன் தூங்கினானா? என்ன செய்து கொண்டிருந்தான்?'' என வினா எழுப்பினார். இதற்குப் புறச் சமயத்தினரால் விடை கூற இயலவில்லை. சைவம், பஞ்சக்கிருத்தியம் அனாதி எனக் கூறுகிறது. ஒவ்வொரு உற்பவத்திற்கும் மகா சங்காரம் உண்டு; ஆனால் மறுபடி புனர் உற்பவமும் சங்காரமும் நிகழ்ந்து கொண்டே இருக்கும். படைத்தல் அநாதி என்பதால், அதற்கு முன் இறைவன் என்னசெய்து கொண்டிருந்தான் என்னும் விழா எழ இடமில்லை. நமக்கு விளங்கிக் கொள்வதற்காக, ஒரு குறிப்பிட்ட உற்பவம் அல்லது சங்காரத்தைச் சொல்கிறோமே அன்றிப் பொதுவாக உள்ள உற்பவம், சங்காரம் இரண்டிற்கும் தொடக்கமோ முடிவோ இல்லை.

''முத்தியில் உயிர் தன்னை மறந்து இறைவனுடன் இரண்டறக் கலந்து கிடக்கிறது என்றால், ஆண்டு உயிர் இருந்தும் இல்லைதானே?

பிரமப்பொருள் ஒன்றுதான் உண்டு எனக் கூறினால் என்ன?'' எனச் சங்கர வேதாந்திகள் வினாவுவதுண்டு. முத்தியில் பேரின்ப அனுபவம் உண்டு எனச் சைவ சித்தாந்தம் சொல்லுவதால் அந்நுகர்ச்சி யாருக்கு? என வினா எழும். பிரமம் என்றும் இன்பமயமானதால், அதற்கு முத்தியில் இன்ப நுகர்ச்சி உண்டெனச் சொல்வது பொருந்தாது. நுகரும் பொருள், இன்பம் தரும் பொருளுக்கு வேறாகவே இருக்க வேண்டும், இரண்டும் ஒன்று என்றால், ஆண்டு நுகர்ச்சி இல்லை. எனவே முத்தியில் உயிர் உண்டு எனச் சொல்ல வேண்டுவது அவசியமாகிறது. பிரமம் ஒன்றுதான் உண்டு என்றால், உலகும் உயிரும் கானல் நீர் போலப் பிரமத்திற்குத் தானே தோன்ற வேண்டும்? அப்படியானால், பிரமம் அஞ்ஞான வயப்பட்டதாகிறதே? என்னும் வினாவிற்குச் சங்கரர் வேதாந்தம் ஒருபோதும் சரியான விடை தந்ததில்லை. பொருத்தமற்ற உவமைகளைச் சொல்லிச் சொற்சாலம் செய்வதில் பயனில்லை. நமக்கு மேற்பட்ட ஒரு பொருள் உண்டென்று மனப்பூர்வமாக நம்பினால்தான், உண்மையான பக்தி தோன்றும். பக்தியை உடன்படுவது போலச் சங்கரர் வேதாந்தம் பேசினாலும், ''நானே பிரமம்'' என்னும் கொள்கையால் உண்மைப் பத்தி தோன்ற இடமில்லாமற் போகிறது. பத்திக்கு இடையூறாகச் சங்கரர் வேதாந்தக் கொள்கை அமைந்திருப்பதாலேயே, சைவம் அதனைக் கண்டிக்க வேண்டுவதாகிறது.

## உலகியல் நோக்கில் சைவம்

''சாருவாகம் முதலிய எல்லாச் சமயமும் பரமசிவனால் செய்யப்பட்டமையின் பிரமாணமே'' எனச் சிவஞான பாடியத்தில் சிவஞான சுவாமிகள் கூறுகிறார். சைவம் எல்லாச் சமயத்தையும் மதிப்பதால் தான் அவை பரமசிவனால் செய்யப்பட்டன எனக் கூறுகிறது. அவரவர் பிறந்த சமயத்தில் அவரவரும் உறுதியாக நிற்க வேண்டும் என்றும், ஆனால் மற்றைச் சமயத்தாரை அவமதிக்காமல் யாவரையும் நேசிக்க வேண்டும் என்றும், அவரவர் சமயத்தில் அவரவர் உறுதியாக நின்றால், உண்மையை இறைவன் அவரவர் வழிபாட்டிற்கு இரங்கி உணர்த்துவான் என்றும் சைவம் சொல்கிறது. ஆன்மாவுக்குத் தனித்த தன்மை உண்டாதலால், வேற்றுமையை அழிக்க வராது. அவரவர் கொள்கையை அவரவர் பின்பற்றுமாறு விடுத்து, யாவரொடும் அன்பு அடிப்படையில் ஒற்றுமையாக வாழ வேண்டும் என்பதே சைவக் கோட்பாடாகும். அவரவரும் அவரவர் சமயத்தில் உறைப்போடு நிற்க வேண்டும் என்பதால்தான், சைவ சமயத்தில் பிறந்தவர்கள் சைவத்தில் உறைப்போடு நிற்க

வேண்டுமெனக் கூறுகிறோமே அன்றிப் புறச்சமய வெறுப்பால் அன்று என்பதை யாவரும் அறிந்து கொள்ள வேண்டும். சைவம், உலகத்திற்கு விடுக்கும் ஒரே செய்தி "எவ்வுயிர்க்கும் அன்பாய் இரு" என்பதாகும். "எவ்வுயிரும் என்பதில் அஃறிணை உயர்திணை ஆகிய இருவகை உயிர்களும் அடங்கும் என்பது தெளிவு.

## சாதி வேற்றுமை

"உலகியலில் நிற்கும் நமக்குச் சாதி உண்டென்றே சாத்திரங்கள் கூறுகின்றன; அடியார்கள், சாதி வேற்றுமை பாராட்டாமல் இருந்ததை நமக்கு உதாரணமாகக் கொள்ளக்கூடாது" என மரபுவழி நிற்பதாகத் தங்களைக் கருதிக் கொள்ளும் சைவ அறிஞர்கள் கூறுவதுண்டு. "சீலமில ரேனும், திருநீறு சேர்ந்தாரை ஞாலம் இகழ்ந்து அருநரகு நண்ணாமை எண்ணுவார்" என்பது சேக்கிழார் வாக்கு. "திருநீறு பூசியவர் ஒழுக்கமில்லாதவராக இருந்தாலும் அவரை உலகம் இகழக் கூடாது; இகழ்ந்தால் நரகம் கிட்டும்" என்பது இதன் பொருள். இங்கே, "ஞாலம்" என்பது உலகரைக் குறிக்கிறதே அன்றி அடியவரைக் குறிக்கவில்லை. "சாத்திரம் பல பேசும் சழக்கர்காள், கோத்திரமும் குலமும் கொண்டு என செய்வீர்" என்னும் அப்பர் வாக்கில் வரும், "சழக்கர்காள்" என்பது சழக்குப் பேசுகிறவரைக் குறிக்குமே அன்றி, அடியரைக் குறிக்காது. ஆகவே, யார் திருநீறு பூசியிருந்தாலும், அவரின் ஒழுக்கம், சாதி ஆகியவற்றைப் பார்க்காமல், உலகத்தவர் அவரைப் போற்ற வேண்டும் என்பது நம் அருளாளர்கள் இட்ட ஆணையாகும். அவர்கள் உலகத்தவரை நோக்கிச் சொல்கிறார்களே அல்லாமல். அடியவரைப் பார்த்துச் சொல்லவில்லை. "அடியவர் சாதி வேற்றுமை பாராட்டாமலிருந்ததை உதாரணம் காட்டக்கூடாது" என்னும் கருத்து இதனால் அடிபட்டுப் போகிறது. திருநீறு பூசிய யாரையும் இகழும் உரிமை உலகியலில் உள்ள நமக்கு இல்லை. தமிழகத்தில் தாழ்த்தப்பட்ட மக்கள் அனைவரும் திருநீறு பூசுகின்றனர்; ஹரிஜனங்கள் தம்சிறு தெய்வக் கோயில்களிலும் திருநீற்றைத் தான் பிரதானமாக வைத்திருக்கின்றனர். சைவத் தமிழ் மக்களில் திருநீறு பூச உரிமை இல்லாதவரென யாரும் இதுவரை ஒதுக்கப்பட்டதில்லை. "தீட்சைக்கு உரிமை இல்லை; கோயிலுக்குள் நுழைய உரிமை இல்லை" என்று சொன்னார்களே ஒழியத் திருநீறு பூச உரிமை இல்லை என்று சொல்லவில்லை. தொன்று தொட்டே எல்லாச் சாதியாரும் திருநீறு பூசுகின்றனர். எனவே, அனைவரையும் சைவ சமயத்தைச் சார்ந்த ஒரே குலத்தினர் எனக் கொள்ள வேண்டும் என்பதே திருமுறைகள் அறிவுறுத்தும் மரபாகும். திருநீற்றை மட்டும்

அவை குறித்திருப்பதால், வேறு காரணம் காட்டித் திருநீறு பூசுகின்ற தமிழ் மக்களுக்குள் சாதி வேற்றுமை பார்ப்பது திருமுறை மரபன்று என்பது தெளிவு. மரபு வழி நிற்பதாகக் கருதும் சைவ அறிஞர்கள் உலகரை நோக்கித்தான் சேக்கிழார் சொல்லியிருக்கிறார் என்பதைச் சிந்தித்துப் பார்த்தால் தாம் பேசுவது முந்தையோர் மரபுக்கு முரண் என்பது தெரிய வரும். ஆழ்ந்து நோக்கினால், சாதி வேற்றுமை மிகக் கொடிய பாவம் என்பது புலனாகும். ஆண், பெண் இரு பாலார்க்கும் சைவத்தில் எல்லாவகை உரிமையும் உண்டு என்பது இங்கே நினைக்கத் தக்கது.

## சைவத் திருக்கோயில்கள்

அதிக வருவாய் உள்ள திருக்கோயில்கள் தங்க இரதம், இரத்தினக் கவசம் போன்றவற்றில் பணத்தை முடக்காமல், சமூகப் பணிகளில் அவ்வருவாயைச் செலவிட வேண்டும். கோயில்களின் பெயராலேயே அநாதைக் குழந்தைகள் பராமரிப்பு விடுதி, விழி இழந்தோர் பள்ளி, மருத்துவ நிலையம், கல்விக்கூடம் ஆகியவற்றை உருவாக்க வேண்டும். திருக்கோயில் சார்பாக நடத்தப்படும் சமூகப்பணி பசுப் புண்ணியமாகாமல் பதிப்புண்ணியமாவதால், அது கோவில் விதிக்கு மாறாகது. சைவ சமயத்தைச் சார்ந்த பெருஞ் செல்வந்தர்கள் சமய நோக்கில் செய்யப்படும் சமூகப் பணிகள், பதிப்புண்ணியமே என உணர்ந்து, பூஜை, அபிடேகம், விழா ஆகியவற்றிற்கு ஒப்பாக அவற்றைக் கருதி செயலாற்றினால், நம் சமயம் புத்துயிர் பெற்று ஓங்கும். நித்திய பூஜைகளையோ விழாக்களையோ குறைக்க வேண்டும் என்பது அதன் பொருள் அன்று. அவற்றோடு இவற்றையும் அவசியம் செய்தாக வேண்டும் என்பதையே வற்புறுத்த விரும்புகிறோம்.

## திருமுறைகளும் சித்தாந்த சாத்திரங்களும்

சைவ சமயத்திற்குத் திருமுறைகளும் சித்தாந்த சாத்திரங்களும் பிரமாண நூற்களாகும். இவற்றை விட்டால் சைவம் இல்லை. இப்பொழுது இந்நூல்கள் புத்தகக் கடைகளில் கிடைப்பதில்லை. சைவத் திருமடங்களும் பெருமன்றங்களும் இவற்றை மீண்டும் மீண்டும் திருத்தமாகப் பதிப்பித்து மலிவு விலையில் கிடைக்குமாறு செய்ய வேண்டும். இவற்றுக்கு எளிய நடையில் பல்வேறு உரைகளும் விளக்கங்களும் வெளிவர வேண்டும். நாகர்கோவில் பெருமக்கள், நம் சமயம் ஆக்கமும் ஊக்கமும் பெற, முனைப்பான பணிகளில் ஈடுபடுவார்கள் என்னும் நம்பிக்கை எனக்குண்டு. மற்றப்

பகுதிகளில் உள்ள தமிழ்மக்களுக்கு அவர்கள் வழிகாட்டியாக விளங்க வேண்டும் என்பது என் ஆசை. இதனை அவர்கள் நிறைவேற்றித்தர வேண்டுமெனத் தெரிவித்துக் கொண்டு இவ்வுரையை இவ்வாறாக நிறைவு செய்கின்றேன்.

''மேன்மைகொள் சைவ நீதி விளங்குக உலகமெல்லாம்''
அம்பலவாணர் திருவடி வாழ்க.

# மகாவித்துவன்
# சி. அருணை வடிவேல் முதலியார்

**(80ஆம் ஆண்டு விழா - 1986 - சிதம்பரம் - சைவர் மாநாடு)**

*உலகெ லாமுணர்ந் தோதற் கரியவன்*
*நிலவு லாவிய நீர்மலி வேணியன்*
*அலகில் சோதியன் அம்பலத் தாடுவான்*
*மலர்சி லம்படி வாழ்த்தி வணங்குவோம்.*

*மதிவளர் சடைமுடி மன்று ளாரைமுன்*
*துதிசெயும் நாயன்மார் தூய சொன்மலர்ப்*
*பொதிநலன் நுகர்தரு புனிதர் பேரவை*
*விதிமுறை யுலகினில் விளங்கி வெல்கவே*

திருச்சிற்றம்பலம்

**சித்தாந்தச் செந்நெறி போற்றும் செல்வர்களே! செல்வியர்களே!**

சென்னைச் சைவ சித்தாந்தப் பெருமன்றத்தின் முத்துவிழா இத் தில்லையம்பதியில் இனிது நிகழ்தற்கு ஆவன பலவும் செய்து உடனிருந்து மகிழும் வரவேற்புக் குழுப் பெருமக்களே பேரன்பர்களே!

விழாவில் பல வகையில் பங்கேற்றுச் சிறப்பிக்க வந்துள்ள அறிஞர் பெருமக்களே! தில்லை நகரப் பெருமக்களே! தாய்மார்களே!

சித்தாந்த சைவத்தின் எதிர்காலக் காவலராய் விளங்கும் இளந்தலைமுறைச் செல்வங்களே!

உங்கள் அனைவர்க்கும் எனது உளமார்ந்த வணக்கத்தினையும், வாழ்த்தினையும் முதற்கண் தெரிவித்துக் கொள்கிறேன்.

அருட்டிரு ஞானியார் அடிகள், ஆசிரியர் மறைமலை யடிகள் முதலிய அறிவுசான்ற பெருந்தலைவர்கள் பலமுறை தலைமையேற்றுத் தலைமையுரைகளும், முடிவுரைகளும் வழங்கிய இப்பெருமன்ற விழாக்கள் பலவற்றின் வழியே நிகழ்கின்ற இவ்விழாவிற்குப் பெருமன்றத்தார் என்னைத் தலைமையேற்றுத்

தலைமையுரை வழங்க வேண்டும் எனக் கேட்டபொழுது முதுற்கண் நான் அச்சத்தையே அடைந்தேன். எனினும், மன்றத்தாரது அன்பிற்கு இணங்க யான் இப்பணியினை ஆற்ற இசைந்தேன். பெருமன்றத்தாரது பேரன்பிற்கு எமது உளமார்ந்த நன்றியைத் தெரிவித்துக் கொள்கின்றேன்.

இவ்வெல்லாவற்றிற்கும் முதற் காரணமாய்த் தோன்றாத் துணையாய் உடனிருந்து அருள்புரிகின்ற, சிவகாமியம்மை உடனாகிய தில்லைக் கூத்தப் பெருமானது திருவடிகளை அடியேன் மனமொழி மெய்களால் வழிபட்டு, எனது பணியினைத் தொடங்குகின்றேன்.

## சித்தாந்த சைவம்

சைவம், 'சித்தாந்த சைவம்' என்கின்ற முறையில் சைவ சந்தானாசாரியர் நெறியாக விளங்குகின்ற இக்காலத்தில் நாமெல்லாம் வாழ்கின்றோம். சந்தானாசாரியர் தமிழகத்தில் தமிழ் மொழியில் விளக்கிய சைவம் தத்துவச் சைமாகும். அவர்கட்கு முன்னர்த் தமிழகத்தில் தமிழ் மொழியில் சைவத்தை விளக்கியவர்கள் சமயாசாரியாரை உள்ளிட்ட திருமுறை ஆசிரியர்களாவர். ஆயினும் அவர்கள் விளக்கிய சைவம் தத்துவச் சைவமாகாது, பத்தி நெறிச் சைவமாகவே விளங்கியது. இதற்கு விளக்காய் உள்ளது பத்தாந் திருமுறையாகிய திருமந்திரம்.

## திருமுறைகள்

சந்தானாசாரியர்க்கு முற்பட்ட சமயாசாரியரது சைவம் தத்துவச் சைவமாக இல்லாமல், பக்தி நெறிச் சைவமாகவே உள்ளது என்றால், ''சந்தானாசாரியர் தங்கள் தத்துவச் சைவத்திற்கு மூலமாக எந்த நூல்களைக் கொண்டனர்'' என்னும் ஆராய்ச்சி எழுகின்றது. அந்த ஆராய்ச்சிக்கு, 'சைவாகமங்களே சந்தானாசாரியர் விளக்கிய சைவத்திற்கு மூலம்' என்பதே முடிவாகின்றது. 'சைவாகமங்கள் திருமுறைகட்கு மாறானவை அல்ல'' என்பது இங்கு நினைக்கத்தக்கது.

## தேவாரங்களில் ஆகமம்

திருமுறைகள் சந்தானசாரியர்களது நூல்களைப் போலச் சைவாகமங்களையும், அவற்றின் பொருளையும் முழுவதுமாக முற்ற எடுத்துக் கூறவில்லை என்றாலும், சைவாகமங்களைப் பற்றிய குறிப்புக்கள் திருமுறைகளில் இல்லை.

*"தொகுத்தவன் மறை அங்கம் ஆகமம்"*
*(திருமுறை - 3-23-6)*

எனவும், "அறங்கொண்டு சிவதன்மம் உரைத்த பிரான்" எனவும் (திருமுறை - 2-43-6) ஞானசம்பந்தர் திருமுறையில் காணப்படுகின்றன. சைவாகமங்களில் சொல்லப்படுகின்ற 'சரியை, கிரியை' என்னும் இரண்டுமே 'சிவதன்மம்' என ஒன்றாகத் தொகுத்துச் சொல்லப்படும்.

*"நல்ல சிவ தன்மத்தால், நல்லசிவ யோகத்தால்,*
*நல்லசிவ ஞானத்தால் நானழிய - வல்லதனால்*
*ஆரேனும் அன்புசெயின் அங்கே தலைப்படுங்காண்*
*ஆரேனும் காணா அரன்"*

என்னும் திருக்களிற்றுப்படியார் (வெண்பா - 15) காணத்தக்கது, இனி அப்பர் திருமுறையில்

*"சதாசிவனே நின்பாதம் போற்றி! போற்றி!"*
*(திருமுறை - 6-32-6)*

எனவும்,

*"மனோன்மணியைப் பெற்ற*
*தாயிலானைத் தழுவும் என் ஆவியே"*
*(திருமுறை - 5-91.1)*

எனவும்,

*"அஞ்சினாற் பொலிந்த சென்னி*
*அதிகைவீ ரட்ட னீரே"*
*(திருமுறை - 4-26-5)*

எனவும்,

*"இரண்டையும் நீக்கி ஒன்றாய்,*
*மலங்களை மாற்ற வல்லார்*
*............. திருப்பயற்றூர னாரே"*
*(திருமுறை - 4-32-9)*

எனவும் வந்துள்ளன.

'சதாசிவன்' என்பது திருவுருத்திரத்துள் வந்துள்ளதாயினும் சிவனைச் சிறப்பாக 'சதாசிவன்' எனப் போற்றுவன சைவாகமங்களே. சதாசிவனது சத்தியே மனோன்மணியாவாள். சைவாகமங்களே சிவனை ஐந்து திருமுகங்களையுடைய சதாசிவனாக வைத்துப்

போற்றுவன. உயிர்கட்கு உபாதியானவற்றை 'மலங்கள்' என்னும் வழக்குச் சைவாகம வழக்கே,

''இரண்டையும் நீக்கி'' என்றது 'இருவினைகளையும் நீக்கி என்றதேயாகலின், அதன்பின் ''ஒன்றாய் - மலங்களை மாற்ற வல்லார்'' என்றது, மாயையோடு சிறப்பாக ஆணவ மலத்தைத் குறித்தேயாகும். 'ஆணவம்' என்ற ஒரு மலத்தைக் கூறி, மலங்களை 'மூன்று' என்றால் சைவாகமங்கட்கே உரிய தனிச் சிறப்பாகும்.

இவைகளையெல்லாம் நோக்கும் பொழுது

*''விளையாததோர் பரிசில் வரு பசுபாசவேதனை ஒண்*
*தளையாயின தவிரவ்வரு தலைவன்''*
*(திருமுறை - 1.12.3)*

எனத் திருஞானசம்பந்தர் அருளிச் செய்தது. முற்றிலும் சைவாகமத் தத்துவப் பொருளே ஆகின்றது. ''தலைவன்'' என்றது 'பதி' என்றபடி, விளையாததோர் பரிசில் வரு பாசம் என்றது. 'ஒரு காலத்தில் இடையே வந்து பற்றாமல், அநாதியே இயற்கையாகப் பற்றியுள்ள பாசம்' எனக் கூறியதேயாகையால் அது. சைவாகமங்களில் 'சகச மலம்' என்றும் 'மூல மலம்' என்றும் வரையறுத்துச் சுட்டப்படுகின்ற ஆணவ மலமேயாகின்றது. இவற்றால் எல்லாம் சைவாகமத் தத்துவக் கருத்துக்கள் அப்பர் சம்பந்தர் காலத்திலேயே தமிழ்நாட்டில் அறிஞரிடையே பரவியிருந்தமை தெளிவாகும்.

## பெரிய புராண வரலாற்றில் ஆகமம்

பெரிய புராணத்தில் மெய்ப்பொருள் நாயனார் வரலாற்றில் அவரை வஞ்சனையால் வெல்ல வந்த பகைவன்,

*உங்கள்நா யகனார் முன்னம்*
*உரைத்த ஆகமநூல் மண்மேல்*
*எங்கும் இல் லாததொன்று*
*கொடு வந்தேன் இயம்ப''*

எனக் கூறினான் எனவும், அதற்கு நாயனார்,

*''பேறெனக் கிதன்மேல் உண்டோ*
*பிரான்அருள் செய்த இந்த*
*மாறில் ஆகமத்தை வாசித்து*
*அருள் செய வேண்டும்''*

(மெய்ப்பொருள் நாயனார் புராணம் - 12, 13)

எனக் கூறினார் எனவும் கூறப்பட்டவற்றைப் பார்க்கும் பொழுது சுந்தரர் காலத்துக்கு முன்பே தமிழ்நாட்டில் சைவாகமங்கள் சைவர்களால் போற்றப்பட்டமை புலனாகின்றது. சுந்தரர் வெள்ளை யானைமேல் கயிலைக்குச் செல்லும் பொழுது பாடிக் கொண்டு சென்ற ''தான் எனை முன் படைத்தான்'' எனத் தொடங்கும் திருப்பதிகத்தில், 8ஆவது திருப்பாடலில்,

*''அரவொலி, ஆகமங்கள், அறிவார் அறி தோத்திரங்கள்,*
*விரவிய வேதஒலி விண்ணெலாம் வந்து எதிர்ந்திசைப்ப''*

என, ஆகமங்களைக் குறித்திருத்தலும் இங்கு நினைவுகூரத் தக்கது.

## திருவாசகத்தில் ஆகமம்

இவ்வாறு தேவாரத் திருமுறைகளில் ஆகமக் கருத்துக்கள் சிற்சில இடங்களில் அருகியே காணப்படுகின்றன. வேதத்தைப் பற்றிய குறிப்பு அவைகளில் மிகப் பரவலாக ஆங்காங்குக் காணப் படுகின்றன. திருவாசகத்தில் ஆகமத்தைப் பற்றிய குறிப்புக்கள் சற்று மிகுதியாகவும், தெளிவாகவும் காணப்படுகின்றன.

*''ஆகம மாகிநின்று அண்ணிப்பான் தாள் வாழ்க''*
*(சிவபுராணம் - 4)*

*''மன்னு மாலை மகேந்திர மதனில்*
*சொன்ன ஆகமம் தோற்றுவித் தருளியும்''*
*(கீர்த்தித் திருவகவல் - 9, 10)*

*''கேவேட ராகிக் கெளிறது படுத்தும்*
*மாவேட்ட டாகிய ஆகமம் வாங்கியும்*
*மற்றவை தம்மை மகேந்திரத்திருந்து*
*உற்ற ஐம்முகங்க ளாற்பணித் தருளியும்''*
*(ஷை - 17-20)*

என்பன ஆகமங்களைப் பற்றித் தெளிவுபடக் கூறும் திருவாசகப் பகுதிகள். இனி,

*''மூலமாகிய மும்மலம் அறிக்கும்*
*தூய மேனிச் சுடர்விடு சோதி''*
*(ஷை - 111, 12)*

*''மும்மைமலம் அறிவித்து முதலாய முதல்வன்றான்''*
*(அச்சோப் பதிகம் - 9)*

*"மலங்கள் ஐந்தால் சுழல்வன்தயி ரிற்பொரு மத்துறவே"*
*(நீத்தல் விண்ணப்பம் - 29)*

என்பவற்றில் வந்துள்ள 'மும்மலம், மலங்கள் ஐந்து' என்பன முற்றிலும் சைவாகமத் தத்துவங்கள் என்பதில் ஐயமில்லை.

'சைவாகமங்கள் தமிழ்நாட்டில் புகுந்தது கி.பி. 9ஆம் நூற்றாண்டிற்கு முன் இல்லை' என்பவர்கள் அது பற்றி வாதவூரடிகள் காலத்தைத் தேவாரம் அருளிய மூவர் காலத்திற்குப் பிற்பட்டவராகக் கூறுகின்றனர். திருமந்திரக் காலத்தையும் பிற்படுத்துகின்றனர். சைவாகமக் கருத்துக்கள் தேவாரங்களிலேயே அமைந்து விளங்குதல் மேலே காட்டப்பட்டது.

## மணிமேகலைக் குறிப்பு

இன்னும் மணிமேகலைக் காப்பியத்தில் சமயக் கணக்கர்தந்திறங் கேட்ட காதையில் பல சமயங்கள் தெளிவாகக் குறிப்பிடப்படுகின்றன. அதுவும் ஒழுக்க முறையில் அன்றித் தத்துவ முறையில் எடுத்துச் சொல்லப்படுகின்றன. அதனால் அங்ஙனம் குறிப்பிடப்படும் சமயங்கட்கெல்லாம் மூலமாகிய முதல் நூல்களைச் செய்த ஆசிரியர்களும் குறிப்பிடப்படுகின்றார்கள். அக்கூற்றுக்களுக்கு இடையே 'சைவ வாதி' என்று ஒருவன் குறிப்பிடப்படுகின்றான். ஆனால் அவனது சமயத்திற்கு முதல் நூல் இது, அந்நூலை செய்த ஆசிரியர் இவர் என்பன சொல்லப்படவில்லை.

சைவ வாதி சொன்ன தத்துவங்களாக அக்காப்பியம் குறிப்பிடுவன,

1. இறைவன் அட்டமூர்த்தமாய் இருப்பவன்,
2. கலை உருவினன்
3. உலகத்தைப் படைத்து விளையாடுபவன்.
4. பின் அழித்துத் துன்பத்தைப் போக்குவன்,
5. தன்னை விட்டுப் பிரிந்து வேறாய் நிற்கும் பொருள் எதுவும் இல்லாத நிலைமை உடையவன்,

என்பன. இவையே சைவாகமங்களில் சிவனுக்குரிய தனிச்சிறப்பாகச் சொல்லப்படுவன.

வேதத்தில் சொல்லப்பட்ட ஈசானாதி பஞ்ச மந்திரங்களை முப்பத்தெட்டுக் கூறு செய்து, ஒவ்வொரு கூற்றையும் சிவனது ஒவ்வோர் உறுப்பில் நியாசம் பண்ணி, முப்பத்தெட்டுக் கலா

சொரூபமாக்கி வழிபடும் முறையைச் சைவாகமத்தைச் சார்ந்து எழுந்த சைவ பத்ததிகளில் காணலாம்'

துடைத்தல்-அழித்தல், அதை வெறும் அழித்தலாகக் கூறாமல், அது வாயிலாகத் துயர் துடைக்கப்படுதலை கூறியிருத்தல் உற்று நோக்கத்தக்கது.

## சைவ வகைகள்

'சைவம்' என்பதை இன்று நாம் ஒரே சமயமாகக் கூறிய போதிலும் மணிமேகலைக் காலத்தில் அது பாசுபதம், மாவிரதம், காளாமுகம், வைரவம் என இவை போன்ற பலவாகவும், அது அதற்கு வேறு வேறு ஆகமங்களும் இருந்தன. அந்த ஆகமங்களைப் பின்பற்றுபவர் யாவரும் அதனைச் சிவன் செய்தவையாகவே கூறினர். அதனால் அந்த நூல்களையும், அவற்றின் ஆசிரியர்களையும் மணிமேகலைக் காப்பியம் குறிப்பிடாமல், அந்தச் சைவர் அனைவர்க்கும் பொதுவான ஒரு சில தத்துவங்களையே குறிப்பிட்டுச் சென்றது.

## வைணவம்

அதே சமயத்தில் அக்காப்பியம் ''கடல்வணன் புராணம் ஓதினவன்'' என்று ஒரு வாதியைக் குறிப்பிடுகின்றது. அந்தப் புராணமாவது விட்டுணு புராணமேயாகும். அது பற்றி டாக்டர் உ.வே. சா. ஐயரவர்கள் அதை ஓதினவனை 'வைணவ வாதி' எனக் குறிப்புத் தந்திருக்கின்றார். எனவே 'மணிமேகலைக் காலத்தில் வைணவத்திற்கு மூலமாய் இருந்தது விட்டுணு புராணம்' என்றே தெரிய வருகின்றது. இது போலச் சைவ வாதியை அக்காப்பியம் 'சிவன் புராணம் ஓதினவன்' எனக் கூறாமையால், அக்காலத்திலே சைவத்திற்கு மூலமாகப் புராணம் அல்லாத வேறு நூல் இருந்தமை அறியப்படும். அவை ஆகமங்களே. அவற்றிற்கு 'தந்திரம்' என்பதும் பெயர்.

முதல் ஆழ்வார் மூவரில் பொய்கை ஆழ்வார் தமது அந்தாதியில் சங்கர நாராயணரது உருவத்தை விளக்கிய பாடல்.

*''அரசன், நாரணன் நாமம், ஆன்விடை, புள் ஊர்தி,*
*உரை நூல், மறை உறையும் கோயில் - வரை, நீர்,*
*கருமம் அழிப்பு, அளிப்பு, கையது வேல், நேமி*
*உருவம் எரி, கார், மேனி ஒன்று''*

(முதல் திருவந்தாதி - 5)

இதில் ''நூல்'' என்பது 'தந்திரம்' என்னும் வடசொற்கு நேரானதாகச் சொல்லப்பட்டது, எனவே அஃது ஆகமமாயிற்று. அதனால் 'சிவபிரானுக்குரிய சிறப்பு நூல் ஆகமம்' என்பது போந்தது. அவ்வெண்பாவிலே, 'நாரணனுக்கு நூல் மறை' என்று சொல்லப்பட்டது. அது வேதமே, வேதம் பல சமயத்தார்க்குப் பொது என்பது நன்கறியப்பட்டது. 'வைணவத்திற்கு விட்டுணு புராணம்' மூலமாக மணிமேகலை கூறியது வைணவம் தனியொரு சமயமாக மாறிய காலச் சூழ்நிலையாலாகும்.

## திருமந்திரம்

இவைகளாலும், சைவாகமங்கள் தேவார காலத்திற்கு முன்பே தமிழ்ப் பெருமக்களுக்கு நன்கு தெரிந்திருந்தமை விளங்கும். அதனால் தமிழ் மக்களில் அறிஞருலகத்திற்கு ஒருவாறு தெரிந்திருந்த ஆகமங்களை அவர்கள் அனைவரும் முழுதுமாக எளிதில் தெரிந்து கொள்ளுதற்கு அவற்றைத் தமிழில் செய்தருளினார் திருமூலர்.

## தேவார திருவாசகக் கால நிலைகள்

திருவாசகம் தோன்றிய காலத்தில் தமிழகத்தில் சூழ்நிலை வேறு; தேவாரம் தோன்றிய காலத்தில் இருந்து சூழ்நிலை வேறு. அவையாவன, திருவாசக காலத்தில் தமிழகத்தில் சைவம் சமண பௌத்த மதங்களால் தாக்குண்ணாது சிறப்புற்று விளங்கும் நிலையிலே யிருந்தது. அது திருவாசகத்தில் கீர்த்தித் திருவகவலிலே மிகப் பழமையான சிவ தலங்களை அவற்றில் சிவன் செய்த அருள் திருவிளையாடல்களோடு குறிப்பிடப்படுவதனால் விளங்கும். ''தென்னவன், சேரலன், சோழன் சீர்ப்புயங்கன் வரக் கூவாய்'' (குயிற் பத்து - 7) என மூவேந்தர் பெயர் இடம் பெற்ற திருவாசகத்தில் பல்லவரைப் பற்றிய குறிப்பு ஓரிடத்திலும் காணப்படவில்லை. குற்றமான செய்கையையே செய்து சிவபெருமானது திருவருளுக்கு உரியவராயின சண்டேசர், கண்ணப்பர் என்னும் நாயன்மார்கள் இருவரும் இடம் பெற்ற திருவாசகத்தில் சிவனைக் கல்லால் எறிந்து அவனருளைப் பெற்ற சாக்கிய நாயனார் இடம் பெறவில்லை. இன்னும் பல்லவ மன்னராய் நாயன்மார்களாகிய சிறப்பைப் பெற்ற கழற்சிங்கர், ஐயடிகள் காடவர்கோன் ஆகியோரைப் பற்றியும் திருவாசகத்தில் ஒன்றும் காணப்படவில்லை. தேவார ஆசிரியர்களைப் பற்றிய குறிப்பும் அத்தகையதே. மற்றும் முருகனைப் பற்றிக் குறிக்கும் திருவாசகம் விநாயகரை எந்த வகையிலும்

சுட்டவேயில்லை. இவையெல்லாம் திருவாசகத்தினது காலப் பழமையைக் காட்டும்.

தேவார காலத்தில் சைவம் மட்டுமன்று 'வைதிகசமயங்கள் எனப்படுவன எல்லாமே சமண சமயத்தின் ஆதிக்கத்தால் அடங்கி ஒடுங்கும் நிலை ஏற்பட்டது. அதனால் வேத நெறியை வலியுறுத்தி, வைதிகத்தை வாழ வைக்க வேண்டிய நிலை அக்காலத்தில் முதலாவதாக ஆயிற்று. அதற்குப் பத்தி நெறியே சிறப்பாக வேண்டப்படது. அதனால் தத்துவ வகையில் சிறப்புற்றிருந்த சைவாகமங்களைப் பற்றிய குறிப்புத் தேவாரத் திருமுறைகளில் மிகுதியாக இடம் பெறவில்லை.

## தமிழர் சமயம்

'தமிழரது சமயம் சைவ சமயமே' என்பது மொகஞ்சதாரோ, அரப்பா முதலிய இடங்களில் செய்யப்பட்ட அகழ்வாராய்ச்சிகளால் தெளிவுற விளங்குதலால் சைவ நூல்களாகிய சிவாகமங்கள் காசுமீர நாட்டில், வடமொழியில் தோன்றின என்றாலும் அவற்றைப் போற்றினவர் பழந்தமிழ்க் குடியினரேயாவர். சிவாகமங்களும் சொல்லால் வடமொழியாயினும், பொருளால் தமிழ் மொழியேயாம். ஆகவே, சைவாகமங்களைக் கி.பி. 10ஆம் நூற்றாண்டு முதலாகத் தமிழ்நாட்டில் சிறப்புற்று விளங்கச் செய்த சிவாசாரியர்களும் தமிழ் மரபினரே. அவர்கள் தங்கட்கு முன் இருந்த சமயாசாரியர்களைப் புறக்கணியாது அவர்களையும், அவர்களது பாடல்களையும் போற்றினமை குறிப்பிடத்தக்கது.

அத்தகைய சிவாசாரியர்களில் ஒருவரே சந்தானசாரியர்களில் ஒருவராகிய அருணந்தி சிவாசாரியர்.

## சந்தானசாரியர்கள் செயல்

தங்கள் சாத்திரங்களில் தத்துவங்களைச் சைவாகமங்களின் வழியே விளக்குகின்ற அருணந்தி தேவரும், உமாபதி தேவரும் தங்கள் நூல்களில் சமயாசாரியர்களைச் சிறந்ததெடுத்துப் போற்றுதல் தெளிவு.

மெய்கண்ட தேவரும் சிவஞான போத இறுதிச் சூத்திரத்தில் ''பத்தரது திருவேடத்தையும் சிவாலயத்தையும் பரமேசுரனெனக் கண்டு வழிபடுதலே சீவன் முத்தரது செயல்'' என இலக்கணம் கூறியது சமயாசாரியர்களை இலக்கியமாகக் கொண்டேயாகும்.

ஆகவே, தொடக்கத்தில் 'மரபு சைவம்' என்றும், பின்பு 'ஆகம சைவம்' என்றும் அதன் பின்பு 'திருமுறைச் சைவம்' என்றும் இருந்து

வந்த சைவங்களையெல்லாம் ஒருங்கிணைத்து, 'சித்தாந்த சைவமாக' வடிவமைத்துத் தமிழகத்தில் வளரச் செய்தவர்கள் சந்தானாசாரியர்கள். அவர்கள் வழியில் விளங்குவன சைவ ஆதீனங்கள். என்றாலும், தமிழ்நாட்டில் சைவ சபைகள் பல சைவ சித்தாந்தத்தைப் பல வகைகளில் வளர்த்து வருகின்றன.

## முடிவுரை

அவற்றிற்கெல்லாம் தலையாயதும், பொதுவானதும், பழமை யானதுமாய் உள்ளது இச் சைவ சித்தாந்தப் பெருமன்றம், இதினின்றும் திருமுறை சாத்திரநூல் வெளியீடுகள் பல நல்ல முறையில் வெளிவந்து, மக்கட்கு எளிய விலையில் கிடைத்துப் பயன் அளித்தன. 'சித்தாந்தம்' என்னும் திங்களிதழ் நெடுங்காலமாக இம்மன்றத்தின் சார்பில் வெளிவருதல் பலரும் அறிந்தது. சிலாண்டுகளாக, 'சைவ சித்தாந்தா' என்னும் ஆங்கில முத்திங்களிதழ் வெளிவருகின்றது.

இம்மன்றத்தின் ஆண்டு விழாக்கள் தமிழகத்தில் பல இடங்களில் ஆங்காங்குள்ளவர்களால் மிகப் பெருஞ்செலவில் அவ்வப்பொழுது சிறப்புற நிகழ்த்தப் பெற்றன. கடற் கடந்த இலங்கையிலும் நிகழ்த்தப் பெற்றது. இவற்றில் மிகச் சிறப்புப் பெற்ற பேரறிஞர் பலர் சிறந்த பலவிரிவுகளை அவ்வப்பொழுது ஆற்றியுள்ளனர்.

இம்மன்றம் 80 ஆண்டு முற்றுப்பெற்று, முத்து விழாக் காண்பர் சைவ மக்கள் அனைவர்க்கும் பெருமகிழ்ச்சியைத் தருவதாகும். இம் மகிழ்ச்சியோடு கூடிய இவ்விழாவில் சித்தாந்த சைவத்தை மேலும் பல வகையில் நன்கு போற்றி வளர்க்கத் திருவருளை முன்னிட்டு உறுதி கொள்வோமாக எனக் கூறி, அனைவர்க்கும் எனது உளமார்ந்த நன்றியை மீண்டும் தெரிவித்து முடித்துக் கொள்கின்றேன்.

நன்றி ! வணக்கம்!

# திரு. பெ. திருஞானசம்பந்தம் பிள்ளை

(81ஆம் ஆண்டு விழா - 1987 - இரத்தினகிரி - சைவர் மாநாடு)

*உலகெலா முணர்ந்தோதற் கரியவன்*
*நிலவுலாவிய நீர்மலி வேணியன்*
*அலகில் சோதியன் அம்பத்தாடுவான்*
*மலர் சிலம்படி வாழ்த்தி வணங்குவாம்*

அருட்டிரு பாலமுருகனடிமை சுவாமிகள் அவர்களே! அடியார்களே! சிவநேயச் செல்வர்களே! செல்வியர்களே! உங்கள் அனைவர்க்கும் எனது உளமார்ந்த வணக்கத்தினைப் பணிவன்புடன் தெரிவித்துக் கொள்கின்றேன். சைவசித்தாந்தப் பெருமன்ற ஆண்டுவிழாக்களில் இதுகாறும் அறிவு சான்ற பெரு மக்கள் பலர் தலைமைப் பேருரை ஆற்றியிருக்கும் நிலையில் பெருமன்றத்தார் இவ்வாண்டு தலைமையுரை ஆற்ற வேண்டும் என்று அடியேனைக் கேட்டபோது அஞ்சினேன். பெருமன்றத்தாரின் அன்புக் கட்டளையைத் தவிர்க்க முடியாத காரணத்தால் இசைந்தேன். பெருமன்றத்தாரின் பேரன்பிற்கு எனது உளமார்ந்த நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

## சைவத்தின் வரலாறு

உலகிலுள்ள பல சமயங்கள் எப்போது தோன்றின எவரால் தோற்றுவிக்கப்பட்டன என்ற வரலாறுகள் உண்டு. சைவ சமயத்தின் தோற்றம் வரையறுத்துக் கூற இயலாத தொன்மை உடையது. இறைவனால் அருளப்பட்டது இச்சமயம் என்பதால் இதற்குக் கால எல்லை இல்லை என்றாகிறது. முதல் தமிழலக்கியமாகிற தொல்காப்பியத்திலேயே உயிர், மெய், கந்தழி முதலான தத்துவக்கருத்துக்கள் பேசப்படுவதாலும் இதன் தொன்மை புலனாகும். தமிழ்ச் சங்க இலக்கியத்தில் 'ஆலமலர் செல்வன்', 'பிற வாயாக்கைப் பெரியோன்', 'நீலமணிமிடற்றோன்', 'திரிபுரம் எரித்த விரிசடைக் கடவுள்' என்ற பெயர்களால் சிவபெருமான் தொடக்கத்திலேயே குறிப்பிடப்பட்டுள்ளது. இந்தோசீன நாட்டில் சிவலிங்க வழிபாடு இருந்ததாக வரலாற்றாசிரியர் நீலகண்ட சாஸ்திரி South India and Southeast Asia என்ற தமது நூலில் குறிப்பிடுகிறார். ஏழாம்

நூற்றாண்டு கம்போடியா கல்வெட்டு ஒன்று மாந்தரின் மனமொழி மெய்களுக்கெட்டாது யோகியரால் உணரப்படும் சிவபதத்தைக் குறிப்பிடுகிறது. மூவருக்கும் முதல்வனான சிவபெருமான் திருவடி ஒளிக்கதிரினின்றும் 'சம்பா' நகரம் தோன்றியதாக மற்றொரு கல்வெட்டு கூறுகிறது. ஜாவாவில் சைவசித்தாந்தம்,பாசுபதம், பைரவம் முதலான சைவநெறிகள் பின்பற்றப்பட்டு வந்தன. தாய்லாந்தில் திருவெம்பாவை திருப்பாவை விழா அரசு நிகழ்ச்சிகளில் இன்றும் அனுட்டிக்கப்படுவதாகச் சொல்லப்படுகிறது. ஞானசம்பந்தர் தேவாரமும் மன்னன் முடிசூட்டு விழாவில் பாடப்படுகிறது. மேற்கண்ட குறிப்புக்களிலிருந்து சைவம் காலதேசங்களைக் கடந்து நிலவி வருகிறது என்பதை அறிய முடிகிறது.

## இந்தியாவில் சைவம்

ஆரியர்கள் இந்தியாவிற்கு வருமுன்னரே பெருவாரியாகப் பண்டைத் திராவிட மொழிபேசும் மக்களும் சிறுபான்மை ஆரிய மல்லாத பிறமொழி பேசும் மக்களும் இந்தியா முழுவதிலும் வசித்து வந்தார்கள் என்று இன்றைய மேனாட்டு மொழி நூல் ஆய்வாளர்கள் கூறியிருக்கிறார்கள். இதன் விளைவாக ஆரியரின் மொழி, சமயக் கோட்பாடுகள், மரபுகள், பழக்க வழக்கங்கள் ஆகியவை பண்டைக் காலந்தொட்டு மாறி வந்துள்ளன. சைவ சமயம் குமரி முதல் காச்மீரம், நேபாளம் வரை பரவியிருந்திருக்கிறது. கால தேச சூழ்நிலை களுக்கேற்பச் சைவ நெறி முறைகளும் கோட்பாடுகளும் மாறி வந்திருக்கின்றன. தென்னாட்டுச் சைவத்தைப் போலவே காச்மீரத்திலும் எட்டாம் நூற்றாண்டு வரை முப்பொருள் உண்மை ஏற்றுக் கொள்ளப்பட்டிருந்தது. தமிழகத்தில் 7ஆம் நூற்றாண்டில் ஞானசம்பந்தப் பெருமான் பெருமுயற்சியால் பௌத்தம் நலிவுற்றது, சைவம் புத்தொளி பெற்றது. 9ஆம் நூற்றாண்டில் ஆதிசங்கரரின் பிரசாரத்தால் இந்திய நாட்டில் பௌத்தம் மேலும் நலிவுற்றது. அதுவரை தென்னாட்டுச் சைவம் போன்றே இருந்த காச்மீரு சைவம் சங்கரரின் அத்வைத பிரசாரத்தால் அத்வைத சைவமாக மாற்றம் பெற்றது. ஸ்வச்சந்தம் மதங்கம் முதலான ஆகமங்களுக்கு அத்வைத நெறியில் உரைகள் எழுந்தன என்பதைப் பின்னர் வந்த க்ஷேமராஜரே தெளிவாகச் சொல்கிறார்.

## சைவ சித்தாந்தத்திற்குப் பிரமாண நூல்கள் யாவை ?

'வேத மோடாகமம் மெய்யாம் இறைவன் நூல்' என்றார் திருமூலர். பின்னர் வந்த அருள்நந்தி தேவரும் 'அருமறை யாகமம் முதனூல்'

என்றார். அவர்க்குப்பின் வந்த உமாபதி சிவம், 'வேதாந்தத் தெளிவாம் சைவசித்தாந்தத் திறன் இங்குத் தெரிக்கலுற்றாம்' என்றார். சிவபெருமானின் திருவருளுக்குப் பாத்திரர்களான திருமுறை ஆசிரியர்களின் நூல்களும் பிரமாணமாகக் கொள்ளத்தக்கன. ஆகவே சைவசித்தாந்தத்திற்குப் பிரமாணமாகக் கொள்ளத்தக்க நூல்கள் நால் வேதங்களும், இருபத்தெட்டு சிவாகமங்களும், பன்னிரு திருமுறைகளும் பதினான்கு தமிழ்ச் சித்தாந்த சாத்திரங்களுமாம் என்பது புலனாகின்றது.

வேதங்களும் சிவாகமங்களும் சிவபெருமானால் அருளப்பட்ட காரணத்தால் பிரமாண நூல்களாகின்றன. ஞானசம்பந்தப் பெருமான் 'தொகுத்தவன் அருமறை அங்கம் ஆகமம் வகுத்தவன்' (3.23.6) என்றும், அப்பர் பெருமான் 'நாலு வேதம் சரித்தது நன்னெறி நாலு... (5.89.4) என்றும் கூறியுள்ளதைக் காண்க. 'நன்னெறி நாலு' என்பது சரியை கிரியை யோகம் ஞானம் என்ற நான்கையும் விரிக்கும் ஆகமங்களைக் குறிக்கும். பிரம்ம சூத்திரத்திற்கு உரை வகுத்த ஸ்ரீகண்டர் வேதம் ஆகமம் இரண்டையும் அருளியவன் சிவபெருமான் ஆதலால் இரண்டிற்குமிடையே யாம் வேறுபாட்டைக் காணவில்லை என்கிறார்.

இவை இரண்டுமே பிரமாண நூல்கள் எனினும் வீரசைவர்களும் காச்மீரத்து அத்வைத சைவர்களும் வேதாகமங்களைப் பிரமாணமாகக் கொண்டிருப்பதால் சைவ சித்தாந்திகளைப் பொறுத்தவரையில் வேதாகமப் பகுதிகள் எந்த அளவிற்கு மெய் கண்ட சாத்திரங்களுக்கு அரண் செய்கின்றனவோ அந்த அளவிற்கே அவை கொள்ளத் தக்கன என்பதைக் கருத்தில் கொள்ளுதல் வேண்டும். ஆதலால்தான் அருள் நந்திசிவம் பொது நூலாகிற வேதம் உலகத்தவர்க்கும் சிறப்பு நூலாகிற சிவாகமம் சத்தி நிபாதர்க்கும் என பிரித்துக் காட்டி, சிவாகமம் வேத முடிபாகிய உபநிடதத்தின் சாரமான குற்றமற்ற பொருள்களைக் கொண்டது என்று அறுதியிட்டுக் கூறுகின்றார். இதையே 'சித்தாந்தத்திற்கு விரோதமில்லாத வேதாந்தப் பொருள்' என்பார் ஞானப் பிரகாசர். காமிகாகமமும் 'வைதிகம் சர்வ சங்கிராஹ்யம் சைவ வாக்யாவிரோதியத்' என்று இதே கருத்தை வலியுறுத்துகிறது. 'வேதாந்தத் தெளிவாம் சைவ சித்தாந்தத் திறன்' என்ற உமாபதி சிவத்தின் வாக்கும் நினைவில் கொள்ளத்தக்கது.

வேதங்களை அருளியவன் சிவபெருமான் என்றால் அத்வைதிகள், விசிஷ்டாத்வைதிகள் போன்றோர் போற்றும் பகுதிகள் வேதங்களில் எங்ஙனம் இடம் பெற்றுள்ளன என்ற வினா எழுவது இயல்பு. இதற்கு

சைவ சித்தாந்த பரிபாஷை என்ற நூலின் ஆசிரியர் சூரிய சிவாசாரியார் விடை காண முற்படுகிறார். 'வேதத்தில் கூறப்படும் காமிய கர்மாக்களையும், பஞ்சாக்னி மந்திரத்திற்கு மாறுபட்ட முறையில் வேதத்தில் விதிக்கப்பட்ட உபாசனா முறைகளும் சித்தாந்தத்திற்கு ஒவ்வாத சீவாத்மா பரமாத்மா ஐக்யத்தைக் கூறும் பகுதிகளும் பிரமாணமாகமாட்டா, அவையெல்லாம் பக்குவமடையாத ஆன்மாக்கள் பொருட்டு அவர்கள் அடைந்துள்ள படி நிலைகளுக் கேற்பச் சிவபெருமானால் அருள் கூர்ந்து அருளப் பெற்றவை. அவர்கள் சோபான முறையில் இப்படி நிலைகளைக் கடந்து இறுதியில் வேதாந்தம் என்னும் கிளையின் உச்சியிற் பழுத்த சைவ சித்தாந்தம் என்னும் கனியைச் சுவைக்கும் பேற்றினைப்பெற இருப்பவர்கள். அவர்கள் பொருட்டு அருளப்பட்டவையே மேலே கூறப்பட்ட சித்தாந்தத்திற்கு ஒவ்வாத வேதப்பகுதிகள் என்று அமைதி காண்கிறார்.

## இன்றைய சைவம்

தமிழகத்தில் இன்று சைவ சித்தாந்தம் எந்த அளவில் பயிலப்படுகிறது என்பது சிந்திக்கத்தக்கதாகும். மதுரை காமராசர் பல்கலைக் கழகத்திலும் காஞ்சியில் அமைந்துள்ள தஞ்சைத் தமிழ்ப் பல்கலைக்கழக சமய மையத்திலும் சென்னைப் பல்கலைக் கழகத்திலும் சைவ சித்தாந்தத் துறைகள் அமையப் பெற்றுள்ளன. திருவாடுதுறை, தருமபுரம், திருப்பனந்தாள் ஆகிய இடங்களில் உள்ள சைவத் திருமடங்கள் சைவ வளர்ச்சிக்குப் பெரிதும் தொண்டாற்றி வருகின்றன. அவ்வப்போது சமயச் சொற்பொழிவுகளுக்கு ஏற்பாடு செய்வதோடு மெய்கண்டார், ஞானசம்பந்தம், குமர குருபரர் ஆகிய திங்கள் இதழ்களை வெளியிட்டு வருகின்றன. தருமையாதீனத்தில் நிறுவப்பெற்றுள்ள அனைத்துலகச் சைவ சித்தாந்த ஆராய்ச்சி நிறுவனம் இதழ்வழிச் சைவ சமயக் கல்வியைப் போதித்து வருகிறது. திருவாவடுதுறையில் அஞ்சல் வழி சைவ சமயக் கல்வி பயில்விக்கப்படுகிறது. தருமை அனைத்துலுகச் சைவ சித்தாந்த ஆராய்ச்சி நிறுவனம் உலகாளவிய முதற் கருத்தரங்கை 1984ஆம் ஆண்டு தருமையிலும் 1986ஆம் ஆண்டு கோலாலம்பூரிலும் நடத்திற்று. கோலாலம்பூர் சைவ பூஷணம் கந்தையா அவர்கள் ஒரு லட்ச ரூபாய் மூலதனத்தை சென்னை சைவ சித்தாந்தப் பெருமன்றத்தில் ஒப்படைத்து நூல்களை வெளியிடுவதற்காக ஓர் அறக்கட்டளை நிறுவியிருக்கிறார்கள். சென்னை சைவ சித்தாந்தப் பெருமன்றம் வாரந்தோறும் தோத்திர சாத்திர வகுப்புகளை

நடத்துவதோடு 'சித்தாந்தம்' என்ற திங்கள் இதழைத் தமிழிலும், 'சைவ சித்தாந்தா' என்ற முத்திங்கள் இதழை ஆங்கிலத்திலும் பல்லாண்டுகளாகத் தொடர்ந்து வெளியிட்டு வருகிறது. சைவ சித்தாந்தத்திற்கென உலகில் அமைந்த ஒரே ஆங்கில இதழைக் கடந்த இருபதாண்டுகளுக்கு மேலாக வெளியிட்டுவரும் சிறப்பு சைவ சித்தாந்தப் பெருமன்றத்திற்கு உரியது. தூத்துக்குடி சைவ சித்தாந்த சபை போன்ற வேறு சில அமைப்புகளும் சைவ சித்தாந்தத்தைப் பரப்பும் துறையில் பணியாற்றி வருவது பாராட்டுக்குரியது. எனினும் தமிழகத்திலேயே மிகப் பெரும்பான்மையான மக்கள் இன்னும் சைவ சமயக் கோட்பாடுகள், மூலநூல்கள், அடியார் வரலாறுகள் முதலானவற்றை அறியாதிருக்கின்றனர். அவர்கள் விரும்பிப் படித்துப் புரிந்து கொள்ளும் வகையில் எளிய நூல்கள் வெளிவரல் வேண்டும். பாமர மக்களும் புரிந்து கொள்கிற வகையில் இன்று சைவத்தைப் பற்றிப் பேசி வருகின்ற வாரியார் சுவாமிகளுக்கு சைவ உலகம் பெரிதும் கடமைப்பட்டிருக்கிறது. அவர்களுக்கு வாரிசுகளாகப் பலர் உருவாக வேண்டுமென இறைவன் திருவருளை வேண்டுகிறேன்.

இன்று சைவம் ஓரளவு தமிழ்க் குடும்பங்களில் பின்பற்றப்பட்டு வருகிறதென்றால் அதற்குக் காரணம் 'நீதி மனையறம் புரியும் நீர்மையினை உடையராய், மனையறத்தின் வேராக' விளங்குவோராய் உள்ள இல்லத்தரசியாரின் நல்லறமேயாகும். இந்தப் பொறுப்பை அவர்கள் தொடர்ந்து ஏற்று இளந்தலை முறையினரை உருவாக்குமாறு கேட்டுக் கொள்கிறேன்.

சமய அறிவை இளம் வயதிலேயே பள்ளிகளில் ஊட்ட வகை செய்தல் வேண்டும். அறவழியில் நிற்கும் சமுதாயம் உருவாக வேண்டுமானால் இதைச் செய்தாக வேண்டும். இன்று சமுதாயத்தில் ஒழுக்கம் குன்றியிருப்பதற்குக் காரணம் இளம் வயதில் சிறார்களுக்குச் சமயக் கல்வியை ஊட்டத் தவறியதே. பள்ளி மாணவர்களுக்கு, நீதிநூல்கள், திருமுறைகள் முதலான சமய நூல்கள் இவற்றை யொட்டிய கட்டுரைப் போட்கள், பேச்சுப் போட்டிகள், ஒப்பித்தல் போட்டிகள் முதலியவற்றிற்கு ஏற்பாடு செய்யலாம். சமய நிறுவனங்கள் இவற்றிற்கென அறக்கட்டளைகள் நிறுவுதல் நலம் பயக்கும். சைவ வரலாறுகள், சமய தத்துவங்கள் ஆகியவற்றை விளக்கும் எளிய மலிவான நூல்கள் பொதுமக்கள் வாங்கிப் படிக்கும் வகையில் வெளியிடப்படுதல் வேண்டும். பெரும் சமய அமைப்புகள் அஞ்சல் வழி சமய போதனையை மேற்கொள்ளலாம். இவைபோன்ற பல வழிகளையும் மேற்கொண்டால் மக்கள் அகவாழ்வு, ஒழுங்கும்

கட்டுப்பாடும் புனிதமும் கொண்டதாக மலரும் என்று கூறி அமைகிறேன்.

*உருவாய் அருவாய் உளதாய் இலதாய்*
*மருவாய் மலராய் மணியாய் ஒளியாய்க்*
*கருவாய் உயிராய்க் கதியாய் விதியாய்க்*
*குருவாய் வருவாய் அருள்வாய் குகனே.*

## கயிலைக் குருமணி தவத்திரு

# சாந்தலிங்க இராமசாமியடிகளார்

(83ஆம் ஆண்டு விழா - பேரூராதீனம், பேரூர்)

*''உலகெ லாமுணர்ந் தோதற் கரியவன்*
*நிலவு லாவிய நீர்மலி வேணியன்*
*அலகில் சோதியன் அம்பலத் தாடுவான்*
*மலர் சிலம்படி வாழ்த்தி வணங்குவாம்''*

சிவநெறி சார்ந்த செம்மனச் செல்வர்களே! தாய்மார்களே!

தமிழகத்தின் தொன்மைநெறி சிவநெறி. முன்னைப்பழம் பொருட்கும் முன்னைப் பழம்பொருளாய், பின்னைப் புதுமைக்குப் பேர்த்தும் அப்பெற்றியதாய் விளங்குவது முழுமுதல் சிவம். சிவநெறியில் பற்றுடைய சான்றோர்கள் பலர் சேர்ந்து ஆய்ந்து, சைவ சித்தாந்தப் பெருமன்றத்தைப் பல ஆண்டுகட்கு முன்பு தொடங்கி வழிகாட்டியுள்ளனர். இப்பெருமன்றத்தின் மாநாடு செந்தமிழ்க் கொங்கின் நடுவாக விளங்குகின்ற வெள்ளக்கோயிலில் நடைபெறுகிறது. கொங்குச் சமுதாயத்தின் பல்வேறு குடிமக்கள் நாற்றிசையும் பரவிச் சென்று வாழ்ந்தாலும் அவர்களது குலதெய்வ வழிபாட்டுக் கோயில்களும் அவற்றிற்குரிய உரிமைக் கூறுகளும் இந்தப் பகுதியில்தான் மிகுதியாக உள்ளன. மேலும் கொங்குக் குடிமக்கள் தங்கள் குலதெய்வ வழிபாட்டில் ஒரு சிவன் கோயிலை முதன்மையாகக் கொண்டு அக்கோயில் அருச்சகராய் விளங்குகின்ற சிவாச்சாரியாரைத் தம் குல குருவாகவும் ஏற்றுக் குருக்கள் என வழங்குவது இன்றும் மரபாக இருந்து வருகிறது. எனவே சிவநெறியை முறையாகப் பேணி வாழ்ந்த குடும்பங்கள் கொங்குக் குடும்பங்கள் என்று கருதுவதற்கு வாய்ப்புக்கள் உள்ளன. இங்கு இம்மாநாடு நடப்பது பழமையைப் புதுப்பிக்கும் முயற்சிக்கு உறுதுணை புரியும் என எண்ணுகிறோம்.

சிவம் என்பது பலபொருள் ஒரு சொல். இது சுத்தம், மங்கலம், தூய்மை எனப்பல பொருளைத் தன்னகத்தே கொண்டு திகழ்கிறது. சிவம் நிலைபேறுடையது போக்குவரவு அற்றது. எங்கும் நீக்கமற நிற்பது. எல்லாவற்றிலும் கலந்தும் கடந்தும் இருப்பது. எனினும் தன்னியல்பில் திரியாதது. சித்தத்தைத் தன்பால் வைத்தவர்கள் உள்ளத்தில் ஒளிர்வது. ஆதலின் 'சிவனோடு ஒக்கும் தெய்வம் தேடினும் இல்லை' என்னும் கொள்கையுடைய திருமூலர்

*''சிவசிவ என்கிலர் தீவினையாளர்*
*சிவசிவ என்றிடத் தீவினைமாளுஞ்*
*சிவசிவ என்றிடத் தேவருமாவர்*
*சிவசிவ என்னச் சிவகதிதானே''*

என்று அருளினார். அருளியதுடன் அன்புநெறியே சிவநெறி; அன்பே சிவமாய் அமர்ந்திருந்தானே என்று கூறி, தெளிந்த அறிவினர் சிவத்தை உணரும் செம்மை நெறியைப் பேணுவர் என்றும் கூறியுள்ளார்.

மொழிகளெல்லாவற்றினும் சிறந்தது தமிழ்மொழி. அது தெய்வத் தன்மை வாய்ந்தது; தெய்வம் விளங்குதற்கிடமாயிருப்பது. தெய்வத்தால் வளர்க்கப்பட்டது; தெய்வத்தைக் காட்டித்தர வல்லது. இது பற்றியே ''ஞாலமளந்த மேன்மைத் தெய்வத்தமிழ்'' என்று சேக்கிழார் சுவாமிகள் பாராட்டியருளினார். இத்தகைய சிறப்புக்களைப் பெற்றத் தமிழை ஏனைய மொழிகளோடு ஒப்பவைத்து எண்ணுதலும் தவறு என்பது பல பெரியோரது கொள்கை. நமது தாய்மொழியாகிய இத்தகைய தமிழைத் தமிழர்களாகிய நாம் காப்பாற்றாது வருகின்றோம். நமது அரசாங்கமும் செயலளவில் முழுமையாக்காமல் இருக்கிறது. தமிழ்ச் சமுதாயம் சும்மா இருப்பது மட்டுமா? பல வகையிலும் தமிழை அலங்கோலம் செய்து ஒடுங்கச்செய்தற்குரிய முயற்சிகளையும் தீவிரமாகச் செய்து வருகிறது. தாய்மொழி தன்னாட்டிலேயே இவ்வாறு தலைகவிழ்ந்து தவித்துநிற்கும் நிலையும், ஒண்டவந்த மொழிகள் ஓங்கி வளரும் நிலையும், வேறெந்த நாட்டினும் வேறெந்த மொழி வரலாற்றினும் நிகழாதது. இமயமலை உச்சியிற் புலிக்கொடி பொறித்துக் குமரிவரை தன்னுடைய நாடாக வாழ்ந்த தமிழுக்கு இப்போது ஒரு நாடும் தன்னுடையதென்று இல்லாத நிலை வந்ததனைத்தமிழர் என்று சொல்லிக் கொள்ளும் நாமும் பார்த்துக் கொண்டு தானிருக்கிறோம். தமிழைப் போல சிறந்த மொழி எந்நாளினும் எந்நாட்டினுமில்லை. அதனைப்போல் இந்நாளில் தன்னாட்டினுள்ளும் தாழ்ந்து நிற்கும் மொழியும் இல்லை என்று

சொல்ல என் மனம் வருந்துகின்றது. சைவத்தைப் போற்றி வளர்ப்பது நமக்கு மிகப் பெரிய கடமை. அதனினும் பெரிய கடமை சைவத் தமிழைப் போற்றி வளர்ப்பது என்பதனை நாம் உணர்தல் வேண்டும்.

சைவசித்தாந்தத்தில் சொல்லப்படும் உண்மையைத் தமிழ்மொழி எழுத்துக்களின் அமைப்பிலும் காணலாம். அகரமாகிய தனியுயிர் சிவமாக, ஏனைய உயிர்கள் சிவத்தின் வழிநின்று ஐந்தொழில் இயற்றும் கடவுளர்களாக, மெய்யெழுத்து அறிவில் பொருளாக, ஆய்தம் மெய்யின் நுட்பமாகிய நுண்ணுடலாகக் கொள்ளலாம். இதனை

*''அகரஉயிர் போல் அறிவாகி எங்கும்*
*நிகரில் இறைநிற்கும் நிறைந்து''*

என்னும் திருவருட்பயன் பாடலுடன் இயைபுபடுத்தலாம்.

நச்சினார்க்கினியர் தொல்காப்பிய நுன்மரபில், 'ஔகார இறுவாய்ப், பன்னீரெழுத்தும் மொழிப' என்னும் நூற்பா உரையுள் அகர உயிர் பற்றிக் கூறும்போது ''மெய் பதினெட்டினையும் இயக்கித் தான் அருவாய் வடிவின்றி நிற்றலான் உயிராயிற்று, இவை மெய்க்கு உயிராய் நின்று மெய்களை இயக்குமேல் உயிரென வேறோர் எழுத்தின்றார் பிறவெனின் மெய்யின் நிற்கும் உயிரும், தனியே நிற்கும் உயிரும் வேறென உணர்க' என்பனவாகிய செய்திகளைக் கூறுகிறார். இவை சைவ சித்தாந்தத்திற் கூறப்படும் உயிர், மெய் என்பனவாகிய பொருள்களைப் பற்றிய செய்திகளுடன் இயைந்து நிற்றலை அறியலாம். இதனால் தொன்மையாகிய தமிழும் சைவசித்தாந்தத்துடன் தொடர்புடையதாக உள்ளது என உணரலாம்.

கொங்கு நாட்டின் சமயச் செந்நெறிக்கு வழிகாட்டி, மேலச் சிதம்பரமாம் மிக்க புகழ்ப் பேரூரில் சீலத்தர் போற்றத் திருமடம் செய்து, தங்கி தவமியற்றியவர் எமது ஆதிகுரு முதல்வர் சாந்தலிங்க அடிகளார். அவர் தேறும் நிமித்தம் திருத்தொண்டு செய்யும் அடியவர் கூட்டத்தையும் திருமடத்தில் உருவாக்கி அருள் புரிந்தவர்.

சாந்தலிங்க அடிகளார் அருளிய நூல்கள் கொலை மறுத்தல், வைராக்கிய சதகம், வைராக்கிய தீபம், அவிரோத உந்தியார் என்பனவாகும். கொலை மறுத்தல் என்ற நூலில் சீவகாருண்யத்தைக் காட்டி அதனால் உள்ளந் தூய்மையாகும் என்பதைக் குறிப்பித்து, வைராக்கிய சதகம் வைராக்கியம் தீபம் என்ற இரு நூல்களாலும் ஈசுரபக்தியையும் பாசவைராக்கியத்தையும் விளக்குகிறது. ஈசுர பக்தியினால் இம்மை இன்பங்களில் உவர்ப்புண்டாகும்; சம முதலிய

யோக முயற்சிகளும் கைகூடும்; அவ்வுவர்ப்பம் சம முதலிய யோக முயற்சிகளும் வீடுபெற நிற்பவர்கள் மெய்ப் பொருள் கண்டின்புறுவதற்கு மிகச் சிறந்தனவாகக் கொள்ளத் தக்கனவாகும் என்று கூறியுள்ளார்.

அவிரோத உந்தியாரில் சமயத்தார் எல்லோரும் ஒப்ப விரோதமின்றி ஏற்குமாறு மெய்ப்பொருள் உணர்வு பற்றியும், மெய்ப்பொருள் பற்றியும், மெய்ப்பொருளையடைகின்ற ஆன்மாக்கள் பற்றியும், ஆன்மாக்கள் தடையற்று அடையும் வீடு பற்றியும் அவ்வான்மாக்கள் வீட்டையாமற்றடுக்கின்ற தளை பற்றியும், மெய்ப் பொருளுணர்வு பிறத்தற்குரிய வழிபற்றியும், அவ்வழி கைவருதற்குரிய கருவிகள் பற்றியும், மெய்ப் பொருளையுணர்ந்த மெய்ஞ்ஞானிகளினிலை பற்றியும் கூறியுள்ளார். இவை சைவசித்தாந்த மரபாகும். சித்தாந்த சைவ மரபு புறச்சந்தானத்துள் உமாபதி சிவாச்சாரியாருக்குப் பிறகு சைவச் சான்றோர்களாலும் துறவியர்களாலும் திருமடம் அமைத்து அபிடேக பரம்பரையில் போற்றிப் பாதுகாத்து வளர்க்கப்பட்டுப் பொது மக்களிடத்து உபதேச வாயிலாகவும், நூல்கள் வெளியிடுதல் வாயிலாகவும் பரப்பப்பட்டு வருகிறது. இதனால் மெய்கண்ட மரபு இடையறாமல் வளர்ந்து வருகிறது. இத்தகைய பணி மேலும் அழுத்தமாகவும் தீவிரமாகவும் செய்யப் பெறுதல் வேண்டும்.

இந்த வளர்ச்சியுடன் இணைந்தே நம் தமிழகத்தில் வீரசைவம் என்றொரு மரபும் தழைத்து வளர்ந்து வந்துள்ளது. எங்கள் திருமடம் வீரசைவத் திருமடம். எனினும் சித்தாந்த சைவத் திருமடத்தின் பரம்பரையிலிருந்து கிளைத்துத் தனியே வளர்ந்தது என்பது எங்கள் திருமடத்தின் முன்னை வரலாறு கூறுகிறது. எங்கள் திருமடத்தின் ஆதி குரு முதல்வராகிய அருண்மிகு சாந்தலிங்க அடிகளார் உயிருண்மையைப் பற்றிப் பேசுகின்ற பொழுது மெய்கண்டார் அருளிய சிவஞான போதத்தின் வழிநின்றே பேசுகின்றார். எங்கள் அடிகளார் உயிர்களைத் 'தொல்வீசர்' (உந்தி 38) என்றும் அவை தற்சுதந்திர மில்லாதன அவை ஒருகால் ஒருவாற்றால் தோன்றியன என்று கூறுவது தவறு என்றும் கூறுகிறார். மேலும் தேகம் நீயல்லை, வாயு நீயல்லை, இந்திரியங்கள் நீயல்லை, வாக்கு நீயல்லை, மனம் நீயல்லை, சித்தம் நீயல்லை எனப் படிப்படியே ஊனுயிர்ப் பின்னத்தை உணர்த்தி "மங்க உயிர்" என்று முடித்துக் காட்டுகின்றார். (உந்தி 52-58) மேலும் அஞ்ஞானம், (ஆணவம்) மாயை, கன்மம் என்னும் மூன்று பந்தங்களையும் உடன்பட்டுப் பேசுகிறார். இவற்றுள் ஆணவம் தனி ஒரு பொருள் என்றும், அன்றென்றும் உள்ள

கொள்கை வேறுபாடுகளையும் ஆராய்ந்துள்ளார். அத்துவிதம் என்பதற்கு ஒன்றென்று பொருள் செய்துவம் தவறு. இரண்டென்று பொருள் செய்வதும் தவறு என்று கண்டித்து உரைக்கின்றார்.

இவ்வகையில் எங்கள் அடிகளார் வழிபாட்டு நிலையில் இட்டலிங்க வழிபாட்டினை மேற்கொண்டிருந்தாலும் தத்துவ ஆராய்ச்சியில் சைவ சித்தாந்தத்தோடு பெரிதும் ஒத்துச் சென்று இறுதியில் மனோலய சாதகம் என்னும் நிட்டை நெறியை முத்தி சாதனமாக வகுத்துக்காட்டி முடிக்கின்றார். இக்கொள்கைகளெல்லாம் எங்கள் அடிகளார் அருளிய அவிரோத உந்தியார் என்னும் நூலில் பாடல்களின் போக்கில் காணப்படுவன.

சாந்தலிங்க அடிகளாரின் மரபில் வந்த திருப்போரூர்ச் சிதம்பர சுவாமிகளும் 'பஞ்சாதிகார விளக்கம்' என்னும் ஒரு சிறு நூலில் ஐந்தொழில பற்றியும் மிக அறிய விளக்கம் தந்துள்ளார்கள். நிறுவிய மடமும் வீரசைவ மடமாகும் என்று உணரத்தகும்.

மயிலம் பொம்மபுர ஆதீனம் சிவஞான பாலய சுவாமிகள் மடாலயத்துச் சீடரும் பெரும் புலவருமாகிய கற்பனைக் களஞ்சியம் துறைமங்கலம் சிவப்பிரகாச சுவாமிகளும் சைவசமய ஆச்சாரியர்களாகிய நால்வர்களைப் பற்றி, 'நால்வர் நாண்மணிமாலை' என்னும் பெயரில் அறிய இலக்கியம் ஒன்று படைத்துள்ளதை யாவரும் அறிவர்.

இவற்றையெல்லாம் நோக்குகின்றபொழுது வீரசைவம், சித்தாந்த சைவம் என்ற வேற்றுமை பாராட்டாமல் அனைவரும் ஒன்று சேர்ந்து சிவ வழிபாட்டு நெறியினையும், தத்துவ ஆராய்ச்சியறிவினையும் வளர்க்க வேண்டும் என்பது நமது கடமை என்பது புலப்படுகின்றது.

நமது சைவ சமயம் வழிபாட்டு நெறிக்குத்தான் முதலிடம் கொடுக்கின்றது. திருமுறைகளும், தோத்திர நூல்களும் வழிபாட்டின் மேன்மையினையும், அதனால் பெரும் பயனையும் சிறப்பித்துக் கூறுகின்றன.

## வழிபாட்டு நெறி

சிவனெனும் நாமம் தனக்கேயுரிய செம்மேனி அம்மானைப் பூவும் நீரும் இட்டு அனைவரும் வழிபடலாம். அதுவே, மிக எளிதாகப் பின்பற்றத்தக்க நெறி என்பதைத் திருமுறைகள் வலியுறுத்துகின்றன. திருமந்திரம் ''யாவர்க்கு மாம் இறைவற்கொரு பச்சிலை' என்று எல்லோரும் மேற்கொள்ளும் வழிபாட்டு முறையைக் கூறுகிறது.

''பூவொடு நீர் சுமந்தேத்திப் புகுவார் அவர் பின் புகுவேன்'' என அருளினார் அப்படிரடிகள். திருவையாற்றுத் திருத்தலத்தில் கயிலைக் காட்சியைக் கண்ட அப்பரடிகள் அத்திருக்கோயிலுக்குள் அடியார் திருக்கூட்டம் வழிபாட்டிற்குச் செல்லும் காட்சியை நமக்குக் காட்டி அவரோடு தாமும் ஒருவராகக் கலந்து கொண்ட நிலையை விளக்கும் இச்செய்தி, அன்றைய திருக்கோயில் வழிபாடு ஒவ்வொருவரும் கருவறை புகுந்து தாமே வழிபடும் நிலையில் இருந்தது என்பதை விளக்குகிறது. மேலும் அவர் இத்தகைய வழிபாட்டு நெறியில் தமக்கிருந்த ஈடுபாட்டினை, ''சலம்பூவொடு தூபம் மறந்தறியேன் தமிழோடு இசை பாடல் மறந்தறியேன்'' என்று விளக்கியுள்ளார். இதனால் அவர் திருநெறிய தமிழ் வழிபாட்டினையும் அகத்தும் புறத்தும் உருகி வழிபட்ட நிலையினையும் வெளிப்படுத்துகிறார். பண்டைய சிவவழிபாட்டு முறை அயல் வழக்குகளால் தமிழகத்தில் மாற்றப்பட்டதால்தான் பாடல் பெற்ற திருக்கோயில்கள் பல பத்தியால் உணர்வோர் பாடிப் பரவும் வாய்ப்புக்களை இழந்துள்ளன.

## ஆகம நெறி :

ஆகமங்களில் சிவபெருமானின் இலிங்கத் திருமேனியின் அமைப்பு, உமாமகேசுர மூர்த்தம் முதலிய உருவத் திருமேனிகளின் அமைப்பு, நந்திதேவர் முதலிய பரிவார மூர்த்தங்களின் அமைப்பு முறை, திருக்கோயில் அமைப்பு, செபமாலை, யோகபட்டம் முதலியவை பற்றிய விதி ஆகியன கூறப்பட்டுள்ளன. ஆதியில் ஆகமங்கள் தமிழ்மொழியில்தான் இருந்தன. இதனை ''மன்னுமா மாலை மகேந்திரமதனில் சொன்ன ஆகமந் தோற்றுவித்தருளியும்'' என்று மணிவாசகரும் ''திறங்கொண்ட அடியார்மேல் தீவினைநோய் வாராமே, அறங்கொண்டு சிவதன்மம் உரைத்தபிரான்'' என்று ஞானசம்பந்தரும் அருளியுள்ள திருவாக்குகளால் அறியலாம். காலப்போக்கில் இவ்வாகமங்கள் வடமொழியில் மொழி பெயர்க்கப்பட்டு, வடமொழிக்கே உரியன என்று கருதப்படுகிறது. அவ்வாகமங்கள் கூறிய அமைப்பு முறைகளில் அமைந்த திருக்கோயில்கள் இமயம் முதல் குமரிவரையிலும் கடல்கடந்த நாடுகளிலும் உள்ளன. எனினும் ஆகம முறை அமைந்த திருக்கோயில்கள் தென்னாட்டில், நமது தமிழ் நாட்டில் தான் அதிகமாக அமைந்துள்ளன. சிவ வழிபாடு ஆகம முறைப்படி நடைபெறும் வழிபாடு. அவ் வழிபாடு வடநாட்டுத் தலங்களில் சிறப்பாக நடைபெறுகிறது. அந்நாட்டில் அனைவரும் பூவும் நீரும்

கொண்டு வழிபடுதற்குத் துணையாக ஆகம நெறிகள் வழி காட்டுவனவாக அமைந்துள்ளன.

## திருமுறை நெறி :

நமது திருமுறைகளும் அந்நெறிகளை எடுத்துக் கூறுகின்றன. ஆனால் நாம் இன்று அதனை நடைமுறைப்படுத்தத் தயங்குகிறோம்.

கொங்கு நாட்டுத் திருத்தலமாகிய திருச்செங்கோட்டுத் தலத்தில் பாடப்பட்ட திருநீலகண்டப் பதிகத்தில் அடியவர்கள் இறைவன் திருவடியில் மலரிட்டு காலை மாலையாகிய இருபொழுதிலும் தாமே வழிபடுவர் எனச் சிறப்பித்து திருஞானசம்பந்தர் அருளியுள்ளார்.

"சிவநெறியாளர்கள் உயிரினங்களுக்கு நலம் பயக்கும் அறங்களை மேற்கொண்டு மனம் மகிழ்ந்து, கசிந்து ஊற்றெழுங் கண்ணீரதனால் நனைந்து முப்புரமாகிய மும்மலகாரியத்தை அழித்துச் சிவனடியில் பூவிட்டுப் போற்றுதல் வேண்டும். அதனால் இருவினைப் பாசமும் அற்றுத் தீவினை தீண்டப் பெறாதவர்களாக ஆகலாம். மேலும் என்றும் தொன்மைக் கோலத்தைத் தொழவேண்டும். அது சிவனடியார்களுக்கு உரிமையுடையது." என்ற கருத்தினைக்

*"காவினை யிட்டுங் குளம்பல தொட்டுங் கனிமனத்தால்*
*ஏவினை யாலெயின் மூன்றெரித்தீ ரென்றிரு பொழுதும்*
*பூவினைக் கொய்து மலரடி போற்றுது நாமடியோம்*
*தீவினை வந்தெமைத் தீண்டப் பெறாதிரு நீலகண்டம்"*

என்று குறிப்பிட்டுள்ளார்.

அடியவர் கூட்டம் களித்துக் கலந்ததோர் காவிரியில் குளித்துத் தடங்கொண்டதோர் தாமரைப்பொன்முடி தன்மேல் குடங்கொண்டு நீராட்டுகின்றனர். அக்காட்சியைக் கண்ட அப்பரடிகள் மனமகிழ்ந்து மற்றவர்கட்கும் காட்டுவதுபோல

*"தடங்கொண்டதொர் தாமரைப் பொன்முடி தன்மேல்*
*குடங்கொண்டடியார் குளிர்நீர் சுமந்தாட்டப்*
*படங்கொண்டதொர் பாம்பரை யார்த்த பரமன்*
*இடங்கொண்டிருந் தான்றனிடை மருதீதோ"*

என்று வினவுவது போலக் கூறுகிறார். தாமும் அவ்வழிபாட்டில் ஈடுபடுகிறார்.

*"தொண்டனேன் பட்டதென்னே தூய காவிரியினன்னீர்*
*கொண்டிருக் கோதியாட்டிக் குங்குமக் குழம்புசாத்தி*

*இண்டை கொண்டேற நோக்கி யீசனை யெம்பிரானைக்*
*கண்டனைக் கண்டிராதே காலத்தைக் கழித்தவாறே''*

என்று நிறைமொழியாகிய மறைமொழிகளால் போற்றி வழிபட்ட பாங்கினை விளக்குகிறார். எனவே ஆகமநெறி என்பது வேற்றுமொழிக்கு மட்டும் உரியதன்று, நம்முடைய மொழியில் நாமே இறைவனைப் போற்றிப் பூவும் நீருங்கொண்டு வழிபட வேண்டும் என்பதை நெறிப்படுத்தத் தமிழகத்தில் தோன்றியதாகும். அது அயல் மொழி ஆதிக்கத்தாலும், அம்மொழிச் செல்வாக்கினாலும் வடமொழி யில் இடம் பெற்றுள்ளது. ஆதலின் நமது திருக்கோயில் நடை முறைகளுக்குரிய ஆகமங்கள் இருபத்தெட்டில் இன்று கிடைப்பது எத்தனை? அவைகளில் நடைமுறைகளுக்குரியதாகக் கொள்ளப் படுவன யாவை? என்பதை ஆய்ந்து தமிழ் வழிபாடாகத், திருமுறை வழிபாடாக மாற்றி நமது திருக்கோயில்கட்கும், மக்களுக்கும் இடையே தொடர்புகளை வலுப்படுத்துவது நமது கடப்பாடு என்பதை நாம் சிந்திக்க வேண்டும்.

## வழிபாட்டுநெறி!

நமது வழிபாட்டு முறையில் பால்வேறுபாடின்றி ஆடவரும் பெண்டிரும் திருக்கோயிலுட் புகுந்து வழிபட்டனர். பாடிப்பரவினர். தவத்தோரும் இல்லறத்தோரும் ஒருங்கு சென்று வழிபட்டனர். அக்காட்சி திருஞானசம்பந்தர் காலத்தில் நிகழ்ந்தது. ஞானசம்பந்தர் மதுரை செல்கிறார். திருமகளைப் போன்ற அழகுடன் பாண்டி நாட்டினை ஆளும் அரசின்ன மாபெருந்தேவியாக விளங்குகின்ற மங்கையர்க்கரசியார் வழிபட்ட நிலையைச் சிந்திக்கிறார். ''பங்கயச் செல்வி பாண்டிமாதேவி பணி செய்து நாடொரும் பரவ... அங்கயற்கணி தன்னொடும் அமர்ந்த ஆலவாய் ஆவதும்'' இது தானோ என்று வியந்து போற்றுகிறார். குலச்சிறையார், மங்கையர்ச்கரசியார் வரவேற்பினை ஏற்றுத் திருக்கோயிலினுள்ளே புகுந்து அடியார் திருக் கூட்டம் வழிபடுவதை காண்கிறார்.

*''சூடக முன்கை மடந்தைமார்கள் துணைவ ரொடுந்தொழு தேத்திவாழ்த்த*
*ஆடகமாட நெருங்கு கூடல் ஆலவாயின்க ணமர்ந்த வாறே''*

என்றும்,

*'புண்ணியவாணரும் மாதவரும் புகுந்துடனேத்தப் புனைவிழையார்*
*அண்ணலின் பாடலொடுக்கும் கூடல் ஆலவாயின்க ணமர்ந்தவாறே'*

என்றும் அருளியுள்ளார். இத்தகைய திருவாக்குகளால் மகளிருடன் ஆடவர் திருக்கோயில் புகுந்து போற்றி வழிபட்டனர்; அப்புண்ணிய அன்பர்களுடன் தவத்தோர்களும் புகுந்து வழிபட்டனர்; இறைவனுடைய அருட்பாக்களை மகளிர்பாடிப்பரவினர் என்பனவற்றை அறியலாம். மகளிர் சிவவழிபாட்டுச் சிறப்புக்கு எடுத்துக்காட்டாக விளங்கும் திருத்தலங்கள் கன்றாப்பூர், திருப்பனந்தாள் ஆகியன. ஒரு பெண் தன்வழிபாட்டிற்கு குடும்பச்சூழல் வாய்பளிக்காதபோது பசுங்கன்று கட்டும் தறியையே சிவமாக வழிபட்டாள், அதுவே பாடல் பெற்ற திருத்தலமாக அப்பரடிகள் உள்ளத்தை நெகிழ்வித்தது. அங்கு அப்பரடிகள் "கன்றாப்பூர் நடுதறியைக் காணலாமே" என்று பாடிய பாடல் எவ்வளவு பொருள் பொதிந்தது; வேறுபாட்டு நிலைகளை நீக்குவது என்பதையும் சிந்திக்க வேண்டும்.

திருப்பனந்தாளில் தாடகை என்னும் இளம்பெண் மலர்மாலை தொடுத்து இறைவனுக்கு அணிந்து வழிபடும் பொருட்டு வருகிறாள்; அப்பொழுது அவளுடைய ஆடை நெகிழ்கிறது. ஆடையை விட்டால் மானத்தை இழக்க நேரிடும். கையில் உள்ள மாலையை விட்டால் இறைவனுக்கு அணியக் கொணர்ந்த மாலையின் புனிதத்தன்மை கெட்டுவிடும். இந்நிலையில் சிவபரம்பொருள் தாமே வளைந்து அப்பெண்ணின் கையில் உள்ள மாலையைப் பெற்றுக் கொள்கிறார். இத்தகைய பக்திப் பெருமித உணர்வைப் பெரியபுராணத்தில் காண்கிறோம். அத்தகு சிவனின் வழிபாட்டை அனைவரும் மேற்கொள்ளலாம் என்பதற்கு இவைகள் சான்றாக விளங்குகின்றன.

பசுக்களை மேய்ப்பதில் ஈடுபட்ட சிறிய பெருந்தோன்றலார் எனச்சிறப்பித்துக் கூறும் சண்டேசுவரர் மணலால் சிவலிங்கம் அமைத்துக் கோயிலும் கோபுரமும் வகுத்து வழிபட்டார். இறைவன் உமையம்மையுடன் காட்சி தந்து சண்டேசுவர பதந்தந்தார். இன்று அவ்விடம் திருவாப்பாடி எனப் போற்றப்படும் தலமாக விளங்குகிறது. இவை பக்தி நெறியே மேலானது என்பதை விளக்குவனவாகும்.

சைவசித்தாந்தப் பெருமன்றம் இச்செய்திகளைப் பல்லாண்டுகளாகப் பரப்பி வருகிறது. சான்றோர் பலர் அரை நூற்றாண்டுக்கு மேலாக நமது சமய வளர்ச்சிக்கும், தமிழ் வளர்ச்சிக்கும் உரியநடைமுறைகளை மேற்கொள்ள வேண்டும் என்பது பற்றி விரிவாகக் கூறியுள்ளனர். அவற்றைச் சித்தாந்தம் இதழ்களில் விரிவாகக் காணலாம்.

நீண்ட காலமாக நாம் இந்நெறி செந்நெறியென்பதை எடுத்துக் கூறியும் நடைமுறைக்கு வருவது குறைவாகவே உள்ளது. இன்று

மொழிக்கு மொழிதித்திக்கும் மூவர் மொழிகளாகிய திருமுறைப் பாடல்கள் திருவாசகப் பாடல்களும் சிறப்பித்துச் சொல்லும் திருத்தலங்களில் பல, முறையான வழிபாடும், பொலிவும் இழந்து மக்கள் தொடர்பு குறைந்திருப்பதை யாராலும் மறுப்பதற்கு இயலாது. இக்கோயில்கட்கு வரவேண்டிய வருவாய்கள் அரசியல் சட்டங்களாலும் நடைமுறைப் படுத்துவோர் உள்ளுணர்வுக் குறைவாலும் பெரிதும் இழப்புக்குரியனவாக்க காணப்படுகின்றன. வடஇமயம் முதல் தென்குமரிவரையுள்ள நமது திருக்கோயில்கள் அயலவரது ஆதிக்கத்தால் மாசுபடுத்தப்படுவதனை நாம் கண்டும், கேட்டும் அதற்கு மாற்றம் காணும் செயல் முறையில் ஈடுபடாமல் இருக்கிறோம். சொற்பொழிவுகள், வழிபாடுகள் ஆகியவற்றில் இருக்கும் நமது ஈடுபாடு இளைஞர்களை நெறிப்படுத்திப் பக்தியுணர்வும், தொண்டுணர்வும் உடையவர்களாக, மாற்றுதற்குரிய வகையில் சிறக்க வேண்டும்! விறன்மிண்டர், எறிபத்தர் போன்றோர் வீரஉணர்வுகள் பெருகிக் குறைகளும், குற்றங்களும் நிகழ்வதைத் தடுத்து நிறுத்த முயல வேண்டும். அப்பரடிகள் காட்டிய உறுதிப்பாடும் நமக்குத் தேவை.

சைவசித்தாந்தப் பெருமன்றமும், சமய அமைப்புக்களும் ஒருங்கிணைத்து சமுதாயத்துடன் கூடிய சமயவுணர்வை வளர்த்து நடைமுறைப் படுத்துதல் இன்றியமையாக் கடமையாகும். இன்றைய சூழல் நம் சமயப் பணிக்குப் பெரிதும் வாய்ப்பாக இருக்கிறது. திருமுறை நெறியில் சைவசித்தாந்தச் செழுமையும், வழிபாட்டமைப் பும் பெருக முயல்வோமாக! எல்லோருக்கும், எல்லாம் வல்ல அம்பலவாணரது பேரருளும், எமது ஆதிகுருமுதல்வர் சாந்தலிங்கப் பெருமான் தண்ணருளும், நலம் பலவும் தரவேண்டும் என வேண்டி எமது தலைமையுரையை நிறைவு செய்கிறோம்.

**வளர்க சிவநெறி! வாழ்க தமிழ் மரபு!**

## திருச்சிற்றம்பலம் திரு. மு. அருணாசலம்

**(84ஆம் ஆண்டு விழா - 1990 - தஞ்சை - சைவர் மாநாடு)**

1930லிருந்து எமக்கு சைவசித்தாந்த மகா சமாஜத்தின் தொடர்பு உண்டு. இதுவே பின்னர் பெருமன்றம் என்று பேர் மாற்றம் செய்யப்பட்டிருக்கிறது. அன்றிருந்த பெரியோர்களோடு எமக்கு நேர்முக தொடர்பு உண்டு.

தஞ்சாவூர் ஜில்லாவில் சைவ சித்தாந்த மகாநாடு நடக்கவில்லை என்று திரு. யு. சுப்ரமணியம் அவர்கள் குறைபட்டாலும் கூட பல இடங்களில் பெருமன்ற மகாநாடு நடந்திருக்கிறது. நாகப்பட்டினம் 1908. தஞ்சாவூர் 1915. கும்பகோணம் 1918. திருப்பனந்தாள் 1919. மாயூரம் 1920 கும்பகோணம் 1921, திருவிடைமருதூர் 1933. கரந்தை 1933 சீர்காழி 1942 இவற்றுள் மூன்று ஆண்டுகளில் தொடர்ந்து இந்த ஜில்லாவில் பெருமன்ற மகாநாடுகள் நடந்திருக்கின்றன. ஆனால் அவர் சொன்ன மாதிரி தஞ்சாவூரில் நடைபெற்றது 1915ல் தான். என்னைக் கேட்டவர்களுக்கு நான் மீள அவர்கள் கேட்காத மாதிரி பதில் கூறினேன். ஆனால் யு. சுப்ரமணியம் அவர்கள் கேட்டபோது மறுக்க இயலவில்லை. இதன் பொருட்டு சைவ சித்தாந்த மகா சமாஜமும் என்னை மன்னிக்க வேண்டும்.

சைவ சித்தாந்தப் பெருமன்றம் மகாநாட்டுக்காகக் கூடுதல், கலைதல் இதற்காக நடைபெறுகிறது என்பது என்னுடைய குற்றச்சாட்டு. இதனால் நல்ல பலன் ஏற்பட்டிருக்கிறது. அதுவே தலங்களுக்குச் செல்வதற்கு ஏற்பாடு செய்தது. இவற்றை மறந்து விட்டு இப்போது எடுத்துக் கொணட தலைமை உரை என்ற பொருளுக்கு வருவோம். இந்த சமய உபகாலத்தில் பெண்கள் முன்னேற்றம் குறித்து இந்திய அரசு பல திட்டங்கள் தீட்டியிருக்கிறது. அவற்றில் முக்கியமானது பெண்களுக்குப் பொது வாழ்க்கையில் 30 சதவீதம் இடம் கொடுக்க வேண்டும் என்பது ஒன்று. அதையொட்டி இந்தப் பெருஉடையார் கோயிலருகில் நின்று கொண்டு நான் பேசும்போது தஞ்சை ராஜராஜேச்சுரம் என்ற கோயில் உருவாவதற்கும் அதை எடுத்த ராஜராஜ மாமன்னன் ஒரு சக்ரவர்த்தியாக

உருவாவதற்கும் மூலமாக இருந்த அந்த மன்னனுடைய பெரிய பாட்டியார் செம்பியன் மாதேவியார் வரலாற்றை எடுத்துச் சொல்வது பொருத்தமாக இருக்கும் என்ற நினைப்பில் சில வார்த்தைகள் பேசுகிறேன்.

தமிழ்நாட்டின் சரித்திரத்திலும், சைவ சமய சரித்திரத்திலும், பொன்னெழுத்துக்களால் பொறிக்க வேண்டிய சரித்திரம் செம்பியன் மாதேவியாரது வரலாறு, இராசராச மன்னரை வளர்த்தெடுத்துப் பேரரசராக ஆக்கி, அவரால் பெரிதும் புகழப் பெற்றிருந்த இந்த மாதேவியார் சரிதம் தமிழ் மக்கள் நன்கறிய வேண்டியதொன்று.

நம்முடைய பள்ளிகளில் உலகத்துச் சரித்திரங்களெல்லாம் கற்பிக்கப்படுகின்றன. இங்கிலாந்தில் அரசு புரிந்த அரசர்களின் வரலாறும், டில்லியில் அரசாண்ட மொகலாயர் வரலாறும், கனவில் கேட்டாலும் தலைகீழாக நாம் சொல்வோம். ஆனால் நம்முடைய சொந்தக் கதை - காவிரிக் கரையில் நடந்த நமது நாட்டுக் கதை - நமக்குத் தெரியாது. சிவாஜி குழந்தையாக இருந்தபோது அவனது தாய் ஜீஜாபாய் இதிகாச வீரர்கள், கதையை உணர்த்தி, வீர உணர்ச்சி வரும்படி செய்தமையால் பிற்காலத்தில் சிவாஜி பெரு வீரனாக வளர்ந்து, மொகலாயர் ஆட்சியை எதிர்த்து இந்த சாம்ராஜ்யம் நிறுவ முயன்றான் என்று சரித்திரத்தால் நாம் அறிகிறோம். இதுபோன்ற பின்னும் சிறப்புடைய ஒரு வரலாறு செம்பியன் மாதேவியார் வரலாறு.

தஞ்சைப் பெருங்கோவில் என்ற மாத்திரத்திலேயே அனைவருக்கும் பேரரசராகிய இராசராசருடைய நினைவுதான் எழும். இக்கோயில் தமிழருடைய கட்டிடச் சிற்பக் கலை வரலாற்றில் தனிச் சிறப்பான இடம் உடையது. சிவாலயத்தில் கருவறையின் மீது பெரிய விமானத்தை எழுப்புகின்ற புதிய கட்டிடப் பாணியை இவ்வரசரே தோற்றுவித்தார். இவருக்குப்பின் சில தலைமுறைகள் இது நன்கு வளர்ந்தது. விசயாலயன் தோற்றுவித்த பிற்காலச் சோழர் பரம்பரையில் இவர் எட்டாவது மன்னராகச் சிம்மாசனம் ஏறினார். இவரை ஒத்த சிறப்புடைய மன்னர்கள், வரலாற்றில் பிறர் இலர் என்று அறிஞர் கூறுவர். இவர் பெருவீரர். எண்ணற்ற போர்களைத் தாமே முன்னின்று நடத்தி, வெற்றி பெற்றிருக்கிறார். தமிழ் வழங்கிய நிலமெல்லாம் சோழ, சேர, பாண்டிய நாடுகள், தொண்டை நாடு, ஈழநாடு யாவும் - இவர் குடைக் கீழ்த் தங்கின. இவரது கப்பற்படை கடல் கடந்து சென்று, இன்று பர்மா, இந்ததோனேஷியா, மலேசியா என்று வழங்குகிற நாடுகள் அனைத்தையும் வென்று கீழ்ப்படுத்தி அங்குத் தமிழர் கலையும் சமயமும் பரவச் செய்தது. எல்லையற்ற செல்வமும்

அந்நாடுகளிலிருந்து வந்து சோழ நாட்டில் குவிந்தது. இவ்வளவு செல்வத்தையும் இச்சக்கரவர்த்தி தமக்கென்று பெருமாளிகைகள் கட்டுவதில் செலவிடாமல், மக்களுக்கே பகிர்ந்து கொடுத்துக் காவிரியின் இருமருங்கும் மலைபோன்ற பெருங் கோயில்கள் கட்டுவதில் செலவிட்டார். இவரைப் போல ஒரு ஜனநாயக சக்கரவர்த்தி உலகத்தில் தோன்றியதில்லை. இவர் பின்வந்த சோழ மன்னர்களும் ஒரு வகையில் இவர் கண்ட சிவஞான ஜனநாயகத்தை வளர்த்தார்கள்.

இம்மன்னர் ஏன் இவ்வாறு செய்தார் என்பது கேள்வி. செம்பியன் மாதேவியார் என்ற ஒரே சொல் இதற்கு விடையாகும். இதை விளக்கப் புகுங்கால், செம்பியன் மாதேவியார் அரசியல் துறையிலும், சமயத் துறையிலும் செய்த இருபெரும் சாதனைகளைக் குறிப்பிட வேண்டும். முதலாவது அரசியல் துறையைக் குறிப்பிடுவோம்.

சோழ நாட்டில் முதல் பராந்தக சோழன் கி.பி. 907இல் பட்ட மெய்தி, 953 வரையிலும் அரசாட்சி செய்து வந்தான். அவருடைய பிள்ளைகளில் இராசாதித்தன், கண்டராதித்தன், அரிஞ்சயன் என்ற மூவர் குறிப்பிடத்தக்கவர். இம்மூவருள், இராசாதித்தன் மிகச் சிறந்த வீரனாகச் சோழ நாட்டில் தந்தையின் கீழ், திருநாவலூர்ப் பகுதியை ஆண்டு வந்தான். மூன்றாம் கிருஷ்ண தேவன் என்ற இராட்டிரகூட மன்னன்; சோழ நாட்டின் மீது படையெடுத்து வந்தபோது இளவசரனாயிருந்த இராசாதித்தன் பெரும்படையுடன் எதிர்த்து, போர்க்களத்திலேயே யானை மேல் இருந்து அம்பு தைத்து இறந்தான். இப்போரில் சோழர் படை தோற்றது. இக்காலம் பராந்தகனுக்குத் தோல்விக் காலம். அடுத்த ஆண்டில் பராந்தகன் தனது இரண்டாம் புதல்வன் கண்டராதித்தருக்கு இளவரசுப் பட்டம் கட்டினான். கண்டராதித்தருக்கு முடிசூட்டு விழா நடந்தது 953இல். இவ்வரசர் மிகச் சிறந்த சிவ பக்தர். தில்லை அம்பலத்து ஆடும் பெருமான் மீது பத்துப் பாடல் கொண்ட ஒரு பதிகம் பாடியிருக்கிறார். இப்பதிகம் சைவத் திருமுறைகளில் ஒன்பதாம் திருமுறையாகிய திருவிசைப் பாவில் சேர்க்கப்பட்டுள்ளது. இவர் நீண்ட காலம் ஆட்சி புரிய வில்லை. சில ஆண்டே அரசு புரிந்து 957ல் இறந்தார், இவர் 'மேற்கு எழுந்தருளின தேவர்' என்று கல்வெட்டுக்களில் சொல்லப்படுகிறார். இவர் சிறந்த சிவ பக்தராயினும், வைணவத்துக்கும், சமணத்துக்கும் கூட ஆதரவு கொடுத்தார்.

கண்டராதித்தருக்கு இரு மனைவியர். வீரநாராயணி, செம்பியன் மாதேவி என்பார். முதல் மனைவியாகிய வீரநாராயணி இவருக்கு

முடிசூட்டு விழா நடைபெறுவதற்கு வெகு நாள் முன்னமேயே காலமாகிவிட்டாள்; செம்பியன் மாதேவியே அரசியாக இருந்தார். கண்டராதித்தர் பட்டமேறியபொழுது நாற்பது வயது இருத்தல் கூடும். இரண்டாம் மனைவியாக இருந்த செம்பியன் மாதேவிக்கு அக்காலம் வயது இருபத்தைந்து அல்லது முப்பது இருக்கலாம். இவர் மழவர் அல்லது மழநாட்டுச் சிற்றரசர் மகள் என்பதை ''மழவரையர் மகளார் ஸ்ரீ கண்டராதித்தர் தேவியார் செம்பியன் மாதேவியார்'' என்ற கல்வெட்டால் அறிகிறோம்.

கண்டராதித்தரை மைசூரில் பங்களூர் ஜில்லாவிலுள்ள கல்வெட்டு ஒன்று'சிவஞான கண்டராதித்தர்' என்று குறிப்பிடுகிறது. அங்குள்ள கோயிலில் அவருடைய படைத்தலைவன் ஒருவன் 'கண்டராதித்த விடங்கரையும் உமா பரமேசுவரியாரையும்' பிரதிட்டை செய்திருக்கிறான். இப்பெயர்களால் இவ்வரசருடைய பக்திச் சிறப்பு எவ்வளவு பெரியது என்பதை நாம் அறிகிறோம். இந்தப் பக்திமானை மணந்தவர் செம்பியன் மாதேவியார். இத்தேவியாருடைய இயற்பெயர் தெரியவில்லை. செம்பியன் மாதேவி என்பதற்கு சோழப் பேரரசி என்பது மட்டுமே பொருள். இவருடைய பெருந்தகுதி காரணமாக இப்பெயரே பின்னர் நிலைத்தது.

கண்டராதித்த சோழர் மிகச் சிறந்த பக்திமானாய் வாழ்ந்த காலத்தில் இத்தேவியாரும் அந்தப் பக்தி வாழ்வுக்கு உறுதுணையாகவே இருந்திருப்பார். திருமுறை ஆசிரியராகவும் தகுதி பெற்றிருந்த கண்டராதித்தருடைய சிவபக்தி எவ்வளவு தூரம் இவரை ஆட்கொண்டிருந்தது என்பதை இத்தேவியாருடைய பிற்கால வாழ்க்கையிலிருந்து அறியலாம்.

கண்டராதித்தருக்கு நெடுநாள் பிள்ளையில்லாமல் இருந்து, பிறகு மதுராந்தகன் என்ற ஒரு புதல்வன் பிறந்தான். பிற்காலத்தில் இவன் உத்தமசோழன் என்ற பெயரோடு ஆட்சி புரிந்தான்.

953 இல் கண்டராதித்தர் முடிசூட்டிக் கொண்டபொழுது, தம் புதல்வன் சுமார் பத்து வயதே இருந்தமையால், தமது தம்பியான அரிஞ்சயனை இளவரசராக்கினார். 957இல் அவர் இறந்தபோது மதுராந்தகனுக்கு வயது 14 இருக்கலாம். வளர்ந்து வருகின்ற பேரரசில் பேரரசன் இறந்து போகின்றபோது வாரிசுகள் பலர் இருந்தால், குழப்பமும் கொடுமையும் கொலையும் நேரிடுவதை நாம் வரலாற்றில் பார்க்கிறோம்.

13ஆம் நூற்றாண்டில் சுந்தரபாண்டியன் என்பவன், தன்னினும் வயதில் மூத்த வீரபாண்டியன் முடிசூடுவதை எதிர்த்து, தன் தந்தையையும் கொன்று, முகமதியப் படையை மதுரைக்கு அழைத்து, அதன் விளைவாய் மதுரை அழிவதற்கும் பாண்டியர் அழிவதற்கும், இந்த நாட்டில் தமிழராட்சி முடிவடைதற்கும் காரணமாயிருந்தான். வரலாற்றை இன்னும் தள்ளிப் பார்த்தால், ஔரங்கசீப் தன் தந்தையைச் சிறையில் அடைத்துக் கொன்று, தாரா ஷீகோ, ஷீஜா, மூராத் ஆகிய தன் சகோதரர்களைக் கொன்று தான் முடிசூட்டிக் கொண்டான் என்பதைக் காண்கிறோம். இவற்றை நினைவில் வைத்துச் சோழ அரசைப் பார்க்க வேண்டும்.

போர்வீரர்களும் அரசியல்வாதிகளும் எப்பொழுதும் குழப்பத்தை நாட்டில் எதிர்பார்த்துக் கொண்டிருப்பார்கள். செம்பியன் மாதேவி தம் மகனுக்கு முடிசூட்ட வேண்டும் என்று விரும்பியிருந்தால் போதும்; உடனே ஒரு படை திரண்டிருக்கும். செம்பியன் மாதேவியின் ஆதரவாளர், அரிஞ்சயன் ஆதரவாளர் என்று இரு பிரிவுகள் எழுந்திருக்கும்; நாடு அழிந்திருக்கும். இவ்வாறு அழியாது காத்த பெருமை இத்தேவியாருக்கு உரியது. பெண்களால்தான் ஆக்கலும் அழித்தலும் என்று சொல்வார்கள். அழிவை இன்று இருபதாம் நூற்றாண்டின் மத்தியிலும் நம் கண் முன்னே காண்கிறோம். ஆனால், பத்தாம் நூற்றாண்டின் இடைப்பகுதியில் சோழ நாட்டைச் செம்பியன் மாதேவியார் காத்தார். 'எமது புதல்வன் மதுராந்தகன் இப்போது முடிசூடி ஆள வேண்டியதில்லை; எமது மைத்துனர் (கொழுந்தர்) ஆன அரிஞ்சயரே முடிசூடி ஆளட்டும் என்று இவர் அறிவித்து விட்டார் போலும். சோழர் ஆட்சி அமைதி குலையாமல் தொடர்ந்தது. இவ்வளவு விரிவான மனப்பான்மை யாருக்கு வரும்? "என் மகனுக்கு அரசு வேண்டுவதில்லை; நாடு நன்கு வாழட்டும்" என்று எண்ணிய உள்ளப் பாங்கு தமிழ் நாட்டுக்குப் பெரு நன்மையைத் தந்தது.

அரிஞ்சயன் முடிசூடிக் கொண்டான், ஆனால் இன்றுள்ளோர் போல அவன் நன்றி மறந்தவன் அல்லன்; தனது தமையனுடைய சிவ பக்தியையும் செம்பியன் மாதேவியின் பெருந்தன்மையையும் நன்குணர்ந்து போற்றினான். நாட்டினுடைய அரசியல் ஆட்சியைத் தன்னிடம் வைத்துக் கொண்டு, தெய்விக ஆட்சியை, அதாவது சிவாலயத்தையும், சிவாலய பரிபாலனத்தையும் அண்ணன் மனைவியிடமே விட்டுவிட்டான். இவனும் சில ஆண்டுகளே அரசு புரிந்து இறந்து போனான். ஆயினும், இவன் காலத்தில் செம்பியன் மாதேவியாருக்கு ஏராளமான நிதி வசதியை அளித்திருந்தான்.

அதனால் இவர் சிவ வழிபாடும், சிவாலயத் திருப்பணியும் விரிவாகச் செய்து கொண்டு, தமது புதல்வனாகிய மதுராந்தகனை வளர்ப்பதிலும், பயிற்றுவதிலும், ஆள்பவருக்கு அறிவுரை கூறித் தரும நெறியில் செலுத்துவதிலும் தம் நேரத்தைச் செலவிட்டார்.

இதற்கிடையில் அரிஞ்சயன் இறந்தமையால், அடுத்த மன்னன் முடிசூட வேண்டிய நிலை. அப்போதும் இத்தேவியார் தம் புதல்வனுக்குப் பட்டம் வேண்டும் என்று சொல்லவில்லை. அரிஞ்சயனுடைய புதல்வனாகிய இரண்டாம் பராந்தகனுக்குத் தாமேயிருந்து முடிசூட்டி வைத்தார். இவன் உருவ உழகுடையவனாக இருந்தமையால், இவனுக்குப் பிற்காலத்தில் சுந்தரசோழன் என்ற பெயர் நிலைத்தது. இவன் பெருவீரனாகவும், கொடை வள்ளலாகவும் விளங்கினான், அழகான தமிழ்ப் பாடல்கள் இவனது குண விசேஷங்களைப் புகழ்கின்றன. இவன் காலத்திலும் செம்பியன் மாதேவியார் தம் வழிபாட்டையும் சிவத் திருப்பணியையும் நடத்திக் கொண்டு வந்தார்.

சுந்தர சோழன் காலமானவுடனே (970) மக்களிடையே ஒரு கிளர்ச்சி எழுந்தது. சுந்தர சோழனுடைய மகனாகிய அருண் மொழித் தேவன் அப்போது புய பல பராக்கிரமம் மிகுந்திருந்தான். படைவீரர்கள் பலரையும் நடத்திச் சென்று, தனது போர்த் திறத்தைக் காட்டியிருந்தான். ஆதலால், மக்களுக்கு இவனிடத்தில் ஈடுபாடு மிகுதி. ஆகவே தந்தைக்குப் பிறகு இவனே அரசனாக வேண்டும் என்று மக்கள் ஒருமித்து விரும்பினர். இதற்கு ஏற்ப, செம்பியன் மாதேவியாரது புதல்வனான மதுராந்தகனும் பெரும் சிறப்பில்லாதவனாக இருந்தான். ஆகவே ஒரு விதத்தில் பொது மக்களின் கிளர்ச்சி பொருத்தமாகவே இருந்தது. எனினும், அரிஞ்சயன், சுந்தரசோழன் ஆகிய இருவரும் ஆட்சி செய்து மடிந்தபின்னும், செம்பியன் மாதேவியார் தம் மகனை முடிசூட வேண்டும் என்று சொல்லவில்லை. உரிமையிருந்தும் கூட அவ்வாறு சொல்லாதது, சரித்திரம் காணாத புதுமை. இதனினும் புதுமை மற்றொன்று தன்னை அரசனாக்க வேண்டுமென்று மக்களே விரும்பியும்கூட. அருண்மொழித் தேவன் அச்சமயம் தனக்கு அரசு வேண்டாம் என்றும், "நமது குல மாணிக்கமாகிய நம்பிராட்டியார் செம்பயின் மாதேவியார், தமது திருவயிறு வாய்த்த உத்தமசோழர் முடிசூட எண்ணுதல் கூடும். எனவே அவருக்கே முடிசூட்டுக" என்று கூறிவிட்டான். மக்கள் அவன் கருத்துக்கு மாறு சொல்லவில்லை. அங்ஙனமே உத்தமசோழன் (மதுராந்தகன்) 970இல் முடிசூடி 985

வரையில் அரசாண்டான். அவன் இறந்த பின், அருண்மொழிவர்மர் இராசராசன் என்ற பட்டம் புனைந்து 985இல் சோழ மன்னராக முடிசூட்டிக் கொண்டார். இவரே இப்போது நாடெல்லாம் போற்றுகின்ற இராசராச மன்னர்.

இராசராசர் வரலாறு அனைவரும் அறிந்ததே. ஆனால் இம்மன்னர் தமக்கு வரவிருந்த பட்டத்தை வேண்டாம் என்று சொல்லி, தம்முடைய பெரிய பாட்டியாரான செம்பியன் மாதேவியாரின் புதல்வரான உத்தம சோழருக்கே கொடுக்கும்படி செய்தது யாரும் அறியாத செய்தி. மகாபாரத இதிகாசக் கதைகளில், தகப்பனாகிய சந்தநு மகாராசன் இரண்டாவது மணம் செய்து கொள்ள விரும்பியதற்காக, அவனுடைய மூத்த புதல்வராகிய பீஷ்மர் தமக்கு வரவேண்டிய அரசுரிமையை விட்டுக் கொடுத்த செய்தி பாரத நாடு நன்றகறிந்த செய்தி. ஆனால் இராசராச மன்னர் தமக்கு மக்கள் சூட்ட விரும்பிய மணிமுடியை, தம் பாட்டியார் விரும்பாதிருந்தும்கூட அவரிடமிருந்த பேரன்பு காரணமாக, அவருடைய புதல்வருக்குத் தரவேண்டும் என்று தாமாக விரும்பித் தந்த ஒரு தியாகச் செயல் தமிழ்நாட்டு மக்கள் அறியவில்லை. இனியேனும் அவர்கள் இவ்வருஞ் செயலின் பெருமையை நன்குணர வேண்டும். செம்பியன் மாதேவியார் இராசராச மன்னருடைய 16ஆம் ஆட்சி ஆண்டில் (1001) காலமானார். இவர் கண்ட முடி மன்னர்கள், மாமனாராகிய முதற் பராந்தகர், கணவராகிய கண்டராதித்தர், பின் அரிஞ்சயன், சுந்தரசோழன், தனது புதல்வனாகிய உத்தம சோழன், இராசராசர், இனி பட்டத்திற்கு வரப்போகிற இளைஞனாகிய இராசேந்திரன்ஆகிய எழுவர். இது வரையில் சொல்லியது, எவ்வாறு செம்பியன் மாதேவியார் சோழ அரண்மனையில் இருந்து அரசுரிமையில் எந்தக் கோளாறும் நிகழாதபடி இத்தனை தலைமுறைகளில் ஆட்சி செம்மை பெறத் தொடர்வதற்கு உதவி செய்தார் என்பதாகும்.

இனி, சமயத்துறையில் இவர் செய்த தொண்டையும் இங்குக் கூறலாம். இவர் தமது கணவர் இளவரசராக இருந்த காலத்தில், தமது திருமணம் நிகழ்ந்த புதிதில், கி.பி. 941ஆம் ஆண்டில், திருக்கற்குடி மாதேவருக்கு நந்தா விளக்கு அளித்தார். இது முதற்கொண்டு இவரது சிவாலயத் தொண்டுகள் தொடர்ந்து நடைபெற்று வந்திருக்கின்றன. தமது கணவர் இறந்தபின் திருநல்லம் (கோனேரிராசபுரம்) என்ற பாடல் பெற்ற தலத்தில் உள்ள செங்கற் கோயிலைக் கருங்கற் கோயிலாகக் கட்டி நிலம் அளித்தது பெரும் பணியாகும்.

அக்கோயிலுக்குக் கண்டராதித்தம் என்று தம் கணவர் பெயரைச் சூட்டினார். பிரசித்தி பெற்ற மிகப் பெரிய நடராச மூர்த்தி வடிவம் இருப்பது இக்கோயிலில் தான். மேலும் இங்கு மகா மண்டபத்துத் தென்புறத்து வெளிச்சுவரில் தமது கணவர் சிவலிங்க பூசை செய்வதாக ஒரு புடைப்புச் சிற்பம் அமைத்தார். அதன்கீழ் உள்ள கல்வெட்டு பின் வருவது:

"ஸ்வஸ்தி ஸ்ரீ கண்டராதித்த தேவர் தேவியார் மாதேவடிகளாரான ஸ்ரீ செம்பியன் மாதேவியார் தம்முடைய திருமகனார் உத்தம சோழர் திரு ராஜ்யஞ் செய்தருளா நிற்கத் தம் உடையார் ஸ்ரீ கண்டராதித்த தேவர் திருநாமத்தால் திருநல்ல முடையார்க்குத் திருக்கற்றளி எழுந்தருளுவித்து இத்திருக்கற்றளியிலே திருநல்ல முடையாரைத் திருவடி தொழுகின்றாராக எழுந்தருளுவித்த ஸ்ரீ கண்டராதித்த தேவர் இவர்"

திருநல்லம் கோயிலைக் கட்டுவித்த அதிகாரி ஆலத்தூருடையான் என்பவனுக்கு இராசகேசரி மூவேந்த வேளான் என்ற சிறப்புப் பட்டம் அளிக்கப்பட்டது. இதே முறையில் இவர் தென்குரங்காடு துறை, திருக்கோடிகா, குத்தாலம், திருத்துருத்தி, திருமணஞ்சேரி, ஆநாங்கூர், அகத்தீச்சுரம், திருநறையூர்ச்சித்தீச்சுரம், திருவாரூர் அரநெறி, திருமுது குன்றம், திருவக்கரை ஆகிய கோயில்களைப் புதிய கற்கோயில்களாகக் கட்டினார். மேலும் இவர் பல கோயில்களில் தினசரி வழிபாட்டுக்காகவும், விழாக்களுக்காகவும் திருப்பதிகம் பாடுவோருக்காகவும், நந்தவனங்களுக்காகவும் எண்ணற்ற நிபந்தங்கள் அளித்துள்ளார். திருவிளக்குகள், அணிகலன்கள், பாத்திரங்கள் முதலியவற்றிற்காக இவ்வாறு நிபந்தம் அளிக்கப்பட்டது. அவ்வாறு அளித்த கோயிலுக்கு இரண்டாம் முறை அம்மையார் சென்றபோது, கொடுத்த பொருள் செம்மையாக உபயோகித்து இருக்க வேண்டும். இல்லாவிட்டால் கண்டிப்பாக விசாரணை. கணக்கனோ, அர்ச்சகனோ பொருளைக் காட்ட வேண்டும். காட்டத்தவறினால் உடனே தண்டனை. நியாயமான பழுதிருந்தால் அந்த இடத்திலேயே புதுப்பொருள் தரப்படும். இவற்றைப் பார்க்கும்போது இம்மாதேவியாரின் நிர்வாகத் திறன் எவ்வளவு நுட்பமானது என்பது புலப்படும். திருப்பணி செய்யப்பட்ட கோயில்கள் நீங்க, இவ்வாறு இவரால் பொருளும் நிபந்தமும் அளிக்கப்பட்ட கோயில்கள் திருவெண்காடு, தலைச்சங்காடு, திருவிசலூர், காட்டு மன்னார் கோயில், அகத்தீச்சுரம், திருவையாறு, பந்தணை நல்லூர், கீழைத் திருக்காட்டுப்பள்ளி, திருவேள்விக்குடி, பண்டார வாடை,

திருவோத்தூர், திருவல்லம், வடதிருமுல்லைவாயில், திருப்புறம்பயம் முதலாகப் பல. சாசனங்கள் எல்லாம் பிரதி செய்து அச்சிட்டு வெளிவந்தால் இன்னும் பல தலங்கள் தெரியக்கூடும்.

அன்றியும், செம்பியன் மாதேவியார் தம் வேலைக்காரி ஒருத்தியின் நன்மைக்காகத் திருவெண்காட்டுக் கோயிலில் பிராமண போஜனம் செய்விக்கும் பொருட்டு நிலதானம் செய்தார் என்று கல்வெட்டு கூறுகிறது. இது இவ்வம்மையாருடைய மனிதப் பண்பை மிக உயர்த்திக் காட்டுகிறது.

இவர் அரண்மனையில் இருந்து அரிஞ்சயன், சுந்தர சோழன் ஆகியோர் ஆட்சிக் காலத்தில் கோயில் திருப்பணியில் ஈடுபட்டிருந்தபோது, அரண்மனையில் இருந்த அரசிளங் குமரர்கள் இவரிடம் பாட்டியார் என்ற முறையில் மிக்க ஈடுபாடு கொண்டிருந்தார்கள். பாட்டியிடத்துப் பேரப்பிள்ளைகளுக்கு செல்லம் கிடைப்பது இன்றும் உலக இயல்புதானே! இவ்வாறு சுந்தர சோழனுடைய குழந்தைகளான ஆதித்த கரிகாலனும் குந்தவையும் பின்னால் இராச ராசன் என்று முடிசூடிக் கொள்ள இருக்கும் அருண்மொழி வர்மனும் இந்தப் பாட்டியின் செல்லப்பிள்ளைகளாக வளர்ந்தார்கள். இம்மூவருள் ஆதித்த கரிகாலன் இளவரசுப் பட்டம் பெற்றவன். இளவரசனுக்கு அரசாங்க வேலைகள் அதிகம் உண்டு. முன்னமே இளவரசுப் பட்டம் சூட்டிய இராசாதித்தன் ஒரு பகுதிநாட்டை ஆட்சி புரிந்து போரிலும் ஈடுபட்டு உயிர் துறந்தான் என்பதைக் கண்டோம். இவ்வாதித்த கரிகாலனும் அவனைப் போலவே ஆற்றல் வாய்ந்த இளவரசனாய் இருந்தான். ஏதோ துர்ப்பாக்கிய வசத்தால் அந்த நிலையிலேயே இறந்து போனான். அவனது வாழ்க்கையை நம் அம்மையார் செப்பம் செய்திருந்தும்கூட அவன் இளமையில் இறந்தமையால் அவனால் எந்தப் பயனும் விளையவில்லை. குந்தவைப் பிராட்டி, பாட்டியாரைப் போலவே மிக்க சிவ பக்தி உடையவராக வளர்ந்து பிற்காலத்தில் இராசராசனை இத்துறையில் அரும் சேவை செய்யும்படி தூண்டி வந்தார் என்று சரித்திரம் கூறுகிறது.

அருண்மொழிவர்மன் எல்லோரிலும் இளையவன். குழந்தைப் பருவம் முதலே இவனைத் தூக்கி எடுத்தும் தாமே உணவூட்டியும் உடை உடுத்திச் சீராட்டி வளர்த்தும் வந்தார் செம்பியன் மாதேவியார். பெரிய பாட்டியாராக அரண்மனையில் இருப்பவர்களுக்கு உரிமை அதிகம் உண்டல்லவா? அம்மையார் எந்த நேரமும் தலயாத்திரை செய்து கொண்டே இருந்தார். வடக்கே இப்போது உள்ள சென்னைக்கு

அப்பால் இருக்கும் வடதிருமுல்லைவாயில் வரைக்கும் இவர் போய் வந்தபோதெல்லாம், அருண்மொழித் தேவனும் உடன் சென்று வந்தான். இவர் செய்த ஒவ்வொரு கோயில் நிர்மாணத்தையும், திருப்பணியையும், மானியத்தையும் நேரடி இவன் உடன் இருந்து பார்த்தான். பார்த்தபோது குழந்தை உள்ளத்தில்,முடிந்தபோது தானும் அவ்வாறு செய்ய வேண்டும் என்ற எண்ணமும் இவன் மனத்தில் உண்டாயிற்று. அதனோடு, சிவாலய நிர்வாகத்துறையில் பெரிதும் வல்லவனும் ஆனான். இங்ஙனமாக செம்பியன் மாதேவியாருடைய தொடர்பினால் முழுப்பயன் இவனே பெற்றான். இவனுக்குத்தான் அம்மையாரோடு மிக நீண்டகாலத் தொடர்பு இருந்தது என்பதும் நோக்கத்தக்கது. இவன் பட்டமேற்று (985) 16 ஆண்டு காலம் (1001) அம்மையார் உயிரோடு இருந்தது தமிழ்நாடும் சைவமும் செய்த பெரும் புண்ணியம். இக்காலம் முழுமையும் இவர் இராசராச மன்னருக்கு உறுதுணையாகவும் தெய்வப் பணியின் வழிகாட்டியாகவும் தூண்டுகோலாகவும் விளங்கினார். இவ்வரசர் தமிழ் நாட்டைச் சிவலோகம் ஆக்கும் நெறியில் செலுத்தியதைக் கண்ணாரக் கண்டு களித்தார்.

சிறப்பான ஒன்றிரண்டு நிகழ்ச்சிகளை மட்டும் குறிப்பிடுவோம். சைவத் திருப்பாசுரங்களைப் பற்றிக் கேள்வியுற்ற இராசராச மன்னர், மறைந்து போயிருந்த தேவாரங்களை நம்பியாண்டார் நம்பியைக் கொண்டு வெளிப்படுத்திப் பண் வகுத்து ஆட்சிக்குக் கொண்டுவரச் செய்தார். திருப்பதிகம் ஓதுவதற்கு அம்மையார் நிபந்தம் அளித்தார் என்று கல்வெட்டு கூறுகிறது. இதை உடன் கண்டிருந்ததனாலேதான் இராசராசர் எல்லாவற்றையும் வெளிப்படுத்த வேண்டுமென்ற ஆசை கொண்டார். தேவாரங்களைச் செப்பேட்டில் எழுதி வைத்தார். தேவாரம் பாடுவதற்குக் கணக்கில் அடங்காத மானியங்கள் அளித்தார். தஞ்சைப் பெருங்கோயிலைக் கட்டினார்

செம்பியன் மாதேவியார் இறந்து 11 ஆண்டுகள் ஆனபின் இராசராச மன்னரின் புதல்வரான இராசேந்திரன் பட்டத்திற்கு வந்தான். அவனைத் தூண்டுவதற்கு அப்போது அம்மையார் இல்லை. ஆயினும் பால் மணம் மாறாப் பருவத்தில் ஏற்பட்ட உணர்வு என்றும் மாறாதல்லவா? அதனால் இவன் தந்தையைப் போலவே தானும் கங்கை கொண்ட சோழேச்சுரம் என்ற பெருங்கோயில் கட்டினான். கருவூர்த் தேவரைக் கொண்டு திருவிசைப்பா பாடுவித்தான். பின்னால் இந்த மரபில் இரண்டாம் குலோத்துங்கனால் வேண்டப் பெற்று சேக்கிழார் திருத்தொண்டர் புராணமாகிய பெரிய புராணம்

பாடினார். அவனுடைய மகனாகிய இரண்டாம் இராசராசன் மிகப் பெரிய திட்டம் வகுத்துத் தாராசுரம் கோயிலைக் கட்டினான். அடுத்த இரண்டாம் பட்டத்தில் வந்த மூன்றாம் குலோத்துங்க சோழன் திரிபுவனத்தில் சிறப்பு அமைந்த சரபமூர்த்தி கோயிலைக் கட்டினான். பிறகோயில்கள் எண்ணிலாதன. இவற்றிற்கெல்லாம் மூலம், செம்பியன் மாதேவியார் இராசராசனை ஆற்றுப்படுத்திய சைவ நெறியாகும்.

செம்பியன் மாதேவியார் தம் பெயராலேயே ஓர் ஊரை உண்டாக்கினார். இது தஞ்சை மாவட்டத்தில் சிக்கல், தேவூர் ஆகிய சிவத்தலங்களில் இருந்து நான்கு மைல் தொலைவில் செம்பியக்குடி என்ற பெயரால் இப்போது வழங்குகிறது. பிராமணரைக் குடியேற்றியமையால் 'செம்பியன் மாதேவிச் சுதர்வேதி மங்கலம்' என்று அக்காலத்தில் இட்ட பெயர் செம்பியக்குடி என்று திரிந்து விட்டது. இங்கு முன்னமே திருக்கயிலாயமுடையார் கோவில் ஒன்று இருந்தது. இது செங்கற் கோயில். இதை இவர் கற்கோயிலாகக் கட்டி வழக்கம்போல் இதில் தம் கணவர் பூசை செய்யும் வடிவம் அமைத்திருந்தார் (981). இதுவே இவர் கட்டிய கடைசிக் கோயில். இதற்குப் பல வகையான நிபந்தங்கள் அமைத்திருந்தார். இவருடைய மகன் உத்தமசோழனுக்கு மனைவிமார் ஐவர். இவ்வைவரும் தங்கள் மாமியாரின் பிறந்த நாளாகிய சித்திரைக் கேட்டையில் இங்கு விழா நடத்துவதற்காக மானியங்களும் அளித்திருக்கிறார்கள். இப்படி அம்மையார், மருமகள் - அதிலும் ஐவர் மருமகள்மார் மெச்சிய மாமியாராக வாழ்ந்திருந்தார்.

இராசேந்திரனைப் பற்றி முன்னமே குறிப்பிட்டோம். கங்கை கொண்ட சோழன் என்று சிறப்புப் பெற்ற பேரரசன். இவன் 1012இல் முடிசூடி 1044 வரையில் பெருமன்னனாக அரசு புரிந்தான். குழந்தைப் பருவத்தில் செம்பியன் மாதேவியார் இவனையும் தூக்கி வளர்த்திருக்கிறார். இவன் தந்தையை வளர்த்த பாட்டி, கொள்ளுப் பாட்டியாகி இவனையும் கொஞ்சியிருக்கிறார். அந்த நன்றி மறவாமல் இவன் முடிசூடிய ஏழாம் ஆண்டில் அம் மாதேவியார் கட்டிய செம்பியன் மாதேவிக் கைலாயமுடையார் கோயிலில் அவருடைய திருவுருவத்தை எழுந்தருளிவித்து, அதற்கு நித்திய வழிபாட்டிற்காக நிலங்களையும் அளித்தான். இதையும், இக்கோயிலில் அவன் இடபவாகன தேவரை எழுந்தருளியிருவித்ததையும், நந்தவனத்துக் காக நிலம் அளித்ததையும் அக்கிராம சபையார் இந்நிலங்களுக்கு வரிவிலக்கு அளித்ததையும் சாசனங்கள் கூறுகின்றன.

இக்கோயிலில் அமைக்கப்பட்ட ஒரு மண்டபம் செம்பியன் மாதேவி பெருமண்டபம் என்ற பெயருடையது. இதுபோலவே செங்கற்பட்டு மாவட்டம் திருமுக்கூடல் வேங்கடேசப் பெருமாள் கோவில் செம்பியன் மாதேவி பெருமண்டபம் என்ற மண்டபத்தை ஊர்ச் சபையார் கூடுவதற்காக இராசராச மன்னர் கட்டி வைத்தார். திருச்சி மாவட்டத்தில் திருமழபாடிக்கு அருகில் குலமாணிக்கம் செம்பியன் மாதேவிச் சதுர்வேதி மங்கலம் என்ற ஓர் ஊர் அமைக்கப் பெற்றது. அது இப்போது குலமாணிக்கம். செம்பியக் குடி என இரு ஊராக உள்ளது என்பர். குலமாணிக்கம் என்பது இவ்வம்மையாரைக் குறிக்க இராசராச மன்னர் கல்வெட்டில் உபயோகித்த தொடர். இதே ஊருக்கு அருகில் அவர் பெயரால் செம்பியன் மாதேவிப் பேரேரி என ஓர் ஏரியும் அக்காலத்தில் அமைக்கப் பெற்றிருந்தது. அப்பகுதியில் வழங்கிய ஓர் அளத்தற் கருவிக்கும் செம்பியன் மாதேவி எனப் பெயரிடப்பட்டிருந்தது. இவையெல்லாம், பின் வந்த சோழ மன்னர் இவ்வம்மையாரைப் போற்றிய முறை என்று கல்வெட்டினால் அறிகிறோம்.

பெண்கள் முன்னேற்றம் என்பது இந்த இருபதாம் நூற்றாண்டில் சமூக முன்னேற்றத்திற்காக ஓர் அங்கமாகக் கருதப்படுகிறது. இதன் பொருத்தம் இன்று எவ்வாறு இருந்தபோதிலும், பத்து நூற்றாண்டுக்கு முன்னே ஆயிரம் ஆண்டுகளுக்கு முன்னே பெண் மக்கள் எவ்வளவு பெருஞ்சிறப்போடு வாழ்க்கையில் எல்லாத் துறைகளிலும் ஈடுபட்டார்கள் என்பதற்குச் செம்பியன் மாதேவியார் வாழ்க்கை சிறந்த சான்றாக உள்ளது. ஒரு பெரும் அரச பரம்பரைக்கே நெறி வகுத்துக் கொடுத்து அதைத் தாமே நேரில் சுமார் அறுபது ஆண்டுக்காலம் நடத்திச் சென்ற பேராற்றல் இவருடையது. சைவ மரபில் காரைக்கால் அம்மையார் கணவனைத் தாமாகப் பிரிந்து சென்று இறைவனுடைய நடன தரிசனம் கண்டு அவன் திருவடியில் சேர்ந்தார். திலகவதியார் தமக்குக் கணவனாகத் தம் பெற்றோரால் வரிக்கப் பெற்றவர் போரில் இறந்தபோது, தாமாகக் கைம்மைக் கோலம் பூண்டு பரசமயத்தில் இருந்த தம் தம்பியாரைத் திருவருளால் சைவத்திற்கு மீட்டு, சிவத் தொண்டிலேயே காலம் கழித்தார். மங்கையர்க்கரசியார் பரசமயம் புகுந்திருந்த தம் கணவனை விட்டுப் பிரியாது சைவத்தில் முழுகி திருஞானசம்பந்தரை வரவழைத்து அவருடைய அருள் நோக்கால் தம் கணவரையும் நாட்டு மக்களையும் சைவத்திற்குத் திருப்பினார். சோழ அரசியாக இருந்த நம் செம்பியன் மாதேவியாரோ, இளமையில் கணவன் இறந்தபின் தாம் விதவையாகவே, நாட்டின் அரசியலில் குழப்பம் இல்லாது ஒழுங்குபடுத்தி, சில தலைமுறை அரச

குமாரர்களைச் சைவப்பற்று உடையவர்களாக வளர்த்து, அதன் வழியே, உலகம் எங்கும் கண்டிராதவாறு, நெடுங்காலம் சைவப் பயிர் தழையும்படி செய்தார்.

கி.பி. 940 முதல் 1001 வரையில் சோழர் அரண்மனையிலேயே இளவரசியாகவும், அரசியாகவும், அரசருடைய தாயாகவும், பாட்டியாகவும் வாழ்ந்த செம்பியன் மாதேவியார் சைவ நாயன்மார்கள் வரிசையில் சேர்க்கத்தக்கார். 12ஆம் நூற்றாண்டில் அதே சோழ அரசில் அமைச்சராக வாழ்ந்து திருத்தொண்டர் புராணம் பாடிய சேக்கிழார், சோழர் மரபின் வரலாறுகளை நன்குணர்ந்தவர். அவர் செம்பியன் மாதேவியார் வரலாற்றை ஓர் அடியார் புராணமாகப் பாடியிருப்பார், பாடாத காரணம் இம் மாதேவியாருக்குச் சுமார் நூற்றம்மைபது ஆண்டுகள் முற்பட்டு இப்பேரரசு தோன்றுவதற்கு முன் அவதரித்து முத்தி பெற்ற சுந்தரமூர்த்தி நாயானார் தமது திருத்தொண்டத் தொகையில் பாடியிருந்த அடியவர் வரலாறுகளை மட்டும் தான் புராணமாகப் பாட வேண்டும் என்று சேக்கிழார் தமக்கு ஒரு வரையறை விதித்துக் கொண்டிருந்தமைதான்.

சுருங்கச் சொன்னால், இன்று தமிழ்நாட்டின் பல பாகங்களில், சென்னைக்கு வடக்கிலும் கூட கணக்கில்லாத பெருங்கோயில்கள் தோன்றி வளர்ந்து நிலைபெற்று, சுற்றிலும் உள்ள மக்களுடைய வாழ்க்கையை நன்னெறிக் கண் நிறுத்தும் நிலையங்களாக அமைந்திருப்பது செம்பியன் மாதேவியாரின் சிவபக்தியாலும் சோழ மன்னர்களைப் பக்தித் துறையில் செலுத்திய பயிற்சியினாலுமாகும். இன்றைய சைவம் செம்பியன் மாதேவியார் இட்ட பிச்சை என்பது மிகையாகாது. கோயில் இருந்தால்தானே சைவம் என்பது உண்டு. தமிழ் மக்கள் கொஞ்சமேனும் பக்தியோ, நன்றி உணர்ச்சியோ, வரலாற்றறிவோ உடையவர்களாக இருந்தால், இத்தனை நாளும் தமிழ் நாடெங்கும் செம்பியன் மாதேவியாருக்காக எத்தனையோ கோயில்களும் சிலைகளும் அமைத்திருப்பார்கள் என்பது உறுதி.

பிற்காலத்தில் நாலாயிரம் வியாக்கியானத்திற்கு, ''சோழியன் உமிழ்ந்த சக்கை'' என்று முழுவதும் பெரியவாய்ச் சான்பிள்ளை வியாக்கியானம் செய்த மாதிரி, இன்றைய சைவம் ''செம்பியன் மாதேவி இட்ட பிச்சை'' என்பது மிகையாகாது.

1. சைவர்கள் நாள் தவறாமல் பூஜைக் காலத்திற்கு பூஜா தரிசனம் செய்வது என்று விரதம் வைத்துக் கொள்ள வேண்டும்.

2. சிறப்பு நாட்களில் தங்கள் கோயிலிலும், வீட்டிலும் பூஜை நிகழ்த்த வேண்டும். கோயிலிலும் சென்று தரிசிக்க வேண்டும்.

3. தங்கள் குழந்தைகளுக்குத் திருமுறைகள் யாவை என்பதைப் புகட்டி, முக்கியமான பாசுரங்களையேனும் கற்பித்து வைக்க வேண்டும்.

4. எழுதும் திறமையுடையோர் பள்ளிகளில் கீழ் வகுப்புகளிலிருந்து மேல் வகுப்புகள் வரை வகுப்பின் தரத்திற்கு ஏற்பச் சைவ சித்தாந்தம் என்பது பற்றிப் புத்தகங்கள் எழுதி வழங்க வேண்டும்.

5. பக்கத்திலுள்ள சிறந்த தலங்களுக்குச் சிறப்பு தினங்களில் குடும்பத்தோடு சென்று தரிசிக்க வேண்டும். உதாரணம் *சிதம்பரம்-ஆருத்ரா தரிசனம்*, சீகாழி - திருமுலைப்பால், ஆச்சாள்புரம்-சம்பந்தர் சோதியில் கலத்தல் விழா, மாயூரம் - கடைமுழுக்கு, குத்தாலம் போன்ற தலங்கள் - கார்த்திகை ஞாயிறு போன்றவை. திருவிடைமருதூர் - தைப்பூச விழா, ஓமாம்புலியூர் - மாசிமக விழா, திருப்பாதிரிப் புலியூர் - அப்பர் கரையேறிய திருவிழா *வைகுண்ட ஏகாதசி*, திருமயிலை அறுபத்து மூவர் உற்சவம், திருவெற்றியூர் மகிழடி சேவை முதலாயின. விழாக்கள் சம்பந்தமாக விழாக்களின் பொருளைத் தெரிந்து கொள்ள வேண்டும். ஆருத்ரா தரிசனத்தில் களி நிவேதனத்தின் பொருளை அறிந்திருக்க வேண்டும். சிறு வகுப்பு முதல் மேல் வகுப்புக்கள் வரையில் அந்தந்த வகுப்புக்கு ஏற்றவாறு சமய பாடபோதனைப் புத்தகம் எழுத வல்லோர் எழுதி அளிக்க வேண்டும். சைவம் என்றால் பதி, பசு, பாசம் என்ற மூன்றில் அடங்கிவிடவில்லை. ஏன் இத்தனை சாத்திர புத்தகங்கள் எழுதினார்கள். ஆதலால் மக்களுக்கு எடுத்துச் சொல்லத் தக்கவாறு, வரிசைப் படுத்தப்பட்ட சமய புத்தகங்கள் எளிய முறையில் எழுதி நன்கு பிரச்சாரப்படுத்த வேண்டும். இலங்கையில் ஜெய வர்த்தனா ஆட்சியில் இந்து சமயப் பிரச்சாரத்துக்காக சிங்கள அரசாங்கம் தமிழ் மக்களுக்காக என்று சைவ பாடப் புத்தகங்கள் 1 முதல் 8 வரை வெளியிட்டுள்ளார்கள். அவற்றைப் பார்த்தாவது நாம் கற்றுக் கொள்ள வேண்டும். சுருங்கச் சொன்னால் தினசரி ஆலய வழிபாடு திருமுறைப் பாராயணம் என்பவை ஒவ்வொருவரும் கடைப்பிடிக்க வேண்டும்.

சைவர்கள் பேச்சைக் குறைத்து செயலில் முனைப்பைக் காட்ட வேண்டும். எத்தனைப் பிரசங்கம் செய்தாலும் ஒரு பாட்டுப் பாடுவதற்கு ஈடாகாது. இராசராச மன்னன் அன்று நம்பியாண்டார்

நம்பியைக் கொண்டு வெளிப்படுத்தி தேவாரப் பாசுரங்களெல்லாம் மீண்டும் மண் தின்று விடும்படி நாம் விடக்கூடாது. அவை உயிர் உடையனவாகும். சைவ மக்களிடையே உலாவும்படி நாம் செய்ய வேண்டும். திருமங்கையாழ்வார் 70 (எழுபது) சிவன் கோயிலைக் கட்டியதை நாம் பார்க்க கோச்செங்கட் சோழன் ஒரு திருமால் கோயில் திருநரையூர் மணிமாடம் கட்டியதை பெரிதும் போற்றியிருக்கிறார். இதைப் பார்க்கும் போது நம்முடைய கடமை எவ்வளவு பெரியது என்று நமக்கு உணர்ச்சி வர வேண்டும். சைவம் என்பது திருமுறையிலும், அதனை பாடுவதிலும்தான் இருக்கிறது. பதி, பசு, பாசம் என்ற மூன்று வார்த்தைகளில் மட்டுமே அது இல்லை என்று சைவர் உணர வேண்டும்.

பிற்காலத்தில் வ.சு. செங்கல்வராய் பிள்ளை சேக்கிழாருக்குப் பின் சேக்கிழார் வழியிலேயே முருகனடியார் புராணமாக 'சேய்த் தொண்டர்புராணம்' என்று பெயரிட்டு 'அடியார் புராணம்' என்ற கருத்தை வளர்த்திருக்கிறார். அதையே நாம் பின்பற்ற வேண்டும் என்று சொல்லாவிட்டாலும்கூட அந்த நூல் எல்லாம் நம்முடைய கண்ணைத் திறக்க வேண்டும், கடவுள் மாமுனிவர் என்ற ஒரு அடியவர் மாணிக்கவாசகர் வரலாற்றை 545 பாடல் கொண்ட பெரிய நூலாகப் பாடியிருக்கிறார். அதனுள் பக்திச் சுவை தவிர எந்தச் சுவையும் நுழைய அவர் இடங் கொடுக்கவில்லை. அந்த அருமை காரணமாக அவருக்கு அன்றிருந்த சைவ மக்கள் அவர் பெயரையும் மறந்து கடவுள் மாமுனிவர் என்றே பெயரிட்டார்கள். ஒப்பற்ற பக்திமானாகிய திருமங்கை மன்னன் கோச்செங்கட் சோழன் ஒருதிருமால் கோயில் கட்டியதற்கே பெருஞ்சிறப்புக் கொடுத்து ஒரு சிவன் கோயில் எழுப்பியதையும் குறித்துப் பாடியிருக்கிறார். ஆழ்வார் இவ்வாறு பாடியிருக்கும்போது நாம் கணக்கில்லாத பாசுரங்களை வைத்துக் கொண்டு எவ்வளவு சிறப்புடன் கொண்டாட வேண்டும் இவ்வளவும் சொல்லி வந்தது செம்பியன் மாதேவி என்ற ஒரு பேரரசியால் எவ்வளவு சாதிக்க முடிந்தது என்பதைக் காட்டவே. சைவர்கள், நாம் இத்தனைக்கும் வாரிசு என்பதை மறக்காமல் நம்முடைய சொத்தைக் காப்பாற்றிக் கொண்டாட வேண்டும். இசைத் துறையில் நம்முடைய சொத்தை நாம் காப்பாற்றவில்லை. அது முழுமையும் பறிபோய்விட்டது என்பது பரிதாபம்.

இந்த நிலையில் அயோத்தியில் ஹிந்துக்கள் கூடி இராமருடைய கோயில் இருந்த இடத்தில் இராமர் வழிபாடு மீண்டும் நடத்த வேண்டுமென்று முயற்சி எடுக்கிறார்கள். இது யாருக்கோ வந்த

விருந்து என்று எண்ணாமல் சைவர்கள் இது நமக்குச் சம்பந்தமான கிளர்ச்சி என்று அந்த உணர்வோடு செயல்பட வேண்டும்.

கடைசியாக ஒரு வார்த்தை, நம் கண்முன்னே இராமகிருஷ்ண, விவேகானந்த சங்கங்கள் மக்கள் பணியில் சிறந்த சேவை செய்கிறார்கள். பெருமன்றமும் அந்த அளவுக்கு செயல்பட வேண்டும்.

*நமச்சி வாயவென் றுன்னடி பணியாப்*
*பேய னாகிலும் பெருநெறி காட்டாய்*
*பிறைகு லாஞ்சடைப் பிஞ்ஞக னேயோ*
*சேய னாகிநின் றலறுவ தழகோ*
*திருப்பெ ருந்துறை மேவிய சிவனே!*

# டாக்டர் திருமதி சாரதா நம்பி ஆரூரன்

(85ஆம் ஆண்டு விழா - திருவொற்றியூர், சென்னை)

## முன்னுரை

அவையின்கண் அமர்ந்துள்ள ஆன்றோர்களுக்கும், தாய்மார் களுக்கும் என் வணக்கங்களையும், இன்றைய சைவமங்கையர் மாநாட்டின் தலைமையாளராக என்னைப் பணித்த சைவ சித்தாந்த மகா சமாசத்தார்க்கு என் மனப்பூர்வமான நன்றிகளையும் தெரிவித்துக் கொள்கிறேன்.

## அடிகளாரும் சமாசமும்

சைவ சித்தாந்த மகா சமாசம் எங்கள் குடும்பத்தோடு நீண்ட காலத் தொடர்புடையது. என் கணவரின் பாட்டனார் மறைமலையடிகளார் வெளிப்பாளையம், தஞ்சை, திருச்சி, உறையூர் முதலிய சோணாட்டின் நகர்களில் உள்ள சைவ சித்தாந்த சபைகளிலும், தூத்துக்குடி சைவ சித்தாந்த சபையிலும் சொற்பொழிவுகளாற்றி யுள்ளார்; சைவ சித்தாந்த சபை விழாக்களில் அடிகளார் தலைமை ஏற்றுச் சிறப்பிக்காத விழாக்கள் இல்லை எனலாம்.

*''என்னை நன்றாக இறைவன் படைத்தனன்*
*தன்னை நன்றாகத் தமிழ் செய்யுமாறே''*

என்னும் வாக்கிற்கிணங்க அடிகளார் வழியில் நின்று இயன்ற அளவில் சைவமும் தமிழும் வளர்க்கப் பாடுபட வேண்டும் என்பதே என் அவா. 'அவனருளாலே அவன் தாள் வணங்கி' என்று மணிவாசகப் பெருந்தகை குறித்தது போல, இடையறாது இப்பணியில் ஈடுபடுத்தி வரும் இறையருளுக்குத் தலை வணங்குகிறேன்.

## அடிகளாரும் திருவொற்றியூரும்

*வாவி எல்லாம் தீர்த்தம் மணலெல்லாம் வெண்ணீறு*
*காவணங்கள் எல்லாம் கணநாதர் - பூவுலகில்*

*ஈது சிவலோகம் என்றென்றே மெய்த்தவத்தோர்*
*ஓதும் திரு ஒற்றி யூர்*

என்று இத்திருத்தலத்தின் அருமைகளைப் பாராட்டுகிறார் பட்டினத்தடிகள். சுந்தரமுர்த்தி நாயனாருடன் நெருங்கிய தொடர்புடைய இத்தலத்தை அடிகளார் பெரிதும் விரும்பினார். ஆதலால் அடிகள் அடிக்கடி ஒற்றியூர் சென்று எழுத்தறியும் பெருமானையும், வடிவுடை அம்மையையும் முருகப் பெருமானையும் மனமுருகப்பாடியும் பரவியும் வழிபட்டு வருவார். அடிகளாரின் உடல் நிலை குன்றியபோது, திருவொற்றியூர் முருகப் பெருமானை வழிபட்டு, நோய் நீங்கியதும், திருவொற்றியூர் முருகர் மும்மணிக் கோவை என்ற நூலைத் தம் நன்றியைத் தெரிவிக்கும் வகையில் பாடினார். சங்க இலக்கியக் கூறுகளனைத்தும் உடையதாய் திட்பமும் நுட்பமும் நிறைந்ததாய் இவ்விலக்கியம் அமைந்துள்ளது.

## சேக்கிழாரும் திருவொற்றியூரும்

தம்பிரான் தோழராகிய நம்பியாரூரர் திருவொற்றியூருக்கு வரு கின்றார். அவருக்களிக்கப்பட்ட வரவேற்பைச் சேக்கிழார் கூறும்போது,

*வண்ண வீதி வாயில்தொறும்*
  *வாழை கமுகு தோரணங்கள்*
*கண்ண நிறைபொற் குடந்தூப*
  *தீபம் எடுத்துத் தொழுவார்கள்*
*வரமங் கலநல் லியம் முழங்க*
  *வாசமாலை அணியரங்கில்*
*புரமங் கையர்கள் நடமாடப்*
  *பொழியும் வெள்ளப் பூமாரி*
*அரமங் கையரும் அமரர்களும்*
  *வீச அன்ப ருடன் புகுந்தார்*

(பெ.பு. ஏயர்கோன் 200, 201)

ஒற்றியூரில் புகுந்தவர் வானளாவிய கோபுரத்தை வணங்கி, திருக்கோயிலை வலம் வந்து, சிவபெருமான் சந்நிதியில் ஊனும் உயிரும் கரைந்துருக, உச்சிக்குவித்த கையுடன் வீழ்ந்து வணங்குகிறார்.

## ஆரூரரும் ஒற்றியூரரும்

"சோழவள்நாடு சோறுடைத்து" எனின் வான் பொய்த்ததால் பசும்புல்லும் தலைகாண்பது அரிதாயிற்று. நாட்டில் பஞ்சம் ஏற்படவே

மன்னன் எல்லாத் தலங்களில் படித்தரத்தையும் குறைத்தனுப்பிய கட்டளை ஓலையில் ஒற்றியூர் இறைவன் ஒருவரும் அறியாதபடி "ஒற்றியூர் நீங்கலாக மற்றையூர்க்கு இக்கட்டளை" என்று எழுதியதால் இவ்வூர்ப் பெருமான் "எழுத்தறியும் பெருமான்" எனப்படுகிறான்.

ஒற்றியூர்ப் பெருமானைக் கண்டு காதலாகிக் கசிந்து கண்ணீர் மல்கிய ஆரூரன்,

*பாட்டும் பாடிப் பரவித் திரிவார்*
*ஈட்டும் வினைகள் தீர்ப்பார் கோயில்*
*காட்டுங் கலமுந் திமிலுங் கரைக்கே*
*ஓட்டுந் திரைவாய் ஒற்றி யூரே*

என்று பாடிப் போற்றுகின்றார்.

பவளக் கனிவாய்ப் பாவை பங்கன், கவளக் களிற்றின் உரிவை போர்த்தான், படையார் மழுவன், பால் வெண்ணீற்றன், விடையார் கொடியன், வேத நாவன், அடைவார் வினைகள் அறுப்பவன், ஒற்றியூரும் அரவும் பிறையும் பற்றியூரும் பவளச் சடையான் என்றெல்லாம் துதித்து மகிழுகின்றார்.

தம்பிரான் தோழர் திருவொற்றியூரில் தங்கியிருந்த காலத்தில் எழுத்தறியும் பெருமானை மூன்று காலங்களிலும் நாள்தோறும் சென்று வழிபடுகின்றார். ஒருநாள் திருக்கோயில் 'கோவா முத்தும் கரும்பு ஏறாக் கொழுமென் முகையும் அனைய' மின்னுக் கொடியனையாள் சங்கிலியைக் கண்டு காதல் கொண்டு ஒற்றியூர் இறைவனின் சந்நிதியை அடைந்து,

*"மங்கை யொருபால் மகிழ்ந்ததுவும்*
  *அன்றி மணிநீள் முடியின் கண்*
*கங்கை தன்னைக் கரந்தருளும்*
  *காதல் உடையீர்! அடியேனுக்கு*
*இங்கு நுமக்குத் திருமாலை*
  *தொடுத்து என் உள்ளத்தொடை அவிழ்த்த*
*திங்கள் வதனச் சங்கிலியைத்*
  *தந்துஎன் வருத்தம் தீரும்*

(பெ.பு. ஏயர்கோன் 232)

என்று வேண்டுகிறார்.

சங்கிலியாரும், "உன்னடியார் தாள் பணிவோம் ஆங்கவர்க்கே பாங்காவோம் அன்னவரே எம் கணவர்; அவர் உகந்து சொன்ன பரிசே

தொழும்பாய்ப் பணி செய்வோம்'' என்று உறுதியுடன் வாழ்ந்தார். அவர் கனவில் இறைவன் தோன்றி,

*சாரும் தவத்துச் சங்கிலி! கேள்*
*சால என்பால் அன்புடையான்*
*மேரு வரையின் மேம்பட்ட*
*தவத்தான்; வெண்ணெய் நல்லூரில்*
*பாரும் அறிய யான் ஆள*
*உரியான்; உன்னை எனை இரந்தான்*
*வார்கொள் முலையாய்! நீ அவனை*
*மணந்தால் அணைவாய் மகிழ்ந்து*

என்று பணித்தருள, 'நின்னைப் பிரியேன்' என்று சங்கிலியாரிடம் சூளுரைத்து மணம் செய்கின்றார். நம்பி ஆரூரன் மகிழ மரத்தடியில் சூளுறவு செய்ததற்குத் தேவாரத்திலேயே அகச்சான்றுகள் உள்ளன.

*பொன்நவிலும் கொன்றையினாய்*
*போய்மகிழ்க்கீழ் 'இரு' என்று*
*சொன்னஎனைக் காணாமே*
*சூளுறவு மகிழ்க்கீழே*
*என்னவல்ல பெருமானே (7.89.9)*

என்ற தேவாரப் பாடல் வரிகள் இறைவனருளால் மகிழ மரத்தடியில் சூளுரைத்தமைக்குச் சான்று பகருகின்றன.

இன்றும் திருவொற்றியூரில் மாசித் திங்கள் ஒற்றீசனுக்கு உயர்ந்த பெருவிழா பதினொரு நாட்கள் நடைபெறும். மாசி மகத்தன்று நடைபெறும் மகிழடி சேவை விழா புகழ் பெற்றதாகும்.

சங்கிலியாருடன் வாழும் காலத்தில் திருவாரூர் நினைவு மூண்டதால், சங்கிலியாரைப் பிரித்து ஒற்றியூர் எல்லையைக் கடந்தபோது இரு கண்களையும் இழக்கின்றார். 'மை விரவு கண்ணார் பால் சூளுறவு மறுத்ததனால் இவ்வினை வந்தெய்தியது' என்பதை உணர்ந்து இறைவன் முன் நின்று 'அழுக்கு மெய் கொடு' என்ற முதற்குறிப்புடைய திருப்பதிகம் பாடிப் போற்றுகின்றார்.

இப்பதிகத்தில்

*''மூன்று கண்ணுடையாய் அடியேன்கண்*
*கொள்வதே கணக்கு வழக்காகில்*
*ஊன்றுகோல் எனக்காவது ஒன்றருளாய்'' (4)*

*"கழித்தலைப்பட்ட நாயது போல*
*ஒருவன்கோல் பற்றிக் கறகற இழுக்கை*
*ஒழித்து நீ அருளாயின செய்யாய்" (5)*

*"அகத்திற் பெண்டுகள் நானொன்று சொன்னால்*

*'அழையேல் போ குருடா' எனத் தரியேன்*
*முகத்திற் கண்ணிழந்து எங்ஙனம் வாழ்கேன்"*

என்றெல்லாம் ஆரூரன் இறைவனை விளித்துப் பேசும் உரையாடல்கள் இரண்டு கண்களையும் இழந்து அவர்படும் பாட்டை விளக்குவன.

தாமே வலிய வந்து ஆட்கொண்ட வன்தொண்டராயினும் சூளுறவு பொய்த்ததால் ஒற்றியூர் இறைவன் அவருக்கு விரைந்து அருள் புரிந்திலன். திருவெண்பாக்கத்தில் ஊன்று கோலும், காஞ்சியம்பதியில் இடக்கண்ணும் கொடுத்தருளுகின்றார்.

இங்ஙனம் நம்பியாரூரன் வாழ்வில் திருவொற்றியூர் சிறப்பிடம் பெறுகிறது. சைவசித்தாந்த மகாசமாசத்தின் ஆண்டுவிழா திருவொற்றியூரில் நடைபெறுவதும், மங்கையர் மாநாட்டுக்கு நம்பியாரூரன் மனைவி தலைமை வகிப்பதும் இறைவனருளே!

## "சமயம்" என்பதன் பொருளும் நோக்கமும்:

சமயம் என்பது சமைத்தல் என்ற சொல்லடியாகப் பிறந்தது. சமைத்தல் எனில் பக்குவப்படுத்துதல். இவ்வுலகில் தோன்றி வாழும் உயிர்களை அல்வழி நீக்கி நல்வழிப்படுத்துவது சமயம். வையத்துள் வாழ்வாங்கு வாழும் நெறியைச் சொல்வது சமயம். "நம்மை யாரென உணர வைப்பதும், நமக்குள்ள துன்பங்கள் யாவை என்பதைப் புலப்படுத்துவதும், அத்துன்பங்கள் ஏன் நேர்கின்றன என்பதைச் சுட்டுவதும், அவற்றைக் களைவதற்கு வழிகள் யாவை என்று கூறுவதும், அவ்வழியிலே இட்டுச் செல்லும் குருவை அடைவிப்பதும், அவ்வழியிலே நம்மைச் செலுத்துவதும், இறுதியில் முடிவிலா இன்பத்தில் நம்மை ஆழ்த்துவதும் சமயமே ஆகும்" என்பர் சான்றோர்.

சாதி, மதம், நாடு, மொழி, நிற வேற்றுமைகளைப் பாராட்டாமல், எல்லா உயிர்களிடத்தும் ஒரே வித அன்பு செலுத்துமாறு மக்களைத் தூண்டுவதும், தனக்கென வாழாமல் பிறர்க்கென வாழுமாறு அறிவுறுத்துவதும், உயர்வு தாழ்வு பாராட்டாமை, பணிவுடைமை, இனசொல் உடைமை, பொது நலமனப்பான்மை போன்ற விழுமிய

நோக்கங்களை அடையச் செய்வதாகவும் சமயம் இருத்தல் வேண்டும். இவ்வனைத்துப் பண்புகளையும் கொண்டு தொன்மைச் சிறப்புடன் விளங்குவது நம் சைவ சமயமாகும்.

## சைவம் பழமையானது

இன்று நிலவும் சமயங்கள் யாவும் தோன்றுதற்குப் பல்லாயிரம் ஆண்டுகட்கு முன்பே சிவ நெறியாம் 'சைவம்' செழிப்புற்றிலங்கியது. சைவம், வைணவம் என்ற பெயர்கள் இந்நெறிகட்கு இல்லாமல் இருந்திருக்கலாம் அல்லது வேற்றுப் பெயர்கள் வழங்கி யிருந்திருக்கலாம் எனவும், மணிமேகலையில்தான் முதன் முதலில் சைவம் என்ற சொல் காணப்படுவதாகவும் மறை. திருநாவுக்கரசு அவர்கள் குறிப்பிடுகின்றார். (மறைமலையடிகள் வரலாறு, ப. 447) சைவ சமயத்தின் பெயரைக் குறிப்பிடுவதோடு அதன் முதன்மையான கோட்பாடுகளையும் மணிமேகலை குறிப்பிடுகிறது.

*...இறைவன் ஈசன் என*
*நின்ற சைவ வாதி நேர் படுதலும்*
*பரிசு நின் தெய்வ மெப்படித் தென்ன*
*இரு சுடரோடு இயமானன் ஐம் பூதம் என்று*
*எட்டு வகையும் உயிரும் யாக்கையுமாய்க்*
*கட்டி நிற்போனும் கலை உருவினோனும்*
*துடைத்துத் துயர்தீர் தோற்றத் தோனும்*
*தன்னில் வேறு தானொன்று இலோனும்*
*அன்னோன் இறைவன் ஆகுமென்று உரைத்தனன்.*

(மணி, சமயக் கணக்கர் தந்திறம் கேட்ட காதை)

இங்கு இறைவனுடைய இயல்புகளாகச் சாத்தனார் கூறுவன யாவும் சிவனுக்குப் பொருந்தி அமையக் காணலாம். பொருளெல்லாம் தானாகி, உயிரெல்லாம் தானாகி, அவற்றை ஆட்டுவிப்பவனாக இறைவன் இருக்கிறான் என்ற மணிமேகலை கருத்தை,

*"வானாகி மண்ணாகி வளியாகி ஒளியாகி*
*ஊனாகி உயிராகி உண்மையுமாய் இன்மையுமாய்..."*

இறைவன் விளங்குவதை மாணிக்கவாசகர் பாடிப் பரவுகின்றார். இறைவன் ஒருவனே என்பதை,

*"ஒருவனென்னும் ஒருவன் காண்க"*
*"உருமூன்றுமாகி உணர்வரிதாம் ஒருவனுமே"*

என்று மாணிக்கவாசகரும்,

*''ஒன்றே குலம் ஒருவனே தேவன்''*

என்று திருமூலரும் வலியுறுத்துகின்றனர்.

இறைவன் எப்பொருளிலும் எவ்வுயிரிலும் இரண்டறக் கலந்துள்ளான் என்பதை,

*''நீயலாற் பிறிது மற்றில்லை''*

*''ஒன்று நீயல்லை யன்றி யொன்றில்லை''*

என்பவற்றின் மூலம் மாணிக்கவாசகர் விளக்குகிறார்.

## சைவமே உலக சமயமாதற்கு உகந்தது

தான் தோன்றிய காலத்தால் மட்டுமன்றித் தன் இணையில்லா உயர்ந்த உண்மைக் கருத்துகளாலும், ஏனைய சமயங்களை வெறுக்காமல் அவற்றுள் ஏற்கக் கூடியனவற்றை ஏற்று அமைதி கூறுவதாலும் சைவம் ஒன்றே உலக சமயமாக விளங்குதற்குரியது என்பது மறைமலையடிகளார் கொள்கையாகும். ஆங்கிலம், வடமொழி, தமிழ் மும்மொழி நூல்களிலும் உள்ள சமய நூல்களை ஆராய்ந்தும், அறிவியல் கண் கொண்டு நோக்கியும் இம்முடிவுக்கு அடிகளார் வந்தார். அடிகளார் முடிவுக்கு மூவர் தேவாரங்களிலிருந்தும் சான்றுகள் காணலாம்.

*''சமணொடு புத்தம் ஆக்கியவாறு'' (சம்பந்தர்)*

*''எங்கேனும் யாதாகிப் பிறந்திடினும் தன்னடியார்க்கு*
*இங்கே என்றருள் புரியும் எம்பெருமான்'' (சம்பந்தர்)*

*''விரிவிலா அறிவினோர்கள் வேறொரு*
*சமயஞ் செய்தே*
*எரிவினாற் சொன்னாரேனும்*
*எம்பிராற்கு ஏற்றதாமே'' (நாவுக்கரசர்)*

*''ஆறு ஒன்றிய சமயங்களின் அவ்வவர்க்கு*
*அப்பொருள்கள் வேறு ஒன்றிலாதன....*
*இன்னம் பரான்றன் இணையடியே'' (நாவுக்கரசர்)*

*''அறிவினால் மிக்க அறுவகைச் சமயம்*
*அவ்வவர்க் கங்கே ஆரருள் புரிந்து'' (சுந்தரர்)*

எனவரும் தேவாரப் பாடல்களால் எல்லாச் சமயங்களும் ஒன்று என்பதே நாயன்மார் கண்ட நன்னெறி என்பது பெறப்படும்.

"சைவ சமயமே சமயம்" என்றும்

"பொய் வந்துழலும் சமய நெறி புகுத வேண்டா" என்றும் தாயுமானவர் கூறினார் எனினும், எல்லாச் சமயங்களும் இறைவனை அடைய வழி காட்டும் நல்லாறுகளே என்ற கருத்தில் இவருக்கு மாறுபாடில்லை. சாதி வேறுபாடு கருதாமல் மக்களனைவரையும் நேசித்த பெருமனம் படைத்தவர். அதனால்தான்,

*"எல்லாரும் இன்புற்றிருக்க நினைப்பதுவே*
*அல்லாமல் வேறொன்று அறியேன் பராபரமே"*

என்று பாடுகின்றார்.

## சைவ சமயமும் சமரசமும்

பிற சமயங்களையும் அன்புடன் ஏற்றுத் தன் அங்கமாகச் சேர்த்துப் போற்றும் தன்மை சைவ சமயத்திற்குரியது.

*"யாதொரு தெய்வங் கொண்டீர்*
*அத்தெய்வமாகி ஆங்கே*
*மாதொரு பாகனார் தாம் வருவர்"*

என்று சிவஞான சித்தியாரும்,

*"சைவம் முதலாம் அளவில்*
*சமயம் வகுத்து மேல்*
*சமயம் கடந்து மோன சமரசம் வகுத்த நீ"*

என்று தாயுமானவரும்,

*"ஓது சமயங்கள் பொருளுணரு நூல்கள்*
*ஒன்றோடொன்று ஒவ்வாமல் உளபலவும் இவற்றுள்*
*யாது சமயம் பொருள் நூல்யா திங்கென்னில்*
*இதுவாகும் இதுவல்ல எனும் பிணக்க தின்றி*
*நீதியினால் இவையெல்லாம் ஓரிடத்தே காண*
*நிற்பதுயா தொரு சமயம் அதுசமயம் பொருணூல்'*

என்று அருணந்தி சிவாச்சாரியாரும் பாடியுள்ளமை சைவ சமயத்தின் பரந்த நோக்கினையும், சமரசப் போக்கையும் நமக்குணர்த்தும்.

## சமயமும் சமுதாயமும்

சைவ சமயம் மக்களுடைய வாழ்வோடு ஒன்றிய சமயமாகும். அக்காலத்தில் கோவில்கள் இறைவழிபாட்டுக்குரியவாக மட்டும்

செயல்படாமல் நாட்டின் பொருளாதாரம், அரசியல், நீதி முதலிய துறைகள் செயல்படுதற்குரிய நிலையங்களாகவும் விளங்கின. கோயில்களை மையமாகக் கொண்டே மக்களின் நாட்டு வாழ்வும், அரசியல் வாழ்வும் இயங்கின. கோயில்கள் வாயிலாக இயல், இசை, நாடகங்களை இறவாது காத்தனர். நம் நாட்டு ஓவியக்கலை, சிற்பக்கலை, கட்டிடக்கலைகளின் அருமை பெருமைகளையறிய விழைவோர் நம் நாட்டுக் கோயில்களில்தான் அவற்றின் சிறப்பையறிய இயலும். தஞ்சைப் பெரிய கோவிலைக் கட்டிய இராசராசன், நாட்டியமாடும் பெண்கள், தேவாரம் பாடும் ஓதுவார்கள், நட்டுவாங்கம் செய்வோர், கருவியிசை வழங்குவோர் அனைவரையும் கோயிலில் குடியேற்றி நிவந்தங்கள் வழங்கியதைக் கல்வெட்டுக்கள் உணர்த்துகின்றன. இப்படிப்பட்ட கோயில்கள் இல்லா ஊரில் குடியிருக்க வேண்டாமென்பது முன்னோர் பழமொழி.

*''திருக்கோயில் இல்லாத திருவிலூரும்...*
*பாங்கினொடு பலதளிகள் இல்லா ஊரும்*
*அவையெல்லாம் ஊரல்ல''*

என்பது அப்பர் வாக்கு.

## திருக்கோயில் வழிபாடு

இந்து சமயம் இன்றும் நின்றுலவ நம் நாட்டிலுள்ள பெருங் கோயில்களும், அவற்றில் நடைபெறுகின்ற வழிபாடுகளும் பெருந்துணை புரிகின்றன. கடவுளன்பிலும், உயர் பண்பிலும், அறவாழ்விலும், ஆன்ம உணர்விலும் உய்த்து நம்மை உயர்த்துவன கோயில்களே!

பார்க்குமிடமெங்கும் நீக்கமற நிறைந்துள்ள பரம் பொருளைக் கோயிலுக்குச் சென்றுதான் வழிபடவேண்டுமா என்கின்றனர் சிலர்.

நிலத்துக்கடியில் நீர் நிறைந்திருந்தபோதிலும் தோண்டிய இடத்தில்தான் நீர் வெளிப்படுகிறது. அதுபோல இறைவன் எங்கும் நிறைந்திருந்தாலும் திருக்கோயில்களிலேயே வெளிப்பட்டுக் காட்சியளிக்கின்றான்.

பசுவின் உடல் முழுதும் பால் மறைந்திருந்த போதிலும், மடியின் மூலமாக வெளிப்படுவது போல, இறைவன் எல்லா இடங்களிலும் உறைந்திருப்பினும் திருக்கோயிலில் காட்சியருளும் திருமூர்த்தம் வாயிலாகக் காட்சி தந்து அருள் புரிகின்ற தன்மையை

*"இருஞ்சுரபிக் கெங்கும் உருக்காண*
*ஒண்ணாத பால் முலைப்பால் விம்மி*
*ஒழுதுவது போல வெளிப்பட்டருள்வன் அன்பர்க்கே"*

என்று சிவஞானசித்தியாரும்,

*"எங்கும் சிவனிருப்பன் ஆனாலும் ஏசற்ற*
*சங்கத்தும் சற்குருவின் தன்னிடத்தும்-லிங்கத்தும்*
*ஆவினுடம் பெல்லாமும் ஆவரித்து நிற்கினும்பால்*
*பாவு முலைக்கண் மிகுதிப் பார்"*

என்று ஞானப்பிரகாச வெண்பாவும் குறிப்பிடுகின்றன. திருக்கோயில் வழிபாடே சிறந்தது என்பதை,

*"மலற நேயம் மலிந்தவர் வேடமும்*
*ஆலயந் தானும் அரன் எனத் தொழுமே"*

என்று சிவஞான போதம் வலியுறுத்துகிறது.

பிற சமயத்தினர் திருக்கோயில் வழிபாட்டுக்குக் கொடுக்கும் சிறப்பிடத்தை நாம் கொடுப்பதில்லை. வெள்ளிக்கிழமைகளில் இசுலாமிய மதத்தைச் சார்ந்தவர்களும், ஞாயிற்றுக்கிழமைகளில் கிறித்தவர்களும் அவரவர் இறைவனை வழிபடும் ஆலயங்களுக்கு ஒழுங்காகச் சென்று வழிபடுவதை வாழ்க்கை நெறியாகக் கொண்டுள்ளனர். இந்து சமயத்தினரும் பண்டிகை நாட்களிலும், வாரம் ஒரு முறையும் திருக்கோயில்களுக்குச் செல்வதை வழக்கமாகக் கொள்ள வேண்டும்.

மறைமலையடிகளார் தாம் ஒரு ரூபாய் சம்பாதித்தால் நான்கணாவை உண்டியலில் போட்டு விடுவார். ஒவ்வோராண்டும் இப்படிச் சேமித்த பணத்தில் தம் குடும்பத்தாரை அழைத்துக் கொண்டு பாடல் பெற்ற தலங்களுக்குச் சென்று வழிபட்டு வருவார். நாமும் தலவழிபாட்டுக்கென நம் வருமானத்தில் ஒரு பகுதியை ஒதுக்குவோமெனில் எல்லாக் கோயில்களிலும் மக்கள் கூட்டம் பெருகும்; கோயிலின் வருவாய் கூடும்; பராமரிப்பின்றிப் பழுதடைந்துள்ள கோயில்களுக்கும் நன்மை ஏற்படும்!

## இறைவனை அடையும் வழி

நாயன்மார்கள் வரலாற்றைப் பார்க்கும்போது இறையருளை அடையச் செம்மையான நெறிமுறைகளை மேற்கொண்டிருந்தமை புலனாகும். சைவ சமயத்தின் நெறிகளாகத் திரு.வி.க. அவர்கள்

உயர்ந்தோர் தாழ்ந்தோருக்குழைத்தல், கைம்மாறற்ற பணி, பிறப்பு வேற்றுமை பாராட்டாமை, எவ்வுயிரையும் தன்னுயிர் போல் பாவித்தல், பிழை பொறுத்து மன்னித்தல், பெண்மையைப் போற்றல் போன்ற பண்புகளைச் சுட்டுகிறார்.

*''தன் கடன் அடியேனையும் தாங்குதல்*
*என் கடன் பணி செய்து கிடப்பதே''*

என்ற கொள்கையுடன் வாழ்ந்த அப்பர் பெருமான் இறையருள் பெறும் நெறியை விளக்குகிறார். உண்மை என்ற உழவை மேற்கொண்டு, ஆர்வமென்னும் விதையை ஊன்றி, பொய்மையாகிய களையை யகற்றி, பொறுமையெனும் நீரூற்றி, தகவாகிய வேலியிட்டு, செம்மையான நெறியில் வாழ்ந்தால் சிவனருள் கிட்டும் என்கிறார்.

*''மெய்ம்மையாம் உழவைச் செய்து*
*விருப்பெனும் விதையை வித்திப்*
*பொய்ம்மையாம் களையை வாங்கிப்*
*பொறையெனும் நீரைப் பாய்ச்சித்*
*தம்மையும் நோக்கிக் கண்டு*
*தகவெனும் வேலியிட்டுச்*
*செம்மையுள் நிற்ப ராகில் சிவகதி விளையு மன்றே!''*

என்று அருள் நிலையடையும் வழியினை அருளுகிறார் அப்பர்,

*''பணியுமாம் என்றும் பெருமை''*

என்பதற்கிணங்க, நாயன்மார்களின் தொண்டு பணிவுடன் கூடியதாக இருந்ததை நாம் சிந்தித்துப் பார்த்தல் வேண்டும்.

*''தாழ்வெனும் தன்மையோடு சைவமாம்*
*சமயஞ்சாரும் ஊழ் பெறல் அரிது''*

என்று அருணந்தி தேவரும்,

*''மானுடப் பிறவிதானும் வகுத்தது மன வாக்குக் காயத்தால்*
*ஆனிடத்தஞ்சு மாடும் அரன் பணிக்காகவன்றோ*
*வானிடத்தவரும் மண்மேல் வந்து அரன்தனை யர்ச்சிப்பர்''*

என்பார் அருணந்தி சிவம்.

எனவே சைவ சமயத்தில் பிறந்தவன் பயன் இறைபணியும், அடியார் பணியுமேயாகும்.

## அன்பே சிவம்

விலங்குணர்சியைப் போக்கி, மனித உணர்வை மேலோங்கச் செய்வது அன்புணர்வே! அவ்வன்பை நல்லொழுக்கத்திற்கும் நல்வாழ்விற்கும் அடிப்படைக் கொள்கையாகக் கொண்டு பிற உயிர்களிடத்து அன்பு செலுத்துவோரே 'சைவர்' என்று அழைக்கத் தக்கவர்கள்.

சைவம் என்பது சிவத்தோடு தொடர்புடையது. அந்தச் சிவம் என்பது யாது? அன்பே சிவம் என்பதைத் திருமூலர்,

*''அன்புஞ் சிவமும் இரண்டென்பர் அறிவிலார்*
*அன்பே சிவமாவ தாரு மறிகிலார்*
*அன்பே சிவமாவ தாரு மறிந்தபின்*
*அன்பே சிவமா யமர்ந்திருப் பாரே''*

என்கிறார். அன்புடன் வாழ்வதை அடிப்படையாகக் கொண்டவர்களே சைவ சமயத்தினர் என்று சொல்லிக் கொள்ளத்தக்கவர்கள் என்பது பெறப்படும்.

## பிறப்பொக்கும் எல்லா உயிர்க்கும்

நாயன்மார்கள் பல்வேறு இனத்தினராகவும், பல்வேறு தொழில் செய்பவர்களாகவும் வாழ்ந்தமை சைவ சமயத்தில் சாதி வேற்றுமைக்கு இடமில்லை என்பதை உணர்த்தும்.

*''சாத்திரம் பலபேசுஞ் சழக்கர்காள்*
*கோத்திரமுங் குலமுங் கொண்டு என் செய்வீர்?...*
*மாத்திரைக்குள் அருளும் மாற்பேறரே''*

என்று சாதி சமய வேற்றுமைகளைச் சாடுகிறார் அப்பர்.

*''ஆவுரித்துத் தின்றுழலும் புலைய ரேனுங்*
*கங்கைவார் சடைக்கரந்தார்க் கன்பராயின்*
*அவர் கண்டீர் நாம் வணங்குங் கடவுளாரே*

என்று அறுதியிட்டுக் கூறுகிறார்.

இறைவன் உறையும் இடம் எது என்ற கேள்விக்கு வள்ளலார் விடையளிக்கும்போது, எல்லா உயிர்களையும் பேதமின்றித் தம் உயிர்போல எண்ணி ஒத்த உரிமை உடையவர்களாக யார் எண்ணுகிறார்களோ அவர்களுடைய உள்ளமே இறைவன் நடனமிடும் இடம் என்கிறார்.

## சைவமும் மகளிரும்

தமிழுக்கு ‘கதி’ யாவார் கம்பனும், திருவள்ளுவரும் என்பர். சைவ சமயத்திற்கு ‘மதி’யாகத் திகழ்ந்தவர்கள் மங்கையர்க்கரசியாரும், திலகவதியாருமாவர். இருந்தமிழ் நாடுற்ற இடர் நீக்கித் தங்கள் பொங்கொளி வெண்திருநீறு பரப்பியவர் மங்கையர்க்கரசியார்; மருள் நீக்கியாரைச் சமண சமயத்திலிருந்து மீட்டவர் திலகவதியார்; தம்பியார் உளராக வேண்டுமென்ற கருணையால் உயிர் தாங்கியவர்; ‘‘அடியேன் பின் வந்தவனை ஈண்டு வினை பரசமயக் குழிநின்றும் எடுத்தாள வேண்டும்’’ என்று இறைவனிடம் வேண்டினார். இறைவன் சூலை நோயைக் கொடுத்து நாவுக்கரசரை ஆட்கொண்டான். மற்றும் நாயன்மார்களனைவருமே இறையருளைப் பெறுவதற்கு அவர்தம் துணைவியர் தற்காத்துத் தற் கொண்டான் பேணித் தகைசான்ற, சொற்காத்துச், சோர்விலாத பெண்களாக விளங்கியமையே காரணமாகும்.

### சமயத்தைப் பாதுகாத்தல்

இன்றுள்ள நிலையில் நம் சைவசமயத்தைப் பாதுகாத்து வளர்ப்பதற்குரிய வழிமுறைகளைச் சிந்தித்துப் பார்த்தல் வேண்டும்.

இளைய தலைமுறையினர் சமயத்தின் மீது பற்றும், நம்பிக்கையும் வைப்பதற்கான வழிவகைகளைப் பற்றிச் சிந்தித்து, அதன் முடிவுகளைச் செயல்படுத்த வேண்டும்.

பலகோயில்களின் பொருளாதார நிலை அன்றாட வழிபாடுகளுக்குக்கூட போதுமான நிலையில் இல்லை. குத்தகை என்ற பெயரில் பதவியும், செல்வாக்கும் உடையவர்கள் கோயில் சொத்தை அனுபவிப்பது ஒடுக்கப்படல் வேண்டும். ‘சிவன் சொத்து குல நாசம்’ என்பது உணர்த்தப்பட வேண்டும்.

திருப்பதி, மதுரை, பழனி போன்ற கூட்டம் அதிகம் வருகின்ற கோயில்களில் வசதி உடையவர்களே இறைவனை நன்றாக வழிபட முடியும். இந்நிலையை மாற்ற பொள்ளாச்சி திரு.நா. மகாலிங்கம் அவர்கள் சொன்னதுபோல கருவறைக்கு எதிரில் உள்ள கூடங்களையும், தூண்களையும் அகற்றிவிட்டு சந்நதிக்கு நேரே பெரிய கூடங்களை அமைத்தால் மக்கள் ஆயிரக்கணக்கில் ஒரே நேரத்தில் இறைவனை வழிபட முடியும்.

கோயில்களிலும், அதன் சுற்றுப் புறங்களிலும் தூய்மை பேணப்பட வேண்டும்; ஆரவாரத்தைக் குறைத்து அமைதியான முறையில்

வழிபாடு செய்தல் வேண்டும். பன்னிரு திருமுறைகளில் ஒரு சில எளிய பாடல்களையாவது எல்லோரும் குறிப்பாகக் குழந்தைகளும், இளைஞர்களும் பாடம் செய்து வைத்திருத்தல் வேண்டும். கூட்டு வழிபாட்டுமுறை பயிற்சி செய்யப்படல் வேண்டும். சமயத் தலைவர்களும், நம் மடங்களும் கல்வி வைத்தியத்துறை போன்ற பணிகளை இன்னும் அதிகமாக நடத்துதல் வேண்டும்.

சைவ சமயச் சின்னமான திருநீறு பூசுவதை இளைஞர்கள் நாகரிகக் குறைவாக எண்ணக் கூடாது. ''நீறிடாதவரைக் கண்டால் அம்ம நாம் அஞ்சுமாறே'' என்பார் மணிவாசகப் பெருமான். 'மந்திரமாவது நீறு' என்பதைக் குழந்தைகள் மனதில் பதிய வைக்க வேண்டும். நம் சமய வரலாறு, கோவில்களின் சிறப்பு, நாயன்மார் வரலாறு போன்றவற்றைப் பிள்ளைகள் அறிந்திருத்தல் வேண்டும். ''கல்வியின் குறிக்கோள் வலிமையுள்ளவரையோ அறிவுமிக்கவரையோ, அரசியல்வாதியையோ அல்லது நிதியில் சிறந்தவரையோ உற்பத்தி செய்வதன்று. ஒழுக்கம் நிறைந்த மனிதனையும், ஆன்மீக உணர்வு வாய்ந்த மனிதனையும், முழுமை வாய்ந்த மனிதனையும் உற்பத்தி செய்வதே'' என்கிறது கீதாஞ்சலி.

இக்கருத்துக்களை மனதில் கொண்டால் மேன்மை கொள் சைவ நீதி உலகமெங்கும் விளங்குமென்பதில் ஐயமில்லை!

# ஸ்ரீலஸ்ரீ காசிவாசி முத்துக்குமாரசுவாமித் தம்பிரான் சுவாமிகள்

(87ஆம் ஆண்டு விழா-திருப்பனந்தாள்)

தமிழ் கூறும் நல்லுகத்துச் சிவநெறியையும் செந்தமிழ் நெறியையும் பேணி வளர்த்து வரும் நிறுவனங்களுள் சென்னை சைவ சித்தாந்தப் பெருமன்றம் குறிப்பிடத்தக்கதொரு நிறுவனமாகும். இப்பெருமன்றம் கடந்த 87ஆண்டுகளுக்கு முன் சென்னையில் நிறுவப்பெற்று, பல்வேறு அரிய பணிகளைச் செய்து வருகிறது. இன்று அதன் கிளை நிறுவனங்கள். பல இடங்களிலும் நிறுவப்பெற்று அவற்றின் வழியாகவும் பல பணிகளைச் செய்து வருகின்றது. இந்நிறுவனம் நடத்திவரும் விழாக்கள் பல. அடக்க விலையில் அரிய பல குறிப்புகளுடன் வெளியிட்டு தனிவரும் நூல்கள் பல. தமிழிலும் ஆங்கிலத்திலும் சித்தாந்தம் எனும் பெயரில் திங்களிதழாகவும், முத்திங்களிதழாகவும் வெளியிட்டு அவற்றின் வழி, வழங்கிவரும் அரிய செய்திகள் பல. பல்வேறு அறக்கட்டளைகளின் வழி, ஆற்றிவரும் அரிய சொற்பொழிவுகள் பல. ஆண்டுதோறுமாகவும், அவ்வப் பொழுதுமாகவும், தலயாத்திரை மேற்கொண்டு வணங்கி மகிழ்ந்து வரும் சிவப்பதிகள் பல. அவ்வக் காலங்களிலும் அன்பர்களுக்குச் சிவதீட்சையும் சிவபூசையும் எடுத்துக் கொடுத்து ஆற்றிவரும் சிவத் தொண்டுகள் பல. இவ்வாறெல்லாம் எண்ணரிய பலபணிகளை ஆற்றியும், ஆற்றவும் இருக்கின்ற இப் பெருமன்றம் 1982ஆம் ஆண்டு தனது76ஆம் ஆண்டு விழாவை வாரணாசியில் நம் குமாரசுவாமித் திருமடத்தில் நிகழ்த்தத் திருவருள் கூட்டுவித்தது. இதுபொழுது நம் திருமடத்து ஆதிமுதல்வரும், திருவருளையும் குருவருளையும் திருவுளத்தே கொண்டு மகிழ்பவரும், தமிழகத்திலிருந்து வடபுலம் போந்து பிற மொழியும் பிறமதமும் பற்றி வாழும் ஒரு பெரு மன்னனைத் தம்

அருளால் ஈர்க்கவும் இடங்கொள்ளவும் நேர்ந்த பெருந்திறத்தைப் பெற்றவரும், திவ்வியம் பழுத்த சைவ சித்தாந்தச் செந்நெறியை ஊனுருக, உயிருருக எடுத்து இயம்பிவரும் ஆன நம் ஸ்ரீகுமரகுருபர சுவாமிகளின் திருவருள் நலம் காக்கும் திருப்பனந்தாள் ஸ்ரீ காசித் திருமடத்தில் நிகழ்வது பெரு மகிழ்ச்சிக்குரியதாகும்.

இம்மாநாடு இன்று முதல் இரண்டு நாட்கள் இங்குத் தொடர்ந்து நடைபெற உள்ளது. இன்று, முதல் நாள் நிகழ்ச்சியாக சைவர் மாநாடு தொடங்குகிறது.

சைவம் என்பது சிவனொடு சம்பந்தமுயைடது எனத் திருமூலர் குறிக்கின்றார். திருமுறைகளில் திருமூலர் திருமந்திரத்தும், காப்பியங்களில் மணிமேகலையிலுமே இச்சொல் முதன்முதலில் எடுத்தாளப்படுகிறது. திருமந்திரத்தின் ஐந்தாம் தந்திரத்தில் சுத்த சைவம், அசுத்த சைவம், மார்க்க சைவம், கடும் சுத்த சைவம் என வகைப்படுத்திப் பேசப்படுகின்றது. மணிமேகலையில் 'உன்னிய பொருளுரைத்து ஐவகைச் சமயமும் அறிந்தனள்' எனவரும் தொடரால் சைவ சமயமும் குறிப்பிடப் பெறுகின்றது. இச் சைவநெறி காலத்திற் கெட்டாத பழமை உடையது. மொகஞ்சதாரோ, ஹரப்பா போன்ற இடங்களில் கிடைத்திருக்கும் அகழ்வாராய்வுகளும், தொல்காப்பியம், திருக்குறள் முதலான பழந்தமிழ் நூல்களும் இக்கூற்றினை மெய்ப்பிக்கின்றன. சிவலிங்க வழிபாடு ஒரு காலத்து உலகெலாம் பரவியிருந்தது என மேனாட்டறிஞர் பலரும் குறித்துள்ளனர்.

*பதி, பசு, பாசம் எனப்பகர் மூன்றில்*
*பதியினைப் போல் பசு, பாசம் அனாதி*
*பதியினைச் சென்றணு காப்பசு பாசம்*
*பதியணு கில்பசு, பாசம் நிலாவே*

*அறிவறி வென்ற அறிவும் அநாதி*
*அறிவுக் கறிவாம் பதியும் அனாதி*
*அறிவினைக் கட்டிய பாசம் அனாதி*
*அறிவு பதியிற் பிறப்பறுந் தானே.*

*பதியும் பசுவொடு பாசமும் மேலைக்*
*கதியும் பசுபாச நீக்கமுங் காட்டி*
*மதிதந்த வானந்த மாந்தி காணுந்*
*துதிதந்து வைத்தனன் சுத்த சைவத்திலே.*

என்பன திருமந்திரமாகும். இம் முப்பொருள் உண்மை வழிவழியாக ஏனைய திருமுறைகவிலும் இவற்றின் வழிவந்த மெய்ந்நூல்களிலும், பிற்காலப் பிரபந்தங்களிலும் தொடர்ந்து பேசப்படுட்டு வந்துள்ளன. கந்தபுராணத்தில் கச்சியப்பரும்,

*சான்றவர் ஆய்ந்திடத் தக்கவாம் பொருள்*
*மூன்றுள மறையெலாம் மொழிய நின்றுள*

எனக் கூறியருளுவர். இம்முப்பொருள்கட்கும் மேலாக ஒன்றைக் கூட்டிக் கூறுதற்குமில்லை ஒன்றைக் குறைத்துக் கூறுவதற்குமில்லை. இவ்வகையில் எளிய இனிய சமயம் நம் சைவ சமயமேயாகும்.

இவற்றைத் தொகுத்தும் வகுத்தும் விளக்கிக் கூறும் நூல்கள் பதினான்காம். அவை திருவுந்தியார். திருக்களிற்றுப்படியார், சிவஞானபோதம், சிவஞான சித்தியார், இருபா இருபஃது, உண்மை விளக்கம், உண்மைநெறி விளக்கம், சிவப்பிரகாசம், திருவருட்பயன், கொடிக்கனி, வினாவெண்பா, போற்றிப் பஃறொடை, நெஞ்சுவிடுதூது, சங்கற்பநிராகரணம் என்பன. ஞானாமிர்தம், கேளறு போதம், முதலிய நூல்கள் இவற்றை விரித்துரைப்பினும், பதினான்கு என வழிவழியாகப் போற்றி வருவன இவையேயாகும்.

இம்மெய்த் நூல்கள் அனைத்தும் தமக்கு முன்பிருந்த திருமுறைகளையும், திருக்குறளையும் மேல் எல்லையாகக் கொண்டன. அவற்றையருளிய ஆசிரியமார்களைப் பெரிதும் போற்றி மகிழ்பவை. முதலில் பன்னிரு திருமுறைகளும் திருக்குறளும், சைவ சித்தாந்த மெய்ந் நூல்கள் பதினான்கனொடும் தனித்தும், ஒப்பிட்டும் உணர்தற்குரியனவாம். அப்பதினான்கு நூல்களில் எடுத்துக்காட்டாகத் திருக்களிற்றுப்படியார் எனும் நூலைக் காணலாம்.

திருக்களிற்றுப்படியார் சிறுபாடல்களைக் கொண்டது தில்லைக் கூத்தப் பெருமானின் பஞ்சாட்சரப்படியில் இவர்ந்து அருளிய பெருமையுடையது. தனக்கு முன்னெழுந்த திருவுந்தியாரின் கருத்தை விளக்கி நிற்பது. திருத்தொண்டர் புராணத்தில் கூறப்படும் அறுபான்மும்மை நாயன்மார்களுள் பதினொரு அடியவர்களின் திறங்களை ஆங்காங்கெல்லாம் போற்றிப் பகர்வது; திருவிசைப்பா அருளிய சேந்தனாரையும் திருவாசகம் அருளிய மணிவாசகரையும் எண்ணி மகிழ்வது; சிறப்பாக சமய குரவர் நால்வரின் அரிய தொண்டுகளையும் பக்தி நெறியையும் பலபட விரித்துரைப்பது.

*ஓடம் சிவிகை உலவாக் கிழியடைக்கப்*
*பாடல் பனைதாவும் பாலைநெய்தல் - ஏடெதிர்வைப்பு*

*என்புக் குயிர்கொடுத்தல் இங்கிவைதாம் ஓங்குபுகழ்த்*
*தென்புகலி வேந்தன் செயல்.*

*கொல்கரியின் நீற்றறையில் நஞ்சிற் கொலை தவிர்த்தல்*
*கல்லே மிதப்பாய்க் கடல் நீந்தல் - நல்ல*
*மருவார் மறைக்காட்டில் வாசல் திறப்பித்தன்*
*திருவாமு ராளி செயல்.*

*மோகம் அறுத்திடின்நாம் முத்தி கொடுப்பதென*
*ஆகமங்கள் சொன்ன அவர் தம்மைத் - தோகையர்பால்*
*தூதாகப் போகவிடும் வன்றொண்டன் தொண்டுகளை*
*தொகச் சொல்லேன் யான்.*

*பாய்பரியொன்(று) அநீதப்பரமானந் தப்பரனைத்*
*தூயதிருவாய் மலரால் சொற்செய்து-மாயக்*
*கருவாதை யாமறியா வாறுசெய்தான் கண்டாய்*
*திருவாத வூராளுந் தேன்.*

எனவருவன சமய குரவர் நால்வரின் அருளிப்பாடுகளையும், இறைவன் அவர்கட்கு வழங்கியருளிய கருணைத் திறத்தையும் புலப்படுத்துவனவாம். இவ்வாறெல்லாம் இவர்களின் அருட் செயல்கள் நிகழ்தற்குக் காரணம் அவர்தம் கரணங்கள் நம் போன்ற கரணங்களாக அமையாவாய்ச் சிகரணங்களாக அமைந்தனவேயாகும்.

இதனைப்

*பாலை நெய்தல் பாடியதும் பாம்புஒழியப் பாடியதும்*
*காலனை அன்(று) ஏவிக் கராம் கொண்ட - பாலன்*
*மரணம் தவிர்த்ததுவும் மற்றவர்க்கு நம்தம்*
*கரணம்போல் அல்லாமை காண்.*

எனவரும் பாடலால் உணரலாம். இனி ஞானசம்பந்தரிடத்த மங்கையர்க்கரசியாருக்கு இருந்த பேரன்பை வெளிப்படுத்தும் பாடல் ஒன்று இந்நூற்கண் உள்ளது.

*சுரந்த திருமுலைக்கே துய்ய சிவஞானம்*
*சுரந்துண்டார் பிள்ளைஎனச் சொல்லச் - சுரந்த*
*தனமுடையாள் தென்பாண்டி மாதேவி தாழ்ந்த*
*மனமுடையாள் அன்பிருந்த வாறு.*

என்பது அப்பாடலாகும்.

சைவவான்பயிர் தழைய நின்ற ஞானசம்பந்தரின் அருளிச் செயல்களை மேற்கண்ட பாடல்களில் குறிப்பிட்டதோடு அமையாது. இவர்தம் எலும்பைப் பெண்ணாக்கிய திறமும், இறைவன், தானும் தன் தையலுமாய் எழுந்தருளி உயிர்கட்கு அருளிவரும் திறமும் இச்சமயத்தினன்றி வேறு எச்சமயத்திலும் இல்லாமையை வியந்து பாராட்டும் பாடல் ஒன்றும் இதன் கண் அமைந்துள்ளது.

*இன்றுஇச் சமயத்தில் அல்லதுமற்று ஏழையுடன்*
*ஒன்றுசொலி மன்றத்து நின்றவரார் - இன்றுஇங்கே*
*அங்கம் உயிர்பெறவே பாடும் அடியவரார்*
*எங்கும் இலை கண்டாய் இது.*

என்பது அப்பாடலாகும்.

இனி இந்நால்வர் பெருமக்களின் திருவாக்குகளில் ஈடுபட்ட உய்யவந்த தேவநாயனார் அவர்தம் திருவாக்குகளை முழுமையாக ஏற்றுப் போற்றியிருக்கும் பாடல்களுள் உள.

*ஈறாய்முத லொன்றாயிரு பெண்ணான் குணமூன்றாய்*
*மாறாமறை நான்காய் வரும் பூதம்மவை யைந்தாய்*
*ஆறார்சுவை ஏழோசையொ(டு) எட்டுத் திசைதானாய்*
*வேறாய்உடன் ஆனானிடம் வீழும் மிழலையே.*

என்பது திருஞானசம்பந்தர் திருவாக்கு இதனை,

*ஈறாகி யங்கே முதலொன்றா யிங்கிரண்டாய்*
*மாறாத வெண்வகையாய் மற்றிவற்றின் - வேறாய்*
*உடனாய் இருக்கும் உருவுடைமை யென்றும்*
*கடனாய் இருக்கின்றான் காண்.*

எனவரும் பாடல் ஏற்றுப் போற்றி நிற்றல் காணலாம்.

*கண்ணப்பன் ஒப்பதோர் அன்பின்மை கண்டபின்*
*என்னப்பன் என்னொப்பில் என்னையும் ஆட்கொண்டருளி*
*வண்ணப் பணித்தென்னை வாவென்ற வான்கருணை*
*கண்ணப்பொன் நீற்றற்கே சென்றூ தாய்க் கோத்தும்பி*

என்பது திருவாசகம். இதனை,

*கண்ணப்பன் ஒப்பதோர் அன்பின்மை என்றமையால்*
*கண்ணப்பன் ஒப்பதோர் அன்பதனைக் கண்ணப்பர்*
*தாமறிதல் காளத்தி யாரறிதல் அல்லதுமற்று*
*யாமறியும் அன்பன்றது*

எனவரும் பாடல் ஏற்றுப் போற்றி நிற்றல் காணலாம்.

*புனியில் சேவடி தீண்டினன் காண்க*
*சிவன்என யானும் தேறினன் காண்க*
*அவன்எனை ஆட்கொண்ட ருளினன் காண்க*

என்பன திருவாசகத்தில் உள்ள திருவண்டப பகுதியாகும். இதனைச்

*சிவனெனவே தேறினன்யான் என்றமையால் இன்றும்*
*சிவன் அவனி வந்தபடி செப்பில் - அவனிதனில்*
*உப்பெனவே கூர்மை உருச்செய்யக் கண்டமையால்*
*அப்படியே கண்டாய் அவன்*

என்ற பாடல் ஏற்றுப் போற்றி நிற்றல் காணலாம்.

நால்வர் பெருமக்களை இவ்வாறெல்லாம் போற்றிய இந்நூலாசிரியர் சிறுத்தொண்டர், சண்டீசர், அரிவாட்டாயர், திருக்குறிப்புத் தொண்டர், ஏயர்கோன்கலிக்காமர், மூர்த்தியார், மூர்க்கர், சேந்தனார் ஆகிய பெருமக்களையும் போற்றிப் பாராட்டியுள்ளார்.

இவ்வாறே சிவஞான போதம் முதல் சங்கற்பநிராகரணம் ஈறாக உள்ள ஏனைய மெய்ந் நூல்களிலும், திருமுறைகளும் அவற்றை அருளிய ஆசிரியன்மார்களும் போற்றிப் பாராட்டப் பெற்றுள்ளனர்.

திருநாவுக்கரசர்

*'தன்னை அடைந்தார் வினைதீர்ப்பதன்றோ தலையாயவர்தம் கடன்'*

என அருளியிருப்பதைச், சிவஞானபோதம்.

*'சார்ந்தாரைக் காத்தல் தலைவர் கடன்'*

எனக் கூறிப் போற்றுகின்றது.

*'இரு நிலனாய்த் தீயாகி நீருமாகி'*

*'ஆட்டுவித்தால் ஆரொருவர் ஆடாதாரே...காண்பார்*
*யார் கண்ணுதலாய்க் காட்டாக் காலே'*

*'ஆட்பாலவர்க்கருளும் வண்ணமும் ஆதிமாண்பும்'*

*'பண்ணில் ஓசை பழத்தினிலின் சுவை....'*

எனவரும் திருமுறைத் திருவாக்குகளை இருபா இருபஃது எனும் நூல் பெரிதும் ஏற்றுப் போற்றியுள்ளதை அந்நூலில் காணலாம்.

இனித் திருக்குறட்பாக்களைத் தமக்குரிய மேலெல்லையாகக் கொண்டு விளக்கியுள்ளமையைக் காணலாம்.

*'சார்புணர்ந்து சார்புகெட ஒழுகின் மற்றழித்துச்*
*சார்தரா சார்தரு நோய்'*

*இதனை, சார்புணர்ந்து சார்பு கெடவொழுகின் என்றமையால்*
*சார்புணர்தல் தானே தியானமுமாம் - சார்பு*
*கெடவொழுகல் நல்ல சமாதியுமாம் கேதப்*
*படவருவ தில்லைவினைப் பற்று*

எனவரும் பாடல் ஏற்று நிற்றல் காண்க.

*'வேண்டுங்கால் வேண்டும் பிறவாமை மற்றது*
*வேண்டாமை வேண்ட வரும்'*

*'இதனை, வேண்டுங்கால் வேண்டும் பிறவாமை என்றமையால்*
*வேண்டின் அஃதொன்றுமே வேண்டுவது-வேண்டினது*
*வேண்டாமை வேண்டவரும் என்றமையால் வேண்டிடுக*
*வேண்டாமை வேண்டுமவன் பால்.*

எனவரும் பாடல் ஏற்று நிற்றல் காண்க.

இவையெல்லாம் காண சைவ மெய்ப்பொருள்களைக் கண்டுணர்தற்கு பதினான்கு சாத்திரங்களும் முழுமையாகத் துணை நிற்றல் போல, அவற்றிற்கு அடித்தளமான திருக்குறளும் திருமுறைகளும் பெருந்துணையாக நிற்றலையும் நன்றகறியலாம்.

இவ்வகையில் திருமுறைகளையும், சைவ சித்தாந்த மெய்ந்நூல்களையும் இவற்றைச் சார்ந்த புராணங்கள், பிற இலக்கியங்கள் ஆகியவற்றையும் ஏற்றுப் போற்றியுணர்வதற்கும் உணர்ந்தவாறு ஒழுகுதற்கும் துணையாக நிற்கும் சைவ சித்தாந்தப் பெருமன்றம் பாராட்டிதற்குரியதாகின்றது. அவ்வப்பொழுதும் ஆண்டுதோறுமாக இத்தகைய பல விழாக்களைக் கண்டு மகிழும் இந்நிறுவனத்தின் தலைவர், செயலர், உறுப்பினர் உள்ளிட்ட சைவப் பெருமக்கட்கும் கேட்டு மகிழும் அன்பர்கட்கும், சிவஞானமும் நீடுவாழும் வாழ்வும் தழைத்துச் சிறக்கச் செந்திற்கந்தன் திருவருள் முன்னின்று வீறு அருளுமாக.

## தத்துவத் தலைக்காவலர்

## ஞானமணி - ஞானத் தமிழாகரர்

# டாக்டர் வை. இரத்தினசபாபதி

(89ஆம் ஆண்டு விழா - சீர்வில்லிப்புத்தூர்)

*ஈன்றாளுமாய் எனக்கு எந்தையுமாய் உடன் தோன்றினராய்*
*மூன்றாய் உலகம் படைத்துஉகந் தான்மனத் துள்இருக்க*
*ஏன்றான் இமையவர்க்கு அன்பன் திருப்பாதிரிப் புலியூர்த்*
*தோன்றாத் துணையாய் இருந்தனன் தன் அடியோங்களுக்கே.*

## முன்னுரை

**சைவ நலஞ்சார் செல்வச் சான்றோர்களே!**

வணக்கம்.

சிவன் எனும் நாமம் தமக்கே உரிய செம்மேனி எம்மானைப் பரம்பொருளாகவும் வாழ்முதற் பொருளாகவும் கொண்டு, அப்பொருளை அறிவதும் அடைவதும் ஆகிய வாழ்முதல் நெறிகளைக் கொண்டது சைவம்.

*''சைவம் சிவனுடன் சம்பந்தம் ஆதல்''*

என்றார் திருமூலர்.

தமிழுடன் தன்னை இணைத்துக் கொள்ள விரும்பிய பரம்பொருள் தானே தன்னைத் தமிழ்ப் புலவனாகவும், தன் குடும்பத்தையே தமிழுடன் இணைத்துக் கொண்டதும் ஆகிய செயல்கள் மூலம் தமிழன் ஆனதுபோல, இறைவன் சைவநெறி நின்று சைவனான பெருமையும் சைவத்துக்கு உண்டு.

*''ஐயா றதனிற் சைவன் ஆகியும்''*

என்ற திருவாசக வரியைக் காண்க.

சைவம் பல்வேறு பிரிவுகளில் பேசப்பெறுகின்றது. சாமானிய சைவம், மிஸ்ர சைவம், சுத்தசைவம், வீரசைவம் என்ற பிரிவுகள் ஆகமங்களில் பேசப்பெறுகின்றன. சுத்தசைவம், அசுத்தசைவம், மார்க்கசைவம், கடுஞ்சுத்த சைவம் என்ற பிரிவுகள் திருமந்திரத்தில் காணப் பெறுகின்றன. இந்தியத் தத்துவஞானத்தில் சைவம், என்ற பிரிவில், காஷ்மீர்ச் சைவம், சிவாத்வைத சைவம், வீரசைவம், சித்தாந்தம் சைவம் என்பவை பேசப்பெறுகின்றன.

இந்திய நாட்டில் அருளாளர்களால் உண்டாக்கப்பெற்ற மெய்ப்பொருளியற் கொள்கைகள் எல்லாம் நான்கு கூறுகளைக் கொண்டதாக விளங்கும். அறிவாராய்ச்சியியற் கொள்கை, மெய்ப்பொருட் கொள்கை, சாதனக் கொள்கை, சாதனத்தால் எய்தும் பயன்பற்றிய கொள்கை என்ற இந்நான்கு கொள்கைகளையும் குறைவறச் சொல்லுகின்ற எந்த ஒரு தரிசனமும் முழுமை பெற்ற மெய்ப்பொருட் கொள்கையாகவே தத்துவ ஞானிகளால் ஏற்றுக் கொள்ளப்பெறும்.

அவ்வகையில் காஷ்மீர்ச் சைவம், சிவாத்வைத சைவம், வீர சைவம், சித்தாந்த சைவம் என்னும் நான்கும் முற்ற முடிந்த மெய்ப்பொருட் கொள்கைகளாக அமையும் பெருமையுடையனவே யாயினும் தமிழ்நாடு செய்த தவப்பயன் காரணமாக அருளாளர் களாலும் தத்துவஞானிகளாலும் செப்பனிடப்பெற்று மக்கள் இயக்கமாக மலர்ந்து வாழ்வியற் கொள்கையாகத் தமிழகத்தில் இன்றும் நின்று நிலவிவரும் பெருமையுடையது சைவ சித்தாந்தக் கொள்கையே.

வேதம், வேதாந்தம், ஆகமம், ஆகமாந்தம் என்ற நான்கு அடிப்படைகளில் சமய, தத்துவக் கொள்கைகள் விளக்கப் பெற்றன. அதே சமயத்தில், வேதத்துக்கு முரணான கொள்கைகளும் எழுந்தன. பௌத்த, ஆருகத, உலகாயதக் கொள்கைகள் தமிழகத்தில் தம் செல்வாக்கைப் பயன்படுத்தி வளர முற்பட்ட போதெல்லாம் வேதக் கொள்கைகளும் ஆகமக் கொள்கைகளும் இடையிடையே வந்து மக்கள் மன்றத்தில் விளக்கம் கூறித் தம்மை நிலைநாட்ட முற்பட்டன என்பதையும் காண முடிகிறது.

அவ்வகையில், வைதிக நெறி சைவநெறி என இருவகை நெறிகள் பெருகியோங்கி நிற்க, இவற்றினுள்ளும் உயர்வு தாழ்வு நிலைகள் பேசப்பெற்றன என்பதையும் நாம் காணமுடிகிறது.

## அருளியல் எழுச்சி

இந்நிலையில், காரைக்காலம்மையாரை உள்ளிட்டு ஒரு பெரிய அருளியல் எழுச்சியானது தமிழகத்தில் தோற்றம் பெற்றது. காரைக்காலம்மையாரை அடுத்து, தமிழ்நாடு செய்த தவப்பயன் காரணமாகத் திருஞானசம்பந்தர் முதலாக நின்ற அருளாளர்கள் சிவநெறிக்குத் தமிழ் வாயிலாகத் தொண்டு செய்தனர். ஞானசம்பந்தரை ஒட்டிய கால அமைப்பில் அப்பரடிகளும், பின்னர் நம்பியாரூரரும் திருவருள் வழியில் நின்று திருமுறை நெறியை - தமிழ்தழையும் அருள்நெறியை விளக்கும் வகையில் சமயத் தொண்டு செய்தனர். முத்தமிழ் வாயிலாக, ஆகமத்தின் வழிவந்த சிவநெறி தமிழ் மக்களிடையே நன்கு வேரூன்றி நிலைபெறுவதாயிற்று.

## புனிதர் பேரவை

நம்பியாரூரர் அருளிய திருத்தொண்டத் தொகையானது தமிழக மக்களின் அருளியல் வரலாற்றில் புதிய திருப்பத்தை உண்டாக்கியது. அதன் அடிப்படையில் மலர்ந்ததே சேக்கிழாரின் திருத்தொண்டர் புராணம். நம்பியாரூரர் காலத்தில் திருவாரூர்த் தேவாசிரிய மண்டபத்தே அமைந்த புனிதர் பேரவை இயக்க வடிவம் பெற்று, சைவ சமயக் காப்பகமாகத் திகழ்ந்தது. தமிழகத்து அருளியற் சைவத்துக்குரிய நெறிமுறைகளிற் பிழை காணப்படின் ‘புறகு’ எனத் தவறு செய்தாரை வெறுத்து ஒதுக்குமளவுக்கு ஆற்றல் பெற்றதாகப் புனிதர் பேரவை இருந்தது. அதனாலேயே சைவநெறி உலகினில் விளங்கி வெல்க என்று சொல்வதற்குப் பதிலாக,

*"மதிவளர் சடைமுடி மன்றுளாரை முன்*
*துதிசெயு நாயன்மார் தூயசொன்மலர்*
*பொதிநலன் நுகர்தரு புனிதர் பேரவை*
*விதிமுறை உலகினில் விளங்கி வெல்கவே"*

என்று சேக்கிழார் கூறும் அளவுக்கு அக்காப்பகம் வலிவு பெற்றிருந்தது.

அருளாளர்களின் வாழ்வையும் வாக்கையும் மூலமாகக் கொண்டு சாத்திர நூல்கள் தோன்றமுற்பட்டன. பன்னிரு திருமுறைகளில் ஒன்றாகிய திருமந்திரம் சாத்திர நூலாகத் திகழ்ந்த போதிலும் - ஞானாமிர்தமே முதல் சாத்திர நூலாகத் தோற்றம் பெற்றது என அறிஞர் கூறுவர். ஆயினும் மெய்கண்டாரை முன்னிட்டுக் கொண்டுதான் சாத்திர நூல்கள் தமிழகத்தில் வளம் பெறலாயின.

## அருள்நெறியில் மலர்ந்த ஞானநெறி

திருமுறைப் பெருநெறியில் வந்தவரே மெய்கண்டார். அவருடைய இரண்டாம் அகவையில் திருக்கயிலையில் காவல் பூண்டொழுகும் - நந்தியெம் பெருமானுடைய திருவருள் மரபில் வந்த சிவஞானிகள் நால்வருள் நான்காமவராகிய பரஞ்சோதியார், இரண்டாண்டுக் குழந்தைக்குச் சிவஞானத் செம்பொருளை உயர்த்தி, மெய்கண்டார் எனப் பெயரிட்டு, "இப்போது நல்கிய சிவஞானத்தை இனிய தமிழில் அமைத்து எல்லா மக்கட்கும் வழங்குக" என உபதேசித்துச் சென்றார். அவர் தாம் கேட்டு இன்புற்ற சிவஞானத்தைச் சிவஞானபோதம் என்ற பெயரிய நூலாக அமைத்து, தம்பால் வந்தார்க்கு அறிவுறுத்தி வருவாராயினர். அவ்வகையில் நாற்பத்தொன்பது மாணாக்கர்கள் அவரிடம் பாடம் கேட்டதாக அறிஞர்கள் கூறுவர். அவர்களில் அருணந்தி சிவாசாரியார், திருவதிகை மனவாசகம் கடந்தார், சிற்றம்பல நாடிகள் ஆகியோர் குறிப்பிடத் தக்கவராவர்.

அவ்வகையில் சாத்திரக் கொள்கையை வரையறுத்து உணர்த்தும் முறையில் பதினான்கு நூல்கள் அமைந்தன. அவை **மெய்கண்ட சாத்திரங்கள்** எனப் பெற்றன. இங்கே ஒரு கருத்தை உடன் இணைத்துச் சிந்தித்தல் வேண்டும்.

மெய்கண்டாரை முதல்வராகக் கொண்டு மெய்கண்ட சந்தானம் அமைந்தது. அவ்வழியில்

*மெய்கண்டார்*
*அருணந்தி சிவாசாரியார்*
*மறைஞான சம்பந்தர்*
*உமாபதி சிவாசாரியார்*

என நால்வர் சந்தானாசாரியார்களாக அமைந்தனர். மெய்கண்டாரிடம் நேராகப் பாடம் கேட்ட நிலையில் அருணந்தி சிவாசாரியார் சிவஞான சித்தியார் என்ற நூலை அருளினார்.

சந்தானசாரியார்களில் இறுதிநின்ற உமாபதிசிவம் எட்டு நூல்களை இயற்றியவர். அவை முறையே சிவப்பிரகாசம், திருவருட்பயன், வினா வெண்பா, போற்றிப் பஃறொடை, உண்மை நெறிவிளக்கம், கொடிக்கவி, நெஞ்சுவிடுதூது, சங்கற்ப நிராகரணம் எனப்பெறும்.

தமிழகத்துச் சாத்திரநெறி எனப் பொதுவாகக் கூறினாலும் அது சைவசித்தாந்தம் என்ற பெயரைக் கொண்டு விளங்குவது என்பதையும் உடன் நோக்கி உணர்தல் வேண்டும்.

*''சித்தாந்தத்தே சீவன் முத்தி சித்திக்கும்''*
*''தற்சிவம் கண்டுளோர் சைவசித்தாந்தரே''*

என்ற, திருமூலரின் தொடர்கள் சைவசித்தாந்தம் என்ற வழக்கை எடுத்தியம்புவன.

உமாபதி சிவாசாரியார் தாம் அருளிய சிவப்பிரகாசம் என்னும் நூலில்,

*''தொன்மையவாம் எனும் எவையும் நன்றாகா இன்று*
*தோன்றிய நூல் எனும் எவையும் தீதாகா''*

என்று கூறித் தொடங்கியது, சைவ சித்தாந்தப் பெருநெறியின் பரந்து விரிந்த ஆய்வியற் கருத்து எனக் கொள்ளலாம். மேலும் அவரே,

**'சைவ சித்தாந்தமானது, புறச் சமயத்தவர்களுக்கு இருளாய், அகச் சமயத்தவர்க்கு ஒளியாய் விளங்கும்; அளவை நெறிக்கு அளவையாய்த் திகழும்; பொன்னும் மணியும் போல் அபேதம்; இருள் ஒளிபோல் பேதம்; சொற்பொருள் போல் பேதாபேதம் என்று கூறும் பிற சமயங்கள் போலல்லாமல், இறைவன் உயிர்களுடன் உடலும் உயிரும் போல் ஒன்றாகவும், கண்ணும் சூரியனும் போல் வேறாகவும்; கண்ணொளியும் உயிரறிவும் போல் உடனாகவும் இயைந்து நிற்றலை இனிது உணர்த்தும்; வேதாந்த நூல்களின் பிழிவாகவும் தெளிவாகவும் திகழும்'' என்ற பொருளில்,**

*''புறச்சமயத் தவர்க்கு இருளாய் அகச்சமயத்து ஒளியாய்*
*புகல் அளவைக்கு அளவாகிப் பொற்பணிபோல் அபேதப்*
*பிறபிலதாய், இருள்ஒளிபோற் பேதமும் சொற்பொருள் போல்*
*பேதா பேதமும் இன்றிப் பெருநூல் சொன்ன*
*அறத்திறனால் விளைவதாய் உடலுயிர் கண் அருக்கன்*
*அறிவொளிபோற் பிறிவரும் அத்துவிதம் ஆகும்*
*சிறப்பினதாய் வேதாந்தத் தெளிவாம் சைவ*
*சித்தாந்தத் திறன் இங்குத் தெரிக்க லுற்றாம்''*

எனத் தம் சிவப்பிரகாசம் என்ற நூலிற்குறித்துள்ளார்.

'சிவப்பிரகாசம்' என்ற நூலியற்றியபின் இவரே திருவருட் பயன் என்ற நூலை இயற்றினார். இது பத்து அதிகாரங்களைக் கொண்ட நூறு குறள் வெண்பாக்களால் இயன்ற நூல். இந்நூலை இயக்குவதற்கு முன் இவர் அருள் முறைத்திரட்டு என்ற பெயரில் திருமுறைப் பாடல்களைத் தொகுத்து, அவைகளைப் பத்துத்

தலைப்புக்களாக வகைப்படுத்தி, அவற்றின் அடிப்படையில் சாத்திரக் கருத்துக்களை அமைத்தார்.

திருமுறைப் பாடல்களின் பிழிவாகவே சாத்திரக் கொள்கைகள் அமைகின்றன என்ற கருத்தை அமைக்கும் வகையில் உமாபதி சிவாசாரியாரின் அருள்முறைத் திரட்டும் திருவருட் பயனும் அமைந்தன. அதற்கு ஒரு காரணம் உண்டு.

காரைக்கால் அம்மையார் தாம் அருளிய அற்புதத் திருவந்தாதியில் ''நூலறிவு பேசி நுழைவிலாதார் திரிக'' எனக் கூறி, மெய்ப்பொருளை வெற்று நூலறிவு கொண்டு விளக்க முற்படில் முரண்படுவன ஆகும். ''மெய்ப்பொருளைத் திருவருளால் நோக்கும் விதியுடையேன்''. ஆகையால் எப்பொருளும் ஆவது எனக்கு'' என்று கூறி வரையறை செய்துள்ளார். ஆகையால், உமாபதி சிவாசாரியாரும் அருளாளர்களின் வாய் மொழிகளாக அமைந்த திருமுறைப் பாடல்களைத் தொகுத்தமைத்துக் கொண்டு அவைகளின் பிழிவாகச் சாத்திர நுண் பொருளை எடுத்து விளக்கும் வகையில் திருவருட்பயன் என்ற நூலை அமைத்தார். எனவே, திருவருளின் வழிநின்று சாத்திரக் கொள்கைகளை வரையறை செய்ய வேண்டும் என்ற கருத்தை உமாபதி சிவாசாரியார் தாமே முன்னிட்டுக் கொண்டு திருவருட்பயன் செய்தமைத்துக் காட்டினார் என்று கொள்ளுதல் வேண்டும்.

### பிரமசூத்திர உரை

தமிழகத்தில் அமைந்த தத்துவ ஆராய்ச்சியின் வரலாறு இவ்வாறாக, வேதத்தின் இறுதி நின்ற வேதாந்தம் எனப்பெறும் உபநிடதங்களின் அடிப்படையில் தத்துவக் கொள்கைகள் நிறுவப் பெற்றன. பிரமசூத்திரம் என்பது மூலமாக அமைய, அதற்கு உரை எழுதுவதன் மூலம் தத்துவக் கொள்கைகள் நிறுவப் பெற்றன. அவ்வகையில், சங்கரர், இராமாநுசர், மத்வர் போன்றவர்களின் தத்துவக் கொள்கைகளின் தாக்கம் தமிழகத்தில் அமைந்தன. நீலகண்ட சிவாசாரியார் பிரமசூத்திரத்துக்குச் சைவ பாடியம் ஒன்றை அமைத்து, அதன் மூலம் சைவக் கொள்கையை நிலைநாட்ட முற்பட்டார்.

மேலே கூறப்பெற்ற வரலாறு, தமிழக மக்கள் வாழ்க்கை, அருளியல் நிகழ்வுகள், திருப்பதிகப் பெருநெறி, பன்னிரு திருமுறைகள், அவைகளை ஒட்டிய மெய்கண்ட சாத்திரங்கள் என்பவைகளைப் பின்னணியாகக் கொண்ட சூழலில் மலர்ந்தது சைவ சித்தாந்தம்.

## சிவஞானமுனிவரின் தொண்டு

வரையறை செய்யப்பெற்ற எந்த ஒரு தத்துவக் கொள்கையும் சித்தாந்தமே. பிறகொள்கைகளை ஏற்று, விளக்கி, மறுத்து தன்னுடைய முடிந்த முடிவை இது என உறுதிப்படுத்தி நிறுவுவதே சித்தாந்தம். பூர்வபட்சம் செய்து சித்தாந்தம் செய்தல் என்பது எல்லாத் தத்துவக் கொள்கைக்கும் பொது. ஆனால் சைவசித்தாந்தம் என்ற சொல் முடிந்த முடிபாகிய சைவக் கொள்கை என்ற விளக்கத்துடன் இக்கொள்கைக்குரிய இயற் பெயராகவே அமைந்து விடுகிறது. சித்தாந்தம் என்பதை இயற் பெயராகக் கொண்டதே இத்தத்துவத்தின் தனித்தன்மை.

சைவசித்தாந்தத்தில் ஏனைய பேறுகள் சித்திக்கும் என்று விளக்கிய உரைகள் பல. இதுவே முடிந்த முடிபு; இம்முடிபு எவ்வாற்றாலும் மாற்றமுறாது எனக்காட்டி, இத்தத்துவக் கொள்கையைச் சைவசித்தாந்தம் என நிறுவிக் காட்டிய பெருமை மாதவர் சிவஞான சுவாமிகளையே சாரும்.

இந்தியத் தத்துவ ஞானத்தில் சர்வ சுருதி சமன்வயம் என்ற கொள்கை மரபுவழியில் பின்பற்றப்பட்டு வருகிறது. எந்த ஒரு கொள்கையைப் பற்றியும் பல நூல்கள் தோன்றியிருக்குமேயானால் அனைத்து நூல்களையும் ஒன்றுவிடாமல் தழுவிய நிலையில் அக்கொள்கை விளக்கப்பெறல் வேண்டும். என்பதே சர்வ சுருதி சமன்வயம் என்பதன் பொருள். சர்வ சுருதி சமன்வயம் என்ற கொள்கையை விளக்கிய பெருமை சிவஞான முனிவருக்கு உண்டு.

சிவஞான போத மாபாடியத்தில் அனைத்து நூற் கருத்துக்களையும் தூலாருந்ததி நியாய அடிப்படையில் இணைத்துப் பொருள் செய்ய வேண்டும் என்ற கொள்கையின் அடிப்படையில் உரைகாணு கின்றனர். சிவஞான முனிவர் இதைச் சற்று விளக்கமாகக் கூறக் காணலாம்.

மக்கள் நடைமுறை வாழ்வுக்கு அப்பாற்பட்ட எந்த ஒன்றும் 'கொள்கை' என நிற்கும் வலிமை பெறாது. தத்துவம் என்றால் பொருளின் தன்மை. எனவே, மெய்ப்பொருள் என்றாலும், தத்துவம் என்றாலும் அது வாழ்வியல் நெறியே. அவ்வகையில் வாழ்வியல் நெறிகளின் தொகுப்பே சைவ சித்தாந்தம் என்ற பெயரைப் பெற்றது.

சங்க இலக்கியங்கள் மேல் கணக்கு, கீழ்க் கணக்கு எனப் பிரிக்கப் பெற்றன. மேல்கணக்கும் பதினெட்டு; கீழ்க்கணக்கும் பதினெட்டே.

மேல்கணக்கு என்பன வாழ்வியல் நிகழ்வுகள்; கீழ்க்கணக்குகள் என்பன வாழ்வியற் கோட்பாடுகள். அவ்வாறே சிவஞானபோதம் என்பது வாழ்வியல் நெறியை வளமாக்கித் தெரிவிக்கும் கொள்கை நூல்; அல்லது வாழ்வியற் கோட்பாடு நூல் என்று கொள்ளலாம்.

தனி மனிதனை நான்கு பொருள்களின் கூட்டு எனக் காண்பது சமுதாயக் கோட்பாடு. உடல், மனம், உயிர், சமுதாயம் என்ற நால்வகைப் பக்கங்களால் இணைக்கப் பெற்றவனே மனிதன் என்பது அதன் விளக்கம். அவ்வாறே உடல், மனம், உயிர், உலகம் என நான்காய் நின்று செயல்படும் தனிமனிதன் இன்னும் எவ்வெப் பொருள்களோடு தொடர்பு கொண்டுள்ளான் என அறிவதும், அவன் வாழ்வியல் அடிப்படை என்ன என்று ஆய்வதும் அவனுடைய கடமைகளே. அத்தகைய ஆய்வினை முழுமையுறச் செய்தற்கு உறுதுணையாக அமையும் வாழ்வியல் விளக்க நூலே சிவஞான போதம். அவ்வகையில் அமைந்த சிவஞானபோத நூலின் அமைப்பு முறையை எடுத்துக்காட்டும் சிறப்புப்பாயிரம்,

*''மலர்தலை உலகின் மாயிருள் துமியப்*
*பலர்புகழ் ஞாயிறு படரின் அல்லதைக்*
*காண்டல் செல்லாக் கண்போல் ஈண்டிய*
*பெரும் பெயர்க் கடவுளிற் கண்டு கண் இருள்தீர்ந்து*
*அருந்துயர்க் குரம்பையின் ஆன்மா நாடி''*

மயக்கம் தெளிதல் என்பதை உட்கோளாக அமைத்து ஆய்வதற்கென அமைத்துக் கொடுக்கப் பெற்ற நூலே சிவஞானபோதம் என வரையறுத்தது. எனவே பொறுத்தற்கியலாத துன்பச் சுமையாம் இவ்வுடலின் கண்ணே ஆன்மாவை ஆராய்ந்து காணுதல் வேண்டும் என்பது முதற்படி. ஆன்மாவை நாடுதலுடன் வேறு சில ஆய்வுகளும் அமையும் என்பதும் காட்டப் பெற்றது. எனவே அத்தகைய ஆய்வுக்குச் சிவஞானபோதம் துணை செய்யும் என்பது சிறப்புப் பாயிரம் தந்த செய்தி. அடுத்த நிலையில், குறிப்பிடப்பெறும் செய்தி மிக முக்கியமானது. அது வரலாற்றுப் பெருமை.

### மலைவின்மை

முன்பொருமுறை இந்நூல் கொண்டே நந்தியெம் பெருமானுக்கு மலைவு தீர்த்தருளியிருக்கிறார் ஒரு நல்லாசிரியர் என்பதை உள்ளீடாகக் கொண்ட மங்கல வாழ்த்து.

*கல்லால் நிழன்மலை*
*வில்லார் அருளிய*
*பொல்லார் இணைமலர்*
*நல்லார் புனைவரே*

என அமைகிறது.

கல்லால மரத்தின் நிழலில் மலையை வில்லாகக் கொண்ட சிவபெருமான் அருளுவதற்காக, பொல்லாப் பிள்ளையாரின் இரட்டைத் திருவடிகளை நல்லார் தம் தலைக்கணியாக் கொள்வர் என்பதே உரை.

இதனுள் 'மலைவில்லார்' என்பதற்குரிய பொதுவான உரையை - மலையை வில்லாக உடையவர் என்ற உரையை அமைக்காமல், மலையை இல்லையாகச் செய்தார் எனவும், மலைவு இன்மையே அவர்தன்மை எனவும் சிவஞான முனிவர் உரைவரைதலின் நோக்கத்தை உணர்தல் வேண்டும்.

நந்தியெம் பெருமானுக்கு மலைவை இல்லையாகச் செய்தார் என்பதால் நந்தியெம்பெருமான் கேட்பதற்கு முன்னமேயே தாமே வெளிப்பட்டுவந்து அருள் மயமான மரத்தின் கீழ் அருளாளராம் அவரே தங்கி இருந்தார் எனவும் விளக்கம் அமைத்துக் கொள்ள வேண்டும். அருளாளராய் நின்ற அவரும் சிவஞானபோதம் என்ற இந்நூலாலே 'மலைவை இல்லையாகச் செய்தார்' என்று கொள்ளல் வேண்டும்.

'மலைவு + இல்லார்' என, மெய்கண்டாரின் அருள்வாக்காகச் சிவஞானபோதத்து மங்கல வாழ்த்துப் பாடலில் வரும் தொடரை நன்கு சிந்தித்தல் வேண்டும்.

மலைவு என்ற சொல்லானது 'வேறுபாடு' என்ற பொருளைத் தருவது. வேறுபாடு வேறு முரண்பாடு வேறு. முரண்பாடு என்பது ஒன்றை ஒன்று அழித்துவிடும் நிலையில் எதிர் நிற்பது. ஒருவகையில் முரண் என உலகில் எதுவமே இல்லை. முரண் இருந்தால் அழிவுவரும். எடுத்துக்காட்டாக ஒன்றைக் கொள்ளலாம்.

ஒளியும் இருளும் முரண்பட்டவை என்று கூறுவர். இரண்டும் முரண்பட்டவை அல்ல; வேறுபட்டவை. ஒளியானது இருளை அழித்தல் இல்லை. ஒளியானது இருளின் மேற்படர்ந்து இருளை மேலோங்க விடாமல் அழுத்திக் கொண்டிருப்பது, ஒளி சென்ற பின் இருள் தானே வெளிப்படும்.

அவ்வாறே இரண்டு கொள்கைகளின் மோதல் நிகழும் போது 'முரண்' எனக் கொள்ளாது வேறுபடும் கொள்கை என்று கொள்ள வேண்டும் என்பது சைவ சித்தாந்தக் கொள்கை.

இதனாலேயே, பொருமறம் இலாமல் அனைத்துக் கொள்கைகளும் சோபான முறையில் உணரப்பெற்று, மேற்படி நிலைக் கொள்கைக்குச் செல்ல வேண்டும் என்ற முறையை வகுத்துக் கொண்டது சைவ சித்தாந்தம்.

கல்லாலின் கீழமர்ந்த பெருமானை, மலை வின்மையாகச் செய்யும் பண்புடையவர் என்ற பொருளில் ''மலைவில்லார்'' என நிறுத்தி விளக்கும் மெய்கண்டாரின் திருவுள்ளத்தை நாம் சிந்தித்து உணர்தல் வேண்டும்.

சிவஞான முனிவர் சித்தாந்த சைவத்தின் கொள்கையாக உலகத் தத்துவ அரங்குக்கு வழங்கும் அளவையியல் நெறியே 'மலைவின்மை' என்பது.

சிவஞான முனிவர் இக்கருத்தை மேலே குறிப்பிட்ட வகையில் தூலாருந்ததி நியாயமாக அனைத்துக் கொள்கைகளையும் வகுத்துக் காட்டும் நெறியையும் இங்கே சிந்திக்க வேண்டும். இதை அரண் செய்யும் வகையில்

*''யாதொரு தெய்வம் கொண்டீர் அத்தெய்வமாகி அங்கே*
*மாதொரு பாகனார் தாம் வருவர்''*

என்ற சிவஞான சித்தியார் அருளிய கொள்கையையும் இணைத்துக் காணுதல் வேண்டும். இதையே, அனைத்துக் கொள்கைகளையும் தன்னுள் மருவ வைத்து உயர்ந்ததே சைவம் என்று விளக்கும் அருளாளர் தம் பொருளுரைகளையும் ஏற்றிப் போற்றிச் சிந்திக்க வேண்டுவது மக்களின் கடமையும் கருத்தும் ஆகும்.

## முதல்வித்தை

அப்பைய தீட்சிதரின் 'சிவதோத்திரமாலா' என்ற நூல் சிவபரத்துவத்தை விளக்கும் அறுபது சுலோகங்களைக் கொண்ட ஒரு தொகுப்பு நூல். அதனைத் தமிழில் சிவதத்துவவிவேகம் என்ற பெயரில் மொழி பெயர்த்துத் தரும் சிவஞான சுவாமிகள் முதலில் ஏழு பாக்களை அந்நூலின் பாயிரமாக அமைந்துத் தருகின்றார். அதனுள் ஆறாவது பாடலில்

முதல்வித்தை என்ற ஒன்றை எடுத்துக்காட்டி, இம்முதல் வித்தையானது உலகில் ஓங்கிச் சிறப்புற்று விளங்க வேண்டும் என ஒரு வாழ்த்தும் அமைத்து முடிக்கின்றார் சிவஞான முனிவர்.

சிவாகமங்களில் பொதுவாக முப்பத்திரண்டு வித்தைகள் உண்டு எனவும் அவற்றுள் சிறந்தது தகர வித்தை எனவும் நீலகண்ட பாடியம் பேசுகிறது. இவை எல்லாவற்றாலும் உணரப்பெறாத ஒரு முறையை எடுத்துக்காட்டிச் சைவ சித்தாந்தத்தை விளக்குகின்றார் சிவஞான முனிவர்.

மெய், வாய், கண், மூக்கு, செவி ஆகியவைகள் தாமே உணரும் ஆற்றல் இல்லாதவை; ஆனால் அவற்றின் முதல்வனாகிய ஆன்மாவானது இணையும்போது அவை அறியும் நிலை பெறுகின்றன. ஆன்மாவானது அறிவுடைப் பொருள் தான் என்றாலும் அதுவும் தமது முதலாலே உணரும் தன்மையுடையது என்று எடுத்துக் காட்டினார்.

மேலே குறிப்பிட்டுக் காட்டிய விளக்கத்தின் அடிப்படையில், ஆன்மாவாவனது தன்னுடைய முதலால் உணர்ந்த முதன்மை வித்தையே சைவ சித்தாந்தம் என்று கொள்ளுதல் வேண்டும்.

முழுமுதற் பொருளானது ஆன்மாவை அதிட்டித்து நின்று உணர்த்திய கொள்கையே - முதல்வனால் அறிவிக்க அறிந்த கொள்கையே ‘முதல் வித்தை’ எனப் பெறுவதாயிற்று.

இவ்வாறு முதல்வனால் அறிவிக்கப் பெற்ற கொள்கையாதலின் அது முழுமையுடையது என்றும் காலத்தால் ஏற்படும் மாறுதல்களுக்கு உட்படாத பெருமையுடையது என்றும் சிந்தித்துத் தெளிதல் வேண்டும்.

மேலே குறிப்பிடப் பெற்றவாறு மெய்ப்பொருட் கொள்கையாலும் அருளனுபவ வெளிப்பாடுகளாலும் சிவஞான முனிவரைப் போன்ற தத்துவ ஞானிகளின் உரை முதலியவைகளாலும் வளர்ச்சி பெற்ற சைவ சித்தாந்தக் கொள்கையானது இன்று வரை சைவப் பெருமக்களாலும் பிறராலும் வாழ்வியற் பொருளாக அமைந்து வருதல் வரலாறு காட்டும் வாய்மை.

## நிகழ்காலப் பணி

கி.பி. ஏழாம் நூற்றாண்டு முதல் புத்துணர்வும் புரட்சித் திருவும் பூத்து மக்களின் வாழ்வியல் நடைமுறைக் கொள்கையாக விளங்கி

வரும் சைவ சித்தாந்தத்தை இந்த நூற்றாண்டில் கடந்த 89 ஆண்டுகளாகச் சைவ சித்தாந்தப் பெருமன்றம் பல்லாற்றானும் வளர்ச்சி பெற உழைத்து வருவது சைவப் பெரு மக்களுக்குப் பெருமித மூட்டும் செயலாகும்.

சைவ சித்தாந்தப் பெருமன்றத்தின் பணிகளைச் சைவப் பெருமக்களும் உணர்ந்து, தெளிந்து, மதித்து வருகிறார்கள் என்பதற்கு அவர்கள் பல்வேறு அறக்கட்டளைகளை ஆண்டுதோறும் நிறுவி வருவது கொண்டே தெளிந்து கொள்ளலாம். ஓராண்டில் சற்றேறக் குறைய 170 நிகழ்ச்சிகளைத் தொய்வில்லாமல் நடத்தி வருகின்ற ஒரு கொள்கை நிறுவனம் என்ற வகையில் வேறு எந்த நிறுவனமும் இத்தகைய வரலாற்றைப் பெற்றிருக்க முடியாது என்பதை உறுதியாகக் கூறலாம்.

தவத்திரு ஞானியாரடிகளால் தொடங்கப் பெற்ற இந்நிறுவனம் இன்று வரை அரிய நூல்களை வெளியிட்டும், அறிஞர் பெருமக்களைக் கொண்டு சைவ சித்தாந்தச் செழும் பொருளை விளக்கம் செய்வித்தும், சித்தாந்தம் தமிழ் ஆங்கில இதழ்கள் மூலம் கொள்கை விளக்கம் செய்தும் தொய்வின்றி உழைத்து வருவது சைவப் பெருமக்கள் செய்த தவத்தின் வெற்றியாகும்.

சைவ சித்தாந்தக் கொள்கையை நிலைநாட்டும் வகையில் அவ்வப்போது நிகழ்ந்த இடையூறுகளைத் தடுத்து நிறுத்தப் பாடுபட்ட முன்னாட் பெருமன்றத் தலைவர்களைப் போலவே இந்நாள் தலைவர் பொறியாளர், தொழிலதிபர், சித்தாந்தச் செல்வர், திருமிகு தியாகராசனார் அவர்கள் அண்மையில் நிகழ்ந்த இடையூறு ஒன்றைத் தடுத்து நிறுத்திச் சைவ சித்தாந்தக் கொள்கையைப் போற்றிப் பாதுகாத்த செயல் வரலாறு தந்த வாய்மையாகும்.

## எதிர்காலப் பணி (எதிர்பார்க்கும் பணி)

1. சற்றொப்ப, 90 ஆண்டுகளாக உழைத்து வரும் வரலாற்றுப் பெருமையுடைய நிறுவனம் இன்னும் ஒரு பத்தாண்டில் நூற்றாண்டு விழாவைக் கொண்டாட இருக்கிறது என்பதை எண்ணும்போது மனம் மிக மகிழ்ச்சியடைகிறது.

இருபத்தொன்றாம் நூற்றாண்டில் அடியெடுத்து வைத்ததும் தனது நூற்றாண்டு விழாவைக் கொண்டாட இருக்கும் இந்நிறுவனம் தனக்கென்று நிலையான ஒரு இடத்தைச் சைவப் பெருமக்களின் உள்ளத்தில் பிடித்திருந்தாலும் தனக்கென்று ஒரு நிலையான

இடத்தைத் தனிக் கட்டிடம் என்ற பெயரில் அமைத்துக் கொள்ளாமை வருந்துவதற்குரியதே. இக்குறை தவிரப் பாடுபட வேண்டும். நூற்றாண்டு விழாவை இந்நிறுவனம் தன் சொந்தக் கட்டிடத்தில்தான் நடத்துவது என வரையறை செய்து கொண்டு உழைத்தல் வேண்டும். பெருமன்ற உறுப்பினர்களும் மற்றவர்களும் தக்க பொருளுதவி செய்து இக்குறை தவிரப் பாடுபடுதல் வேண்டும்.

2. இந்நிறுவனத்தில் பெருஞ் சொத்தாக இருப்பது கடந்த 89 ஆண்டுகளாகச் சைவ சித்தாந்தப் பேரறிஞர்கள் பலரும் அவ்வப்போது எழுதி வந்த கொள்கைகளைத் தாங்கி வந்த கருவூலங்களாகிய சித்தாந்த (தமிழ்-ஆங்கிலம்) இதழ்களே. அவைகளில் காணப்பெறும் கொள்கை விளக்கக் கட்டுரைகளைத் தகுதியாலும் காலத்தாலும் முறையுற நோக்கி, கட்டுரைத் தொகுப்புக்களாக ஆக்கி, நூற்றாண்டு விழா வெளியீடுகளாக அமைக்கலாம்.

3. ஆங்கில நாளிதழ் 'இந்து'வில் '50 ஆண்டுகளுக்கு முன் இந்த நாளில்' என்ற தலைப்பில் செய்திகளைச் சுருக்கி வெளியிடுதல் போல, நடைமுறையில் வரும் சித்தாந்த இதழில் 50 ஆண்டுகளுக்கு முன் வெளியிடப் பெற்ற அரிய கட்டுரை யொன்றன் சுருக்கத்தைத் தொடர்ந்து வெளியிடுதல் நலம் பயப்பதாகும்.

4. சென்னைப் பல்கலைக்கழகத்துச் சைவ சித்தாந்தத் துறையோடு இணைந்து நின்று கோடைக்கால சைவ சித்தாந்த சாத்திரப் பயிற்சி வகுப்பை கல்லூரி ஆசிரியர்களுக்காக ஒரு திங்கள் அளவில் நடத்தலாம்.

5. திருக்கோயில்களில் வந்து வழிபாடு செய்கின்றவர்களையும் திருநீறு பூசியவர்களையும் கணக்கில் கொண்டு சைவ சித்தாந்தக் கொள்கை பரவி விட்டதாக எண்ண முடியாது. சைவ சித்தாந்தக் கொள்கை வழிச் சைவர்களை நாம் உருவாக்குதல் வேண்டும். அதற்காக சென்னை அல்லாத சுற்றுப்புற ஊர்களை அல்லது பேரூர்களைத் தேர்ந்தெடுத்து அங்கே அம்மக்களோடு இணைந்து நின்று சைவ சித்தாந்தக் கொள்கையை வாழ்வியற் பயிற்சிக் களங்களாக அமைத்து ஒரு திங்கள் பயிற்சி நடத்தலாம்.

சைவசித்தாந்தக் கொள்கையின் பெருமையையும் உண்மையியல்பையும் வளர்ச்சிக்கான வழி வகைகளையும் எடுத்துக் கூற வாய்ப்பளித்த சைவ சித்தாந்தப் பெருமன்றத்தின் தலைவர் திரு. தியாகராசனார் அவர்களுக்கும், செயலாளர் திரு. பாலசுந்தரனார் அவர்களுக்கும் செயற்குழு உறுப்பினர்களுக்கும் நன்றி கலந்த நல்

வணக்கம் கூறி குருவருளையும் திருவருளையும் வணங்கி இவ்வுரையை நிறைவு செய்கின்றேன்.

தென்னாடுடைய சிவனே போற்றி!
எந்நாட்டவர்க்கும் இறைவா போற்றி!!

# பேராசிரியர் முனைவர் கு. சுந்தரமூர்த்தி

(90ஆம் ஆண்டு வைரவிழா, திருவாரூர்)

நம் வாழ்நாளில் இன்றைய நாள் ஒரு நன்னாள். பெருமானைப் பற்றிப் பேசும் நாள். ஆதலின் இன்றே பிறந்த நாள். வீரற்கு விழுப்புண் படாத நாளெல்லாம் வழுக்கினுள் வைக்கும் நாள் என்பர். அதுபோல அடியவர்களாகிய நமக்கும் பெருமானின் பொருள்சேர் புகழைப் பேசாத நாட்களெல்லாம் வழுக்கினுள் வைக்கும் நாளாகும். அவ்வகையில் அன்றி இன்று நன்னாளாக அமைந்திருப்பதை இறைவன் வழங்கிய அருட்கொடை என்று எண்ணி மகிழ்வோமாக.

இதற்கு ஏதுவாக அமைந்திருப்பது நம் சென்னை சைவ சித்தாந்தப் பெருமன்றமாகும். அருட்டிரு ஞானியார் அடிகள், தமிழ்க் கடல் மறைமலையடிகள், சிவத்திரு. ஜே. எம். நல்லசாமிப்பிள்ளை போன்ற பெருமக்களால் 7.7.1905ல் தோற்றுவிக்கப்பெற்று, வழி வழியாகச் சீரிய பெரியவர்களால் காக்கப் பெற்று, இந்நாளில் வைர விழாக் கண்டு, நம் மன்றம் மகிழ்கின்றது. இவ்வகையில் தோற்றுவித்தும் வளர்த்தும் வந்திருக்கும் சான்றோர் பெருமக்களை நன்றியறிதலுடன் போற்றி மகிழக் கடமைப்பட்டுள்ளோம். பெருமக்களின் வான் புகழ் என்றும் நின்று நிலவுவதாகுக.

இப்பெருவிழா, கொண்டாடப் பெறும் இடம் திருவாரூராகும். இவ்வூர்ப் பெயரே சுவைத்தற்கு உரியதொன்றாகும். திரு என்பது பொதுவாகத் திருமகளைக் குறிக்கும். அப்பெருமாட்டியார் வழிபட்ட திருப்பதி இதுவாதலின் அப்பெயர் பெற்றது. பொருளிலார்க்கு இவ்வுலகம் இல்லை. ஆதலின் அப்பெருமாட்டியாரையும் அவர் வழிபட்ட பெருமானையும் வணங்கி மகிழ்வோம். இப்பொருள் தானும் அருள் வழிக்கு ஆட்பட்டிலதேல் அது பூரியார் கண்ணும் உளவென்று இழிக்கப்படும். ஆதலின் நமக்குப் பொருளோடு அருளும் வேண்டும். அவ்வகையிலும் இவ்வூர் முன்னிற்கின்றது. திரு-ஈண்டுச்

சென்றடையாத திரு. அத்திரு பெருமானேயாவன். அத்திரு யாண்டும் நிறைந்து நிற்பினும் இத்திருப்பதியில் விண்ணவரும் மண்ணவரும் போற்ற மேலும் சிறந்து நிற்பதாகும். அத்தகைய பெரும் திருவாம் பெருமானையும் வணங்கி மகிழ்வோம். இனித் திரு கேடும் ஆக்கமும் கெட்ட திரு என்றும் குறிக்கலாம். இத்திரு வாழ்வையும் வீழ்வையும் ஒப்பக் கருதும் மன உறுதியாம் திருவாகும். இத்திருப்பதியில் வாழும் அடியவர்க்கு இத்திரு பெரிதும் உளதாகலின் அத்தகைய மன உறுதியாம் திருவையும் பெற்று மகிழ்வோம். இனி இவ்வூர் ஆர் ஊர் என்று வினவி ஒருவர்க்கு மட்டும் உரிய ஊர் என்பதன்றி வழி வழியாக உலகினர் அனைவர்க்கும் உரிய ஊர்என்று கொண்டு பொதுவுடைமைத் தத்துவம் கூறியும் மகிழ்ந்து உரிமை கொள்ளலாம்.

இவ்வாறெல்லாம் எண்ணி மகிழ்தற்குரிய இவ்வூரின் தொன்மையை நினையின் அதுவும் ஓர் அரிய சிந்தனையை வழங்கி மகிழ்ச்சி தருவதாகும். இத்திருப்பதியின் தொன்மையை இவ்வகையில் சிந்திப்பதற்கு நாவரசர் பெருமானே முன்னின்று துணை செய்கின்றார்.

''திருவினாள் சேர்வதற்கு முன்னோ பின்னோ திருவாரூர் கோயிலாக் கொண்டநாளே!''

''சிலையால்முப் புரமெரித்த முன்னோ பின்னோ திருவாரூர் கோயிலாக் கொண்டநாளே!''

'அம்பலத்தே மன்னிக் கூத்தை, ஆடுவான் புகுவதற்கு முன்னோ அணியாரூர் கோயிலாக் கொண்டநாளே'

'வாங்கமதி வைப்பதற்கு முன்னோ பின்னோ வளராரூர் கோயிலாக் கொண்ட நாளே'

'நல்ல கோலம் நீ கொள்வதற்கு முன்னோ பின்னோ திருவாரூர் கோயிலாக் கொண்ட நாளே.'

'அறம்பலவும் உரைப்பதற்கு முன்னோ பின்னோ அணியாரூர் கோயிலாக் கொண்ட நாளே'

'சலந்தரனைக் கொல்வதற்கு முன்னோ பின்னோ தண்ணாரூர் கோயிலாக் கொண்ட நாளே'

'புகையெட்டும் முதலாய திசையெட்டுந் தெரிப்பதற்கு முன்னோ பின்னோ திருவாரூர் கோயிலாக் கொண்ட நாளே'

'ஈசனா யுலகேழும் மலையுமாகி இராவணனை ஈடழித்திட்டிருந்த நாளோ? மதயானை யுரிபோர்த்து மகிழ்த்த நாளோ? தாது மலர்

சண்டிக்குக் கொடுத்த நாளோ? சகரர்களை மறித்திட்டாட் கொண்ட நாளோ? தேசமுமையறிவதற்கு முன்னோ பின்னோ திருவாரூர் கோயிலாக் கொண்ட நாளே.'

என இறைவனையே வினவி இதன் தொன்மையை நமக்கு அறிவுறுத்துகின்றார் நாவுக்கரசர்.

அயிராவணம் ஏறாது ஆனேறேறி அமரர் நாடாளாதே ஆரூர் ஆண்ட பெருமானின் கருணைத் திறத்தை இதன்வழி நாம் அறிய முடிகின்றது.

தொன்மையை அறிந்த நாம் இதன் நன்மையையும் சேக்கிழார் காட்டக் காண்போம். வீதிகள் எப்பொழுதும் விழாக் கோலம் கொண்டிருக்குமாம். வீடுகள் எப்பொழுதும் விருந்தினரை ஏற்று மகிழ்ந்திருக்குமாம். நால்வகை வருணத்தவரும் தத்தம் ஒழுக்க நெறியில் தப்பாதவராம். வீட்டில் வாழும் ஆண்மகவுகளும் அவரவர் மனையில் தப்பாதிருப்பராம். பறவைகளும் விலங்குகளும் கூட நீதி நெறியில் நிற்குமாம். செல்வ மகளும் இவ்வூரை விட்டு நீங்காளாய்ச் செல்வம் மல்க நிற்பாளாம். இப்பகுதியல் உள்ளார் அனைவரும் திருஐந் தெழுத்தை ஓதிய வண்ணம் இருப்பாராம்; அதனால் எப்பிணிகளும் இப்பதியினிடத்து வர அஞ்சுமாம். எனவே மருத்துவக் கல்லூரிகளோ மருத்துவர்களோ மருந்துகளோ இப்பதிக்குத் தேவையில்லையாம். அம்மட்டோ! மனு வேந்தனின் அருமந்த அரசாட்சி குடிதழீஇக் கோலோச்சி மகிழுமாம். மக்களும் அம்மன்னன் அடிதழீஇ நின்று மகிழ்வராம். திருமுறைத் திருப்பதிகங்களைக் கிளிகள் பாடுமாம்! பூவைகள் கேட்டு மகிழுமாம். இவற்றுக்கெல்லாம் மேலாக இவ்வூரின் மண், தொண்டர்க்குத் தூது போயதால் பெருமானின் நடந்த செந்தாமரை அடி நாறி நிற்குமாம். இவ்வாற்றான் மதுரை மண் முடி கண்டு நிற்க இம்மண் அடிகண்டு நிற்கும் திறத்தை அறிகின்றோம்.

இததகைய பழமையும் பொலிவும் மிக்க திருப்பதியில் நாம் அனைவரும் நம் பெருமன்றச் சார்பில் வைரவிழாக் கொண்டாடி மகிழ்வதில் பெருமை கொள்கிறோம்.

இவ்வூரில் இவ்விழா நடைபெறுவதற்குத் துணையாய நம் பெருமன்றத் தலைவர் திருமிகு. எஸ். தியாகராசன் அவர்களையும் அவர்களுக்குத் துணைநின்று உதவும் அன்பர் பெருமக்களுக்கும் நன்றி செலுத்தக் கடமைப்பட்டுள்ளோம்.

## சைவ சித்தாந்தப் பெருமன்றம்

நம் பெருமன்றம் அரிய தொடர் ஒன்றை அடைமொழியாகக் கொண்டிலங்குகின்றது. அத்தொடர் 'சைவ சித்தாந்தம்' என்பதாகும். இத்தொடர்ப் பொருளை ஆழ்ந்து சிந்தித்தல் வேண்டும். சைவம் என்பது சிவத்தை வழிபடும் நெறிக்கு உரிய பெயராகும். சிவபரம் பொருளை வழிபடும் மரபு மிகத் தொன்மையானதாகும். இன்றைக்கு இருக்கும் நூல்களில் மிகப் பழமையான தொல்காப்பியத்திலோ அதனை அடுத்து வந்த சங்கப் பனுவல்களிலோ சிவம் என்ற சொல் இன்றேனும், சிவ பரம்பொருளைக் குறிக்கும் திருமேனி நலங்களும், அப்பெருமானின் அருள் நலங்களும் சங்கப்பனுவல்களில் பெரிதும் பேசப்படக் காண்கின்றோம். அவற்றுள் சில குறிப்பிடத்தக்கன.

### தொன்மை :

முன்னைப் பழம் பொருட்கும் முன்னைப் பழம் பொருளாக இருப்பவன் சிவ பெருமானே யாவன். இதற்கு அரணாக

*'அமர் கடக்கும் வியன் தானைத்*
*தென்னவன் பெயரிய துன்னருத் துப்பின்*
*தொன்முது கடவுட் பின்னர் மேய*
*வரைத் தாழ் அருவிப் பொருப்பிற் பொருந'* (மதுரை 39-42)

*'முது முதல்வன்'* (புறம் 466)

என வரும் பகுதிகள் அமைந்துள்ளன.

### முதன்மை :

இப்பெருமானின் முதன்மை வழிவழியாகக் குறித்துப் போற்றப்பட்டுள்ளது.

*'ஞால நாறும் நலங் கெழு நல்லிசை*
*நான் மறை முதுநூன் முக்கட் செல்வன்*
*ஆலமுற்றம் கவின் பெறத் தைஇய*
*பொய்கை'* - அகம் 181

*'ஆதிரை முதல்வன்'* - பரி 8-6
*'மறை முது முதல்வன்'* - சிலம்பு 2 - 1
*'பிறவா யாக்கைப் பெரியோன் கோவிலும்'* ,,
*'நுதல் விழி நாட்டத்து இறையோன் முதலா'* ,,
*'மதிவாள் சதுக்கம் ஈறாக'* ,,

என வருவன இவ்வுண்மையை உணர்த்தும்

## திருச்சடை

இனிப் பெருமானின் திருவுருவம் பின்வற்த திருமுறைகள் குறித்துப் போற்றுதற்கேற்பச் சங்கப்பனுவல்களிலும் போற்றப் பெற்றுள்ளன.

*'ஏற்றுவலன் உயரிய எரிமருள் அவிர்சடை - புறம் 56*

*'நன்றாய்ந்த நீள் நிமிர் சடை' -புறம் - 166*

*'ஈர்ஞ் சடை அந்தணன்' - குறிஞ்சிக்கலி - 2*

*'மிக்கொளிர் தாழ் சடை' - முல்லைக்கனி - 3*

*'பிறங்குநீர் சடைக் கரந்தன்' - நெய்தற்கலி - 33*

*'விரிசடைப் பொறை யூழ்த்து' - பரி 9:5,6*

*'மிக்கொளிர் தாழ்சடை மேவரும் பிறைநுதல் -மருதக்கலி - 1*

*'செஞ்சடை வானவன் அருளினல் விளங்க' -சிலம்பு 25:98*

*'செஞ்சடை சென்று திசைமுகம் அலம்பவும்' -சிலம்பு 28:70*

என வருவன காண்க.

## கங்கை தாங்கியது:

*'தணிஉறத் தாங்கிய தனிநிலை சலதாரி*
*மணிமிடற்று அண்ணல்' - பரி 9:6-7*

*'ஈர்ஞ்சடை அந்தணன்' - குறிஞ்சிக்கலி-2*

*'தேறுநீர் சடைக் கரந்து' - கலித்தொகை - கடவுள் வாழ்த்து*

*'கங்கை முடிக்கணிந்த கண்ணுதலோன் பாகத்து*
*மங்கை உருவாய் மறையேத்தவே நிற்பாய்' - சிலம்பு 12:9*

என வருவன காண்க.

## பிறை அணிந்தது:

*'கறைமிடற்று அண்ணல் காமர் சென்னிப்*
*பிறைநுதல் விளங்கும் ஒரு கண்போல' - புறம் 55*

*'பால்புரை பிறைநுதல் பொலிந்த சென்னி' - புறம் 31*

*'கொலைவன் சூடிய குழவித் திங்கள்போல்*
*வளையுப மலித்த கோடணி சேயும்' - முல்லைக்கலி-3*

*'எரிதிகழ் கணிச்சியோன் சூடிய பிறைக்கண்*
*உருவமாலை போலக்*
*குருதிக் கோட்டொடு குடர்வலந்தன'* - *முல்லைக்கலி-3*

*'கோடுவாய் கூடாப் பிறையைப் பிறிதொன்று*
*நாடுவேன் கண்டனென் சிற்றிலுட் கண்டாங்கே*
*ஆடையான் திரிதரும் கொல்லோ மணிமிடற்று*
*மாண்மலர்க் கொன்றை யவன்'* - *நெய்தற்கலி - 25*

*'குழவித் திங்கள் இமையவர் ஏத்த*
*அழகொடு முடித்த அருமை'* - *சிலம்பு 2:38-9*

*'பிறைமுடிக் கண்ணிப் பெரியோன்'* - *சிலம்பு 11:72*

*'கிளரொளிச் சென்னியின்*
*இளம்பிறை சூடிய இறைவன் வடிவினோர்'* - *சிலம்பு 22:86-7*

என வருவன காண்க.

## நீறணி செற்றியன்:

*'மண்டமர் பலகடந்து மதுகையால் நீறணிந்து'*
- *கலித்தொகை கடவுள் வாழ்த்து*

என வருவது காண்க.

## நுதல் வழிநாட்டம்:

*'முக்கட் செல்வர்'* - *புறம் 6*

*'பிறைநுதல் விளங்கும் ஒரு கண்போல'* - *புறம் 55*

*'கடந்தடு முன்பொடு முக்கண்ணான்'* - *பாலைக்கலி - 1*

*'முக்கண்ணான் உருவே போல்'* - *முல்லைக்கலி-3*

*'கண் மூன்று உடையானும் காக்கையும் பையரவும்*
*என்னின்ற யாயும் பிழைத்ததென்'* - *நாலடி 400*

*'ஏற்றூர் தியானும் இகல் வெம்போர் வானனும்*
*ஆற்றலும் ஆள்வினையும் ஒத்தொன்றின் ஒவ்வாரே*
*கூற்றக் கணிச்சியோன் கண்மூன்றிரண்டேயாம்*
*ஆற்றல் சால் வானவன் கண்'* - *முத்தொள்ளாயிரம் 126*

*'நுதல் வழிநாட்டம்'* - *சிலம்பு 14:7*

என வருவன காண்க.

## நீலமணி மிடறு :

*'கறை மிடற்று அண்ணல்'* - புறம் 55

*'மணி மிடற் றோன்'* - புறம் 56

*'மணி மிடற் றண்ணல்'* - பரி 9:7

*பெரும்பெயர்க் கணிச்சியோன் மணிமிடற்று அணிபோல*
*இரும்பிணர் எருத்தின் ஏந்திமிலி குராலும்*
*மாறாப்போர் மணிமிடற்று* - முல்லைக்கலி - 5

*'நீரகம் பனிக்கும் அஞ்சுவரு கடுந்திறல்*
*பேரிசை நவிரம் மேஎஉறையும்*
*காரிஉண்டிக் கடவுளது இயற்கை'* - மலைபடு 81-83

*'விண்ணோர் அமுதுண்டும் சாவ ஒருவரும்*
*உண்ணாத நஞ்சுண்டு இருந்தருள் செய்குவாய்'* -சிலம்பு 12-22

## கொன்றைமலர் :

இறைவன் அன்போடு அடியவர்கள் உம்மலரைச் சூட்டினும் மகிழ்வன். இதனை

*நல்லவும் தீயவும் அல்ல குவியிணர்ப்*
*புல்லிலை எருக்க மாயினும் உடையவை*
*கடவுள் பேணேம் என்னாவாங்கு'* (புறம் - 106)

எனவரும் பகுதியால் அறியலாம். எனினும் அவனுக்குக் கொன்றை மலர் உகந்ததாகும். இக்குறிப்பு,

*'இயங்கெயில் எய்தவன் தார்பூப்ப'* (ஐந்திணை ஐம்பது -1)

*'மணிமிடற்று மாண்மலர்க் கொன்றையவன்'* (நெய்தல் 25)

*'அயந் திகழ் நறுங் கொன்றை அலங்கலர் தெரியலான்'* ("-33)

எனவரும் பாடற்பகுதிகளான் அறியலாம்.

## கையிலங்கு கருவிகள் :

*'மழுவாள் நெடியோன் தலைவனாக'* (மதுரை - 55)

*'மாற்றருங் கணிச்சி மணிமிடற்றோன்'* (புறம் 56)

*'சீறருமுன்பினோன் கணிச்சிபோல'* (பாலைக்கலி-1)

*'எரிதிகழ் கணிச்சியோன்'* *(முல்லைக்கலி-1)*

*'பெரும் பெயர்க் கணிச்சியோன்'* *('' - 3)*

*'மறைமுடிக் கண்ணிப் பெரியோன் ஏந்திய*
*அறைவாய்ச் சூலத்து அருநெறி கவர்க்கும்'* *(சிலம்பு - 11)*

எனவருவன கொண்டு இக்கருவிகள் உள்ளமையறியலாம்.

## ஊர்தியும் கொடியும்:

சிவபெருமானுக்கு ஊர்தியும் கொடியும் ஆனேறேயாம். இதனை

*'ஏற்றுவலன் உயரிய....மணிமிடற்றோன்'* *(புறம் 56)*

*'வெள்ளேறு வலம்வயன் உயரிய செல்வன்'* *(முருகு-152)*

*'ஆனேற்றுக் கொடியோன் போல் எதிரிய இலவமும்'* *(பாலை 25)*

*'உருவவேற்று ஊர்தியான் ஒள்ளணிநக் கண்ண'* *(நெய்தல்-33)*

*'ஆனேறு ஊர்ந்தோன் அருளில் தோன்றி'* *(சிலம்பு 30-141)*

என வரும் பகுதியால் அறியலாம்.

## அரும் செயல்கள் :

இறைவனின் அரும் செயல்களுள் திருமுறைகளில் பெரிதும் குறிக்கப்படுவன திரிபுரம் எரித்ததும் இராவணனை ஈடு அழித்ததுமாம். இவற்றையும் சங்க இலக்கியங்கள் விரிவாகவும் அழகாகவும் குறிக்கின்றன.

### 1. திரிபுரம் எரித்தது

*'ஓங்கு மலைப் பெருவிற் பாம்புஞாண் கொளீஇ*
*ஒருகணை கொண்டு மூவெயில் உடற்றிப்*
*பெருவிறல் அமரர்க்கு வென்றி தந்த*
*கறைமிடற் றண்ணல்'*
*(புறம் 55)*

*'மூவெயின் முருக்கிய முரண்மிகு செல்வனும்'* *(முருகு - 154)*

*'ஆதி அந்தணன் அறிந்து பரிகொளுவ*
*வேத மாபூண் வையத்தேர் வார்ந்து*
*நாக நாணா மலைவில்லாக*
*மூவகை ஆரெயில் ஆர்அழல் அம்பின்முரிய'* *(பரி - 5)*

*'செல்விடைப் பாகன் திரிபுரம் செற்றுழிக்*
*கல்லுயர் சென்னி இமயவில் நாணாகி*
*தொல்புகழ் தந்தாருந் தாம்'* (பரி திரட்டு 75-8)

*'தொடங்கற்கண் தோன்றியமுதியவன் முதலாக*
*அடங்காதார் மிடல்சாய அமரர்வந்து இரத்தலின்*
*மடங்கல் போற்சினைஇ மாயம்செய் அவுணரைக்*
*கடந்தடு முன்பொடு முக்கண்ணான்மூ வெயிலும்*
*உடனறக் கால் முகம்போல ஒண்கதிர் தெறுதலின்*
*சீறருங் கணிச்சியோன் சினவயின் அவ்வெயில்*
*ஏறுபெற்று உதிர்வனபோல் வரைபிளந்து'* (பாலை -1)

*'இயங்கெயில் அயப்பிறத்த எரிபோல எவ்வாயும்*
*கனைகதிர் தெறுதலின் கடுத்தெழுந்த காமபுத்தீ'* (நெய்தல்-33)

*'திரிபுரம் தீமடுத்து'* (கலி-கடவுள் வாழ்த்து)

*'இயங்கெயில் எய்தவன் தார்பூப்ப'* (ஐந்திணை ஐம்பது)

என வருவன காணலாம். இங்கு ஒருகணை கொண்டு மூவெயில் உடற்றி என வருதற்கேற்ப,

*'ஈரம்பு கண்டிலம் ஏகம்பர் தம்கையில்*
*ஓரம்பே முப்புரம் உந்தீபற*
*ஒன்றும் பெருமிகை உந்தீபற்*

என வரும் திருவாசகப் பகுதி அமைத்து இருத்தலும் கண்டு மகிழலாம்.

## 2. இராவணனை ஈடு அழித்தது:

இராவணன் ஆண்மை வியந்து பாராட்டுதற்குரியது. ஆயினும் அவ்வீரத்தை இருதீய வழிகளில் பயன்படுத்தியமை அவனுக்கு இழிவையும் அழிவையும் தருவனவாயின. ஒன்று, கயிலையை எடுத்தது. இரண்டு, பிறன்மனை நயந்தது. இவற்றுள் முன்னையதை,

*'இமையவில் வாங்கி ஈர்ஞ்சடை அந்தணன்*
*உமையமர்ந்து உயர்மலை இருந்தனனாக*
*ஐயிரு தலையின் அரக்கர் கோமான்*
*தொடிப் பொலி தடக்கையிற் கீழ்புகுத்தம்மில*
*எடுக்கல் செல்லாது உழப்பவன் போல்'* (குறிஞ்சி 2)

எனக் கலித்தொகையும் எடுத்துக் கூறுகின்றது.

## 3. ஆடல்கள் :

இறைவன் திரிபுரம் எரித்தபின் ஆடிய ஆடல்கள் இரண்டாம், அவை கொடுகொட்டி, பாண்டரங்கம் என்பன. இதனை

*'படுபறை பலஇயம்பப் பல்லுருவம் பெயர்த்துநீ*
*கொடுகொட்டி ஆடுங்கால் கோடுயர்அகல் அல்குல்*
*கொடிபுரை நுசுப்பினாள் கொண்டசீர் தருவாளோ' (கலித்தொகை)*

*'திரிபுரம் எரியத் தேவர் வேண்ட*
*எரிமுகப் பேரம்பு ஏவல் கேட்ப*
*உமையவள் ஒருதிறனாக ஓங்கிய*
*இமையவன் ஆடிய கொடுகொட்டி' (சிலம்பு 40-3)*

*'மண்டமர் பலகடந்து மதுகையால் நீறணிந்து*
*பண்டரங்கம் ஆடுங்கால் பணையெழில் ஆணைமென்றோன்*
*வண்டரற்றுங் கூந்தலாள் தளர்தூக்குத் தருவாளோ' (கலி)*

என வருவன காண்க.

### மூத்தபிள்ளையார்:

சிவபெருமானின் மூத்த திருமகனார் இவர். இவரைப் பற்றிய குறிப்பு சங்கநூல்களிலோ, சங்கம் மருவிய நூல்களிலோ வெளிப்படையாக இல்லை. மணிமேகலையில் மட்டும் ஒரு குறிப்புக் காணப்படுகின்றது.

*'கஞ்ச வேட்கையில் காந்தமன் வேண்ட*
*அமர முனிவன் அகத்தியன் தனாது*

கரகம் கவிழ்த்த காவிரிப்பாவை'

என்பது அப்பகுதியாகும். இங்குக் காந்தமன் வேண்ட அகத்தியர் தம் கரக நீரைக் கவிழ்க்க, அதனால் காவிரி பெருகியது எனக் குறிக்கப் பெறுகின்றது. எனினும் கந்தபுராணத்தில் சீர்காழியில் வதிந்த இந்திரன் நீர்வளம் வேண்டி மூத்த பிள்ளையாரை வேண்ட அவருக்காக வடிவு கொண்டு கொங்கு மண்டலத்தில் போந்திருந்த அகத்தியனாரின் கமண்டலத்தைக் கவிழ்க்க, காவிரி பெருகியது எனக் கூறப்படுகின்றது. கச்சியப்பர் காலம் பிந்தியதாயினும், கந்தபுராண வரலாறு நிகழ்ந்த காலம் சங்க காலத்திற்கு மிகமிக முந்தியதாகும். ஆதலின் அகத்தியர் கொண்டிருந்த கமண்டலத்தை மூத்த பிள்ளையார் கவிழ்க்க அதன் வழி காவிரிப் பெருகியது எனக் கோடலே வரலாற்று வகையில் சிறப்பாதாகும். இவற்றான் மூத்த

பிள்ளையார் பற்றிய குறிப்பும் ஒரு வகையால் உளதாதலை அறிகின்றோம். இனிக் கி.பி. 7ஆம் நூற்றாண்டில் தோன்றிய ஞானசம்பந்தப் பெருமான் தம்வாக்கில் திருச்செங்காட்டான் குடியில் உள்ள திருக்கோவில் கணபதிஈச்சுரம் எனப் பெயர் பெற்று இருப்பதைக் குறித்துக் காட்டியுள்ளார். மூத்த பிள்ளையார் அங்கு வழிபட்ட காலம் அறிதற்குரியதாகும். இதனாலும் மூத்த பிள்ளையாரைப் பற்றிய குறிப்பு தொன்மையதாதல் தெரியலாம். இதுவன்றித் தொல்காப்பிய உரை ஆசிரியர் உரையிலும் இப்பெருமானைப் பற்றிய குறிப்பு இடம் பெற்றுள்ளது.

### சேயோன்:

இப்பெயர் முருகப் பெருமானைக் குறித்தலைத் தொல் காப்பியத்தால் அறியலாம். குறிஞ்சி நிலக்கடவுளாக போற்றப்படும் இப்பெரு மகனாரைப் பற்றித் திருமுருகாற்றுப்படை என்றொரு நூலோ சங்கப் பனுவல்களில் இடம் பெற்றுள்ளது. பரிபாடலிலும் அதற்கு முன்னும் பின்னுமாக உள்ள சங்ககால நூல்களிலும் இப்பெருமானின் திருமேனி நலமும் அருள் நலமும், ஊர்தி, கொடி முதலியனவும், பதுமனை அழித்த அருஞ்செயலும் பலவாகக் குறித்துப் போற்றப் பெற்றுள்ளன. இப்பெருமானின் இரு தேவியருள் தெய்வயானை பற்றிய குறிப்பு பரிபாடலில் கிடைக்கின்றது. வள்ளியம்மையாரைப் பற்றிய குறிப்பு திருமுருகாற்றுப்படை, நற்றிணை, பரிபாடல், சிலம்பு, மணிமேகலை முதலிய பல நூல்களும் காணப்படுகின்றன. இவ்வாற்றான் சிவபரம் பொருளையும் அவர் தம் திருமகனாராகக் கூறப் பெறும் மூத்த பிள்ளையார், பிள்ளையார் பற்றிய குறிப்புக்களும் பலவாக இடம் பெற்று இருத்தலின் சிவவழிபாடு இலக்கிய வகையால் தொன்மை சான்றது என அறிய இயலுகிறது.

இனி அகழ்வாராய்வுகளாலும் இவ்வழிபாட்டின் தொன்மை நன்கு அறியப்படுகின்றது. சுமத்ரா, இத்தாலி, பாலித்தீவு, எகிப்து, உரோம், கிரேக்கம் முதலிய நாடுகளில் கிடைத்திருக்கும் குறிப்புகளால் தென்னாடுடைய சிவனே எந்நாட்டவர்க்கும் இறைவன் ஆதலை அறிய முடிகின்றது.

### தத்துவ நோக்கில் :

இனி இதற்குரிய தத்துவ நோக்கில் காணும் பொழுதும் இதன் பழமை மிகத் தெளிவாக அறிய முடிகின்றது. சைவ சித்தாந்தத்தின்

அடிப்படைக் கொள்கை முப்பொருள் உண்மையாகும். அவை இறை, உயிர், தளை என்பனவாகும்.

## 1. இறை :

இறைவன் ஒருவனே என்பது இச்சமயத்தின் அடிப்படைக் கொள்கையாகும். 'ஒன்று என்பது ஒன்றே காண், ஒன்றேபதி என்னும் சிவஞானபோதம்' இக்கொள்கைக்கு அடித்தளமாக 'வினையின் நீங்கி விளங்கிய அறிவன் முனைவன்' என வரும் தொல்காப்பியக் கூற்று அமைந்துள்ளது. இதனை வழி மொழிவார் போலத் திருவள்ளுவ னாரும் 'ஆதிபகவான்', 'வாலறிவான்', 'மலர்மிசை ஏகினான்', 'அறவாழி அந்தணன்', எண் குணத்தான்', 'தனக்குவமை இல்லாதான்', 'இறைவன்' என ஒருமைச் சொல்லாலேயே இறை வனைக் குறித்துள்ளார். பண்பு வகையால் குறிக்கும்பொழுது 'ஓர்த்து உள்ளம் உள்ளது உணரின்', 'சிறப்பு என்னும் செம்பொருள்' எனக் குறித்திருப்பதும் காணலாம். இக்கருத்தே 'ஒன்றே குலம் ஒருவனே தேவன்', 'ஒருவன் என்னும் ஒருவன் காண்க' என பின்வந்த திருமுறைகளிலும் இடம் பெற்றுள்ளது. இப்பெருமானே தோற்றமில் காலத்தவன் (அனாதி) என்னும் சைவசித்தாந்தம். இதற்கு அடித்தளமாக 'முதுமுதல்வன்', 'தொன்முது கடவுள்', 'ஆதிபகவான்' என சங்க இலக்கியப் பகுதிகள் அமைந்துள்ளன. இதற்கு இவற்றுக்கு மேலாக

*'மன்னிய நாண்மீன் மதிகனலி என்று இவற்றை*
*முன்னம் படைத்த முதல்வனைப் பின்னரும்*
*ஆதிரையான் ஆதிரையான் என்று என்று அயருமால்'*

எனவரும் முத்தொள்ளாயிரப் பாடல் சான்றாக அமைந்து நிற்கின்றது. இப்பெருமான் அம்மையப்பராக இருந்து உயிர்களை ஆட்கொள்வான் என்னும் தத்துவம். இதற்கு அடித்தளமாக,

*'உமையமர்ந்து விளங்கும் இமையா முக்கண்*
*மூவெயில் முருக்கிய முரண்மிகு செல்வன்'* *(முருகு - 135)*

*'உமையமர்ந்து உயர்மலை இருந்தனனாக'* *(கலி-2)*

*'பாகம் உண்ட பைங்கட் பார்ப்பான்*
*உமையொடு புணர்ந்த காமவதுவை'* *(பரி 5-27-28)*

*'ஒட்டிய காதல் உமையாள் ஒருபாலாக்*
*கட்டங்கம் வெல்கொடி கொண்டோனும்'* *('')*

*'உமையவன் ஒருதிற னாகவோங்கிய இமையவன்' ('')*

*'இமையச் சிமைத்து இருங்குயி லாலுவத்து*
*உமையொரு பாகத்து ஒருவனை வணங்கி' (சிலம்பு-28)*

எனவரும் பகுதிகள் அமைந்துள்ளன. இவ்வாறு போகியாய் இருந்து உயிர்க்குப் போகத்தைப் புரிதல்போல, யோகியாய் இருந்தும் உயிர்கட்கு யோகத்தைப் புரிவன் என்னும் சித்தாந்தம். இவ்வகையில் போகத்தை உணர்த்தும் வடிவம் ஆலமர் செல்வனாக எழுந்தருளி யிருக்கும் திருஉருவாகும். இவ்வடி

*'ஆலமர் கடவுளன்ன நின்செல்வம்' (புறம் 198)*

*'ஆல்கெழு கடவுட் புதல்வ' (முருகு - 2-56)*

*'ஆலமர் செல்வன்' (மருதக்கலி-16)*

*'ஆலமர் செல்வன் அணிசால் மகன்விழா' (மருதக்கலி-18)*

*'ஐயம் தீர்ந்து யார் கண்ணும் அருந்தவ முதல்வன் போல்*
*பொய்கூறா என நின்னைப் புகழ்வது கெடாதோ தான்'*
*(மருதக்கலி-35)*

*'சீர்மிகு சிறப்பினோன் மரமுதல் கைசேர்த்த*
*நீர் மலி கரகம் போல் பழந்தூங்கு முடத்தாழை!' (நெய்தல் 18)*

*'ஆலமர் செல்வற்கு அமர்ந்தனன் கொடுத்த' (சிறுபாண்-97)*

*'சீர்தருசிறப்பின் வார்த்திகன் புதல்வன்' (சிலம்பு-23-90-1)*

*'ஆலமர் செல்வன் பெயர்கொண்டு வளர்ந்தோன்' ('' 81)*

*'ஆலமர் செல்வன் மகன் விழாக்கால் கோள்' (மணி 3)*

என வரும் பகுதிகள் எடுத்துப் போற்றியுள்ளன.

## தொழில்கள் :

படைப்பு முதலிய ஐந்தொழில்களையும் மால், அயன் முதலிய ஐவர் இடத்தும் கொடுத்து அவர்களுக்குத் தலைவனாக விளங்குபவன் சிவபெருமானே யாவன் என்றும், ஒரு கால எல்லையில் இவ்வைவராலும் இயங்கி வந்த இவ்வுலகை முழுமையாகத் தன்பால் ஒடுக்குதலின் இப்பெருமானே சங்கார காரணன் ஆவன் என்றும் ஞானநூல்களும் குறித்துக் காட்டும். இங்குச் சங்கார காரணன் என இந்நூல்கள் குறித்ததற்கேற்ப

*'கூற்று ஒத்தீயே மாற்றரும் சீற்றம்'* *(புறம் 5-6)*

*'கா அய் கடவுள் சேஎய் செவ்வேள்'* *(பரி 5-13)*

*'கொலைவன்'* *(முல்லைக்கலி-3)*

எனவரும் பகுதிகளும் அரணாக நிற்கின்றன.

இவ்வாறு ஒடுக்குபவன் இடத்தினின்றே மீண்டும் இவ்வுலகம் தோன்றும் எனும் கருத்தைக்

*'தொல்லூழி தடுமாறித் தொகல் வேண்டும் பருவத்தால்*
*பல்வயின் உயிரெல்லாம் படைத்தான்கண் பெயர்ப்பான்போல்*
*எல்லுறு தெறுகதிர் மடங்கித் தன்கதிர் மாய'* *(நெய்தல்-12)*

எனவரும் பகுதி சிறப்பாக விளக்கி நிற்றலும் காணலாம்.

## 2. உயிர் :

உயிர் காட்டலாகாப் பொருளது உடம்பின் வழியே அதன் உண்மையும் இன்மையும் அறியத்தக்கது. அத்தகைய உயிர் உடலோடு இயையினும் தன்னிலை தெரியாது என்றெல்லாம் ஞான நூல்கள் கூறும். இதற்கு அடித்தளமாக

*'மெய்யின் வழியது உயிர்தோன்று நிலையே'*
*(தொல்-சொல்-கிளவி-உரை)*

*'மெய்யோடு இயையினும் உயிரியல் திரியா'* *(தொல்-எழுத்து-18)*

எனவரும் தொல்காப்பிய நூற்பாக்கள் அமைந்துள்ளன. இவ்வுயிர் தோற்றமில் காலத்தது (அனாதி) என்பர். இதற்கு ஏற்பத் தொல்காப்பியத்தும் அதன்பின் வந்த சங்கப்பனுபல்களிடத்தும் 'மன்னுயிர்' என்றே கூறப்பெற்றுள்ளது. மன்னுயிர் - நிலைபெற்ற உயிர். இக்கருத்து மேலும் விளங்கத் 'தொல்லுயிர்' எனத் தொல்காப்பியமும், 'தொன்று மூத்த உயிர்' எனப் புறநானூறும் குறித்துக் காட்டுகின்றன. உயிர்கள் பல என்னும் சைவசித்தாந்தம். இதற்கு ஏற்ப தொல்காப்பியத்தில் ஓரறிவு முதல் ஆறறிவு ஈறாக உயிர்கள் பலவற்றையும் கூறி வகைப்படுத்தி இருப்பது பெரும் சான்றாகும். இதற்கு மேலாக,

*'மன்னுயிர்ப் பன்மையும் கூற்றத் தொருமையும்'* *(புறம் 19)*

*'ஈயாது வீயும் உயிர்தவப் பலவே'* *(புறம் 235)*

*'இடுதிரை மணலினும் பலவே'* *(புறம் 363)*

*'பல்வயின் உயிரெல்லாம்'* *(நெய்தற்கலி-12)*

*'கைகூப்பி, எல்லா உயிரும் தொழும்'* *(குறள் - 260)*

*'பகுத்துண்டு பல்லுயிர் ஓம்புதல்'* *(குறள் - 322)*

*'வையத்து இறந்தாரை எண்ணிக் கொண்டற்று'* *(குறள் 22)*

*'உயிர்த்தொகை உண்ட ஒன்பதிற்றிரட்டி'* *(மணிமேகலை 23-79)*

*'எவ்வுயிர்க் காயினும் இரங்கல் வேண்டும்'* *(மணிமேகலை 23-79)*

என வருவனவும் காண்க

## 3. தளை :

'பற்று என்னும் பாசத்தளை' என்னும் திரிகடுகம். இது இரு வகையில் அமைவதை 'யான் எனது என்னும் செருக்கு' எனத் திருக்குறள் கூறும். இவ்வகையில் உயிர் ஈட்டிக் கொள்வதே வினையாகும். இவ்வினை இறைவற்கு என்றும் இலதாதலை 'வினையின் நீங்கி விளங்கிய அறிவன்' எனவரும் தொல்காப்பியத்தால் அறியலாம். இறைவற்கு இலவாகவே உயிர்க்கு அவ்வினை உளதாதலும் ஆண்டே உய்த்துணரலாம். இதனையே திருக்குறள் ஆகூழ், போகூழ் எனப் பிரித்துக் காட்டியது. தொல்காப்பியமும் 'ஒன்றே வேறே என்று இருபால் வயின்' என இதனை வேறொரு வகையான் கூறிற்று. இவ்வினை நீக்கம் பெறுதற்கு உயிர்கள் செயத்தக்கன மூவகையவாம். ஒன்று இறைவனை மனத்தால் என்றும் நினைத்து நிற்பது. இரண்டு அவன் பொருள் சேர் புகழை எஞ்ஞான்றும் போற்றி நிற்பது. மூன்று உடம்பால் வணங்கி நிற்பது.

இவையே இறைவனை அடைதற்குச் சாதனமாகும். இதனைத் திருக்குறள் 'சேர்ந்தான், சேர்ந்தான்' எனவரும் சொற்களால் மனத்தால் நினைதலையும், 'பொருள் சேர் புகழ் புரிதல்' என்பதால் வாயால் போற்றுதலையும், 'தாளை வணங்காத்தலை' என்பதால் வணங்குதலையும் குறித்துக் காட்டுவர். இச்சாதனையின் பயன் வினை நீக்கமும் இறைவனை அடைதலும் ஆகும் என்னும் ஞானநூல் இதனையும் திருக்குறள். இருள் சேர் இருவினையும் சேரா' எனவரும் திருக்குறளாலும், 'இறைவனடி சேர்ந்தார். பிறவிப் பெருங்கடல் நீந்துவர்' எனும் திருக்குறளாலும் குறித்துக் காட்டுவர். சிவஞான போதத்துப் பயனியலில், பாசநீக்கமும் சிவப்பேறும் எனக்குறித்துக் காட்டுவதும் இதுவேயாம்.

இவ்வகையில் திருக்குறள் கடவுள் வாழ்த்துப் பகுதியைப் பின்வந்த சிவஞானபோதம் பகுப்போடு ஒத்துக் காண்டற்கும் இயைவதாகின்றது. 'அகர முதல எழுத்தெல்லாம் ஆதி பகவன் முதற்றே உலகு' என்பது அளவையியலாகும. ஆதிபகவன், வாலறிவன், மலர்மிசை ஏகினான், தனக்குவமையில்லாதவன், அறவாழியந்தணன், எண்குணத்தான் இறைவன் என்றெல்லாம் கூறப்படுவன இறைபற்றிய இலக்கணவியலின் பாற்படும். 'சேர்ந்தார்', 'புகழ்புரிந்தார்', 'தாளை வணங்காத் தலை' என வருவன சாதனவியலின் பாற்படும். 'இருள் சேர் இருவினையும் சேரா', 'மனக்கவலை மாற்றல் அரிது', 'யாண்டும் இடும்பை இல'. 'பிறவிப் பெருங்கடல் நீந்துவர்' என வருவன பயனியலின் பாற்படும்.

இவ் அருமைப்பாடுகளைக் கொண்ட அரியதொரு கொள்கையே சைவசித்தாந்தக் கொள்கையாகும். அதனை உயிர்ப்பாகக் கொண்டு இயங்கும் நம் சைவசித்தாந்தப் பெருமன்றத்தின் வைர விழாவில் இவற்றையெல்லாம் நினைவு கூறவும், கல் தோன்றி மண் தோன்றாக் கால முதலே வாளொடு முன் தோன்றி மூத்த குடிமக்களாக விளங்கும் தமிழர்க்குரிய தொன்மைச் சமயம். இதுவே என்பதை ஓராற்றான் நினைந்து மகிழவும் நேர்ந்த வாய்ப்பினை நினைந்து பெரிதும் மகிழ்கின்றேன். வாழ்க சீர் அடியார் எல்லாம்.

# தமிழ்ப் பேராசிரியர் முனைவர் (திருமதி)
# வெ. கனகசுந்தரம்

(91ஆம் ஆண்டு விழா, திருப்பாதிரிப்புலியூர்)

சிவநெறிச் செல்வர்களே! ஆன்றோர் பெருமக்களே!
பெரியோர்களே! தாய்மார்களே! அனைவருக்கும்
என் பணிவார்ந்த வணக்கம்

*''இம்மை வானவர் செல்வம் விளைத்திடும்*
*அம்மை யேல்பிற வித்துயர் நீத்திடும்*
*எம்மை ஆளும் இடைமரு தன்கழல்*
*செம்மை யேதொழு வார்வினை சிந்துமே!''*

என்றார் அப்பர் அடிகள்.

'உலகம் இயற்கை வழி இயங்கவே அமைந்தது. இயற்கைச் செந்நெறி நல்வாழ்வைக் கூட்டும். அந்நெறியினின்றும் வழுவ வழுவ மாசுகள் வாழ்விடைப்புகும். மாசுகள் ஒவ்வோரிடத்தில் ஒவ்வொரு விதமாக நின்று. மன்பதையின் ஆக்கத்துக்குக் கேடு சூழ்ந்து கொண்டிருக்கும்' என்பது ஆன்றோர் கண்டு உணர்த்திய அனுபவ உரையாகும். ஆதலால் இந்த உலக வாழ்க்கையை உவப்புடைய தாக்கவும் மறுமை வாழ்வைப் பயனுடையதாக்கவும் திருவடித் துணை இன்றியமையாதது என்பது பெறப்படும். சித்தம் சிவமானால் செயல் எல்லாம் தவம் ஆகும் என்பது உண்மை.

## மாமன்றப் பெருமை

சைவ சமயநெறி அருட்பெருகு தனிக் கடலும், உலகுக்கெல்லாம் அன்புசெறி கடலுமாம் என ஓங்கி நின்றதாகும். அருள்நெறியும் அன்புநெறியை சைவ நெறி தான் பெற்ற புண்ணியக் கண்ணிரண்டு என்பர் சேக்கிழார் பெருமான். தென்தமிழ் நாட்டைச் சிவலோகமாக்கும் அரிய பணிகளில் ஈடுபட்டு அருந்தமிழ்த் தொண்டினையும்

சிவநெறித் தொண்டினையும் இரு கண்களெனக் கொண்டு சைவத் திருமடங்கள் அயராது பாடுபட்டு வருகின்றன. அத்திருமடங்கள் சமயப் பணிகளும் பலவித சமுதாய வளர்ச்சிப் பணிகளும் ஆற்றிவருவது குறிப்பிடத்தக்கது.

24.5.1901இல் மதுரைமாநகரில் மதுரைத் தமிழ்ச் சங்கம் நிறுவப் பெற்ற செய்தி ஞானியார் சுவாமிகளுக்குப் பெருமகிழ்ச்சி அளித்தது. ''தமிழைத் தழைப்பிக்கத் தாங்கள் முயல வேண்டும். தமிழின் வளர்ச்சிக்கு ஓர் அமைப்பைச் சங்கம் கண்ட மதுரையில் உருவாக்க வேண்டும்'' என 1900 ஆம் ஆண்டில் திருப்பாதிரிப்புலியூர்த் திருமடாலயத்திற்கு ஞானியார் சுவாமிகளைத் தரிசிக்கப் பாண்டித்துரைத் தேவர் வருகைபுரிந்த போது சுவாமிகள் தமது விருப்பத்தைத் தெரிவித்ததன் பயனே தமிழ்ச் சங்கம் நிறுவப் பெற்றது என்பதை எப்போதும் எல்லோரும் நினைவில் கொள்ளுதல் வேண்டும்.

இந்த இடம் தமிழ்பரப்பும திருத்தொண்டு புரிந்த இடம்; தமிழ்த் தென்றல் திரு.வி.க. ஞானியார் சுவாமிகளைத் தமிழாகவே கண்ட இடம்; தமிழறிஞர் வையாபுரிப்பிள்ளை 'தமிழ்ஞானி' என்றும் புகழப் பெற்ற சுவாமிகள் வசிந்த இடம்.

சென்னையைத் தலைமையிடமாகக் கொண்ட ஓர் அமைப்பினைக் கண்டால் சிறந்த நலம் பயக்கும் என்னும் எண்ணத்தின் பயனாக, 7.7.1905, விசுவாவசு ஆண்டு ஆனித் திங்களில் சென்னை அன்பர்களும் பிற வெளியூர் அன்பர்களும் கூடியிருந்த அவையில் ''சைவசித்தாந்த மகாசமாசம்'' என்ற பெயருடன் நிகழ்ச்சிகளுக்கு ஞானியார் சுவாமிகள் தாமே தலைவராக இருந்து திருப்பாதிரிப்புலியூர் ஸ்ரீமத் ஞானியார் மடாலயமாகிய இதே இடத்தில் தொடங்கி வைத்தார். சமயப் பணியும், தமிழ்ப் பணியும் இணைந்து நடைபெறும் இதே இடத்தில் சைவசித்தாந்தப் பெருமன்றத்தின் 91ஆம் ஆண்டு விழாவினைக் கொண்டாடுதற்குக் கூடியிருக்கிறோம் என்பது பெருமகிழ்ச்சியைத் தருகின்றது.

மெய்கண்டார் வழிநின்று சைவ சித்தாந்தக் கொள்கையை மக்கள் மன்றத்தில் அவர்தம் வாழ்வியற் பொருளாக ஆக்கி நிறுத்தும் சிறந்த தொண்டினைக் கடந்த 91 ஆண்டுகளாக அயராது உழைத்ததால் வளர்ந்து வந்த தொண்டு நிறுவனமே சைவ சித்தாந்தப் பெருமன்றம் என்று கணிக்கும் போது வியப்பின் விளிம்பில் நின்று போற்றுதலோடு கைகூப்பி தலைவணங்கவும் செய்கின்றோம்.

## சைவமங்கையர் மாநாட்டுத் தலைமைப் பொருள் :

பழங்கால நம்பிக்கைகளும் கொள்கைகளும் ஒரு புறம்; இக்காலப் பத்தறிவும் புதுப்போக்கும் ஒரு புறம்; இவற்றிடையே போராட்டம் உள்ளது. பழமைக்கு எதிர்ப்பு வளர்ந்து வருகிறது; ஆயினும் புதுமையும் ஆக்கம் தருவதாக இல்லை. ஆதலின் பலர் உள்ளம் தடுமாற்றம் உற்றுத் தளரக் காண்கிறோம். பழமை புதுமை இவற்றிடையே, என்றும் பயன்தரவல்ல அடிப்படை நெறிகள் சில உள்ளன. அவற்றைப் போற்றினால், வாழ்வில் அமைதியும் இன்பமும் வாய்ப்பதை ஒவ்வொருவரும் உணரலாம். இதை வலியுறுத்தும் போக்கில் ''மகளிர் மதிப்புறு மாண்பும், செயத்தகு கடமையும்'' என்னும் தலைப்பினைப் பொருளுரையாகக் கொள்ளுகின்றனே.

## புத்துலகத்திறவுகோல் :

வாழ்க்கையில் ஒவ்வொரு சிக்கலையும் எதிர்ப்படும் போது ஒதுங்கிச் செல்வதும் உண்டு; ஒதுக்கிச் செல்வதும் உண்டு; ஒதுங்கிச் செல்லும் வாழ்க்கை அச்சம் நிறைந்த வாழ்க்கை, ஒதுக்கிச் செல்வதோ அக்கறை அற்ற வாழ்க்கை. இந்த இரண்டும் பயனற்றவை. சிக்கலைத் தீர்த்து வெல்லும் வீரமே வேண்டும். அதுவே புத்துலகத்தின் திறவுகோல் அந்தத் திறவுகோலைத் தேடவேண்டுவது இன்றைய மகளிர் சமுதாயத்தின் கடமையாகும். அந்தக் கடமையை நினைவூட்டுவது இந்த மாநாடு என்றுணரவேண்டும். மகளிர் தம்மைப் பற்றியும் தம் தகுதிகளைப் பற்றியும் அறிந்து கொள்ள வேண்டுவது மிகவும் இன்றியமையாததாகும். ''உன்னை நீ உணர்ந்து கொள்'' என்ற அறிவுறுத்தல் (உபதேசம்) எக்காலத்துக்கும் எல்லோருக்கும் ஏற்றதொன்றாகும்.

## வழிவழி மகளிர் :

*''மண்ணினல்ல வண்ணம் வாழலாம் வைகலும்*
*எண்ணினல்ல கதிக்கு யாதுமோர் குறைவிலை*
*கண்ணினல் ல.:துறுங் கழுமல வளநகர்ப்*
*பெண்ணினல் லாளொடும் பெருந்தகை இருந்ததே''*

என்றார் திருஞான சம்பந்தர்.

ஒரு சக்தி உண்டென்றும், அது புரோடான் - எலெக்ட்ரான் என்று இரண்டாம் இயங்கி ஒளி செய்கிறது என்றும் அறிவியற் கலை அறிவிக்கின்றது. புரோடான் சிவம் போன்றது. எலெக்ட்ரான் சக்தி போன்றதென்பர்.

திருமால் நெஞ்சத்தாமரையில் திருமகளையும், நான்முகன் நாவில் கலைமகளையும் சங்கரன் உடலின் ஒரு பாதியில் / செம்பாதியில் உமையையும் வைத்திருத்தல் நமது நாட்டு நூல்கள் பலவற்றிலும் பேசப்பட்டிருக்கிறது. அதன் உள்ளார்ந்த பொருள் ஒன்றுண்டு. மனம் மொழி மெய் அதாவது எண்ணம் சொல் செயல் ஆகிய மூன்றும் வன்மையுடையனவாய் - சக்தியுடையனவாய் இருத்தல் வேண்டு மென்பது உள்ளுறையும் பொருளாகும். சக்தியாவது அருள். 'அருளது சக்தியாகும்' என்றார் அருண் மொழிச் சிவனார். முத்திற அருள் முத்திறச் சக்தியாய்ப் பேசப்பட்டமை கருதத் தக்கது என்பர் திரு.வி.க.

அருட்கூறுகள் பற்பல. அவற்றுள் உயர்ந்தது, பிறர் அறியாமையால் கேடு சூழங்காலத்தும் அருளால் அதைப் பொறுப்பது. இதுவே வன்மை - வன்மையுள் வன்மையாம். 'வன்மையுள் வன்மை மடவார்ப் பொறை' என்பது பொய்யா மொழி. கலைமகள் உறையும் நாவே வன்மையுடையதாகும். எனவே நாமகளின் நலத்தைப் பெண்டிர் பெற வேண்டுவது பெருஞ்சிறப்பாகும்.

'பெண் கொடியாக நடந்த துலகே' என்பர் திருமூலர். 'அடக்கம், பொறுமை, தியாகம், பரநலம், இரக்கம், அழகு, ஒப்புரவு, தொண்டு முதலியன அமைந்த ஒன்று பெண்மை எனப்படும்.' பெண்மையை இன்பநிலை என்று சொல்லுவர் திரு.வி.க. இன்பமோ நுண்ணியது; காணக்கூடாதது, ஆயினும் காட்சி அளிக்கின்றது. ஆகவே 'பெண் தெய்வம்' என்றும் போற்றுவர். பெண்ணியல்பு பெறாது கடவுள் நிலைபெறல் இயலாது என்பதையே 'நாயகி நாயக பாவம்' உணர்த்துகின்றது. ஞானநிலையில் எவரும் பெண்மையாகும் ஒரு நிலையுண்டு. எனினும் அன்பினில் விளைவதே பெண்பேச்சு என்று இலக்கியங்காட்டுகின்றது. 'ஒளியாம் பரமும் உளதாம் பரமும் அளியார் சிவகாமி யாகுஞ்சமயம்' என்றார் திருமூலர். கடவுள் நிலை அடைதற்கும் பெண்ணியல்பு இன்றியமையாததா யிருக்கின்றது.

வேதகாலத்தில் மைத்ரேயி, கார்க்கி, வேதபூதி முதலிய பெண்மணிகள் சிறந்த அறிவு நலஞ்சான்ற கல்வியாளராய்க் காணப்படுகின்றனர்.

இதிகாசங்களில் போந்துள்ள சீதையின் நிறையும், பிரபாவதி, சபரி இவர்களின் தவமும், குந்திதேவியின் ஊக்க உரைகளும் காந்தாரி அரச அவை ஏறி அரசியல் அறிவுறுத்தியதும், பாஞ்சாலியாம் திரௌபதி யின் அருஞ்செயல்களும் ஏற்ற முற அமைந்துள்ளன.

பழந்தமிழ் நாட்டுப் பெண் மக்கள் உரிமைக்கு ஓர் இலக்கியமாய் வாழ்ந்திருக்கின்றனர். வெள்ளி வீதியார், ஔவையார், பெருங்கோப் பெண்டு, பாரிமகளிர், எயினிமார் முதலியோர் அந்நாளில் தமிழ் வளர்த்த பெண்மணிகள் ஆவர். இல்லத்தரசி, வாழ்வரசி, கல்விக்கரசி யாவரையும் ஆங்கே காணலாம்.

## ஔவையார் :

சங்ககால ஔவையார் அதிகமானை வாழ்த்தும் போது ''நீலமணி மிடற் றொருவன் போல மன்னுக பெரும நீயே'' என்றே வாழ்த்தினார். பிறவா யாக்கைப் பெரியோனாம் சிவபெருமான் நீலமணி மிடற்றன்' - கண்டங்கறுத்த நீல கண்டன் யாவரையும் காக்க நஞ்சுண்டு கண்டங் கறுத்தவன். உயிரை மாய்க்க வேண்டிய நஞ்சு அன்னார் மணிமிடற்றில் தங்கி நிலைத்தது. ஆதியும் அந்தமுமில்லா அரும்பெருஞ்சோதியாம் சிவனும் மாயாப் புகழ்பெற்றான். அன்னவனைப் போல அதியமானும் வாழ வேண்டும் என்பதை ஔவையாரின் அமுதவாக்கு தெளிவுபடுத்துகின்றது.

மனிதனின் வாழ்க்கை நிலையினைச் சாதாரண வாழ்க்கை, சமய வாழ்க்கை, ஆன்மிக வாழ்க்கை என முத்திறப்படுத்தலாம். மகளிர் வாழ்நிலையும் அதனுள் அடங்கும். சிவசம்பந்தம் பெறுதல், சிவ சிந்தனையுடன் திருமுறைகளை ஓதுதல், சிவவழிபாடு செய்தல் ஆகியன அன்போடியைந்த வாழ்க்கை நடத்துதற்கு அமைந்த அடித்தளங்களாகும். உண்மைச் சைவர்களை உருவாக்கும் செயல் முறைகளாகும். அவ்வகையில் சிவ சம்பந்தமுடைய மகளிர் செயற்பாடுகளே ஈண்டுக் கருதப் பெறுகின்றன.

சமயப் பாடல்கள், நீதிப் பாடல்கள், சமுதாயப் பாடல்கள் என மூன்று வகையாகப் புலவர் பாடல்களை வகைப்படுத்தலாம். பண்பாடு, சமயம், கவிதை யாவற்றிலும் சிறந்ததைக் குறிக்கும் மரபாகத் தமிழ் நாட்டில் 'ஔவை' விளங்குகின்றார். காலப்போக்கில் நீளநெடுகிலும் சங்ககாலம், இடைக்காலம், பிற்காலம் எனக் குறைந்தது மூன்று ஔவையாரைச் சந்திக்கின்றோம். ஔவையாரின் அறநோக்கு, சமயநோக்கு, சமுதாய நோக்கு என்ற முத்திற நோக்குகளின் வழியாகச் சமய இலக்கியக் கொள்கைகள். சமுதாய இலக்கியக் கொள்கைக்ள் பெறப்படுகின்றன. இவற்றினின்றும் இடைக்கால ஔவையாரின் இலக்கியப் போக்குகள் காணத்தக்கன. அவரியற்றிய சமயப் பாடல் வகையான விநாயகர் அகவல், ஞானக்குறள் என்ற இரண்டு நூல்களும் மெய்கண்ட சாத்திரங்கள்

தோன்றிய நாட்டில் அழுந்தப் பதிந்த சைவசித்தாந்த உண்மைகளின் சாரங்களை வெளிப்படுத்துகின்றன. விநாயகர் அகவல் தோத்திர சாத்திர நூலாகும். எழுபத்திரண்டு அகவற்பா அடிகள் கொண்டநூல், சைவர்கள் நாளும் ஓதும் வழிபாட்டு நூலாகத் திகழ்கின்றது. விநாயகர் வழிபாட்டு நெறியினைத் தமிழகத்திலே பரவச் செய்தவர் ஔவையாரே என்றாலும் பொருந்தும்.

மேலும், ஔவையாரின் ஞானக்குறள் சைவ இறை இலக்கியங்களின் பிழிவாக அமைந்து மரபுவழிப்பட்ட சைவ நெறி முறைகளைப் பெரிதும் எடுத்துரைக்கும் ஞானநூலாகவும் விளங்குகின்றது.

*''நல்லன நூல்பல கற்பினும் காண்பரிதே*
*எல்லை யிலாத சிவம்''*

(ஞானக்குறள் - 206)

என்கின்றார்.

*''மாசற்ற கொள்கை மனத்தமைந்தக் கால்*
*ஈசனைக் காட்டு முடம்பு''*

என்று கூறுகின்றார். அதாவது மனத்தில் தூய, அச்சமற்ற, கள்ளங்கபடமற்ற, பகைமையற்ற எண்ணங்களை நிறுத்திக் கொண்டால், உடம்பில் தெய்வத்தன்மை அதாவது சாகா நிலைபெற்ற அமரத்தன்மை விளங்கும் என்பது பொருளாகும்.

குறட்பா அமைப்பில் ஞானம், யோகம், சைவசித்தாந்தம் இவற்றைப் பெறவைக்கும் பக்தி பற்றிய சாத்திர இலக்கியக் கொள்கைகள் வெளிப்படுத்தும் வரிசையில் தனியிடம் பெறுகின்றது ஞானக்குறள்.

பாரதியார் கட்டுரைகளில் ''மாதர்'' பகுதி பெண்களின் விழிப்புணர்ச்சியை எடுத்துக்காட்டுவது. அப்பகுதியில் பாரதியார், ''ஔவைக்குறள்'' என்ற ஞானநூல் தமிழ்நாட்டு யோகிகளாலும் சித்தர்களாலும் உபநிஷத்துகளுக்குச் சமமாகவே போற்றப்பட்டு வந்திருக்கிறது. யோக சாத்திரத்திற்கும், மோட்ச சாத்திரத்திற்கும் இந்நூல் முக்கிய பாடங்களில் ஒன்றாகக் கருதத்தக்கது'' எனக் குறிப்பிடுகின்றார். அவர்வழி, ஔவையார் சிறந்த ஆத்மஞானி என்று உணருகின்றோம். சங்க கால ஔவையார் கவிஞர் மட்டுமல்லர்; ராசதந்திரம் நன்குணர்ந்தவர், பேரரசர்களின் மதிப்புறு நட்பினர்; அவைக்களப் புலவர், அதியமானுக்கும் தொண்டைமானுக்கும்

இடையே தூது சென்றவர். "இவ்வே பீலியணிந்து மாலை சூட்டி' என்னும் பாடலை வஞ்சப் புகழ்ச்சியணியில் பாடி அதியமானின் வீர நெஞ்சினை நிமிர்த்தியவர்.

ஔவையார் நிகரற்ற திறமை வாய்ந்தவர். திருவள்ளுவர் 1330 அருங்குறட்பாக்களில் முப்பாலாக அறம், பொருள், இன்பம் என வகுத்துத் தந்த பொருள்களை ஔவையார் நயமுற நாற்பாலாக நவின்றமை சான்று பகரும்.

*"ஈதலறம் தீவினை விட்டுஈட்டல் பொருள் எஞ்ஞான்றும்*
*காதலிருவர் கருத்தொருமித் தாதரவு*
*பட்டதே இன்பம்; பரனைநினைந்திம் மூன்றும்*
*விட்டதே பேரின்ப வீடு"*

என்பதே ஔவை வாக்கு.

ஈதலாவது அருள் செய்தல் அல்லது கொடுத்தல்; மாரிபோல் கைம்மாறு கருதாமல் உலகத்தாருக்குப் பயன்படும் வண்ணமாக உடல், பொருள், ஆவி அனைத்தையும் (மூன்றையும்) தத்தம் பண்ணி விடுதல் ஈகையாம். இவ்வாறே தீவினை விட்டுஈட்டல் பொருள் என்றும், ஒருவன் ஒருத்தியினிடத்திலும் ஒருத்தி ஒருவனிடத்திலும் பற்றுடையோராய் மன ஒருமையெய்தித் தம்முள் ஆதரவுற்றுத் துய்க்கும் இன்பமே இன்பம் என்றும் கூறினார்.

முக்தி - பேரின்ப வீடு - முக்தியாவது யாதெனில் கடவுளை உள்ளத்திலிருத்தித் தானென்ற கொள்கையை மாற்றி ஈசபோதத்தை யெய்தி மேற்கூறிய மூன்று புருஷார்த்தங்களிலும் பொறுப்பு நீங்கியிருப்பதே முக்கியமாம்.

பாரதியாரின் பாராட்டுக்குரியவர் ஔவையார். "தமிழ்நாட்டின் மற்றச் செல்வங்களையெல்லாம் இழந்துவிடப் பிரியமா?" என்று நம்மிடம் யாரேனும் கேட்பார்களாயின், "மற்றச் செல்வங்களை யெல்லாம் பறிகொடுக்க நேர்ந்தாலும் பெரிதில்லை. அவற்றைத் தமிழ் நாடு மீட்டும் அமைத்துக் கொள்ளவல்லது. ஔவைப் பிராட்டியின் நூல்களை இழக்க ஒரு போதும் சம்மதப் பட மாட்டோம். அது மீட்டும் அமைத்துக் கொள்ள முடியாத தனிப் பெருஞ்செல்வம்" என்று நாம் மறுமொழி உரைக்கக் கடமைப்பட்டிருக்கிறோம். இஃது தமிழ் ஸ்த்ரீகளுக்கு வெறுமே புகழ்விளைப்பது மாத்திரமன்று அவர்களுக்குக்கிரமமான காவலுமாகும் என்று பாரதியார் கட்டுரைகள் கட்டுரைக்கும் (பாரதியார் கட்டுரைகள், ப.வ.)

## பிறரைப் பேணுந்தன்மையில் பெரியபுராண மகளிர்:

மகளிர்க்குப் பிறரைப் பேணுந்தன்மை இயல்பிலேயே அமைந்துள்ளது. பெரியபுராணத்தில் சேக்கிழார் காட்டும் மகளிர் சைவத்தின் புண்ணியக் கண்ணாகவும், கண்ணும் துணையாகவும் நின்று சைவம் பரப்ப உதவிய பெண்மணிகளாவர். சமயம் வெறும் சடங்கு அன்று. அது வாழ்க்கை; தனி மனித வாழ்க்கையும் சமூக வாழ்க்கையும் கட்டியாளும். கடவுள் தத்துவம் சமயம் அதை நன்குணர்ந்தவர் பெரிய புராண மகளிர்.

ஆங்கே திருநீலநக்க நாயனாரின் மனைவியாரைச் சிவபூசைச் சிறப்புத் தொண்டில் பங்கேற்கும் முறைமையில் பார்க்கின்றோம். இளையான் குடிமாறனின் இல்லாள் திறத்தைக் காணுகின்றோம். குங்கிலியக் கலையரின் மனைவியைச் சந்திக்கின்றோம். இன்னும் சிறுத் தொண்டர் மனைவியின் சீர்மை, அப்பூதியடிகளார் துணைவியாரின் செயற்கருஞ் செயல், மானக்கஞ்சாறரின் மகள் செய்த தியாகம், ஏயர்கோன் கலிக்காம நாயனார் துணைவியாரின் சிறப்பு, காரைக்காலம்மையார் பெருமை, அமர்நீதியார் அம்மையாரின் அருமை ஆகியவற்றை அடுக்கடுக்காக உணரும் பேறு நமக்குக் கிடைக்கின்றது. நாயன்மார்களின் குடும்ப மரமனையறத்தின் வேர்களாக விளங்கும் இவர்கள் வெளியில் தெரியாத வேர்களாகவும் சுட்டிப் பெயர் கொளாப் பாங்குடையோராயும் விளங்கி நம்மை வியப்பின் எல்லைக்கே இட்டுச் செல்கின்றனர்.

சமயம் வெறும் சடங்கு அன்று, அது வாழ்க்கை; தனிமனித வாழ்க்கையும், சமூக வாழ்க்கையையும் கட்டியாளும் கடவுள் தத்துவம். புறத்து உலகத்திடையே சைவ நெறியைப் பரப்வதற்குக் கருவித் துணையாய் நின்றவர்கள் முறையே மங்கையர்க்கரசியாரும், திலகவதியாரும் ஆவர். இந்நாளில் நால்வரால் நிலைத்திருக்கும் நம்முடைய செந்நெறி நிலைபெற்றதற்குத் துணைக் காரணமாக உள்ளவர்கள் இவ்விருவருமே என்றால் மிகையாகாது.

எங்ஙணும் திருவெண்ணீறு பரப்புவதற்கும் கருவியாக இருந்தவர்கள் திருஞான சம்பந்தப் பெருமானும், திருநாவுக்கரசரும் ஆவர். அச்செயலுக்கு வினை முதலாக நின்றவர்கள் மங்கையர்க் கரசியாரும், திலகவதி அம்மையாரும் ஆவார்கள்.

*"மங்கையர்க்குத் தனியரசி எங்கள் தெய்வம்*
*வளவர்திருக் குலக்கொழுந்து வளைக்கை மானி*
*செங்கமலத் திருமடந்தை கன்னி நாடாள்*
*தென்னர்குலப் பழிதீர்த்த தெய்வப் பாவை*

*எங்கள் பிரான் சண்பையர்கோன் அருளி னாலே*
*இருந்தமிழ்நா டுற்ற இடர் நீக்கித் தங்கள்*
*பொங் கொளிவெண் திருநீறு பரப்பி னாரைப்*
*போற்றுவார் கழல்எம்மால் போற்ற லாமே''*

எனச் சேக்கிழார் மங்கையர்க்கரசியார் வினை முதலாக நின்ற தம்மையினை நனி விளக்குகின்றார்.

அன்புநெறி, அருள்நெறி, தொண்டுநெறி, தூயநெறி ஆகியவற்றினூடே அறங்காத்து, அருஞ்சமயத்தைப் பேணி, அருள் நெறியைத் தனக்கு உரிமையாக்கிக் கொண்ட வளவர்தம் திருக்குலக் கொழுந்தாம் மங்கையர்க்கரசியாரைப் போல மாண்புற்றார் யாவர்?

அதே போலப் 'பிறந்து மொழிபயின்ற பின்னெல்லாங் காதல் சிறந்து நின் சேவடியே சேர்ந்தேன்' என்று காரைக்காலம்மையாரின் அருள்மொழியின் வழி, எத்தனை பேர் பிறந்து மொழிபயின்றதி லிருந்து இறை பக்தி பூண்டு ஒழுகுகின்றார்கள்? அம்மையாரின் புலமைத்திறன், அருள் உணர்வு, துணிவு பல்லாண்டுகள் கடந்தும் இன்றைய மகளிரிடம் பெரும்பான்மை நிலையில் ஏன் வளரவில்லை?

சிலவற்றைச் சிலருக்காக விட்டுக் கொடுக்கலாம். ஆனால் தன் வாழ்வின் பெரும்பகுதியைத் தியாகம் செய்த திலகவதியாரைப் போன்ற அருள்மனம், அன்புநெஞ்சம் இன்று எத்துணைப் பேருக்கு வாய்த்திருக்கின்றது?

*''தம்பியார் உளராக வேண்டுமென வைத்ததயா*
*உம்பருலகு அணையவுறும் நிலைவிலக்க உயிர்தாங்கி*
*அம்பொன்மணி நூல்தாங்காது அனைத்துயிர்க்கும் அருள்தாங்கி*
*இம்பர்மனைத் தவம்புரிந்து திலகவதி யார் இருந்தார்''*

எனப் பெருமையோடு இயம்பினாரே சேக்கிழார்! தம்பியாரிடம் திலகவதியார் வைத்த 'தயா' (அருள்) உலகமக்கள் அனைவரிடமும் வைத்த அருளாகவே எண்ணத் தக்கது.

## செம்பியன் மாதேவியார் :

கண்டராதித்த சோழரின் மனைவியார் செம்பியன் மாதேவியார். தம்பிக்காக உயிர்வாழ்ந்த திலகவதியாரை இவர் நினைவூட்டுகின்றார். இளமையிலேயே கணவனாரைப் போரில் இழந்த இவர் குழந்தையாக இருந்த தம் ஒரே அருமை மைந்தன் உத்தம சோழனுக்காக உயிர்

தாங்கி நின்றார். சித்தத்தைச் சிவன்பாலே வைத்து, தம் வாழ்நாள் முழுவதையும் சிவப்பணியிலேயே செலவிட்டார். இவரைப்போல அறச் செயல்கள் புரிந்த அரசியார் இந்திய வரலாற்றிலேயே இல்லையென்பர்.

திருத்துருத்தி, திருக்கோடிகா, திருவாரூர், திருஅரநெறி, திருவக்கரை, திருமுதுகுன்றம், தென்குரங்காடுதுறை, திருநாங்கூர், திருமணஞ்சேரி, திருநல்லம் போன்ற இடங்களில் அமைந்த கோயில்களைக் கற்றளிகளாக்கினார்.

நாகப்பட்டினத்தருகில் செம்பியன் மாதேவி என்ற பெயரால் ஓர் ஊர் உண்டாக்கி அங்கே ஒரு கோயிலையும் கட்டினார். திருநல்லத்தில் 'கண்டராதித்தம்' என்ற சிவன் கோயில் எடுப்பித்து அதில் தம் கணவனார் சிவலிங்கத்தை வழிபடுவது போன்ற ஒரு படிமத்தைச் சமைத்தார்.

சோழர் தம் ஆட்சியில் ஏழு அரசர்களுடைய ஆட்சிக் காலத்தில் அறுபது ஆண்டுகளுக்குமேல் உயிர் வாழ்ந்து மாண்புகள் மிகப் பெற்று மதிப்புறு பல செயல்கள் புரிந்தார்.

அவர் சிவனடியாராக 'இல்லத் துணைவியாராக' தாயாக, பாட்டியாராக வாழ்ந்ததெல்லாம் பெரிதில்லை என்னுமளவிற்கு மாண்புறு மாமியாராகவும் வாழ்ந்தது சிறப்பெனலாம். உத்தம சோழன் மனைவிமார் செம்பியன் மாதேவி கோயில் நாள் வழிபாட்டிற்கும், மாத விழாக்களுக்கும் அவர் நிபந்தங்கள் ஏற்படுத்தினார்களென்று அறிகின்றபோது மருமகள்கள் மதித்த மாமியாராக வாழ்ந்திருக்கிறார் என்று அறிகின்றோம்.

முதலாம் இராசராசனை, குந்தவை தேவியாரை முதலாம் இராசேந்திரனைச் சிறந்த சிவத் தொண்டில் ஈடுபடுத்தி வளர்த்த பெருமையும் செம்பியன் மாதேவியாருக்குண்டு. பிற்காலச் சோழர் வரலாற்றில் அழியாத நிலைத்த இடம் பெற்ற சைவப் பெருமாட்டி செம்பியன் மாதேவியார் என்பது நினைவில் கொள்ளத் தக்கது.

## அவரவர் பாடு :

'நாம் வாழும் இந்தக் காலம் பலவகையிலும் முன்னேறியிருக்கிறது. நம் முன்னோர்களின் காலத்தில் இல்லாத எத்தனையோ புதிய கருவிகளை நாம் பெற்றிருக்கின்றோம். மிக வேகமாகப் பயணம் செய்ய முடிகிறது; வேகமாகச் செய்திகளைப் பரப்ப முடிகிறது; வானளாவிய உயர்ந்த மாளிகைகளைக் கட்ட முடிகிறது;

தொழிற்சாலைகளில் மிக எளிதில் மிக வேகமாகப் பொருள்களை விளைவிக்க முடிகிறது' ஆனால் ஒன்றுதான் முடியவில்லை - நம் முன்னோர்களைப் போல் அவ்வளவு அமைதியாக இன்பமாக வாழ முடியவில்லை. அருளின் சிறப்பையோ, உண்மையின் பெருமையையோ, இறையனுபவத்தையோ, சிவநெறி நிற்றல் பற்றியோ உணர்ந்து உணர்த்த முடியவில்லை.

*''நிதிமி குத்தவர் பொற்குவை தாரீர்!*
*நிதிகு றைந்தவர் காசுகள் தாரீர்!*
*அதுவு மற்றவர் வாய்ச்சொல் அருளீர்!*
*ஆண்மையாளர் உழைப்பினை நல்கீர்!*
*மதுரத் தேமொழி மாதர்க ளெல்லாம்*
*வாணி பூசைக் குரியன பேசீர்!*
*எதுவும் நல்கியிங் கெவ்வகை யானும்*
*இப்பெருந் தொழில் நாட்டுவம் வாரீர்!''*

என்று பாரதியார் பாடியது அந்தக் கால கட்டத்தில் நாடு விடுதலை பெறக் கூறப்பட்டவையாயினும் இந்தக் காலப் பேச்சுகளிலும் மகளிர் விழிப்புணர்ச்சி, சமயப் பணி, சமுதாய வளர்ச்சிப் பணி ஆகியவற்றைச் செயற்படுத்தும் போக்கிலும் பொருந்த அமைந்துள்ளது.

'ஒவ்வொரு பணியும் மூன்று நிலைகளைக் கடந்ததாக வேண்டும். ஏளனம், எதிர்ப்பு, பிறகு கடைசியில் ஏற்றுக் கொள்ளப்படுதல்'. நாம் மட்டும் உறுதியாகவும், தூய்மையாகவும், கடவுளிடம் அளவுகடந்த நம்பிக்கை உள்ளவர்களாகவும் இருந்தால் எத்தகைய இடைஞ் சல்களும் மறைந்து போய்விடும். எதையும் 'சீர்திருத்தம்' செய்ய வேண்டும் என்றால் தான் பெரும்பாடு. மாறாக 'முன்னேறிச் செல்லுவோம்' என்று கொண்டால் வாழ்க்கை வெற்றிகரமாக அமையும்.

## செய்ய வேண்டியவை :

1. அன்பு, நேர்மை, பொறுமை ஆகியவற்றைத் தவிர வேறொன்றுமே நமக்குத் தேவையில்லை. வளர்ச்சியடைவது தான் வாழ்க்கை. அதாவது விரிவடைதல். அதுதான் அன்பாகும். அன்பு ஒன்றுதான் வாழ்க்கையின் ஒரே நியதியாகும்.

*'நெஞ்சம் உமக்கே இடமாக வைத்தேன்*
*நினையாது ஒருபோதும் இருந்தறியேன்'*

என்றார் அப்பர் அடிகள்.

*'நெஞ்சகமே கோயில் நினைவே சுகந்தம் அன்பே*
*மஞ்சன நீர் பூசைகொள்ள வாராய் பராபரமே'*

என்றார் தாயுமானவர்.

*'அன்பெனும் பிடியுள் அகப்படும் மலையே*
*அன்பெனும் குடில்புகும் அரசே'*

என்றார் இராமலிங்க வள்ளலார். இவர்கள் பாடிய பாடல்களை உணர்ந்து அன்பை வளர்த்து வழிபட வேண்டும். கடவுள் எல்லா உயிர்களின் வாழ்வுக்கும் பொதுவான திட்டங்கள் வகுத்து, பொதுமையான ஆட்சிபுரியும் ஒரு பெருஞ்சக்தி என்று உணர வேண்டும்.

2. இந்நாட்டில் பிறந்த ஒவ்வொரு பெண்ணும் கல்விச் செல்வம், பொருட் செல்வம், மனைச் செல்வம், சேய்ச் செல்வம், வழிவழிச் செல்வம் முதலிய செல்வங்கள் பூத்து, புகழ் சிறந்து வாழ வேண்டும். இச் செல்வங்கட்கெல்லாம் உயிர்ப்பளிக்கும் ஒரு பெருஞ்செல்வம் தொண்டுச் செல்வம். அத்தொண்டுச் செல்வத்தைப் பெற நம் நாட்டு மகளிர் நடை முறைப்படுத்தல் வேண்டும். தமக்கென வாழாது பிறர்க்கென வாழ்வோராகிய மகளிர் இயற்கையிலேயே இயல்பான தொண்டு மனம் வாய்க்கப் பெற்றவர்கள். அன்னாரது தொண்டுமனம் சமூகப் பணிகளிடை அவர்களைக் கொண்டு செலுத்தும். அச்சமூகப் பணிகளிடை, நாட்டுப் பணி, சமயப் பணி, கலைப்பணி, மொழிப்பணி முதலிய பணிகளும் விரவியே நிற்கின்றன.

3. கல்வித் துறையில் மகளிர் சமுதாயம் முன்னேற்றம் குறிப்பிடத் தக்கது. ஆனால் சமயத்துறையில் சான்று சொல்லக் குறைந்த எண்ணிக்கையாளரே உளரென்பது சிந்திக்கத் தக்கது. அத்துறையில் அருட்பணியாளராக வளருதற்கு உறுதுணையாவது அனைவரது கடமையாகும். விளக்கைக் குன்றி விட்டால் எடுப்பான ஒளி கிடைக்கும். குடத்திலிட்டால் ஒளியின் சுற்றுப்பரப்புக் குறையுமே தவிர ஒளியில்லை என்றாகுமா? மகளிர் குன்றிலிட்ட விளக்காக ஒளிர்தல் வேண்டும். சமயநீதியை உலகிற்கு எடுத்துக் காட்டும் நீதிமன்றத்தில் மெய்யுணர்வு பெற்ற மங்கை நல்லாரே வாதிடும் வழக்கறிஞரைத் தயார் செய்தனுப்பும் மூதறிஞர் (சீனியர்) என்பதை மறத்தல் ஆகாது.

4. மகளிர்க்கு மனவலிமை வேண்டும். மனத்தைச் செம்மைப்படுத்திக் கொள்ள வேண்டும். மனம் செம்மைப்பட, நமக்கு முன் பண்பட்ட வாழ்க்கை வாழ்ந்தவர்களின் வரலாறுகளைப் படிக்க

வேண்டும். தன்னலம் நிறைந்த மனம், தியாகம் நிரம்பிய மனமாக ஆக முடியும். ஒழுக்கத்தில் நம்பிக்கை அற்ற மனம், ஒழுக்கத்தில் உறுதி பெற முடியும். கண்டபடி அலையும் மனம் புத்தர் மனம் போல் காரைக்காலம்மையார் மனம்போல் அமைதி பெற முடியும். ஆசை நிரம்பிய மனம், பற்றற்ற மனம் ஆக முடியும். சோம்பலுக்கு இடம்தரும் மனம், விடாமுயற்சியைப் போற்றும் மனம் ஆக முடியும், எண்ணியாங்கு எய்துப என்பது மனத்தைப் பொறுத்தவரையில் முழுவதும் நடக்கக் கூடியது. ஆகவே மனத்தை அடிப்படையாக வைத்து முயற்சி செய்ய வேண்டும்.

5. இன்று தேர்ந்த மகளிர் பேச்சாளர்களைக் கைவிரலில் எண்ணி விடலாம். அதிலும் பலர் பாங்கறிந்தேறும் பட்டி மன்றப் பேச்சாளர்களாகவே உள்ளனர். சமயச் சொற்பெருக்காற்றும் வல்லுநர் மகளிருள் சிலரேயாவர். தொகை பெருகுதல் வேண்டும். மகளிர் பலராதல் வேண்டும். சமயக் கொள்கைகளையும், சைவச் சமயக் கருத்துக்களையும் பொது மக்களிடையே தெளிவாக உணர்த்த வல்லவகையில் மகளிர் தொகை பெருகவே உள்ளம் விழைகின்றது.

6. பக்தியே பக்தியை விளைவிக்கும், அறிவின் வலிமை, கல்வித் தோணியே பெருந்துணை, சிவநெறியே பெருநெறி, பெண்மையின் பெருமையைப் பெண் உணர்தல் வேண்டு போன்ற பெருங் கொள்கைகளைத் தமிழ்நாட்டு மூலை முடுக்குகளிலெல்லாம் நடைமுறைப்படுத்த வேண்டும்.

7. பெண்களுக்குரிய சிலபாட்டு வகைகள் - எம்பாவை, அம்மானைப்பாட்டு, தும்பி, குயில், கிளி முதலிய தூதுப்பாட்டுக்கள், தெள்ளேணம், சுண்ணம் இடிக்கும் பாட்டு, சாழல், உச்தி, பூவல்லி, தோணோக்கம், ஊசல், திருப்பள்ளியெழுச்சி போன்ற பாடல்களைப் பெண்கள் பயிலச் செய்தல் வேண்டும். பரம்பொருளாம் இறைநிலையை உணரச் செய்வன இவை.

8. இறைவனின் விருப்பத்தாலேயே எல்லாம் நடைபெறுகின்றன. ஆனாலும் மனிதன் வேலை செய்தே ஆகவேண்டும், ஏனெனில் மனிதனின் செயல்கள் மூலமே இறைவனின் விருப்பம் வெளியாகிறது; கடவுள் மட்டுமே மெய்; மற்றவையெல்லாம் பொய் என்னும் கருத்துக்களை மனத்தில் நன்கு பதிய வைத்துச் செயற்படுத்த வேண்டும்.

9. சமுதாயத்தின் வளர்ச்சிக்கும் பண்பாட்டுக்கும் உதவ நல்ல பண்புகளையும், ஒழுக்கத்தையும் வலியுறுத்துகிற படைப்புகளை

வெளிக் கொணர வேண்டும். அண்மையில் தமிழ்நாடு இயல் இசை நாடக மன்றம் சார்பில் 1996 ஆம் ஆண்டுக்கான கலைமாமணி விருது வழங்கும் விழாவில் தமிழக ஆளுநர் பாத்திமா பீவி அவர்கள் கேட்டுக் கொண்ட செய்தியும் ஆகும் இது.

## நிறைவுரை :

மகளிர் அனைவரும் அவரவர் கடமைகளை உணர்ந்து செயலாற்றினால் வாழ்க்கையில் ஓர் உயரிய நோக்கம் உடையவர்களாவோம். நம் செயல்களுக்கு ஒரு வழிகாட்டியைப் பெறுவோம்; நம் மனவுறுதிக்கு ஒரு காரணம் கிடைக்கும்; நம் அறிவின் நேர்மைக்கு ஓர் இன்றியமையாத தேவையும் பெற்றவர்களாவோம்.

'எண்ணம் திருந்தினால் எல்லாம் திருந்தும், என்பதில் நம்பிக்கை வேண்டும்'. 'அறிவு பிரிக்கும் அன்பு பிணைக்கும்' என்பதை மந்திரமாகக் கொள்ள வேண்டும். ஆயினும் இவ்விரண்டினையும் ஒன்றாக்கி, அறிவை ஆண்கூறாகவும் அன்பைப் பெண் கூறாகவும் சேர்த்து வளர்த்தால் நற்பயன் கிட்டும் என்பர். தனித்தனியாக ஒவ்வோர் உயிராக வளர்த்துக் காப்பாற்ற வேண்டிய பொறுப்பு, பெண்களுக்கு இயற்கையாகவே இருக்கிறது. பல உயிர்களையும் சேர்த்துச் சுற்றமாகவும் சமூகமாகவும் நாடாகவும் உலகமாகவும் வளர்த்துக் காக்க வேண்டிய பொறுப்பு ஆண்களுக்கு அமைந்திருக்கிறது. இவ்விரண்டின் இணைவு நாட்டின், சமுதாயத்தின் நற்பயன் என்பதை வலியுறுத்தி அமைகின்றேன்.

*''அறிவானும் தானே அறிவிப்பான் தானே,*
*அறிவாய் அறிகின்றான் தானே; அறிகின்ற*
*மெய்ப் பொருளும் தானே விரிசுடர் ஆகாயம்*
*அப்பொருளும் தானே அவன்''*

(காரைக்காலம்மையார்)

# மெய்ஞ்ஞான வள்ளல்
# திரு. கு. வைத்தியநாதன்

(93ஆம் ஆண்டு விழா, திருவானைக்கா)

*சைவத்தின்மேற் சமயம் வேறிலை; அதிற்சார் சிவமாம்*
*தெய்வத்தின் மேல் தெய்வம் இல்எனும் நான் மறைச்*
*செம்பொருள்வாய்*
*மை வைத்த சீர்திருத்தேவாரமும் திருவாசகமும்*
*உய்வைத்தரச் செய்த நால்வர் பொற்றாள் எம் உயிர்த்துணையே*

பேரன்பிற்கும் பெருமதிப்பிற்கும் உரிய நண்பர்களே, வணக்கம்

திருக்கயிலாய பரம்பரைத் திருவாவடுதுறை ஆதீனத்தில் சிவஞானச் செங்கோல் ஓச்சிவரும் சீர் வளர்சீர் குரு மகா சந்நிதானம் அவர்கள் பொன்னார் திருவடி மலர்களை நினைந்து போற்றி,

*''வேதாந்தத் தெளிவாம் சைவ சித்தாந்தத்திறன்''*

என்னும் தலைப்பில் நின்று, ஓரளவு சிந்திக்கலாம் எனக் கருதுகிறேன்.

அதற்கு முன்பு ஒரு சிலவற்றைக் கூற விரும்புகிறேன்.

சைவ சித்தாந்தப் பெருமன்றத்தோடு, கடந்த 25 ஆண்டுகளாக எனக்குத் தொடர்பு உள்ளது. பெருமன்றத் தூண்களாக விளங்கிய கொ. நீ. சிங்காரவேலு ஐயா, அம்பை சங்கரன் ஐயா, தி.கி. நாராயண சாமி ஐயா, பழனிச்சாமி ஐயா முதலிய பெரியவர்களோடு ஏற்பட்ட நட்பை ஒரு போதும் மறக்க இயலாது.

1979-ல் பழனியில் நடந்த பெருமன்ற இளைஞர் மாநாட்டுத் தலைவர் பொறுப்பு வாய்க்கப் பெற்றேன்.

1984ல் பெருமன்றத்தின் 78ஆம் ஆண்டு விழாவை மூன்று நாட்கள் நாகர்கோவிலில் நடத்திப், பெருமன்றக் காப்பாளர் ஆகும் வாய்ப்பு ஏற்பட்டது.

1991ல் திருவாவடுதுறை ஆதீனச் சமயப் பணிக்கு வந்த பிறகு, பெருமன்றத்தோடு தொடர்பு கொள்ள இயலாமற் போயிற்று. ஆயினும் பெருமன்றப் பணிகள் சிறப்பாக நடந்து வருவதை அறிந்து மகிழ்கிறேன்.

இனி, எடுத்த தலைப்பைக் குறித்துச் சிந்திப்போம்.

சைவ சித்தாந்த அறிவியல் நூல்கள் பதினான்கனுள் 'சார்பு நூல்' என்னும் சிறப்பைப் பெற்ற சிவப்பிரகாசம் 7ஆம் திருவிருத்தத்தில்,

*''புறச்சமயத் தவர்க்கு இருளாய், அகச் சமயத்து ஒளியாய்ப்*
*புகல் அளவைக்கு அளவாகிப், பொற்பணி போல், அபேதப்*
*பிறப்பு இலதாய், இருள்வெளிபோல் பேதமும், சொற்பொருள் போல்*
*பேதாபேதமும் இன்றிப் பெருநூல் சொன்ன*
*அறத்திறனால் விளைவதாய், உடல்-உயிர், கண்-அருக்கன்*
*அறிவு-ஒளி போல், பிறிவரும் அத்துவிதம் ஆகும்*
*சிறப்பினதாய், வேதாந்தத் தெளிவாம் சைவ*
*சித்தாந்தத் திறன் இங்குத் தெரிக்கல் உற்றாம்''*

என்று உமாபதிசிவம் அருளிச் செய்துள்ளார்.

சைவ சித்தாந்தத்தின் கருப்பொருள் ஆகிய சுத்தாத்துவிதம் ப்றறிய தெளிவைக் கூறும் இத்திருவிருத்தம் குறித்து இங்குச் சிந்திப்போம்.

இதன் அருமையைக் கருத்தில் கொண்டு, திராவிட மாபாடியத்தில் பத்து இடங்களில் சிவஞான முனிவர் இதனை மேற்கோளாகக் காட்டியுள்ளார்கள். அவற்றுள் ஓரிடத்தில், இரண்டாம் நூற்பா முதற் கூற்றின் இறுதியில்,

''வேதாந்தம் என்றது, வேதத்தின் முடிபுகள் ஆகிய உபநிடதங் களை, வேதாந்தம் எனப் பெயர் பெற்ற ஏகான்மவாத நூலை அன்று என உணர்த்துதற்கு, 'வேதத் தலைதரு பொருளாய்' என இறுதியிலும் (சிவப்பிரகாரம் - 99) கூறினார்'' என்று விளக்கியிருக்கிறார்.

இவ்விளக்கத்திலிருந்து தெளிவுபெற வேண்டிய செய்திகள் பல உள்ளன. அவற்றுள் சில வருமாறு :

1. வேதாந்தம், ஏகான்மவாத நூல் என்பது நடைமுறை உண்மை, அப்படியிருக்கும் பொழுது, சிவப்பிரகாசம் குறிப்பிடும் வேதாந்தம், உபநிடதங்கள் எனக் கூறுவது பொருந்துமா?

2. சித்தாந்த சைவர்களுக்கு உரிய வேதம் ரிக், யசுர், முதலிய வடமொழி வேதங்கள் எனக் கூறுவது பொருந்துமா?

3. வடமொழி வேதங்களில், சைவ சித்தாந்தம் கொள்ளும் அத்துவிதக் கொள்கை பேசப்படுகின்றனவா?

4. வடமொழி வேதங்களில், பல கடவுட் கொள்கை உள்ளதே? அது சைவ சித்தாந்தத்திற்கு எப்படி உடன்பாடாகும்?

5. சிவப்பிரகாசம் கூறும் வேதாந்தம் யாது?

இந்தத் தடைகளுக்கு விடைகளைக் கண்ட பிறகே, இந்தத் திருப்பாட்டின் பொருளைத் தெளிவாக அறிய முடியும்.

சுவாமி சித்பவானந்தா அவர்கள், இருபதாம் நூற்றாண்டின் இணையற்ற சமய அறிஞர் என்பதை அறியாதவர் எவரும் இலர் எனலாம்.

அவர்கள், திருவாசகத்திற்கு உபநிடத பக்கமாக ஒரு நூல் செய்திருக்கிறார்கள். அந்நூலின் முகவுரையில்

'ரிக் முதலிய நால்வேதங்களுக்கு அனுசரணையாக இருக்கும் ஆறு தர்சனங்களில் ஒன்றாக உள்ளது வேதாந்தம்; இந்த நான்கு வேதங்களில் ஞான காண்டமாகத் திகழ்பவை உபநிடதங்கள்'' என்று கூறியுள்ளார்கள்.

மேலும், ''துவைதம், விசிஷ்டாத்துவைதம், அத்துவைதம் ஆகிய இந்த மூன்று நிலைகளை உபநிடதமானது, 'அவஸ்தாத்ரயம்' என்னும் கோட்பாட்டின் - வாயிலாக விளக்குகிறது. அஃதாவது, துவைத நிலை, (மாத்துவம்) ஜாக்கிராவஸ்த்தை; பேதாபேத நிலை, (விசிஷ்டாத்துவைதம் - வைணவம்) சொப்ன நிலை; அத்துவைத நிலை (சங்கரர் மதம்) சுஷீப்தி (உறக்க) நிலை'' என்று கூறியுள்ளார்கள்.

ஆங்கிலம், வடமொழி, தமிழ் ஆகிய மூன்று மொழிகளிலும் நூற்றுக்கணக்கான நூல்களை எழுதிய சுவாமி சித்பவானந்தா அவர்களின் ''உபநிடதம்'' பற்றிய கருத்து ஆதாரம் (Authority) என்பதைக் கூறத் தேவை இல்லை.

1. சிவப்பிரகாசம் கூறும் வேதாந்தம், வடமொழி வேதங்களின் முடிவு ஆகிய உபநிடதங்களாக இருக்க முடியாது என்பது இப்பொழு இனிதே பெறப்படும்.

2. ரிக் முதலிய வடமொழி வேதங்கள் அநாதியே உள்ளவை என்கிறார்கள்; இறைவனால் அவை செய்யப்பட்டதாக வேதாந்திகள் ஒப்புக் கொள்வதில்லை. கல் ஆலின் கீழ் அமர்ந்து இறைவன், வேதம் சொன்னதாகத் திருமுறைகள் கூறுகின்றன. எனவே மேற்படி வடமொழி வேதங்கள் சித்தாந்த சைவத்திற்கு உரியன எனக் கூற முடியாது.

3. அபேதம், பேதம், பேதாபேதம் என்னும் மதங்களின் அத்துவைதக் கொள்கைகள், சிவாகமம் கொள்ளும் அத்துவைதக் கொள்கைகளுக்குப் பொருந்தமாட்டா என்று சிவப்பிரகாசம் 7 ஓதுகின்றது.

சுவாமி சித்பவானந்தா அவர்கள் கூற்றுப்படி உபநிடதங்கள் ஆகிய வடமொழிவேத முடிவுகள், மேற்கண்ட மூன்று மதங்களையும் நனவு, கனவு உறக்கம் என்னும் மூன்று நிலைகள் என்கின்றன. எனவே வடமொழி வேதங்களில் சைவ சித்தாந்தக் கொள்கைகள் இடம் பெறவில்லை என்பது தெளிவாகிறது.

4. சித்தாந்த சைவர்களுக்குப் பரமபிரமாணமாக உள்ளவை, பன்னிரு திருமுறைகளாகும். இவையனைத்தும், சிவபெருமான் ஒருவனே கடவுள், ஏனையோர் உயிர்களே என்று முழக்குகின்றன.

இதனைத் திருவாசகம்,

*"மூவரும் முப்பத்து மூவரும் மற்று ஒழிந்த*
*தேவரும் காணாச் சிவபெருமான்" - 625*

என்று ஓதுகின்றது.

வடமொழி வேதங்களில், இந்திரன், வருணன், அக்னி முதலிய உயிர்த் தெய்வங்கள், கடவுள் எனப் பேசப்படுகின்றன.

*"மற்றத் தெய்வங்கள் வேதனைப் படும்; இறக்கும்; பிறக்கும்;*
*மேல்வினையும் செய்யும்" 115*

என்று சிவஞான சித்தியாரில் கூறப்பட்டுள்ளது.

ஆகவே வடமொழி வேதங்கள், சித்தாந்த சைவத்திற்கு உடன்பாடாகா என்பது பெறப்படும்.

5. இனிச் சித்தாந்த சைவர்களுக்குரியவேதம் யாது என்பது குறித்துச் சிந்திப்போம்.

சிவபெருமான், இவ்வுலகத்தில் வாழும் உயிர்கள் உய்யும் பொருட்டு, கல் ஆலின் கீழ் அமர்ந்து, அறம், பொருள், இன்பம், வீடு என்னும் நான்மறைகளை அருளிச் செய்தான் என்று, சமயகுரவர்கள் நால்வர் வாக்குகளிலும் காணப்படுகிறது. அவை வருமாறு :

*''அறம், பொருள், இன்பம், வீடு மொழிந்த*
*வாயான், முக்கண் ஆதி'' (1-53-6)*

என்று சம்பந்தப் பெருமானும்,

*''ஆலதன் கீழ் இருந்து நால்வர்க்கு அறம், பொருள், வீடு, இன்பம்*
*ஆறு அங்கம், வேதம் தெரித்தானை'' (6-66-2)*

என்று அப்பரடிகளும்,

*''அன்று ஆலின் நிழற்கீழ் அறம் நால்வர்க்கு*
*அருள் புரிந்து'' - (7-28-3)*

என்று சுந்தரர் பெருமானும்,

*''அரும் தவருக்கு அறம் முதல் நான்கு*
*அன்று அருளிச் செய்திலனேல்*
*திருந்த அவருக்கு, உலகு இயற்கை*
*தெரியா, காண் சாழலோ'' (8-12-20)*

என்று மணிவாசகப் பெருந்தகையும் அருளிச் செய்துள்ளனர்.

திருமுறைகளில் வடமொழி வேதம் பற்றிய செய்திகள் ஒரோ வழி வராமல் இல்லை. ஆயினும் அவை சிவபெருமானால் அருளிச் செய்யப் பட்டனவாகச் செய்தி இல்லை.

வடமொழி வேதங்களை வியாசர் தொகுத்தார் என வேதாந்திகள் கூறுகின்றனர், அவ்வேதங்கள் எந்த 'லிபி'யில் (மொழி) எழுதப் பெற்றன என்பதற்கு ஆதாரம் இல்லை. அவற்றை பிராமணர் அல்லாதார் ஓதக்கூடாது என்றும் கூறுகிறார்கள். அவ்வாறாயின் மனிதகுலம் முழுவதற்குமான வேதமான, வடமொழி வேதங்கள் அமையவில்லை என்பதும் பெறப்படுகிறது.

வடமொமி வேதங்களில் ''சிவன்'' என்னும் பெயர் இடம் பெறவில்லை என்று திருவாசக ஆங்கில மொழி பெயர்ப்பு நூலின் முகவுரையில் டாக்டர் ஜி.யு. போப் ஐயர் அவர்கள் கூறுகிறாரக்ள்.

வடமொழி வேதங்களில் மறுபிறப்புக் கொள்கை ஏற்கப்பட வில்லை என்று ''கேம்பிரிட்ஜ் இந்திய வரலாறு'' என்னும் நூலின் பக்கம் 108ல் பேராசிரியர் மேக்டோனால்டு எழுதியுள்ளார்.

11ஆம் திருமுறையில் ''கோபப் பிரசாதம்'' என்றொரு பனுவல் உள்ளது. அதனை அருளிச் செய்தவர், நக்கீரர் பெருமான் ஆவார்; அநூலில்

*''கொச்சைத் தேவரைத் தேவர் என்று எண்ணிப்*
*பிச்சரைப் போல, ஓர் ஆரியப் புத்தகப் பேய் கொண்டு*
*புலம்புற்று வட்டணை பேசுவர்; மானுடம் போன்று*
*பெட்டினை உரைப்போர் பேதையர்'' (84-86)*

என்று அருளிச் செய்திருப்பது ஆழ்ந்த சிந்தனைக்குரியது.

இதில் ''கொச்சைத் தேவர்'' என்றது, இந்திரன், வருணன் முதலிய உயிர்த் தெய்வங்களைக் குறிக்கும்.

''ஆரியப் புத்தகப் பேய்'' என்றது, வடமொழி வேதங்கள் ஆகிய ரிக் முதலானவற்றைக் குறிக்கும்.

பெட்டு - பொய்; பேதையர் - அறிவிலிகள்; வட்டணை - தம்பட்டம்;

இதுவரை சிந்தித்ததிலிருந்து, ரிக் முதலிய வடமொழி வேதங்கள், சித்தாந்த சைவர்கட்கு உரிய வேதம் அன்று என்பது பெறப்பட்டது.

சமய குரவர் நால்வரின் அருள் வாக்கிலிருந்து, ''அறம், பொருள், இன்பம், வீடு'' என்னும் நான்மறைகளே சைவர்க்குரிய வேதம் என்பது தெளியலாகும்.

ஒரு சிலர், ''அறம் பொருள் இன்பம் வீடு'' என்பன வாழ்க்கை நெறியே அன்றி, வேதமன்று என்று வாதிடுகின்றனர். இதனை மறுத்துத் ''திரு ஈங்கோய்மலை எழுபது'' - 22ஆவது வெண்பாவில் (11ஆம் திருமுறை)

*''ஆல்கீழ் நால்வேதம் தெரித்துரைப்பான்''*

என்று நக்கீரர் பெருமான் தெளிவுறுத்தியுள்ளார். அவ்வேதம் எது என்பதை இனிக் காண்போம்.

## சைவர்களின் வேதம்

இறைவன் கல் ஆலின் கீழ் அமர்ந்து அறம், பொருள், இன்பம், வீடு என்னும் நான்மறைகள் ஆகிய சைவர்களின் வேதத்தை அருளிச் செய்தான். அவற்றைக் கேட்டவர்கள், வாய்மொழியாகவே பரப்பி வந்தனர்.

இவற்றை முதன் முதல் திருவள்ளுவரே எழுத்தில் வடித்தார், இவ்வுண்மையை "என்ப, என்ப" என்று குறுட்பாக்கள் பலவற்றில் கூறவதிலிருந்து அறியலாம்.

1. திராவிட மாபாடியத்தை எழுதத்தொடங்கும் பொழுது, சிவஞான முனிவர் திருப்பாசுரம் எழுதி, திருவாசகம் எழுதி, அடுத்துத் திருக்குறளின் முதற்பாவை எழுதித் "திருச்சிற்றம்பலம்" என எழுதி முடிக்கிறார். எனவே, சைவர்களின் வேதம் திருக்குறள் என்பது சிவஞான முனிவர் கருத்து என்பது பெறப்படும்.

2. திருமுறை ஆசிரியர்கள், திருக்குறட் கருத்துக்களையும் சொற்களையும் திருமுறைகளில் மேற்கோளாகக் காட்டியுள்ளனர்; ஒரு சில வருமாறு :

அகர முதலானை அணியாப்பனூரானை (1-88-5)

இருள்தரு துன்பப் படலாம் மறைப்ப (4-92-4)

மற்றுப்பற்று எனக்கின்றி நின் திருப்பாதமே மனம் பாவித்தேன் (7-48-1)

திருமுறை வாக்கு, சிவவாக்கு என்றமையால், திருவள்ளுவர் வாக்கும் சிவவாக்கே எனக் கொள்வதே பொருந்தும்.

3. சைவ சித்தாந்தம் கொள்ளும் இறை, உயிர், ஆணவம், கன்மம், மாயை என்னும் பொருள்கள் ஐந்தினையும் திருவள்ளுவரும் கொள்கிறார். இவ்வுண்மையைக் கீழ்க்காணும் குறட்பாக்கள் மெய்ப்படுத்துகின்றன.

1. *"இருள்சேர் இருவினையும் சேரா இறைவன்*
   *பொருள்சேர் புரிந்தார் பாட்டு" - 5*

2. *"பொருள் அல்ல வற்றைப் பொருள் என்று உணரும்*
   *மருளானாம் மாணாப் பிறப்பு" - 351*

3. *"அறிதோறு அறியாமை கண்டற்றால் காமம்*
   *செறிதோறும் சேயிழை மாட்டு" - 1110*

4. *"மன்உயிர் ஓம்பி அருள் ஆள்வாற்கு இல் என்ப*
   *தன் உயிர் அஞ்சும் வினை" - 244*

இருள் - ஆணவமலம்
மருள் - மாயாமலம்
இருவினை - கன்மமலம்

மன்உயிர் - உயிர் (அநாதி)
இறைவன் - இறைவன்

''அறியாமை ஆணவம்'' என்கிறது உண்மை விளக்கம்.

4. சிவாகம அடிப்படையிலேயே, திருவள்ளுவர் திருக்குறளைச் செய்துள்ளார். இதனைக்

*''கோளில் பொறியில் குணமிலவே எண்குணத்தான்*
*தாளை வணங்காத் தலை'' - 9*

என்னும் குறுட்பா தெளிவுறுத்துகிறது.

'எண்குணன்' என்றது சிவபெருமானையே குறிக்கும் என்னும் உண்மையைப் பரமேலழகர் தெளிவுறுத்தியுள்ளார்.

*''இவ்வாறு சைவ ஆகமத்தில் கூறப்பட்டது''*

என்று அவர் கூறியிருப்பது போற்றற்குரியது.

இக்குறட்பாவில், 'தாள், தலை' என்னும் இரு சொற்கள், 'தடாலை' எனப்பட்டுச் சைவ சித்தாந்த சுத்தாத்துவித நிலையைக் குறிக்கின்றன. திருவள்ளுவர், ''சிவாகமச் செல்வர்'' என்பது போதரும்,

5. சிவாகமம் ஆகிய சிவஞான சித்தியார் (சுபக்கம்) 113ஆவது திருவிருத்தம் வருமாறு :

*''ஒழுக்கம், அன்பு, அருள், ஆசாரம்*
*உபசாரம், உறவு, சீலம்,*
*வழுக்கிலாத் தவம், தானங்கள்,*
*வந்தித்தல், வணங்கல், வாய்மை,*
*அழுக்கிலாத துறவு, அடக்கம்*
*அறிவொடு அர்ச்சித்தல் ஆதி*
*இழுக்கிலா அறங்கள் ஆனால்*
*இரங்குவான் பணி அறங்கள்''*

இதில் உள்ள பதினாறு நற்செயல்களுக்கும் திருவள்ளுவர் தனித்தனி அதிகாரம் செய்துள்ளார். எனவே திருக்குறள் முழுக்க முழுக்கச் சிவாகமச் செய்திகளையே கொண்டுள்ளமை தெளியலாகும். ஆகவே சைவர்களின் வேதம் திருக்குறளே என்பது தெளிவாகும்.

## சைவர்களின் வேதாந்தம்

வேதங்களின் முடிவு, வேதாந்தம் எனப்படும். வேதம் பொது; ஆகமம் சிறப்பு என்பர். உலகில் வாழும் முறையைக் கூறுவது

வேதம்; இறைவனின் திருவடியைப் பெறும் வழியைக் கூறுவது ஆகமம்.

வேதங்களின் முடிவாகிய வேதாந்தம் இறைவன் திருவ்டியைப் பெறச் செய்யும். இந்த வகையில் சைவத் திருமுறைகள் பன்னிரண்டும், சைவர்களின் ''வேதாந்தம்'' எனப்படும்.

அறம், பொருள், இன்பம் கூறும் சைவர்களின் வேதம் ஆகிய திருக்குறள், ''வீடு'' பற்றிய செய்தியை அறத்துப்பாலின் இறுதியில் கூறுவதைக் காணலாம். இதனை 356, 357, 359 ஆகிய நான்கு குறட்பாக்களில் சிறப்பாகக் காணலாம்.

ஞானத்தில் சரியை என்னும் ''கேட்டல்'' பற்றிக்,

*''கற்று ஈண்டு மெய்ப்பொருள் கண்டார், தலைப்படுவர்*
*மற்று ஈண்டு வாரா நெறி'' - 356*

என்னும் குறட்பா கூறும்

*ஞானத்தில் கிரியை என்னும் ''சிந்தித்தல்'' பற்றி,*

*''ஓர்த்து உள்ளம் உள்ளது உணரின் ஒரு தலையாப்*
*பேர்த்து உள்ள வேண்டாப் பிறப்பு'' - 357*

என்னும் குறட்பா கூறுகிறது.

*''ஞானத்தில் யோகம் என்னும் ''தெளிதல்'' பற்றி,*
*''பிறப்பு என்னும் பேதைமை நீங்கச் சிறப்பு என்னும்*
*செம்பொருள் காண்பது அறிவு'' - 358*

என்னும் குறட்பாவில் காணலாம்.

ஞானத்தில் ஞானம் என்னும் ''நிட்டை கூடுதல்'' பற்றிச்

*''சார்பு உணர்ந்து சார்பு கெடஒழுகின், மற்றழித்துச்*
*சார்தரும் சார்தரா நோய்'' - 359*

என்னும் குறட்பாவினால் உணரலாம்.

சமய குரவர்கள் நால்வரும், சரியை, கிரியை, யோகம், ஞானம் என்னும் சித்தாந்தச் சைவ நெறிகளை உலகுக்கு உணர்த்தும் பொருட்டு அவதரித்தவர்கள்.

சிவாகமங்கள் கொள்ளும் கடவுள், உயிர், ஆணவம், கன்மம், மாயை என்னும் ஐந்து பொருள்களும் அநாதியே உள்ளன என்னும் உண்மையையே திருமுறைகளும் ஓதுகின்றன. இதனை,

*''விளையாத தோர் பரிசில் வரு பசு, பாச, வேதனை, ஒண்*
*தளை ஆயின தவிரவ் வருள் தலைவன்னது சார்பாம்'' (1-12-3)*

என்னும் சம்பந்தப் பெருமான் வாக்கு மெய்ப்படுத்துகின்றது.

பசு - உயிர்; பாசம் - ஆணவம்
வேதனை - கன்மம்; ஒண்தளை - மாயை;
தலைவன் - கடவுள்

சைவ சித்தாந்தம் கொள்ளும் அத்துவிதம் குறித்தும் திருமுறைகள் பேசுகின்றன.

இதனை,

*''ஈறாய், முதல் ஒன்றாய், இரு பெண் ஆண், குணம் மூன்றாய்,*
*மாறா மறை நான்காய், வரு பூதம் அவை ஐந்தாய்,*
*ஆறார் சுவை, ஏழோசையொடு, எட்டுத்திசை, தானாய்*
*வேறாய், உடன் ஆனான், இடம் வீழிம்மிழலையே'' (1-11-2)*

என்னும் சம்பந்தப் பெருமான் வாக்குத் தெளிவுறுத்துகின்றது.

*''அவையே தானே ஆய்'' - என்கிறது சிவஞான போதம்.*
*அவையேஆய் - ஒன்றாய் - உடல் உயிர் போல்.*
*தானே ஆய் - வேறாய் - கண் அருக்கண் போல்,*
*அவையேதானே ஆய் - உடனாய் - அறிவு ஒளி போல்''*

இதனையே ''சைவ சித்தாந்தத்தின்'' என்று சிவப்பிரகாசம் 7 தெளிவுபடுத்துகின்றது.

உலகத்தில் எப்படி வாழ வேண்டும் என்பதை அறிவித்தல் பொருட்டே, இறைவன் வேதத்தை அருளிச் செய்தான். இதனை,

*''அறம் பொருள் இன்பம்உயிர் உச்சம் நான்கின்*
*திறம் தெரிந்து தேறப்படும்'' - 501*

என்னும் திருக்குறட்பா தெளிவுறுத்துகிறது.

''உயிர் அச்சம்'' என்பது, மீண்டும் பிறவியினுட்பட்டுவிடக் கூடாதே என்னும் உணர்வோடு, வீடு பேற்றை விரும்புவதைக் குறிக்கும்.

(குறட்பா - 244ஐயும் காண்க)

ஆகவே, வேதத்தின் முடிவாகிய வீடு பேற்றைத் தருவது ''வேதாந்தம்'' ஆகும்.

இவ்வுண்மையைக்,

*"கந்தனை மலிகனை கடல் ஒலி ஓதம்*
*கானலங்கழி வளர் கழுமலம் என்னும்*
*நந்தியார் உறைபதி நான்மறை நாவன்*
*நற்றமிழ்க்கு இன்துணை ஞான சம்பந்தன்,*
*எந்தையார் வளநகர் இலம்பையங்கோட்டூர்*
*இசையொடு கூடிய பத்தும் வல்லார் போய்,*
*வெந்துயர் கெடுகிட விண்ணவரோடும்*
*வீடுபெற்று, இம்மையின் வீடு எளிதாமே" (1-76-11)*

என்று சம்பந்தப் பெருமான் அருளிச் செய்தமையால் உணரலாம்.

இதுவரை சிந்தித்ததிலிருந்து, சைவர்களின் வேதம் திருக்குறளே என்பதும், சைவர்களின் வேதாந்தம் திருமுறைகளே என்பதும் தெளிவாயிற்று.

சைவ சித்தாந்தப் பயிற்சி பெற்றுத் திருமுறைகளைக் கற்கும் பொழுதே, திருமுறையில் உள்ள நுட்பங்களைத் தெளிவாகப் புரிந்துகொள்ள இயலும். எனவேதான்,

*"வேதாந்தம் தெளிவாம் சைவ சித்தாந்தம்"*

என்று உமாபதி சிவம் அருளிச் செய்துள்ளார்.

*"மேன்மை கொள் சைவநீதி விளக்குக உலகமெலாம்"*

திருச்சிற்றம்பலம்

# பேராசிரியர் செல்வி மு. இரகுபாய்

(93ஆம் ஆண்டு விழா - திருவானைக்கா, திருச்சிராப்பள்ளி)

*வானைக்காவில் வெண்மதி மல்குபுல்கு வார்சடைத்*
*தேனைக்காவி லின்மொழித் தேவிபாக மாயினான்*
*ஆனைக்காவில் அண்ணலை அபயமாக வாழ்பவர்*
*ஏனைக்காவல் வேண்டுவார் ஏதுமேத மில்லையே.*

- திருஞானசம்பந்தர்

**சமயம்**

சமயம் என்ற சொல் எல்லை, காலம், தருணம், வேளை, மதம், உடன்படிக்கை, தீட்சை, மரபு எனப் பல பொருள்படும். சமயம் என்றால் நன்றாகச் செய்யப்பட்டது என்பது பொருள். நெறி என்றால் வழி. எனவே நன்றாகச் செய்யப்பட்ட வழி சமய நெறியாகும். உயிர்களைக் கடவுளோடு சேர்த்து, நிலைத்த கலப்பில்லாத, இன்பத்தைக் கொடுக்கக் கூடியதாய் உள்ளது எதுவோ அதுவே சமயம் என்று சொல்லப்படும். சமயமானது மனிதர்கள் அறிவுவிளக்கம் பெற்று உறுதி எய்தி இன்ப வாழ்வு எய்துதற்குரிய நெறியினை அமைப்பது. பொய் இன்பத்தை மெய்யின்பம் என்று மயங்கும் மயக்கமே இறைவனை அடையவொட்டாமல் தடுத்து, பிறப்பு இறப்புகளில் வீழ்த்துகிறது.

*''பொருளல்ல வற்றைப் பொருளென் றுணரும்*
*மருளானாம் மாணாப் பிறப்பு''*

இம்மனமயக்கங்களை நீக்கி, மெய்ப்பொருளாகிய இறைவனை உணர்தற்குத் தக்க சாதனங்களை உடையதே மெய்ச் சமயமாகும்.

*''சிறப்பெனும் செம்பொருள் காண்பது அறிவு''*

*''சார்புணர்ந்து சார்புகெட ஒழுகின் மற்றழித்துச்*
*சார்தரா சார்தரு நோய்''*

என்பது குறள்.

## சைவ சமயம்

*''சைவ முதலாமளவில் சமயமும் வகுத்து மேற்*
*சமயம் கடந்த மோன சமரசம் வகுத்த நீ''*

என்றருளினர் தாயுமான சுவாமிகள். சமயங்கள் பற்பல திறப்படும் என்பதும், அவற்றுள் சைவம் முதன்மை பெற்றது என்பதும் அறியப்படும்.

'ஓரும் வேதாந்தம் என்ற உச்சியில் பழுத்த, ஆரா இன்ப அருங்கனி பிழிந்து, சாரம் கொண்ட சைவ சித்தாந்தத் தேனமுது'

'சிவம்' இன்பம், மங்கலம், நன்மை, உயர்வு, மகிழ்ச்சி போன்ற ஒரு பொருள் குறிப்பன.

*'வாழ்வெனும் மையல்விட்டு வறுமையாம் சிறுமை தப்பித்*
*தாழ்வெனும் தன்மையோடு சைவமாம் சமயம் சாரும்*
*ஊழ்பெறல் அரிது சால உயர் சிவஞானத்தாலே*
*போழிள மதியினானைப் போற்றுவார் அருள்பெற்றாரே'*

சிவஞான சித்தியார்

வாழ்வெனும் மையலை நீக்கக்கூடிய முறைகளை வகுக்கிறது சைவ சமயம். பதி, பசு, பாசம் ஆகிய முப்பொருள்களின் உண்மையைத் தெளிவித்தும், செய்ய வேண்டியவைகள் இவை, செய்யத் தகாதவைகள் இவை என்று உணர்த்தியும், அதற்குரிய வழிமுறையை நெறிப்படுத்தியும், சிந்திக்கச் செய்கிறது. முடிவாகப் பெறுதற்கரிய பெரும் பொருள் பேரின்பமே என உணர்த்துகிறது. பரமுத்தியை அளிக்க வல்லது சித்தாந்த சைவமே. பின்வரும் பாடல் அறிவிக்கிறது.

*சைவ சமயமே சமயம், சமயாதீதப் பழம் பொருளைக்*
*கைவந் திடவே மன்றுள் வெளி காட்டும் இந்தக் கருத்தை விட்டுப்*
*பொய்வந் துழலுஞ் சமயநெறி புகுத வேண்டா முத்தி தருந்*
*தெய்வ சபையைக் காண்பதற்குச் சேரவாரும் சகத்தீரே*

## சைவ சித்தாந்த நெறி

உலகில் பல சமய நெறிகள் உள. அவற்றிற்கெல்லாம் மேம்பட்டதாய் இன்ப மெய்தும் நிலையை எளிதில் அறிவிக்கிறது. கடைப்பிடித்தார்க்கு எண்ணிய எண்ணியாங்கு எய்துவிக்கும் திறன் உடையது. பிற சமயத்தவர் கண்டு அதிசயிக்கும் பெற்றி உடையதாய் விளங்குவது சைவ சித்தாந்த நெறி.

*'ஓது சமயங்கள் பொருள் உணரும் நூலக்ள்*
*ஒன்றோடு ஒன்று ஒவ்வாமல் உளபலவும், இவற்றுள்*
*யாதுசம யம் பொருள்நூல் யாது இங்கு? என்னில்*
*இது ஆகும் அது அல்லது எனும் பிணக்கது இன்றி*
*நீதியினான் இவை எல்லாம் ஓரிடத்தே காண*
*நின்றதுயா தொருசமயம்? அதுசமயம், பொருள்நூல்*
*அடங்கிவிடும், அவையிரண்டும் அரன் அடிக்கீழ் அடங்கும்'*

என்று சிவஞானசித்தியார் கூறுவதும் எண்ணத்தக்கது.

*''சைவத்தின் மேல் சமயம் வேறில்லை*
*அதில்சார் சிவமாம் தெய்வத்தின் மேல்*
*தெய்வம் இல்''*

இவ்வரிகள் சைவத்தின் மேன்மையை விளக்குவன. சைவம் என்பது சிவத்தோடு சம்பந்தமுடையது. சித்தாந்தம் என்பது முடிந்த முடிவைக் கூறுவது. சிவத்தோடு சம்பந்தம் உறுதலின் இது பழஞ்சமயமாகும்.

### சங்க கால வாழ்வும் வரலாறும்.

சங்க நூல்களில் காணப்பெறும் 'திணை' என்னும் சொல்லுக்குக் 'குடி' என்னும் பொருள் உண்டு. குடிகள் வாழும் நிலமும் 'திணை' எனப்பட்டது. பொருள் இலக்கணத்தில் விளக்கப்படும் ஐந்து திணைகளும் மக்கள் வாழ்க்கையைப் பற்றியவை. திணை என்னும் சொல் நிலத்தை மட்டுமின்றி, நிலத்தின் அமைப்பு, அங்கு வாழும் மக்கள் இயல்பு, அங்கு உயிர் வாழும் விலங்குகள், பறவைகள், செடி, கொடிகள், மரங்கள், பயிர் வகைகள், மக்கள் வழிபட்டு வந்த தெய்வங்கள் ஆகியவற்றையும் குறித்து நிற்கும். திணைக்குரிய பொருள்கள் மூன்று என்பதும், அம்மூன்றனுள் ஒன்று கருப்பொருள் என்பதும், அக்கருப் பொருள்களுள் ஒன்றே மக்களின் வழிபாட்டிற்கமைந்த தெய்வம் என்பதும் தொல்காப்பிய இலக்கணம் காட்டும் வாழ்வியலாகும். மக்களின் வாழ்க்கையில், அதாவது காலத்தாலும், இடத்தாலும் வரையறுக்கப்பட்ட மக்களின் வாழ்க் கையில், இடத்தினும், காலத்தினும் தோற்றம் கருப்பொருள்களுள் ஒன்றாகத் தெய்வம் வைத்துப் பேசப்படுவது கொண்டு - அன்றைய தமிழர் வாழ்வில் தெய்வம் குறித்த கருத்து எத்தகையதாக இருந் திருக்கக் கூடும் என்பதை உய்த்துணர வேண்டும்.

பொருள் இலக்கணம் வாழ்க்கைக்கு ஒழுங்கு முறைகளை வகுத்துக் கொடுக்கிறது. அவ்வாழ்க்கை முறையினைச் சங்க

இலக்கியங்கள் விளக்கிக் காட்டுகின்றன. அவர்கள் வாழ்ந்த நிலத்தின் தன்மை, உணவு, உடை, அணிகலன்கள், உறையுள், வாணிகம், ஆட்சிமுறை, தெய்வக் கோட்பாடுகள். வணங்கிய கடவுளர்கள் இன்னோரன்ன பிற செய்திகளையும் இவ்விலக்கியங்கள் வாயிலாக, உணர முடிகிறது. எனவே மக்கள் வாழ்க்கையோடு சமயம் பிணைந்து நின்ற பிணைப்பினைச் சங்க இலக்கியம் நமக்குத் தெளிவாக அறிவிக்கிறது. சமய சிந்தனைகளில் அறவுணர்வும், தத்துவ ஆராய்ச்சியும் முக்கிய இடம் பெற்றதாயினும் - வழிபாட்டு முறைகளே - பக்தி இலக்கியம் உருப்பெற்று வளர்ந்ததற்குக் காரணம் எனலாம்.

## வழிபாட்டு முறைகள்

சங்க கால மக்களின் வாழ்வியலைச் சங்க நூல்களின் வாயிலாக அறிகிறோம். அவர்கள் தனிப்பட்ட சமயத்தைப் பின்பற்றியதாக அறிய முடியவில்லை. குறிஞ்சி வாழ் மக்கள் சேயோனையும், முல்லை வாழ் மக்கள் மாயோனையும், மருதம் வாழ் மக்கள் இந்திரனையும், நெய்தல் வாழ் மக்கள் வருணனையும் வழிபட்டனர். தெய்வ நம்பிக்கையை யும், தெய்வ வழிபாட்டையும் பண்டைத் தமிழர் நாகரிக வளர்ச்சி பெற்றமைக்குரிய சான்றுகளாகக் கொள்ளலாம். பண்டைத் தமிழரிடத்தே தெய்வ வழிபாடு இருந்தமையைத் தொல்காப்பியம் அறிவிக்கின்றது.

*''தெய்வம் சுட்டிய பெயர்நிலைக் கிளவி''*

தொல் : சொல். கிளவி - 4

*''வெறி அறிசிறப்பின் வெவ்வாய் வேலன்*
*வெறியாட்டு அயர்ந்த காந்தளும்*

தொல் : பொருள் புற - 5

*மாயோன் மேய மன் பெரும் சிறப்பின்*
*தாவா விழுப்புகழ்ப் பூவை நிலையும்*

தொல் : பொ. புற - 5

*மறைகடை கூட்டிய துடிநிலை சிறந்த*
*கொற்றவை நிலையும் அத்திணைப் புறனே*

தொல் : பொ. புற - 4

முதலான நூற்பாக்களால் காந்தள் நிலை, பூவை நிலை, கொற்றவை நிலை முதலியவை முருகனையும், திருமாலையும்,

காளியையும் குறிப்பாக உணர முடிகிறது. எனவே தொல்காப்பியர் காலம் தொட்டுத் தமிழர் தெய்வ வழிபாடு நிகழ்த்தியமை புலனாகும். மக்கள் வாழும் நிலத்தியல்புக்கு ஏற்ப அவர்களின் கொள்கைகளும் வழிபாட்டு முறைகளும் தோன்றி நிலை பெற்றன.

## பக்தி இலக்கியக் காலம்

சங்க காலத்திற்குப் பின்னர் பௌத்த, சைன சமயங்கள் தமிழ் நாட்டில் புகுந்து பரவி, சைவ, வைணவ நெறிகளைத் தாக்கி வந்தன. கி.பி. 7ஆம் நூற்றாண்டின் முற்பகுதி வரை இந்தியா முழுவதுமே சைன, பௌத்த மதக் கொள்கைகள் பரவி இருந்தன. இக்கால கட்டத்தில் தோன்றியவர்கள் தான் திருமறையும், தீந்தமிழும் சிறக்க வந்த திருஞானசம்பந்தரும் திருத்தொண்டின் நெறி வாழ வந்த தவமுனிவராகிய திருநாவுக்கரசரும் ஆவர். பூதி சாதன விளக்கம் போற்றப் பெறாது ஒழியக் கண்டு ஏதமில் சீர்ச் சிவபாத இருதயர் இடருறுகிறார். இவ்விடரினைப் போக்க அவர் எத்தகு தவம் புரிகிறார் என்பதைச் சேக்கிழார் வாக்கால் அறிந்து மகிழலாம்.

*''மனையறத்தில் இன்பமுறு மகப் பெறுவான் விரும்புவார்*
*அனையநிலை தலைநின்றே ஆடியசே வடிக்கமலம்*
*நினைவுறமுன் பரசமயம் நிராகரித்து நீறாக்கும்*
*புனைமணிப் பூண் காதலனைப் பெறப் போற்றித் தவம் புரிந்தார்''*

- பெரிய பு - திருஞான - 19

திலகவதியார் பிறந்து சிலமுறையாண்டு அகன்றதன் பின், அலகில் கலைத்துறை தழைப்ப அருந்தவத்தோர் நெறிவாழ, இருள் நீக்கி ஒளி விளங்கச் செய்யும் கதிர்போல, மருள் நீக்கியார் அவதரித்தார். மருள் நீக்கியார் அக இருள் நீக்கி, உள்ளொளி பெருக்க அவதரித்தார் என்று சேக்கிழார் கூறுவர். அருட்பெருகு தனிக்கடலும், உலகுக்கெல்லாம் அன்பு நெறிக் கடலுமாம் தமிழ் விரகரும், அறந்தரு நாவுக்கரசரும் திகழ்ந்தனர். பொருட்சமய முதற் சைவ நெறி தான் பெற்ற புண்ணியக் கண்ணிரண்டு எனவும், சைவமும், தமிழும் பரப்பிய இவர்களைத் தெய்வச் சேக்கிழார் போற்றுவதும் குறிப்பிடத்தக்கது.

இறைவனை ஏழிசையாய், இசைப் பயனாய், இன்னமுதாய், தோழனுமாய் அனுபவித்தவர் சுந்தரர். இவ்வனுபவம் வள்ளற் பெருமான் திருவுள்ளத்தைப் பெரிதும் ஈர்த்தது.

*'ஏழிசையாய் இசைப் பயனாய்*
*இன்னமுதாய் என்னுடைய*
*தோழனுமாய் என்றுமுன் நீ*
*சொன்ன பெருஞ் சொற் பொருளை*
*ஆழ நினைந் திடில் அடியேன்*
*அருங்கரணம் கரைந்து கரைந்து*
*ஊழியல் இன்புறுவது காண்*
*உயர் கருணைப் பெருந்தகையே'*

எனவரும் திருவருட்பாவினால் நாம் தெளிதல் கூடும். பைந்தமிழ் நவின்ற செந்நாப்புலவர் எனப் போற்றப்படும் மாணிக்க வாசகப் பெருமான்

*'நானார் என் உள்ளம் யார்*
*ஞானங்கள் யார் என்னை யாரறிவார்*
*வானோர் பிரான் என்னை ஆண்டிலனேல்'*

என இறைவன் தன்னை வலிய வந்து ஆட்கொண்ட பாங்கினைப் பாடுகிறார்.

சைவப் பயிர் வளர்த்த சைவ சமய குரவர் நால்வரும் இறைவனோடு கலந்து தாம் பெற்ற அருளனுபவத்தை நமக்குத் திருநெறிய தமிழால் வடித்துத் தந்துள்ளனர்.

நால்வர் பெற்ற அருளனுபவம் வருமாறு

*''நீருளான், தீயுளான், அந்தரத்துள்ளான்*
*நினைப்பவர் மனத்துளான் நித்தமா ஏத்தும்*
*ஊருளான் எனதுரை தனதுரை யாக*
*ஒற்றைவெள் ளேறுகந் தேறிய வொருவன்*
*பாருளார் பாடலோ டாடல் அறாத*
*பண் முரன் றஞ்சிறை வண்டினம் பாடும்*
*ஏருளார் பைம்பொழில் இலம்பையங் கோட்டூர்*
*இருக்கையாப் பேணியென் எழில் கொள்வ தியல்பே''*

- ஞானசம்பந்தர்

*''வாயானை மனத்தானை மனத்துள் நின்ற கருத்தானைக்*
*கருத்தறிந்து முடிப்பான் தன்னைத்*
*தூயானைத் தூவெள்ளை யேற்றான் தன்னைச் சுடர்த்திங்கள்*
*சடையானைத் தொடர்ந்து நின்ற என்*
*தாயானைத் தவமாய தன்மையானைத் தலையாய*

*தேவாதி தேவர்க் கென்றும்*
*சேயானைத் தென்கூடல் திருவாலவாய்ச் சிவனடியே*
*சிந்திக்கப் பெற்றே னானே*

- அப்பர்

*"கீளார் கோவணமும் திருநீறு மெய்ப் பூசியுன்றன்*
*தாளே வந்தடைந்தேன் தலைவா! யெனை யேன்று கொள் நீ*
*வாளார் கண்ணி பங்கா மழபாடியுள் மாணிக்கமே*
*ஆளாய் நின்னையல்லால் இனியாரை நினைக்கேனே.*

- சுந்தரர்

*1. இரும்புதரு மனத்தேனை யீர்த்தீர்த்தெனென் புருக்கிக்*
*கரும்புதரு சுவை எனக்குக் காட்டினையுன் கழலிணைகள்*
*ஒருங்குதிரை யுலவுசடை யுடையானே நரிகளெல்லாம்*
*பெருங்குதிரை யாக்கியவா றன்றே யுன் பேரருளே*

- மாணிக்கவாசகர்

இவ்வாறாக நால்வரும் தாங்கள் பெற்ற இறையருள் அனுபவத்தை ஞானப்பனுவலாக மொழிந்துள்ளனர். முப்பொருள் உண்மையினையும், பாச நீக்கத்தையும், இறைவனை அடைதற்குரிய சாதனங்களையும், அதனால் அடையத்தகும் பயனையும் அவர்கள் பாடிய பாடல்களால் அறிய முடிகின்ற சைவ சித்தாந்தச் செய்திகளாகும்.

அச்சான்றோர்களின் வாக்கும் வாழ்வும் சமயச் சிந்தனைக்கு மேலாக மனித இனம் மண்ணில் நல்ல வண்ணம் வாழும் சமுதாயச் சிந்தனையை உட்கொண்டதாகவும் அமைவதை உணரலாம். திருமருகலில் வணிகப் பெண் புலம்பி அழக்கேட்டு, 'சடையா எனுமால் என்னும் பதிகம் பாடி, அப்பெண்ணின் துயர் தீர்த்தும், 'வாசி தீரவே காசு நல்குவீர்' எனப்பாடி, காசு பெற்றுப் பசி போக்கியதும், திருமறைக்காட்டுத் திருக்கோயில் வழிபாட்டிற்கு வழி செய்தமையும், முதலை உண்ட பாலகனை உயிர்ப்பித்ததும், உழவாரப் பணி செய்ததும் அப்பூதி அடிகள் மகனாரை உயிர் பெறச் செய்ததும் போன்ற இன்னோரன்ன செயல்கள் சமுதாயச் சிந்தனையே ஆகும். மண்ணில் நல்ல வண்ணம் வாழவும், வைகலும் நல்லகதிக்கு மதிக்கு உலகை நன்னெறிப்படுத்துவதும் அவர்களது எண்ணத்தில் வேரூன்றி இருந்தமைக்குத் தக்க சான்றுகளாகும்.

## மங்கையர் வாழ்வில் சைவம்

அருளாளர்கள் போற்றிப் பேணிக் காத்து வளர்த்த சைவ சமயத்தின் மாண்பை உணர்ந்து வாழ்ந்த மங்கையர்களை இந்நாளில் நினைவு கூர்தல் இன்றியமையாததாகும். பெரிய புராணம் அடியவர்களின் வாழ்வையும் அவர்கள் வாழ்க்கைத் துணைநலமாக வாழ்ந்த மங்கையரின் மாண்பினையும் விளக்கும் செம்பொருள் காப்பிய மாகும். அறுபான் மூன்று அடியவர்களின் தொண்டின் மேன்மையைத் தெய்வச் சேக்கிழார் பக்திச் சுவை நனி சொட்டச் சொட்ட விளக்குகிறார். பெண்பாலராகப் பிறந்துய்ந்த மூன்று அடியவர் களையும், பல அடியவர்களைச் சைவ உலகிற்கு என்றும், செம்மை நலத்துடன் வளர்த்தும் வந்த பெண்ணின் பெருந்தகையோரையும் மனமார வாழ்த்துகிறார். இவர்களது வாழ்வு வள்ளுவர் வகுத்த 'வாழ்க்கைத் துணைநலம்' என்னும் இலக்கணத்திற்கு இலக்கியமாகத் திகழ்வதாகும். கணவருடன் கருத்து ஒன்றவரும் அப்பெண் மணிகளின் பெருமை குறிப்பிடத்தக்கதாகும். இவ்வுயர் பண்பல்லவா அடியவர்கள் தம் குறிக்கோளில் வெற்றி பெறத் துணை நின்றது! மேலும் இருவரும் இணைந்து அரன்பணி, அடியவர் பணி இரண்டினையும், அன்போடும், ஆர்வத்தோடும் செயலாற்ற முடிந்தது. இதற்குச் சான்றாக இயற்பகை நாயனாரின் மனைவி, சிறுத் தொண்டரின் துணைவியார் திருவெண்காட்டு நங்கையர், இளையான் குடிமாற நாயனாரின் செழுந்திரு மனைவியார், குங்குலியக் கலையரின் மனைவியார், அப்பூதி அடிகளாரின் துணைவியார், ஏயர்கோன் துணைவியார், அமர்நீதியார் மனைவி ஆகியோரைச் சிறப்பாகக் குறிப்பிடலாம்.

*''இன்று நீர், எனக்கு அருள் செய்தது இதுவேல்*
*என் உயிருக்கொரு நாதர், நீ உரைத்தது*
*ஒன்றை நான் செய்யும் அத்தனை அல்லால்*
*உரிமை வேறு உளதோ எனக்கு''*

என மொழிந்த இயற்பகையாரின் மனைவியாரின் கருத்தொன்ற வரும் பெருமையைத் தெளிவாக்குகிறது. சிறுத் தொண்டரும் அவரது துணைவியாரும் அடியவராக வந்த பயிரவருக்கு அவர் விரும்பியவாறு பிள்ளைக் கறியமுது படைத்தனர். வயிரவர் தம்முடன் உணவு உண்பதற்குப் புதல்வனை வேண்டினர்.

''நாமிங்கு உண்பது அவன் வந்தால்தான். நாடி அவனை அழையும், என்றனர். எனவே சிறத்தொண்டர் புறத்தே போய்

மைந்தனை அழைத்தார். துணைவியாரும் அதே கருத்தோடு தொடர்ந்து சென்றார். 'செய்ய மணியே சீராளா! வாராய்! சிவனார் அடியார்யாம் உண்ணும் வகையால் உடனுண்ண அழைக்கிறார், எனச் சிறுத் தொண்டருக்கு இருந்த அதே ஆர்வம் துணைவியார் இடத்தும் இருப்பதை உணர முடிகிறது.''

தூண்டு தவ விளக்காம் திலகவதியார் தம்பியார் உளராக வேண்டும் என்ற தயவால், உயிர் தாங்கி, அம்பொன்மணி நூல் தாங்காது அனைத்துயிர்க்கும் அருள் தாங்கி வாழ்ந்து வந்தார்.

*''காத்தாள்பவர் காவல் இகழ்ந்தமையால்*
*கரைநின்றவர் கண்டுகொள் என்று சொல்லி*
*நீத்தாய கயம்புக நூக்கிஇட*
*நிலை கொள்ளும் வழித்துறை'' - ஒன்று*

அறியாது இருந்த தம்பியரை இறைவன் சூலை நோயைக் கொடுத்து ஆட் கொண்டார். தம்பியரைத் திருவாளன் திருநீறு அளித்துப் பெருவாழ்வு வாழ வைத்த பெருமை திலகவதியாரையே சாரும். அம்மையாரின் இத்தகு தொண்டு வாழ்வே பின்னர் அப்பரடிகள்,

*''நிலைபெறுமா றெண்ணுதியேல் நெஞ்சே! நீவா*
*நித்தலும் எம்பிரானுடைய கோயில் புக்குப்*
*புலர்வதன் முன் அலகிட்டு மெழுக்கும் இட்டுப்*
*பூமாலை புனைந்தேத்திப் புகழ்ந்து பாடித்*
*தலையாரக் கும்பிட்டுக் கூத்தும் ஆடிச்*
*சங்கரா, சயபோற்றி, போற்றி என்றும்*
*அலைபுனல் சேர் செஞ்சடை எம் ஆதி என்றும்*
*ஆரூரா! என்றென்றே அலறா நில்லே!*

என உலகவர்க்குத் தொண்டு நெறியின் தலைமைச் சிறப்பின் அறிவிப்பாக அமைகிறது.

மங்கையர்க்கரசியார், மங்கையர்க்குத் தனி அரசி எங்கள் தெய்வம் எனத் தெய்வச் சேக்கிழார் போற்றி வணங்குகிறார். சைவப் பயிரைச் சமணர் நெருக்கி அழித்து விடாமல் காப்பாற்றிய பெருமை மங்கையர்க்கரசியாருக்கும், குலச் சிறையாருக்கும் உரியது. சைவ நெறியைப் பரப்புவதற்குக் கருவி, துணையாக நின்றவர்கள் முறையே மங்கையர்க்கரசியாரும், திலகவதி அம்மையாரும் ஆவர். மங்கையர்க் கரசியாரின் பொங்கொளி திருநீறு பரப்பிய பெருமையினைச் சேக்கிழார்

*"எங்கள பிரான் சண்பையர்கோன் அருளினாலே*
*இருந்தமிழ் நாடுற்ற இடர்நீக்கித் தங்கள்*
*பொங்கொளி வெண்திருநீறு பரப்பினாரைப்*
*போற்றுவார் கழல் எம்மால் போற்றலாமே"*

எனப் போற்றுகிறார்.

காரைக்காலம்மையார் சிவபெருமான் மாட்டுப் பிறந்து மொழி பயின்ற பின்னெல்லாம் காதல் சிறந்து வாழ்ந்தவர். கணவன் கருத்தறிந்த அம்மையார் அருளை வேண்டி அழகுற அமையப் பெற்ற உடம்பின் தசைப் பொதியைக் கழித்தவர். என்புருவாம் பேய்வடிவை வேண்டிப் பெற்றனர். திருக்கயிலைக்குத் தலையால் நடந்து சென்ற அம்மையாரை, 'அம்மையே' என்று செம்மை ஒரு மொழியால் அருகுவர அழைத்தனர். அம்மையார் இறைவனிடத்து இறவாத இன்ப அன்பு வேண்டி, திருப்பகதிகங்கள் பாடி, ஆண்டவனின் திருவடியின் கீழிருந்து அவர் திரு நடனம் கண்டு என்றும் இன்புற்றிருக்கின்றனர்.

## முடிவுரை

பண்டைத் தமிழரிடத்தே தெய்வ வழிபாடு வாழ்க்கையோடு பிணைந்திருந்தது. ஒன்றே குலம், ஒருவனே தேவன் என்றும், யாதும் ஊரே, யாவரும் கேளிர்', தீதும் நன்றும் பிறர்தரவாரா' 'நல்லது செய்தல் ஆற்றீர் ஆயினும், அல்லது செய்தல் ஓம்புமின், நீர்வழிப்படும் புணைபோல ஆருயிர் வினை வழிப்பாடும் போன்ற வரிகள் சமயக் கோட்பாட்டினை உணர்த்துவதாகும்.

பெரிய புராணப் பெண்டிர் வாழ்ந்த வாழ்வு அன்பின் அமைந்த சமய வாழ்வு ஆகும். அன்பே சிவம், அன்பெனும் பிடியுள் அகப்படும் பொருளே' 'அம்மையே அப்பா, ஒப்பிலா மணியே, அன்பினில் விளைந்த ஆரமுதே என்றெல்லாம் அன்பின் திறத்தைத் திருமுறைகள் விளக்குகின்றன. இம்மாநாடு நடக்கும் இம்மார்ச்சுத் திங்களில் மகளிர் தினமாக உலகெங்கும் கொண்டாடுவதும் நினைந்து மகிழ்தற்குரியது.

பெண்ணின் பெருமை, பேசிய தமிழ்த் தென்றல் திரு.வி.க. அவர்கள் பெண்களின் பெண்மை, தாய்மை, இறைமைத் தன்மையைப் போற்றுகிறார். நாம் உயர்வாகவும் சிறப்பாகவும் போற்றப்படுகிறோம். நாம் ஆற்ற வேண்டிய கடமைகள் பல. நம் பிள்ளைகளைச் சிவநெறியில் வளர்த்து, சிவநெறியில் வாழும் நெறிமுறையைக் கற்பிக்க வேண்டும். மக்களுக்குச் சைவம் என்பது அன்பும், அருளுமே என்பதை அறிவிக்க வேண்டும். இல்லங்கள்

தோறும் சைவ மலரை மலர வைப்போமாக! அதன் மணத்தை உலகெங்கும் பரப்புவோமாக!

*மண்ணில்நல் லவண்ணம் வாழலாம் வைகலும்*
*எண்ணில்நல் லகதிக்கு யாதுமோர் குறைவிலைக்*
*கண்ணில்நல் ல.:துறுங் கழுமல வளநகர்ப்*
*பெண்ணில்நல் லாளொடும் பெருந்தகை இருந்ததே!*

## தொண்டை மண்டல ஆதீனம், சீலத்திரு

# ஞானப்பிரகாச தேசிக பரமாசாரிய சுவாமிகள்

(95ஆம் ஆண்டு விழா - 2001 - இரத்தினகிரி - சைவர் மாநாடு)

*பூழியர்கோன் வெப்பொழித்த புகலியர்கோன் கழல்போற்றி!*
*ஆழிமிசைக் கன்மிதப்பில் அணைந்த பிரான் அடிபோற்றி!*
*வாழி திருநாவலூர் வன்தொண்டர் பதம்போற்றி!*
*ஊழி மலி திருவாதவூரர் திருத்தாள் போற்றி!*

*தில்லை வாழ் அந்தணரே முதலாகச் சீர் படைத்த*
*தொல்லையதாம் திருத்தொண்டத் தொகையடியார் பதம்போற்றி*
*ஒல்லையவர் புராணகதை உலகறிய விரித்துரைத்த*
*செல்வமலி குன்றத்தூர்ச் சேக்கிழார் அடிபோற்றி!*

*அருள் நலம் சான்ற தவப் பெருமக்களே! அன்பு நலம்*
*சான்ற அறிவுடைப் பெருமக்களே! தெய்வ நலம் சான்ற*
*தாய்மார்களே! செம்மனச் செல்வர்களே! செல்வியர்களே!*

அம்மையப்பர் திருவருளால் சைவ சித்தாந்தப் பெருமன்றத்தின் 85ஆம் ஆண்டு நிறைவு விழாவினைக் கொண்டாட நாம் இங்குக் குழுமியுள்ளோம். சென்ற பல ஆண்டுகளில் தலைமை பூண்ட தகைமைசால் பேரறிஞரர்களின் பெயர்களை நினைக்கும் அளவிலேயே அவர்கள் முறையில் இப்பணியை ஆற்ற இயலுமா என்ற அச்சம் தலைப்படுகிறது.

இந்நிலையில் எமது தலைமையை இதுபோது விழைந்தது எது கருதி? எனும் வினா எம்முள் எழுகிறது. பெரிய புராணப்பேருரை ஆசிரியர், வழக்கறிஞர் சிவக்கவிமணி, திரு. C.K. சுப்ரமணிய முதலியார் (ஸ்ரீமத் சம்பந்த சரணாலயத்தம்பிரான் சுவாமிகள்). அவர்களோடு எமக்குள்ள பூர்வாசிரம உறவின் முறையும், இப்போது

தாங்கியுள்ள வேடமுமே இதற்குக் காரணங்களாகும் எனக் கருதுகிறோம்.

சைவத் திரு. மு. கிருஷ்ணன் I.A.S. (ஓய்வு) அவர்களின் அன்பில் கட்டுண்டு இரத்தினகிரியில் நடைபெற்ற இம்மன்றத்தின் 81ஆம் ஆண்டு விழாவில் பங்குபற்றியது நினைவுக்கு வருகிறது. இந்த நேரத்தில் இம்மன்றம் கடந்த 85 ஆண்டுகளாக நின்று நிலவி வருவதையும், இது நிறுவிய காலத்தில் இதன் வளர்ச்சிக்கு உறுதுணையாக நின்ற பேரறிஞர்களையும், பேரன்பர்களையும் நினைவிற் கொள்வது மிகப்பயன் தருவதாகும்.

திருப்பாதிரிப்புலியூர் ஞானியார் சுவாமிகள், ஆசிரியர் மறைமலை அடிகள், ஜெ.எம். நல்லசாமிப்பிள்ளை, விபுலானந்த அடிகள் திரு. வி. கலியாணசுந்தர முதலியார், சைவப் பாதிரியார் சச்சிதானந்தம்பிள்ளை, சிவக்கவிமணி C.K. சுப்பிரமணிய முதலியார், கோவைகிழார், C.M. இராமச்சந்திரன் செட்டியார், வழக்கறிஞர் ம. பாலசுப்பிரமணிய முதலியார், திரு. வி. உலகநாத முதலியார், ருக்குமணி குக்கர் திருமுறைக்காவலர், அ.சோமசுந்தரம் செட்டியார் போன்ற பல அறிஞர் பெருமக்கள் இப்பெரு மன்றத்தைக் கண்ணிமைபோல் காத்து வளர்ந்து வந்தனர்.

நீதிபதி ஜெ. எம். நல்லசாமிப்பிள்ளை அவர்கள் "சைவ சித்தாந்த சாத்திர நூல்களை" ஆங்கிலத்தில் மொழி பெயர்த்துப் பொன்றாப் புகழ் பெற்றவர். திரு. ம. பாலசுப்பிரமணிய முதலியார் அவர்கள் இப்பெருமன்றச் செயலாளராக இருந்து பன்னிரு திருமுறைகள், பதினான்கு சித்தாந்த சாத்திரங்கள், திருப்புகழ், சங்க நூல்கள், சீவக சிந்தாமணி முதலிய நூல்களை இம்மன்றத்தின் சார்பில் அடக்க விலைச் சுத்தப் பதிப்பாக வெளியிட்டார்கள். நாலாயிரத் திவ்யப் பிரபந்தத்தையும் தம் சொந்த வெளியீடாகவும் செய்துள்ளனர். இவர் செயலாளராக இருந்த காலமே இப்பெருமன்றத்தின் "பொற்காலம்" எனக் கூறலாம்.

திரு. வி. உலகநாத முதலியார் (திரு. வி.க. அவர்களின் தமையனார்). 1938 முதல் 1942 அவரை "சித்தாந்தம்" மாத இதழின் பதிப்பாசிரியராக இருந்து வந்தார். இம்மன்றத்தின் அனைத்து நூல்களும் சுத்தப் பதிப்பாக வெளிவரத் தமது சாது அச்சகத்தின் மூலம் உதவியவர் இவரே.

கோவைக்கிழார் C.M. இராமச்சந்திரன் செட்டியார் அவர்கள் 1947 முதல் 1953 வரை சித்தாந்த மாத இதழின் ஆசிரியராய் இருந்து

தொண்டாற்றினார். இவரது முயற்சியில் 'சித்தாந்தம்' கூடுதலான பக்கங்களைக் கொண்டு கூடுதல் பிரதிகளுடன் வெளி வந்தது. சிவக்கவி மணி அவர்களின் பெரிய புராணப் பேருரையில் பல நாயன்மார்களின் வரலாற்றுத் தொடர்புடைய கல்வெட்டுச் செய்திகளையும், வரலாற்றுச் செய்திகளையும் சேர்த்து வெளியிடச் செய்தார்.

இவர் அறநிலையத்துறை ஆணையராக இருந்த காலத்தில் திருக்கோயில் வருவாயில் ஒரு பகுதியைத் திருமுறைகள், திவ்விய பிரபந்தங்கள் மக்களிடையே பரவச் செலவழிக்க வேண்டும் என்ற நியதியை ஏற்படுத்தினார். அஃது இப்போது நடைமுறையில் இல்லை.

திருமுறைக் காவலர் அறிஞர் அ. சோமசுந்தரம் செட்டியார் 1935ல் சுந்தரர் தேவாரத்தினை வரலாற்று முறையில் ஆராய்ச்சிக் குறிப்புரையுடன் பதித்து அடக்க விலைக்கே வெளியிட்டுள்ளார். மேலும் சில கோயில்களில் தேவாரத் திருமுறைகளைப் பண்ணோடு பயிற்றுவிக்கத் தம் சொந்தச் செலவில் ஓதுவா மூர்த்திகளையும் ஏற்படுத்தினார். சென்னை அந்திக் கடைப் பகுதியில் மூன்று கடைகள் வாங்கி இம்மன்றத்தின் பெயரில் ஓர் அறக்கட்டளையை இதற்கென உருவாக்கினார். விரிவு அஞ்சி மற்றைய பெருமக்களின் தொண்டுகளைக் குறிப்பிட இயலவில்லை. சைவ சமயத்தை வளர்க்கும் முறைகளை அறிந்து கொள்ளுவதற்கு இப்பெருமக்கள் காட்டிய வழிகளே சாலச் சிறந்தவை என்றால் மிகையாகாது.

இவர்களின் திருத்தொண்டினையும் பயனையும் கீழ்க்காணும் சிவஞான சித்தியார் பாவால் நன்குணரலாம்.

*வாழ்வெனும் மையல்விட்டு வறுமையாம் சிறுமை தப்பித்*
*தாழ்வெனும் தன்மையோடு சைவமாம் சமயம் சாரும்*
*ஊழ் பெறலரிது; சால உயர் சிவஞானத்தாலே*
*போழிள மதியினானைப் போற்றுவார் அருள் பெற்றோரே.*

இச்செய்யுள் சைவ சமயிகளுக்கு இருக்க வேண்டிய பண்புகளைப் புலப்படுத்துகின்றது. இதற்கு உரைகண்ட நிரம்ப அழகிய தேசிகர் உரையும், மேலும் சிறப்புரை கண்ட மாதவச் சிவஞான யோகிகளின் கூற்றும் இங்கு சிந்திக்கத் தக்கவை. இப்பண்புகள் அனைத்தும் இப்பெருமன்றத்தை வளர்த்த பெருமக்களிடம் விளங்கியமையைக் காணலாம்.

உலகில் வேறு எந்த நாட்டிற்கும் இல்லாத ஒரு தனிச்சிறப்பு இந்திய நாட்டிற்கு உண்டு என்றால் அது ஆன்மீகத் துறையில் பெற்றுள்ள பெருஞ்சிறப்பேயாகும். குறிப்பாகத் தமிழ் நாட்டிற்கு இதில் மிக்கதொரு பங்குண்டு எனலாம். ஏனெனில் தமிழ் நாட்டில் தான் அறுபதாயிரத்திற்கும் மேற்பட்ட திருக்கோயில்கள் இருக்கின்றன. இவைகளுள் முப்பத்தைந்தாயிரம் கோயில்கள் அரசாங்கக் கண்காணிப்பில் இருந்து வருகின்றன. இத்துணை ஆயிரம் கோயில்களைக் கொண்ட ஒரு நாடு இந்த உலகில் வேறு எங்கும் இல்லை என்றால் அது மிகையாகாது.

*ஆயபதிதான் அருட் சிவலிங்கமாம்*
*ஆய பசுவும் அடலேறென நிற்கும்*
*ஆய பலிபீடம் ஆகும் நற்பாசமாம்*
*ஆய அரன் நிலை ஆய்ந்து கொள்வார்கட்கே*

என்னும் திருமூல தேவரின் வாக்கின்படி இவை அனைத்தும் பதி, பசு, பாசம் என்ற அமைப்பில் அமையப் பெற்றவை என்பதைக் காணலாம்.

'திருக்கோயில் இல்லாத திருவில் ஊரும்' என்னும் அப்பர் வாக்கினால் ''திருக்கோயில்'' எனப்படுவது சிவாலயமேயாதல் விளங்கும். சிவாலயத்தின் அமைப்பே சைவ சித்தாந்த தத்துவத்தை விளக்குவது எனலாம்.

திருக்கயிலை யாத்திரையில் ஏறக்குறைய பதினெட்டாயிரம் அடி உயரம் சென்ற பின், திருக்கயிலாயத்தை வலம் வருகின்றோம். இதன் சுற்றளவு 28 மைல். இவ்வாறு வலம் வரும்போது பதி, பசு, பாசம் என்ற முறையில் அங்கு இயற்கையாகவே இவை அமைந்துள்ளமையையும் காணலாம்.

சைவ சித்தாந்தச் செந்நெறி மிகத் தொன்மையும், தலைமையும் வாய்ந்ததாகும். மொஹஞ்சோதரா, ஹரப்பாவில் அகழ்ந்து எடுக்கப் பெற்ற புதை பொருள்களுள் சிவலிங்கங்களும், அம்மை கூத்தப்பிரான், தென்முகக் கடவுள், நந்தி முதலிய உருவங்களும் கிடைத்துள்ளன என்றும், இவற்றிலிருந்து இற்றைக்கு ஆறாயிரம் ஆண்டுகட்கு முந்தியே சைவ சமயக் கொள்கைகளும் ஒழுங்குமுறைகளும் நிலவி இருந்தமை ஊகித்தற்கு இடமுண்டு என்றும் இவைகளையெல்லாம் ஆதாரங்களாகக் கொண்டே சர்ஜான் மார்ஷல் (Dr. Sir. John Marshall) உலகில் நிலைத்து வழங்கும் சமயங்களுள் சைவ சமயமே மிகத் தொன்மையானது. (Saivism is the most ancient living Religion in the world) என்று இச்சமயத்தின் பழமையை

நிலை நாட்டியுள்ளார் என்றும் அறிஞர் பெருமக்கள் எழுதியுள்ளதைக் காணலாம். இதைத் தமிழர் நாகரீகம் என்றே பல பேராசிரியர்கள் கருதுகின்றனர். டாக்டர் கில்பர்ட் ஸ்லேட்டரின் "Dravidian elements in Indian Culture" என்ற நூலும், "Racialitic Synthesis in Hindu Culture" போன்ற நூல்களும் இதனை விரிவாகப் பேசுகின்றன எனக் குறித்துள்ளனர். சைவத்தின் இத்தத்துவக் கொள்கைகளை மறுத்துக் கூறுகின்ற வகையில் எந்த ஒரு நூலும் இதுவரை உருவாகவில்லை என்ற ஒன்றே இதற்குரிய தனித்தன்மையை விளக்குவதாகும். ஆக, சைவ சமயச் செந்நெறி மிகத் தொன்மையானது என்பதும், இது அறிவியல் உலகு ஏற்றுக் கொண்ட ஒன்று என்பதும் வெளிப்படை.

சங்க இலக்கியங்களிலும் சிவநெறிச் சிறப்பு நன்கு விளங்குகின்றது.

*''நீல மணி மிடற்றொருவன் போல மன்னுக பெரும நீயே''*

*''காரியுண்டிக் கடவுளது இயற்கை''*

*''பணியியரத்தை நின் குடையே முனிவர், முக்கட்செல்வர் நகர் வலஞ்செயற்கே''*

என்றாற் போலப் பல இடங்களில் சிவபரம் பொருளின் சிறப்பு விதந்து பேசப்பெறுகிறது.

*''நீல மணி மிடற்றொருவன்''*

என்றதனால் முதற் கடவுள் ஒருவனே என்பது விளக்கப்பட்டது.

*''ஈயாது வீயும் உயிர் தவப்பலவே''*

மன்னுயிர்ப் பன்மையும் கூற்றத்து ஒருமையும் என வருவனவற்றால் உயிர்கள் எண்ணில என்னும் சித்தாந்த வழக்கு குறிக்கப்பட்டது.

வள்ளுவப் பெருந்தகையார் கடவுள் வாழ்த்திலும் இம்முப்பொருள் உண்மை நுட்பமாகக் குறிக்கப் பெறுகிறது. முதற்குறளில் இறையுண்மை விளக்கப்பட்டது. அப்பரம் பொருளை மனம், மொழி மெய்களால் வழிபட வேண்டும் என்பதனை

*''மலர்மிசை ஏகினான் மாணடி சேர்ந்தார்*
*நிலமிசை நீடு வாழ்வார்''*

*''இருள் சேர் இரு வினையும் சேரா இறைவன்*
*பொருள் சேர் புகழ்புரிந்தார் மாட்டு.''*

*"கோள் இல் பொறியில் குணமிலவே எண் குணத்தான்*
*தாளை வணங்காத் தலை"*

எனவரும் குறட்பாக்களால் அறியலாம்.

*"பிறவா யாக்கைப் பெரியோன்"*

*"நுதல் விழி நாட்டத்து இறையோன் முதலா"*

என வரும் சிலப்பதிகார மணிமேகலைத் தொடர்கள் அப்பெருமானுக்குரிய முதன்மையைப் பேசுகின்றன. எண்குணத்தான், பெரியோன், இறையோன் என்னும் ஒருமைச் சொற்கள் வணங்கப் படுபவன் ஒருவனே என்பதையும் "குணமிலவே" என்னும் பன்மைச் சொல் வணங்குகின்ற உயிர்கள் பல என்பதையும் விளக்குகின்றன.

சிவ பரம்பொருளின் சேடத்தைச் சிரத்தில் கொண்டு புறப்பட்ட சேரன் செங்குட்டுவன், "ஆடக மாடத்து அறிதுயில் அமர்ந்த காத்தற் கடவுளின் சேடம் அதன்பின் வர, அதனைச் சிரத்தில் அணியாது தோளில் அணிந்தனன்" என வரும் குறிப்பு, அப் பேரரசனின் சிவபத்திச் சிறப்பையும், அதன்வழி சிவபரம்பொருளின் மேன்மையையும் ஒருங்கு குறிப்பதாம். இவ்வாறு வந்த மெய்யுணர்வு, சமய குரவர்களாலும், சந்தான ஆசிரியர்களாலும் மேலும் வலுப் பெற்றன.

உலகச் சமயங்களுள் கடவுளைப் பற்றிய ஆராய்ச்சியே இல்லாத சமயங்களும் உண்டு. "கடவுள் உண்டு, உயிர்கள் என்றும் உள்ளன" என்று ஏற்றுக் கொண்ட சமயங்களிலும் கடவுளே உயிர்களைப் படைத்தார் எனக் கூறுவனவும் உண்டு. கடவுள் உயிர்களைப் படைக்கவில்லை என்பதே சைவ சமயத்தின் அடிப்படைக் கொள்கை.

கடவுளின் படைப்புப் பற்றி சைவ சமயம் கூறும் விளக்கம். "உலகத்தை மாயை என்னும் அறிவற்ற அருவப் பொருளில் இருந்து இறைவன் படைக்கிறான்' என்பதே. உயிர்களைக் கடவுள் படைத்தார் என்றால், இல்லாத உயிர்களை எதற்காகப் படைத்தார்? என்ற வினா எழும். அதற்கு விடை காண இயலாது. உலகத்தைக் கடவுள் ஏன் படைத்தார் என்னும் வினாவிற்கு உயிர்களது நன்மையின் பொருட்டுப் படைத்தார் எனக் கூற முடியும்.

குழந்தைகள் பிறக்கும்போது அழுது கொண்டே பிறக்கின்றன. ஏன் சிரித்துக் கொண்டு பிறப்பதில்லை? அழுகை துன்பத்தின் எதிரொலி. ஏற்கனவே துன்பத்திலிருந்த ஒன்றுதான் பிறவியெய்தியிருக்கிறது.

எனவே தான் பிறக்கும்போதே அழுகை அதன் முதல் வெளியீடாகிறது.

இத்துன்பம் ஆணவமலத்தின் செயல் என்று சைவம் சாற்றுகின்றது.துன்ப நீக்கமும் இன்ப ஆக்கமுமே பிறவியின் நோக்கம். துன்ப நீக்கத்திற்காக அழுதுகொண்டே பிறக்கும் நாம் இன்ப ஆக்கத்திற்கு வேண்டுவனவற்றைச் செய்ய முயல வேண்டும். இறையன்புத் திறத்தில் நின்று ''காதலாகிக் கசிந்து கண்ணீர் மல்கி'' வழிபடுதல் வேண்டும். இதனையே மணிவாசகப் பெருமான், ''யானே பொய் என் நெஞ்சும் பொய் என் அன்பும் பொய்''- ஆனால் வினையேன் அழுதால் உன்னைப் பெறலாமே'' எனப் பேசுகின்றார்.

நூல்களைக் கற்றும் கற்றவற்றை வல்லார் வாய்க்கேட்டும் உணர்ந்த போதிலும், கேட்ட வண்ணம் நிற்கவும் நாம் முற்படுவோமேயானால் மக்கட் பிறப்பைவிடச் சிறந்த பிறப்பு வேறில்லை. இதனையே, ''வாய்த்தது நந்தமக்கு ஈதோர் பிறவி மதித்திடுமின்'' என்று திருநாவுக்கரசு நாயனார் அருளிச் செய்துள்ளார். இதனையே திருமூலதேவர்,

*பெறுதற் கரிய பிறவியைப் பெற்றும்.*
*பெறுதற் கரிய பிரானடி பேணார்*
*பெறுதற் கரிய பிராணிகள் எல்லாம்*
*பெறுதற் கரிய தோர் பேறிழந்தாரே''*

என்கிறார். இற்றைக்கு நானூறு ஆண்டுகளுக்கு முற்பட்ட தாயுமானாரும்,

*''எண்ணிய பிறவிதனில் மானுடப் பிறவிதானியாதினும்*
*அரிதரிது காண்''*
*''இப்பிறவி தப்பினாலெப்பிறவி வாய்க்குமோ*
*ஏதுவருமோ அறிகிலேன்' என அஞ்சுகின்றார்.*

ஆக, மனிதப் பிறவி பெறுதற்கரிய பிறவி என்பதையும், இதன் பயன் சமய நெறியில் நின்று வாழ்வது என்பதையும் உணர்ந்து வாழ நாம் முற்படுவோமாக.

நாடு சுதந்திரம் பெற்று மக்களாட்சி உருவாகியுள்ளது. இந்நாட்களில் மக்கள் எண்ணிக்கை மிகுதியுள்ள இயக்கங்களுக்கே உயர்வுதரப் பெறுகிறது. ஆகவே, சைவ நன்மக்களைச் சமயத்தின் சார்பில் இணைத்து, இதன் எண்ணிக்கையைப் பெருக்க நாம் முற்பட வேண்டும். சைவ சமயக் கருத்துக்கள் அளவை முறைப்படி

திட்டவட்டமாகவும் கட்டுக்கோப்புடனும் அமைந்துள்ளமையை மெய்கண்ட நூல்கள் தெளிவுப்படுத்துகின்றன. சைவத் தெய்வத் திருமுறைகள் பன்னிரண்டினுள் பேசப்பெறும் அனுபூதி நிலைகள் குறிக்கோள் என்னும் அளவில் அடங்கிவிடுவனவல்ல. இவை அனைத்தும் அவரவர் தம் வாழ்க்கையில் எய்தப்பெற்ற அனுபவங்களே என்பதைத் திருத்தொண்டர் புராணத்தில் விரிவாகக் காணலாம்.

சைவ சமயத்தை உலகப் பொதுச் சமயம் எனலாம். எங்ஙனமெனில், யானை கண்ட குருடர்கள் கூறியவை குற்றமுடையன அல்ல; குறையுடையனவே. அவர்கள் கூறிய அனைத்தையும் இணைத்தால் யானையின் தோற்றம் ஒருவாறு நிறைவாகும். மேலும், இவைகளுள் உள்ள குறைபாட்டை நீக்கி யானையின் உண்மை உருவத்தைப் பேசுவது போல், அனைத்துச் சமயங்களிலும் உள்ள குறைபாடுகளைக் காரண காரிய வகையில் விளக்கி உண்மைச் சமய நிலையை வெளிப்படுத்துவதே சித்தாந்த சைவ சமயம். இதனுள் அனைத்துச் சமயங்களின் கொள்கைகளும் அடங்குவதைக் காணலாம்,

*''விரிவிலா அறிவினார்கள்''*

என்ற அப்பர் திருவாக்கின்படி, வேற்றுமையில் ஒற்றுமை காணும் சைவ சமயத்தின் உயர்ந்த நிலையை நாம் மனத்தில் கொள்ள வேண்டும்.

ஒரு சமயத்தின் பேரால் பிறிதோர் சமயத்தை அழித்துவிட முடியும் என்ற நிலை இன்றைய உலகில் எங்குமே இல்லை எனலாம். இயன்றவரை அனைத்துச் சமயங்களும் கலந்து உரையாட வேண்டும் என்ற சிறந்த நோக்கு இன்று உலகெங்கும் பரவி வருகிறது.

உலகில் சமயத்தின் பெயரால் இன்றுள்ள நிலைகளை நாம் கூர்ந்து நோக்குவோமேயானால் சைவ சித்தாந்த தத்துவ நுட்பங்களை மக்களிடம் பரப்ப வேண்டும் என்ற முயற்சியைவிடச் சைவ சமயப் பாதுகாப்பிற்கும், வளர்ச்சிக்கும் உள்ள இடையூறுகளைப் போக்கி, நம் முன்னோர் காட்டியுள்ள முறையில் ஆற்ற வேண்டிய பணிகளைச் செய்வதே நமது முதற்கடமை என்பதை அறியலாம்.

இதுவே இத்தலைமை உரையின் உட்கருத்து.

விரிவு அஞ்சி இதன் சார்பான பல செய்திகளை இங்குக்கூற முடியவில்லை.

அனைத்துத் துன்பங்களும் நீங்கி; அனைவரும் நலம் பல பெற அருள்தரும் ஏவலார் குழலம்மை இடங்கொண்ட அருள்மிகு திருவேகம்பநாதர் திருவருளைச் சிந்திக்கின்றோம்.

## வாழ்த்து

*வையம் நீடுக! மாமழை மன்னுக!*
*மெய்வி ரும்பிய அன்பர் விளக்குக!*
*சைவ நன்னெறி தான் தழைத் தோங்குக!*
*தெய்வ வெண்திரு நீறு சிறக்கவே!*

திருச்சிற்றம்பலம்

## செந்தமிழ் வேள்விச் சதுரர்

# மு.பெ. சத்தியவேல் முருகனார்

*(95ஆம் ஆண்டு சைவ இளைஞர் மாநாட்டுத் தலைமையுரை)*

சிவமார்ந்த செம்மல்களே!

எல்லாம் வல்ல வள்ளி மணவாளனின் வற்றாத கருணை நலத்தாலே, அருள்மிகு இரத்தினகிரி ஆறுமுகன் சந்நிதி அடிவாரத்தில், அருளாளர் இரத்தினகிரி பாலமுருகனடிமை திருக்கண்ணோக்கின் தண்ணளியில், நூற்றாண்டை நோக்கி நடைபயிலும் செவ்வழி சிறந்த சைவ சித்தாந்தப் பெருமன்றத்தின் 95ஆம் ஆண்டு விழா 19.5.2001 மற்றும் 20.5.2001 ஆகிய இருதினங்களில் ஆய சிறப்புக்கள் அனைத்துடன் நிகழ்ச்சிகள் நடைபெற ஒருவழியாக முதியவர்கள் இறுதியில் இளைஞர்களுக்கு வழிவிட்டு நிற்க சைவ இளைஞர்மாநாடு நிகழ்ச்சியில் இப்போது கால் பதிக்கிறோம்.

இளமை துள்ளல் உடையது என்றும் வரவேற்கப்படுவது; ஆற்றல் அதிகம் உடையது; அந்த ஆற்றல் நெறிப்படுத்தப்படுமானால் அளவிறந்த அரிய சாதனைகளைப் படைப்பது. வயதானவர்களும் இளமையைத்தானே விரும்புகிறார்கள்! நரை வந்தால் தலைச்சாயம் பூசிக்கொள்கிறான்; பல் விழுந்தால் தங்கப் பல்கட்டிக் கொள்கிறான். யார் முதுமைத் தோற்றத்தை ஏற்பார்கள்?

அதனால் தான் தாம் வணங்கும் கடவுளையே இளமையாக வைத்து வணங்கினான் தமிழன். தமிழ்க் கடவுள் முருகன் குழந்தையாகவே வைத்து வணங்கப்படுபவன். பாலமுருகன், பாலசுப்பிரமணியம், பாலாஜி - இது திருமால் பெயரல்ல; வேங்கடத்தில் உள்ளவன் முருகனே என்பதற்குச் சான்று பகரும் பெயர் - இப்படி முருகனை இளைமையோடு காண்பதே நம் வழக்கம். இந்தத் தலத்து முருகனுக்கும் பாலமுருகன் என்று தான் பெயர். 'என்றும் இளையாய்' என்று பாடினார் நக்கீரர்.

அதிலே கூட ஒரு சுவையான வரலாறு உண்டு. திருமுருகாற்றுப் படையைப் பாடி முடித்த போது 'பழமுதிர் சோலை மலை கிழவோனே' என்று நக்கீரர் பாடி முடித்தாராம். இளமையான என்னைக் கிழவன் என்று பாடிவிட்டாயே என்று முருகன் கீரரிடம் நகையாடியதாகவும் அதைச் சரிசெய்ய 'என்றும் இளையாய்' என்று பின்னர்ப் பாடியதாகவும் கூறுவார்கள். பாருங்கள்! இறைவனே தன்னைக் கிழவன் என்று கூப்பிடுவதை ஏற்கவில்லை! இன்றைக்கும் பல முதியவர்கள் தம்மைப் பெரியவரே என்று கூப்பிட்டால் அப்படி என்ன எனக்கு வயதாகி விட்டது என்று கோபித்துக் கொள்வதைப் பார்க்கிறோம்.

எனவே பாலமுருகன் சந்நிதியில் இதுவரை நடந்த நிகழ்ச்சி களைவிட இந்த இளைஞர் மாநாடே மிகப் பொருத்தமானது.

இந்த இளைஞர் மாநாட்டில் தலைமையேற்பதை நான் தனிப்பெரும் பேறாகக் கருதுகிறேன்.

இன்று இங்கு பேச வந்திருக்கிறவர்கள் மூவர். 'சேக்கிழார் பிள்ளைத் தமிழ்' என்ற தலைப்பில் எனது உழுவலன்பர் பேராசிரியர் திரு. ம. வைத்தியலிங்கம் அவர்களும், இருபதாம் நூற்றாண்டின் 'இளையற்ற சித்தாந்த அறிஞர்கள்' என்ற தலைப்பில் என்னைத் தன் வாரிசு எனப் பாராட்டித் தழுவிக் கொண்ட மறைந்த புலவரேறு ந.ரா.முருகவேள் அவர்களின் புதல்வர் திரு. முருக. இராமலிங்கம் அவர்களும், 'தமிழர் வேதமும், சமயமும்' என்ற தலைப்பில் குடிப்பிறப்புடன், துடிப்பையும் பெற்றுள்ள இளைஞர் முனைவர் திரு. சரவணன் அவர்களும் முத்தான முத்தமிழ் உரை மூன்றைப் பொழிய இருக்கின்றார்கள். இவர்களை நான் அறிமுகப்படுத்தத் தேவையில்லை. இவர்கள் நாடறிந்த நாவலர்கள். கற்றோர் ஏத்த சொற்றமிழால் தலைப்பில் உறுபொருளை உற்ற வகையில் உளங்கொளத் துலங்கச் செய்ய இருக்கிறார்கள்.

அப்புறம் எனக்கு என்ன வேலை என்கிறீர்களா? ஓடுகிற தேருக்கு முதல் இயக்கம் கொடுத்தால் அப்புறம் அவர்கள் ஒட்டிக் கொள்வார்கள். ஒவ்வொரு தலைப்பும் ஒரு தேர் என்று வைத்துக் கொள்வோமானால் ஒவ்வொன்றிற்கும் முதல் இயக்கம் கொடுப்பது என் வேலை. அதைவிட முக்கியமானது ஓடிக் கொண்டிருக்கிற தேரை வேண்டிய இடத்தில் நிலை செய்வது. விட்டால் அவர்கள் பாட்டிற்கு ஓட்டிக் கொண்டு போய்விடக் கூடாதல்லவா? காலத்தில் அதை நிலை செய்ய வேண்டும்! ஓட்டுவதைவிட நிறுத்துவதே கடினமான

வேலை என்பதை நானும் அறிவேன்; நீங்களும் அறிவீர்கள். ஆனால் இங்கே எனக்கு அந்தக் கவலையில்லை. ஏனெனில் பேசுபவர்கள் அனைவரும் அனுபவம் மிக்கவர்கள். நேரமறிந்து, பொறுப்புணர்ந்து எனக்கு ஒத்துழைப்பை நல்குவார்கள் என்ற நம்பிக்கை எனக்கு உண்டு.

இனி, தலைப்புகளுக்கு வருவோம், முதலில் 'சேக்கிழார் பிள்ளைத் தமிழ்', பிள்ளைத் தமிழ் நூல்களிலேயே உயர்ந்தது 'சேக்கிழார் பிள்ளைத் தமிழ்'. இதைப் பாடியருளிய மகாவித்துவான் மீனாட்சி சுந்தரம் பிள்ளைக்கு பிள்ளைத் தமிழ்ப் புலி என்று பெயருண்டு. சங்கத் தமிழின் மங்காப் பாதம் இரண்டான பத்துப் பாட்டையும், எட்டுத் தொகையையும் ஏடு தேடி எடுத்துத் தந்து அச்சுவாகனத்தில் ஏற்றி நடைபயிலச் செய்த நாயகராம் தமிழ்த் தாத்தா உ.வே. சுவாமி நாதையரின் ஆசிரியப் பெருமகனார் கவிசார்வபௌமர் பத்துக் கம்பன் மீனாட்சி சுந்தரம் பிள்ளை அவர்கள்.

ஈடு இணையில்லாத இந்த சேக்கிழார் பிள்ளைத் தமிழ் கிடைத்தற்கு நாம் நன்றி சொல்ல வேண்டிய ஆன்மா ஒன்றுண்டு. அது மீனாட்சி சுந்தரம் பிள்ளை அவர்களின் மாணாக்கரான வன்றொண்டச் செட்டியார். இவர்தான் பிள்ளையவர்களை, ''எத்தனையோ பிள்ளைத் தமிழைப் பாடுகிறீர்கள், சேக்கிழாருக்கு ஒரு பிள்ளைத் தமிழைப் பாடியருள வேண்டும்'' என்று அரித்து வந்தவர்.

பிள்ளை அவர்களே இதில் திருவருட் குறிப்பொன்றைக் கண்டு கூறி மகிழ்வாராம். அதாவது பெரிய புராணத்திற்கு வன்றொண்டர் வாய்மொழியாகிய திருத்தொண்டத் தொகையே காரணமாக இருந்தது; அப்புராணத்தை இயற்றிய சேக்கிழார் பிள்ளைத் தமிழுக்கும் வன்றொண்டர் (செட்டியார்) வாய்மொழியே காரணமாயிற்று என்ன பொருத்தம் பாருங்கள் என்று பிள்ளையவர்கள் அடிக்கடி கூறி மகிழ்வாராம்.

தாம் இயற்றிய பிள்ளைத் தமிழ்நூல்கள் பலவற்றிலும் பிள்ளையவர்களின் மனம் அதிகம் ஈடுபட்டது சேக்கிழார் பிள்ளைத் தமிழில் தானாம். இவரே இதனை மீண்டும் மீண்டும் படிப்பித்துக் கேட்டு இன்புறுவாராம். இந்தப் பிள்ளைத் தமிழை இயற்றிய பின் இதற்கு மேல் ஒரு பிள்ளைத் தமிழை இயற்ற மனம் இல்லை போலும். சுவாமிநாதையர் கூறுகிறார். இந்தப் பிள்ளைத் தமிழே பிள்ளையவர்கள் செய்த இறுதிப் பிள்ளைத் தமிழ் என்று.

ஒரு கை தேர்ந்த சிற்பி தன் மனத்துகந்த காதலியை சிற்பத்தில் வடிக்கும் போது எவ்வாறெல்லாம் தன் கை வண்ணத்தைக் காட்டி அச்சிலையின் எழில் வண்ணத்தைக் கூட்டி வடிப்பானோ அப்படி, பிள்ளையவர்கள் தன் மனத்துகந்த சேக்கிழார் பெருமானுக்குப் பிள்ளைத் தமிழ் பாடும் போது தன் கற்பனைத் திறனை எல்லாம் காட்டி இருக்கிறார் என்று சொல்ல வேண்டும். ஆ! எப்படியெல்லாம் ரசித்து ரசித்து சேக்கிழார் மீது பத்தியைக் கொட்டிக் கொட்டிப் பாடியிருக்கிறார்!

சேக்கிழார் திருவாய் மலர்ந்தருளிய பெரிய புராணத்தினை எழுத்திற்கு எழுத்து ரசித்து அது விரித்த பத்திக் கடலில் திளைத்துத் திளைத்து ஆடி ஆணி முத்துக்களை எடுத்தவர் பிள்ளையவர்கள்.

எப்போதுமே சாதாரணமான நம் போன்றவர்களின் பார்வையே வேறு; கவிஞர்களின் பார்வையே வேறு. நம் போன்றவர்கள் முன்னால் ஒரு வைரக் கல்லைக் கொடுத்தால் அதன் பட்டைகளைக் கொண்டு நம்மால் ஒன்றும் தீர்மானிக்க முடியாது. நமக்கு அது ஒருகல் அவ்வளவு தான். ஆனால் ஒரு கைதேர்ந்த வைரவியாபாரி அதைப் பார்த்தவுடனே அது இத்தனை காரட் உடையது; இத்தனை லட்சம் மதிப்புடையது என்று கூறிவிடுவார். நமக்கென்றால் காரட் என்பது சாப்பிடுகிற ஒரு காய்கறி அவ்வளவுதான். வைர வியாபாரியே அதன் மதிப்பை அறிவார். அதுபோல பிள்ளையவர்களுக்குப் பெரிய புராணத்தில் ஒவ்வொரு பாட்டும் ஒவ்வொரு வைரமாகத் தெரிகிறது.

காப்புச் செய்யுளில் கணபதியைத் துதிப்பது மரபு. தான் செய்கிற சேக்கிழார் பிள்ளைத் தமிழ்க்குக் கணபதி துதி செய்ய முனைகிறார். பிள்ளையவர்கள் அவருடைய மனதில் இப்படி எண்ணங்கள் ஓடுகின்றன. சேக்கிழார் பெரிய புராணத்தைப் பாடியவர்; "தொண்டர் தம் பெருமை சொல்லவும் பெரிதே" - அவ்வையார் முருகனிடம் கூறியது. எனவே பெரிதெல்லாவற்றிற்கும் பெரிதான தொண்டர் புராணத்தைப் பாடிய சேக்கிழாருக்குப் பிள்ளைத் தமிழ் பாடும்போது சின்னப் பிள்ளையார் - ஊர்க் கோடியில் அல்லது சில கட்டிடங்களில் மனையடி சாஸ்திரப்படி நேர்குத்தினால் வரும் ஆபத்தை நீக்க, சின்னப் பிள்ளையாரையா துதிப்பது?

யோசித்துப் பார்க்கிறார்! சேக்கிழார் என்ன செய்திருக்கிறார்?

*எடுக்கும் மாக்கதை இன்தமிழ்ச் செய்யுளாய்*
*நடக்கு மேன்மை நமக்கருள் செய்திடத்*

*தடக்கை ஐந்துடைத் தாழ்செவி நீண்முடிக்*
*கடக் களிற்றைக் கருத்துள் இருத்துலாம்*

அதாவது நாம் இப்போது பாடத் தொடங்கி இருப்பது மாக்கதை. அதாவது மிகப் பெரிய கதை. அது மேன்மையாக நடக்க நமக்கு அருள் செய்ய வேண்டியவர் கணபதி. அதன் பெருமைக்கு ஏற்ப, கணபதியும் பெரியவராய் இருக்க வேண்டும். சின்னப் பிள்ளையார் எல்லாம் சரிப்பட்டு வராது. எனவே, சுவாமி! பிள்ளையாரே! எங்கே, இந்த பெரிய புராணத்தின் பெருமைக்கு ஏற்ப தாய் ஒரு பெரிய உருவம் எடுத்துக் கொண்டு இந்த பெரிய புராண இன்தமிழ்ச் செய்யுள் நடக்க எனக்கு அருள் புரியுங்கள் பார்க்கலாம்! என்று சேக்கிழார் வேண்டுகிறார். உடனே அவர் முன் விநாயக மூர்த்தி தன் உருவத்தைப் பெரிதாக்கிக் கொள்கிறாராம். இப்போது பிள்ளையாருக்கும் பெரிய புராணத்தின் பெருமை விரிவிற்கும் ஒரு ஆரோக்கியமான போட்டி ஏற்படுகிறதாம். பெரிய புராணத்தின் பெருமை விரிய விரிய விநாயகரும் விசுவரூபம் எடுத்துக் கொண்டே போகிறாராம். இதற்கு ஒரு முடிவே இல்லாதபடி பெரிய புராணத்தின் பெருமையும் விரிந்து கொண்டே போக விநாயகரின் உருவமும் நீண்டு கொண்டே போகிறதாம். எனவே, தான் வணங்கும் விநாயகரின் முடி நீள்முடி என்று கூறி, சேக்கிழார் அங்ஙனம் விசுவரூபம் எடுத்துக் கொண்டிருக்கும் விநாயகரைத் துதிக்கிறார்.

ஓ! அது தானா சேக்கிழார் தடக்கை ஐந்துடைத் தாழ்செவி நீண்முடி என்று பாடினார்!

இதன் உட்குறிப்பைப் புரிந்து கொண்ட பிள்ளையவர்கள் சேக்கிழார் பிள்ளைத் தமிழில் தாம்பாடிய கணபதிகாப்பில் சேக்கிழாரை அடியொற்றி ''மாமேவு வான் பிறை'' என்று விநாயகரை விசுவரூபம் எடுக்கப் பாடினார். என்னே அவரது மதிநுட்பம்! அந்தப் பாடலை எல்லாம் அப்புறம் பேராசிரியர் வைத்தியலிங்கம் விவரமாக எடுத்துக் கூறுவார்.

காப்புப் பருவத்தைப் பிள்ளையவர்கள் பாடும்போது கூட அதைத் தனி உத்தியோடு கையாளுகிறார்கள். பொதுவாக பிள்ளைத் தமிழ் பாடும்போது காப்புப் பருவத்தில் பாட்டுடைத் தலைவனைப் பச்சிளங் குழவியாகக் காட்டி அக்குழவியைத் திருமால் காக்க, சத்த மாதர்கள் காக்க, தேவர்கள் காக்க என்றெல்லாம் பாடி, பத்துப் பாட்டை நிறைவு செய்வார்கள். பிள்ளையவர்களுக்கு சேக்கிழாரையாவது, திருமால் வந்து காப்பதாவது என்று தோன்றுகிறது சேக்கிழார் மாலும் அயனும்

தேடியறியாப் பெருமான் திருவடி இன்பத்தில் திளைப்பவர். அப்பதவிகள் உள்ளவர்களை எல்லாம் கடந்து மேனிலை அடைந்தவர். இவரைத் திருமால் காப்பது என்பது அசம்பாவிதமாக முடியும்.

எனவே இவரைப் போலவே ஏற்கனவே மேனிலையடைத்த அறுபான் மும்மை நாயன்மார்களே இவரைக் காக்கப் பொருத்தமானவர்கள். அவர்களது வரலாறுகளை எல்லாம் வரன்முறை வழுவாது இன்தமிழ்ச் செய்யுளால் பாடியதால் சேக்கிழாரைக் காப்பது அறுபான் மும்மை நாயன்மார்களுக்கு ஒரு கடமையும்கூட. இப்படிச் சிந்தித்த பிள்ளையவர்கள் காப்புப் பருவத்தில் திருத்தொண்டத் தொகை வழி அறுபான் மும்மை நாயன்மார்களை நோக்கி, சேக்கிழாரைக் காக்க என்று பாடியருளிய பாங்கு வித்தியாசமானது, என்றும் போற்றத்தக்கது.

பெரிய புராணத்தில் மொத்தம் பாடல்கள் 4286. இவையனைத்தையும் கூர்ந்து நோக்கி ஓர் உண்மையைப் புலப்படுத்துகிறார் பிள்ளையவர்கள். இவ்வளவு விரிவான புராணத்தில் அமங்கல நிகழ்ச்சிகள் ஆங்காங்கே வருவது இயல்பு. ஆனால் அப்படி வரும் சந்தர்ப்பங்களில் கூட, சேக்கிழார் மிகத் திறம்பட அமங்கலச் சொற்களைத் தவிர்த்திருப்பது வேறு எந்த காவியப் புலவரிடமும் காணாத பெரும்பாங்கு! ஒரு நாயனாரை அவருடைய பெருமை பொறாத ஒருவன் கொல்லும்போது கூட அந்நாயனாரை அவன் கொன்றான் என்று கூறாமல் அவன் 'தன் கருத்தே முற்றுவித்தான்' என்பது எவ்வளவு உயர்ந்தது; பெரியவர்கள் எப்போதுமே அமங்கலச் சொற்களை உரைக்க மாட்டார்கள்.

ஒருமுறை ஞானியார் சுவாமிகள் சொற்பொழிவு நடந்து கொண்டிருந்தது. அவர்தம் சொற்பொழிவிற்குக் கூட்டத்தைக் கேட்க வேண்டுமா! திரளான மக்கள் கூட்டம். சொற்பொழிவின் இடையில் ஒருவர் ஞானியார் சுவாமிகளின் காதில் கிசுகிசுத்து ஒரு துயரச் செய்தியைக் கூறினார். அதாவது யாழ்ப்பாணம் ஆறுமுக நாவலரின் மறைவுச் செய்தி அது. உடனே அது மக்களுக்கு அறிவிக்கப்பட வேண்டிய ஆனால் துயரம்மிக்க செய்திதான். இதை ஞானியார் சுவாமிகள் எப்படி அறிவித்தார் தெரியுமா? மக்களே! அறிஞர் போற்றும் யாழ்ப்பாணம் ஆறுமுக நாவலர் மறைந்துவிட்டார்! என்று சொல்லவில்லை. "அன்பர்களே! ஒரு செய்தி வந்துள்ளது. அதாவது அறிஞர் போற்றும் யாழ்ப்பாணம் ஆறுமுக நாவலர் இருந்தார்

ஆயினார்'' என்று அறிவித்தாராம். இறந்தார் என்று கூறாது இருந்தார் ஆயினார் என்பது எவ்வளவு நல்ல மங்கலக் குறிப்பு!

இதை ஞானியார் எங்கிருந்து பெற்றார்? சேக்கிழாரிடமிருந்து. சேக்கிழார் இவ்வாறு அமங்கலம் களைந்து கூறியவர் என்பதை முதலில் எடுத்துக் கூறியவர் யார்? மகாவித்துவான் மீனாட்சி சுந்தரம்பிள்ளை அவர்கள் தான்.

*''தோட்டி அமைய அமங்கலமாம்*
*சொற்கள் புணரா தறக்களைந்து*
*வெல்லுந் தகைய முரண்காட்டி*
*விலக்கு வினக விதிதழுவி''*

என்பது முத்தப்பருவத்தில் நெஞ்சைக் கொள்ளை கொள்ளும் பிள்ளையவர்களின் வாக்கு.

இப்படி நெஞ்சைக் கொள்ளை கொள்ளும் வாக்கு சேக்கிழார் பிள்ளைத் தமிழில் எத்தனையோ! 'பத்திச் சுவை நனிசொட்டச் சொட்ட', 'நெஞ்சம் கனியக் கனியக் கணீர் வாரக் கவிபாடியவற்றை உண்ணாடி புகுந்து ஊனும் உள்ளமும் தழைக்கப் பண்ணாடிப் பரவும் சைவப் பயிர் தழையத் தழையும் புயலான' பேராசிரியர் வைத்தியலிங்கம் இனி எடுத்துக் கூற வழி விட்டமைகிறேன்.

இதோ! அடுத்துவருபவர், திரு. முருக. இராமலிங்கம் அவர்கள். எடுத்த சொல்லுடன் அடுக்கிய கருத்துக்களை மிடுக்குடன் கூறும் விற்பன்னரான இளைஞர் இவர். ஆங்கிலப் பேராசிரியரான இவர் தொழிலுக்கு ஆங்கிலம், எழிலுக்கு இயற்றமிழ் என்ற கொள்கை உடையவர். சைவத் தமிழ் இலக்கியத்தில் தாம் சார்ந்த புலவர் பரம்பரைச் சூழலால் ஆழங்கால்பட்டவர். இவர் நமக்குக் கடந்து சென்ற 20ஆம் நூற்றாண்டின் சித்தாந்த அறிஞர்களை நினைவு கூர வருகிறார்.

கடந்த இருபதாம் நூற்றாண்டு தொடங்குகையிலேயே 1906 ஆம் ஆண்டில் வாரியாரைப் பிறப்பித்துத் தொடங்கியது. எமது முருக. இராமலிங்கம்இருபதாம் நூற்றாண்டில் பிறந்தவர்களை மட்டும் எடுத்துக் கொள்கிறாரா அல்லது 19ஆம் நூற்றாண்டில் பிறந்து இருபதாம் நூற்றாண்டில் வாழ்ந்த பெரியார்களையும் எடுத்துக் கொள்கிறாரா என்பதை அவருக்குள்ள சுதந்திரமாக விட்டுவிடுகிறேன். பேச்சாளரின் சுதந்திரத்தில் தலையிடுவது தர்மமாகாது.

ஆனால் ஒன்று மட்டும் நிச்சயம்! இருபதாம் நூற்றாண்டு பலதுறைகளில், பலகளங்களில் பல அறிஞர்களைக் கண்ட பெருமிதம் மிக்க நூற்றாண்டு எதிர்வரும் நூற்றாண்டின் விரிவில் நமக்கு என்ன காத்திருக்கிறது என்பதை அறியாத நிலையில் நடந்து சென்ற நூற்றாண்டைத் திரும்பிப் பார்த்துப் பரவசம டைவதே ஒரு சுகம். அது சுகம் மட்டுமல்ல, வருவதைச் சீர்திருத்தி யமைத்துக் கொள்ளக் கிடைத்த ஓர் உரைகல் என்று கூடச் சொல்லலாம்.

சிங்கம் எப்போதுமே இப்படித்தான் செய்யுமாம் தான் நடந்து வந்த பாதையை நின்று, வளைந்து, திரும்பிப் பார்த்து சிலிர்த்துக் கொள்ளுமாம். அறிஞர்கள் இதனை அரிமாநோக்கு என்பார்கள்.

யாழ்ப்பாணம் ஆறுமுக நாவலர், சூளை சோமசுந்தர நாயக்கர், சபாபதி நாவலர், ஞானியார் சுவாமிகள், மறைமலையடிகள், திரு.வி.க. போன்ற இருபதாம் நூற்றாண்டின் தொடக்க கால அறிஞர் முதல் அதன் பிற்பகுதிக்கால அறிஞர்களான காஞ்சி வஜ்ஜிரவேலு ஐயா, அருணை வடிவேல் ஐயா, வாரியார் சுவாமிகள், புவலரேறு முருகவேள், போன்ற அறிஞர் வரை 20ஆம் நூற்றாண்டின் சித்தாந்த அறிஞர்களின் ஒளிவீச்சு அமைகிறது.

இவர்களின் ஒவ்வொருவரும் ஒவ்வொரு பணியைக் கையாண்டவர்கள். யாழ்ப்பாணம் ஆறுமுக நாவலர் முதல் தமிழ் மொழி உரைநடையாளர். உரைநடை நூல்களைத் தாம் எழுதியதோடு அவற்றையும் சைவ இலக்கியங்களையும் பதிப்பித்த பெருமை உடையவர். சூளை சோமசுந்தர நாயக்கர் சித்தாந்தக் கருத்தை நிலை நாட்டிட, பலமுறை வைணவர்களை நீதிமன்றத்திற்கு முன் நிறுத்தி வழக்கில் வென்றவர். சபாபதி நாவலர் ஆறுமுக நாவலரின் அடித்தொண்டராய் அற்புதமான பேச்சாற்றலால் சைவத்தை வளர்த்தவர். ஞானியார் சுவாமிகளைப் பற்றி இந்த மன்றம் நன்கு அறியும். இம்மன்றத்தைத் தோற்றுவித்து அந்தக் காலத்திலேயே இதற்கு வெளியில் இருந்து ஆதரவு செய்வதைத் தொடக்கியவர். மறைமலை அடிகள் சைவத்துடன் தனித்தமிழை வளர்த்தவர். திரு.வி.க தென்றலாய் வீசி சைவப் புயலாய் சமரசப் புயலாய் மாறியவர்.

சைவ சித்தாந்தத்தின் நுணுக்கங்களை இலக்கணத் தமிழில் உயர்ந்த தரத்தில் பரப்பியவர்கள் வஜ்ஜிரவேலு ஐயா, அருணை வடிவேலு ஐயா, புலவரேறு ந.ரா. முருகவேள் ஐயா ஆகியோர்கள்.

இவர்கள் மூவரோடும் தொடர்புடையவனாய் இருந்ததை எனது பேறாகக் கருதுகிறேன். குறிப்பாக அருணை வேடிவேல் ஐயா அவர்கட்கு விருது கொடுத்துப் பாராட்டும் பேறு பெற்றவன். அதனினும் மேலாக, புலவரேறு திரு. ந. ரா. முருகவேள் ஐயா அவர்களோடு நான் கொண்டிருந்தது மிகநெருங்கிய தொடர்பு. நான் அவரை மதித்தது அதிகமா அல்லது அவர் என் மீது பொழிந்த அன்பு அதிகமா என்பது பட்டி மன்றம் வைத்தாலும் தீர்வு காண முடியாத ஒன்று. அவர் என்மீது வைத்த பாசத்தால் பாலசுப்பிரமணிய பக்த ஜன சபையின் 81ஆம் ஆண்டு விழாவில் என்னைத் தன் வாரிசு என்று கூறிய தண்ணளியை நான் என்றும் மறவேன்.

அடுத்து வாரியார் சுவாமிகளைப் பற்றி இந்த நானிலம் நன்கறியும். இவரின் உறவினராகப் பிறந்த எனது இப்பிறவி என்னை ஈடேற்றும் பிறவி என்றே கூற வேண்டும்.

*'பல்லூழி காலம் பயின்றரனை அர்ச்சித்தால்*
*நல்லூழ்தான் சற்றே நகும்'*

என்பது ஆன்றோர் வாக்கு. அதுபோல பல ஊழிக்காலம் ஈட்டிய நல்வினையால் வாரியார் சுவாமிகளின் உறவில் பிறவி வாய்த்தது. சம்பந்தக் குழந்தை வரப்பாலுண்டு அரன் பாலுற்று முனை நான் ஏத்த அருள் செய்தான்' என்று பாடியது. இங்கே எனக்கு ஒக்கும்.

சுவாமிகள் எனக்கு குருநாதமும் கூட. எனக்கு சமயதீக்கையும் பக்குவம் பார்த்து விசேட தீக்கையும் அளித்த தவர்.

இவர்களைப் போல வெல்லும் சொல் உடைய பெரியாரை இந்த உலகம் இதற்கு முன்னும் பார்த்ததில்லை; இனியும் பார்ப்பது சந்தேகம்.

ஞானேந்திரியங்கள் ஐந்தையும், கன்மேந்திரியம் ஐந்தையும் விவரித்துக் கொண்டே வருவார். ஞானேந்திரியம் ஐந்து ; 1. மெய் 2. வாய் 3. கண் 4. மூக்கு 5. காது. கன்மேந்திரியம் ஐந்து; 1. வாக்கு 2. பாதம் 3. பாணி 4. கருவாய் 5. எருவாய்.

இப்படிச் சொல்லிக் கொண்டே போவார். இதிலே ஒரு உறுப்பு ஞானேந்திரியத்திலும் வரும்; கன்மேந்திரியத்திலும் வரும். அது நாக்கு என்பார். நாக்கில் சுவையரும்புகள் சுவையை அறிந்து கூறும்போது அது ஞானேந்திரியம். நாக்கு அசைவால் பேச உதவும்போது கன்மேந்திரியம். ஒரு சில பேர் இரண்டு (அ) மூன்று சபைகளில் செயலாளராய் இருப்பார். அதுபோல நாக்கு

ஞானேந்திரியத்தில் வரும் கன்மேந்திரியத்திலும் வரும் என்பார். சிறு குழந்தை கூட, புரிந்து கொள்ளும். இதுபோல் 'எண் பொருளவாகச் செலச் சொல்லும் ஆற்றல்' இவருக்கே உரியது.

ஒருமுறை தூத்துக்குடி சைவ சித்தாந்த சபையில் வாரியார் சுவாமிகள் பேசிக் கொண்டிருந்தார்கள். தாயுமானவரின் பாடல் வரியில் பலரும் மேற்கோள் காட்டும் ஒரு வரியை ஒரு புலவர் கூறினார். அதாவது "என்று நீ அன்று நான் உன்னடிமை அல்லவோ" என்று வரி அது அதாவது இறைவன் என்றைக்கு உள்ளானோ அன்றே உயிர்களும் உண்டு என்பது அதன் பொருள். காரணம் பதி, பசு, பாசம் ஆகிய மூன்றும் அனாதி. ஆகவே இறைவா நீ எனக்கு மூத்தவன் என்று கூற இயலாது. காரணம் நீ எப்போது உண்டோ அப்போதே நானும் உண்டு. இப்படிப் பொருளைச் சொல்லிக் கொண்டு சென்றார் அந்தப் புலவர். வாரியார் சுவாமிகள் பேசும்போது, "அதை ஏற்கலாம்; ஆனால் அது இரட்டுற மொழிந்தவரி. அதாவது என்றைக்கு நீயோ அன்றைக்கே நான் என்பதைப் பொருளாகக் கொள்ளும்போது "என்று நீ அன்று நான்" என்றும் அதே நேரத்தில் நான் உன்னடிமை என்றும் கொள்ள வேண்டும். சிலர் முத்தியல் இறைவனோடு ஆன்மா சிவமாகி விடுகிறது என்பர். இது சித்தாந்தத்திற்கு ஏலாது. எனவே உலக உற்பவத்திற்கு முன்னும் வீடுபேறு பெற்ற பின்னும் என "என்றும்நீ அன்று நான்; உன்னடிமை" என்பது தோன்ற, தாயுமானவர் பாடியதை நாம் கூர்ந்து கவனிக்க வேண்டும்" என்றார். அரங்கில் எழுந்த கைதட்டல் அடங்க நெடுநேரமாயிற்று.

இப்படி எத்தனையோ சொல்லிக் கொண்டே போகலாம். வாரியார் சுவாமிகளைப் பற்றி மட்டுமல்ல; இங்கு முன்கூறிய எல்லா அறிஞர் பெருமக்களைப் பற்றிய சிறப்பையும் தனித்தனியே எடுத்துக் கூறத் தொடங்கினால் அதுவே தனி நூலாகும் அளவிற்குவிரியும்.

வரலாறுகள் படிக்கப்பட வேண்டும். காரணம் வரலாறுகள் படைக்கப்பட வேண்டும்.

வரலாறு படைத்த குடும்பத்திலிருந்து சித்தாந்த அறிஞர்களின் வரலாறுகளை வடிக்க வருகிறார் முருக இராமலிங்கம். இனி அவர் தொடரட்டும்.

அடுத்து நம்முன்னே நிற்பது "தமிழர் சமயமும், தமிழர் வேதமும்" என்ற தலைப்பு. இது நல்ல முனைப்போடு பேசவேண்டிய தலைப்பு. எனவேதான் முனைவர் சா. சரவணன் அவர்களை அமர்த்தி இருக்கிறது இப்பெருமன்றம் என்று நினைக்கின்றேன்.

''தமிழன் என்றொரு இனம் உண்டு; தனியே அவற்கொரு குணம் உண்டு'' என்று பாடினார் ஒரு புலவர். இந்த உலகத்திலேயே புரிந்து கொள்ள முடியாத ஓர் இனம் உண்டு என்றால் அது தமிழினம்தான். இவனுக்கு எல்லாப் பெருமையும் உண்டு; ஆனால் இவன் உலகையெல்லாம் இரந்து நிற்பான் சிவபெருமான் போல.

தமிழும் சிவமும் ஒன்று. சிவபெருமான் அம்மையாதி அப்பன் பாதியாக உடையவன். வேடிக்கை என்ன வென்றால், தனது பாதியில் ஒன்றாக அம்மையாகிய காட்சியம்மை 32 அறங்களைச் செய்து கொண்டிருக்க, மற்றொரு பாதியான சிவன் திருவோடு எடுத்துக் கொண்டு பிச்சை ஏற்கப்புறப்படுகிறான். இப்படியேதான் தமிழனும்; தன்னிடம் எல்லாக் கலைகளின் களஞ்சியங்களும் கிடக்க, இவன் பிறரிடம் ஏதோ பொக்கிஷம் உள்ளது போல அவர்களைக் கையேந்திக் கிடப்பான்.

கந்த புராணம் ''தன் பெருமை தானறியாத்தன்மையன்காண்'' என்று முருகனை - முத்தமிழ்க் கடவுளை - கூறும். அதுபோல தமிழன் பிறரைக் கையேந்திக் கிடப்பதும் தன்பெருமை தானறியாத் தன்மையால்தான். இதனால் தான் போலும் இவன் எப்போதும் தலையைத் தாழ்த்தியே வாழ்கிறான்.

''இதைக் கண்ட ஒரு புலவர், ''தமிழன் என்று சொல்லடா, தலைநிமிர்ந்து நில்லடா'' என்று பாடினான். ஏனெனில் இவன் மொழியால், வரலாற்றால், பெருமையால் தான் ஏதோ பிறர்க்குத் தாழ்ந்தவன் என்பது போல தலையைத் தாழ்த்தியே நிற்கிறான். அதனால் தான் அந்தப் புலவர் தலையை நிமிர்த்திவிட்டார் என்று கூற வேண்டும். அந்தப் புலவர் மட்டுமல்ல; நீண்ட நெடிய தமிழின வரலாற்றில் பல ஆன்றோர்கள் தத்தம்மால் இயன்ற மட்டும் நிமிர்த்திவிட்டுக் கொண்டே தான் இருந்தார்கள் என்று அறிகிறோம். என்ன காரணமே தெரியவில்லை, அவர்கள் தலையை நிமிர்த்திவிட்டு நகர்ந்த பின் மீண்டும் இவன் தலையைத் தொங்கப் போட்டுக் கொள்கிறான்.

கடவுளும் விடுவதாயில்லை; இவன் நமக்கினிய நற்றமிழைத் தாய்மொழியாக உடையவன். இவன் தலை தொங்கக் கூடாது என்று ஒவ்வொரு நூற்றாண்டிற்கும் ஓரிருவராக அருளாளர்களை அனுப்பி இவன் தலையை நிமிர்த்திக் கொண்டு தான் வருகிறார். ஆனால் அவருக்கே இதில் சலிப்பேற்பட்டாலும் ஆச்சரியம் இல்லை.

*"மாதா உடல் சலித்தாள் வல்லினையேன் கால்கவித்தேன்*
*வேதாவும் கைசலித்து விட்டானே"*

என்று பட்டினத்தடிகள் பாடியதுபோல் கடவுள் எப்போது இதில் சலித்துவிடுவானோ என்று நமக்கு அச்சம் ஏற்படுகிறது.

ஏர் இந்தியா விமானத்தில் சென்று கொண்டிருந்தபோது அதில் ஏற்பட்ட கோளாற்றினால் இடமல்லாத இடத்தில் தரை இறக்கிப் பழுதுபார்த்துக் கொண்டிருந்தார்களாம். அதில் பயணம் செய்த பயணிகள் கும்பல் கும்பலாக அமர்ந்து ஆபத்தையும், ஆபத்தில் தப்பியதையும், அடுத்து நடக்கப் போவதையும் நவரச உணர்வுகளில் பேசிக் கொண்டிருந்தனராம். விமானிகளில் ஒருவர் ஆங்கே சுற்றி வந்த போது அவரவர்கள் பேசிக் கொண்டிருந்த மொழிகளை உரிய ஒருவரிடம் விசாரித்துக் கொண்டு வந்தாராம். கன்னடத்திலிருந்து வந்தவர்கள் தமக்குள் கன்னடத்தில் பேசிக் கொண்டிருந்தார்கள், இவர்கள் கன்னடியர் என்று தெரிந்தது. தெலுங்கு தேசத்திலிருந்து வந்தவர்கள் தெலுங்கில் பேசிக் கொண்டிருந்தார்கள்; இவர்கள் ஆந்திரர்கள் என்பது தெரிந்தது. இப்படி ஒவ்வொருவராக பார்த்துக் கொண்டே வந்த போது கடைசியில் மூவர் ஆங்கிலத்தில் பேசிக் கொண்டு இருந்தார்களாம். "தம் தாய்மொழியில் பேசிக் கொள்ளாமல் ஆங்கிலத்திலே பேசிக் கொண்டிருக்கிறார்களே, இவர்கள் யார்?" என்று கேட்டாராம். இவர்கள் தமிழர்கள் என்று பதில் வந்ததாம். என்ன ஒரு வெட்கக்கேடு? தமக்குள் கூடவா தமிழைப் பேசத் தயக்கம்? என்ன இது ஒரு மயக்கம்?

நான் அண்மையில் ஒரு ஜெர்மன் அறிஞரைச் சந்தித்தேன். தமிழில் திருமுறைத் திருமணத்தை அடியேன் செய்வதைக் கண்டு படம்பிடித்துக் கொண்டு ஜெர்மன் நாட்டில் அதைப் பலருக்கும் பல சபைகளிலும் போட்டுக் காட்டிக் கொண்டிருக்கிறார். அவர் பெயர் லீமேன். அவர் இடல்பர்க் பல்கலைக் கழகத்தில் தமிழ்த்துறைத் தலைவராம். அவர் என்னிடம் பேசிக் கொண்டிருந்தபோது எதையும் மிகச் சுருக்கமாகப் பல பொருள்களின் விரிவையெல்லாம் அடக்கிக் கூற உலகமொழிகள் அனைத்திலும் தமிழே தலைசிறந்தது என்றார். கேட்டுப் பூரித்துப் போனேன். நம் பெருமையைப் பிற நாட்டார் சொன்னால் தான் நாம் ஏற்கிறோம்.

இது இன்று நேற்று ஏற்பட்டதல்ல; வரலாற்றில் வராத காலம் முதல் இன்று வரை இதே தொல்லைதான். வேறு பல இனத்தாரும் அவர்தம் கலாச்சாரமும் நம்மிடம் கலக்கும்போது பயன்பெறுபவர்கள் அவர்கள்; பெரும்பாலும் பயன் இழப்பவர்கள் நாம்.

ஒருமுறை வாரியார் சுவாமிகள் ஒரு கூட்டத்தில் பேசிக் கொண்டிருந்தார்கள். கட்டணம் செலுத்தி வந்து கேட்ட கூட்டம் அது. அங்கே தாமதமாக வந்தார் மறைந்த சிலம்புச் செல்வர் ம.பொ.சி. முன் வரிசையில் இடமே இல்லை. தயங்கி நின்று கொண்டிருந்தார் ம.பொ.சி. உடனே சுவாமிகள் பெரியவர்களைக் கண்டால் எழுந்து அவர்களை அமரச் செய்வது தமிழர் பண்பாடு என்றார். உடனே ஒருவர் எழுந்து ம.பொ.சிக்கு இடம் கொடுக்க அவர் அமர்ந்தார். சுவாமிகள் உடனே இப்படி ''வந்தாரையெல்லாம் வரவேற்றுத் தாழ்ந்து போனது தமிழகம்'' என்று சொல்ல ம.பொ.சி. உள்பட சிரிக்க, சிரிப்பை அடக்க நெடுநேரமாயிற்று.

இங்கே, சுவாமிகள் ''வந்தாரையெல்லாம் வரவேற்றுத் தாழ்ந்து போனது தமிழகம்'' என்று கூறியது எவ்வளவு பெரிய அடிப்படையான வரலாற்று உண்மை?

நமக்கென ஒரு சமயம் உள்ளது; நமக்கெனக் காலத்தால் அழியாத மிகப்பெரிய நெறி உள்ளது. நமக்கென ஒரு வேதம் உள்ளது. ஆனால் இதையெல்லாம் அறியாதவர்களாய் இருக்கிறோம். இன்னும் சொல்லப் போனால், வந்தாரை வரவேற்றுத் தோளில் ஏற்றிக் கொண்டோமே, அவர்கள் நமது சமயத்தையும் நமது வேதத்தையும் மறைத்து விட்டார்கள். அவர்களது சமயமும் வேதமும் நமது என்று ஏற்றுக் கொள்ளச் செய்ய அதில் நாம் பழகி மாறி நம்முடையதற்குத் திரும்ப மறக்கிறோம். இதை வேடிக்கை என்பதா? வேதனை என்பதா?

முஸ்லீம் சகோதரனுக்கு வேதம் குர்ரான்; கிறிஸ்தவ சகோதரனுக்கு வேதம் பைபிள்; புத்த சகோதரனுக்கு வேதம் பிடகம். இப்படி அவரவர்களுக்கு ஒரு வேதம் இருக்க நமக்கு மட்டும் வேதம் ஆரிய மொழியில் வேறினத்து வேதமாய் இருப்பது எப்படி? இது எப்படி வந்தது என்று யோசிக்க வேண்டாமா?

உயிர்களைத் தாயுமானவர் ''ஆராயும் அறிவுநீ'' என்பார். நாம் ஆராய வேண்டாமா? சொல்வார் சொல்வதை யெல்லாம் அப்படியே ஏற்றுக் கொள்ளும் தன்மையாளரை மந்தபுத்திமாந்தர் என்று சொல்லாமல் வேறென்ன சொல்ல?

''தன்னையறியாமல் தானே கெடுகின்றான்'' என்று திருமந்திர வாக்கு தமிழனுக்குத்தான் மிகச் சரியாகப் பொருந்துகிறது.

வேதம் கடவுளைப் பற்றியது; கடவுளாகிய சிவம் தமிழுக்குச் சங்கம் கண்டது.

*''கண்ணுதற் கடவுளும் கழகமோ டமர்ந்து*
*பண்ணுறத் தெரிந்த இப்பசுந்தமிழ்''*

என்பது பரஞ்சோதியார் வாக்கு.

அருளாளர்கள் தமிழால் பாடி அற்புதங்களை ஆற்றி இருக்கிறார்கள்.

இறையனுபவம் பெற்ற ஞானியாகிய வள்ளலார் ''தமிழ் ஒன்றே அதிகலபமாக சிவானுபூதியை அளிக்கவல்லது' என்று அனுபவித்துக் கூறுகிறார். அந்த அனுபவத்தின் வளர்ச்சியே தமிழால் அமைந்தது என்று செந்தமிழின் வளர்க்கின்றாய்; சிற்சபையில் நடிக்கின்றாய்'' என்று பாடுகின்றார்.

சமயத்திற்கு அடிப்படை கடவுளும், அருளாளர்களும், அருளாளர்கள் என்றோ அனுபவித்துக் கூறுவது ஒருபுறம் இருக்க அது இன்று நடைமுறையில் உள்ளதா என்று ஒத்திட்டுப் பார்க்க வேண்டும். அந்த வகையில் கடவுளும், அக்கால அருளாளர்களும், அண்மைக்கால ஞானியும் தமிழையே போற்றிப் பேசுகிறார்கள்; பேணுகிறார்கள் என்று பார்த்தோம்.

அடுக்கடுக்காக சான்றுகள் காட்டினாலும் பெரும்பாலான தமிழர்கள் தமதல்லாத வேதத்தையும், சமயத்தையும் உடும்புப் பிடியாகப் பற்றிக் கொண்டு 'மனந்திருத்தத் தயங்குவதை என்னென்று சொல்ல? அப்பர் சுவாமிக்கே இதில் அலுப்பு ஏற்பட்டு விடுகிறது.

*''குறிகளும் அடையாளமும் கோயிலும்*
*நெறிகளும் அவர்நின்றதோர் நேர்மையும்*
*அறிய ஆயிரம் ஆரணம் ஓதினும்*
*பொறியிலீர் மனம் என்கொல் புகாததே''*

என்று பாடுகிறார். காந்தம் தவழும் அப்பருக்கே சலிப்பு வருமானால் நம் போன்றவர் நிலையை எப்படிச் சொல்வது?

நான் 1999ஆம் ஆண்டு மலேசியாவில் ஒரு குடமுழுக்கினைத் தமிழ் மந்திரங்களால் ஆற்றச் சென்றேன். அந்தக் கும்பாபிஷேகம் உள்பட இதுவரை அடியேன் 1098 குடமுழுக்கினைத் தமிழ்மறையால் ஆற்றும் பேறு பெற்றவன். அங்கே குடமுழுக்கு முடிந்தபின் நிறைவு விழா நடந்தது. அந்தக் கோயில் வளாகம் 13 கிரவுண்டு பரப்புடையது. அதை மலேசிய அரசாங்கம் கோயில் கட்டக் கொடுத்தது. நிறைவு விழாவில் மலேசிய அரசின் அமைச்சர் ஒருவர் பேசினார். அவர்

பேசும்போது ஒரு கருத்தைச் சொன்னார். அவர் சீனர்; மலேசிய அரசோ முஸ்லீம் அரசு. இந்த நிலையில் தமிழர் வழிபட கோயிலுக்கென்று இந்த நிலத்தை ஒதுக்க அனுமதி அளித்தது ஏன் என்று அவர் பேசும்போது விளக்கினார்.

''பொதுவாக, சீனர்களாகிய நாங்கள் எங்கள் வழிபாட்டுத் தலத்தில் எங்கள் தாய் மொழியாக சீன மொழியிலேயே வழிபடுகிறோம். முஸ்லீம் மக்கள் அவர்கள் வழிபாட்டுத் தலத்தில் அவர்களுக்கு உரிய அரபு (அ) உருது மொழியில்தான் வழிபடுகிறார்கள். ஆனால் நீண்டநாட்களாக எனக்குப் புரியாத ஒன்று என்ன என்றால் இந்தத் தமிழர்கள் மட்டும் தம் கோயில்களில் தம் தாய்மொழியை விட்டு அவர்களுக்கப் புரியாத வேறு ஒரு மொழியிலே ஏன் வணங்குகிறார்கள் என்பதுதான். இங்கே அதற்கு மாறாக தமிழர் கட்டிய கோயிலில் கும்பாபிஷேகம் அவர்கள் தாய்மொழியான தமிழில் நடைபெறும், வழிபாடுகள் தமிழில் நடைபெறும் என்று அனுமதி விண்ணப்பத்தை ஆராய்ந்தபோது அறிந்ததால் எந்தவித மறுப்புமின்றி உடனே இதற்கு அனுமதி வழங்கிவிட்டேன்'' என்றார்.

கைதட்டல் நெடுநேரம் ஓயவில்லை. ஆனால் இங்குள்ள தமிழன் தமிழ்நாட்டுக் கோயில்களில் தமிழில் வழிபாடு செய்ய வேண்டும் என்றால் கையைப் பிசைகிறான்.

நல்லவேளை! இந்த பாலமுருகன் திருக்கோயிலில் வழிபாடுகள் அனைத்தும் தமிழிலேயே நடைபெறுகின்றன. இதற்காகப் பால முருகனடிமை அடிகட்கு தமிழ்ச்சான்றோர்கள் ஏழேழ் பிறவிக்கும் கடமைப்பட்டவர்கள்.

இந்த இடத்தில் தமிழர் சமயமும், தமிழர் வேதமும் என்பது பற்றிச் சிந்திப்பது மிகவும் பொருத்தம். திரு. சா. சரவணன் மிகத் தெளிவாகவும் சிறப்பாகவும் தன்கடமையை ஆற்றுவார் என்ற நம்பிக்கை எனக்கு உண்டு. இதோ! அவர் தொடர்கிறார்.

முடிப்புரை : நம் சைவ இளைஞர் மாநாடு இப்போது தன் நிறைவுக்கட்டத்தை எய்திக் கொண்டிருக்கிறது. சேக்கிழார் பிள்ளைத் தமிழ் என்ற தலைப்பில் நமது முன்னோர் சிறப்பைப் பார்த்தோம். அதன்பின் இருபதாம் நூற்றாண்டின் சித்தாந்த அறிஞர்களின் சிறப்பைக் கேட்டோம். இவை இரண்டும் ''சென்ற காலத்தில் பழுதிலாத்திறம்' அடுத்து ''தமிழர் சமயமும், தமிழர் வேதமும்'' என்ற தலைப்பில் ''இனி எதிர்காலத்தில் சிறப்பு'' எப்படி அமையவேண்டும் என்று பார்த்து அமைந்துள்ளோம். இதற்கெல்லாம் காரணம் நாம்

‘இன்று இங்கு எழுந்தருளப் பெற்ற பேறே’ என்று சொல்லி ‘மேன்மை கொள்சைவநீதி விளங்குக உலகமெல்லாம்’’ என்று இந்த ;ண்ட நெடிய சைவத்தமிழ் நெறியை உலகெங்கணும் பரப்ப, ுணிவோமாக என்று வேண்டி நிறைவு செய்கிறேன். வணக்கம்!

வாழ்க தமிழ் ! வளர்க சைவம்!

## வாரியார் அடிப்பொடி, சித்தாந்த ரத்தினம்

# செ. வே. சதாநந்தன்

(96வது ஆண்டு விழா - பெண்ணாகடம்)

மாநாட்டு வரவேற்புக்குழுத் தலைவரை உள்ளிட்ட அனைத்து உறுப்பினர்களே! முன்னிலை வகிக்கும் பெரியோர்களே! பெண்ணாகடத்துச் சான்றோர்களே! பெருமன்ற ஞானாசிரியர் சித்தாந்த சரபம் அவர்களே! சைவ சித்தாந்தப் பெருமன்ற உறுப்பினர்களே! சிவநேயச் செல்வர்களே! தாய்மார்களே! உங்கள் அனைவரின் திருவடிகளை மனம், மெய், மொழிகளால் வணங்கி அடியேன் தலைமையுரையைத் தொடங்குகிறேன்.

இம்மாநாட்டை வரவேற்றும் ஆதரித்தும் நடத்தித் தருவதற்குச் சம்மதித்த பெண்ணாகடத்துச் சான்றோர்கள், வரவேற்புக் குழுவினர் ஆகிய அனைவரையும் சைவ சித்தாந்தப் பெருமன்றம் பாராட்டிப் போற்றுகின்றது. திருக்கயிலாய பரம்பரை, தருமை ஆதீனம் 26வது குருமகா சந்நிதானம் சுவாமிகள், திருவாவடுதுறை ஆதீனம் இளைய சந்நிதானம் சுவாமிகள், விருத்தாசலம் குமார தேவர் திருமடம் குருமகா சந்நிதானம் சுவாமிகள் ஆகிய மூவரும் திருவருளார் மும்மூர்த்திகளாக மாநாட்டிற்கு எழுந்தருளுவதால் மாநாடு சீரும், சிறப்பும் அடைகிறது.

பழமையும், புனிதமும் இணைந்து பெண்ணாகடம் என்னும் கடந்தைத் திருத்தலத்தில் முதல் முறையாக 1956ஆம் வருடத்திலும், இரண்டாம் முறையாக இவ்வருடத்திலும் பெருமன்ற ஆண்டு விழா மாநாடு நடைபெறுவது "சுடர்க் கொழுந்து நாதர்" திருவருள் பாலிப்பேயாகும். "தில்லை மூவாயிரம், கடந்தை ஆறாயிரம்" என்பது பழமொழி. சிதம்பரம் 3000 தீட்சிதர்களைக் கொண்டதென்றும், கடந்தை 6000 அந்தணர்களைக் கொண்டது என்றும் கருதப்பட்டுள்ளது. பெண்ணாகடத்தலம் பற்றிய சிறந்த ஆராய்ச்சிக் கட்டுரையைச் சித்தாந்த சரபமம் பெருமன்ற ஞானசிரியர் முனைவர் வை. இரத்தினசபாபதி அவர்கள் இம்மாதச் சைவ சித்தாந்தப்

பெருமன்றத்தின் சித்தாந்தம் இதழில் எழுதியுள்ளதைப் பலரும் படித்திருப்பீர்கள் என நினைக்கிறேன்.

*"ஞான நூல்தனை ஓதல், ஓதுவித்தல்*
*நற்பொருளைக் கேட்பித்தல், தான் கேட்டல் நன்றா*
*ஈனமிலாப் பொருள் அதனைச் சிந்தித்தல் ஐந்தும்*
*இறைவன் அடி அடைவிக்கும் எழில் ஞான பூசை"*

என்று சிவஞான சித்தியார் 275 ஆம் பாடல் கூறும்.

இத்திருத்தலத்தில் இன்றும், நாளையும் நடைபெறும் எழில் ஞான பூசையில் நாம் அனைவரும் கலந்து கொள்வதை "இன்னம்பர் ஈசர்" கீழ்க்கணக்கில் எழுதுவார் என்றே எண்ணுகிறேன்.

*"தொழுது, தூமலர் தூவித் துதித்து நின்று*
*அழுது காமுற்று அரற்றுகின்றாரையும்*
*பொழுது போக்கிப் புறக்கணிப்பாரையும்*
*எழுதும் கீழ்க்கணக்கு இன்னம்பர் ஈசனே"*

என்பது திருநாவுக்கரசு சுவாமிகள் திருக்குறுந்தொகை.

சிவ சின்னங்களைத் தாங்கி இங்கே குழுமியுள்ள சான்றோர்களின் தரிசனம் சிவதரிசனமாகவே காட்சியளிக்கிறது.

"மாலற நேயம், மலிந்தவர் வேடமும், ஆலயந்தானும், அரனெனத் தொழுமே" என்ற சிவஞான போதம் இங்கே நினைவுக் குரியதாகும்.

அடியார்கள் நடுவுள் இருக்க வேண்டுமென்று மாணிக்கவாசகப் பெருமான் வேண்டியதும் நினைவுக்குரியதாகும்.

*"உடையாள் உன்றன் நடுஇருக்கும்*
*உடையாள் நடுவுள் நீ இருத்தி*
*அடியேன் நடுவுள் இருவீரும்*
*இருப்பதானால் அடியேன் உன்*
*அடியார் நடுவுள் இருக்கும் அருளைப் புரியாய்"*

என்பது திருவாசகப்பாடல்

## பெருமன்றத் தோற்றத்தின் அடிப்படை

சைவ சித்தாந்தப் பெருமன்றம் "சைவ சித்தாந்த மகா சமாஜம்" என்ற பெயரில் 1905 ஆம் ஆண்டு திருப்பாதிரிப் புலியூர் அருள்மிகு ஞானியார் சுவாமிகள் அவர்கள் தவத்திரு மறைமலை அடிகள் துணையோடு நிறுவினார்கள் என்பது பலரும் அறிந்ததே.

அச்சமயத்தில் சைவ சமயத்தையும், சைவ சமயத் தோத்திரங்களையும் பரப்புவதற்கும் பல நிறுவனங்கள் இருந்தன. ஆனால் சைவ சித்தாந்தத்தையும் சாத்திரங்களயும், தத்துவங்களையும் பரப்புவதற்குத் தனிப்பட்ட ஒப்பற்ற நிறுவனம் ஒன்று மிக அவசியம் என்று கருதிச் ''சைவ சித்தாந்த மகா சமாஜம்'' தோற்றுவிக்கப்பட்டதாக அறிகிறோம்.

## சமயம் - மதம்

சமயம், மதம் என்ற இரண்டையும் ஒன்றே என்று கருதக்கூடாது. சமயம் என்பது ஆங்கிலத்தில் Religion என்றும், மதம் என்பது Philosophy என்றும் கூறப்படும். மதம் - கொள்கைகளை, தத்துவங்களை நிறுவும். சமயம் - கொள்கைகளை, தத்துவங்களைச் செயல்படுத்தும். Philosophy with out religion is lame. Religion without Philosophy is blind. கொள்கையும், செயல்பாடும் இணைய வேண்டும். கொள்கைக்காக திருஞான சம்பந்தர் சுவாமிகளையும் செயல்பாட்டிற்காக திருநாவுக்கரசு சுவாமிகளையும் இறைவன் உலகுக்கு அனுப்பி அருள் பாலிக்கச் செய்தார். ஒரு பொருளை அதன் உண்மை நிலையில் காரணகாரியத்தோடு அறிவது தத்துவம். கொள்கைகளை வரையறைப்படுத்தி உணர்வதற்கும், வாழ்வியற் குறிக்கோள் இதுதான் என்று நிறுவுவதற்கும் துணை செய்வது தத்துவம். அதனை முறைப்படுத்தி அடையவும் துய்க்கவும் வழிவகை செய்வது சமயம். சாத்திரத்தின் முக்கியத்தை மக்கள் மன்றத்தின் விழிப்புணர்வு உண்டாகுமாறு செய்து தொண்டாற்றுவதற்காக நிறுவப் பெற்ற தனித்தன்மை வாய்ந்த நிறுவனம் பெருமன்றம்.

## தோத்திரம் - சாத்திரம் :

தோத்திரம் தெய்வ அனுபவத்தை உணர்வு நெறியில் வெளிப்படுத்தும்; சாத்திரம் தெய்வ அனுபவத்தை அறிவு நெறியில் வெளிப்படுத்தும். இறைவனுக்கும், ஆன்மாவுக்கும் உள்ள உறவை அறிந்து, அந்த உறவுக்குத் தடையாக இருக்கின்ற பாசங்களை நீக்கி, இறைவனோடு இரண்டறக் கலத்தல் அவசியம் என்ற தத்துவத்தைச் சாத்திர அறிவு அறிவிக்கும். உலகியல் இன்பத்தைக் காட்டிலும் மேலான பேரின்பம் ஒன்று உண்டு என்று சாத்திரம் கூறும். அந்த மெய்யான இன்ப வாழ்வு பெறுவதற்காக நம்முடைய இயல்பும். அதனைப் பெறுவிக்கின்ற இறைவன் இயல்பும், அந்த இன்பத்தை இதுவரையில் பெறாமல் இருப்பதற்குத் தடையாய் இருக்கும் பொருளின் இயல்பும், அத்தடையை நீக்கி அப்பேற்றைப் பெருவிக்கும் சாதனத்தின் இயல்பும், அச்சாதனத்தைப் பெறும்

வழியும், சாதிக்கும் முறையும், சாதித்ததனால் வரும் இன்பத்தின் இயல்பும் யாவை எனக் கூறுவது சித்தாந்த சாத்திரம். ''சிவயநம'' என்ற ஐந்தெழுத்தில் 'ய' எனப்படும் ஆன்மா 'நம' என்ற மலங்களிலிருந்து விடுபட்டு, 'சிவ' என்ற பரம்பொருளை அடையத்துணை செய்வது சாத்திரம். தோத்திரங்களின் நுட்பங்களை அறிய, அனுபவிக்கச் சாத்திர அறிவு அவசியம். தோத்திரத்தின் பிழிவே சாத்திரம்.

## சைவ சித்தாந்தம்

இத்தலைப்பில் பல்வேறு அறிஞர்கள் நூல்களை எழுதியுள்ளார் கள். டாக்டர் ஜி.யு. போப் என்ற மேல்நாட்டு அறிஞர் சைவ சித்தாந்தம் என்னும் தத்துவக் கொள்கையானது. ''மிக விரிந்ததும், பெருஞ் செல்வாக்குடையதும், ஐயத்திற்கு இடமின்றி உண்மையிலேயே பெரும் மதிப்பிற்கு உரியதும், இந்திய நாட்டிலுள்ள சமயக் கொள்கைக்கெல்லாம் தலை சிறந்ததுமாகும்' என்றும், ''தென்னிந்திய மக்களின் பேரறிவின் பெருவிளைவுமாகும்'' என்றும் பாராட்டியுள்ளார். "The Saiva Siddhanta System is the most elaborate, influential and undoubtedly the most intrinsically valuable of all religions of India" என்றும் "The choicest product of the Dravidian intellect" என்றும் பாராட்டியுள்ளார்.

ரெவரண்ட் கௌடியின் கருத்து ''சமய ஆராய்ச்சித் துறையிலும் கொள்கை வாழ்க்கை என்பனவற்றின் வெளிப்பாடு முறையிலும் மிகமிகச் சிறந்ததொன்றாகத் தென்னிந்தியர் பெற்றிருப்பது சைவ சித்தாந்தமே யாகும்'' As a system of relgious thought, as an expression of faith and life, the Saiva Siddhantha is by far the best that South India possess.

"Saiva Siddhantham is a permanent living philosophy original in its contents, universal in its outlook and unique in its practicability" என்று டாக்டர் எஸ்.என். கந்தசாமி கூறுகிறார்.

சுருக்கமாகச் சொல்ல வேண்டுமானால் சைவ சித்தாந்தம் மனிதனை மையமாக்க கொண்ட கொள்கை. Humanistic Philosophy எனப்படும். நமது வாழ்வியலை அடிப்படையாகக் கொண்டது. நிலை பேறு இல்லாத உலகில் ஒரு தனி ஆன்மா எப்படி வாழ்க்கையை நடத்த வேண்டுமென்று வரையறைப்படுத்திச் சொல்வது. சைவ சித்தாந்தம் என்றால் இதுவரையில் வந்துள்ள தத்துவக் கருத்துக்களை எடுத்துச் சொல்லி, ஆராய்ந்து அவைகளைக் காரணகாரியத்தோடு

மறுத்துவிட்டு இதுதான் மறுக்க முடியாத கொள்கை என்றும், முடிந்த முடிபு (conclusion of conclusions) என்றும் எடுத்துரைப்பதாகும். இது பூர்வபட்சம் செய்து சித்தாந்தம் செய்தல் எனப்படும்.

உதாரணம் வீட்டிலுள்ள எல்லா வகைக் காய்களையும் எடுத்துப் பார்த்து அவைகள் எல்லாவற்றையும் ஏதாவது ஒரு தகுந்த காரணம் காட்டி விலக்கிவிட்டு ஒரு காயைத் தேர்ந்தெடுத்துச் சமையல் செய்வது போன்றதாகும்.

## சைவ சித்தாந்தம் என்ற சொல் வழக்கு :

(அ) இரண்டாம் நூற்றாண்டில் தோன்றிய மணிமேகலையில் தான் முதலில் சைவ வாதி எனப்படுவன் பேசப்பெறுகின்றான் மணிமேகலையுடன் சைவக் கொள்கையைப் பற்றி விவாதம் செய்ததாகக் கூறப்பட்டுள்ளது.

(ஆ) திருமந்திரத்தில் 'தற்பரம் கண்டுளோர் சைவ சித்தாந்தரே' என்று அறிவிக்கப்பட்டுள்ளது. இறைவன் சித்தாகிய ஆன்மாவில் இருக்கிறார். அசித்தாகிய உலகப் பொருள்களிலும் இருக்கிறார். சித்து. அசித்து என்ற தொடர்பு இல்லாமல் எதிலும் தோய்வுறாமல் இருக்கும் இறைவன் 'பரம்,' 'தற்பரம்' எனப்படுவார். இத்தகைய பரம் பொருளைத் தானே தன் நிலையில் தனித்து இருக்கும் இறைவனை அடைய வேண்டுமென்று எண்ணுவது 'சுத்தாத்வைதம்' எனப்படும். இந்தத் தற்பரம் எனப்படும் இறைவனைக் கண்டுள்ளோர் சைவ சித்தாந்தரே என்கிறார் திருமூலர்.

(இ) சைவ சித்தாந்ததை முறையாகச் சொன்னவர் மெய்கண்டார், பிறகு, 'அருள் நந்தி சிவாச்சாரியார்' ஆகமத்தின் வழியில் சைவ சித்தாந்தம் உணர வேண்டுமென்றார். இந்த அடிப்படையில் 'சர்வ ஞான உத்தர ஆகமம்' என்ற நூலைப் பெருமன்றம் இம்மாநாட்டில் இன்று வெளியிடுகிறது. ஆகமம் இறைவனை அன்பினால் அனுபவிக்கச் செய்ய வழிவகுப்பது. வேதம் இறைவனை அறிவினால் அறியச் செய்வது.

(ஈ) தத்துவத்துறையில் புரட்சி உண்டாக்கிய உமாபதிசிவம் அவர்கள் தான் முதன் முதலில் 'சைவ சித்தாந்தத் திறன்' இங்குத் தெரிக்கல் உற்றாம்' என்றருளினார்.

(உ) உமாபதி சிவத்திற்குப் பிறகு சிவஞான முனிவர் சித்தாந்தக் கொள்கையை விளக்கினார்கள். இவர் சைவ சித்தாந்தத்தில் பொருள் ஒன்றா, இரண்டா, மூன்றா என்ற பொருள் ஆராய்ச்சியைவிட,

பொருள்களுக்குள்ள உறவுதான் முக்கியம் என்றார். நமக்கும் இறைவனுக்கும் உள்ள உறவு, நமக்கும் உலகத்திற்கும் உள்ள உறவு 'சிவயநம' என்ற ஐந்தெழுத்தில் உள்ளதாகத் தெரிவித்தார். 'தத்துவமசிக்குப் பதிலாக' 'சிவத்துவமசி' என்றும், இறைவன் ஆன்மாவில் அனுபவிக்கப்படும் பொருள் என்றும் சைவ சித்தாந்தம் கூறுவதாக எடுத்துரைத்தார்.

(ஊ) அண்மையில் வாழ்ந்த பாம்பன் சுவாமிகள் (1852-1929) சைவ சித்தாந்தக் கொள்கைகளைத் தெளிவுபடுத்தினார். சமஸ்கிருதத்திலுள்ள உபநிடதம், ஆகமம் ஆகியவற்றின் வாக்கியங்களை எடுத்துக் காட்டி இவைகளில் எவை எவை நமக்குப் பொருந்தும் என்று விளக்கிச் சைவ சித்தாந்த சாத்திரமாக 'தகராலய ரகசியம்; பரிபூரண ஆனந்தம்; திருப்பா; செக்கர்வேள் செம்மாப்பு, செக்கர்வேள் இறுமாப்பு என்று நான்கு நூல்களை அருளினார். சைவசித்தாந்தத்தின் அடிப்படைக் கொள்கை 'சுத்தாத்வைதம்' என்று விளக்கினார். அவர் 'அத்தியாச்சிரம, சுத்தாத்வைத, வைதீக சைவசித்தாந்த ஞான பானு' என்று போற்றப்பட்டார்.

## சைவ சித்தாந்தப் பெருமன்றத்தின் பணிகள்

சைவ சித்தாந்தத்தையும், சைவ சமய தோத்திர நூல்களின் பிழிவான சாத்திர முடிவுகளையும் பரவச் செய்தலே பெருமன்றத்தின் தலையாய நோக்கம்.

மக்கள் அறநெறிப்படி வாழவும், இறையருள் பெறவும், இறைவனால் அளிக்கப்படும் இன்பத்தைத் துய்க்கவும் பெருமன்றம் பணி செய்கிறது. இதன் அடிப்படையில் பெருமன்றம் மேற்கொள்ளும் செயல்கள்.

(அ) வருடத்திற்குச் சுமார் 100 சாத்திர வகுப்புகள் நடத்தப்படுகின்றன. மன்றத்தின் ஞானாசிரியர் முனைவர் வை. ர. அவர்கள் வியாழன் தோறும் 'திருமந்திர' வகுப்பையும், வெள்ளிக்கிழமை தோறும் 'சிவப்பிரகாச' வகுப்பையும் தொடர்ந்து நடத்தி, இந்நூல்களில் புதைந்து கிடக்கும் புத்தம் புதிய தத்துவங்களைத் தெளிவுபடுத்துகிறார்.

"Full may a gem of purest ray serene
The dark unfathomed caves of ocean bare
Full may a flower is born to blush unseen
And waste its fragrance in the desert air"

என்னும் ஆங்கிலேயப் புலவன் கூறியது நினைவுக்குரியது.

(ஆ) வருடந்தோறும் சுமார் 80 அறக்கட்டளை ஆன்மீகச் சொற்பொழிவுகளும், அருளாளர்களின் விழாக்களும் நடத்தப்படுகின்றன.

(இ) மாதந்தோறும் தமிழில் 'சித்தாந்தம்' என்னும் மிகச் சிறந்த இதழும் முத்திங்கள் தோறும் ஆங்கில 'சித்தாந்த' இதழும் வெளியிடப்படுகின்றன. இவ்விதழ்களில் வெளியிடப்படும் ஆசிரியர் உரை, கட்டுரைகள் கருத்தாழம், பொருள் நயம், சிந்தனை செறிவு, கொள்கை விளக்கம், தத்துவத் தெளிவு முதலியவைகளைக் கொண்டதால் இவ்விதழ்களைப் பலரும் பாராட்டுகிறார்கள்.

(ஈ) தோத்திர சாத்திர நூல்கள் அச்சிடப்பட்டு அடக்க விலைக்கு வழங்கப்படுகின்றன.

(உ) வாரந்தோறும் இளைஞர்களுக்கு, குறிப்பாக கண்பார்வையற்ற மகளிர்களுக்கு திருமுறை இசை, நாயன்மார்கள் வரலாறு முதலியவைகள் பயிற்றுவிக்கப்படுகின்றன.

(ஊ) வருடந்தோறும் மாநாடுகளும் தலப்பயணங்களும் நடத்தப்படுகின்றன.

(எ) உலகம் இயங்க இன்றியமையாதது அறிவு. அறிவு மட்டும் தனித்து இயங்குமானால் பெரும் நன்மைகளோடு பெருந்தீமைகளும் விளைகின்றன. இன்று உலகம் அறிவை மட்டும் துணைக் கொண்டு இயங்குவதனால்தான் துன்பங்கள் ஏற்படுகின்றன. அன்புடன் கலந்த அறிவு, அறத்தின் அடிப்படையில் நிகழும் அன்பு நன்மையைத் தரும். அன்பையும், அறவாழ்வையும் மக்களிடத்தே பரப்புவது பெரு மன்றமாகும்.

*மெய்ம்மையாம் உழவைச் செய்து விருப்பெனும் வித்தைவித்தி*
*பொய்ம்மையாம் களையை வாங்கிப் பொறையெனும் நீரைப் பாய்ச்சித்*
*தம்மையும் நோக்கிக் கண்டு தகவெனும் வேலியிட்டுச்*
*செம்மையில் நிற்பராகில் சிவகதி விளையும் அன்றே*

என்ற நாவுக்கரசர் பெருமான் அறிவுரையின்படி மக்கள் செம்மையுள் நிற்பதற்குப் பெருமன்றம் பணிபுரிகிறது.

(ஏ) தனிமனித வாழ்க்கையில் சத்தியம், அன்பு, ஒழுக்கம், தெய்வ பக்தி கடமையுணர்ச்சி பெருகி நாட்டின் சிறந்த குடிமகனாக வாழவும், அதன் மூலம் நாட்டில் சகோதர தத்துவமும், சமாதானமும் வளரவும் பெருமன்றம் பாடுபடுகிறது.

(ஐ) அரசாங்கவிருது : அறத்தின் அடிப்படையில் பல்வேறு துறைகளில் சிறந்து விளங்குபவர்களுக்கு அரசாங்கம் விருது வழங்குவது போல, சைவ சித்தாந்தப் பெருமன்றம் போன்ற இயக்கங்களுக்கு அரசு விருது வழங்குவது பொருத்தமாயிருக்கும் எனக் கருதுகிறேன். உலக அமைதிக்காகப் பாடுபடுபவர்களுக்கு நோபில் பரிசு வழங்கப்படுகிறது. மக்கள் உள்ளங்கள் அமைதியடையவும், மனித நேயத்தோடு சார்ந்த சீலர்களாய் வாழவும் பெருமன்றம் துணைபுரிகின்றது.

(ஒ) பெருமன்றத்தின் கவலை : பெருமன்றம் நிறுவப்பட்டு 97 வருடங்களாகியும், அதற்குச் சொந்தக் கட்டிடம் இல்லை. இக்கவலையைப் போக்கப் பொருட் செல்வர்களின் திருவடிகளை வணங்குகிறேன். திருக்கயிலாய பரம்பரை, தருமை ஆதீனம் குருமகா சந்நிதானம் சுவாமிகள் அவர்கள் கருணை பாலிக்க வேண்டுமென்று மனம், மெய், மொழிகளால் அவர்களின் திருவடிகளை வணங்குகின்றேன்.

## சிலசிந்தனைகள்

அடியேனின் உரையின் முடிவில் சில சிந்தனைகளைச் சமர்ப்பிக்கின்றேன்.

(அ) அண்மைக் காலமாக மக்களிடத்தில் தெய்வ நம்பிக்கை அதிகரித்து வருகிறது. ஆனால் அது பெரும்பாலும் மூட நம்பிக்கையாகவே இருக்கிறது. நவதான்யம் அளித்தும், எள் விளக்குகள் ஏற்றியும் நவக்கிரகங்களைச் சாந்தப்படுத்த முயல்கி றார்கள். விழாக் காலங்களில் தீ மிதித்தல், உடம்பில் அலகுகளைக் குத்திக் கொள்ளுதல், உயிர்ப்பலி இடுதல் முதலியவைகளால் இறையருளைப் பெறலாம் என்று கருதுகின்றார்கள். இப்படிப் பட்டவர்களுக்குச் சமய போதனையை எளிய முறையில் அளித்து, திருமுறைகளின் சிறப்புகளை விளக்கி அவைகளை ஓதுவதால் சிறந்த பயன் அடையலாம் என்பதைத் தெளிவுபடுத்த வேண்டும்.

(ஆ) இளைஞர்களைத் தெய்வ வழிபாட்டில் ஈடுபடுத்த வேண்டும். சிவசின்னங்களின் தத்துவங்களையும், சமயச் சடங்குகளின் உட்பொருள் விளக்கத்தையும் அளிக்க வேண்டும்.

(இ) அருளாளர்களின் விழாக்கள் கொண்டாடப்படும் போது அவர்களின் வாழ்க்கை வரலாறுகளையே திரும்பத்திரும்பப்

பேசினால் போதாது. வரலாற்றின் அருள் நிலை அனுபவங்களை, தத்துவக் கோட்பாடுகளை விளக்க வேண்டும்.

(ஈ) பண்டிகைகளின் அடிப்படைக் கருத்துக்களைச் சொல்ல வேண்டும். உதாரணமாக, நரகாசுரனை கிருஷ்ணபரமாத்மா அழித்ததைக் களியாட்டமாகத் தீபாவளியை மக்கள் கொண்டாடுகிறார்கள். தீபம் + ஆவளி = தீபாவளி என்றும், தீபங்களை வரிசையாக வைத்து அத்தீபங்களைச் சிவபெருமானாகவே கருதி வழிபடுவதன் முக்கியத்தை விளக்க வேண்டும். பொங்கல் பண்டிகையில் சூரியனை வணங்குவதோடு சூரியனை இயக்கும் பரம் பொருளையும் வணங்கும்படி அறிவுரை தர வேண்டும்.

(உ) மற்ற மதங்களான கிருஸ்தவம், இஸ்லாம், பௌத்தம், சமணம் வைணவம் முதலியவைகளின் கொள்கைகள் சைவ சித்தாந்தத்தோடு எவ்வாறு பொருந்துகின்றன என்பதைச் சித்தாந்த அறிஞர்கள் தெளிவுபடுத்த வேண்டும். இதனால் மத நல்லிணக்கம் மக்களிடையே பெருகும்.

பசி, பிணி, வறுமை ஆகியவற்றால் வருந்துபவர்களுக்குச் சைவத்தைப் பற்றி அறிய விருப்பம் ஏற்படுத்தி அவர்கள் கல்வியறிவு, பொருளாதார உயர்வு பெற்று ஒற்றுமையுடன் வாழ வழி வகையைச் செய்ய வேண்டும். கிருஸ்துவர்கள் நாட்டில் கல்வி நிலையங்கள், மருத்துவமனைகள் முதலியவற்றை ஏற்படுத்தி அவைகள் மூலம் மக்களிடையே கிருஸ்தவ மதத்தைப் பரப்புகிறார்கள் என்பது வரலாறு.

## அமெரிக்கா நாட்டில் தெய்வ நம்பிக்கை

அடியேன் அமெரிக்க நாடடில் பலமாதங்கள் தங்கியிருந்தபோது அங்குள்ள அமெரிக்க மக்களிடையே தெய்வ நம்பிக்கை இருப்பதைப் பார்த்து மகிழ்வுற்றேன்.

(அ) அவர்கள் ஞாயிற்றுக்கிழமை தோறும் குடும்பத்துடன் கிருஸ்துவத் தேவாலயம் சென்று வழிபடுகிறார்கள்.

(ஆ) கிருஸ்துவர்கள் அல்லாதவர் வீடுகளுக்குச் சென்று விலையுயர்ந்த கிருஸ்துவ நூல்களை இலவசமாக அளித்து மதத்தைப் பரப்புகிறார்கள். பள்ளிகளில் கிருஸ்துவ மதபோதனை விரிவாக நடைபெறுகிறது.

(இ) அமெரிக்காவின் முன்னாள் ஜனாதிபதி கிளிண்டன் தனது பதவி ஆட்டம் கொண்ட போதும், நீதிபதிகள் விசாரணை நடத்திய

போதும் அவர் தொலைக் காட்சியில் தனது இறை நம்பிக்கையைத் தெரிவித்து இறைவன் தன்னைக் கைவிடமாட்டார் என்று கூறினார்.

(ஈ) அங்குள்ள இந்துக் கோயில்களில் அர்ச்சகர்களுக்குச் சைவ சித்தாந்த அடிப்படைக் கருத்துக்கள் தெரியவில்லை. முருகப் பெருமானின் ஆறுபடை வீடுகள் என்ன என்பதும் தெரியவில்லை. ஆறு முருக சிலைகள் தனிமேடையில் பொம்மைகளைப் போல வைக்கப்பட்டிருந்தன. சிவலிங்கத்தின் எந்த பக்கத்தில் உடுக்கை வைக்க வேண்டுமென்றும் தெரியவில்லை. ஆனால் ஆதிகாலத்தில் அமெரிக்காவில் சிவலிங்க வழிபாடு இருந்ததாக ஆராய்ச்சியாளர்கள் கூறுகிறார்கள்.

(உ) கீதை, இராமாயணம், மகாபாரதம் ஆகியவைகளைப் பற்றிப் பெரும்பாலும் ஆங்கிலத்தில் சொற்பொழிவுகள் நடக்கின்றன. சைவ சித்தாந்தத்தைப் பற்றியும் திருமுறைகளைப் பற்றியும் சிந்தனையே இல்லை என்பது வருந்தத்தக்கது.

மேற்கண்ட சிந்தனைகளைத் தயவு செய்து சான்றோர்களும், செல்வந்தர்களும் ஆராய்ந்து சைவ சித்தாந்தம் வெளிநாடுகளில் பரவ ஆவன செய்யுமாறு வேண்டுகின்றேன்.

இதுகாறும் அடியேனின் உரையைப் பொறுமையுடன் செவி சாய்த்த சிவநேயச் செல்வர்கள் அனைவருக்கும் மனமார்ந்த நன்றி. அடியேன் சைவ சித்தாந்தப் பெருமன்றத்தின் சார்பாக, தலைமையுரையை இம்மாநாட்டில் வழங்க வைத்த திருவருளுக்கும், பெருமன்றச் செயற்குழுவுக்கும், மாநாட்டு வரவேற்புக் குழுவுக்கும் என் நன்றி.

வணக்கம்!

தென்னாடுடைய சிவனே போற்றி
எந்நாட்டவர்க்கும் இறைவா போற்றி

## சித்தாந்த சரபம், முனைவர்

# ஆ. ஆனந்தராசன்

(98ஆம் ஆண்டு விழா - திருக்கோவலூர் - சைவர் மாநாடு)

பேரன்பு தழுவிய பெரியோர்களே, சைவ ஒழுக்கத்தில் தலைநிற்கும் சான்றோர்களே,

நாமெல்லாம் பிறப்பதற்கு முன்னே பிறந்து, சைவத்திற்கும் தமிழுக்கும் ஈடிலாப் பணிகள் இயற்றிவரும் நமது சைவ சித்தாந்தப் பெருமன்றத்தின் 98ஆம் ஆண்டு விழா மாநாட்டிற்குப் பல்வேறு இடங்களிலிருந்து பழுமரம் நாடிவரும் பறவைகள் போல ஆர்வத்துடனும் ஈடுபாட்டுடனும் வந்து குழுமியிருக்கும் உங்கள் அனைவருக்கும் எனது பணிவான வணக்கத்தினை முதற்கண் தெரிவித்துக் கொள்கிறேன்.

நீண்ட நெடுங்காலமாக நிலைபெற்று வரும் பழமையும், வரலாற்றுச் சிறப்பும் வாய்ந்த நகரம் திருக்கோவலூர். திருஞானசம்பந்தப் பெருமான் 'கோவல் நீடிய வீரட்டம் அமர்ந்தவர் குரைகழல் பணிந்தேத்திப்' பாடிய பதிகம் ஒன்றும், திருநாவுக்கரசு சுவாமிகள் வணங்கிப் பாடிய வளத்தமிழ்ப் பதிகம் ஒன்றுமாக இரு தேவாரப் பதிகங்கள் இத்தலத்திற்கு உள்ளன என்பதை அறிவீர்கள். ஞானசம்பந்தர் திருக்ஷேத்திரக் கோவை என்ற பொதுப் பதிகத்தில் இத்தலத்தைக் 'கொடுங்கோவலூர்' என்று குறித்துள்ளமை அறியத்தக்கது. கொடுமை என்ற அடைமொழி இங்கு அழித்தல் தொழிலை உணர்த்தும். சிவபெருமான் அந்தகாசுரனை அழித்த வீரச்செயல் நிகழ்ந்தமை பற்றிக் 'கொடுங்கோவலூர்' எனப்பட்டது.

ஞானசம்பந்தர் திருக்கோவலூர்ப் பதிகத்தின் முதல் திருப்பாட்டில் சிவபிரானைக் 'குடை கொள்வேந்தன் மூதாதை' என்று குறித்துள்ளார். 'குடைகொள்வேந்தன்' என்று குறிப்பிட்டது, திருக்கோவலூரைத் தலைநகராக்க கொண்டு ஆண்டு வந்த மன்னனை என்பது தெளிவு.

அவனது மறப்பண்பினைக் காட்டுவதாகிய முரசு, வாள் முதலியவற்றை அடைமொழியாக்காமல், குடையினை அடைமொழியாக்கிக் குடைகொள்வேந்தன் எனச் சுட்டியது நோக்கத்தக்கது. குடை என்பது தண்ணளி செய்து காத்தலைக் குறிக்கும். இதனை, 'குளிர் வெண்குடைபோன்று அங்கண் உலகு அளித்தலான்' எனவரும் சிலப்பதிகார வரியால் அறியலாம். தண்ணளி செய்து காக்கும் வேந்தன் என்று பிள்ளையார் இங்குக் குறிப்பிடுவது மெய்ப்பொருள் நாயனராகிய மன்னர் பிரானை என்று கொள்வது பொருத்தமாகும்.

வஞ்சகத்தை நெஞ்சகத்தில் வைத்துப் பொய்யான தவவேடம் பூண்டு வந்து தான்நினைந்த அப்பரிசே செய்த வன்கண்ணனிடத்தும் பகைமை பாராட்டாது தனது இன்னுயிர் நீங்கும் போதும் அவனது உயிரைக் காத்துத் தண்ணளி புரிந்த மெய்ப்பொருள் நாயனாரின் தகவு, பதிகம் பாடலுற்ற பிள்ளையாரின் திருவுள்ளத்தில் முதலில் தோன்றியது போலும். அதுபற்றியே, அம்மன்னர் பிரானுக்கு மூதாதையாக விளங்கும் சிவபெருமான் என்ற பொருள்படக் 'குடை கொள்வேந்தன் மூதாதை' என்று முதற் பாடலிலேயே குறிப்பிட்டுள்ளார்.

இனி, முடியுடை வேந்தர்களின் வஞ்சனையால் தமது தந்தையாகிய பாரியை இழந்து வருந்திய பெண் மக்கள் இருவரும்,

> *"வென்றெறி முரசின் வேந்தர் எம்*
> *குன்றும் கொண்டார் யாம் எந்தையும் இலமே"*

என்று கலங்கிக் கதியற்றுக் கவிஞர் பெருமானாகிய கபிலரின் ஆதரவோடு இந்நகரை அடைந்தபோது அவர்களைப் பரிவுடன் ஏற்று வாழ்வளித்த மலையமான் குலத்து மன்னனின் தண்ணளியை நினைந்து 'குடைகொள் வேந்தன் மூதாதை' என்று ஞானசம்பந்தர் குறித்தார் என்று கொள்ளுதலும் அமையும். 'சார்ந்தாரைக் காத்தல் தலைவர் கடன்' ஆகும். இது சிவபிரானுக்குரிய இறைமைப் பண்பு என்பதைச் சந்திரனுக்கு அடைக்கலம் அளித்த செயலால் அறியலாம். அவ்வாறே மலையமான் ஆகிய மன்னனும் பாரி மகளிருக்கு அடைக்கலம் நல்கி அளி செய்தமையால், சிவ பெருமானைக் குறிப்பிடும் போது அவனையும் இணைத்து, 'குடைகொள் வேந்தன் மூதாதை என்று குறித்தனர் எனலாம்.

இனி, ஞானசம்பந்தர் பதிகத்தில் இறைவனைக் குறித்து வந்துள்ள பிற தொடர்களை நோக்குவோம். விடையதேறும் கொடியினான்.

விரவி நாறு கொன்றையான், வெள்ளம் தாங்கு சடையினான், விரைகொள் சீர் வெண்ணீற்றினான், என்றாற் போலும் தொடர்கள் இறைவனது கோலத்தைப் பற்றியனவாகவே அமைய, அவற்றிடையே இரண்டு தொடர்கள் மட்டும் அவனது கோலத்தைக் குறியாமல் தனிப்பட்டு நிற்கினற்ன. 'வீடு காட்டும் நெறியினான்', 'வேதம் ஓது நெறியினான்' என்பனவே அத்தொடர்கள். இவ்விரு தொடர்களும் மக்களாய்ப் பிறந்த உயிர்கள் உய்யும் பொருட்டு இறைவன் அளித்துள்ள இரு நெறிகளை உணர்த்தி நிற்கின்றன. திருக்கோவலூர்ப் பதிகம் காட்டும் அந்நெறிகளை ஈண்டு விளக்கிக் காட்டுவது சாலப் பொருத்தமாகும் என்று கருதி அதனையே எனது தலைமையுரையின் பொருளாக அமைத்துக் கொள்கிறேன்.

சைவசித்தாந்தத்தின் சிறப்புக்களுள் ஒன்று, அது தனது கொள்கைகளைப் படிவழி முறையில் அமைத்துச் சொல்வதாகும். ஆன்மாவின் அறியுந்தன்மை பற்றியும், அதற்கேற்ப அது மேற்கொள்ளுதற்குரிய சாதனம் பற்றியும் கூறுமிடத்து இப் படிமுறை அமைந்து விளங்குதலைக் காணலாம்.

ஆன்மாக்கள் எண்ணிலவாய் உள்ளன என்று சைவசித்தாந்தம் கொள்ளும். ஓர் உடம்பில் நிகழும் இன்பத் துன்பங்கள் மற்றோர் உடம்பில் அறியப் படாமையால் உடம்பு தோறும் ஆன்மாக்கள் வெவ்வேறு உண்டு என்பதும், அதனால் ஆன்மாக்கள் எண்ணற்றவை என்பதும் பெறப்படும்.

அறிவித்தால் அறிதலும், அங்ஙனம் அறிவிக்க அறியுமிடத்தும் எல்லாவற்றையும் ஒருங்கே அறியாது அவற்றைச் சிறிது சிறிதாகவே அறிதலும் எல்லா ஆன்மாக்களுக்கும் உரிய பொதுத் தன்மையாகும். அவ்வாறு சிறிது சிறிதாக அறிந்து வருதலைப் படிமுறையில் அறிதல் என்பர்.

ஆன்மாக்களது அறிவு தூல அறிவு எனப்படும். அஃதாவது, பருமையாக உள்ள அறிவாகும். அவ்வறிவு முதலில் பருமையானதையே அறிந்து பின் நுண்ணியதற்குப் படிமுறையால் செல்லுமே யன்றித் தொடக்கத்திலேயே நுண்ணியதாய் உள்ள பொருளை உணர மாட்டாது. அதனை உணர்கின்ற நிலை ஆன்மாக்களுக்குப்படி முறையால் சிறிது சிறிதாகவே முதிர்வதாகும். அங்ஙனம் ஆன்மாக்களின் அறிவு படிமுறையால் மேன்மேலும் விளங்கி வரும் நிலையே பக்குவம் எனப்படுகிறது. இப்பக்குவம் ஆன்மாக்களிடையே ஒன்று போலன்றி முன்னும் பின்னுமாக

விளங்கும். அது பற்றிப் பக்குவ ஆன்மாக்கள், அபக்குவ ஆன்மாக்கள் என அவற்றிடையே உயர்வு தாழ்வுகள் அமைகின்றன.

ஆன்மாக்களது பக்குவ வேறுபாடுகளுக்கு ஏற்பப் பலவகைச் சமயங்களும் சமய நூல்களும் அமைந்துள்ளன. அச்சமய நெறிகள் அனைத்தும் இறைவன் அருளால் தோன்றயவையாகும். இறைவன் எல்லா வுயிர்களிடத்தும் ஒப்பக் கருணையுடையவன் ஆகையால் அவரவரும் தம்தம் அறிவு நிலைக்கு ஏற்பக் கைக்கொள்ளும் வண்ணம் சமயத்தை ஒன்றாகச் செய்யாது பலவாகச் செய்வித் துள்ளான்.

அறிவு நிலையில் மிக மந்தமாய் நிற்போர் முதலில் உலகாயத நெறியைக் கைக்கொள்வர். உலகாயத நூலுள் பின்வரும் பொருள்கள் கூறப்படும். காணப்படுகின்ற இவ்வுலகம் மட்டுமே மெய். உடம்புதான் ஆன்மா. உடம்பின் வேறாய், உடம்பு தோன்றுவதற்கு முன்னும் உள்ளதாய், உடம்பு அழிந்த பின்னும் நிலைத்து நிற்பதாகிய ஆன்மா என்று ஒன்று இல்லை. ஆன்மாவும் உடம்பும் ஒன்றே. பூதங்களின் சேர்க்கை உடம்பாகும் போது அச்சேர்க்கையின் விளைவாக அவ்வுடம்புக்கு உணரும் சத்தி ஏற்படுகிறது. எனவே தூலவுடம்பே ஆன்மா. இவ்வுடம்பு அழிந்தால் அதற்குமேல் ஒரு வாழ்க்கையில்லை. அதற்கு மேல் அடையக் கூடிய உறுதிப் பயன் எதுவும் இல்லை. ஆகையால் புலனின்பத்தை முடிந்த வரையில் அனுபவிப்பதே வாழ்வின் குறிக்கோளாகும். இது போன்ற பொருள்கள் உலகாயத நூலுள் கூறப்படும்.

இவ்வாறு உலகாயத நெறியில் ஒழுகி அதன் பயனாக அறியாமை சிறிது நீங்கப் பெற்றோர் இன்ப நுகர்ச்சியில் சிறிது வெறுப்பு உடையவராவர்; புலனின்பத்தைத் தவிர வேறு இன்பமே இல்லையோ என்று எண்ணத் தலைப்படுவர்; உடம்பே ஆன்மா எனவும், உடம்பு நசித்தலே, அஃதாவது இறப்பே முடிவான உறுதிப் பயன் எனவும் இதுகாறும் தாம் கொண்டிருந்த கொள்கையில் அவர்க்கு ஐயம் உண்டாகும். அவர்தம் அறிவு சிறிது வளர்ந்திருக்கும் நிலையையே இது காட்டுகிறது.

அடுத்த பிறப்புக்களில் அவர் உலகாயத நெறிக்கு மேற்பட்ட பௌத்த, சமண சமயங்களை அடைவர். அச்சமயங்கள் கடவுட் கொள்கையில்லாதவை; பிற உயிர்களுக்குத் துன்பம் செய்யாது அவற்றினிடத்தில் இரக்கம் கொண்டு நன்மை செய்தல் வேண்டும் என்ற சிறந்த கொள்கையுடையவை. அவை வேதத்திற்கு எதிராகத் தோன்றியவையாதலால் அவைதிக சமயங்கள் எனப்படுகின்றன.

புத்த, சமண நெறிகளைப் பின்பற்றி ஒழுகிய பின்னர் ஓரளவு பக்குவம் பெற்று, அடுத்த நிலையில் வேதத்தை ஏற்றுக் கொண்ட சமய நெறிகளில் சென்றடைவர். அவை வைதிக நெறிகள் எனப்படும். அவை தருக்கம், மீமாம்சை, சாங்கியம், யோகம், ஏகான்ம வாதம், பாஞ்சராத்திரம் என்பன. இவையெல்லாம் புறச்சமயங்கள் என வைக்கப்பட்டுள்ளன.

பல பிறவிகளில் இப்புறச்சமயங்களில் நின்று ஒழுகிய பின்னர் பக்குவம் முதிரப் பெற்று அதன்பயனாக அகச்சமயங்களில் புகுந்து அவற்றைப் பின்பற்றுவர். அகச்சமயம் என்பன சிவபெருமானை முழுமுதற் கடவுளாகக் கொண்ட சைவத்தின் உட்பிரிவுகள். அவ்வாறு அகச்சமயங்களில் நின்று ஒழுகும்போது மிருதி நூல்களில் கூறப்படும் ஆச்சிரமங்கள், அறத்துறைகள் ஆகியவற்றைப் பின்பற்றுவர்; அறிவு விளங்குதற் பொருட்டு அரிய கலைகள் பலவற்றையும் ஆராய்ந்துணர்வர்; வேதங்களை ஓதி உணர்வர்; வேதப் பொருளை விளக்கிக் கூறும் சிறந்த புராணங்களின் கருத்துக்களையும் உணர்வர்; பின், வேதாந்தம் எனப்படும் உபநிடதங்களின் பொருளை ஆராய்ந்து உணர்வர். இவ்வாறு உணர்ந்தும் ஒழுகியும் வந்ததன் பயனாக முடிவில் சித்தாந்த சைவத்தில் வந்து பிறக்கும் பேற்றினைப் பெறுவர். முடிநிலைச் சமயமாகிய சித்தாந்த நெறியைத் தலைப்பட்டு, சரியை கிரியை யோகம் என்னும் தவத்தினை மேற்கொண்டு, அத்தவ முதிர்ச்சியில் ஞானத்தைப் பெற்றுச் சிவபெருமானது திருவடி யின்பத்தை எய்துவர்.

இறைவனது கருணையினால் இங்ஙனம் பற்பல சமய நெறிகள் உலகிடைத் தோன்றிப் படிமுறையால் ஒன்றின் ஒன்று மேலான பொருளை உணர்த்த, அவற்றை உணர்ந்து அவற்றின் வழி ஒழுகித் தம் அறிவு நிலை, படிமுறையால் மேம்பட்டு வர, முடிவில் சித்தாந்த சைவ நெறியை எய்தி வீடு பெறுவர் என்ற கருத்தை இது காறும் விளங்கக் கூறினோம்.

இனி, சித்தாந்த சைவ நெறியில் வேதம், சிவாகமம் என்னும் இரண்டும் முதல் நூல்கள் எனச் சிறப்பித்துச் சொல்லப்படுகின்றன. உயிர்கள் உண்மையை உணர்ந்து கொள்ளுதற் பொருட்டு இறைவனால் கொடுக்கப்பட்டவை இவ்விருநூல்களும் எனக் கொள்ளப்படுகின்றன. முதல் நூலாகக் கொடுக்கப்பட்டது ஒன்றாக இராமல் இரண்டாக நிகழ்வதற்குக் காரணம் யாது? எனில், உண்மையை முதலிலேயே முழுமையாகவும் நுட்பமாகவும் உணர்த்தினால் கேட்போர் அதனை அப்படியே விளங்கிக்

கொள்ளுதல் இயலாது. கேட்போரது பக்குவத்திற்கு ஏற்ப முன்னர்ப் பொதுவாகவும், பின்னர்ச் சிறப்பாகவும் படிப்படியாகவே உணர்த்துதல் வேண்டும். அம்முறைமைக்கு ஏற்பவே பொருள்களைப் பொதுவாக உணர்த்தும் வகையில் வேதம் என்னும் பொதுநூலும், உண்மையாக உணர்த்தும் வகையில் சிவாகமம் என்னும் சிறப்பு நூலும் செய்தளிக்கப் பெற்றன. இவ்வாறு ஆன்மாக்களது பக்குவ வேறுபாடு கருதிப் படிமுறையில் உணர்த்த வேண்டும் என்னும் கருத்துப் பற்றியே இறைவன் தனது நூலைப் பொதுவும் சிறப்பும் என்று இரண்டாகச் செய்தான்.

உலகத்து மக்கள் இருவகைப்படுவர். உலகியலை மட்டும் பொருளாகக் கொள்வோர் உலகர் எனப்படுவர். அவர் உண்மையை முற்ற உணரும் வேட்கையும் அறிவும் இல்லாதவர்; உண்மையை அவர் ஓரளவே உணர்வர். இனி, அவ்வேட்கையும் அறிவும் உடையவர் சத்தி நிபாதர் எனப்படுவர். அவர் உண்மையை முற்ற உணரவல்லவர், அதனால், உலகருக்காக வேத மென்னும் பொது நூலும், சத்தி நிபாதருக்காக ஆகமம் என்னும் சிறப்பு நூலும் இறைவனால் செய்யப்பட்டன. இதனை,

*'வேதநூல் சைவநூல் என்றிரண்டே நூல்கள்;*
*வேறுரைக்கும் நூல் இவற்றின் விரிந்த நூல்கள்;*
*ஆதிநூல் அநாதி அமலன் தருநூல் இரண்டும்;*
*ஆரணநூல் பொது; சைவம் அருஞ்சிறப்பு நூலாம்;*
*நீதியினால் உலகர்க்கும் சத்தி நிபாதர்க்கும்*
*நிகழ்த்தியது...'*

என்னும் சிவஞான சித்தித் திருவிருத்தத்தால் அறியலாம். உண்மையை முதலிலேயே முற்ற உணர்த்தினால் உணர்தல் அரிது என்பது பற்றி, அதனை முதற்கண் ஓரளவில் உணர்த்தும் பொதுநூலே வேதமாகும். இங்ஙனம் கூறும் பொது நூலை உணர்ந்த பின்னர், அதன்கண் பலவாறான ஐயங்கள் எழுதலினால் உண்மை யாது? என ஆராய்ந்துணரும் வேட்கையும் அறிவும் உடையார்க்கு உண்மையை ஒருதலையாக உணர்த்தும் சிறப்பு நூலே சிவாகமங்களாகும். வேதம் சூத்திரம் போலப் பொதுப் பொருள் உடையது; ஆகமம் பாடியம் போலத் தெளிபொருள் உடையது என மாதவச் சிவஞான யோகிகள் கூறியுள்ளமை இங்கே நினையத் தகும்.

பொதுநூலின் நோக்கம், உலகியலில் உவர்ப்புற்று வீடுபேற்றினை அவாவும் சத்தி நிபாதர்க்கு இறைவனது திருவருளைத் தெளிவித்து

அவரை அருள் நெறியில் நிறுத்துவது. அம்முறையில் அமைந்த சிறப்பு நூலாகிய சிவாகமம் அருள்நூல் எனப்படுவதாயிற்று.

மக்களை உலகியல் ஒழுக்கத்தில் நிறுத்துதற்கு வேதமாகிய அறநூலையும், பக்குவப்பட்டவர்க்கு மெய்ந்நெறியை உணர்த்துதற்கு ஆகமமாகிய அருள் நூலையும் இறைவன் செய்தளித்தான் என்றதனால், உலகியல் ஒழுக்கமாகிய அறநெறியும், சைவ ஒழுக்கமாகிய மெய்ந்நெறியும் ஆகிய இரண்டும் அவர் உணர்த்திய நெறிகள் என்பது போதரும்.

ஞானசம்பந்தர் இத்தலத்தில் பாடியருளிய பதிகத்தில் தனித்து நிற்பனவாக மேலே காட்டிய இரு தொடர்களும் இவ்விரு நெறிகளையே சுட்டி நிற்கின்றன. வேதம் ஓது நெறியினான்' என்பது உலகியல் ஒழுக்கமாகிய அறநெறியை வகுத்தவன் என்ற கருத்தையும், 'வீடு காட்டும் நெறியினான்' என்பது வீட்டிற்குரிய மெய்ந்நெறியை அளித்தவன் என்ற கருத்தையும் உட்கொண்டு நிற்றல் காணலாம்.

உலகியல் ஒழுக்கமாகிய அறநெறியைப் பொது அறம் என்றும், சைவ ஒழுக்கமாகிய மெய்ந்நெறியைச் சிறப்பு அறம் என்றும் கூறுவர்.

பொது அறம் என்பவை திருக்குறள் போன்ற நூல்களிலும் வேதங்களிலும் விதிக்கப்பட்டவை. பொது அறம் இவை என்பதை,

*'ஒழுக்கம் அன்பு அருள் ஆசாரம்*
*உபசாரம் உறவு சீலம்*
*வழுக்கிலாத் தவம்தா னங்கள்*
*வந்தித்தல் வணங்கல் வாய்மை*
*அழுக்கிலாத் துறவு அடக்கம்*
*அறிவொடு அர்சித்தல் ஆதி*
*இழுக்கிலா அறங்க ளானால்*
*இரங்குவான் பணி அறங்கள்'*

என்னும் சிவஞான சித்திச் செய்யுளால் அறியலாம்.

சிறப்பு அறம் என்பவை சிவாகமங்களிலும் திருமுறைகளிலும் கூறப்படும் சாதனமாகிய சமய ஒழுக்கங்கள். அவை சிவ புண்ணியம் எனவும், சிவ நல்வினை எனவும், தவம் எனவும் பல பெயர்களால் குறிக்கப்படும். சுருங்கக் கூறினால் சிவ வழிபாடே சிறப்பு அறமாகும்.

பொது அறம் உடையார் அவற்றைக் கடைப்பிடிக்கும் அந்த அளவில் மட்டும் நின்றால் பயனில்லை; சிறப்பு அறமாகிய சிவ

வழிபாட்டினையும் உடையராதல் வேண்டும். அதுபோலவே, சிறப்பு அறமாகிய சிவ வழிபாட்டினை மேற்கொள்பவர் பொது அறங்களையும் இகழாது கைக்கொள்ளுதல் வேண்டும். அப்பொழுதுதான் இறைவழிபாடு உண்மை வழிபாடு ஆகும்.

ஞானசம்பந்தர் அருளிச் செய்த இத்தலப் பதிகம் உடல் வாழ்க்கையின் நிலையாத தன்மையைப் பலவாறாக எடுத்துக் காட்டி, இறைவழிபாட்டின் இன்றியமையாமையை அறிவுறுத்தும் வகையில் அமைந்துள்ளது.

*'படைகொள் கூற்றம் வந்து மெய்ப் பாசம் விட்ட போதின்கண்*
*இடை கொள்வார் எமக்கு இலை' எனவும்,*

*'உரையும் பாட்டும் தளர்வெய்தி உடம்பு மூத்த போதின்கண்*
*நரையும் திரையும் கண்டு எள்கி நகுவர் நமர்கள்'*

எனவும் அவர் உணர்த்துகிறார்.

உலகமும் உடம்பும் நிலையற்றன என்பதைக் கூறும் நூல்கள் பலவற்றைப் படித்திருக்கிறோம்; படித்ததைப் பிறருக்கு எடுத்துச் சொல்லியிருக்கிறோம்; மேடைகளில் பலவாறாக விளக்கிப் பேசியிருக்கிறோம். ஆயினும், உலகம் கானல் நீர் போன்றது என்பதை வெறும் கல்வியறிவு என்ற அளவில்தான் உணர்ந்திருக்கிறோம். இந்த வெற்றறிவுக்கு நமது மனமும் இந்திரியங்களும் அடங்கி நில்லா. அவைகளை அடக்க முடியாமல், நிலையாதவற்றின்மேல் அவாக் கொண்டு அவைகளை முடிவின்றி ஓட விடுகிறோம்; அவாவியவற்றை அடைவதற்கு நல்லவும் தீயவும் ஆகிய வழிகளில் முயல்கின்றோம்; அவற்றை அடைந்து பலகால் நுகரினும் நிரம்பாது மீள மீள ஆசைக்கடலில் அழுந்துகிறோம். இவ்வாறு தத்துவங்களாகிய கருவிகளால் மேலும் மேலும் வினைகளை ஈட்டிக் கொள்கிறோம்.

மனம் வாக்குக் காயங்களாகிய கருவிகள் வினையீட்டத்திற்கு வழிகள் ஆதல்போல உலகப்பற்றின் நீங்கி முத்தியடைவதற்கும் இவைகளே வழிகளாம். ஞானசம்பந்தர் முதலிய அருளாசிரியன்மார் இதற்கு வழிகாட்டியுள்ளனர். திருக்கோவலூர்ப் பதிகத்தில்,

*'கரவலாளர் தம்மனைக் கடைகள் தோறும் கால் நிமிர்த்து*
*இரவல் ஆழி நெஞ்சமே! இனியது எய்த வேண்டின் நீ*
*குரவம் ஏறி வண்டினம் குழலொடு யாழ்செய் கோவலூர்*
*விரவி நாறு கொன்றையான் வீரட்டானம் சேர்துமே!'*

என்று ஞானசம்பந்தர் அறிவுறுத்தியபடி, மனம் வாக்குக் காயங்களால் இறைவனை நினைத்து, துதித்து, வழிபட்டு நற்கதியினை இவற்றின் வழியே அடையலாம்.

இவ்வாறு ஞானசம்பந்தர் அருளிய திருக்கோவலூர்ப் பதிகம் சிறப்பு அறமாகிய சிவ வழிபாட்டினை அறிவுறுத்தி, நமது உள்ளங்களில் மெய்யுணர்வுச் சுடரை ஏற்றி நல்வழி காட்டி நிற்கிறது.

# பேராசிரியர் முனைவர் C.E.சூரியமூர்த்தி

(98ஆம் ஆண்டு விழா - சைவ இளைஞர் மாநாட்டுத் தலைமையுரை)

## அறிவியற் பார்வையில் சைவசித்தாந்தம்

*''கல்லால் நிழன் மலை*
*வில்லா ரருளிய*
*பொல்லா ரிணை மலர்*
*நல்லார் புனைவரே''*

*''உலகெல்லாம் உணர்ந் தோதற் கரியவன்*
*நிலவு லாவிய நீர்மலி வேணியன்*
*அலகில் சோதியன் அம்பலத் தாடுவான்*
*மலர்சி லம்படி வாழ்த்தி வணங்குவாம்''*

*''வாழ்வெனும் மையல் விட்டு வறுமையாம் சிறுமை தப்பித்*
*தாழ்வெனும் தன்மை யோடும் சைவமாம் சமயமும் சாரும்*
*ஊழ் பெற லரிது சால உயர்சிவ ஞானத்தாலே*
*போழிள மதியினானை போற்றுவார் அருள் பெற்றாரே''*

சைவ சித்தாந்தப் பெருமன்றத்தின் 98ஆம் ஆண்டு விழா மாநாட்டின் ஒரு அமைப்பாக நிகழும் சைவ இளைஞர் மாநாட்டில் தலைமைப் பொறுப்பை அளித்து எளியேனைப் பெருமைப்படுத்தியுள்ள முதற் காரணமான திருவருளுக்கும், துணைக் காரணமான பெருமன்றப் பொறுப்பாளர்களுக்கும் என் பணிவான வணக்கங்களையும், வாழ்த்தையும் சமர்ப்பிக்கின்றேன்.

சித்தத்தைச் சிவன் பாலே வைத்து ''எனைத் தானும் நல்லவை கேட்க'' என்ற சீரிய குறிக்கோளுடன் இச் சிவப்பந்தலின் கண் அமர்ந்துள்ள பெருமை சேர் பெரியோர்களையும், சிவநேசச் செல்வர்களையும், தாய்மார்களையும் அன்பர்களையும் வாழ்த்தி வணங்குகின்றேன்.

சைவப் பெரியோர்களே ! சகோதர சகோதரிகளே! ''மேன்மை கொள் சைவநீதி உலகமெல்லாம்'' விளங்க வேண்டுமானால் நம் சைவ இளஞ்செல்வங்களைச் சைவ தோத்திர, சாத்திர நூற்களில் ஈடுபாடு கொள்ளச் செய்வது இன்றியமையாத ஒன்றாகும். நாம் வாழும் இந்த நூற்றாண்டு அறிவியலின் மறுமலர்ச்சிக் காலமாகும். எங்கும் அறிவியல் எதிலும் அறிவியல் என்ற போக்கு ஓங்கி நிற்கின்றது. மனிதனைப் பண்படுத்தி அவனுடைய அகவாழ்வை மேன்மையுறச் செய்யும் சமயமும், அறிவியலிலிருந்து தனித்து நிற்க முடியாது. அறிவியலும், சமயமும் கைகோர்ந்து நிற்க வேண்டும். சென்ற நூற்றாண்டில் வாழ்ந்த அறிவியல் மேதை ஐன்ஸ்டீன் இதைக் கீழ்கண்டவாறு அழுத்தமாக குறிப்பிட்டார்.

*''அறிவியல் இல்லாத சமயம் நொண்டி*
*சமயம் இல்லாத அறிவியல் குருடு''*

என்றார். மனித வாழ்வின நிறைவான வளர்ச்சிக்குச் சமயம் என்ற அருட்பார்வையும், அறிவியல் என்ற சேவைப் பாதங்களும் தேவை.

நாம் இப்பிறவிவரை செய்த புண்ணியங்களின் பலனாக, திருவருள் அருளாளர்களின் மூலமாக தெய்வத் திருமுறைகளை நமக்கு வெளிப்படுத்தி இருக்கின்றது. அவைகளைத் தினமும் ஓதி உணர்பவர்கள் மிகவும் பாக்கியம் செய்தவர்கள். சைவ சமய்த்தின் ஆணிவேர்களான 12 திருமுறைகளிலும் சைவசித்தாந்த அறிவியல் பார்வைகள் விரிந்து, பரந்து இருப்பதை அறிந்து இன்புறலாம். காரைக் காலம்மையார் காலத்திலிருந்து தெய்வச் சேக்கிழார் காலம் வரை சைவ சித்தாந்தம் என்ற தத்துவக் கோட்பாடுகள் திருமுறைகளில் முகிழ்ந்து விளங்குவதைக் காணலாம். ''பாலில் படு நெய்போல்'' திருமுறைகளில் உள்ள தத்துவங்களையெல்லாம் பின் வந்த சந்தான ஆச்சாரியர்கள் தொகுத்து தத்துவ அளவை அடிப்படையில் சைவ சித்தாந்த சாத்திரக் கருத்துகளாக வெளிப்படுத்தியது நாம் எல்லாம் அறிந்த ஒரு செய்தி. சைவ சித்தாந்த தத்துவத் துறையில் சமயமும், அறிவியல் பார்வையும் கைகோர்த்து நிற்கின்றன.

அறிவியலால் கவரப்படும் நம் சைவ இளைஞர்களுக்கு, சைவ சித்தாந்த கொள்கையின் அறிவியல் பாங்கையும் சிறிது காட்டிவிட்டால் தேனுண்ட வண்டுபோல் மயங்கி சைவ சித்தாந்த சரித்திர நூல்களையம் மிகவும் ஈடுபாட்டுடன் பயின்று மறுமைக்கு வேண்டிய அருட் செல்வமும் பெறுவார்கள்.

சைவ சித்தாந்தப் பெருமன்றம் இந்தப் பணியை முனைந்து செம்மையாகச் செய்கின்றது. இனி - அறிவியல் பார்வையில் சில சித்தாந்தக் கருத்துகளைக் காண்போம்.

சைவ சித்தாந்தக் கொள்கையின்படி இறைவன் ஆணவமான இருளில் மூழ்கி இருக்கும் ஆன்மாக்களை மீட்டு இன்பமான தன் திருவடிகளை அளிக்க, அந்த ஆன்மாக்களுக்கு உடல்கள், கருவிகள், உலகம், நுகர்வுகள் என்ற உபகாரங்களைச் செய்கிறான். இறைவன் உலகப் பொருளாயும் இருக்கிறான். உயிர்கள் பொருட்களை நுகரவும் உதவுகின்றான். இந்த நுகர்ச்சியை இறைவன் வேறாகவும், உடனாகவும், ஒன்றாயும் இருந்து உதவுகின்றான். நாம் வாழ்வதற்கு ஐம்பூதங்களான நிலம், நீர், காற்று, தீ, ஆகாயம் மிகவும் அவசியமானவை. இவற்றை நாம் எப்படி நுகர்கின்றோம்? உதாரணமாக நீர் மழையாக நமக்குப் புறம்பாக, வேறாக உள்ளது. அதுவே நாம் அருந்தும் போது உடனாகி, நம் உடலில் கலந்து ஒன்றாக நம்மை வாழ வைக்கின்றது. இதைப் போல் தான் மற்ற நான்கு பூதங்களையும் நாம் நுகர்ந்து வாழ்கின்றோம். இறைவன் கலப்பால் நம்மோடு ஒன்றாகி, பொருட்தன்மையால் உடனாகி, வேறாகியுள்ளான். நம்மோடு ஒன்றாகி உள்ள இறைவன் நம்மைப் போல் பிறந்து இறப்பானா என்ற கேள்வி எழும். சைவ சித்தாந்தம் இதற்கு அருமையான விடையளிக்கின்றது. என்றும் நிலையான இறைவன் தன் பகுதியான சிற்சக்தியான அருளைக் கொண்டு உயிர்களுக்குப் புண்ணிய பாவ அனுபவங்களையும், பிறவிகளையும் கொடுக்கின்றான். இறைவன் உயிர்களோடு இவ்வித அத்துவித நிலையில் உபகாரம் செய்கின்றான்.

இக்கருத்துக்களையும் சைவ சித்தாந்த தத்துவங்களையும் உள்ளடக்கி திருஞான சம்பந்தர் 7ஆம் நூற்றாண்டிலேயே முதலாம் திருமுறையில் ஒரு திருமுறைப் பாடல் மூலம் அருளியுள்ளார்.

அஃதாவது

*ஈறாய் முதல் ஒன்றாய் இரு பெண் ஆண் குணமூன்றாய்*
*மாறாமறை நான்காய் வருபூதம் அவை ஐந்தாய்*
*ஆறார் சுவை ஏழோசையோடு எட்டுத்திசை தானாய்*
*வேறாய் உடனானடம் வீழிம் மிழலையே*

நம் சைவ சமயம் மிக உன்னதமான அறிவியல் அடித்தளத்தின் மேல் அமைந்திருக்கின்ற உண்மையை மிகத் தெளிவாக இப்பாடல் நமக்குக் காட்டுகின்றது. இறைவன் நிலம், நீர், நெருப்பு, காற்று,

ஆகாயம் என்ற ஐம்பூதமாகி, இவைகளை வேறாய், உடனாய், ஒன்றாய் இருந்து ஆன்மாக்கள் நுகர உதவும் பேருதவியைச் சம்பந்தப் பெருமான் சுட்டிக் காட்டுகிறார். சிற்சக்தியாய் இருந்து பிறவிகள் எடுக்க உதவுகின்றான்; மலங்களின் பிணிப்பைக் குறைத்து இன்பமுத்தி பெறவும் உதவுகின்றான்.

இத்திருமுறைப் பாடலின் செறிவையே நாம் சிவஞான போதத்தின் இரண்டாம் சூத்திரத்தில் காண்கின்றோம்.

அந்த சூத்திரமாவது :

*''அவையே தானே யாய் இருவினையில்*
*போக்குவரவு புரிய ஆணையின்*
*நீக்கம் இன்றி நிற்கும் அன்றே''*

இங்கு அவையேயாய், தானேயாய் அவையே தானேயாய் என்று பொருள் கொள்ள வேண்டும். இவற்றையே நாம் வேறாய் ஒன்றாய், உடனாய் என்று முன்பு குறிப்பிட்டோம்.

இப்பாடலில் பொதிந்திருக்கின்ற மற்றொரு கருத்து : இறைவன் ஒன்றாய், இரண்டாய், மூன்றாய் என எண்ணிக்கையானும் குறிப்பிடப்படுகின்றான். இது ஒரு புதிய அறிவியல் சார்ந்த கருத்தாகும்.

திருநாவுக்கரசர் இக்கருத்தைத் தம் திருமுறைப் பாடல்களில் விளக்கமாகக் கையாளுகின்றார்.

*''எண்ணாகி எழுத்தாகி இயல்புமாகி'' என்றும்*

*''எண்ணும் எழுத்தும் சொல் ஆனாய் போற்றி'' என்றும்*

இறைவன் இயல்பைக் குறிப்பிடுகின்றார்.

நாம் பேசும் மொழியே எண்ணும், எழுத்தினாலும் தான் முழுமை அடைகின்றது.

இதனால்தான் திருவள்ளுவரும்

*''எண் என்ப ஏனை எழுத்தென்ப இவ்விரண்டும்*
*கண் என்ப வாழும் உயிர்க்கு''*

என்றார் போலும் இறைவனை எண்ணால் குறிப்பிடும் அரசியல் பாங்கு உலகச் சமயங்களில் ''மேன்மை கொள்'' சைவ சித்தாந்த தத்துவம் சார்ந்த சைவ சமயத்தில்தான் உள்ளது என்பது நாம் எல்லாம்

மகிழ்வு கொள்ள வேண்டிய செய்தியாகும். அச்சைவ சமயத்தைப் போற்றும் ஊழ் நமக்குத் திருவருள் துணையாலே அமைந்துள்ளது.

இறைவனை எண்களாகப் பாவித்து திருநாவுக்கரசர் இரண்டு சிறந்த பதிகங்களை அருளியுள்ளார். ஒன்று நான்காம் திருமுறையில் உள்ளது. அப்பூதியடிகளின் மூத்த மகனின் விடம் தீருவதற்காக திங்களூரில் அருளப்பட்ட அற்புதத் திருப்பதிகமாகும். இந்த விடந்தீர்ந்த திருப்பதிகத்தால் அப்பர் இறைவனின் பெருமையையும் அருமையையும் எண் வடிவகமாக வெளிப்படுத்தி நமக்கு விளக்குகின்றார். மிக உயர்வாகக் கருதப்பட வேண்டிய பதிகமாகும். இதில் அப்பர் ஒன்றிலிருந்து பத்து எண்கள் வரை எவ்வாறு இறைவன் வெளிப்பட்டு நமக்கு அருளுகின்றார் என்று திறமையாக விளக்குகின்றார். ஒவ்வொரு பாட்டிலும் இறைவன் ஒரு எண்ணாக அறிந்து கொள்ள வேண்டிய செய்திகள் அவை, முதற்பாடலில்

*"ஒன்றுகொலாம் அவர் சிந்தை உயர்வரை*
*ஒன்றுகொலாம் உயரும் மதிசூடுவர்*
*ஒன்றுகொலாம் இருவெண்டலை கையது*
*ஒன்றுகொலாம் அவர் ஊர்வதுதானே"*

- என்கிறார் அப்பர் இறைவன் நம்மையெல்லாம் ஈடேற்ற வேண்டும் என்ற உயர்ந்த சிந்தை உடையவர். அதற்காக, ஈடாக யாவரும் இல்லாத ஒருவர் எனக் குறிப்பிடுகிறார்.

இரண்டாம் பாடலில் அவரது ஆண், பெண் இணைந்த தன்மையை, இரண்டு எண்ணாகக் கொள்ளலாம் என்கிறார். இவ்வாறு இறைவனை மூன்றாக, நான்காக, ஐந்தாக, ஆறாக, ஏழாக, எட்டாக, ஒன்பதாக அவர் விவரிக்கும் பண்பு நாம் எல்லோரும் படித்து அறிய வேண்டிய பதிகப்பாடலாகும்.

பத்தாம் எண்ணிற்கு அப்பர் குறிப்பிடும் நான்கு செய்திகளில் ஒன்று.

"பத்து கொலாம் அடியார் செய்கை தானே" என்று குறிப்பிடுவது நாம் எல்லோரும் நினைந்து பார்க்க வேண்டிய சைவ சித்தாந்தக் குறிப்பாகும்.

அதன்படி அடியார்கள் இறைவனை அடைய பத்து நிலைகளைத் தாண்டிச் செல்ல வேண்டும். சைவ சித்தாந்தம் இவைகளை தச காரியம் எனக் குறிப்பிடும்.

அவைகளாவன : 1. தத்துவரூபம்
2. தத்துவ தரிசனம்
3. தத்துவ சுத்தி
4. ஆன்ம ரூபம்
5. ஆன்ம தரிசனம்
6. ஆன்ம சுத்தி
7. சிவரூபம்
8. சிவதரிசனம்
9. சிவயோகம்
10. சிவபோகம்

இவை பற்றிய விளக்கங்களைச் சிவஞானச் சித்தியாரில் காணலாம். அப்பரின் அருள்வாக்கு எவ்வளவு ஆழமாகவும் விளக்கமாகவும் உள்ளது.

ஐந்தாம் திருமுறையில் உள்ள தனித்திருக்குறுந் தொகையிலும் எண்ணலங்காரப் பாடல்கள் உள்ளன. அங்கும் ஒன்று முதல் பத்து எண்களை வைத்து இறைவன் உயர்வையும் அவன் உயிர்களுக்கு அருளும் பான்மையையும் விவரிக்கின்றார்.

திருஞான சம்பந்தப் பெருமானும் முதல் திருமுறையில் எண்களை ஏறுமுகமாகவும்/ இறங்குமுகமாகவும் வைத்து எண்கள் சித்திரக்கவி அற்புதமாக அமைத்திருக்கின்றார். அந்தப் பாடல் வகைக்கு எழுகூற்றிருக்கை என்று பெயர். தமிழ் மொழியில் வெகு சில இவ்வாறான எண்ணலங்காரப் பாடல்களே உள்ளன. இவற்றை இயற்றுவதற்கு மிகத் திறமையான கவித்துவம் வேண்டும். திருஞான சம்பந்தரின் திரு எழுகூற்றிருக்கையில் சைவ சித்தாந்த தத்துவங்களை அப்படியே வடித் தெடுத்து வெளிப்படுத்தி விளக்குகின்றார். திருஞான சம்பந்தரின் ஒரு திரு எழுகூற்றிருக்கை பாடல் அவர் அருளிய மூன்று திருமுறைகளுக்கும் ஈடானது என்பது சித்தாந்த சாத்திரவல்லோர்களது கருத்து. அதனால் தான் அப்பாடல் ஓதப்பட்டால் முற்றோதல் செய்ததிற்கு இணை என்று அருளாளர்கள் கூறுவார்கள்.

அறிவியல் பூர்வமாக சைவசமயத்தை அப்பாடல் ஒன்றுகொண்டே விளங்கிக் கொள்ளலாம். இது தவிர சம்பந்தப் பெருமான் இயற்றுவதற்கு மிகக் கடினமான மாலைமாற்று, ஏகபாதம், முதலிய எண்களின் பண்பு கொண்ட பாடல் வகைகளைத் திருவருள் உணர்த்த நமக்கு அருளியுள்ளார். பதி, பசு, பாச, முப்பொருள்

உண்மைகளைத் தர்க்க ரீதியில் இவைகள் வெளிக்கொண்டு வருகின்றன. இவைகளையெல்லாம் பெற சைவர்களாகிய நாம் சிறந்த தவம் செய்துள்ளோம்.

சைவ இளைஞர்கள் இந்த சமய - அறிவியல் கருவூலங்களை விரும்பிக் கற்று பிறவிப்பயனை அடைதல் வேண்டும். அறிஞர்களின் துணையோடு இக்கருவூலங்களை ஆய்ந்து, அறியாமை நீங்கப் பெற்று, மெய்ஞான அறிவைப் பெற்று திருவருளின் தூய இன்பச் சேவடிகளைத் துய்க்க முயல வேண்டும்.

''அவனருளாலே அவன் தாள் வணங்கி'' நாம் இறையருளைப் பெறுவோம்.

★★★

